கடவுள்துணை.

# நைடதம்.



நைடதம் என்னுஞ் சொல் நைஷதம் என்கிற ஆரியத்தின் திரிபு.
அதன்வரலாறு என்னவெனில்,
நிஷதம் என்பதோர் தேயத்தின்பெயர்.
அத்தேயத்தையாள்பவன் நைஷதன். அவனே நளன்
அவனைக்குறித்துச் செய்யப்பட்ட நூல் நைஷதம்.

## சிறப்புப்பாயிரம்.

இதனால் எடுத்துக்கொண்ட காப்பியம் இடையூறின்றி இனிது முடிதற்பொருட்டு உயர்ந்தோர் வழக்கத்தின்படியே கவி கடவுள் வணக்கஞ்செய்தல்சொல்லப்படுகின்றது.

### விநாயகர் வணக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

தழைவிரி கடுக்கை மாலைத் தனிமுதல் சடையிற் சூடும்
குழவிவெண் டிங்க ளிற்ற கோட்டது குறையென் றெண்ணிப்
புழைநெடுங் கரத்தாற் பற்றிப் பொற்புற விணைத்து நோக்கும்
மழைமதக் களிற்றின் செய்ய மலரடி சென்னி வைப்பாம்.

(இதனது பதப்பொருள்.) தழை - செழித்த, விரி - மலர்ந்த, கடுக்கை - கொன்றைமலர்களாகிய, மாலை-மாலையையுடைய, தனி-ஒப்பில்லாத, முதல்-பரமசிவன், சடையில்-சடையினிடத்தில், சூடும்-தரிக்கப்பட்டிருக்கிற, குழவி-இளமையாகிய, வெள்-வெள்ளிய, திங்கள் - சந்திரனை, இற்ற - ஒடித்த, கோட்டது (தன்)* கொம்பினது, குறையென்று-சேஷமென்று, எண்ணி - நினைத்து, புழை-துளைபொருந்திய, நெடு-நீண்ட, கரத்தால்-துதிக்கையினால், பற்றி-பிடித்து, பொற்பு - அழகானது, உற - பொருந்த, இணைத்து (அதிற்) பொருத்தி, நோக்கும்-பார்க்கின்ற, மழை-மழைப்போலும், மதம்-மதத்தையுடைய, களிற்றின்-யானைமுகக்கடவுளை, சென்னி-சிரசின்மேல், வைப்பாம் (யாம்) அணிந்துகொள்ளலாம், எ-று.

---

* யாப்பருங்கலம். கழிநெடிலடியே கசடறக்கிளப்பி, னறுசீர் முதலா வெண்சீரிறுதி யிரண்டிரு, வருவனபிறவும் வகுத்தனர் கொளலே.

தழைவிரிகடுக்கை என்றது, தழைகள் விரிந்த கடுக்கை எனினும் பொருந்தும். தழைதலாகிய காரணத்தால், தழையென்றாயிற்று. மாணிக்கவாசகர் திருவாய்மலர்ந்தருளிய (குவலயானந்தசூத்திரம்.) வழிபடுதெய்வவணக்கஞ்செய்து மங்கலமொழி முதல் வழுவாதுரைக்கி, லெடுத்துக் கொண்ட விலக்கண விலக்கிய, மிடுக்கணின்றி யினிது முடியுமே. இவ்விலக்கணத்தால் கடவுள் வணக்கங் கூறினார். யாம் என்னும் எழுவாய் எஞ்சிநின்றது. வைப்பாம் என்றது பயனிலை. அடியென்றது செயப்படுபொருள். தழை-விரி - என்கிற பெயரெச்சத் தொகைகளடுக்கிக் கொன்றை மலரென்கிற வினைமுதற் பெயர்கொண்டனவாகும்.

மலரடி சென்னிவைப்பாம் என்றது-தன்மைப்பன்மை வினைமுற்றாகத் தம்மைப் புகழ்ந்துகூறியதற்கு இலக்கண மெங்ஙனமெனின் (ஷை சூத்திரம்.) முனைபுனைசேவகன் முனிந்தார்ப்பதும்போற், கசடறக்கற்ற கல்வியாற்றலாற், றன்னைப்புகழ்த் தகுமெனச் சாற்றினர், என்றதனாலறிக, இற்றகோடு என்றது-விநாயகர் தம்மா லொடிக்கப்பட்டகோடு என்ற நத்தமாம். இதற்கிலக்கிய மெங்ஙனமெனின் (கந்தப்புராணம்) கெஜமுக முற்பத்தி படலம் (உசகூ-வது, உசஎ-வது-பாடல்கள்.)

நின்றவன் றன்னை நோக்கி நெடியபல் படைகளேவிச்
சென்றிவன் றன்னைக் கொல்லாச் சிவனருள் வரத்தின் சீரா
லின்றினிச் செய்வ தென்னென் றிரைவரை யுன்னி யெந்தை
தன்றிருக் கோட்டிலொன்று தடக்கையின் முறித்துக்கொண்டான்.

தடக்கையி லேந்துங்கோட்டைத் தந்தியா மவுணன்மீது
விடுத்தலு மனையன்மார்பை வெய்தெனக் கீண்டுபோகி
யுடற்படி மிசையேவீழ்த்தி யொல்லேயி லோடித்தெண்ணீர்க்
கடற்படிந் தமலன்மைந்தன் கரத்தில்வந் திருந்ததன்றே.

இச்செய்யுட்களில் கெஜமுகனைக்கொல்லக் கோட்டைஒடித்தாரென்றது புராணசித்தாந்தம். இக்கருத்தறியாதார் பாரதமெழுதக் கோட்டை ஒடித்தாரென்று உரைவரைந்திருக்கின்றார்; அவர் இந்நூலறியார் போலும். குழவி என்றதும், குழவு என்றதும் ஒரு பொருட்கிளவி (ஷைசூத்திரம்) மழவுங்குழவு மிளமைப்பொருள். பொற்பு என்றது-அழகு பொலிவு (தொல்காப்பிய சூத்திரம்.) பொற்பே பொலிவு என்றதனாலறிக. தந்தைக்கு மூத்தபிள்ளையின்மேலுந் தாய்க்கு இளையபிள்ளையின்மேலும் அன்புமிகுத லுலகியற்கை யாதலாற், பரமசிவனிடத்தே விநாயகக்கடவுளுக்கு விளையாட்டுச் சொல்லப்பட்டது. "மூத்தமகனிடத் தார்வுமீன்றெடுத்த பிதாமகற்கு முதிருமாற்றால்" என்பதனாலுமறிக.

[பிறையைக்கொம்பின் குறையென்று மயங்கினமையால் மயக்கவணியாம்.]

(கருத்து.) சிவன் முடியிலிருந்த பிறையை ஒடித்த கொம்புக்கிணை பார்க்கும் விநாயகரை வணங்குவோம்-என்பதாம்.

நிலவுபொழி தனிக்கவிகை நிடதர்கோன் புகழ்ச்சரித நெடுநீர்
வைப்பிற், புலவர்களி யமுதொழுகு புதுமொழிகூட் டுணத்த
மிழாற் புனைதல செய்தான், வலனுயர்த்த வண்ணலஞ்சேல்
வான்றொடுபொற் கோட்டிமய வரையிற்றீட்டி,அலர்தலைமா நில
ம்புரக்கு மதிவீரராமனிக லரசரேறே.

[இதனால் ஆக்கியோன் பெயர் முதலானவை சொல்லப்படுகின்றன.]

(இ-ள்.) இகல்-பகைத்த, அரசர்-மன்னராகிய (யானைகளுக்கு) ஏறு-ஆண் சிங்கம் போன்றவனாகிய, வலன்-வெற்றியினால், உயர்த்த,உயர்த்தப்பட்ட,அண்ணல்-பெருமைபொருந்திய, அம்-அழகிய, சேல்-மீனக்கொடியை, வான்-ஆகாயத்தை, தொடு-அளாவிய, பொன்-பொன்னாகிய, கோடு-சிகரத்தையுடைய, இமயவரையில்-இமயமலையினிடத்து, தீட்டி (தனக்குரிய எல்லைக்கல்லாக) எழுதி, அலர்-பரந்த,தலை-இடத்தையும், மா-பெருமையுமுடைய,நிலம்-பூமியை, புரக்கும்-காக்கின்ற, அதிவீரராமன்-அதிவீரராமனென்கிற இயற்பெயருடைய (பாண்டியராஜனானவன்) நிலவு - சந்திரிகையை, பொழி-பொழிகின்ற, தனி-ஒப்பற்ற, கவிகை (முத்துக்) குடையினையுடைய, நிடதர்கோன் - நளமகாராஜனது, புகழ்-புகழ்ச்சிபொருந்திய, சரிதம்-சரித்திரமாகிய, களி - களிப்பைத்தருகிற, அமுது - அமிழ்தத்தை, நெடுநீர் - கடலாற் சூழப்பட்ட, வைப்பில்-பூமியிலுள்ள, புலவர் - புலவரானவர்கள், கூட்டுண - கொள்ளைகொள்ளும்படியாக, ஒழுகு (அவ்வமிழ்தம்) பெருகுகின்ற,புதுமொழி ‡ புதிய காவியத்தை,தமிழால்-தமிழ்மொழியினாலே, புனைதல்செய்தான்-அலங்கரித்துப் பாடினான், எ-று.

அதிவீரராமனெனவே ஆக்கியோன் பெயரும், நிடதர்கோன் புகழ்ச்சரிதமெனவே நூதலியபொருளும், அக்காரணத்தாலே தோன்றுகிற நைடதமென்கிற வடமொழிப்பெயரே இதற்குப் பெயரென்பதும், கூட்டுணவெனவே இந்த நூலுக்குப் பயனும் பெறப்பட்டன.

தமிழாற் புனைதல்செய்தானெனவே முன்பிது தமிழிலின்றி வடமொழியிலிருந்தெடுத்துத் தமிழின் மொழிபெயர்க்கப்பட்டதென்பது குறிக்கப்படுகின்றது. நெடுநீர்வைப்பிற் புலவர்களியமு தொழுகு என்றதனால், விண்ணிற் புலவர்க்கு கடலமிழ்தம்போல மண்ணிற் புலவர்க்கு இச்சரித்திரமிழ்தமமையும் என்னும் உவமையணி தொனிக்கின்றது. [இகலரசரேறு என்பதில், அதிவீரராமனிடத்தே சிங்கத்தன்மையை ஏற்றினதற்கேற்பப் பகைவரிடத்தே யானைத்தன்மையை இயற்றாமையாய், ஏகதேசவுருவகவணியாம்.]

(கருத்து.) அதிவீரராமபாண்டியராஜனானவன் நளமகாராஜனது சரித்திரத்தைத் தமிழினாற் பாடினான் என்பதாம்.

† சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

‡ தண்டியலங்காரம் - அறமுதனான்கினுங் குறைபாடுடையது, காப்பியமென்று கருதப்படுமே.

† குவலயானந்தம் - நேயமுடனே நிருமிக்கும்பொருளாயவனைத்து மடக்கிக்காட்டுதல், பாயிரமென்று பகரப்படுமே, எனவும்; ஒரு நான்முகத்தினுரைத்திடும் பாயிரஞ், சிறப்பின நல்லோர் செப்பினர்தாமே, எனவும்,கூறிய வாறு; சிறப்புப்பாயிரங் கூறினர்.

# நாட்டுப்படலம்



[நளனுலாளப்பட்ட நிடதநாட்டின் வளத்தைச் சொல்லுகின்றது.]

† கலித்துறை.

கருவி மாமழை கலைமக ளுருவென விளங்கி
இருவி சும்பிடைப் படர்ந்துசென் றினமணி கொழிக்கும்
பரவை வெண்டிரை மேய்ந்துயர் பனிவரை யுயிர்த்த
உருவ வோடரித் தடங்கணா ளுருக்கொடு மீண்ட.

[இதுமுதலிரண்டுபாட்டுகளால் மழைச்சிறப்புச் சொல்லப்படுகின்றது]

(இ-ள்) கருவி (உலகத்திற்குத்) துணைக்காரணமாகிய, மா-பெருமைபொருந்திய, மழை-மேகங்களானவை, கலைமகள்-சரஸ்வதியினது, உருவென-வடிவம்போல, விளங்கி (வெண்மையாக) விளங்கி, இரு-பெரிய, விசும்பிடை-ஆகாயத்தினிடத்தே, படர்ந்து-பரந்து, சென்று-போய், இனம்-இனமாகிய, மணி-இரத்தினங்களை, கொழிக்கும்-கொழிக்கின்ற, பரவை-கடலினது, வெள்-வெள்ளிய, திரை-அலைகளையுடைய (நீரை) மேய்ந்து-குடித்து, உயர்-உயர்ந்த, பனிவரை-மலையரசனால், உயிர்த்த-புதல்வியாகத் தரப்பட்ட, உருவ (காதுகளுக்கு) நேராக, ஓடு-ஓடுகின்ற, தடம்-விசாலமாகிய, கணாள்-கண்களையுடைய, (பார்வதியினது) உரு-கருநிறத்தை, கொடு-பெற்று, மீண்ட-திரும்பின, எ-று.

மழைகலைமக ளுருவென விளங்கி—இதில் கலைமகளுரு - உபமானம் மழை-உபமேயம், என-உருபு, விளங்கல்-பொதுத்தன்மை. [இந்நான்கும் விரிந்துநிற்கையால், விரியுவமை யணியும்; தடங்கணாளுருக்கொடுமீண்ட - இதில் மழையாகிய உபமேயத்திலே தடங்கணாளுருவாகிய உபமானத்தின் குணத்தை யேற்றலால், பதப்பொருட்காட்சி யணியுமாம்.]

(க-து.) மேகங்களானவை சரஸ்வதிவடிவம்போலத் தோன்றிக் கடற்சலத்தை யுண்டு பார்வதி வடிவம்போலத் திரும்பின என்பதாம். 1

அன்னங்கண்படு தண்பணை நிடதநாடளிக்கும்
மன்னர் மன்னவன் மண்டமர் கடந்தவொள் வேலின்
மின்னி யாங்கவன் முரசென விண்ணிடை யதிர்ந்து
பொன்னங்குன்றின்மேலவன்கொடைபோன்மெனப்பொழிந்த

(இ-ள்.) அன்னம் - அன்னங்களானவை, கண்படு-தூங்குகின்ற, தண்-குளிர்ச்சிபொருந்திய, பணை-கழனிகளையுடைய, நிடதநாடு-நிடததேயத்தை, அளிக்கும்-காக்குகின்ற, மன்னர் - அரசர்களுக்கு, மன்னவன்-அரசனாகிய (நளன்து) மண்டு-நெருங்கிய், அமர்-போரை, கடந்த-முடித்த, ஒள்-ஒள்ளிய, வே

† யாப்பருங்கலம், நெடிலடிநான்காய் நிகழ்வது கலித்துறை,

வின்-வேல்போல், மின்னி-மின்னுதல்செய்து, அவன்-அவனது, முரசென-முரசம்போல, விண்ணிடை-ஆகாயத்தினிடத்து, அதிர்ந்து-சத்தித்து, பொன்-பொன்னுகிய, அம்-அழகிய, குன்றின்மேல்-இமயமலையின்மேல், அவன்-அவனது, கொடை-ஈகையை, போன்மெனா-ஒக்குமென்றுசொல்லும்படியாக, பொழிந்த (அம்மேகங்கள்), நீரைச் சொரிந்தன, எ-று. ஆங்கு-அசை.

இங்கே பொன்மலையென்றது இமயமலையாம். நிடததேசத்திற்குச் சமீபத்திற் சிறந்துள்ளது அதுவேயாதலால், பின்வரும் "கங்கையென்றுலகேத்திய" என்னும் பாட்டில், அம்மலையிற் பிறந்துவருங் கங்கையே அந்நாட்டிற்கு நதி என்பதனாலுமறிக. [மேகத்திற்கு மின்னுதல்பற்றி வேலும், ஒலித்தல்பற்றி முரசமும், அம்மேகத்தின் பெய்தற்குக் கைம்மாறு நோக்காமைப்பற்றி ஈகையும், உபமானஞ் செய்யப்படுதலால் உவமையணியாம்.]

(க-து.) அந்த மேகங்களானவை நளனது வேலைப்போலமின்னி அவன்பேரிகைபோலச் சத்தித்து அவன் கொடையைப்போல நீரைச்சொரிந்தன-எ-ம்.

விலகிவில்லுமிழ் விரிகதிர் மணிபல வாரிப்
பொலன் முகட்டுயர் பொன்னெடுங் குன்றின்வீழருவி
குலவு வெண்டிரைக் குரைகடலுடுத்தபார் மடந்தை
அலர்முலைத்தலைத் துயல்வரு மாரமொத் துளதால்.

[இதுமுதல் மூன்று பாட்டுகளால் வெள்ளச்சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

(-இ-ள்.) உயர் (மலைகளில்) உயர்ந்த, நெடு-நெடிய, பொற்குன்றின்-இமயமலையின்மேல், பொலன்-அழகிய, முகட்டு-சிகரத்திலிருந்து, விலகி-இடைவிட்டு, வில்-ஒளியை, உமிழ்-வீசுகின்ற, விரி-விரிந்த, கதிர்-கிரணங்களையுடைய பல-பலவகைப்பட்ட, மணி-முத்துக்களையும், வாரி-வாரிக்கொண்டு, வீழ்-வீழ்கின்ற, அருவி-வெள்ளமானது, குலவு-வளைவாகிய, வெள்-வெள்ளிய, திரை-அலைகளையுடைய, குரை-ஒலிக்கின்ற, கடல்-கடலாகிய (ஆடையை) உடுத்த-மருங்கிற் சூழக்கொண்டிருக்கிற, பார்மடந்தை-பூமிதேவியினுடைய, அலர்-அடிபரந்த, முலைத்தலை (அம்மலையாகிய) முலையினிடத்து, துயல்வரும்-புரளுகின்ற, ஆரம்-முத்துமாலையை, ஒத்துளது-ஒத்திருக்கின்றது, எ-று.

பலவகை முத்துக்களாவன: குறிஞ்சிக் கருப்பொருளாகிய யானைக்கொம்பு, பன்றிப்பல், மூங்கில், இவைமுதலியவற்றி லுண்டாகின்றவையாம். [பூமியிலே மடந்தைத்தன்மையையும் கடலிலே ஆடைத்தன்மையையும் மலையிலே முலைத்தன்மையையும் ஆரோபித்தலாகிய உருவகம் உறுப்பாகவும், அருவியின்கண் ஆரத்தன்மையைச் சம்பாவித்தலாகிய தற்குறிப்பு உறுப்பியாகவும் வருதலால்; உறுப்புறுப்பிக் கலவையணியாம்.]

(க-து.) மலைவெள்ளமானது பூமிதேவியினது முலையின்மீதணிந்த முத்துமாலையை யொத்திருக்கின்றது-எ-ம்.

**வேழவெண்மருப் பெறிந்துவெண் ணித்திலம் வரன்றிக்**
**காழகிற்றுணி சந்தொடு கையரிக்கொண்டு**
**கோழரைச்செழுங் குங்குமத் தடஞ்சினைசாடி**
**ஆழ்திரைக்கட லகடுகீண் டொழுகிய தன்றே.**

(இ-ள்.) வேழம்-யானைகளுடைய, வெள்-வெள்ளிய, மருப்பு-கொம்புகளை, எறிந்து-வீசிக்கொண்டும், வெள்-வெள்ளிய, நித்திலம்-முத்துக்களை, வரன்றி-வாரிக்கொண்டும், காழ்-வைரம்பொருந்திய, அகில்-அகின் மரங்களுடைய, துணி-துண்டங்களை, சந்தொடு-சந்தனமரங்களோடு, கையரிக் கொண்டு-சேர்த்துக்கொண்டும், கோழ்-வழுவழுப்பாகிய, அரை-அரையையுடைய, செழு-செழிய, குங்குமம்-குங்குமமரங்களின், தடம்-விசாலமாகிய, சினை-கிளைகளை, சாடி-முறித்துக்கொண்டும், ஆழ்-ஆழ்ந்த, திரை-அலைகளையுடைய, கடல்-கடலினது, அகடு-வயிற்றை, கீண்டு-கிழித்து, ஒழுகியது (அவ்வெள்ளம்) சென்றது, எ-று. அன்று-ஏ-அசை.

அரித்தலென்பதற்குக் கையென்பது முன்னிடையாய்க்கூடி அவ்விரண்டும் ஒருசொல்லாய் நின்றன: கைகூடல் கால்சீத்தல் என்பனபோல. மரங்களுக்குக் கோழரை, பொகுட்டரை, பொரியரை, முள்ளரை "என்று சொல்லப்பட்டவற்றுள்ளே கோழரை-சருச்சரையில்லாத அரையாம். பின்னே "கோழரை யரம்பைச்சாய்க்குங் குடகநாடாளும்வேந்தே" என்பதனுமறிக.

(க-து.) அந்த வெள்ளமானது யானைத்தந்தத்தின் முத்துக்களையும்அகிற்றருவையுஞ் சந்தனத்தருவையுங் குங்குமத்தருவையுமுறித்துச் சமுத்திரத்துட் சென்றது-எ-ம்.

**கங்கையென்றுல கேத்திய கடவுண்மா நதிவெண்**
**சங்குசூலுளைந் தலறிய தடம்பணை தவழ்ந்து**
**கொங்குயிர்த்தபூந் தடத்துலாய்க் குளம்பல நிரப்பி**
**அங்கண்மாநிலத் தமுதெனப் பரந்ததை யன்றே.**

(இ-ள்.) கங்கையென்று-கங்காநதியென்று, உலகு-உயர்ந்தோரால், ஏத்திய-துதிசெய்யப்பட்ட, கடவுள்-தெய்வத்தன்மைபொருந்திய, மா-பெரிய, நதி-நதியானது, வெள்-வெள்ளிய, சங்கு-சங்குகளானவை, சூல்-சூலினாலே, உளைந்து-வருந்தி, அலறிய-இரையும்படியாக, தடம்-விசாலமாகிய, பணை-கழனிகளிலே, தவழ்ந்து-ஊர்ந்து, கொங்கு-வாசனையை, உயிர்த்த-வீசுகின்ற, பூ-மலர்களையுடைய, தடத்து-தடாகங்களில், உலாய்-திரிந்து, பல-பலவகைப்பட்ட, குளம்-குளங்களையும், நிரப்பி-நிறைத்து, அங்கண்-அழகிய விடத்தையுடைய, மா-பெரிய, நிலத்து-பூமிக்கு, அமுதென-அமிர்தமென்று சொல்லும்படியாக, பரந்தது-பரவிற்று, எ-று. ஐ-சாரியை, அன்று-ஏ-அசைகள்.

உலகுக்கு உயர்ந்தோரென்பது "உலகமென்ப துயர்ந்தோர்மாட்டே" என்பதனாலறிக. அலறியவென்பது, செய்யியவென்வாய்ப்பாட்டு வினையெச்சம்,

உயிர்த்தவென்பது காலவழுவமைதி. பலவகைக் குளமாவன-ஏரி,கயம்,ஓடை. குட்டம், மடு, முதலியன. [நிலத்தமுதென்னவெனவே தேவருலகுக்குக் கடலமிர்தம்போலென்னும் உவமையணியாம்.]

(க-து.) நதியானது கழனிகளையுந் தடாகங்களையுங் குளங்களையுநிரப்பிப் பூமிக்கு அமிர்தமாகப் பரவியது-எ-ம்.

ஒழுகுதீம்புனல் சிறைசெயு மோதையு முழுநர்
குழுவின் சும்மையு முழத்தியர் குரவையினார்ப்புங்
கழனிவாழ்கென வான்முளை வித்துநர் கலிப்பும்
மழைமுழக்கொடு மாறுகொண் டொலித்தன மாதோ.

[இதுமுதல் ஐந்துபாட்டுகளால் வயல்வளச்சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்) ஒழுகு-பெருகியோடுகின்ற, தீ-மதுரம்பொருந்திய, புனல்-நீரை, சிறைசெயும்-கரைகோலித்தடுத்தற்கணுண்டாகின்ற, ஓதையும்-ஓசையும், உழுநர்-ஏருழுகின்றவருடைய, குழுவின்-கூட்டத்தினது, சும்மையும்-ஓசையும் உழத்தியர் - கடைசியரது, குரவையின் - குரவைக்கூத்தினது, ஆர்ப்பும்-ஓசையும், கழனி-வயல்களானவை, வாழ்கென-வாழ்கவென்று, வால்-வெள்ளிய, முளை-நெல்லுமுளைகளை, வித்துநர்-விதைக்கின்றவருடைய, கலிப்பும்-ஓசையும், மழை-மேகத்தினது, முழக்கொடு, ஓசையுடனே,மாறுகொண்டு-பகைமைகொண்டு; ஒலித்தன - முழங்கின, எ-று. மாது-ஓ-அசைகள்.

வாழ்கவென்பது கடைகுறைந்தது. குரவை-கைகோத்தாடல். "குரவைக் கூத்தே கைகோத்தாடல்" என்பதனாலறிக. [கரைகோலுதற் கணுண்டாகிய ஓசைமுதலியவற்றிற்கு மழைமுழக்கத்தோடு மாறுகொள்ளுதலாகிய சம்பந்தமில்லாதிருக்கச் சம்பந்தத்தைக் கற்பித்தலால், தொடர்புயர்வு நவிற்சியணியும்; அவ்வொலிகள் மேகவொலியைப்போ லிருக்கின்றனவென்னும் உவமையணியுமாம்.]

(க - து.) அணைகட்டுதலாலுண்டாமோசையும், ஏருழுகின்றவரோசையும், கடைசியர் குரவைக்கூத்தோசையும், நெல் விதைக்கின்றவ ரோசையும், மழைமுழக்கத்தோடு மாறுகொணடன-எ-ம். 6

வள்ளூவாய்ச்செழுங் கமலத்தில் வண்டுபாண் மிழற்றும்
அள்ளலங்கருஞ் சேற்றிடை யாமைகண் படுக்கும்
பள்ளநீர்ச்செழும் பணைதொறும் பணிலமுத் துயிர்க்குங்
கள்ளுலாமலர்ப் பொதும்பரிற் களிமயிலகவும்.

(இ - ள்) வண்டு - வண்டுகளானவை, வள்ளம் - கிண்ணம்போன்ற, வாய-வாயையுடைய, செழு - செழிய, கமலத்தில் - தாமரைமலர்களிலே, பாண் - இசைகளை, மிழற்றும் - பாடிக்கொண்டிருக்கும், ஆமை-கூர்மங்களானவை, அள்ளல் - குழம்பாகிய, கரு-கரிய, சேற்றிடை-சேற்றின் கண், கண்படுக்

கும் - தூங்கிக்கொண்டிருக்கும், பணிலம் - சங்குகளானவை, பள்ளம் - ஆழமாகிய, நீர் - நீரையுடைய, செழு - செழிய, பணைதோறும் - கழனிகளிலெல்லாம், முத்து - முத்துக்களை, உயிர்க்கும்-சொரியும் களி - களிப்பையுடைய மயில்-மயில்களானவை, கள் - தேனுனது, உலாம் - பெருகுகின்ற, மலர் - மலர்களையுடைய, பொதும்பரில் - சோலைகளிலே, அகவும், ஆடிக்கொண்டிருக்கும்-எ-று. அம்-சாரியை.

(க - து.) வண்டுகள் தாமரையிற்பாடும். ஆமைகள் சேற்றிலே நித்திரை செய்யும், சங்குகள் கழனிகளில் முத்துக்களைச சொரியும், மயில்கள் சோலைகளிலாடும்-எ-ம். 7

பண்ணைவாய்த்தவழ் பணிலங்க ளுயிர்த்தவெண் முத்துங்
கண்ணுடைக்கரும் பீன்றவெண் முத்தமுங் கமழுந்
தண்ணந்தாமரை சொரிந்தவெண் முத்தமுந் தயங்கி
வெண்ணிலாக்கதிர் விரித்தலிற் குமுதம்வாய் விள்ளும்.

(இ - ள்.) பண்ணைவாய் - கழனிகளிடத்து, தவழ் - தவழ்கின்ற, பணிலங்கள் - சலஞ்சலங்களால், உயிர்த்த - தரப்பட்ட, வெள் - வெள்ளிய, முத்தும்-முத்துக்களும், கண்-கணுக்களை, உடை-உடைய, கரும்பு - கரும்புகளால், ஈன்ற - தரப்பட்ட, வெள் - வெள்ளிய, முத்தமும் - முத்துக்களும், கமழும் - பரிமளிக்கின்ற, தண்-குளிர்ச்சிபொருந்திய, அம்-அழகிய, தாமரை-தாமரை மலர்களால், சொரிந்த - தரப்பட்ட, வெள்-வெள்ளிய, முத்தமும்-முத்துக்களும், தயங்கி - விளங்கி, வெள் - வெள்ளிய, நிலா - சந்திரனது, கதிர் -கிரணங்களை, விரித்தலின் - பரப்புதலினாலே, குமுதம் - அல்லிமலர் களானவை, வாய்விள்ளும் (சந்திரோதய மில்லாதகாலத்திலும்) மலரும எ-று.

சங்குமுதலானவைகளிலே முத்துப்பிறக்குமென்பது "தந்திவராச மருப்பிப்பி பூகந்தழைகதலி, நந்துசலஞ்சலமீன்றலைகொக்கு நளினமின்னார்,கந்தரஞ்சாலிகழைகன்னலாவின் பல் கட்செவிகா, ரிந்துவுடும்பு கதிரமுத்தமீனுமிருபதுமே" என்றதனாலறிக. [முத்தாகிய உபமேயத்திலே சந்திரனாகிய உபமானத்தின் குணத்தை யாரோபித்தலால், காட்சியணியாம்.

(க - து.) சங்கின் முத்துக்களும், கரும்பின் முத்துக்களும், தாமரை முத்துக்களும், கிரணங்களை விரித்தலால், அல்லிமலர்கள் மலரும்-எ-ம். 8

விழுந்தவஞ்சிறை வண்டின மிதிப்பமெல் லரும்பு
கிழிந்துவார்தரு தேறலுங் கிளர்சினைப் பலவின்
பழுங்கனிந்துவீழ் தேறலும் பழனங்கடோறும்
வழிந்துபாய்தலின் வாளுற வளர்வன செந்நெல்.

(இ - ள்.) விழுந்த (மேல் விழுந்த, அம் - அழகிய, சிறை - சிறைகளையுடைய, வண்டு - வண்டுகளின், இனம் - கூட்டங்களானவை, மிதிப்ப துவைக்க, மெல்-மெல்லிய, அரும்பு-அரும்புகளானவை, கிழிந்து-கிழிய-வார்தரு

(அவைகளிலிருந்து) ஒழுகுகின்ற, தேறலும் - தேனும், இளர்-விளங்குகின்ற, சினை - கிளைகளையுடைய, பலவின்-பலாமரங்களின், பழம்-பழங்களானவை கனிந்து - நைய, வீழ் (அவைகளிலிருந்து) விழுகின்ற, தேறலும் - தேனும், வழிந்து-பெருக்கெடுத்து, பழனங்கடோறும்-கழனிகளிலெல்லாம், பாய்தலின் பாய்தலினாலே, வான்-ஆகாயத்தை, உற-தொடும்படி, செந்நெல்-செந்நெற் பயிர்களானவை, வளர்வன-வளரும், எ-று.

[செந்நெற்பயிருக்குந் தேறலுக்குஞ் சம்பந்தமில்லாதிருக்கச் சம்பந்தத்தைக் கற்பித்தமையால், தொடர்புயர்வு நவிற்சியணியாம்.]

(க - து.) மலர்களின் தேனும், பலாப்பழங்களின் தேனும், கழனிகளிற் பாய்தலினாற் செந்நெல் விளைவன எ-ம்.

கூனிரும்பினிற் குறைத்தரி சும்மையிற் கொடுபோய்
மேனிவந்துயர் வரையெனப் போர்பல வேய்ந்து
நீனிறக்கரும் பகட்டினாற் றெழித்துவை நீத்த
தூநிறத்தநெற் பண்டியிற் பற்பலர் தொகுப்பார்.

(இ-ள்.) கூனிரும்பினில்-அரிவாளினால், குறைத்து-அறுத்து, அரி (அவ்வறுக்கப்பட்ட) அரிகளை, சும்மையில்-சுமைகளாக்கி, கொடுபோய்-கொண்டு போய், மேல்-மேல், நிவந்துயர்- ஓங்கிய, வரையென-மலைகள் போலத் தோன்ற பல-பலவாகிய, போர்-போர்களை, வேய்ந்து-போட்டு, நீனிறம்-நீல நிறம்பொருந்திய, கரு-பெரிய, பகட்டினால்-கடாக்களினாலே, தெழித்து-துவைப்பித்து, வை-வைக்கோலை, நீத்த-கழித்த, தூ-பரிசுத்தமாகிய, நிறத்த-காந்தியையுடைய, நெல்-நெற்களை,பண்டியில்-பண்டிகளாற் (கொண்டுபோய்) பற்பலர்-பலபல சாதியார்களும், தொகுப்பார் (களஞ்சியங்களிலே) நிறைப்பார்கள், எ-று.

கூனிரும்பு-இருபெயரொட்டாகு பெயர். நிவந்துயர்-ஒரு பொருளைக் குறித்த இருசொற்கள். இதற்கு "ஒருபொருளிருசொற்பிரிவிலவரையார்" என்பது விதி. நீல்-கடைக்குறை.

(க-து.) நெற்களையறுத்துக் கடாக்களான் மிதிப்பித்து வைக்கோலைத் தள்ளி அந்நெற்களைப் பண்டியிற் கொண்டுபோவார்கள்-எ-ம். 10

அறுசீர்க்கழிநெடிலடிவிருத்தம்.

குரும்பைமென் முலையாராடக் கூந்தலினறவந் தோய்ந்த
இரும்புன லாறுபாய வெறிதிரை சுருட்டுந் தெண்ணீர்க்
கருங்கடற் புலவுநீங்கி நறுமணங் கமழுமென்றான்
முருந்துறழ் மூரலார்த மிகுதிமை மொழியலாமோ.

[அதுமுதற் பதினாறு பாட்டுகளால் அந்நாட்டிலுள்ளோர் செல்வமுதலிய சிறப்புகள் சொல்லப்படுகின்றன.]

(இ-ள்.) குரும்பை-தென்னம்பிஞ்சுபோன்ற, மெல்-மெல்லிய, முலையார்-முலைகளையுடையமாதர், ஆட-முழுக, கூந்தலில் (அவர்) தலைமயிரிலுள்ள, நறவம்-சாந்தத்தோடு, தோய்ந்த-கலந்த, இரு-பெரிய, புனல்-நீரானது, ஆறு-ஆற்றினாலே (போய்) பாய-விழ, எறி-வீசுகின்ற, திரை-அலைகளை, சுருட்டும்-மடக்கும், தெள்-தெளிவுபொருந்திய, நீர்-நீரையுடைய, கரு-கரிய, கடல்-கடலானது, புலவு-புலானுற்றத்தை, நீக்கி-நீங்கி, நறுமணம்-நல்லமணமானது, கமழுமென்றால் (அக்கடலிடத்தே) மணக்குமென்றால், முறந்து-மயிலிறகினடியை, உறழ்-ஒத்த, மூரலார்-தந்தபந்தங்களையுடைய அவர்களது, மிகுதியை-பெருக்கத்தை, மொழியலாமோ (நான்) சொல்லலாமோ, எ-று. தம்-சாரியை, ஓ-எதிர்மறை.

நறவமென்னும் வாசனைப்பெயர் அதனையுடையமயிர்ச்சாந்தத்தையுணர்ந்தலால் ஆகுபெயர். நீங்கியென்பது பிறவினைப்பொருளைத் தந்தது; "குடிபொன்றிக்குற்றமு மாங்கேதரும்" என்பதிற் பொன்றியென்பதுபோல. [அந்நாட்டுமகளிரது செல்வமிகுதியைச் சொல்லுதலால், வீறுகோளணியாம்.]

(க-து.) மாதர்களாடிய நீரினாலே கடலானது புலால் நாற்ற நீங்கிமணம் வீசமானால், அம்மாதர் பெருக்கத்தைச் சொல்லலாமோ-எ-ம். 11

பூமலி தடங்கடோறும் புனல்குடை மகளிரீட்டங்
காமரு கழனிதோறுங் கடைசியர் குரவையீட்டந்
தேமலர்ச் சோலைதோறுஞ் செழுங்குயிற் றொழுதியீட்டங்
கோமறு கிடங்கடோறுங் குணில்பொரு முரசினீட்டம்.

(இ-ள்.) பூ-மலர்களாலே, மலி-நிறைந்த, தடங்கடோறும்-குளங்களிலெல்லாம், புனல்குடை-நீர்விளையாடுகின்ற, மகளிர்-மாதரது, ஈட்டம்-கூட்டமும், காமர்-அழகிய, கழனிதோறும்-வயல்களிலெல்லாம், குரவை-கைகோத்தாடுதலையுடைய, கடையர்-உழத்தியரது, ஈட்டம்-கூட்டமும், தேம்-வாசனைபொருந்திய, மலர்-மலர்களையுடைய, சோலைதோறும்-சோலைகளிலெல்லாம், தொழுதி-ஒலித்தலையுடைய, செழு-செழிய, குயில்-குயில்களது, ஈட்டம்-கூட்டமும, கோ-அரசரது, மறுகு-வீதிகளுடைய, இடங்கடோறும்-இடங்களிலெல்லாம், குணில்-குறுந்தடியால், பொரு-அடிக்கப்படுகின்ற, முரசின்-முரசங்களது, ஈட்டம்-கூட்டமும் (இருக்கும்) எ-று.

காமரு வென்பதில்-உகரம்-சாரியை, தொழுதி-புள்ளொலி. கோ-சாதியொருமை.

(க-து.) குளங்களெங்கு நீராடுமாதர் கூட்டங்கள், வயல்களெங்கும் உழத்தியர் கூட்டங்கள், சோலைகளெங்கும் குயில் கூட்டங்கள், இராஜவீதிகளெங்கும் பேரிகைக் கூட்டங்கள்-எ-ம். 12

கறுவொடு மொன்றோடொன்று காரண மின்றிச்சீறிப்
பொறியுடைக் குறும்பூழ்தம்மிற் போர்செயப் பொருத்துவோ

செறிமயிர்த் தகர்கடம்மிற் றீயெழத் தாக்கநோக்கி [தை
அறைகழல் வீரரார்க்கு மமலையை யவிக்குமன்றே.

(இ-ள்.) பொறியுடை-புள்ளிகளையுடைய, குறும்பூழ்-காடைகளானவை, தம்மில்-தம்முள்ளே, ஒன்றோடொன்று-ஒன்றுடனொன்று, காரணமின்றி-ஏது வில்லாமல், கறுவொடும்-கறுவுதலுடனே, சீறி-சீறிக்கொண்டு, போர்-சண்டையை, செய-செய்யும்படியாக, பொருத்தும் (அவற்றைக்)கூட்டுதற்கனுண்டாகின்ற, ஓதை (சிறுவ) ரோசையானது, செறி-நெருங்கிய, மயிர்-மயிர்களையுடைய, தகர்கள்-ஆட்டுக்கடாக்கள், தம்மில்-தம்முள்ளே, தீ-நெருப்பானது, எழ-தோன்ற, தாக்கல் (ஒன்றையொன்) றிடித்தலை,நோக்கி-பார்த்து,அறை-ஒலிக்கின்ற, கழல்-வீரக்கழலையுடைய, வீரர்-வீரரானவர், ஆர்க்கும் (ஆச்சரியப்பட்) டொலிக்கின்ற, அமலையை-ஓசையை, அவிக்கும்-அடக்கும், எ-று. அன்று-ஏ-அசைகள்.

தகுதிபற்றிக் காடைச்சண்டைக்குச் சிறுவரென்பது வருவிக்கப்பட்டது. கழல்-வீரர் காலணி. "வீரத்தில் வீக்கியகழலே யாடவர்கான்மிசையணிவடம்" என்பதனாலறிக.

(க-து.) காடைகளைச் சண்டைசெய்விக்குஞ் சிறுவர்கள் சத்தமானதுஆட்டுக்கடாக்களைச் சண்டைசெய்வித்துப்பார்க்கும் வீரர்சத்தத்தை யடக்கும்-எ-ம்.

மாதர்மென் முல்லையீன்ற வான்முகை யனையமூரல்
கோதறு கருனைதீம்பல் கொழுங்கனி யிவற்றினோடும்
ஆதுலர் யாவரென்ன வதிர்குரன் முரசிற்சாற்றி
வேதியர்க் கருத்திப்பின்னர் விருந்தொடு நுகர்வர்மாதோ.

(இ-ள்.) ஆதுலர்-யாசகர், யாவரென்ன-யாவரென்று, அதிர்-அதிர்கின்ற குரல்-ஓசையையுடைய, முரசின்-முரசினாலே, சாற்றி-வினவி (வருவித்து) மாதர்-அழகிய, மெல்-மெல்லிய, முல்லை-முல்லைக்கொடியினால், ஈன்ற-தரப்பட்ட வால்-வெள்ளிய, முகையனைய-அரும்புகள்போலும், மூரல்-சோறும், கோதறு-குற்றமற்ற, கருனை - பொரிக்கறிடும், தீ-தித்திப்பாகிய, பால்-பாலும்,கொழு-செழிய, கனி-பழமும், இவற்றினோடும் - ஆகிய,யிவற்றோடு மற்றை யுணவுகளையும், வேதியர்க்கு - அந்தணரை, அருத்தி (முன்னே) உண்பித்து, பின்னர் (அதன்) பின்பு விருந்தோடும் (சுற்றத்தார் முதலியோரோடன்றி) விருந்தினரோடும், நுகர்வர் (அந்நாட்டோர்) உண்பார், எ-று - மாது-ஓ-அசைகள் உம்மையிரண்டும்-எச்சம்.

வேதியர்க்கு-உருபுமயக்கம்.விருந்தினராவார்-பண்டறிவுண்மையிற்குறித்துவந்தாரும் அஃதின்மையிற் குறியாதுவந்தாருமென இருவகையர்.

(க-து.) யாசகரை வரும்படி முரசறைவித்து முன் பிராமணரை உண்ணச்செய்து பின் விருந்துட னுண்பார், எ-று.

முல்லையங் கோதைநல்லார் முகமதி வெயர்வுதோன்ற
வல்லிநுண் மருங்குனோவ வால்வளை வாய்விட்டார்ப்ப
மெல்விரற் காந்தள்சேப்ப வெண்டையிர் கடையுமோதை
கொல்புலி முழக்கமென்ன வயின்றொறுங் குளிறுமாதோ.

(இ-ள்.) முல்லை-முல்லைமலர்களைச்சூடிய, அம்-அழகிய, கோதை-கூந்தலையுடைய, நல்லார் - இடைச்சியர், முகமதி (தமது முகமாகிய சந்திரனிடத்து, வெயர்வு-வெயர்வையானது, தோன்ற-உண்டாகவும், வல்லி - பூங்கொடிபோலும், நுண்-நுட்பமாகிய,மருங்குல்-இடையானது, நோவ - வருந்தவும், வால்-வெள்ளிய, வளை-சங்கவளையல்களானவை, வாய்விட்டு-ஒன்றோடொன்று தாக்குண்டு, ஆர்ப்ப-ஒலிக்கவும், மெல்-மெல்லிய, விரல்-விரல்கள், காந்தள் - காந்தண் மலர்போல, சேப்ப-சிவக்கவும், வெள்-வெள்ளிய, தயிர்-தயிரை, கடையும்-கடைதலினாலுண்டாகின்ற, ஓதை-ஓசையானது, கொல்-கொல்லுகின்ற, புலி-புலியினது, முழக்கமென்ன - உறுமுதல்போல, வயின்றொறும் (அவர்) வீடுதோறும், குளிறும்-ஒலிக்கும், எ-று. மாது-ஓ-அசைகள்.

[நிலைமத்திட்டுத் தயிர் கடைகின்ற இடைச்சிகளுக்கு அப்போது உண்டாகின்ற முகம் வெயர்த்தலாதி சுபாவத்தைச் சொல்லுதலாகிய தன்மை நவிற்சியணியோடு கொல்புலி முழக்கமெனக் குளிறுமென்னும் உவமையணியுஞ் சேர்ந்துவருதலால் சேர்வையணியாம்.]

(க-து.) இடைச்சியர் தயிர்கடையுஞ் சத்தமானது புலிமுழக்கம்போல வீடுகளெங்குஞ் சத்திக்கும், எ-று, 15

பூங்கரும் புடைந்ததீஞ்சா றடுபுகை புயலென்றெண்ணி
மாங்குயிற் றொகுதியாவும் வாய்விடா தொழிந்தமஞ்ஞை
தூங்கிசை வண்டுந்தேனுஞ் சுரும்பொடு ஞிமிறும்பாடத்
தேங்கமழ் சோலைதோறுஞ் சிறைவிரித் தாடுமாதோ.

(இ-ள்.) உடைந்த (ஆலையிற்) சிதைந்த, பூ-அழகிய, கரும்பு, கரும்புகளுடைய, தீ-தித்திப்பாகிய, சாறு-சாற்றை, அடு-காய்ச்சுமிடத்தெழுகின்ற, புகை-புகையை, புயலென்று - மேகமென்று, எண்ணி-நினைத்து, மா - மாமரங்களிலுள்ள, குயில்-குயில்களுடைய, தொகுதியாவும்-கூட்டங்களெல்லாம், வாய்விடாதொழிந்த-கூவாதொழிந்தனவாக, மஞ்ஞை-மயில்களானவை, தூங்கிசை-நாட்டியராகத்தை, வண்டும்-கருவண்டுகளும், தேனும் - தேன்வண்டுகளும், சுரும்பொடு-பொறிவண்டுகளுடனே,ஞிமிறும்-பொன்வண்டுகளும்,பாட-பாடுதல் செய்ய, தேம்-தேனுளது, கமழ் - மணக்கின்ற, சோலைதோறும் - சோலைகளிலெல்லாம், சிறை-கலாபத்தை, விரித்து-விரித்துக்கொண்டு ஆடும்-கூத்தாடும், எ-று. மாது-ஓ-அசைகள்.

ஒழிந்தவென்பது முற்றெச்சமாய்வந்தது; "பாயுமாறிபோற் பகழிசிந்தினுராயர்மத்தெறி தயிரினுயினுர்" இதிற் சிந்தினுரென்பது, சிந்தவென்னும்,பொ

ருளைத் தந்தமைபோல, வண்டு, தேன், சுரும்பு, ஞிமிறு, இந்நான்கும் வண்டு களின் சாதிபேதம். "மங்கைநல்லவருகண்ணு மனமும்போன், றெங்குநாடி யிடறுஞ் சுரும்புகாள், வண்டுகாண்மகிழ் தேனினங்காண்மது, வுண்டுதேக்கிடு மொண்ஞிமிறீட்டங்காள்" எனபதனுலறிக. தேன் தேமென ஈறு திரிந்தது. மேகத்தைக் காணும்போது குயில்களுக்குத் துன்பமு மயில்களுக்கு யின்பமும் உண்டாகுகை சுபாவம்.[புகையை மேகமென் றுமயங்குதலால் மயக்கவணியாம்.]

(க-து.) கருப்பஞ்சாற்றைச் காய்ச்சுகையி லெழும் புகையை மேகமென்று குயில்கள் கூவாதடங்கின, வண்டுகள்பாட மயில்கள் நடனமாடின, எ-று.

அரக்கெறி குமுதச்செவ்வா யலர்முலை யந்நலார்தந்
திருக்கிளர் கமலம்பூத்த சேயறிக் கண்ணும்வாவி
உருக்கிளர் குவளைப்போதும் வெற்றுமை யுணராதுற்ற
வரிச்சிறை தும்பியோடு வண்டின மருளுமாதோ.

(இ-ள்.) அரக்கு-சிவப்புநிறத்தை, எறி-வீசுகின்ற, குமுதம்-அல்லி மலர் போலும், செவ்-செய்ய, வாய்-வாயையும், அலர்-அடிபரந்த, முலை - முலைகளை யுமுடைய, அந்நாலார் - அந்நாட்டு மாதருடைய, திரு - அழகினால் கிளர்-வி ளங்குகின்ற, கமலம்-தாமரைப்பூவாகிய(முகங்களிடத்து) பூத்த-மலர்ந்த சேய்-செய்ய, அரி - இரேகைகளையுடைய, கண்ணும் - கண்களுக்கும் (கமலம்) தா மரைமலர்களிடத்து, உரு-அழகினால், கிளர்-விளங்குகின்ற,குவளைப்போதும்-நீலோற்பலமலர்களுக்கும், வாவி-குளத்தின்கண், வேற்றுமை-பேதத்தை, உண ராது-அறியமாட்டாமல், உற்ற (தேனுண்ண) வடைந்த, வரி-கீற்றுக்களையும், சிறை-சிறைகளையுமுடைய, தும்பியோடு-தும்பிகளுடன், வண்டு-வண்டுகளின் இனம்-கூட்டம், மருளும்-மயங்கும், எ-று. மாது-ஓ-அசைகள்.

கமலங் குவளைக்குங் கூட்டப்பட்டது. வாவியிடத்தென்றதனால் அந்ந லார் நீர் விளையாடு மகளிரெனக்கொள்க. [அவர் முகங்களைச்சேர்ந்த கண்களு க்குந் தாமரை மலர்களைச்சேர்ந்தகுவளைகளுக்கும்விசேடந் தோன்றுமையைச் சொல்லுதலாற் பொதுமை யணியாம்.]

(க - து.) அந்நாட்டுப்பெண்களதுகண்களிவையென்றுங் குவளைமலரிவை யென்றும் அறியாது வண்டினங்கள் மயங்கும்-எ-ம். 17

அல்லியங் கோதைமாத ரன்பொடு வளர்த்தமுல்லை
மெல்லறும் பிள்ளைதன்ன விழாவயர் கிழவினோடு
மலலுயா தின்மதாண மைந்தர் மங்கையர் வதுவையாற்றும்
பல்லிய முதக்கமார்க்கும் பரவையோ டிகலுமாதோ

(இ - ள்.) அல்லி - அகவிதழ்களாலாகிய, அம் - அழகிய, கோதை-மாலை யையுடைய, மாதர்-மகளிரானவர், அன்போடு - அன்புடனே, வளர்த்த (தம் மால்) வளர்க்கப்பட்ட, முல்லை - முல்லைக்கொடியானது, மெல்-மெல்லிய, அரும்பு - அரும்புகளை, ஈன்றதென்று - தந்ததென்றுநினைத்து, விழா (அதற்

குத்) திருவிழாவை, அயர் - செய்யுமிடத்துண்டாகின்ற, முழவினோடு-வாத்திய வொலியோடு, மல்-மற்போரில், உயர்ந்த, திணி-வலிமைபொருந்திய, தோள்-தோள்களையுடைய, மைந்தர் - காளையரானவர், மங்கையர் - மங்கைப்பருவப் பெண்களை, வதுவையாற்றும்-விவாகஞ்செய்தற்கணுண்டாகின்ற, பல்லியம்-பலவகைவாத்தியங்களது, முழக்கம்-ஓசையானது, ஆர்க்கும்- ஒலிக்கின்ற, பரவையோடு - கடலொலியோடு, இகலும்-பகைக்கும், எ-று. மாது-ஓ-அசைகள்.

கற்புடை மகளிர்க்கு முல்லைப்பூ உரித்தாதலால் அன்பொடு வளர்த்த முல்லையென்றார். இது "முல்லையந் தொடையருந்ததி முதலெழுமுனிவ, ரில்லறம்புரி துணைவியர்" என்பதனாலுமறிக. அதற்கு விழாவாவது பருவப் பெண்ணுக்கு முதற் பூப்பிலே செய்யப்படுஞ் சிறப்பை அதன் முதற்பூப்பிலே செய்தல். [வாத்திய வோசைக்குங் கடலோசைக்கும் பகையில்லாமையிலே பகையைக் கற்பித்தமையால் தொடர்புயர்வு நவிற்சி யணியாம்.]

(க - து.) முல்லை மலர்ந்ததென்று திருவிழா நடத்துகின்ற வாத்தியவோசையும் விவாகம் நடத்துகின்ற வாத்திய வோசையும் கடலோசையோடு மாறுபடும் - எ-ம். 18

அவிரிழை சுமக்கலாற்று தங்கலார் பரிந்துநீத்த
திவளொளி மணியுமுத்துஞ் சிந்திய முன்றிறோறுங்
குவிமுலைக் கயவாய்ச்செங்கட் குடம்புரை செருத்தன்மேதி
கவையடி பெயர்ப்பமாழ்கிக் காறளர்ந் தொதுங்குமன்றே.

(இ - ள்.) அங்கலார் - அத்தேயத்துமாதரால், சுமக்கலாற்று - சுமக்க மாட்டாமல், பரிந்து - வருந்தி நீத்த - களைந்தெறியப்பட்ட, அவிர்-ஒளிசெய்கின்ற, இழை - ஆபரணங்களில், திவள் - அசையாநின்ற, ஒளி-ஒளியையுடைய, மணியும் - பலவிதமணிகளும், முத்தும் - முத்துக்களும், சிந்திய - இறைந்துகிடக்கின்ற, முன்றிறோறும் - வீட்டுமுன்னிடந்தோறும்- குவி - குவிந்த, முலை - முலைகளையும், கயம் - பெரிதாகிய, வாய்-வாயையும், செம்- செய்ய, கண் - கண்களையும், குடம்புரை - குடம்போலும், செருத்தல் -மடியையுமுடைய, மேதி - எருமைகளானவை, கவை - பிளப்பையுடைய, அடி - அடிகளை, பெயர்ப்ப - எடுத்துவைக்க, மாழ்கி - வருந்தி, கால் - கால்களானவை, தளர்ந்து - சோர்ந்து, ஒதுங்கும் - பக்கங்களிலே விலகும், எ - று. அன்று - ஏ. அசைகள்.

இன்முன் முன்றிலென் நிலைமாறிப் போலியாய்வந்தது. அடி - கீழ்க்கால். தளர்ந்து என்னுஞ் சினைவினை ஒதுங்குமென்னு முதல்வினையோடுமுடிந்தது. இதற்கு "அம்முக்கிளவியுஞ் சினைவினைதோன்றிற், சினையோடு முடியா முதலொடு முடியினும், வினையோரனைய" என்பது விதி. [செல்வமிகுதியைச் சொல்லுதலால் வீறுகோளணியாம்.]

(க-து.) பெண்கள் களைந்தெறிந்த ஆபரணங்களின் நவமணிகளின் மேல் எருமைகள் பிளவடியையாமல் விலகிப்போம்-எ-ம். 19

பொரியரைத் தேமாநெற்றிப் பூங்கனி யிழிந்ததேனும்
விரிதலை யரம்பையீன்ற மென்பழ னுகுத்ததேனும்
முருகவிழ் சுளைவாய்விண்ட முட்புறக் கனியின்றேனுங்
குருகுபாய் தடமுமியாறுங் குறைவறப் பெருகுமன்றே.

(இ-ள்.) பொரி-பொருக்குகளையும், அரை-அரையையுமுடைய, தேமா-தேமாவினது, பூ-அழகிய, கனி-பழங்களானவை, நெற்றி - முதிர, இழிந்த (அவைகளிலிருந் தொழுகிய, தேனும்-மதுவும், விரி-விரிந்த, தலை-தலையை யுடைய, அரம்பை- வாழைகளால், ஈன்ற-தரப்பட்ட, மெல்-மெல்லிய, பழன்-பழங்களால், உகுத்த-சொரியப்பட்ட, தேனும் மதுவும், விண்ட-வெடித்த, முட்புறக்கனியின்-பலாப்பழங்களினுடைய, முருகு-பரிமளமானது, அவிழ் விரிகின்ற, சுளைவாயிலிருந்தொழுகிய, தேனும்-மதுவும், குருகு-பறவைகளானவை, பாய்-பாய்கின்ற, தடமும்-ஏரிகளிலும், யாறும்-நதிகளிலும் குறைவற குறைவுதீர, பெருகும்-பெரிகிப்பாயும், எ-று.

நெற்றி-வினையெச்சத்திரிபு. குறைவு-வெயிலாதிகளாலுண்டாவது. [முக்கனிகளின் சாற்றிற்கும் ஏரிநதிகளுக்குஞ் சம்பந்தமில்லாதிருக்கச் சம்பந்தத்தைக் கற்பித்தலினுலே தொடர்புயர்வு நவிற்சியணியாம்.]

(க-து.) மாங்கனித்தேனும் வாழைக்கனித்தேனும் பலாக்கனித்தேனும் ஏரிகளிலும் நதிகளிலும் பெருகும். எ-ம். 20

அருமறைக் கிழவருள்ளத் தவாக்கெட வன்பினல்கும்
பெருநிதிக் குப்பையோடு பெய்புனல் பெருகியோடி
வரிவளை யலரியீன்ற மணியிள நிலவுகாலுந்
திருநீள் கழனிதோறுஞ் செந்நெலை வளர்க்குமாதோ.

(இ-ள்.) அரு-அரிய, மறைக்கிழவர். வேதத்திற்குரிய பார்ப்பாருடைய, உள்ளத்து-மனத்திலுள்ள அவா (பொரு)ளாசையானது, கெட அழிய, அன்பின்-பத்தியினுலே, நல்கும்-கொடுக்கப்படுகின்ற, பெரு-பெரிய, நிதி-பொருள்களது, குப்பையோடு-குவியல்களோடு, பெய் (விதிப்படி)வார்க்கப்படுகின்ற, புனல்-நீரானது, பெருகி-பெருக்கெடுத்து, ஓடி - விரைந்து போய், வரி-இரேகைகளையுடைய, வளை-சங்குகளால்: அலறி-கூவி, ஈன்ற-தரப்பட்ட, மணி முத்துக்களானவை, இள-இளமைபொருந்திய, நிலவு-சந்திரிகையை, காலும்-வீசுகின்ற, திரு-அழகிய, நீள்-நீண்டிருக்கின்ற, கழனிதோறும்-கழனிகளிலெல்லாம், செந்நெலை-செந்நெற்பயிரை, வளர்க்கும்-வளர்க்கும் எ-று. அகரம்-சாரியை. மாது-ஓ-அசைகள்.

[தானப்புகழ்ச்சியாகிய மிகுதிநவிற்சியணியானது நீருக்கும் பயிருக்குஞ் சம்பந்தத்தை உண்டாக்குகையாகிய தொடர்புயர்வு நவிற்சியணிக்கு அங்கமாக வருதலால் உறுப்புறுப்பிக் கலவையணியாம்.]

(க-து.) பார்ப்பாருக்குப் பொருட்குவியலைத் தத்தம்பண்ணு நீரானது செந்நெலைவளர்க்கும்-எ-ம். 21

நிலவுவெண் முத்தும்பொன்னு நீனிற மணியுஞ் சாந்துந்
தலைமயக் குற்றவாற்ருற் றண்மதி தவழுங் கோட்டு
மலைவளம் பெரிதென்கோயான் வால்வளை பரந்துமேயும்
அலைவளம் பெரிதென்கோயான் யாதென வறைவன்மாதோ.

(இ-ள்.) நிலவு-சந்திரிகைகையுடைய, வெள்-வெள்ளிய, முத்தும்-முத்துக்களும், பொன்னும்-கனகங்களும், நீனிறம்-நீலநிறத்தையுடைய, மணியும்-மணிகளும் சாந்தும் சந்தனக்கட்டைகளும், தலைமயக்குற்றவாற்ருல்-கலந்து கிடைக்கையால், தண்-தண்ணிய, மதி-சந்திரனுல், தவழும்-உராய்ந்து செல்லப்படுகின்ற, கோட்டு-சிகரத்தையுடைய, மலை-மலையினது, வளம்-வளத்தை, யான்-நான், பெரிதென்கோ-அதிகமென்று சொல்லுவேனே, வால்-வெண்மைபொருந்திய, வளை சங்குகளானவை, பரந்து-பரவி, மேயும்-மேய்கின்ற, அலை-அலைகளையுடைய கடலினது, வளம்-வளத்தை, யான்-நான், பெரிதென்கோ-அதிகமென்று சொல்லுவேனே, யாதென (இவற்றுள்ளே) எதை (அதிக) மென்று, அறைவல்-யான் சொல்லுவேன், எ-று.

முத்துமுதலியவற்றை விரவிக்கூறினரேனும் உரிமைபற்றிக் கடலுக்கு முத்தும் நீலமணியும், மலைக்குப் பொன்னுஞ் சாந்துங் கூட்டப்படும். மலைக்குங் கடலுக்கும் விசேடணங்களை மிகுத்துச் சொன்னமையால் அகின்முதலிய மற்றை மலைவளங்களும் பவளமுதலிய மற்றைக் கடல்வளங்களுங்கொள்ளப் படும். [நானிலங்களின் முதனிலவளமுங் கடைநிலவளமுங் கூறவே மற்றை நிலவளங்களுங் கூறுதேயமைதலால் ஐயவணியாம்.

(க-து.) மலைவளத்தைப் பெரிதென்று சொல்லுவேனே கடல்வளத்தைப் பெரிதென்று சொல்லுவேனே என்ருர் நூலாசிரியர். 22

உளங்கனிந் தாயரூதும் வேயிசை செவியினோர்ந்து
துளங்குவெள் ளருவிக்குன் றிற் றோகைகண்டுஞ்சுந்தெண்ணீர்
வளங்கெழு மருதவேலி வண்டுதாலாட்ட நெய்தல்
இளங்களிக் குமரியன்ன மின்றுயில் கூருமாதோ.

(இ-ள்.) ஆயர் (முல்லைநிலத்துள்ள) இடையரால், உளங்கனிந்து-மனமகிழ்ந்து, ஊதும்-ஊதப்படுகின்ற, வேய்-புள்ளாங்குழல்களுடைய, இசை-இராகத்தை, செவியின்-காதுகளினுலே, ஓர்ந்து-கேட்டு, துளங்கு-அசைகின்ற, வெள்-வெள்ளிய, அருவி-வெள்ளங்களுடைய, குன்றில்- குறிஞ்சி நிலத்தில், தோகை-மயில்களானவை, கண்டுஞ்சும்-தூங்கும், தெள்-தெள்ளிய, நீர்-நீரினது, வளம்-வளமானது, கெழு-பொருந்திய, வேலி-வேலியையுடைய, மருதம்-மருதநிலத்தில், வண்டு-வண்டுகளானவை, தாலாட்ட தாலாட்டிசையைப்பாட, நெய்தல்-நெய்தனிலத்தில், இள-இளமைபொருந்திய, களி-களிப்புடைய, குமரி

யன்னம்-பெட்டை யன்னங்களானவை, இன்-இனிய, துயில்கூரும்-நித்திரை மிகும், எ-று.

முல்லையோடு குறிஞ்சிக்கும் மருதத்தோடு நெய்தலுக்கும் அணிமைசொல் லப்பட்டது.

(க-து.) இடையர் புள்ளாங்குழ லிசைகேட்டு மலையில் மயில்கள் நித்திரை செய்யும், மருதநிலத்தில் வண்டுகள் தாலாட்டிசைபாட நெய்தனிலத்தி லன் னங்கள் நித்திரைசெய்யும்-எ-ம். 23

கொடியன மகளிர்தங்கள் குழையுநுண் மருங்கேவாளா
படுகொலை புரிவமாதர் படைநெடுங் குவளைக்கண்ணே
அடிமிசை முறையிட்டென்று மாற்றுவ சிலம்பேசூழ்ந்து
கடிமது நுகர்வவன்னோற் கருங்குழற் காமர்வண்டே.

(இ-ள்.) மகளிர்-மாதருடைய, குழையும்-வாடுகின்ற, நுண்-நுண்ணிய, மருங்கே-இடைகளே, கொடியன-கொடுமையுள்ளனவாம் [இங்கே- மருங்கே கொடியெனவென்பதற்கு, மருங்கே-இடைகளே, கொடியன-கொடிபோல் வன, என்பது கருத்தாகக்கொள்க.] அன்னோர்-அவருடைய, மாதர்-அழகிய, படை-வாளும், குவளை-நீலோற்பலமும்போல, நெடு-நெடிய, கண்ணே-கண் களே, வாளா-வீணாக, படு-இறந்துபடுகின்ற கொலை-கொலைத்தொழிலை, புரிவ-செய்வனவாம் [இங்கே-கண்ணே வாளாபடுகொலைபுரிவவென்பதற்கு, கண் ணே-கண்களே, வாளா-காரணமில்லாமல், படு-வருந்துகின்ற, கொலை-வருத் தத்தை, புரிவ-செய்வன, என்பது கருத்தாகக் கொள்க.] சிலம்பே - நூபுரங் களே, அன்னோர் - அவருடைய, அடிமிசை - அடிகளின்மேல் விழுந்து, முறையிட்டு (தங்குறைகளை) முறையிட்டு, என்றும் - எந்நாளிலும், அரற் றுவ - புலம்புவனவாம் [இங்கே-சிலம்பே யடிமிசைமுறையிட்டென்று மாற் றுவவென்பதற்கு, சிலம்பே-சிலம்புகளே, அடிமிசை-அடிகளின்மேல், முறை-முறையாக, இட்டு-தரிக்கப்பட்டு, என்றும்-எக்காலமும், அரற்றுவ-ஒலிப்பன, என்பது கருதாகக்கொள்க.] அன்னோர்-அவருடைய, கரு-கரிய, குழல்-கூந் தலிலுள்ள, காமர்-அழகிய, வண்டே-வண்டுகளே, சூழ்ந்து-சூழ்ந்து, கடி (வேத த்தினாலே) விலக்கப்பட்ட, மது-கள்ளை, நுகர்வ-குடிப்பனவாம் [இங்கே வண்டே சூழ்ந்து கடிமதுநுகர்வவென்பதற்கு,வண்டே-வண்டுகளே, சூழ்ந்து-மொய்த்து, கடி-பரிமளம்பொருந்திய, மது (பூந்) தேனை, நுகர்வ-குடிப்பன, என்பது கருதாகக் கொள்க.] தம்-சாரியை. கள்-பகுதிப்பொருள்விகுதி.

எனவே அந்நாட்டுமனிதர்களிலே கொடியவரும், வீணாக இறந்துபடு கிற கொலைத்தொழிலைச் செய்பவரும், பிறரடிகளின் மேலே வீழ்ந்து தங் குறைகளை முறையிட்டுப் புலம்புவோரும், வேதத்தினாலே விலக்கப்பட்டகள் ளைக் குடிப்பவரும், இல்லையென்பதாயிற்று. இடைமுதலியவைகளை அம்மனி தரிற் பிரித்தலால் ஏகாரங்களைன்கும் பிரிநிலைகள். [இது கொடுமைமுதலான

வற்றை மனிதர்களினெழித்து இடைமுதலானவற்றிற் காட்டலால் ஒழித்துக் காட்டணியாம்.] 24

**கடல்படு மமுதுமல்லற் கான்படு மமுதுமோங்குந்**
**தடவரை யமுதுமொன்றித் தலைமயக் குற்றவாற்றால்**
**உடைதிரை யமுதமொன்றே யுடையவிண் ணுடுகொல்லோ**
**நிடதநா டதற்குநேரா நிகழ்த்தலாந் தகைமைத்தம்மா.**

(இ-ள்.) கடல்-கடலினிடத்து, படும்-உண்டாகிய, அமுதும் (உப்புமுத லாகிய) வமுதமும், மல்லல்-வளம்பொருந்திய, கான்-காட்டினிடத்து, படும்-உண்டாகிய, அமுதும் (பால்முதலாகிய) வமுதமும், ஓங்கும்-உயர்ந்த, தடம்-பெரிய, வரை-மலையினிடத்து, (படும்) உண்டாகிய, அமுதும் (தேன்முதலா கிய) வமுதமும், ஒன்றி-பொருந்தி, தலைமயக்குற்ற-கலந்துகிடக்கிற, ஆற்றால்-காரணத்தால்,உடை (கரையை) உடைக்கின்ற, திரை-அலைகளையுடைய (கட லினிடத்து) (படும்) உண்டாகிய, ஒன்றமுதமே - ஓரமிர்தத்தையே, உடைய (தன்னிடத்தி) ஓடைய, விண்ணுடோ-தெய்வநாடோ, நிடதநாடதற்கு-நிடத தேயத்திற்கு-நேரா-ஒப்பாக, நிகழ்த்தலாம்-சொல்லாம், தகைமைத்து-குணத் தை யுடையது, எ-று. கொல்-அசை. ஓ-எதிர்மறை.

[உபமேயமாகிய நிடதநாட்டிற் 5 உபமானமாகிய வோரமுதமுடைய தெய்வநாட்டினும் பலவமுதமுடைமையாகிய விசேடத்தைச்சொல்லுதலால், வேற்றுமை யணியாம..]

(க-து-) கடலில் மலையில்காட்டில்படுதிரவியம் பொருந்தியிருப்பதால் இந்நாட்டைப் பொன்னுட்டுக் கொப்பாகச் சொல்லலாம்-எ-ம். 25

நலனுறு குமரரியார்க்கு நண்ணிய விருந்தோடுண்டும்
பலகலை கேள்வியாய்ந்தும் பகற்பொழு தினிதுநீங்கும்
**அலர்முலை யந்நலார்த மலத்தக மலர்த்தாணீவிப்**
**புலவிகடீர்த்துஞ்சேர்ந்து நள்ளிருட் பொழுதும் போமால்.**

(இ-ள்.) நலன்-நற்குணங்களை, உறு-பொருந்திய, குமரரியார்க்கும்-ஆடவ ரெல்லாருக்கும், நண்ணிய (தம்மிடத்துவந்த) விருந்தோடு-விருந்தினரோடு, உண்டும்-உண்ணலானும், பல-பலவாகிய, கலை-கலைகளை, கேள்வி-கேள்வியி னுலே, ஆய்ந்தும்-ஆராய்தலாலும், பகற்பொழுது-பகற்காலமானது, இனிது-இனியதாக, நீங்கும்-கழிடம், அலர்-அடிபரந்த, முலை-முலைகளையுடைய, அந்ந லார் - அழகியமங்கையருடைய, அலத்தகம், செம்பஞ்சுகுட்டிய-மலர்தாமரை மலர்போலும், தாள்-அடிகளை. நீவி-தடவி, புலவிகள்-ஊடல்களை, தீர்த்தும்-நீக்குதலாலும், சேர்ந்தும் (அவரைச்) சேர்தலாலும், நள்ளிருட்பொழுதும்-நடுவிராக்காலமும், (இனிது) இனியதாக, போம்-கழியும், எ-று. தம்-சாரியை-ஆல்-அசை.

உண்டு, ஆய்ந்து, தீர்த்து, சேர்ந்து, இந்நான்கும் வினையெச்சத் திரிபுகள்,

(க-து.) வாலிபர்களுக்குப் பகற்பொழுதானது-விருந்துண்ணுதலாலும் கல்விப்பயிற்சியினாலும் நீங்கும். இராப்பொழுதானது-பெண்கள் பிணக்கை நீக்குதலாலும் அவர்களைச் சேர்தலாலும் நீங்கும்-எ-று. 26

கொல்லுலை வேற்கணல்லார் கொழுநரோ டூடிநீத்த
வில்லுமிழ் கலன்களியாவு மிளிர்சுட ரெறிக்குமாற்றால்
எல்லியும் பகலுந்தோன்று திமையவ ருலகமேய்க்கும்
மல்லன்மா விந்தமென்னும் வளநகர் கூறலுற்றாம்.

[இதனால் அங்கிடதேயத்துள்ளே நளராஜனுக் கிடமாகிய மாவிந்த நகரத்தின் சிறப்பைப்புகழத் தொடங்கினமை சொல்லப்படுகின்றது.

(இ-ள்.) கொல்-கொல்லனது, உலை-உலையிலே (காய்ச்சப்பட்ட) வேல்-வேல்போலும், கண் (சிவந்த) கண்களையுடைய, நல்லார்-மாதரால் கொழுநரோடு (தம்முடைய கணவரோடு, ஊடி-பிணங்கி, நீத்த-களைந்தெறியப்பட்ட, வில்-காந்தியை, உமிழ்-வீசுகின்ற, கலன்களியாவும்-ஆபரணங்களெல்லாம், மிளிர்-விளங்குகின்ற, சுடர்-கிரணங்களை, எறிக்கும் வீசும், ஆற்றால்-காரணத்தால், எல்லியும்-இரா (விது) வென்றும், பகலும்-பக (லிது) வென்றும், தோன்றுது-அறியமாட்டாமல், இமையவர்-தேவரது, உலகம்-உலகத்தை,எய்க்கும்-ஒத்திருக்கின்ற, மல்லல்-செல்வத்தையுடைய, மாவிந்தமென்னும்-மாவிந்தமென்று சொல்லப்பட்ட, நகர்-பட்டணத்தினது, வளம்-சிறப்பை, கூறலுற்றாம் (யாம்) சொல்லத்தொடங்கினோம், எ-று.

கணவர்மேற் கோபத்தினாலே கண்கள் சிவத்தலிற் காய்ச்சப்பட்டவேலையுவமான மாக்கினர். [இரவும் பகலுந் தோன்றாமையை ஆபரண காந்தியினாலே சாதிப்பதாகிய செய்யுட்குறியை அங்கமாகக்கொண்டு இமையவருலகமேய்க்குமென்னு முவமைவருதலாற், கலவை யணியாம்]

(க-து.) மாதர்கள் கழற்றியெறிந்த ஆபரணப்பிரகாசத்தினால் தெய்வலோகத்துக் கொப்பாகு மாவிந்தநகரவளப்பத்தைச் சொல்லுவாமென்றார்-எ-ம். 27

நாட்டுப்படலம்-முற்றிற்று.

———

# நகரப்படலம்.

[இது நளனது இராஜதானியாகிய மாவிந்தநகரத்தின் சிறப்பைச் சொல்லுகின்றது.]

கலிநிலைத்துறை.

குடவளைக் குலம்வயி றுளைந்தினமணி கொழிக்கும்
மடுவில்வானக ருருவுகாட்டியது போன்மதில்சூழ்
கடிகொண்மாநக ரந்நிழல் கதுவிடாதகன்ற
புடைகொணீர்நக ருடுத்தலை பொங்குபேரகழி

[இதனால் மாவிந்தநகரத்தின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்) மதில்-மதிலை, சூழ்-சூழ்ந்த, கடி-காவலை, கொள்-கொண்டிருக்கிற மா-பெருமைபொருந்திய, நகர் (முன் சொல்லப்பட்ட) நகரமானது, குடம்-குடம்போலும், வளை-சங்குகளின், குலம்-கூட்ட மானவை, வயிறுளைந்து-வயிறுநொந்து, இனம் (ஒன்றற்கொன்றின்மாகிய) மணி - முத்துக்களை, கொழிக்கும்-சொரிதற்கிடமாகிய, மடுவில்- ஒரு தடாகத்துள், வானகர்-அமராவதிபட்டணத்தினால், காட்டியது-காட்டப்பட்டதாகிய, உருவு-நிழலை, போன்ம், போலும், நகர்-அந்நகரத்தினால், உடுத்து-உடுக்கப்பட்டு, அலை-அலைகளால்,பொங்கு-விளங்குகின்ற, பேர்-பெரிய, அகழி-அகழியானது, அந்நிழல்-அந்நிழலினால், கதுவிடாது-பற்றப்படாமல், அகன்ற-நீங்கிய, புடை-சுத்துப்பக்கத்தை கொள் (தனக்கிடமாகக்) கொண்ட, நீர்-நீரை போன்ம் போலும், எ-று.

[வயிறுளைந்தின்மணி எனப்பாட மோதலும் பொருந்தும். போலும்-என்னுஞ் செய்புமென் வாய்ப்பாட்டு முற்றுவினை ஈற்றயலுகரங்கெட்டு லகரமெய் னகர மெய்யாகத்திரிந்தது. இதற்குவிதி "அவற்றள் - செய்மென்னும் பெயரெஞ்சகிளவிக்கு-மெய்யொடுங்கெடுமே யீற்றுமிசையுகர-மவ்விடனறிதலென் மனார் புலவர்" என்பதனாலறிக. உடுத்துகதுவிடாது என்பவை "எழிதிவந்த ஓலை" என்கிறவிடத்தே எழுதியென்பதுபோலச் செயப்பாட்டு வினைப்பொருளைத்தந்தன. [மாவிந்தநகரத்தை அமராவதியின் பிரதிபிம்பமாகவும், அந்த மாவிந்தநகரைச்சூழ்ந்த அகழியை அந்நிழலைச் சூழ்ந்த நீராகவுங் குறித்தலால், தற்குறிப்பணியாம்.]

(க-து.) மாவிந்த நகரமானது ஒரு தடாகத்துள்ளே தோன்றிய தேவநகரைப்போலுமிருந்தது. அம்மாவிந்தநகரத்தி னகழியானது அத்தடாகத்திற்றோன்றிய தேவநகரைச்சூழ்ந்த சலத்தைப்போலு மிருந்தது. எப்படியெனில்-கண்ணாடியுள்ளே முகந்தோன்றியவிடத்தில் கண்ணாடி வடிவந்தோன்றுது. அம்முகம் தோன்றுவிடத்தில் அக்கண்ணாடி வடிவந்தோன்றும் இதுபோலவே தடாகத்துள்ள தேவநகரந் தோன்றியவிடத்தில் சலந்தோன்றும். இதுபோலவே பாடாகத்துள்ளே தேவநகரந் தோன்றியவிடத்தில் சலந்தோன்றுது. அத்தேவநகரத்தோன்றுவிடத்துதில் சலந்தோன்றும் ஆகையால்-தேவநகரத்தின் பிரதிபிம்பத்தையே மாவிந்தநகரமாகவும், பிரதிபிம்பத்தைச் சூழ்ந்த சலத்தையே மாவிந்தநகரத்தி னகழியாகவும் கொள்க, எ-ம்.

கண்ணகன்றபே ரகழியி லுழக்கிய கரிகள்
தண்ணந்தாமரைத் தாளெனத் தடக்கையாற் பிலத்தில்
நண்ணுஞ்சேடனை யெடுத்ததன் சுடிகையினுறி
உண்ணிவந்தொளிர் மணியினு லுற்கையென் றெறியும்.

[இதனால் அகழியின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கண்ணகன்ற-இடம்பரந்த, பேர்-பெரிய, அகழியில்-அகழியினிடத்து, உழக்கிய-கலக்கிய, கரிகள்-யானைகள், தண்-தண்ணிய,அம்-அழகிய, தாமரை-தாமரையினுடைய, தாளென-நாளமென்றுநினைத்து, தடம்-பெரிய, கையால்-துதிக்கையினாலே, பிலத்தில்-பாதாளத்திலே, நண்ணும்-வாசஞ்செய்கின்ற, சேடனை-சேடனென்னும் பாம்பை, எடுத்து-மேலெடுத்து,அதன்-அப்பாம்பினது, சுடிகையில் - உச்சியினிடத்து, உள் (அத) னுள்ளிருந்து, நிவந்து-மேலெழும்பி, நாறி-காணப்பட்டு, ஒளிர்விளங்குகின்ற, மணியினால்-இரத்தினத்தினாலே, உற்கையென்று-கொள்ளியென் (றஞ்சி) எறியும் (அதனை)வீசும், எ.று.

நல்லசாதிப்பாம்புற்கு வளருந்தோறும் உள்ளிருந்து மேலெழும்பிக்கொண்டுவந்து தகுந்த பருவத்திலே உச்சியிற்புறப்பட்டுக் காணப்படுதலால், உண்ணிவந் தொளிர்மணியென்றார். கரிகளென்று பன்மை யாற்கூறலால், தனித்தனியெடுத்தென்று கொள்க, [சேடனைத் தாமரைநாளமென்றுங் கொள்ளியென்றும் மயங்குதலால், மயக்கவணியம்; யானைக்குஞ் சமபந்தத்தைக் கற்பித்து அகழி பாதாளவரைக்கும் ஆழ்ந்துள்ளதென்னும் பொருள்படலால், தொடர்புயர்வுநவிற்சியணியுமாம்.]

(க-து.) அகழியிற்கலக்கிய யானைகள் தாமரைத் தண்டென் றுதிசேடனையெடுத்து அதன்முடியின் மணியொளியால் கொள்ளிக்கட்டையென்றெறியும் எ-ம்

2

ஒற்றையாழியந் தேரவனுயர்மதில் கடக்கப்
பெற்றிலாமையிற் பிறங்குபொற் கதவங்க டிறக்கும்
அற்றநோக்குவ னந்நலாரியல்புற வணியக்
கற்றைவெண்மதி சாளரத்தாடியிற் காட்டும்.

[இதனாலே மதிலினது சிறப்புச் சொல்லப்படுகின்றது]

(இ-ள்) ஒற்றையாழி-ஒருருளையுடைய, அம்-அழகிய, தேரவன்-தேரையுடைய (சூரியனானவன்) உயர் (தன் வழியின்மேலு) முயர்ந்த, மதில்-மதிலை, கடக்க-தாண்டுதற்கு, பெற்றிலாமையின் (வல்லமை) பெற்றில்லாமையால், பிறங்கு-விளங்குகின்ற, பொன்-பொன்மயமாகிய,கதவங்கள (அம்மதில்வழிக்) கதவுகளை, திறக்கும்-திறக்கும், அற்றம் - சமயத்தை, நோக்குவன் - பார்த்துக் கொண்டிருப்பான், அந்நலார்- அழகியமகளிரானவர் - இயல்புற-திருத்தமுண்டாக, அணிய- (திலதமுதலானவற்றைத்) தரித்துக்கொள்ள, கற்றை (கிரணக்) கற்றையையுடைய, வெள்-வெளிய, மதி-சந்திரனானவன், சாளரத்து (அம்ம

தின்மேற்) பலகணியின்புறத்திருந்து, ஆடியின் (நிலைக்)கண்ணாடிபோல, காட்டும் (அவருக்குத்தன்னை) காட்டுவான், எ-று.

நிலைக்கண்ணாடி-நிலையாக முன்வைக்கப்படுவது. கற்றைவெண்மதியென்றதனாற் பூரணசந்திர னெனக்கொள்க. [சூரியனோடு மதில்வாயிலுக்குஞ் சந்திரனோடு மதிற்சாளரத்திற்குஞ் சம்பந்தஞ் சொல்லுதலால், தொடர்புயர்வு நவிற்சி யணிகளாம்.]

(க-து.) சூரியனானவன் மாவிந்தநகரமதிலைக் கடக்கமாட்டாமல் கதவுகளைத்திறக்கும் சமயம்பார்த்திருப்பான். சந்திரனானவன் பெண்கள் திலதமுதலிய பணிகளணிந்துக் கொள்ளத்தன்னை நிலைக்கண்ணாடிபோலக் காட்டுவான்-எ-ம். 3

மறுவிகந்தவெண் மதியென வயங்கியபித்தி
செறியுமாடங்கள் வெண்கதிர் பரப்பியசெவ்வி
நறவுயிர்த்தபைந் துணர்மலி கற்பக நாட்டை
வெறுவிதாமென வெண்ணகை புரிவன போலும்.

[இதுமுதல் முப்பத்துநாலு பாட்டுகளால் வீடுகள் முதலிய வற்றின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மறு-களங்கத்தினின்றும், இகந்த-நீங்கிய, வெள்-வெள்ளிய, மதியென-சந்திரன்போல, வயங்கிய-விளங்கிய, பித்தி (பளிக்குச்)சுவர்களால், செறியும்-நெருங்கிய, மாடங்கள்-மாளிகைகளானவை, வெள்-வெள்ளிய, கதிர் கிரணங்களை, பரப்பிய-விரித்திட்ட, செவ்வி-அழகினாலே, நறவு-தேனை, உயிர்த்த-தருகின்ற, பை-பசிய, துணர்-பூங்கொத்துகளால், மலி-நிறைந்த, கற்பகம்-கற்பகத்தருக்களையுடைய, நாட்டை-சுவர்க்கத்தைக்குறித்து, வெறுவிதாமென-வறுமையுடையதென்று, வெள்-வெள்ளிய, நகை-சிரிப்பை, புரிவன-செய்வன, போலும்-ஒக்கும் எ-று.

சிரிப்பதற்குத் தெரு வாயாகவும் மாடவரிசைகள் பல்வரிசைகளாகவுங் கொள்க. [பளிக்குமாடங்களின் வெள்ளொளி வீசலாகிய தருமசம்பந்தத்தினாலே மாவிந்தநகரஞ் சிரிப்பதாகக் குறித்தலாற், பொருட்டற் குறிப்பணியாம்]

(க-து.) மாடங்களானவை கிரணங்களை விரித்திட்டவழகினாலே பொன்னகரத்தைப்பார்த்துப் புன்னகைபுரிவனபோலு மிருக்கின்றன-எ-ம். 4

வடிகொள்வெண்சுதை தீற்றிய மாடநீள் கழுத்திற்
படியமைம்முகில் கதிர்விடு பானிலாக்குழவி
முடியின்மீதுறத் தவழ்தலான் முழுமெயும் வெள்ளைப்
பொடியணிந்தருள் கறைமிடற் றிறைநிலைப் பொருவும்

(இ-ள்.) வடிகொள்-வடித்துக்கொள்ளப்பட்ட, வெள்-வெள்ளிய-சுதை-சுண்ணச்சாந்தை, தீற்றிய-பூசிய, மாடம்-மாளிகையானது, நீள்-நீட்சிபொரு

ந்திய, கழுத்தில் (அதன்) கண்டத்தினகண், மை-கரிய-முகில்-மேகமானது, படிய-படிந்திருக்க, கதிர்-கிரணங்களை, விடு-வீசுகின்ற, பால்-வெண்மைபொருந்திய, நிலாக்குழவி-பிறையானது, முடியின்மீது (அதன்) முடியின்மேலே, உற-பொருந்த, தவழ்தலால்-ஊர்தலால், முழுமெயும்- திருமேனிமுழுதிலும் வெள்ளைப்பொடி-விபூதியை, அணிந்தருள்-பூசியருளிய, கறை (நஞ்சு) கறை பொருந்திய, மிடற்று-கண்டத்தையுடைய, அண்ணலை-பரமசிவனை, பொருவும்-ஒத்திருக்கும்-எ-று.

[அம்மாடங்கள் சந்திரமண்டலத்தை யாளாவியிலிருக்கின்றனவென்பது தோன்ற,பானிலாக்குழவி முடியின்மீதுறத்த வழ்முழுமெயும் வெள்ளைப்பொடியணிந்தருள் கறைமிடற்றண்ணலைப்பொருவும் என்றுறதல், உவமையணியாம்.]

(க-து.) மாளிகையானது வடிவத்தில் சுண்ணச்சாந்தும் கழுத்திற்கரிய மேகமும் முடியில் இளம்பிறையும்பொருந்தியிருத்தலாற் பரமசிவனுக்கொப்பாகும் எ-ம். 5

மழைகண் மங்கையார் பயிற மரகதமணியின்
இழைத்தசெய்குன்றின் பைங்கதிர் பொன்னிலத்தெய்தக்
குழைத்தவைந்தரு நீழலிற் குலவுமானினங்கள்
தழைத்த புல்லென விரைவொடு தனித்தனி கறிக்கும்.

(இ-ள்.) மழை-குளிர்ச்சிபொருந்திய, கண்-கண்களையுடைய-மங்கையர்-மகளிரானவர், பயிற (ஏறி) விளையாடுதற்கு, மரகதமணியின்-மரகதமணிகளாலே, இழைத்த-பதிக்கப்பட்ட, செய்குன்றின்: விளையாட்டு மலைகளுடைய பை-பசிய, கதிர்-கிரணங்களானவை, பொன்னிலத்து-தேவலோகத்தின்கண், எய்த-அடைய, குழைத்த- தளிர்த்த, ஐந்தருபஞ்சதருக்களது, நீழலில்-நிழலினிடத்தில், குலவும்-குலவுகின்ற, ஆன்-பசுக்களுடைய, இனங்கள்-கூட்டங்களானவை, தழைத்த-செழித்த, புல்லென-புற்களென்று நினைத்து, விரைவொடு-சீக்கிரமாக, தனித்தனி-ஒவ்வொன்றாக, கறிக்கும் (அக்கிரணங்களைக்) கௌவும், எ-று.

[மரகத்தி னொளியைப் புல்லென்று மயங்கினதால், மயக்கவணியும், இதற்கு அக்கதிருக்குந் தெய்வலோகத்திற்குஞ் சம்பந்தத்தைக் கற்பித்ததாகிய தொடர்புயர்வு நவிற்சியனி அங்கமாதலால், கலவையணியுமாம்.

(க-து.) செய்குன்றிலிழைத்த மரகதக் கிரணங்களைத் தெய்வப்பசுக்கள் புற்களென்று கடிக்கும்-எ-ம். 6

புதுமணத்தமென் மகளிர்சாளரத் திடைப்பொருந்து
மதியையின்னுயிர்ப் பாங்கியர் மறைந்தனர் நோக்குங்
கதிர்கொள் வாண்முக மென்றுதங் காதலர்ப்புல்லுங்
பதுமமென்கர நீக்கினர் புடைவிழி புதைப்பார்.

(இ-ள்.) புது-புதிய, மணத்த-விவாகத்தையுடைய, மெல்-மெல்லிய, மகளிர்-மங்கையரானவர், சாளரத்திடை (மேல்வீட்டின்) பலகணியின்புறத்து பொருந்து-சேர்ந்த, மதியை-சந்திரனை, இன்-இனிய உயிர்-உயிர்போலச்சிறந்த, பாங்கியர்-தோழியரானவர், மறைந்தனர்-மறைந்தவராகி, நோக்கும்-பார்க்கின்ற, கதிர்-கிரணத்தை, கொள்-கொண்ட, வாள்-ஒளியையுடைய, முகமென்று-முகமென்றுநினைத்து, தம்-தம்முடைய, காதலர்-நாயகரை, புல்லும்-தழுவிக்கொண்டிருக்கின்ற, பதுமம்-தாமரைமலர்போலும், மெல்-மெல்லிய, கரம்-கைகளை, நீக்கி (அவரிலிருந்து) நீக்கி, நீள்-நீண்ட, படை-வாள்போலும், விழி-கண்களை, புதைப்பார்-மூடிக்கொள்வார், எ-று.

மறைந்தென்னும் வினையெச்சம் முற்றாய்த்திரிந்தது. "வினையெஞ்சுகிளவியும் வேறுபல்குறிய" என்பதனாலறிக, இன்னுயிர்ப்பாங்கியரென்றதினால் அந்தப்புறச் செய்கையைப் பார்த்தற்கும் உரிமை தோன்றுகின்றது. புதுமணத்தராதலால் இன்னுயிர்ப்பாங்கியர்க்குங் கண்மூடற்கேதுவான நாணஞ் சொல்லப்பட்டது. [மதியைப் பாங்கியர்முகமென்று மயங்குதலால், மயக்கவணியாம்.]

(க-து) புதிதாக விவாகஞ்செய்துகொண்ட பெண்கள் பலகணியின் புறத்துத்தோன்றிய சந்திரனை மறைந்து பார்க்குந் தோழியர் முகமென்றெண்ணி, நாயகரைத் தழுவியகைகளால் கண்களை மூடிக்கொள்வார்கள்-எ-ம். 7

வள்ளவாய்மலர் முகத்தியர் வதியுமேனிலையிற்
கள்ளறாமலர் நாற்றிய சுருங்கையிற் கதிர்கள்
உள்ளுறப்புகுந் துவாமதியுடலுரிஞ் சுதலால்
பிள்ளைவெண்கதி யாதனன் றெனப்பெரிதுவக்கும்.

(இ-ள்.) உவா-பர்வகாலத்திலே தோன்றுகின்ற; வெள்-வெள்ளிய, மதி-சந்திரனானவன், வள்ளமாய்மலர்-தாமரைமலர்போலும், முகத்தியர்-முகத்தையுடையமாதரானவர், வதியும்-வாசஞ்செய்கின்ற, மேனிலையில்-மேல்வீட்டில் கள்-தேனானது, அறா-நீங்காத, மலர்-மலர்களை, நாற்றிய-தொங்கக்கட்டிய, சுருங்கையில்-நுழைவாயிலிலே, கதிர்கள்-கிரணங்களானவை, உள்- உள்ளே, உற-பாய, புகுந்து-நுழைந்து, மதி (யாவராலும்) மதிக்கப்படுகிற, உடல், (தன் பெரிய) வுடம்பு, உரிஞ்சுதலால்- தேய்தலினாலே, பிளளையாதல்-குழந்தையாதலே, நன்றென (தனக்கு) நல்லதென்று நினைத்து, பெரிது-மிகவும், உவக்கும் (அப்பருவத்தை) விரும்புவான், எ-று.

மகிழ்தலென்னும் பொருளைத்தருகிற உவத்தலென்பது விருப்பத்தையுணர்த்தலால், ஆகுபெயர். [கலைகுறைதலாகிய குற்றத்தினாலே தாராளமாகச் சுருங்கையினுள்ளே நுழையுந்தணமிருத்தல்கண்டு அக்குற்றத்தையே வேண்டுதலால், வேண்டலணியாம்.]

(க-து.) பூரண சந்திரனானவன் மேன்மாடச் சாளரவாயிலில் நுழைந்து உடலானது தேய்தலினாலே இளம்பிறைப்பருவமே நன்றென்று மகிழுவான்-எ-ம். 8

உருவின்மைந்தரில் வேனில்வேட் குடைநரில்லை
பொருளிலார்களிற் றனதனைப் பொருவிலாரில்லை
தெருளின்மாக்களிற் சேடனிற் றாழ்நரில்லை
அருளிலார்களி லைந்தரு நிகர்க்கலாரில்லை.

(இ-ள்.) உருவு-அழகு, இல் (தம்மிடத்) தில்லாத, மைந்தரில்-காளையருள், வேனில்-வசந்தகாலத்தையுடைய, வேட்கு-மன்மதனுக்கு, உடைநர்-தோற்பவர், இல்லை-இலர், பொருள்-செல்வப்பொருள், இலார்களில் (தம்மிடத்) தில்லாதவருள், தனதனை-குபேரனை,பொருவிலார்-ஒவ்வாதவர், இல்லை-இலர், தெருள்-கல்வியறிவு, இல் (தம்மிடத்) தில்லாத,மாக்களில்-மனிதருள், சேடனில்-ஆதிசேஷனில், தாழ்நர்-குறைபவர், இல்லை-இலர், அருள்-ஈகையானது, இலார்களில் (தம்மிடத்) தில்லாவருள், ஐந்தரு-பஞ்சதருக்களுக்கு, நிகர்க்கலார்-ஒப்பாகாதவர், இல்லை-இலர், எ-று.

அம்மன்மதன் முதலான பொருள்களினுமிகுந்த அழகுமுதலானவையுள்ளவர்களே சிறந்தவராம். ஆகவே அப்பொருள்களுக்கு ஒப்பாவார் தாழ்ந்தவரென்பதாயிற்று.

(க-து.) அழகிலாரில் மன்மதனிற்குறைந்தவரில்லை. வறியரில் குபேரனிற் குறைந்தவரில்லை. மூடரில் ஆதிசேடனிற் குறைந்தவரில்லை. கொடாதவரில் பஞ்சதருக்களிற் குறைந்தவரில்லை-எ-ம்.

பளிக்குமேனிலத் தன்பர்பாற் பயில்வுறுகலவி
திளைத்துமார்பிடைத் துயில்பவர் முகத்தில்வெண்டிங்கள்
கிளைத்ததண்கதிர் பரப்புதல் கிளர்ந்தசாளரத்தின்
ஒளித்துவான்முகச் செவ்வியைக் கவர்வதொத்துளதால்.

(இ-ள்.) வெள்-வெள்ளிய, திங்கள்-சந்திரனானது, பளிக்கு-பளிங்கினாலாகிய, மேனிலத்து-மேல்வீட்டினுள், அன்பர்பால்-நாயகரிடத்தில்,பயில்வுறு (நாள்தோறும்) பழகிய, கலவி-புணர்ச்சியை, திளைத்து அநுபவித்து, மார்பிடை-அவர்மார்பினிடத்தே, துயில்பவர்-தூங்குகிற மகளிரது, முகத்தில்-முகத்தினிடத்தே, கிளைத்த-தழைத்த, தண்-தண்ணிய, கதிர்-கிரணங்களை, பறப்புதல்-விரித்தலினாலே, கிளர்ந்த-விளங்குகின்ற,சாளரத்தின்-பலகணியின்புறத்து, ஒளித்து-மறைந்துநின்று, வாள்-ஒளிபொருந்திய, முகம் (அவர்)முகத்திலுள்ள, செவ்வியை-அழகை, கவர்வது-திருடுவதை, ஒத்துளது-ஒத்திருக்கும், எ-று.

பிறரிடத்துள்ள பொருளைத்திருடுதற்குச் சமயந்தூங்கும்வேளையாதலால், துயில்பவரென்றார். [சந்திரனைக் கவர்வதாகக் குறித்தலினாலே, பொருட்டற்குறிப்பணி.டம்; இதனால் முகத்துக்குச் சந்திரனிலும் அதிககாந்தியைச் சொல்லியதாலே, வேற்றுமை யணியுமாம்.]

(க-ரு.) மேன்மாளிகையிற் கணவருடன்புணர்ந்து அவர்மார்பின் மேல் தூங்குகிற பெண்களின்முகத்தில் சந்திரன் கிரணங்களைவிரித்தல், அப்பெண்கள் முகத்தழகைத் திருடுவதை ஒத்திருக்கும்-எ-ம். 10

கணங்கொண்மாமணி குயிற்றியொண் கதிர்செய்மேனிலையிற்
சுணங்குபூத்தணி பருமிதத்துணை முலைமகளிற்
மணங்கொடாமரை முகமும்வெண் மதியுமறியா
தணங்கராமதி மருண்டுபார்த் தையுறவெய்தும்.

(இ-ள்.) கணம்-கூட்டத்தை, கொள்-கொண்ட, மா-பெரிய, மணி-மணிகளானவை, குயிற்றி-பதிக்கப்பட்டு, ஒள்-ஒள்ளிய, கதிர்-கிரணங்களை, செய்-செய்கின்ற, மேனிலையில்-மேல்வீட்டில், சுணங்கு- தமலால்,பூத்து-படர்ந்து, அணி-அலங்கரிக்கப்பட்ட, பருமிதம்-பருத்தவளவதான, துணை-இரண்டாகிய, முலை-முலைகளையுடைய, மகளிர்-மாதரது,மணம்-வாசனையை,கொள்-கொண்ட தாமரை-தாமரைமலர் போலும், முகமும்-முகத்தையும், வெள்-வெள்ளிய, மதியமும்-சந்திரனையும், அறியாது-அறியமாட்டாமல், அணங்கு-தெய்வத்தனமை பொருந்திய, அரா-இராகுவானது,மதிமருண்டு-புத்திமயங்கி,பார்த்து-நோக்கி, ஐயுறவு (இவற்றுள்முகம்யாதோ சந்திரன்யாதோவென்கிற) சந்தேகத்தை எய்தும்-அடையும், எ-று.

[ஒப்புமையினலே முகத்திற்குஞ் சந்திரனுக்கும் விசேடந்தோன்றுததாகிய பொதுமையணி ஐயவணிக்கு அங்கமாதலாற், கலவையணியாம்,]

(க-து) இராகு என்னும் பாம்பானது மேல்வீட்டில் உலாவும் பெண்கள் முகமென்றும் சந்திரன் என்றும் அறியாது சந்தேகம் அடையும்-எ-ம். 11

மேனிவந்தொளிர் மாடத்தின் விழுத்தக நிரைத்த
பானிலாமணித் தசும்பினிற் றண்கதிர் பரப்பக்
கானறும்புன னிறைதலுங் கதிரவன் றடந்தேர்
மானினங்குடித் தயர்வுயிர்த் துன்பரின் வாவும்.

(இ-ள்.) மேல்-ஆகாயத்தில் நிவந்து-வுயர்ந்து, ஒளிர்-விளங்குகின்ற, மாடத்தின்-மேல்வீட்டில்,விழுத்தக-சிறப்புப்பொருந்த, நிரைத்தவரிசையாகவைக்கப்பட்ட, பால்-வெண்மைபொருந்திய, நிலாமணி-சந்திரகாந்தத்தலாகிய,தசும்பினில்-குடங்களிலே, தண்-தண்ணிய, கதிர்-கிரணங்களை, பரப்ப (சந்திரன்) விரிக்க, கால்-கக்கப்பட்ட, நறு-நல்ல, புனல்-நீரானது, நிறைதலும் (அவற்றுள்ளே) நிறைதலும் (அவற்றுள்ளே) நிறைதலும், கதிரவன்-சூரியனது,தடம்-விசாலமாகிய, தேர்-தேரினுடைய, மான்குதிரைகளின், இனம்-கூட்டமானது, குடித்து (அந்நீரைக்) குடித்து, அயர்வுயிர்த்து-இளைப்பாற்றிக்கொண்டு, உம்பரில்-ஆகாயத்திலே, வாவும்-தாவும், எ-று.

நிரைத்த தசும்பாவன, சீதளோபசாரத்திற்குரிய தண்ணீர்பெறுவது கருதிவைக்கப்பட்டவையாம். பானிலாமணியென்பது, சந்திரன்முன் நீர்காலுகா

லுமோர்மணிக்கல். "சந்திரனொளியிற் றண்ணீர்கால்வது, சந்திரகாந்த மெனப்பெயர் பெறுமே" என்பதனாலறிக. [இது மேல்நிலைக்குஞ் சூரியமண்டலத்துக்குஞ் சம்மந்தங் கற்பித்தலால், தொடர்புயர்வு நவிற்சியணியாம்.]

(க-து.) மேல்வீட்டில் வைக்கப்பட்ட சந்திரகாந்தக் கற்குடங்களிலே சந்திரனாற் கக்கப்பட்ட சலத்தைச் சூரியன் குதிரைகள் குடித்திளைப்பாறி நடக்கும்-எ-ம். 12

முருகுயிர்த்தவொள் ளகிற்புகை முகிலொடு முறழக்
குருமணிச்சுடர் வெயிலின்விரி மாடநீள் கொடிகள்
பருதிவானவ னடவுதேர்த் பரியினைப் புடைத்தவ்
வருணனிற்றொழில் புரிந்தவன் கரஞ்சிறி தாற்றும்.

(இ-ள்.) முருகு-பரிமளத்தை, உயிர்த்த-தருகின்ற, ஒள்-ஒள்ளிய, அகில்-அகிற்கட்டைகளது, புகை-புகையானது, முகிலொடும்-மேகத்தோடும், உறழ்-ஒத்துத் தோன்றுகின்ற, அ-அத்த, குரு-நிறமுள்ள, மணி-மணிகளது, சுடர்-கிரணமானது, வெயில்-வெயில்போல, விரி-விரிகின்ற, மாடம்-மாளிகையிற் கட்டிய, நீள்-நீட்சிபொருந்திய, கொடிகள்-கொடிகளானவை, பரிதிவானவன்-சூரியனாகிய தேவனது, நடவு-நடத்தலையுடைய, தேர்-தேரிற்பூட்டிய, பரியினை-குதிரைகளை, புடைத்து-அடித்து, அவ்வருணனில்-அவ்வருணன்போல,தொழில் நடத்துகைத் தொழிலை, புரிந்து-செய்து, அவன்-அவ்வருணனது, கரம்-கைவருத்தத்தை, சிறிது-சற்றே, ஆற்றும்-தீர்க்கும், எ-று.

அகிற்புகை மேல்வீட்டறைகளுக்கு வாசனையூட்டுதற் பொருட்டு மூட்டப்படப்படுவதாம். [சூரியன் குதிரைகளுக்கு மாடமேற் கொடிகளுக்குஞ் சம்பந்தங் கற்பித்ததாகிய தொடர்புயர்வு நவிற்சி அங்கமும், உவமை அங்கியுமாதலாற், கலவையணியாம்.]

(க-து) மேல்வீட்டிற் கட்டிய கொடிகளானவை சூரியன் தேரிற் பூட்டிய குதிரைகளை யடித்துச் சாரதிதொழிலை நடத்தி அருணன் கைவருத்தத்தைத் தீர்க்கும்-எ-று. 13

வரிவளைக்குலக் குவையினான் மணிகளான் மணிகள்
தெரிதருங்கர வலவனால் வயன்வயிற் றிரண்ட
விரிகருப்புர வெண்மணற் குன்றினா லொலியால்
பொருவிலசவண மரிதிரைக் கடலினைப் பொருவும்.

(இ-ள்.) வரி-இரேகைகளையுடைய, வளைக்குலம்-சங்குசாதிகளின், குவையினல்-இராசிகளாலும், மணிகளால்-இரத்தினங்களினாலும், மணிகள்- இரத்தினங்களை, தெரிதரும்-எண்ணுகின்ற, கரம்-கைகளாகிய, அலவனால்-நண்டுகளாலும், வயின்வயின்-இடந்தோறும், திரண்ட-குவிந்த, விரி-விரிந்த, கருப்புரம்-கர்ப்பூரங்களாகிய, வெள்-வெள்ளிய, மணல்-மணல்களுடைய, குன்றினால்-குவியல்களாலும், ஒலியால்-ஓசையினாலும், பொரு-ஒன்றையொன்றொத்திருக்

கின்ற, இல்-மாடவரிசைகளையுடைய, ஆவணம்-கடைத்தெருவானது, மறி-மடங்குகின்ற, திரை-அலைகளையுடைய, கடலினை-சமுத்திரத்தை, பொருவும்-ஒக்கும், எ-று.

மணிகளை விரல்களாலே தள்ளி எண்ணுகிறபோது கைகல் நண்டுகள் செல்லுதல் போலத் தோன்றலாற். கரவலவனென்றார். வளை என்றதற்கு-கடலிலே சங்கென்றும், கடைவீதியிலே வளையமென்றும், மணிகடெரிதரும் கரவலன் என்றதற்கு-கடலிலே முத்தை ஒப்பாகும் வடிவுதெரிகின்ற கைகளையுடைய நண்டென்றும், கடைத்தெருவிலே கரங்களிலே மணிகளைவைத்துக் குணகுணங்களை அறிகிற அவ்வறிவில் வல்லவனென்றும், சிலேடையார்க்கினும் பொருந்தும். [இது உவமையணி]

(க-து.) கடைத்தெருவானது கடலினை ஒப்பாகும்-எ-ம். 14

திங்கள்வெண்மணி நிலத்துவா மதிச்செழுங் கதிர்க
டங்கிவீழ்புனற் பெருக்கொடு தலைப்பெய்து விசும்பிற்
கங்கையாழ்கடற் றலைமகன்களிப்புறக் களித்துப்
பொங்குகற்புநூ லுரைத்தவை புகாறவிளக்கும்.

(இ-ள்.) விசும்பில்-ஆகாயத்திலுள்ள, கங்கை-கங்கையானவள், வெள்-வெள்ளிய, திங்கண்மணி-சந்திரகாந்தங்கள பதித்த, நிலத்து (மேல்வீட்)டிடத்தே, உவா-பர்வத்திலுண்டாகிற, மதி - சந்திரனுடைய, செழு-செழிய, கதிர்கள்-கிரணங்கள், தங்க-தங்க, வீள் (அதிலிருந்து) வீழ்கின்ற, புனல்-நீரினது, பெருக்கொடு-வெள்ளத்தோடு, தலைப்பெய்து-தலந்து, ஆழ்-ஆழ்ந்த, கடற்றலைமகன்-கடலாகிய (தன்) கணவனானவன், களிப்புற (அப்போது) களிக்க, களித்து (தானும்) களித்து, பொங்கு-விளங்குகின்ற, கற்புநூல்-கற்பிலக்கண நூலினால், உரைத்தவை - சொல்லப்பட்டவிதிகளை, புகாற-குற்றமற, விளக்கும்-விளங்குவாள், எ-று.

கணவன் களிக்கும்போது உடன்களித்தலும் அவன் துயருறும்போது உடன் துயருதலுங் கற்பிலக்கணமாதலால், ஆகாச கங்கையும் பூரண சந்திரோதயகாலத்திலே தன் கணவனாகிய சமுத்திரன் பெருகுதலாலே அப்போது அந்தச் சந்திரகிரணம் பட்டுச் சந்திரகாந்தத்தினின்றும் வீழ்கின்ற நீர் வெள்ளத்தோடு கலந்து தானும் பெருகி அக்கற்பிலக்கணத்தை பிறருக்குங் காட்டுமென்பார், களிப்புறக்களித்துக் கற்புநூல் விளக்குமென்றார். தங்கியென்பது வினையெச்சத்திரிபு. இங்கே களித்தல்-முன்னையளவின் மிகுதல். [கங்கை தன் செய்கையினாலே கற்பிலக்கணமாகிய நற்பொருளைக் காட்டுதலால் நற்பொருட் காட்சியணியும், சந்திரகாந்த நீருக்குங் கங்கைக்குஞ் சம்பந்தங் கற்பித்ததாகிய தொடர்புயர்வு நவிர்சி இதற்கு அங்கமாதலாற், கலவையணியுமாம்.]

(க-து.) ஆகாயகங்கையானவள் சந்திரகாந்தகற்கள்பதித்த மேல்வீட்டில் சந்திரகிரணங்களால் வீழ்கின்ற வெள்ளத்தோடுகலந்து கடலாகிய கணவன்

களிக்க தானுங் களித்துத் துணையாகச்சென்று கற்பிலக்கணவிதிகளை விளக்குவாள்-எ-ம். 15

தடங்கொ டாமரைத் தளிரிய லுறையுமிந்நகரம்
இடங்கொள் பூதல நகரெலாம் வென்றனமினிவான்
அடங்க வெல்லுது மென்னவோர் வஞ்சினமறையாப்
படங்கணூற்றிய போன்றன பசியபொற் கொடிகள்.

(இ-ள்.) பசிய-பசுமையுள்ள, பொன்-பொன்மயமாகிய, கொடிகள்-கொடிகளானவை, தடம்-விசாலத்தை, கொல்-கொண்ட, தாமரை-தாமரைப்பூவிலிருக்கின்ற, தளிரியல்-தளிர்போலு மெல்லியவடிவுடைய சீதவியானவள், உறையும்-வாசஞ்செய்கின்ற, இந்நகரம்-இந்த (மாவிந்த) நகரமானது, இடம்-இடத்தை, கொள்-கொண்ட, பூதலம்-பூமியிலுள்ள, நகரெலாம்-எல்லாநகரங்களையும், வென்றனம்-வென்றேம், இனி-இனிமேல், வான்-தெய்வலோகத்தை, அடங்க (எமக்குக்) கீழ்ப்பட, வெல்லுதும்-வெல்லுவோம், என்ன-என்று, ஓர்வஞ்சினம்-ஒரு சபதத்தை, அறையா-சொல்லி, நாற்றிய (எழுதித்) தொங்கவிடப்பட்டன வாகிய, படங்கள்-படங்களை போன்றன-ஒத்திருக்கின்றன, எ-று.

எல்லா நகரங்களையும் வென்ற தன்னுயர்வுதோன்ற, வென்றனம்-வெல்லுதும்-எனப் பன்மையார் சொல்லியதாகக் கூறினர். தன்பகைவன் அஞ்சுவானுயின் வந்து வணங்கவும், அஞ்சிலனுயிற்போர்க் கருவிகளைக் கூட்டவுஞ் சமயமுண்டாகவேண்டி, முன்னே படமெழுதி யறிவித்தல் வெல்லக் கருதிய அரசனுக்குக் கடனுதலால் படங்கணூற்றிய வென்முர். [நகிற் கொடிகளைப் படங்களாகக் குறித்தலாலே, பொருட்டற் குறிப்பணியாம்.]

(க-து.) கொடிகளானவை மாவிந்தநகரம் எல்லாநகரங்களையும் வென்றேம் இனித்தேவநகரத்தை வெல்லுவோமென்று படங்களெழுதிக்கட்டியது போலுமிருக்கின்றன-எ-ம். 16

அகணிலாமணி வட்டநீ ளரிமதர் மழைக்கண்
மகளிர்வான்முகமதிகண்டுதீம்புனன் மல்கப்
புகரிறென்மலை நறுங்குறடுரிஞ்சிபூந் தேய்வை
பகருமின்னுயிர்ப் பால்விரை யூட்டினர் பகர்வார்.

(இ-ள்.) நீள்-நீண்ட, அரி-இரேகைகளையும், மதர்-செருக்கையும், மழை-குளிர்ச்சியையும்பொருந்திய, கண்-கண்களையுடைய, மகளிர் - மாதரானவர், வட்டம்-வட்டமாகிய, அகல்-பரந்த, நிலாமணி-சந்திர காந்தக்கல்லானது, வாள்-காந்திபொருந்திய, முகமதி (அவர்) முகமாகியசந்திரனை, கண்டு-காணலால், தீ-மதுரமாகிய, புனல்-நீரானது, மல்க (அதிலே)நிறைய, புகரில்-குற்றமில்லாத, தென்மலை-பொதிய மலையிலுண்டாகிய, நறு-மணம்பொருந்திய, குறடு-கட்டைகளை, உரிஞ்ச (அதனிடத்தே) தேய்த்துண்டாக்கப்பட்ட, பூ-

அழகிய, தேய்வை-சந்தனத்தை, பகரும்- புகழப்படுகின்ற, இன்-இனிய,உயிர்ப்பால்-சுவாசத்தினாலே, விரை-வாசனையை, ஊட்டினர்-ஏற்றினவராகி, பகர்வார்-விற்பார், எ-று.

கண்டென்பது வினையெச்சத்திரிபு, சந்தனம்விற்கின்ற மகளிரிடத்தே இயற்கைமணஞ் சொல்லுதலால் உத்தமசாதியாரென்பது தோன்றுகின்றது. இது "ஒண்மணம் பாடலந்தவளோ தண்ணறு. முளரிமல்லிகை நறுந்தண்சண்பகம்போல் வனவாரும்" என்பதனாலறிக.

(க-து.) உத்தமசாதிப்பெண்களானவர்கள் சந்திரகாந்தக்கல்லில் சந்தனத்தை உரைத்துச் சுவாசத்தினால் வாசம் ஊட்டிவிற்பார்கள் எ-ம்,

* கலிவிருத்தம்.

நீங்கரிய கூலமணி நீண்மறுகு தோறும்
மாங்குயிலின் மென்குதலை மாலைபகர் மாதர்
தேங்கமழு முயிர்ப்பின்விரை சேர்த்தினர்கள் விற்கும்
கோங்கமலர் சண்பகவெண் கோதையினுங் கொள்வார்.

(இ-ள்.) நீங்கரிய-ஒதுங்குதற்கிடமில்லாத, மணி-நவமணிகளை யுடைய, நீள்-நீட்சிபொருந்திய, கூலமறுகுதோறும்-கடைத்தெருவெல்லாம், மா-மாமாத்திலுள்ள, குயிலின்-குயிலிசைபோலும், மெல்-மெல்லிய, குதலை-மழலைச்சொற்களுடைய, மாலை-மாலைகளை, பகர்-விற்கின்ற, மாதர்-மங்கையரானவர், தேம்-பரிமளமானது, கமழ்-மணக்கின்ற, உயிர்ப்பின்-சுவாசத்தால், விரை-வாசனையை, சேர்த்தினர்கள்-சேர்த்தவராய், விற்கும்-விற்கப்படுகின்ற, கோங்கமலர்-கோங்கமலர்களாகிய, கோதை-மாலையை, மெல்-மெல்லிய, சண்பகம்-சண்பகமலர்களாலாகிய, கோதையினும்-மாலையினுஞ்சிறந்ததாக, கொள்வார்-வாங்குவார், எ-று.

(க-து.) உத்தமசாதிப்பெண்கள் சுவாசத்தினால் வாசனை ஊட்டிவிற்கின்ற கோங்கமலர் மாலைகளைச் சண்பகமலர் மாலைகளைப்பார்க்கிலும் சிறந்ததாகக் கொள்வார்கள்-எ-ம். 18

ஆடவரோ டூடியெழு மஞ்சொன்மட நல்லார்
நீடொளிய தூணின்முகங் கோட்டியெதிர் நிற்ப
வாடுமிடை யாரென மருண்டிரைவர் பாவைத்
தாடொழுது மெய்த்துணி தகைப்பநகை செய்வார்.

(இ-ள்.) ஆடவரோடு-தங்கணவரோடு, ஊடி-பிணங்கி, எழும்-புறப்பட்ட, அஞ்சொல்-அழகியசொல்லுகளையுடைய, மடம்-பேதைமை, பொருந்

* யாப்பருங்கலம்-அளவடிநான்கின் கலிவிருத்தம்மே.

திய, நல்லார்-மாதரானவர், நீடு-நீட்சி பொருந்திய, ஒளிய - காந்தியை யுடைய, தூண் (ரத்நத்) தூணுக்கு, எதிர்-எதிராக, முகம்-முகத்தை, கோட்டி-வளைத்துக்கொண்டு, இல்-அறைவீட்டுள், நிற்ப-நிற்க, இறைவர்-அக்கணவரா னவர், பாவை (அத்தூணிலேதோன்றுகிற) பாவையை நோக்கி, வாடும்-வாடு கின்ற, இடையாரென-இடையையுடைய அம்மாதரென்று, மருண்டு-மயங்கி, தாள்-(அப்பாவை) யின்பாதங்களை, தொழலும்-வணங்கலும், மெய்-மெய்யா கிய, துனி-அப்பிணக்கானது, தகைப்ப தடுக்கவும், நகைசெய்வார் (அவர்) சிரிப்பார்-எ-று.

இங்கே பாவையென்றது பிரதிபிம்பத்தை. "கருமணியிற்பாவாய் நீ போ தாயாம் வீழுந் திருநுதற்கில்லையிடம்" என்பதனாலறிக. மெய்த்துனி காரணத் தாலுண்டாகிய புலவி நீட்டம் [இதுபாவைகளைமாதரென்று மயங்குதலால், மயக்கவணியாம்.]

(க-து.) மாதர்கள் கணவரோடு பிணங்கித்தூணுக் கெதிராகமறைந்திரு க்க அக்கணவர்கள் தூணிலேதோன்றும்பாவையைநோக்கி அம்மாதர் களென்று பாதத்தை வணங்கவும் பிணங்குநீங்கி சிரிப்பார்கள் எ-ம். 19

வண்ணமுலை மாதர்பகர் வறியசெழுஞ் சாந்தங்
கண்ணொளிகள் பாயனரந் தங்கலந்த தென்றும்
வெண்ணகை பரத்தல்கருப் பூரம்விர விற்றென்
றெண்ணியு நறுங்கலவை யென்றிளைஞர் கொள்வார்.

(இ-ள்.) வண்ணம்-அழகிய, முலை-முலைகளையுடைய, மாதர்-மங்கைய ரால், பகர்-விற்கப்படுகின்ற, வறிய-கலப்பில்லாத, செழு-செழிய, சாந்தம்-சந் தனத்தில், கண்ணொளிகள் (அவர்)கண்களினொளிகள், பாயல்-பாய்தலினாலே, நரந்தம்-கஸ்தூரியானது, கலந்ததென்று-கூட்டப்பட்டதென்றும், வெள்-வெள் ளிய, நகை-பல்லொளிகள், பரத்தல்-பாய்தலினாலே, கருப்பூரம்-பச்சைக்கர்ப் பூரமானது, விரவிற்றென்றும்-கூட்டப்பட்டதென்றும்,எண்ணி-நினைத்து, நறு நல்ல, கலவையென்று-கூட்டுசார்ந்தமென்று, இளைஞர்-ஆடவர், கொள்வார் (அதனைவிலைக்கு) வாங்குவார், எ-று.

[இது ஒப்புமையினாலே கண்ணொளியைக் கஸ்தூரிஎன்றும் பல்லொளி யைக் கருப்பூரம் என்றும் மயங்கலால், மயக்கவணியாம்.]

(க-து.) உத்தமசாதிப்பெண்கள் விற்கப்படுஞ் சந்தனத்தை அவர்கள்கண் ணொளிகள் பாய்தலாற் கஸ்தூரிகலந்ததென்றும் பல்லொளிகள் பாய்தலாற் கருப்பூரங் கலந்ததென்றும் வாலிபர்கள் வாங்குவார்கள்-எ-ம். 20

பளிக்கறை புகுந்தனர்கள் பாயொளியின் வாயில்
வெளிப்படுத லின்றிமருண் மேவிநிழ றுறித்
துளக்கறு மிடத்துவிரை தேய்ந்துவரு தென்ற
றிளைத்துலவு வெள்ளிடையின் வாயிறெளிகிற்பார்.

(-இ-ள்.) பளிக்கு-பளிங்காலாகிய, அறை-அறையினுள்ளே, புகுந்தனர்கள்-நுழைந்தவர்கள், பாய்-பரந்த, ஒளியின்-ஒளியினாலே, வாயில்-வாயிலானது, வெளிப்படுதலின்றி-அறியப்படுதலில்லாமையினால்-மருள் மயக்கத்தை மேவி-அடைந்து, துளக்கறுமிடத்து-அசைவற்றபொதிய மலையிலிருந்து,விரை (சந்தன) வாசனையில், தோய்ந்து-படிந்து, வரு-வருகின்ற, தென்றல்-தென்றலானது, நிழல்-குளிர்ச்சியோடு, நாறி-தோன்றி, திளைத்து-அசைந்து, உலவு சஞ்சரிக்கின்ற, வெள்ளிடையின்-வெளியினாலே, வாயில்-வந்தவாயிலை, தெளிகிற்பார்- அறிந்துகொள்வார், எ-று.

மலைசலியாமையால் அசலமெனப்படுதல் போலத், துளக்கறு மிடமெனப்பட்டது. [ஒப்புமையினாலே பொதுமையடைந்த பளிங்கிற்கும் வாயில் வெளிக்குந் தென்றலுலாவுதலாகிய காரணத்தினாலே சிறப்புத்தோன்றுதலினால், சிறப்பணியாம்.]

(க-து.) பளிங்கறைபுட் புகுந்தவர்கள் ஒளியால் வாயிலறியாது மயங்கித் தென்றலால் வாயிலறிந்தார்கள்-எ-ம். 21

வில்லுமிழு மாமணி குயிற்றிமுளிர் மாடத்
தொல்கிய துகிற்கொடிக ளும்பருலகெய்திப்
பல்லவ முயிர்த்துவளர் பைந்தருவின் மேவும்
வல்லிபடர் கின்றகொழு கொம்பென வயங்கும்.

(இ-ள்.) வில்-காந்தியை, உமிழும்-வீசுகிற, மா-பெருமைபொருந்திய, மணி-மணிகளானவை, குயிற்றி-பதிக்கப்பட்டு, மிளிர்-விளங்காநின்ற, மாடத்து-மாளிகைகளின்மேல், ஒல்கிய-அசைகின்ற, துகிற்கொடிகள்-சீலைக்கொடிகளானவை, உம்பர்-தேவரது, உலகு-உலகத்தை, எய்தி-அடைந்து, பை-பசிய, தருவில்-கற்பகத்தருவின்மேல், மேவும்-அடைதற்குரிய, பல்லவம்-தளிர்களை, உயிர்த்து-ஈன்று, வளர்-வளர்கின்ற-வல்லி-கொடிகளானவை, படர்கின்ற-படர்தற்குக் காரணமாயிருக்கின்ற, கொழுகொம்பென-கொழுகொம்புகள் போல, வயங்கும்-விளங்கும், எ-று.

[கொடிகளைக்கொழு கொம்புகளாகக் குறித்தலால், தற்குறிப்பணியும், இதற்குத்தொடர்புயர்வு நவிற்சியணி அங்கமாதலால், கலவையணியுமாம்.]

(க-து.) மணிமாடத்திற்சட்டிய கொடிகளானவை கற்பகத்தருவின் கீழ் வளர்கொடிபடர் கொழுகொம்பென விளங்கும்-எ-ம்.] 22

திங்களுநல்லார்முகமுஞ் செவ்விதெரிக்கொணுறு
வங்கதுழுமேனியோடு மின்பிரிக்கலாகா
மங்குறவழ் வெண்கொடியும் வானதியுமணியால்
வெங்கதிர்செய்மாடமிசை வேறறியலாகா.

(இ-ள்.) மணியால்-மாணிக்கங்களால், வெங்கதிர்-சூரியகிரணத்தை,செய்-செய்கின்ற மாடமிசை-மாளிகையின்மேலே, திங்களும்-சந்திரனும், நல்லார்-

மாதரது, முகமும்-முகமும், செவ்வி-அழகினாலே, தெரிக்கொண்ணு-வேறுபடுத்தப் படாவாம், அம்-அழகினாலே, கழும்-விளங்காநின்ற, மேனி(அவர்)சரீரமும், மின்-மின்னற்கொடியும், பிரிக்கலாகா-பிரிக்கப்படாவாம், மங்குல்-மேகங்களானவை, தவழ்-தவழ்கின்ற, வெண்கொடியும்-வெள்ளைக்கொடியும், வானதியும்-ஆகாயகங்கையும், வேறுவேறாக, அறியலாகா அறியப்படாவாம் எ-ம்.

இச்செய்யுளுக்கு யாவராலும் என்றும் வினைமுதல் வருவித்துக்கொள்க- [சந்திரனோடு மாதர்முகத்துக்கும், மின்னற்கொடியோடு மாதர் சரீரத்துக்கும், ஆகாசகங்கையோடு வெள்ளைக்கொடிக்கும், ஒப்புமையினாலே விசேடந்தோன்றாமையால், பொதுடமையணியாம்.]

(க-து.) சந்திரனும் பெண்கள்முகம்-மின்னலும் பெண்களுடையமேனியும்- வெண்கொடியும்ஆகாயகெங்கையும்-வடிவினால் வேறுபடுத்தப்படாவாம்-எ-ம்.

சந்தநறுமென்புகை தவழ்ந்தநிலமெங்கும்
பந்துபயில்கோதையர் பசும்பொனணியாவும்
ஐந்தருவியன்சினை யணிந்தனரதன்றோ
வந்துநனியேற்பவர் மகிழ்ந்திடவழங்கும்.

(இ-ள்.) சந்தனம-சந்தனக்கட்டைகளது, நறுமணமுள்ள- மெல்-மெல்லிய, புகை-புகையானது, தவழ்ந்த-படிந்த, நிலமெங்கும் - மேல்வீடெங்கும், பந்து-பந்தாட்டத்தில், பயில் - பழகுகின்ற, கோதையர் - மாதரானவர், பசும்பொன்-பசியபொன்னாலாகிய, அணி-ஆபரணங்களையும், யாவும்-மற்றெல்லாவற்றையும், ஐந்தரு-பஞ்சதருவினுடைய, வியன் - பெரிய, சினை-சினைகளில், அணிந்தனர்-வேய்ந்தார், அதன்றோ-அதனாலன்றோ, வந்து (தம்மிடத்து)வந்து ஏற்பவர்-இரப்பவர்க்கு, மகிழ்ந்திட-மகிழும்படி, நனி-மிகுதியாக, வழங்கும்- (விரும்பப்பட்டவற்றைக்) கொடுக்கும், எ-று.

அதன்றோவழங்குமென்றதனாலே, செல்வப்பெருக்கின் செருக்கினால் மீட்டுமவற்றையெடுத்தில ரென்றதாயிற்று- (கற்பகத்தினது கொடைக்கு எதுவாகாத அவ்வணி முதலியவற்றைப் பெற்றிருக்கையை எதுவாகக் குறித்தலாலே எதுத்தற்குறிப்பணியாம்,]

(க-து.) மேல்வீட்டிற் பந்துவிளையாடுகின்ற பெண்கள் ஆபரணமுதலியவற்றைக்கழற்றிப்பஞ்சதருக்களில் அணிந்தனர். அதனாலல்லவோ அத்தருக்களிரந்தவர்களுக்கு ஈகின்றன-எ-ம்.

வாய்ந்தமின்னை மடந்தையராக்கிவிண்
போந்திடாமலன் றோமலர்ப்புங்கவன்
சாந்தணிந்த தமனியக்குன்றென
வேந்துவெம்முலைப் பாரமியற்றினான்.

(இ-ள்.) மலர்-தாமரைப்பூவிலிருக்கின்ற, புங்கவன்-நான்முகக்கடவுளானவன், விண்-மேகத்தின்கண், வாய்ந்த-பொருந்திய, மின்னை-மின்னற்கொடிகளை, மடந்தையராக்கி-மங்கையராக்கி, போந்திடாமலன்றே (அம்மேகத்தினிடத்தே) போகாதிருத்தற்கன்றே, சாந்து-சந்தனத்தை, அணிந்த-பூசிய, எந்து-சுமக்கப்படுகின்ற,வெம்-விருப்பஞ்செய்கின்ற, பாரம்-பாரமாகிய, முலை-முலைகளை, தமனியக்குன்றென-பொன்மலையைப்போல, இயற்றினன்(அவருக்கு) உண்டாக்கினன் எ-று.

[புகழவேண்டியதல்லாத மின்னலைக்கொண்டு படைத்தலைப் புகழ்தலினாலே, புகழவேண்டிய அந்நகரத்து மகளிரது சரீரகாந்தி தோன்றுதலால், அங்கமாகிய காரணப்புனைவிலி புகழ்ச்சியணியும்; முலைகளின் பாரத்தையுண்டாக்கினமைக்குப் பயனாகாத மேகத்தின் கட்போகாமையைப் பயனாகக் குறித்தலாலே, அங்கியாகிய பயன்றற்குறிப்பணியும் சேர்தலால், கலவையணியாம்.]

(க-து.) பிரமதேவனானவன் மின்னல்களைப் பெண்களாக்கி அம்மின்னல்களாகியபெண்கள் மேகத்திற் செல்லாமலிருக்கப் பொன்மலைகளைப்போல நன்முலைகளைப் படைத்தான-எ-ம். 25

வெங்கதிர்சுடர் மேவியதேர்ப்பரித்
தங்குவன்குளம் பிற்றகர்ந்திட்டன
தெங்கினின்பழத் தெள்ளமுதத்தினாற்
பங்கமெய்தி மறுகின்பரப்பெலாம்.

(இ-ள்.) வெம்-வெவ்விய, கதிர் - கிரணங்களையுடைய, சுடர்-சூரியனானவன், மேவிய-தங்கிய, தேர்-தேரிற்பூட்டிய, பரி-குதிரைகளுடைய, வல்-வலிமை, தங்கு-தங்கிய, குளம்பின்-குளம்புகளாலே-தகர்ந்திட்டன - இடைத்தன-உடைந்தனவாகிய,தெங்கின்-தென்னமரங்களுடைய, ஒள்ளிய, பழம்-கனிகளினது, தெள்-தெளிவுபொருந்திய, அமுதத்தினால்-நீரினாலே, மறுகின்-வீதிகளினுடைய, பரப்பெலாம்-விரிவுகளெல்லாம், பங்கம் - சேறுதலை, எய்தும்-அடையும் எ-று.

[தெங்கிற்கும் சூரியமண்டலத்திற்கும் தொடர்பு கற்பித்ததால், தொடர்புயர்வு நவிற்சியணியாம்.]

(க-து) சூரியனது தேரிற்பூட்டிய குதிரைகளுடைய வன்காற்குளம் பால் உடைப்பட்ட தேங்காய்களின் நீரினால் வீதிகள் சேறடையும்-எ-ம்.

நிலவுவெண்கதிர் நீண்மணிமாடமேற்
குலவுபாதி மதியைமென் கொம்பனார்
சிலைகொள்வாணுதல் சேர்த்தியவாடவர்
உலகமேத்து முவாமதியென்பரால்

(இ-ள்.) நிலவு-நிலவைச்செய்கின்ற, வெண்கதிர்-சந்திரனுடைய மணி-மணிகளாலாகிய,நீள்-நீண்ட,மாடமேல்-வீட்டின்மேலே,குலவு-விளங்குகின்ற,

பாதிமதியை-பாதிச்சந்திரனை, மெல்-மெல்லிய, கொம்பனார்-பூங்கொம்புபோல்வார், சிலை-வில்வடிவத்தை, கொள்-கொண்ட, வாள்-ஒளிபொருந்திய, நுதல் (தமது) நெற்றியோடு, சேர்த்திய-கூட்ட, ஆடவர் (அதுகண்ட) நாயகரானவர் உலகம்-உயர்ந்தோரால், எத்தும்-துதிக்கப்படுகின்ற, உவாமதி-பூரணசந்திரன் என்பர்-என்றுசொல்வார், எ-று.

பாதிமதி எட்டாந்திதியிற் சந்திரன். சேர்த்தவென் அம் வினையெச்சம் சேர்த்திய வெனத்திரிந்தது. ஆடவரைவஞ்சித்துப் பரிகாசஞ் செய்தற்கு அங்ஙனம் செய்தாரென்க. [ஒப்புமையினாலே அந்நெற்றிக்கும் பாதிமதிக்கும் விசேடந் தோன்றாமையால், பொதுமையாயணியாம்.]

(க-து.) வீட்டின்மேலிடத் துலாவிய பெண்கள் பாதிச்சந்திரனைப் பிடித்துத் தங்களுடை நெற்றியோடுசேர்க்க அதுகண்டகணவர்கள் பூரணச்சந்திரனென்று சொல்லுவார்கள். 27

புலவிநீக்கிப் புணர்முலைமாதர்தந்
நிலவுபூந்துகி லாடவர்நீக்கலும்
நலம்விளைத்தனர் நாணிவெள் திங்களின்
கலையைமெல்லக் கலையெனச்சேர்த்துவார்

(இ-ள்.) ஆடவர்-கணவரானவர், புலவி-பிணக்கை, நீக்கி-தீர்த்து, புணர்-நெருங்கிய, முலை-முலைகளையுடைய, மாதர்-மகளிரது-நிலவு, சந்திரிகைபோல் (விளங்குகின்ற) பூ-அழகிய, துகில்-ஆடையை, நீக்கலும் அவிழ்த்தவளவில், நாணி-வெட்கப்பட்டு, நலம்-உதவியை, விளைத்தனர் (அவர்க்கு) உண்டாக்கினவராக, வெள்-வெள்ளிய, திங்களின்-சந்திரனது, கலையை-நிலவை, மெல்-மெல்லிய, அக்கலையென-அவ்வாடையென்று நினைத்து, சேர்த்துவார் (அவர் அரையிலே) சேர்ப்பார், எ-று.

புலவிநீங்கிய பின்னும் நாணமேலிடலால் அவிழ்க்கப்பட்ட கலையைமீட்டுஞ் சேர்த்துவாராயினால். அது ஆடவர் செயற்குத் தடையாகாமையால், நலம் விளைத்தன ரென்றார். சந்திரிகை கைக் ககப்படாததாயினும், மெல்லியகுணத்தாற் குணத்தாத் கைக்ககப்பட்டபோதும் பரிசந்தோன்றாத் வாடையென்று மயங்கச்செய்தது. கலை-ஆகுபெயர் [மென்மை வெண்மைமுதலியபொதுப் பண்பி னொப்புமையினாலே ஆடையை நிலவென்று மயங்கலால், மயக்கவணியாம்.]

(க-து.) கணவரானவர்கள் தங்கள் மாதர்கள்கலையை அவிழ்த்த மாத்திரத்தில் அம்மாதர்கள் வெட்கித் தங்கள் கலையென்று சந்திரகலையை அரையிற் சேர்ப்பார்கள்-எ-ம். 28

பொருந்துராதனம் பூஞ்சிலம்பார்ப்பறக்
கரந்துதம்முயிர்க் காதலர்பாற்செல்வார்

திருந்துவான்முகத் திங்களென்றந்நிலா
வருந்தவந்த புள்ளார்த்தலர் தூற்றுமால்.

(இ - ள்.) அனம் - அன்னங்களானவை, பொருந்துறுது (தம்மருகி) லடையாதிருக்க, பூ-அழகிய, சிலம்பு-சிலம்புகளது, ஆர்ப்பு-ஓசையானது, அற- நீங்கும்படியாக, கரந்து-மறைந்து, தம்முயிர்-தம்முயிர் போலும், காதலர்பால்- அன்பரிடத்து, செல்வார் (மெள்ளச்) செல்லுகின்றமங்கையரது, திருந்து-திரு த்தமாகிய, வாள்-ஒளிபொருந்திய, முகம்-முகத்தை, திங்களென்று-சந்திர னென்றுநினைத்து, அந்நிலா-அதனதுநிலவை, அருந்த-உண்ண, வந்த-வந்த புள்-சகோரங்களானவை, ஆர்த்து ஒலித்து அலர்தூற்றும்-வெளிப்படுத்தும், எ-று.

சிலம்புகள் அன்னம்போலொலித்தலாலே அதுகேட்டு அவ்வன்னங்கள் தம்மினமென்றுவரின், மறைந்துசெல்லுதல் வெளிப்படுமென்று அச்சிலம் பொலியாமன் மெல்லநடந்து செல்லுவாரென்க. சிலம்பு அன்னம் போலொ லிக்குமென்பது பின்னை "அனமெனமிழற்றும் புரிபுரமணிந்து," என்பதனு லும், சகோரம் நிலவையருந்துமென்பது "வெண்டிங்கணிலவுவாயிடைப்புகி னுஞ் சகோரமேனு மென்புளன்றி-வெண்டிங்குவாமுழ நருமுளர்கொல்லோ" என்பதனாலுமறிக. [முகத்தைச் சந்திரனென்று மயங்குதலால், மயக்கவணி. இது அங்கம். மறைந்துசெல்லலாகிய விரும்பப்பட்ட பொருளைக்குறித்துமுய ர்ச்சிசெய்ய அது வெளிப்படுதலாகிய அதன் பகைப்பொருள் கிடைத்தலால், துன்பவணி. இது அங்கி. இவை இரண்டுஞ் சேர்தலாற் கலவையணியாம்.]

(க - து.) நாயகமாரிடத்துமறைந்து செல்கின்றமாதர்கள் முகத்தைச்சந் திரனென் றெண்ணி-அச்சந்திரகிரணங்களை உண்ணவந்த சகோரங்களான வை-சந்தித்து-அவரை வெளிப்படுத்தி யலர்தூற்றும்-எ-ம். 29

மலய மாதவ னுண்டமணிக் குவைக்
குலவுவாய் கட னேர்சொலிற் குற்றமே
அலகில பல்வளஞ் சேர்த்திய வாவணம்
உலகை முண்டருண் மால்வயி றொக்குமே.

(இ-ள்.) மலயம்-பொதியமலையிலிருக்கின்ற, மாதவன்-அகத்திய முனி வனால், உண்ட-குடிக்கப்பட்ட, மணி-மணிகளது, குவை-கூட்டத்தை யுடைய, குலவு-வளையாகிய, வார்-நெடிய, கடல்-கடலை, அலகில்-கணக்கில்லாத, பல் வளம்-பலவகையாகியவளங்களையும், சேர்த்திய (தன்னுள்) ளடக்கிய, ஆவணம்- கடைக்கு, நேர்-ஒப்பென்று, சொலின்-சொன்னால், குற்றமேயாம், உலகம்- உலகத்தை, உண்டருள்-விளங்கியருளிய, மால்-திருமாலினது, வயிறு-வயிற் றை, ஒக்கும் (அது), ஒத்திருக்கும் (ஆதலால்) எ-று.

முத்துப்பவளமுதலிய கடல்வளமேயன்றி நான்கு நிலவளங்களையுந்தன் னிடத்தே கொண்டிருக்கையாற் கடனேர் சொலிற்குற்றமென்றார். பிரளயத் திலே திருமால்வயிற்றுட் சென்றமார்க்கண் டேயரால் உலகத்துப்பொருள்க

ளெல்லாம் காணப்பட்டனவென்பது புராணகதையாதலால் அப்படியே அக்கடையிலுங்காணப்படுதல்பற்றி, மால்வயிறொக்குமென்றார். [உலகமுண்டருண்மால் வயிறொக்குமென்னும் வாக்கியத்தினாற் கடலை ஒப்புச் சொல்லுதல் கூடாமை சாதித்தலாலே, செய்யுட் குறியணியாம்.]

(கு-து.) கடலைக்கடைக்கு ஒப்பென்று சொன்னாற் குற்றமாம்: அக்கடை திருமால்வயிற்றை ஒத்திருக்கும்-எ-ம். 30

நீடு மாவண நித்திலப் பந்தருட்
கேடில் கம்பலை யாலிசை கேட்கிலார்
பாடல் வண்டொடு நானம் பகர்ந்திடக்
கோடல் செய்வர் நிறைகுறை யின்றெனா.

(இ-ள்.) நீடும்-நீண்டிருக்கின்ற, நித்திலப்பந்தருள்-முத்துப்பந்தல் களிலுள்ள, ஆவணம்-கடைகளிலே, பாடல்-பாடுதலையுடைய, வண்டொடு-வண்டுகளோடு, நானம்-கஸ்தூரியை, பகர்ந்திட (நிறுத்து) விற்க, கேடில் (எப்போதும்) நீங்காத, கம்பலையால் (சனங்களின்) ஒலியினாலே, இசை (அப்பாடல்) ஒலியை, கேட்கிலார்-கேட்கின்றிலருமாகி, நிறை-நிறுக்கப்பட்டபொருளிலே, குறை-யாதொருகுறையும், இன்றெனா-இல்லையென்றுநினைத்து, கோடல்செய்வார்-விலைக்குக் கொள்ளுவார், எ-று.

இசைகேட்கிலா ரென்றதனால், கருநிறத்தாலும் வாசனை விருப்பங்கொண்டு மொய்த்தபடி அசைவின்றிக் கிடத்தலாலும் வண்டின் வடிவத்தைப் பார்த்தறிந்திலரென்பது பெறப்பட்டது. வண்டொலி சிற்றொலியாதலிற் கடைத்தெருவின் பேரொலியுண்மைநிறைந்ததென்க. [ஒப்புமையினாலே கஸ்தூரிக்கும் வண்டுக்கும் விசேடந் தோன்றாமையால் பொதுமையணியாம்.]

(கு-து.) கடைகளிலே வண்டுகளுடனே கஸ்தூரியை நிறுத்திவிற்க நிறைகுறையில்லையென்று கொள்ளுவார்கள்-எ-ம். 31

குளிர் பளிக்குநீண் மாடங்கொடிகள்வான்
வெளிமுகட்டுயர் வெண்மதி தோய்வன
வொளிகொள் வெங்கதிர் வெம்மையொழித்திடா
நளிகொ டண்சுதை நக்குவ போன்றவே.

(இ-ள்.) குளிர்-குளிர்ச்சிபொருந்திய, பளிக்கு-பளிங்காலாகிய, நீள்-நீண்ட, மாடம்-மாளிகைகளிற்கட்டிய, கொடிகள்-கொடிகளானவை, வான்வெளி-ஆகாயவெளியினது, முகட்டு-முகட்டின்கண், உயர்-உயர்ந்த, வெண்மதி-சந்திரனை, தோய்வன-தடவுவன, ஒளி-சூரியனிலிருந்து, கொள் (தம்மேற்) கொள்ளப்பட்ட, வெங்கதிர்-உஷ்ணகிரணத்தாலாகிய, வெம்மை-வெப்பத்தை, ஒழித்திட-நீக்கும்படியாக, நளி-பெருமையை, கொள்-கொண்ட, தண்-குளிர்ச்சி பொருந்திய, சுதை (அச்சந்திரனிடத்துள்ள) அமுதத்தை, நக்குவ (நாக்களினாலே) நக்குவன, போன்றவே-ஒத்திருந்தன, எ-று.

ஆகாயமத்தியில் வந்தபின் னன்றித் தோய்தல் கூடாமையால், வெளி முகட் டெயரெனஞர். பகல்முழுதும் வெயிலால்வருந்தியோன் இரவிலே சீதளோபசாரஞ் செய்துகொள்வாஞதலின், வெங்கதிர் வெம்மை யொழித்திடத் தண்சுதை நக்குவபோலு மென்ஞர். சந்திரனிடத்தே கலைவளருந் தோறும் அமிர்தம் பெருகுமென்பது புராணசித்தம், கொடிகள் நக்குவவென்றதஞல், நாக்கள் வருவிக்கப்பட்டது. [கொடிகளாலே சந்திரனைத்தோடமாளிகைகளை நக்குவனவாகக் குறித்தலாற், பொருட்டற் குறிப்பணியாம்.]

(க-து.) சந்திரனை அளாவிய கொடிகளானவை வெங்கதிர்க்காங்கை நீங்கிடத் தண்கதிரை நக்குவபோன்றிருந்தன-எ-ம். 32

பத்திமாட மணிக் கொடி பானுவின்
மெய்த் தழும்புறத் தைவரல் வெங்கதிர்
கைத் தலங்களிற் காளிந்தி யைமடி
வைத் திருந்து தாலாட்டுதன் மானுமே.

(இ-ள்.) பத்தி-ஒழுங்காயுள்ள, மாடம்-மாளிகையினது, மணிக்கொடி-நீலக்கொடியானது, பானுவின்-சூரியனது, மெய்-உடம்பிலே, தழும்புற-தழும்பு பொருந்த, தைவரல்-தடவுதலால், வெங்கதிர்-அச்சூரியனனவன், காளிந்தியை-காளிந்தி என்பவளை, கைத்தலங்களின்-கைகளிஞற்பற்றி, மடி-மடியின்மேல், வைத்திருந்து-வைத்துக்கொண்டிருந்து, தாலாட்டு-தாலாட்டுகிற, தன்-தன்னை, மானும்-ஒக்கும், எ-று.

மணிக்குக் கருமையென்பதோர் பொருள் "மணிநவமணியே கண்டைவனப் பொடுகருமை செம்மை" என்பதஞலறிக. காளிந்தி-சூரியன் புதல்வி-மடிவைத்திருந்ததன்றதஞல், குழந்தைப் பருவமுற்றிருந்த காளிந்தி யென்பதாயிற்று. காளிந்தி கருநிறத்தவளாதலாலே நீலக்கொடி அவள்போலத்தோன்றிற்று. [சூரியன் காளிந்தியைத் தாலாட்டுகிறவஞகக் குறித்தலாலே, பொருட்டற் குறிப்பணியாம்.]

(க-து.) நீலக்கொடியானது சூரியனைத் தடவுதல், சூரியன் தன்மகளாகிய காளிந்தியைத் தாலாட்டுதல்போலுமிருந்தது-எ-ம். 33

யாணர் மேய விரவியை நண்பகற்
காணுந் தோறுங் கனன்றுங் கனலுமிழ்
கோணைவெம் மணிக் கொம்மை யெயிற்புறம்
வாணஞரழல் சூழெயின் மானுமே.

(இ-ள்.) இரவியை-சூரியனை, நண்பகல்-நடுப்பகலிலே, காணுந்தோறும்-பார்க்குந்தோறும், கனன்று-எரிந்து, கனல்-நெருப்பை, உமிழ்-சொரிகின்ற, புறம்-புறத்தையுடைய, கோணை-அழியாத, வெம்மணி-சூரியகாந்தத்தாலாகிய, யாணர்-தச்சரால், மேய-விரும்பிச் செய்யப்பட்ட, கொம்மை-வலயமாகிய, எயில்-

மதிலானது, வாணன்-வாணாசுரனது, சூழ் (சோணிதபுரத்தைச்) சூழ்ந்த, ஆர அழல்-மிகுந்த நெருப்புமயமாகிய, எயில்-மதிலை, மானும்-ஒத்திருக்கும், எ-று.

சூரியகாந்தம் நெருப்பை யுமிழ்வது. "சூரியனொளியிற்றீக்கால் சலாகை, சூரியகாந்தமெனப்பெயர்பெறுமே" என்பதனாலறிக. மாவிந்தத்தின் மதில் முன் சொல்லப்படுதலால் இது அரசரரண்மனை மதிலென்க. வாணாசுரன் சிவ பூசையாலே நெருப்புக்கோட்டை பெற்றிருந்தானென்பது புராணகதை.[இது உவமையணி.]

(க-து.) சூரியகாந்தக் கற்களாற்செய்த மதிலானது சூரியனைக்கண்டக் கினிக்கக்கலால் வாணாசுரன் கோட்டையை ஒக்கும்-எ-ம். 34

உள்ளமொன்று தங்காதலரோதிய
கள்ளநேயக் கலவியின்வாய்மையை
வள்ளவாயமு துண்டுவளர்மடக்
கிள்ளைமெல்லக் கிளத்தலுநாணுவார்.

(இ-ள்.) உள்ளமொன்று-ஒருமனப்பட்ட, தம்-தம்முடைய,காதலர்-நாயக ரால், ஓதிய-சொல்லப்பட்ட, கள்ளம் (தம்மிருவருக்குள்ளே) மறைக்கத்தக்க, நேயம்-அன்பு பொருந்திய, கலவியின்-புணர்ச்சியினுடைய, வாய்மையை-சொல்லுகளை, வள்ளவாய்-கிண்ணத்தினிடத்தே தங்கிய,அமுது-பாலை,உண்டு-குடித்து, வளர்-வளர்கின்ற, மடம்-இளமைபொருந்திய, கிள்ளை-கிளிகள், மெல்ல-மெள்ள, கிளத்தலும் (பிறரறியச்) சொல்லுதலும், நாணுவார் மங்கையர்) வெட்கப்படுவார், எ-று.

கள்ளநேயமாவது- பிறர்க்கு வெளிப்படாமல் மறைக்கப்படுமோர் அன்பு. கலவியின் வாய்மை-காமவிகாரமேலிட்டுத் தம்மைமறந்து சொல்லப்பட்டவை. இதனாலே அங்கேயுள்ள கிளிகள், தமக்கு ஒருவர் ஒன்றைப்பலமுறைசொல்லி வருந்திக் கற்பிக்கவேண்டாது, தாமேவிரைவிற்கற்கின்றனவென்பது தோன்றுகின்றது.

(க-து.) தங்கள் புருஷர்கள்சொல்லிய புணர்ச்சிச்சொற்களைக் கிளிகள் சொல்லக்கேட்டு மாதர்கள் நாணமடைவார்கள்-எ-ம்- 35

வாணிலாமணி மாடத்தொளித்தெமைக்
காணுகென்பவர் மெய்ந்நிழற்கண்ணுறீஇப் பூண்
மூணுலாமுலை யார்புலவியின்மையி
னுணிநின்று நகைமுகங்காட்டுவார்.

(இ-ள்.) பூண்-ஆபரணங்கள், உலாம்-புரளுகின்ற, முலையார் - கொங்கைகையையுடைய மகளிரானவர், வாள்-காந்திபொருந்திய, நிலாமணி- சந்திரகாந்தத்தாலாகிய, மாடத்து- வீட்டினுள்ளே, ஒளித்து-மறைந்து, எமை-எங்களை, காணுகென்பவர் - காண்பீராகவென்றகணவரது, மெய்-உடம்பினது, நிழல்,

சாயையை, கண்ணுற்று-கண்டு,புல்லி (அச்சாயையைத்) தழுவி, இன்மையின், கைக்ககப்படாமையினுலே, நாணி-வெட்கப்பட்டு, நின்று-நின் , நகை-நகையோடு கூடிய, முகம்-முகத்தை, கோட்டுவார்- வளைப்பார், எ-று.

காணுகவென்பது கடைக்குறைவிகாரம். மகளிர் நாணிமுகங்கோட்டுவாரென்றதனுல், ஒளித்தவ ராடவரென்பது பெறப்பட்டது. [நிழலைக்கணவரென்று மயங்கலால், மயக்கவணியாம்.]

(க-து-) நிலாமணிமாடத்தொளித்துக்கொண்ட கணவர்களது நிழலைக்கணவரென்று மயங்கலால், மயக்கவணியாம்.] 36

சாந்தமூழ்கி வளர்ந்ததடமுலைக்
காந்துபன்மணி மேகலைக்காழல்குல்
ஏந்திவிண்ணி லியங்கலரிதெனப்
போந்தமங்கய ரிந்நகர்ப்பொன்னனர்.

(இ-ள்.) இந்நகர்-இந்நகரத்துள்ள, பொன்னனர்-சீதேவிபோல்வார், சாந்தம்-சந்தனத்துள், மூழ்கி-முழுகி, வளர்ந்த-பருத்த, தடம்-மலைபோலும், முலை-முலைகளையும், காந்து-விளங்காநின்ற பன்மணி-பலமணிகளாகிய, மேகலை - மேகலையின்; காழ்-சரங்களையுடைய, அல்குல்-சகலத்தையும், ஏந்தி-சுமந்துகொண்டு, விண்ணில்-வானத்திலே, இயங்கல்-உலாவுதல், அரிதென (எம்மாலே) முடிவதன்றென்று நினைத்து போந்த-இரங்கிவந்த, மங்கையர்-தெய்வமகளிரே.]

மேகலை எண்கோவையுள்ளது. "எண்கோவைமேகலை காஞ்சி யிருகோவை, பண்கொள் கலாப மிருபத்தொன்று-கண்கொள், பருமம் பதினுலு முப்பத்திரண்டு, விரிசிகை யென்றுணர்பாற்று" என்பதனுலறிக. [இப்பட்டணத்து மங்கையரைத் தெய்வமகளிராகக் குறித்தலாலே, பொருட்டற்குறிப்பணியாம்.]

நளமகாராஜன் அரசாக்ஷிசெய்திருந்தகாலங் கிருதயுகமாயிருக்க-இதுகாறு நாடுநகரங்களின் சிறப்புகள், பலவற்றைச் செய்யுமென் வாய்ப்பாட்டு நிகழ்கால வெதிர்காலங்களுக்குரிய முற்றுவினைகளாலும், எதிர்காலத்திற்கேயுரிய முற்றுவினைகளாலுங் கூறல்வேண்டுவ தென்னையெனின், அவ்வினை நிகழ்ச்சி அந்தயுகத்திலே நெடுங்கால நிகழ்ந்ததென்னும் பொருள்பட அங்ஙனம் கூறினரென்க. (இவர் பண்டிப்பொழிலகத்துவிளையாடுவர்; இவள் பண்டிப்பொபாழி யிகத்துவிளையாடும்) என்பனபோல - இவற்றிற்கு "இறப்பேயெதிர்வேயாயிருகாலமுஞ், சிறப்புத்தோனறு மயங்கு மொழிக்கிளவி, எனைக்காலமுமயங்குதல் வரையார்" என்பனவிதி பின்னிப்படி வருவனவுமன்ன.

(க-து.) தனத்தையுஞ் சகனத்தையுஞ் சுமந்துலாவ லரிதென்று பொன்னுகரமாதர்களே இந்நகரமாதர்களாக வந்தார்கள்-எ-ம். 73

கலிவிருத்தம்.

வளமலியிந்நகர் மன்னர்மன்னவன்
றளையவிழ்நறுமலர்த் தண்ணந்தாரினான்
களைகணுயுலகொரு மூன்றுங்காத்தரு
ணளனெனப்பெயரிய நாமவேலினான்.

[இதுமுதலைந்துபாட்டுகள் ஒருதொடர்- இவ்வைந்துபாட்டுகளாலும் அந்நகரத்திருந்து உலகத்தையாண்ட நளமகாராஜனுடைய வியக்கத்தக்க பலவகைக்குணங்களுஞ் சொல்லப்படுகின்றன.]

(இ-ள்.) உலகொருமூன்றும் (தன்னை யுச்சரிக்கின்ற மூன்றுலகத்தாரையும், களைகணாய்-ஆதாரமாய், காத்து (ஆபத்தினின்றும்) காத்து, அருள் (விரும்பப்பட்டவற்றைத்) தருகின்ற, நளனெனப்பெயரிய-நளனெனப் பெயர்பெற்ற, வளம்-செல்வத்தினாலே, மலி-நிறைந்த, இந்நகர்-இம்மாவிந்த நகரத்திலுள்ள, மன்னர் மன்னவன்-அரசர்க்கரசனானவன் தளையவிழ்-கட்டவிழ்ந்த,நறு-நல்ல, மலர்-மலர்களாகிய, தண்-குளிர்ச்சி பொருந்திய, தாரினான்-மாலையையுடையவன், நாமம் அச்சஞ்செய்கின்ற, வேலினான்-வேற்படையையுடையவன் எ-று.

பெரியமன்னவன், இந்நகர் மன்னவன், மன்னர்மன்னவன், எனக் கூட்டுக. மூன்றுலகம்-பூமியும் வானமும்பாதாளமுமாம். எவ்வுலகத்துள் யாவராயினுந் தன்பெயரை யுரைக்கினு நினைக்கினும் அவர்க்கு நீனைத்தது முற்றுமென்பது புராணசித்தமாதலாலே-களைகணாயுலகொருமூன்றுங் காத்தருணளன், எனக்கூறினார். இது மகாபாரதத்திலுங் காண்க. அவன் மாலையைக்கண்டோர் கண்களுக்குங் கருத்துக்கும் மலர்ச்சியுங் குளிர்ச்சியுஞ் செய்யும் அதன் சிறப்புத்தோன்ற, தளையவிழ் நறுமலர்த் தண்ணந்தாரென்றார். பகைவர்க்குச் செருக்குவிளையுந்தோறும் அச்சஞ்செய்து அதனை யொழித்தலின், நாமவேலென்றார். நாமமென்பதில் அம்முச்சாரியை. நாம்-அச்சமென்பது "பேநாமுருமென வரூஉங்கிளவியாமிறை மூன்று மச்சப்பொருள்" என்பதனாலறிக.

(க-து.) இம்மாவிந்த நகரத்தைபாளும் அரசர்க்கரசன் மூன்றுலகத்தையுங் காத்தருள்செய்யும் நளன் என்னும் பெயரையுடையவன்-எ-ம். 38

ஒன்னலர் மணிமுடி யுரிஞ்சு தாளினான்
கன்ன விறோளினான் கமலக் கண்ணினான்
றன்னுயி ராமென வுலகிற் றங்கிய
மன்னுயி ரனைத்தையும் புரக்கு மாட்சியான்.

(இ-ள்.) ஒன்னலர்-பகைவரது,மணி நவமணிகளையுடைய,முடி-மகுடங்கள்,உரிஞ்ச -தேய்தற்குக் காரணமாகிய, தாளினான்-அடிகளையுடையவன், கல்-மலையோடு, நவில்-பழகிய, தோளினான்-புயங்களையுடையவன்,கமலம்-தாமரைமலர்போலும். கண்ணினான்-நேத்திரங்களையுடையவன், தன்-தனது, உயிரா

மெனை-உயிர்போல நினைத்து, உலகில்-உலகத்தினிடத்து, தங்கிய-பொருந்திய, மன்-நிலையுள்ள, உயிரனைத்தையும்-எல்லாவுயுர்களையும், புரக்கும்-காப்பாற்று கின்ற, மாட்சியான்-பெருமையையுடையவன், எ-று.

பகைவர் தம்மேற் கருணை பிறப்பிக்கவேண்டிப் பலமுறையாகத் தம் முடிகளவனடிகளிற்பட வணங்குதலாலே, அம்முடிகளுக்குத் தேய்வு கூறப் பட்டது. திண்மையும் பருமையுந் திரட்சியும்பற்றித் தோள்களுக்கு மலை ம், மலர்ச்சியுங் குளிர்ச்சியுங் கண்டோரை மகிழ்வித்தலும்பற்றிக் கண்களுக்குத் தாமரைமலரும், உபமானமாக்கபபட்டன. தூல உடம்பழியினும் உயிரழியாது வேறுடம்புபெற்று நிற்குமாதலின், மன்னுயிரென்றார். அது பதிபசுபாச மூன்று நித்தியமென்கிற சைவாகமத்தாலுணர்க. உயிரனைத்தையு மென்றத னாற், பரவைவிலங்கு முதலியவுங்கொள்க. இங்கே புரத்தல், பகைபிணிமுத லியவற்றாற் றுன்பம் வராமற் காத்தல்.

(க-து.) பகைவர் முடிபடுந்தாட்களையும் மலையோடு பழகிய தோட்க ளையும் தாமரைநிகர் கண்களையுமுடையவன் தன்னுயிரைப்போலு மன்னுயி ரைக் காப்பவன்-எ-ம். 39

பொருசிலைவேனில்வே ளனையபொற்பினன்
அருவரையாமென வகன்றமார்பினன்
கரைபொருமுடைத்திரைக் கடலந்தானையான்
றிருகுவெஞ்சினக்களி றனையசீற்றத்தான்.

(இ-ள்.) பொரு-போர்செய்கின்ற, சிலை(கருப்பு)விலலையுடைய,வேனில்-வசந்தகாலத்திற்குரிய, வேளனைய-மன்தனைப்போலும், பொற்பினன்-அழ கினை டையவன், அரு-அரிய, வரையாமென-மலையைப்போலும், அகன்ற-பரந்த, மார்பினன்-மார்பினையுடையவன், கரை-கரையோடும், பொரு-போர் செய்கின்ற, முடை-புலானாற்றம்பொருந்திய, திரை-அலைகளையுடைய, கடல்-கடல்போலும், தானையான்-சேனைகளையுடையவன், திருகு-மாறுபட்ட, வெஞ் சினம்-வெவ்விய சோபததையுடைய, களிறனைய, களிறுபோலும், சீற்றத்தான் கோபத்தையுடையவன், எ-று.

மன்மதனுக்கு வேனிற்காலத்திலே போர்த்தொழிற்கண்ணே ஊக்கமுங் களிப்புமுண்டாதல்பற்றி அப்போது அவனுடம்பு பூரித்து அழகுசிறந்து விள ங்குமாதலால், பொருசிலைவேனில் வேளென்றார். அருவரையாமெனவென்ற மையால், பகைவர் படைக்கலங்களா லூறடையாததிட்பமுங் குறிக்கப்படுகின் றது. அளவு காணப்படாமையும் பூமிமுழுதுஞ் சூழ்தலும் பற்றி, சேனைக்குக் கடல் உவமையாக்கப்பட்டது. அக்கடலலைகள் போலச்சேனையி னணிவகுப்பு கள் ஒன்றன்பி னொன்றாக வெழும்பி யிரைந்துகொண்டு பின் வாங்காது சென்று பகைவரை மோதுதலாலும், புலானாற்றம்-பகைவரிறைச்சியு முதிர முந்தோய்ந்த படைக்கலங்களின் மாறாமை யானும்,கரைபொருமுடைத்திரை

யென்னுமடைகள் கடலுக்குச் சேர்க்கப்பட்டன, யானைபோல மறைத்தற் குறியகாலத்தே மறைத்து வெளிப்படுத்தற்குரிய காலத்தே வெளிப்படுத்த லால் திருகுசீற்றமென்றும், அச்சீற்றத்திற்கு யானையை உபமானமாக்கினர், இதை "பொள்ளெனவாங்கே புறம்வேரார் காலம் பார்த்துள் வேர்ப்பரொள் ளியவர்" என்பதனுலறிக.

(க-து.) மன்மதனை நிகரழகையும் மலையை நிகர்மார்பை ம் கடலை நிகர் சேனைகளையும் யானைநிகர் கோபத்தையு முடையவன்-எ-ம். 40

வெங்கலி யிருள்கெட வெண்ணிலா வுமிழ்
திங்களங் கவிகையான் றிகிரி யொன்றினல்
அங்கண்மா நிலமுழு தளிக்கு மாற்றலான்
மங்குலி னெழுமடங் குதவும் வண்கையான்.

(இ-ள்.) வெங்கலி-தீயவறுமையாகிய, இருள்-இருளானது, கெட-அழிய திங்கள்-சந்திரன்போல, அம்-அழகிய, வெள்-வெள்ளிய, நிலா-நிலவை, உமிழ்-வீசுகின்ற, கவிகையான்-குடையையுடையவன், திகிரி யொன்றினல்-ஏகசக்கிரத்தினல, அங்கண்-அழகியவிடத்தை டைய, மா-பெரிய, நிலமுழுதும்-பூமியனைத்தையும், அளிக்கும்-அரசாளுகின்ற, ஆற்றலான்-வல்லமையை யுடையவன், மங்குலின்-மேகத்தினும், எழுமடங்கு-எழுபங்கதிகமாக, உதவும் கொடுக்கின்ற, வள்-வளம்பொருந்திய, கையான்-கையையுடையவன், எ-று,

நிலாவுமிழ் குடையெனக் குடையின் விளக்கத்தைச் சொல்லுதலாலே, அவனரசாட்சி விளங்குதற்குங் கூறப்பட்டதாயிற்று. அவ்வரசாட்சியேயாவரும் வறுமைநோய்தீர்ந்து பெருஞ் செல்வத்தராய் வாழ்தற்குக் காரணமாகையால், வெங்கலியிருள்கெட வெண்ணிலாவுமிழ் திங்களங் கவிகையென்றார். திகிரி யொன்றினு லங்கண்மாநிலமுழு தளிக்கு மாற்றலானென்றதனுல், பல தீவு களையுங் கண்டங்களையும் வென்று தன்னுணையின் கீழ்ப்படுத்திவாழுஞ் சக்கிர வர்த்தியென்றதாயிற்று. எழென்பதோர் தொகைச் சொல்லாயினும் இங்கே பலவென்னும் பொருளதாம். மேகம் நீரொன்றையே ஓர் பருவத்திற் றரும், இவன் கைகளோ வெல்லாப்பொருள்களையு மெல்லாப் பருவங்களிலுந் தரு மென்றதாயிற்று- கைக்குவளமாவது-உத்தம ரேகைகள்பொருந்தி முழந்தா ளளவு நீண்டிருத்தல்.

(க-து.) உலகெல்லா மொருகுடையிலாள்பவன் மேகத்தைப்பார்க்கிலும் எழுபங் கதிகமாகக் கொடுக்குங் கையையுடையவன்-எ-ம். 41

அருளின துரையுணால் லறத்தின்வேலி சொற்
றெருளுறு கல்வியந் தெய்வ மாக்கடல்
குளித்தெடற் புவிபுகழ் குணக்குன் றஞ்சுட
ரெரிதவழ லங்கல்வே லரசரேறனன்.

(இ-ள்.) அருளினது-கருணையினது, உறையுள்- வீடாயுள்ளவன், நல்லறத்தின்-நல்ல தருமமாகிய (பயிரி) னது, வேலி-வேலியாயுள்ளவன், சொல்-நூல்களாலே, தெருளுறு (பலவகைப் பொருள்களையும்) அறிந்த, கல்வி-கல்விக்கு, தெய்வம்-தெய்வத்தன்மை பொருந்திய, மாக்கடல்-பெரியகடலாயுள்ளவன், குரை-ஒலிக்கின்ற, கடல்-கடல்போல, புவி-பூமியிலுள்ளோரால், புகழ்-புகழப்படுகின்ற, குணம்-நற்குணங்களெல்லாஞ் சேர்ந்த, குன்றம்-மலையாயுள்ளவன்-சுடர்-ஒளியையுடைய, எரி-நெருப்பானது, தவழ் - தவழ்கின்ற, அலங்கல், மாலையைத்தரித்த, வேல் வேலையுடைய, அரசர்-பகையரசராகிய (யானைகளுக்கு) ஏறனன்-ஆண்சிங்கம் போல்பவன், எ-று.

அருளாவது-பிறவுயிர்க்கு வந்த வருத்தத்தைக் காண்கின்ற போது மனம்பொறுதிரங்கலாம். அதற்கு வீடெனவே-அது அவனிலே நிலையாயிருக்குமென்றதாயிற்று. அறமாவது-அந்தணர்முதலிய வருணத்தோரும் பிரமசாரிமுதலிய வாச்சிரமத்தோரும் வேதமுதலியவற்றில் தத்தமக்கு விதிக்கப்பட்டவற்றைச் செய்தலும், விலக்கப்பட்டவற்றைச் செய்யாமையுமாம். நல்லறமென்று அடைகொடுத்துக் கூறலால் அது புறச்சமயநூல்களிற் கூறுந் தீயவறங்களை யொழித்து நிற்றல் காண்க. அறத்தின் வேலியெனவே, அவர்களை அவற்றிற் பிறழாதுநடத்துவனென்றதாயிற்று. கல்வியெனப் பொதுப்படக்கூறலால், வேதநூன்முதல் தருமநூலீறுயுள்ள பதினன்கு வித்தைகளுமெனக்கொள்க†. அக்கல்விக்குக் கடலெனவே, அது யாவராலும் உணரப்படாத ஆழமுங் கடக்கப்படாத விரிவுமுடைத்தென்றதாம். குரைகடற் புவிபுகழென்றதனாலே, கடலினலையொலிபோலப் புவியிலே புகழொலி யெப்போதுமெழுதல் சொல்லப்பட்டது. இங்கே குணமெனப்பட்டவை, இவ்வைந்து பாட்டினுஞ் சொல்லாதொழிந்த ஏனைய நற்குணங்களை. எரிதவழலங்கல்வேலரசரென்றதனால், பகையரசரென்றதாயிற்று. அவரை அங்ஙனஞ் சிறப்பித்தமையால், இவனோடு பகைத்தற்குத் தகுதியுடையராதல் தோன்றுகின்றது. புவிபுகழ் குணக்குன்றென்றதனாற பெருங் கீர்த்தியும், அரசரேறனென்றதனாற்பெரும் பிரதாபமும் விளங்குகின்றன.

வளமலியென்னும் பாட்டில் மன்னர்மன்னவனென்று மெழுவாய்நின்று இப்பாட்டுவரையுமுள்ள பயனிலைகளைத் தனித்தனிகொண்டு முடிந்தது. இவற்றாலே, தெய்வத்தன்மை-பெருங்கொடை-பெருஞ்செல்வம்-ஒப்பிலழகு-நிறைபுலமை - உயர்குலப்பிறப்பு - விளக்கமுடைமை-சதுரப்பாடு - அறவழிநிற்றல்-இவை முதலியகுணங்கள் சொல்லப்பட்டதனாலே இவ்வரசன உத்தமநாயகனென்பது பெறப்பட்டது.

(க-து.) கிருபைக்கு வீடானவன் தருமத்திற்கு வேலியானவன். கல்விக்குக் கடலானவன். குணத்திற்குக் குன்றானவன். பகைமன்னர்க்குச் சிங்கமானவன்-எ-ம். 42

---

† அவையாவன—வேதம்-4, வேதாங்கம்-6, மீமாம்சை-க, தருக்கம்-க, புராணம்-க, தருமநூல்-க, இவையாம்.

நகரப்படலம்-முற்றிற்று.



நிட.தநாடு 4-வது-பக்கம்.

# அன்னத்தைக்கண்ணுற்றபடலம்.

[நளன் பூஞ்சோலையிற் சென்று அதன் வளத்தைக் கண்டதையும், அவ் வனத்தினிடையிலுள்ள ஓர் தடாகத்தில் அரசவன்னத்தைப்பற்றினதையும், அதன் துயரத்தைக்கண்டு அதை விடுத்ததையும், சொல்லுகின்றது.]

[கலிநிலைத்துறை.]

இன்ன தன்மையனாகிய ஏந்தெழிற்றிணிதோண்
மன்னர்மன்னவன் மாணெழில்வகைநலங்கேட்டுக்
கன்னலஞ்சுவை கனிந்தசொற்றமயந்தியென்னும்
பொன்னங்கொம்பனாள் மயலொடும்வைகலும்புலம்பும்.

[இதுமுதலொன்பதுபாட்டுகளால் தமயந்தியினது காமவிருப்பத்தைச் சொல்லத்தொடங்கி, இதனால் விரகிகளுக்குச் சொல்லப்பட்ட காட்சிமுதலாகிய† பத்து அவஸ்தைகளுள் காட்சியென்பது கேள்விக்கும் உபலக்ஷணையாதலால், அவள் நளமகாராஜனுடைய உயர்வாகிய குணங்களை கேட்டு அது முதலாகிய ஒன்பது அவஸ்தைகளை யடைந்து வருந்துகின்றமை பொது வகையாற் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்) கன்னல்-சர்க்கரைபோல, அஞ்சுவை-மதுரச்சுவையினாலே, கனிந்த-முதிர்ந்த, சொல்-சொல்லையுடைய, தமயந்தியென்னும்-தமயந்தியென்கிற பொன்னங் கொம்பனாள்-கற்பகப்பூங் கொம்புபோல்பவள், இன்ன-இப்படிப் பட்ட, தன்மையனாகிய-குணாதிசயங்களையுடையவனாகிய-ஏந்து (பூமிபாரத்தைத்) தாங்குகின்ற, எழில்-அழகும், திணி-வலிமையும்பொருந்திய, தோள்களையுடைய, மன்னர்-அரசர்களுக்கு, மன்னவன்-அரசனாகிய நாளனது, மாண்-குணங்களையும், எழில் அழகினது, வகை-வகையையும், நலம்-செல்வத்தையும், கேட்டு (அறிந்தோர்சொல்லக்) கேட்டு, மயலோடும்-மயங்குதலோடும் வைகலும்- தினந்தோறும், புலம்பும்-புலம்புவாள், எ-று.

---

†அவஸ்தைபத்தாவன:—காணுதல், பெறல்வேண்டல், இடைவிடாது நினைத்தல், உடம்பு வாடல், தன்வருத்தம் பிறர்க்குச் சொல்லல், நாணத்தினெல்லைகடத்தல், தன்னாற் காணப்படுகின்றவையெல்லாம் அவ்விரும்பப் பட்டவைபோலுதல், பித்தாதல், மூர்ச்சித்தல் இறத்தல், என்பன. இவற்றுட் காட்சியொழிந்த வொன்பதும், "வேட்கையொருதலையுள்ளுதன் மெலித, லாக்கஞ்செப்பனாணுவரையிறத்த, னோக்குவவெல்லா மவையேபோறன், மறத்தன்மயக்கஞ் சாக்காடென்றிச், சிறப்புடைமரபி னவைகளவெனமொழிப" என்பதனாலறிக. வடநூலாருள், ஆக்கஞ்செப்பலையும்-நோக்குவவெல்லா மவையேபோறலையுநீக்கி, சாகரமென்கிற விழிதுயிலாமையும்-அரதியென்கிற வேற்றுப்புலவெறுப்புங்கூட்டிப் பத்தென்பாராலெனின், அவ்விரண்டும்உள்ளுதலிலடக்கிக்கொள்ளப்படுமென்க.

கன்னல்சுவை கனிந்தசொல்லாவது, கேட்டோரை மகிழ்விக்கும் பொருணயமமைந்த மொழியாம். ஆகவே-அவளது குறைவற்றபுலமை கூறிய வாறாயிற்று. வாடாமையாலு மொளியாலுங் கண்டோர் கண்களி கூரச்செய்தல்பற்றிப்,பொன்னங்கொம்பு உவமானமாக்கப்பட்டது. அக்கல்வியழகுகளிற்சிறந்த தமயந்தியால் விரும்பப்படுதற்கு இப்படிப்பட்ட தோள்களே. முக்கியகாரணமென்பது தோன்ற, எந்தெழிற் றிணிதோளென்றார். கல்வி யறிவுடைய மங்கையர் ஆடவரிடத்தே முன்னே குணங்களையும் அதன் பின்னே அழகையும் அதன்பின்னே அவ்விரண்டுங் கொண்டு காமவின்பத்தை யனுபவித்தற்குத் துணைக்காரணமாகிய செல்வத்தையும் விரும்புவராதலால், அம்முறையே மாணெழில் வகைநலங் கேட்டாளென்க. அழகின் வகையாவன-கை கால் கண் முதலிய வவயவங்களி னளவையு நிறத்தையும்பற்றிய இயற்கையழகின் கூறுபாடும், ஆடைபணிமுதலியவற்றாற் செய்துகொள்ளப்படுஞ் செயற்கையழகின் கூறுபாடுமாம். மயலொடு மென்னு மும்மை-மற்றெல்லா வவஸ்தைகளையுந் தழுவினின்றது. புலம்பும்-என்றது "பல்லோர் படர்க்கை முன்னிலைத்தன்மை-யவ்வயின் மூன்று நிகழுங்காலத்துச் செய்யுமென்னுங் கிளவியொடு கொள்ளா" இவ்விதியால் புலம்புவாளென்றாயிற்று.

(க-து.) தமயந்தியானவள் நளனது குணாதிசயங்களைக்கேட்டு மையலுற்றுப் புலம்புவாள்-எ-ம். 1

தாதளைந்தினவண்டுகண் படுகுழற்றையல்
லேதமற்றதன் னெழிற்கிணையாமெனவெண்ணி
யாதரத்தின்வே ளாணையிற்பயிலுநெஞ்சதனைத்
தூதுவிட்டன டோன்றல்பாற்றுறந்தனடுயிலை.

[இதனால் இடைவிடாது நினைத்தலும், அதனாலுளதாகும் விழிதுயிலாமையுஞ், சொல்லப்படுகின்றன.]

(இ-ள்.) இனம்-கூட்டமாகிய, வண்டு - வண்டுகளானவை, தாது-மலர்ப்பொடியை, அளைந்து-பூசி, கண்படு-தூங்குதற்கிடமான குழல்-கூந்தலையுடைய, தையல்-தமயந்தியானவள், ஏதமற்ற-குற்றமற்ற,தன்-தனது, எழிற்கு-அழகுக்கு, இணையாமென (இவனழகு) தகுதியாமென்று, எண்ணி-நினைத்து, ஆதரத்தின்-ஆசையினாலே, வேள்-வன்மதனது. ஆணையில்-ஆக்கினையிலே, பயிலும்-தங்காநின்ற, நெஞ்சதனை (தன்) மனத்தை, தூது-தூதாக, தோன்றல்பால்-அரசனிடத்திலே, விட்டனள்-அனுப்பினவளாகி, துயிலை-நித்திரையை, துறந்தனள்-இழந்தாள், எ-று.

அழகினாலே தனக்குயர்ந்தவளேயன்றி யொப்பவ ளொருத்தியிருக்கினும் அதுவே தன்னழகுக்குக் குறைவாமென்று, கொள்வளாதலால், அக்குறைவுமில்லையென்பது தோன்ற, ஏதமற்ற தன்னெழிற்கெனச் சொல்லப் பட்டது. இங்கே இணையென்பது-மாற்றுயர்ந்த பொன்னுக்கும் மாசில்லாத மணிக்கும்,

போலத் தன்னழகுக்கும் அவனழகுக்குமுள்ள தகுதியாம். வேளானேயிற் பயி லுதல்-தன்னுரிமைகெட்டு மன்மதன் எவ்வழியே நடத்துகிருனே அவ்வழியே நடத்தல் நெஞ்சைத் தூதுவிடல்-நளனிடத்தே மிக்குறச் செலுத்துதலாம்; அ தாவது-இடைவிடாது நினைத்தலென்க. இனவண்டு தாதளைந்து கண்படுசேழற் றையல் துயிலைத் துறந்தனளெனவே, தன்னையொத்த அஃறிணை யுயிர்களுக் கும் நித்திரைசெய்தற் கிடமாயுள்ளவள்தான் அதனை இழந்தனளோவென்னு மிரக்கத்தைத் தோற்றுகின்றது.

(ந-து.) தமயந்தி தன்மனதை நளனிடத்துத் தூதுவிட்டனள் அதனல் நித்திரியை விட்டனள்-எ-ம். 2

மின்னிலங்குவேனளன்பெயர் கேட்டிடும்விழைவாற்
பொன்னின்வார்கழல் விதர்ப்பர்கோன்பேரவைபோந்து
மன்னரியாரினும் வந்தியர்நிடதனைத்தெடுப்ப
வன்னவன்புகழ் கேட்டலும்புளகமுற்றயரும்.

[இதுமுதல் மூன்றுபாட்டால் கேள்விவிருப்பஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மின்-மின்னல்போல, இலங்கு-விளங்காநின்ற, வேல்-வேலையு டைய, நளன்-நளமகாராஜனது, பெயர்-நாமத்தை, கேட்டிடும் - கேட்கவேண் டுமென்கிற, விழைவால்-ஆசையினலே, பொன்னின்-பொன்னுலாகிய, வார்- நீட்சிபொருந்திய, கழல்-வீரக்கழலையுடைய, விதர்ப்பர்கோன்-விவர்ப்பதேசத் தாருடைய யரசனது, பேரவை-பெரியசபையினிடத்து, போந்து (அவனைத் தொழுதற்குச் செல்கின்றவள் போலச்) சென்று, மன்னரியாரினும் அரசர்ப லரினும், வந்தியர்-புகழ்வோரானவர், நிடதன்-நிடததேசத்தரசனை, எத்தெடு ப்ப-அதிகமாகப்புகழ,அன்னவன்-அப்படிப்புகழ்பெற்றவரசனது, புகழ்-கீர்த்தி யை, கேட்டலும்-கேட்டவளவிலே, புளகம்-மெய்ம்மயிர்ச்சிலிர்த்தலை, உற்று- அடைந்து, அயரும் (தமயந்தி) வாடுவாள், எ-று.

நளன்பெயர் கேட்பவென்னுது கேட்டிடும் விழைவாலென்றதனல், போந்து என்றதற்குத் தந்தையைத் தொழச்செல்கின்றவள்போலச் சென்றெ ன்று பொருள் கூறப்பட்டது. நற்குல மகளிர்க்கு விவாகமளவுந் தந்தையைத் தொழுதலும், விவாகத்தின்பின் கணவனைத் தொழுதலு நித்தியவிதியாமென்க நளன்பெயர் கேட்டிடும் விழைவுனலே வந்தியரவனைப் புகழுஞ் சமயநோக்கிச் சென்றளென்க. ஒரு பெரியவரசன்முன்னே பலதேசத்தாசர் குணங்களையு முள்ளவாறு புகழ்ந்துரைத்தல் வந்தியர்கடனுதலால், அவர்நளன்குணத்தையே யுயர்த்திப் புகழ்ந்தாரென்க. புளகத்தா லவன்மே லவளுக் காசையிருந்தமை வெளிப்படுகின்றது. புளகித்தல்-உவகைச்சுவையைப்பற்றிய விறலாம். இப் படிப்பட்டவனை யெனக்குக் கணவனுகப் பெற்றிலேனென்னுமுள்ள நிகழ்ச் சியே அயர்தற்குக் காரணமாதல் தோன்றுகின்றது.

(க-து.) தமயந்திதன் பிதாவின் அவையிற்சென்று வந்தியர் நளனைப் புக ழக்கேட்டு வருந்துவாள்-எ-ம். 3

(அறுசீர்க்கழிநெடிலடிவிருத்தம்.)

அனங்கனையொழியாமண்ணி லாடவற்றெரிதிரென்றுங்
கனங்குழைபவரான்மன்னர்க் கோரொருகுற்றங்காட்டி
யினஞ்செய்வண்டிமிருந்தண்டார் நளனலாதில்லையென்று
மனங்களித்துரைப்பக்கேட்டு மம்மர்நோயுழக்குமாதோ.

(இ-ள்.) அநங்கனே - மன்மதனை, ஒழியா-ஒழித்து, மண்ணில்-பூமியின் கண், ஆடவன்-ஒருகாளையை, தெரிதிரென்று-ஆராய்ந்தெரிங்களென்று சொல்லி, கனம்-பொருந்திய, குழையவரால்-காதணியையுடையமகளிரால், மன்னர்க்கு-மற்றையரசர்களுக்கு, ஓரொருகுற்றம் ஒவ்வொரு குற்றத்தை, காட்டி - சொல்லித்து, இனஞ்செய் - கூட்டஞ்செய்கின்ற, வண்டு-வண்டுகளானவை, இமிரும்-ஒலிக்கப்பெ கின்ற, தண்-குளிர்ச்சிபொருந்திய, தார்-மாலையை புடைய, நளனலாது - நளராஜனல்லாமல், இல்லையென்று (ஒருவனு) மில்லை யென்று மனம்-நெஞ்சத்தில், களித்து-மகிழ்ந்து, உரைப்ப (அவர்) சொல்ல, கேட்டு (தான்) கேட்டு, மம்மர் - மயக்கமாகிய, நோய் - நோயிலே, உழக்கும் (தமயந்தி) வருந்துவாள், எ-று.

“ அந்நநிகுவிவருமொழிப் பொருளையின்மை பிறிதுமறையினு ளான் றுக்கும்” இவ்விதியால் அங்கமிலான அநங்கன் என்றாயிற்று. மன்மதனுக்கு அழகு நிறைந்திருந்தும் காணத்தக்க அங்கமில்லாத குறையுள்ளதென்பது தோன்ற, அனங்கனென்றும்; அக்காரணத்தினலே அவனதழகு பயன்படுவ தன்றென்பதுகருதி, ஒழியாவென்றும்; விண்ணவரிற்சிறந்த மன்மதனை யொழிக்கவே தண்டாபூபிக நியாயத்தினலே மற்றை விண்ணவரொழிக்கப்பட்ட மையினுன், மண்ணிலாடவனென்றும் சொல்லினுள். எல்லாவகையவங்களி னழகு மொருவனுக்கே யமைதலறிதாதலால் வொவ்வோரரசனுக்கு மொவ் வொரு குற்றங்கூறி நளனிடத்தெல்லா வவயவங்களினழகு மிருத்தல்பற்றி நளனைக்கூறி அதனைப் பின்னும் வலியுறுத்தற்கு உளனென்னுது அலதில்லை யென்றார். அவன் குணங்களைச் சொல்லும்போது சொல்லுகின்றார்க்கே மன மகிழ்ச்சி யுண்டாதலால், மனங்களித் துரைப்ப வென்றார் [அனங்கனென் னும் விசேடியம் அதன் பொருளாகிய மன்மதனை விலங்குதற்குத் தகுங்கருத் தை யுட்கொண்டிருத்தலாலே, கருத்துடைகொளி யணியாம்.]

(க-து.) நளனே அழகுள்ளவனென்று மாதர் சொல்லக்கேட்டுத்-தமயந்தி வருந்துவாள்-எ-ம். 4

பாளைவாய்கமுகிற்றூவிப் படுபழஞ்சிதறிவாளை
தாளைதாமரையிற்றுஞ்சுந் தண்பணைநிடதநாட்டி
னீள்வளங்கேட்பாள்போலத் தூதர்பானிருபன்சீர்கேட்
டாளிமொய்ம்பினனையெண்ணி யணிமுலைநோக்கிச்சோரும்,

(இ-ள்.) பாளை-பாளைகளானவை, வாய்-பொருந்திய, கமுகில்-பாக்குமரத்தின்மேலே, தாவி-பாய்ந்து, படு-குலைகளிலுள்ள, பழம், கனிகளை, சிதறி-உதிர்த்து, வாளை-வாளைமீன்களானவை, தாள்-நாளத்தையுடைய.தாமரையில்-தாமரைமலர்களிலே, துஞ்சும்-தூங்கப்பெறுகின்ற, தண்-தண்ணிய, பணை-கழனிகளையுடைய, நிடதநாட்டின்-நிடததேசத்தினது, நீர்வளம்-பெரியவளத்தை கேட்பாள்போல, சூதர்போல, சூதர்பால் (அங்கிருந்வந்து) புகழ்வோரிடத்து, நிருபன்-அரசனது, சீர்-கீர்த்தியை, கேட்டு-கேட்டறிந்து, ஆளி-சிங்கம்போல் பவனுடைய, மொய்ம்பு-தோள்களாகிய, இனனை - இனத்தை, எண்ணி-நினைத்து, அணி-ஆபரணங்களையுடைய, முலை (தன்) முலைகளை, நோக்கி-பார்த்து, சோரும் (தமயந்தியானவள்) வாடுவாள், எ-று.

அந்நாட்டின் வளத்தைக் கேட்பாள்போல நளன்சீரைக் கேட்டலாவது; நளனை முக்கியப்பொருளாகக் காட்டாமல் அந்நாட்டையே முக்கியப்பொருளாகக் காட்டி அதைத் தொடர்ந்துவருகிற அவனது சீரைக் கேட்டலாம். அதைக் கேட்கும்போது மற்றை நாட்டுவளங்களினு மிது பெரிதாதலின் அவற்றை யொழித்து இதனைக் கேட்கின்றாளென்று கொள்ளுதலால், அவளிடத்தே ஐயமுற்றிலரென்பது தோன்ற நீள்வளமென்றார். இவண் முலைகளோடு சேர்தற்குஅவன்றோள்கள் தகுதியாகவின மாதலால், இன்னெனப்பட்டது, பொருத்தம் பார்த்தற்குத் தோள்கள் காணப்படாமையாலும், அவற்றை மனத்தாலெண்ணி இவற்றைக் கண்களாலேபார்த்தாளென்க. அவ்விரண்டற்கும் பொருத்தமுண்டென்றறிதலாலே, அவ்விரண்டுஞ் சேர்தலால், வருமின்பத்தைப் பெற்றிலேனென்று வாடினாள். [நாட்டுவளங் கேட்கையாகிய கபடத்தினாலே நளன் சீர்கேட்கையாகிய தன்விருப்பத்தைச் சாதித்தலாலே, பிறிதினவிற்சியணியாம்.]

(க-து.) தமயந்திபுகழாளரிடத்து நிடதநாட்டுவளங் கேட்பவள்போல நளன் கீர்த்தியைக்கேட்டு அவனைச்சேரக் கனதனங்களைப்பார்த்து வருந்துவாள் எ-ம். 5

**ஓவியத்துறைகைபோய வொருவனையுருவின்மிக்க**
**காவலனொருவன்மற்றோர் கன்னிநீதீட்டுகென்னத்**
**தாவருமெழிலிற்கேட்டத் தானுமந்நளனுமாக**
**மேவரவினிதுநோக்கி மெய்ம்மயிர்பொடிக்குமன்றே.**

[சித்திரக்காட்சி தனவிற் காட்சிமுதலியவை விரகிகளுக்கு விநோதோபாயங்களாகையாலே இதனால் சித்திரக்காட்சி விருப்பஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) ஓவியம்-சித்திரவித்தையினது, துறை-வழியிலே - கைபோய-வல்லவனாகிய, ஒருவனை-ஒருவனைப் (பார்த்து) உருவின்.- அழகினாலே, மிக்க (யாவரினும்) மேற்பட்ட, காவலனொருவன்-ஒரு அரசகுமாரனையும், மற்றோர் வேறொரு, கன்னியையும், [illegible]என்ன- நீ யெழுதுகவென்று சொல்ல, தாதரும்-வருத்தஞ்சேர்த[illegible]யிலே, கோட்ட (அ

வ்விருவர் வடிவங்களையு மவ) னெழுத-தானும் (விரும்பிய) தானும்,அந்நளனு மாக (விரும்பப்பட்ட) அந்நளராஜனுமாக, மேவர-பொருந்த, இனிதின்-இனி தாக, நோக்கி-பார்த்து, மெய் உடம்பிலுள்ள, மயிர்-மயிர்களானவை, பொடிக் கும்- சிலிர்க்கப்பெருவாள் (தமயந்தியானவள்) எ-று.

ஒருவனையென்பது பார்த்தென்னுஞ்சொல் வருவித்து முடிக்கப்பட்டது; இது சொல்லெச்சம். "சொல்லெனச்சமுன்னும்பின்னுஞ், சொல்லனவல்ல தெஞ்சுதலின்றே" எழில்-வண்ணம், அழகு, கைபோதல்-சிறுமைபோதல்.தன் சொற்குறிப்பறிந்துதன்விருப்பத்தின்படியெழுதவேண்டலால், ஓவியத்துறை கைபோய வொருவனைப்பார்த்தாளென்க மன்மதன்முதலியோரையொழித்து நாற்றிசையினும் புகழ்பெற்ற நளனென்று உய்த்துணர்ந்து கொள்ளுதற்கு உருவின் மிக்கவனென்றது, உருவின்மிக்ககாவலனொருவனென்றும், அது வரையிலவனோடு சம்பந்தமில்லாதவளுங் கன்னிகையுமாகிய தன்னைக் குறிப் பித்தற்கு ஒருந்தியென்றது, மற்றோர் கன்னியென்றுங் கூறினாள். அவ்வெ ழுதுதலிலே அவனுக்கு மனவூக்கமுண்டாதற்பொருட்டு வேண்டிக் கோடல் பொருள்படத் தீட்டென்றது, தீட்டுகவென்றாள். அவ் வழுதப்பட்டவைவிப ரீதப்படாமல் தனது விருப்பத்தின்படியே யமைதலால் தானுமந்நளனுமாக நோக்கினாளென்க, தன்னுருவங்காணப்பட்டுநிற்றலாலும் நளனுருவஞ்செவிப் புலவுணர்ச்சியைக்கொண்டு பார்த்தரிய வேண்டுதலாலும் முன்சொல்லப்பட்ட முறைப்படி, அந்நளனுந் தானுமாகவன்றித் தானு மந்நளனுமாகக் கண்டாளெ ன்றார். மயிர்பொடித்தல்-உவகைச்சுவைபற்றிய விறலாம்.

(க-து.) சித்திரனெழுதிக்கொடுத்த இருபடங்களையுந் தமயந்திபார்த்துப் புளகமடைந்தாள். 6

வள்ளற்றாரகலந்தன்னில் வனமுலைதிளைக்கவெண்ணு
முள்ளத்தாள்கனவிற்காணு தொழிந்தநாளுளதோகங்கு
னள்ளிற்கூர்துயிலிற்காணு நண்பொருள்காணுங்கொல்லோ
மெள்ளத்தான்விதியாற்காட்டுஞ் செயலினைவிலக்கலாமோ.

[இதுமுத லிரண்டுபாட்டுகளால் கனவிற் காட்சி சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) வள்ளல்-நளமஹாராஜனது, தார்-மாலையையுடைய, அகலந்தன் னில்-மார்பினிடத்தே, வனம்- சித்திரத்தையுடைய, முலை - முலைகளானவை, திளைக்க - அழுந்தாநிற்க, எண்ணும் (அவனை) இடைவிடாது நினைக்கின்ற, உள்ளத்தாள்-மனத்தையுடைய, தமயந்தியானவள், கனவில்-சொப்பனத்திலே காணுது-காணுதிருக்க, ஒழிந்தநாள்-கழிந்தநாளும், உளதோ-உண்டோ(இல்லை) காணு (முன்) காணப்படாமல், நண்-நண்ணிய, பொருள் - ஒருபொருளை, கங் குல்-இரவினது, நள்ளில்-நடுவிலே, கூர் - செய்யப்பட்ட, துயில் - நித்திரையி னுல், காணுங்கொல் (ஒருவன்) காண்பானோ (வெனில்) விதியால்-ஊழினுல், காட்டும் (அதனைக்) காட்டுகின்ற, செயலினை (அந்நித்திரையின்) செய்கையை,

மெள்ளத்தான்-விரையாமலேயும், விலக்கலாமோ (அசம்பவமென்று) விலக்க லாமோ (ஆகாது] எ-று.

திளைக்கவென்னும் வினையெச்சம், காணுகதன்னுமெதிர்மறையின் முத னிலைத் தொழில்கொண்டது. முன்னே துயிலைத் துறந்தனளென்பதனோடு இங்கே பலநாள்களினுந் துயின்றபின் வருவதாகிய கனவுகண்டாளென்றது மாறன்றோவெனின், அவனை இடைவிடாது சிந்தித்திருப்பவளுக்கு நெடுங் கால வாசனையாற் சிறிதுகண்ணுறக்கம் வருவதன்றிப் பழையபடி நித்திரை செய்திலளென்க. நளனைத் தனக்கு நாயகனாக இடைவிடாது சிந்திக்கின்றவ ளாகிய தமயந்தியானவள் தினந்தோறுங் கனவிலே தன்னைப் புணருகின்றவ னாக அவனைக் காண்கின்றாளென்றும், ஒருபோதல் அசம்பவமன்றோவென் கிற சங்கைக்கு-அந்நித்திரையானது தன்னாலேயன்றி ஊழ்வலியினாலே அப் படிப்பட்ட பொருளையுங் காட்டுதலால் அதனை அசம்பவமென்னலாகாதென் றும், சொல்லியதாம். இங்கே காணுதலுக்குக் கட்பொறிமாத்திரத்தாலன்றி மற்றைப்பொறிகளா லனுபவித்தலுங் கொள்க. [விதியாற்காட்டுஞ் செயலினை விலக்கலாமோவெனனும் பொதுப்பொருளாலே நளனைக்கண்டிலாத தமயந்தி கனவிலே அவனைக்காணுதலாகிய சிறப்புப்பொருளைச் சாதித்தலாலே, வேற் றுப் பொருள்வைப்பணியாம்]

(கு-து.) தமயந்தி நளனைக் கனவிற்காணுந் தொழிந்தனளில்லை. கண்ணிற் காணுதபொருள் கனவிற்காணாது காணுத நளனைக் கனவிற்கண்டது விதி கூட்டுஞ் செயல்-எ-ம். 7

கட்புலனென்னுந்தூய கதவடைத்திதயமேய
உட்புலனொடுங்கநோக்கி யுறுதுயிலென்னுந்தோழி
புட்குலஞ்சுழலும்வைவே லிறையெழிற்பொலிவுகாட்டு
முட்பொதிபசுந்தாட்செய்ய முளரிபோன்முகத்தினாட்கே.

(இ-ள்.) தூய (நீர்த்துளிகளைத்) தூவிய, கட்புலனென்னும்-கண்ணிமைக ளென்கிற, கனே-கதவுகளை, அடைத்து சாத்திக்கொண்டு, இதயம்-நெஞ்சமா கிய (தன்வீட்டுள்) மேய-தங்கிய, உட்புலன் - மனமானது, ஒடுங்க - அடங்க, நோக்கி (அச்சமயம்) பார்த்து, உறு-அடைந்த, துயிலென்னும்-நித்திரையென் கிற, தோழி-பாங்கியானவள், புட்குலம் - பறவையினமானது, சுழலும்-வட்ட மிடப்பெறுகின்ற, வை-கூர்மைபொருந்திய, வேல்-வேலையுடைய, இறை-நள மகாராஜனாகிய, எழில்-அழகினது, பொலிவு - பெருக்கத்தை, முள்-முள்ளுக ளாலே, பொதிநிறைந்த, பசு - பசிய, தாள் - தண்டையுடைய, செய்யமுளரி போல்-செந்தாமரை மலர்போலும், முகத்தினாட்கு-முகத்தையுடைய தயயந் திக்கு, காட்டும்-காண்பிப்பாள், எ-று.

தூவுதல் வினைக்கு அவாய் நிலையாலே நீர்துளிகளென்கிற செயப்படுபொ ருள் வருவிக்கப்பட்டது. பிறர் தனக்கெதிராகாதிருக்கக் கதவடைத்து வீட்

யென்னே தனித்திருந் தெண்ணுவான்போல, மனமானது உடலங்கள் தனக்கெதிராகாதிருக்கக் கட்பொறிவாயிலி னிமைக்கதவடைத்து நெஞ்சமாகிய தனதிடத்தே தங்கி நெடும்பொழுதெண்ணியதாற் சோர்ந்ததென்க. உட்புல னொடுங்கவென்றதனால், மற்றை மெய்வாய் மூக்குச் செவியென்னும் பொறிகளிற் செல்லாமையும் பெறப்படுகின்றது. ஒருத்திக்கு அரிதான ஒருமறைப்பொருளைப் பிறரறியாமற் கொணர்ந்துகாட்டுந் தோழிபோல, நித்திரையானது தமயந்திக்கு அவள் கண்களும் அந்தக்கரணமு மறியாமல் மறைத்து நளனைக்காட்டியதென்பதாம். கனவிற் காட்சியறிவும் மனத்தாலன்றி யுண்டாவதில்லையே அப்படியிருக்க அதற்கு எவ்வாறு மறைத்துக்காட்டியதெனின், இங்கே பொறிகளோடுகூடிய மனத்துக்கே மறைத்ததெனக்கொள்க. எதுகைக்காகவேயன்றிப் பறிக்கப்பட்டு மலர்சிமழுதும் கெட்டுப்போகாத மலரென்பது தோன்றற்கு, முட்பொதி பசுந்தாளென்னுமடை கூட்டிச் சொல்லப்பட்டது போலும். [இது உருவகவணி.]

(க-து) நித்திரையென்னும் பாங்கியானவள் நளனது அழகைத்தமயந்திக்குக் காட்டுவாள்-எ-ம். 8

> தாமரைமுகங்கள் வாட்டுந் தண்பனிக்காலந்தன்னிற்
> காமர்வெம்பனீட்டித்த வண்ணமுங்கணவர்த்தீர்ந்தோ
> ரேமுறுவேனிற்கால மிரவுநீட்டித்தவாறுந்
> தூமமென்கூந்தற்செவ்வாய்த் துடியிடைதுயரவன்றே.

[இதனால் நினைத்தலாலுண்டாகிய துயிலாமை சொல்லப்படுகின்றது-]

(இ-ள்.) தாமரை - தாமரைமலர்களுடைய, முகங்கள் - முகங்களை, வாட்டும்-வாடச்செய்கின்ற, தண்-தண்ணிய, பனிக்காலம் - பனிக்காலமானது, தன்னில்-தன்னிலே, காமர்-அழகிய, வெம்பகல்-வெவ்வியபகலை, நீட்டித்த தண்ணமும்-நீள்வித்தபடியும், கணவர் (தம்முடைய) நாயகரினின்றும், தீர்ந்தோர் - நீங்கினமாதர், ஏம்-மையலை, உறு - அடைதற்குக் காரணமாகிய- வேனிற்கலாம்-வெயிற்காலமானது (தன்னில்) தன்னிலே, மெல்-மெல்லிய, கூந்தல்-கூந்தலையும். செம் - செய்ய, வாய் - வாயையும, துடி - உடுக்கைபோலும், இடை-இடையையும் உடைய தமயந்தியானவள், துயர்-துன்பப்படுதற்கேயாகும், அன்றே (இது) ஆச்சரியம், எ-று.

இருபத்தெட்டுநாழிகைப் பகலுள்ள மார்கழியுந் தை மாகிய முன்பனிப் பருவத்தையே தண்பனிக்காலமென்றுரென்றும், இருபத்தெட்டுநாழிகை இரவுள்ள ஆனியும் ஆடியுமாகிய முதுவேனிற் பருவத்தையே வேனிலென்றுரென்றுங்கொள்க†. தாமரைமுகங்கள் வாட்டுமென்றதனாலும், கணவர்த்தீர்ந்தோரேமுறுவென்றதனாலும், அவ்விருவகைக்காலங்களுக்குங் கொடுமையே சொல்லப்பட்டதாயிற்று. பனிக்காலத்திலே குறைந்தபகலும் வேனிற்காலத்திலே குறைந்த இரவும் மிகுந்து தோன்றுதல் சாத்திரத்திற்கு மனுபவத்திற்கும் விரோதமன்றேவெனின், விரகிகளுக்குக் கணப்பொழுது நெடுங்காலமாமென்பதனால் விரோதமில்லையென்க.

(க-து.) பனிக்காலம்பகலை நீட்டித்தநம் வேனிற்காலம் இரவை நீட்டித்த தும் தமயந்தி துயரப்படத்தான்-எ-ம். 9

மணியெழுவனையதோளார் மனவலியகற்றுந்துத்திப்
பணவரவல்குற்செவ்வாயப் பைந்தொடிகுணனூலாக
வணிகிளர்கீர்த்திமுத்தங் கோத்தனனரசர்சென்னி
தணிவறவிளங்குபைம்பொற் றுமரைத்தாளினனே.

[இதுமுதற் பதினொரு பாடல்களால் நளராஜனுடைய காமவிருப்பத்தைச் சொல்லத்தொடங்கி, அவன் தமயந்தியினுயர்வாகிய குணத்தைக் கேட்டமையை இதனாற் சொல்லுகிறார்.]

(இ-ள்.) அரசர்-அரசருடைய, சென்னி-தலைகளிலே, தணிவற-ஒளிவில்லாமல், விளங்கும்-விளங்குகின்ற, பைம்பொற்றுமரை-பசிபொற்றுமரை மலர்களாகிய, தாளினன்-அடிகளையுடையநளமகாராஜனானவன், அரவு-பாம்பினது, துத்தி-கரும்புள்ளிகளையுடைய, பணம்-படம்போலும், அல்குல்-அரை முன்பக்கத்தையும், செவ்வாய்-செய்யவாயையும், பைந்தொடி-பச்சைவளையல்களையும் உடையதமயந்தியினது, மணியெழுவனைய - மணித்தூண் போலும், தோளார்-தோள்களையுடையகாளையரது, மனவலி-தைரியத்தை. அகற்றும்-நீக்குகின்ற, குணன்-குணமானது, நூலாக-இழையாக, அணி(தன்) னழகினாலே, கிளர்-விளங்காநின்ற, கீர்த்தி-கீர்த்திகளாகிய, முத்தம்-முத்துக்களை கோத்தனன் (அவ்விழையிலே) கோத்தான், எ-.று.

மணியெழுவனையதோளர் அரசிளங்காளையர். படத்திற் கரும்புள்ளிகள் போல அல்குலுக்கு உரோமமெனக. மனவலியகற்றலாவது, கூற்றங்கொதித்து மேல்வரினுங் கலங்காத வவரது மனநிலையைக் சேட்கப்பட்ட வளவிலே கலங்கச்செய்தலாம். குணமெனப் பொதுப்படக் கூறுதலால், அழகுமுதலான பலவுங் கொள்ளப்படும். அரசனழகினுலுண்டாகிய கீர்த்திகளாகிய முத்துகளுக்கு அவள்குணம் நூலாகவெனவே, முத்துகளுக்கு நூல்போல அக்கீர்த்திகளுக்கு அவள்குணம் இன்றியமையாத சிறப்புடைத்தென்பது பெறப்பட்டது. கீர்த்தி முத்தங்களைக் குணநூலிற் கோத்தல், அவன் தனக்குக் கிடைக்கப் பெறின் அவள் தனக்குக் கிடைக்கப்பெறின் அவள்குணத்தினாலே தன்கீர்த்தி விளங்குந்தன்மையை நினைத்தல். [இது குணத்தினூலையும் கீர்த்தியின் முத்தைடம் ஆரோபித்ததால் உருவகவணியாம்.]

---

† தைமீ கடை தொடங்கி ஆனிமீ முடிவுவரைக்கும் பகற்காலம் 28-நாழிநாழிகையிலிருந்து-32-நாழிகையளவாக வளர்ந்தும், இதற்கேற்க இராக்காலம்-32-நாழிகையிலிருந்து - 28 - நாழிகையளவாகத் தேய்ந்தும்வரும்; இப்படியே ஆடிமீ கடை தொடங்கி மார்கழி முடிவுவரைக்கும் இராக்காலம்-28-நாழிகையிலிருந்து-32-நாழிகையளவாக வளர்ந்தும் இதற்கேற்கப் பகற்காலம்-32-நாழிகையிலிருந்து-28-நாழிகையளவாகத் தேய்ந்தும்வரும், இது சூரியசித்தாந்தமுதலாகிய கணிதநூல்களாலும் அனுபவத்தாலுமறியப்படும்.

(க-து.) நளமகாராஜன் தமயந்தி குணமே நூலாகவும், தன் கீர்த்தியே முத்துக்களாகவும் கோர்த்துக்கொண்டிருந்தான் எ-ம். 10

வனப்பினில் வென்றவேந்தை வயங்கொளுங் காலமென்னுக்
கனைத்துவண் டிவருங்கூந்தல் கருதிய விலக்கந்தப்பாத்
தனிப்படை யாகவேறற் கெண்ணினன் றாளஞ்சிந்தக்
குனிக்குமென் கரும்பான்மேரு வில்லியை வெல்லுங்கோளான்.

[இதுமுதல் மூன்று பாட்டுகளால் நளராஜனை வெல்லுதற்கெண்ணிய மன்மதன் செய்கையைக் காட்டி அவனமே லவனுக்குண்டாகும் விருப்பங் குறிக்கப்படுகின்றது.]

(இ-ள்.) தாளம்-முத்துக்களானவை, சிந்த-உதிராநிற்க, குனிக்கும்-வளைக்கப்பட்ட, மென்கரும்பால்-மெல்லிய கரும்புவில்லினாலே, மேருவில்லியை-மேருவை வில்லாகக்கொண்ட கடவுளையும், வெல்லும்-வென்ற, கோளான் (பெருமையையுடைய) மன்மதனானவன், வயம்-வெற்றியை, கொளும்-கொள்ளுதற் கேற்கின்ற, காலமென்னு-கால (மிதுவே) யென்று, வண்டு-வண்டுகளானவை, கனைத்து-ஒலித்து, இவரும்-ஏறப்பெருகின்ற, கூந்தல் - கூந்தலையுடைய தமயந்தியானவள், கருதிய (தன்னாலே) குறிக்கப்பட்ட, இலக்கம்-குறியினின்றும், தப்பா-தப்பாத, தனி-ஒப்பற்ற, படையாக-ஆயுதமாக, வனப்பினில்-அழகினால், வென்ற (தன்னை) வென்ற, வேந்தை-நளமகாராஜனை, வேறற்கு (அப்படையால்) வெல்லுதற்கு, எண்ணினன-ஆலோசித்தான் எ-று.

முனனே மேருவில்லியால் வெல்லப்பட்டவனாயினும் பின்னே உமாதேவியை மணம்புணரச் செய்தமையினாலே, கரும்பான் மேருவில்லியை வெல்லுங் கோளானென்றார். வயங்கொளுங் காலமென்றது கீர்த்திமுத்தங்களைக் குண நூலிற் கோத்தகாலத்தைச் சுட்டிநின்றது. தமயந்தி மன்மதனுக்கு அவனாலே குறிக்கப்பட்ட அரசனாகிய குறியிலே தப்பாது சென்று தாக்கும் ஒப்பற்ற படைக்கலமாயினளென்க, தன்னை அழகில் வென்ற அரசன்மேல் உள்வயிரங் கொண்டு அவனை வெல்லுதற்கான காலமும் படைக்கலமுந் தேடிக்கொண்டிருந்து அவை கிடைக்கப் பெறுதலினாலே வேறற்கெண்ணினனென்க. [வயங்கொள்ள நினைத்தற்கு ஏதுவாகாத வனப்பினில் வென்றமையை யேதுவாகக் குறித்தலால், ஏதுதற் குறிப்பணியும்; கரும்பான் மேருவில்லியை வெல்லுங்கோளானெனக் காரணத்தினது தருமங் குறைவறவிருக்கக் காரியம் பிறத்தலைச் சொல்லுதலால், பிறிதாராய்ச்சி யணியும்; இவ்விரண்டுஞ் சேர்தலாலே சேர்வையணியுமாம்.]

(க-து.) மன்மதனானவன் தமயந்தியைப் படையாகக் கொண்டு நளனை வெல்ல வினைத்தான் எ-ம். 11

அணங்கினுக் கணங்குசெய்யு மணிகிளரஞ்சிலோதி
குணங்கமழ்குருதிவைவேற் கொற்றவன்செவியுறுமுன்

மணங்கமழ் தென்றற்றேரோன் வாங்குபைங் கழைவிற்பூட்டுங்
குணஞ்செவிப்பட்டதன்றோன் வன்மையார்குணிக்கற்பாலார்.

(இ-ள்.) அணங்கினுக்கு-தெய்வமகளிருக்கு, அணங்கு-வருத்தத்தை, செய்யும்-செய்கின்ற, அணி-அலங்கரித்தலாலே, கிளர்-விளங்காநின்ற அம்-அழகிய, சில்-பொன்வட்டத்தகட்டணிபொருந்திய, ஓதி-கூந்தலையுடைய தமயந்தியினது, குணம்-குணமானது, கமழ் - நாறுகின்ற, குருதி-உதிரத்தையுடைய, வை-கூர்மைபொருந்திய, வேல்-வேலைத்தாங்கிய, கொற்றவன்-நளமகாராஜனது செவி-காதிலே,உறும்முன்-அடைவதன்முன்னே,மணம்-மணமானது, கமழ்-மணக்கப்பெற்ற, தென்றல்-தென்றலாகிய, தேரோன்-தேரையுடையமன்மதனால், வாங்கு-வளைக்கப்பட்ட, பைங்கழைவில்-பசியகருப்புவில்லிலே, பூட்டும்-ஏறிடப்பட்ட, குணம்-குணமாகது செவி (அம்மன்மதன்) காதிலே, பட்டது-அடைந்தது, அன்னோன்-அப்படிப்பட்டமன்மதனது, வன்மை-வல்லமையை யார்-யாவர், குணிக்கற்பாலார்-அளவுசெய்யவல்லவர், எ-று.

அணங்கு-சாதியொருமை. "அணங்குஞ்சூருந் தெய்வப்பெண், பொதுப் பெயர்" என்பதனாலறிக. அணங்கினுக் கணங்குசெய்தல், தன் பேரழகினால் அவர்க்குப் பொறாமைவருத்தஞ்செய்தலாம். அல்லாமலும் அழகுக்கழகு செய்கின்ற வெனினுமாம் தமயந்தியின்குணம்-அழகுமுதலிய பண்பாம். கரும்புவிற் குணம்-அதனாண். நாணும் "குணமென்பகயிறும் பண்புங்கும்பம் வின்னாணுநாற் பேர்" என்பதனாலறிக. தமயந்தியின் சணம் நளன்செவியிலடைவதன்முன்னே கரும்புவில்லின்குணம் மன்மதன்செவியிலடைந்ததென்க. நளன்செவியிலடைதலாவது-கேட்டறியப்படுதல்,மன்மதன்செவியிலடைதலாவது-இடதுகையால் வில்லைப்பிடித்துநின்று வலதுகையால் அம்பைத்தொடுத்து நாரியை இழுக்கும்பொழுது அந்நாரிகாதளவிற் சென்றுபடிதலாம். தமயந்தியின் குணத்தை நளன் கேட்பதற்கு முன்னே மன்மதன் அம்பெய்யத்தொடங்குதல் கூடாமையாலே செவியுறுமுன்னென்பது செவியுற்றளவிலென்னும் விரைவைக் காட்டியது. [தமயந்தியினழகை யரசன் கேட்டறிதலாகிய காரணத்துக்கு முன்னே மன்மதன் வில்வளைத்தலாகிய காரியம் பிறத்தலைச் சொல்லுதலால், மிகையுயர்வு நவிற்சியணியாம்,]

(க-து-) தமயந்தி குணதிசயமானது நளன்காதில் விழுமுன்-மன்மதனவன் விற்பூட்டும் வல்லமையார் சொல்லவல்லார்-எ-ம். 12

கல்வியின் றுறைகைபோய காவலன் றன்னை யின்னே
வெல்குவ லென்ன நெஞ்சின் விழைவுறு கருப்புவில்லான்
மல்லலம் புவனமூன்றும் வென்றதன் வரம்பில் சீர்த்தி
யல்கலிலைய மென்று மாழியி லுதுக்கு நின்றான்.

(இ-ள்-) கல்வியின்-கல்வியினது, துறை-வழியில், கைபோய-வல்லவனாகிய, காவலன்றன்னை-அரசனை, இன்னே-இப்பொழுதே, வெல்குவலென்ன-

வெல்வேனென்று, நெஞ்சின் (தன்) மனத்தில், விழைவுற ஆசைகொண்ட, கருப்புவில்லான்-கருப்புவில்லான்- கருப்புவில்லையுடைய (மன்மதனானவன்) அம்-அழகிய, புவனமூன்றும் - உலகமூன்றும் - உலகமூன்றையும், வென்ற (அதுவரையில்) வென்றுசம்பாதிக்கப்பட்ட, தன்-தனது, மல்லல்-வளம்பொருந்திய, வரம்பில்-அளவில்லாத, கீர்த்தி-கீர்த்தியை, அல்கலில்-சுருங்கலில்லாத, ஐயமென்னும்-சந்தேகமென்கிற, ஆழியின்-கடலின், உகுத்து-முழுகச்செய்து, நின்றான் (திகைத்து) நின்றான், எ-று.

கல்வியின்றுறைகைபோய காவலனெனவே, வேதாகமங்களிற் சொல்லப்பட்ட விதிவிலக்குகளை ஐயந்திரிபின்றியறிந்து அவ்வறிவினாலே மனதைத்தன் வசப்படுத்தி நிற்பவனென்பது பெறப்பட்டது. அவனைவெல்லுதல் அவன் மனநிலையைக் கெடுத்துக் காமத்திற் கலங்கச்செய்தல்-அக்கல்வியறிவினுயர்ந்தோரை இப்போதே வெல்லுவேனென்றாசைகூர்தல் சாகசமாதலாலே, மன்மதனுக்கு இவனைவெல்ல மாட்டுவேனோ மாட்டேனோவென்கிற வுள்ளநிகழ்ச்சி பிறந்து அதனாலிதுவரையிலே மூன் லகங்களையும் வென்று சம்பாதிக்கப்பட்ட கீர்த்திகளு நிற்குமோ நீங்குமோ வென்று சந்தேகித்தானென்க. புதிதாகச் சம்பாதிக்க விரும்பிய ஊதியத்தைக்குறித்துமுயன்று அதுவரையிலே சம்பாதித்து வைத்திருக்கப்பட்ட முதலையுமிழந்துபோதல் அறிவிலான்செயலாதலால் "ஆக்கங்கருதி முதலிழக்குஞ்செய்வினை-யூக்காரறிவுடையார்" என்பதனாலறிக. [கல்வியின்றுறைகைபோய வென்னுமடை அரசன் மன்மதனுக்கு ஐயந்தரவல்ல னென்னுங் கருத்தை யுட்கொள்ளுதலால், கருத்துடையணி அங்கமும் மன்மதனுக்குச் சந்தேகமில்லாதிருக்கச் சந்தேகத்தைக் கற்பித்தலால், தொடர்புயர்வு நவிற்சியணி அங்கியும் ஆதலால்-உறுப்புறுப்பிக் கலவையணியாம்.]

(க-து.) நளனைவெல்ல விருப்புற்ற மன்மதனானவன் தன் கீர்த்தியைச் சந்தேகக்கடலிற் சொரிந்து மயங்கிநின்றான்-எ-ம். 13

[இதனால் மன்மதனுக்கு விதித்துணையாற் பூவம்பைக் கொண்டே ஆண்மை பயன்பட்டமை சொல்லப்படுகின்றது.]

தண்ணறாத் துளிக்குங்கூந்தற் றமயந்திமுலையும்போர்வே
லண்ணறன் புயமுங்கூட்டும் விதிவலியழகிற்றய்யா
மண்ணமைமுழவுத்தோளான் மனவலிக்கவசமார
னெண்மலர்வாளியானு முரனறப்பிளந்ததன்றே.

(இ-ள்.) தண்-தண்ணிய, நறா (மலர்த்) தேனை, துளிக்கும்-துளிக்கின்ற, கூந்தல்-கூந்தலுள்ள, தமயந்தி-தமயந்தியினுடைய, முலையும்-முலைகளையும், போர்-போர்க்குரிய, வேல்-வேலைதாங்கிய, அண்ணல்-நளமகாராஜனுடைய, புயமும்-தோள்களையும், கூட்டும்-சேர்க்கும், விதி-தெய்வத்தினது, வலி-சீனைப் பூண்டு, அழகிற்று-பயனுடைத்தாயிற்று, மண்-துடைத்தல், அமை-அமைந்த,

முழவு-மத்தளம்போலும், தோளான்-தோள்களை உடைய அவ்வரசனது, மன வலி-தைரியமாகிய, கவசம்-கவசமானது, மாரன்-மன்மதனது, ஒள்-மெல்லிய மலர்வாளியாலும்-பூவம்பினாலும், உரனற-உரங்கெட, பிளந்தது-கிழிந்தது, எ-று.

மனவலியில் வலியென்பது - தல் விகுதிகுன்றிய தொழிற்பெயர் அது நினைத்தலென்பது, " உய்ந்துபோமரறேவலிக்குமா மாண்டார்மனம் " என்பதனாலறிக. தமயந்தி முலை ம் நளன் புயமும் கூட்டலென்றதற்கு, அவளை இவனுக்கு மனைவியாகச் செய்தலென்பது பொருள். கொடிய படைக்கலங்களால் ஊறுபடாமற் காக்குங் கவசம்போல, அரசனது மனவலி காமத்தினாலே ஊறுபடாமற் காத்தலாலே மனவலிக் கவசமென்றார். அது பிளத்தல் - நிலை கலங்குதல். தெய்வ சங்கற்பத்தினாலே எந்தக் காரியந்தான் முடிவாதென்றதாயிற்று. [மலர்வாளியாலுங் கவசம் பிளந்ததென்னும் விரோதம் விதிவலியாற் பிளந்ததென்றதினாலே அழிதலால், முரணவிளைந் தழிவணியாம்.] இது மனவலிக் கவசமென்னு முருவகத்தை அங்கமாகக் கொண்டுவந்தது.

(கு-து.) தமயந்தி முலைகளையும் நளனின் தோள்களையும் சேர்க்கும் விதி வசம் வலுமை ள்ளது-நளனது தைரியமாகிய மனக்கவசமானது மன்மதபாணத்தாற் கிழிந்தது எ-ம். 14

தேங்கமழ் துளவினானு நான்முகத்தேவுநாளுந்
தாங்கருங்காமவெம்மை தரிக்கிலராகியன்றே
வாங்குதண்டிரையிற்றண்ணென் மலர்வயின்வதிந்தார்மன்ன
னீங்கருநிழலிற்றோன்று மதனையெவ்வாருநீங்கும்.

[இதனாலே முதற்கடவுளரையும் வென்ற மன்மதனுக்கு வெல்லுதற்கரியதியாதென்று சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) தேன்-தேனையுடைய, கமழ்-மணக்கப்பெற்ற, துளவினானும்-துளசி மாலையையுடைய கடவுளும், நான்முகத்தேவும்-நான்சமுகங்களையுடைய கடவுளும், நாளும்-எந்நாளும், தாங்கரு (யாவராலும்) தாங்குதற்கரிய, காமவெம்மை-மன்மதனாலுண்டாகிய வெப்பத்தை, தரிக்கிலராகி-பொறுக்கமாட்டாதவராகி, வாங்கு-வளைந்த, தண்டிரையில்-குளிர்ச்சிபொருந்தியபாற் கடலின்கண்ணும், தண்ணென்-குளிர்ச்சிபொருந்திய, மலர்வயின் - தாமரைப் பூவின்கண்ணும், வதிந்தாரன்றே-வாசஞ்செய்கின்றாரன்றே, மன்னன-அரசனானவன், நீங்கரு-நீங்காத, நிழலின் (தனது) சாயைவடிவமாக, தோன்றும் - தோன்றாநின்ற, மதனை-மன்மதனினின் ம், எவ்வாறு-எவ்வுபாயத்தினாலே, நீங்கும்-நீங்கமாட்டுவான் எ-று.

காமவெம்மை நிலைமொழியீறு விகாரப்பட்டது; குமரகோட்டமென்பதுபோல, நிழலிற் றோன்றுமென்றதற்கு மன்னனது காந்திபோலும்-காந்தியுடையவனைத் தொன்றுமென்பது நேர்பொருளாகவும், மன்னனது சாயை

யின் வடிவாய்த் தோன்றுமென்பது பயன்படுபொருளாகவுங்கொள்க. நிழல் காந்தியுஞ் சாயையுமாமாகலின், காந்தியென்பது-“வாமநிழல்சவி வளரொளி யாகும்” என்பதனாலறிக. உடம்பினிழலை யொருவருங்கடக்கக்கூடாமையறிக. [மன்மதனாலே கடவுலர்படும்பாட்டைச் சொல்லவே நளன்படும்பாடு தோன்றலாலே, செய்யுட்பொருட் பேறணியும், காந்தி பாதுங் காந்தியென்பது தொகையுவமையணி - இது அங்கம், கடக்கமாட்டாமைக்கு ஏதுவாகாத நிழலிற்றோன்றுதலை யேதுவாகக் குறித்தலால், ஏதுதற் குறிப்பணி-இது அங்கி, ஆதலாற் கலவையணியுமாம்.]

(க-து.) பிரமனும் விண்டுவுங் காமக்கனலுக் காற்றாமல் கடலிலும் மலரிலுமிருக்கின்றார்கள் ஆகையால் நளன் மதனைவிட்டெவ்வாறுநீங்குவான் எ-ம்

மானநீராணஞ்சூழ்ந்த மன்னவனுளத்தினூடு
தூநலப்பருவமென்னுந் தோழியன்பொழுகுநல்கு
நானமும்புழுகுங்கொட்டி நகைமணிமுத்தஞ்சூட்டு
நீனிறமணிக்கட்கொங்கைக் குடத்தினானீந்திப்புக்காள்.

[இதனால் உள்ளுதலும் நாணுவரை யிறத்தலுஞ் சொல்லப்படுகின்றன.]

(இ-ள்.) மானம்-நாணமாகிய, நீராணம்-அகழியினாலே, சூழ்ந்த-சூழப்பட்ட, மன்னவன்-அரசனது, உளத்தினூடு-மனத்தினுள்ளே, தூ - குற்றமற்ற, நலப்பருவமென்னும்-மங்கைப்பருவமென்கின்ற, தோழி-பாங்கியினாலே, அன்பொழுக (அவண்மே) லன்பு பருக, நல்கு-கொடுக்கப்பட்ட, நானமும்-கஸ்தூரியையும், புழுகும்-புழுகையுங், கொட்டி - அப்பி, நகை - காந்திபொருந்திய, மணி-அழகிய, முத்தம்-முத்துவடத்தை, சூட்டும்-சூட்டப்பெற்ற, நீனிறமணி-நீலமணிபோலும், கண்-சூசுகத்தையுடைய, கொங்கை-முலைகளாகிய, குடத்தினால்-குடங்களினாலே, நீந்தி (அவ்வகழியைக்) கடந்து,புக்காள்-சென்றாள்எ-று

ஒரு நகரத்திலே பகைவர் புகாமற்காக்கும் அகழிபோல, நாணம் அரசனுள்ளத்தே காமம் புகாமற்காத்தலே மானநீராணமென்றார். “மானமும் வெள்கலும் வட்கலுஞ்சமழ்ப்பு-நாணமுணர்த்து நடையவாகும்” என்பதனாலறிக. புதிய காமவின்பத்தை யனுபவித்தற்குரித்தாய் முன்னும்பின்னுமுள்ள பருவங்களனைத்தினுஞ் சிறந்து நிற்கையால், மங்கைப்பருவத்தைத் தூநலப்பருவமென்றார். அது பன்னிரண்டாண்டுகளின்மேல் வருவது. அதிலே பெண்மைக்குச் சிறந்த முலைகளரும்புதல்பற்றி அதன்மேலன்பு பிறத்தலால், அன்பொழுகவென்றார். மார்பிலே குடத்தைக்கொண்டு ஆழ நீரைக்கடந்து அக்கரை சேர்வார்போலத், தமயந்தி தன் முலைகளாலே அந்நீரைக்கடந்து அவனது மனத்திலே புகுந்தாளென்க. இப்படி அவள் செயலாகக் கூறப்பட்டதாயினும், அரசன் அவளது முலையழகைக் கேட்டுத் தன்னாணத்தையிழந்து அவளை நினைத்திருந்தானென்பது கருத்தாகக்கொள்க. உயர்வொப்பில்லாத வழகுடைய மகளிரர்யினும் வெள்ளவன முற்றுமுலை யரும்புதற்கு முன்னே அவரை விரும்புதல் பொருந்தாக் காமமாதலின், விரும்புதற்கு முலைகளினியற்கை

யழகோடு செயற்கையழகுங் காரணமாதல் தோன்ற, நானமும் புழுகுங் காட்டி நகைமணிமுத்தஞ்சூட்டு நீனிறமணிக்கட் கொங்கையென்றார், [மானம்-பருவம்-கொங்கை-இம்மூன்றினும், நீரணம்-தோழி-குடம்-இம்மூன்றின் அபேதங்களை ஆரோபித்தலால், உருவகவணியாம்.]

(க-து.) தமயந்தியானவள் நளனது மானமென்னுமகழியைக் கொங்கைக் குடங்களாலே நீந்தி அவனுள்ளத்துட் புகுந்தாள் எ-ம். 16

சிறைபளிகுடைந்துபாடுந் தேமலர்ப்பகழிமாரி
நறைவிரியலங்கன் மார்பிற் றிளைத்தலினையுந் துன்பங்
கறைமதிவிளங்குங்கங்குற் காலையுமணையல்லாற்
பிறரறியாமனுள்ளத் தடக்கினன்பிறங்கற்றோளான்.

[இதனால் துயிலாமைத் துன்பஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) பிறங்கல்-மலைபோலும், தோளான் - தோள்களையுடைய - நளனவன், சிறை-சிறைகளையுடைய, அளி-வண்டுகளானவை, குடைந்து - துளைத்து, பாடும்-பாடப்பெறுகின்ற, தேம்-பரிமளம்பொருந்திய, மலர்ப்பகழி-பூவம்புகளது, மாரிமழையானது, நறை-தேனையுடைய, விரி-மலர்ந்த, அலங்கல் - பூமாலையணிந்த, மார்பில் - மார்பின்கண்ணே, திளைத்தலின் - படுதலினாலே, நையும் - இளைத்தலாலுண்டாகின்ற, துன்பம் - (தனது) துன்பத்தை, கறைமதி - சந்திரனாலே, விளங்கும் - விளங்காநின்ற, கங்குற்காலையும்-இராக்காலமும் (கறைமதி) சந்திரன்போல (விளங்கும்) விளங்காநின்ற, அணையும்-பாயலும், அல்லால்-அல்லாமல், பிறர்-மற்றொருவரும், அறியாமல்-அறியாதிருக்க, உள்ளத்து (தன்) மனத்தின்கண், அடக்கினன்-மறைத்தான், எ-று.

வெண்மைதண்மைகளாலே-சந்திரன் சயனத்திற்கு முபமானமாக்கப்பட்டது. இரவும் அணையும் உணர்வில் பொருள்களாயினும் "உறுப்புடையதுபோ லுணர்வுடையதுபோன், மறுத்துரைப்பதுபோ னெஞ்சொடு புணர்த்துஞ், சொல்லா மரபினவற்றொடு கெழீஇச், செய்யாமரபிற்றொழிற்படுத்தடக்கியும்" என்னும் பொருளியற் சூத்திரவிதியால் உணர்தற்றன்மையை அவைவற்றிலேற்றினர். காலமு மிடமுமாகிய கங்குலிலே படுக்கையின்கண் வருந்தினமையா லவையறிந்தனவாகக் கூறப்பட்டன.

(க-து.) மன்மதபாணத்தாலுண்டான துன்பத்தை நளமகாராஜன் பிறரறியாமலடக்கினான்-எ-ம். 17

தளர்வொடுமெலிந்தும்மையந் தனிக்குடைநிழற்றும்பைம்பொற்
கிளரொளிப்பூணன்வீமன் பாவையைக்கேட்டல்செய்யா
னளியெனவுயிரையுண்மை யறத்தினையறவிட்டானு
மிளியெனவெண்ணிமானம் பூண்டவரிரப்பர்கொல்லோ.

[இதனால் தமயந்தியைத் தருகவென்று இரவாமைக்குக் காரணஞ்சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) வையம்-பூமிக்கு, தனி-ஒப்பற்ற, குடை-குடையினாலே, நிழற்றும-நிழலைத்தருகின்ற, பைம்பொன்-பசும்பொன்னாலாகிய, கிளர் - விளங்காநின்ற, ஒளி - ஒளியையுடைய, பூணன் - ஆபரணத்தையுடைய வரசன், தளர்வொடு (உள்ளத்) தளர்ச்சியோடு, மெலிந்தும் (உடம்பு) வாடியும், வீமன்-வீமராஜனுடைய, பாவையை (புதல்வியாகிய) தமயந்தியை, அளியென - தருகவென்று, கேட்டல்செய்யான் (அவனை) யாசித்திலன், இளிவன (ஏற்ப) திகழ்ச்சியென்று, எண்ணி-நினைத்து, மானம்-மானமாகிய (பூணை) பூண்டவர்-தரித்தவர், உயிரை-பிராணனையும், உண்மை, பின்னுள்ளதாகிய, அறத்தினை தருமத்தையும், அற-பற்றற, விட்டாலும் - விட்டாலும், இரப்பர்கொல்-இரப்பரோ (இரவார்) எ-று.

பின்மெலிந்தென்றமையால், தளர்வுமனத்திற் கேற்றப்பட்டது. அளியினையுயிரை யெனப்பாடங் கூறுவாருமுண்டு. அளியும் - அறத்தினுளடங்குமென்க. உயிர்பஞ்சப்பிராணன்கள். பிராணன்களை யிழந்தபின்னு மழியாது நிற்றல்பற்றி உண்மையறமென்றார். பல துன்பங்களினு மறத்தற் றுன்பமும், அதனினும் அறத்தையிழத்தற் றுன்பமும், அதனினும் இரப்புத்துன்பமுங், கொடியனவென்று கூறியதாயிற்று. "ஆவிற்குநீரென் றிரப்பினு நாவிற்கிரவி னிளிவந்ததில்" என்பதனாலும் இரத்தல் இழிவென்பதறிக. [மானம்பூண்டவரிரவாரென்னும் பொதுப்பொருளால் வீமன்பால் தமயந்தியை இரவாமை சாதிக்கப்படுதலரல், வேற்றுப்பொருள் வைப்பணியாம்.

(க-து.) மானமுள்ளவர் இரவார்போல நளமஹாராஜன் வீமராஜன் மகளைக் கேளான்-எ-ம். 18

நிறங்கிளர்வயிரத்தோளா னெட்டுயிர்ப்பெறியுந்தோறும்
பிறங்குதல்சிறிதுமின்றி வேறொன்றான்மறைக்கும்பெட்பான்
மறங்கிளர்வேற்கண்மாதி னுருவெளிவயத்தனுக்கிக்
கறங்கினெஞ்சுழலவன்னாட் குறைப்பதுரக்கமாட்டான்.

[இதனால்காமநோயை மறைக்குமாறும் அது உன்மாதத்தாலே மறைபடாமையுஞ் சொல்லப்படுகின்றன.]

(இ-ள்.) நிறம்-காந்தியினாலே, கிடர்-விளங்காநின்ற, வைரம் - வச்சிராயுதம்போலும், தோளான்-தோள்களையுடைய அரசனானவன், நெட்டுயிர்ப்பு-பெருமூச்சை, எறியுந்தோறும் - விடும்போதெல்லாம், பிறங்குதல் (அவற்றின் காரணமாகிய காமம்) வெளிப்படுதல், சிறிதும்-சிறிதாயினும், இன்றி-இல்லாமல், வேறொன்றால் - வேறொருகாரணத்தால், மறைக்கும் (பிறருக்கு அதனை) மறைப்பான், மறம்-வீரத்தன்மையினால், கிளர் - விளங்காநின்ற, வேல்-வேல்போலும் கண்களையுடைய, மாதின் - தமயந்தியினது, உருவெளி (பிராந்தியால்) வெளியிலேதோன்றுகிற வுருவத்திற்கு, வயத்தனாகி-வசப்பட்டவனாகி, கறங்கின்-காற்றாடிபோல, நெஞ்சு-மனமானது, உழல-சுழல, அன்னாட்கு-அப்

பொய்யாகத் தோன்றுகிற தமயந்திக்கு, பெட்பால் - ஆசையால், உரைப்பது-சொல்வதைமாத்திரம், கரக்கமாட்டான், எ-று.

நெட்டுயிர்ப்பென்னுது நெட்டுயிர்ப்பொறியுந்தோறுமென்றதனுல்,அங்கிலுள்ள மந்திரிமுதலியோர்க்கு ஒருகாற்கொன்றுக வேறுவேறு காரணந்தோன்ற அபினயித்து அவற்றின் காரணமாகிய காமத்தை மறைப்பானென்க. வேறுகாரணங்களாவன-பகைவர்மேற் கோபஞ்செய்கை முதலியனவாம்- அப்படி மறைக்க வல்லவனுயிருந்தும் பிராந்தியினுலே தமயந்தி யுருவவளியாகக் காணப்படுந்தோறும் அவள் வசப்பட்டுத் தன்னைமறந்து நிற்கையினுலே, அவளுக்குச் சொல்வதைமாத்திர மறைக்கமாட்டானுயினு னென்க. அவளுக்குச் சொல்வதாவது - அவளழகின் சிறப்பையும், அதுபற்றித் தனக்குண்டான விருப்பத்தையும், அவ்விருப்பங் காரணமாகத் தான்படும் வருத்தத்தையும், அவ்வருத்தத்தை யொழித்தற்கு அவளிரக்கஞ்செய்ய வேண்டுதலையுஞ் சொல்லுதலாம். [காமங் காரணமாக வுண்டாகும் பெருமூச்சுகளை வேறுகாரணங்களாலே மறத்தலையால், வஞ்சநவிற்சி யணியாம்.]

(கு-து.) பிறரறியாமல் காமத்தை மறைக்கும் நளமகாராஜன் உருவெளித்தோற்றத் தமயந்தியோடு பேசுவதை மறைக்கமாட்டான்-எ-ம். 19

பொறிவழியுள்ளம்போக்காப் புரவலன்காமநோயை
மறைசெயமறையாதாக மம்மரினுணுட்கொள்ளா
வறைகழலவனிவேந்தர் நெருங்குபேரவையினீங்கி
நறைகமழ்சோலைசெல்வா னுளத்தினினயத்தல்செய்தான்.

[இதுமுதலியவற்ருல் தன்விருப்பங் கைகூடுதற்கு உதவியாகுந் தெய்வவன்னத்தைக் காணுதற்குக் காரணமாகிய பொழில்விளையாட்டுச் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) பொறி-ஐம்பொறிகளது, வழி-வழியிலே, உள்ளம்-மனத்தை, போக்கா-செலுத்தாத, புரவலன்-அரசனுனவன், காமநோயை-காமவியாதியை, மறைசெய (வேறுகாரணங்களால்) மறைக்க, மம்மரின்-உன்மாதத்தினுலே, மறையாதாக-மறையாமலும் வெளிப்பட்ட, நாண்-நாணத்தை, உட்கொள்ளா-உள்ளேகொண்டு, அறை-ஒழிக்கின்ற, கழல்-வீரக்கழலையுடைய, அவனி-பூமியிலுள்ள, வேந்தர்-அரசர்களானவர்கள், நெருங்கு-நெருங்கப்பெற்றிருக்கின்ற, பேரவையின்-பெரியசபையினின்றும், நீங்கி-நீங்கி, நறை-தேனுனது, கமழ்-மணக்கப்பெற்ற, சோலை (தனது) சிங்காரவனத்திற்கு,செல்வான் போகும்படியாக, உளத்தினில்-மனத்தின்கண், நயத்தல் செய்தான் (அவன்) விரும்பினுன், எ-று.

பொறி வழி உள்ளம் போக்காமையாவது, மனத்தை அது விரும்பியவாறு பொறிகளிலே செலுத்தாது நிறுத்தலாம். முன் பாட்டிலே வேறொன்ருன் மறைக்கு மென்றதனுலே காமநோயை மறைக்குமாறுமை, உரைப்பது கரக்க

மாட்டானென்றதனுலே அது வெளிப்படுமாறும், வருத்துச் சொல்லப்பட்டமையால்; இப்பாட்டிலே மறைசெயமறையாதாகவெனத் தொகுத்துக் கூறினர். அறைகழலவனிவேந்தர் நெருங்குபேரவையாகலின், அதனகத்தே தனது காமநோய் வெளிப்படுதல் தன்னிறைமைக்குணங்களுக் கிழுக்காமென்று நாணினனென்க. அந்நாணம் பிறர்க்கு வெளிப்படாதுஉள்ளேதானே யடக்கப்பட்டதென்பது தோன்ற, நாணியென்னுது நாணுட்கொள்ளா வென்ருர்.

(க-து) நளமஹாராஜன் காமத்தை மறைக்க மறைக்க அக்காமம்வெளிப்பட வெட்கங்கொண்டு சபையைவிட்டு நந்தவனத்துக்குப்போகவிரும்பினன்-எ-ம் 20

கொட்புறவுலவுந்தோறுங் குரத்தடைத்துகளின்குப்பை
நட்புமாரணுக்களென்னு நுவலருமனத்தின் கூட்டங்
கட்புலன்கதுவல்செல்லாக் கடுப்பிணைக்கற்பான்காலைப்
பெட்புறப்பிடித்தல்போலப்பிறங்குமாநீகொணர்மினென்றுன்.

[இதனுல் குதிரைகொணர்கவென்றமை கூறப்படுகின்றது.]

(இ-ள்.) கொட்புற-சுழற்சிபொருந்த, உலவுந்தோறும்-சஞ்சரிக்குந்தோறும், குரத்து-குளம்புகளினின்றும், இடை (கால்களை) யடைகின்ற,துகளின்-புழுதியினது, குப்பை-கூட்டமானது, கட்புலன்-கண்ணறிவிற்கு, கதுவல்செல்லா-பற்றுதல் கூடாத, கடுப்பினை-வேகத்தை, கற்பான்-கற்கும்பொருட்டு, காலை-கால்களை, பெட்புற-ஆசைமிக, பிடித்தல்-பிடித்தலையுடைய, நட்பமார்-நண்மைபொருந்திய, அணுக்களென்னும்-அணுக்களென்கிற, நுவலரும்-சொல்லக்கூடாத, மனத்தின்-மனங்களது, கூட்டம்-கூட்டத்தை, போல-ஒத்துத்தோன்றுநிற்க, பிறங்கு-விளங்குகின்ற, மா-குதிரையை, கொணர்மின்-கொண்டு வாருங்கள், என்ருன்-என்று சொன்னன் (அரசன்) எ-று.

கொட்புறவுலவல்-கொள்ளிவட்டம்போன்று மண்டலித்துச் செல்லுதல். "இருவகைச்சாரியு மெதிர்ந்துவட்டமாய், வருவழிஞெகிழ்போன் மறுகெலாமொரு, துரகதமேநிலை நின்றதோற்றமெத், தொருவறநடத்தினு ரொருகணத்தினே" என்பதிற்காண்க. நீமாயநூலார் மதம்பற்றி மனத்தை யணுவென்ருர். "இன்பமுதலிய பண்புறத்தருஉங், கருவியாம் பொறி மனமம்முயிர்தோறு, நின்றியமையாது வேண்டலிற்பலவா, யணுவாய்நிற்கு மென்மனர்புலவர்" என்பதனுலறிக. போலுதல்-துகளின் செயல். பிறங்குதல்-குதிரைச்செயல். ஆசிரியனைத் தொழுது கற்கவேண்டுதல்-மாணக்கரது கடனுதலாலே, கற்பான்காலைப் பெட்புறப் பிடித்தலென்ருர். [அத்துகளின் கூட்டத்தை அப்படிபட்ட மனக்கூட்டமாகக் குறித்தலாலே, பொருட்டற் குறிப்பணியாம்.]

(க-து.) நளன் குதிரையைக் கொண்டு வாவென்ருன் எ-ம். 21

பன்னகஞ்சுமந்தவைப்போர் தோளினிற்பரிக்குமன்னர்
மன்னனைப்பரிப்பல்யானே வருகதிரிரவிதன்னை
யென்னைநீர் தாங்குமாறென் றேழ்பரியினைநக்கென்ன
மின்னொளிவிரிக்கும்வெண்பற்கூந்தன்மாமேற்கொண்டானே,

[இதனால் அக்குதிரைமேலேறினமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) பன்னகம்-ஆதிசேஷனாலே, சுமந்த (ஆயிரந்தலைகளாலே சுமக்கப்படுகின்ற), வைப்பு-பூமியை, ஓர் தோளினில் (தன) தொருதோளினாலே, பரிக்கும்-தாங்குகின்ற, மன்னர்மன்னனை-அரசர்க்கரசனை, யானே-நான் தனியாக, பரிபல்-சுமக்கவல்லேன், வரு வருகின்ற, கதிர்-கிரணங்களையுடைய, இரவிதன்னை- சூரியனை நீர் (பலவாகிய) நீங்கள், தாங்குமாறு-தாங்குஞ்செய்கை, என்னை-எத்தன்மைத்து, என்று-என்று (பழித்து( ஏழ்பரியினை (அச்சூரியனது தேரினுடைய) ஏழுகுதிரைகளைப் (பார்த்து) நக்கென்ன-சிரித்தல்போல, வெண்பல்-வெள்ளைப்பற்களது, மின்- விளங்காநின்ற, ஒளி-ஒளியை, விரிக்கும்-பரப்புகின்ற, கூந்தல்-புறமயிரையுடைய, மா-குதிரையின் மல், மேற்கொண்டான் (அரச) னேறினன், எ- று

பன்னகஞ்சுமந்தவென்ற வளவிலே ஆயிரமுடிகளாற் சுமத்தப்படுதல் விளங்குதலால், அப்படிப்பட்ட பூமிபாரத்தை ஒருதோளாற் சுமக்குமரசனையான் றனியே சுமக்கின்றேனென்று தனது மிக்கவலிமையைக் காட்டி, அப்படிப்பட்டவனல்லாத சூரியனை நீங்களேழாகக்கூடிச்சுமக்குமாறென்னென்று அச்சூரியன் குதிரைகளின் வலிமைக்குறைவைச் சொல்லுதற் பொருண்மை தோன்ற அவமதித்துச் சிரித்தல் கொள்க. அரசன் ஓர் தோளிற்பரித்தலாவது, ஒருதோள் வலியைக்கொண்டு பகைவரைவென்று காப்பாற்றுதலாம். பரித்தல் சுமத்தலுக்குஞ் சிலேடை 'பரிபரிசமத்தல் வேகம்பாதுகாத்திடல்'' இதனாலறிக. சூரியனது தேர்க்குதிரைகள் ஏழென்னுந் தொகையினவன்றி ஏழெனப்பெயர் பெற்ற குதிரையொன்றே யென்றென்பாரும் உளர். நக்கலென்பது - சுறுகெட்டது. குதிரையின் பல்லொளி விரித்தலை அப்படிச் சிரித்தலாகக் குறித்தலாலே, தற்குறிப்பணியாம்.

(க-து.) நளமகாராஜன் அக்குதிரைமேலேறினன் எ-ம். 22

கொய்யுளைப்பரியிற்செல்லுங்குரிசில்வாண்முகத்திற்செவ்விச்
செய்யபங்கயமென்றெண்ணித் தெரிவையர்முகத்துலாய
வையரிபரங்கண்மைக்கணளியினந்தொடர்ந்துவீழ
மையலங்களிற்றுவேந்தர் மலரடிபரவச்சென்றான்.

(இ-ள்.) கொய்-கொய்யப்பட்ட, உளை-கழுத்துமயிரை யுடைய, பரியில்-குதிரையில், செல்லும்-போகாநின்ற- குரிசில்-அரசனது, வாள்-காந்திபொருந்திய, முகத்தில்-முகத்தில், செவ்வி-பருவமுள்ள, செய்யபங்கயமென்று- செந்தாமரைப் பூவென்று, எண்ணி (அதனை) நினைத்து, தெரிவையர் - மங்கையரு

டைய, முகத்த-முகங்களிலே, உலாவ-உலாவுகின்ற, ஐயரி-பஞ்சவரிகள், பரந்த-பரவப்பெற்ற, மை-அஞ்சானத்தையுடைய, கண்-கண்களாகிய, அளி-மண்டுகளது, இனம் - கூட்டமானது, தொடர்ந்து - சென்று, வீழ-விழாநிற்கவும், மையலங்களிற்று-மதயானைபோலும், வேந்தர் - அரசர்களானவர்கள், மலர்-தாமரைமலர்போலும், அடி-பாசங்களை, பரவ - துதிசெய்யாநிற்கவும், சென்றான் (அரசன்) போயினான், எ-று.

பிடரியின் மயிர்கள் ஒன்றற்கொன் றளவொத்திருப்பக் கத்தரிக்கப்படுதலால்; கொய்யுளை யென்றார். தெரிவையர்-உலாக்காணவந்த அந்நகரத்து மகளிரென்க. நாணுட்கொண்டு வேந்தர் நெருங்கு பேரவையினீங்கித் தனித்திருக்க வனத்திற் செல்வானோடு வேந்தர் உடன் செல்லுதற்கு இயையுமோவெனின், மன்னர்மன்னனுகலின் வழிவிடச் சென்றாரென்க. அல்லது-நளனுக்கு உயிர்போலச்சிறந்த நட்பரசரெனறு கொள்க. [கண்ணளியினமென்னும் உருவகத்தை அங்கமாகக்கொண்டு செய்யபங்கயமென் றெண்ணியென்னு மயக்கவணி வந்தது.]

(க-து.) நளமகாராஜன் அரசர்கள் வணங்கச் சோலையிற் சென்றா-எம். 23

சுழிகொள்வாம்பரிவீழ்ந்து துன்னலர்மௌலிதேய்க்கும்
கழல்களிற்கழல்கள்சேர்த்த காட்சிமுன்வெருவித்தோற்ற
தழனிறத்தளிருஞ்செய்ய தாமரைமலருமல்கி
விழைவுறுவனமென்றெண்ணி விசித்தபொற்கவசம்போன்ற.

[இதனால் வனஞ்சேர்ந்தமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) சுழி-சுழியை, கொள்-கொண்ட, வாம்-தாவாநின்ற, பரி-குதிரையிலிருந்து, இழிந்து-இறங்கி, துன்னலர்-பகைவரது, மௌலி-மகுடத்தை தேய்க்கும்-தேய்க்கின்ற, கழல்களில்-அடிகளிலே, சேர்த்த-தொடுக்கப்பட்ட, கழல்கள்-செருப்புகளானவை, காட்சி-காண்கைக்கு, முன்-முன்னே, வெருவி-அஞ்சி, தோற்றுப்போன, தழல்-தீயினது, நிறம்-நிறத்தையுடைய. தளிரும்-தளிர்களும், செய்ய்தாமரைமலரும் - செந்தாமரைமலர்களும், மல்கி-பெருக்கமடைந்து, விழைவுறு (அவற்றாலே தமக்கரணமாக) விரும்பப்பட்ட, வனமென்று-பொழிலென்றும், நீரென்றும், எண்ணி - ஆலோசித்து, விசித்த (அவ்வடிகளால்) போர்த்துக் கொள்ளப்பட்ட, பொன்-பொன்மயமாகிய, கவசம்-கவசங்களை, போன்ற- ஒத்திருந்தன, எ-று.

சுழி - கழுத்திலுள்ளது; அதற்குத் தேவமணியென்று பெயர். தோற்றவர் வனத்தையடைவாராதலால், அரசனடிகளுக்குத் தோற்ற தளிர்களுக்குந் தாமரை மலர்களுக்கும் வனவாசங் கூறப்பட்டது. தழனிறத்தளிரென்றதனால், மாந்தளிர் அசோகந்தளிரென்க. தோற்றொளித்தாரோடு பொருதற்குச் செல்ல அறநிலைப்போரன்றேயெனின், அவர், தோற்றநிலையினின்று மீண்டும் பெருக்கமடைந் திருப்பராயிற் பொருதல் அறநிலைப்போரேயாம்,

அவற்றிற்குப் பெருக்கமாவது, நிலவளத்தாலும் நீர்வளத்தாலுஞ் செழுமையு மொளியுங் கொண்டிருத்தலாம். வனஞ்-சோலைநீரும், "வனமே நீர்மிகுநிகா வெளர் சோலை" என்பதனாலறிக. [அக்கழல்களை அப்படிப்பட்ட கவசங்களாகக் குறித்தலாலே, பொருட்டற் குறிப்பணியாம்.]

(க-து.) கால்களிலணிந்த செருப்புகள் கவசங்களை ஒத்திருந்தன-எ-ம்.

வயிரியர்பாடற்றீந்தேன் செவிப்புலத்தினிதுமாந்திக்
கயிரவமனையவாயார் கவரிகாலசைப்பங்காமப்
பயிரெனப்படருமாதர் வெள்ளடைப்பாகுநல்கச்
செயிரறுவனங்காப்பாளர் செறிவளங்காட்டக்கண்டான்.

[இதுமுதல் இரண்டுபாட்டால் வனங்காண்கின்றமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) வயிரியர் - பாடகரது, பாடல் - பாடலாகிய, தீந்தேன் - மதுரத் தேனை, செவிப்புலத்து-செவியறிவாகிய (வாயி) னாலே, இனிது - இனிதாக, மாந்தி-குடித்து, கயிரவமனைய - செவ்வல்லிமலர்போலும், வாயார் - வாயையு டையமாதர்கள், கவரி-சாமரத்தினாலே, கால்-வாயுவை, அசைப்ப- எழுப்பவும் காமப்பயிரென-மன்மதனது பயிர்போல, படரும்-உடன் செல்கின்ற, மாதர்- மாதரானவர், வெள்ளடை-வெற்றிலைச் சுருளையும், பாகும்-பாக்குப்பிளவையும் நல்க-கொடுக்கவும்; செயிரறு-குற்றமற்ற, வனம்-வனத்தை, காப்பாளர்-காப்ப வர், செறி - நெருங்கிய, வளம் (சோலை) வளத்தை, காட்ட - காண்பிக்க, கண் டான் (அரசன்) பார்த்தான், எ-று.

சாமப்பயிரில் கிலைமொழி ஈறுகெட்டது; ஆசீவகப்பள்ளியிற்போல. அது காளையர்க்கு இன்பப்பயன் விளைவித்தற்குக் காமனால் வளர்க்கப்பட்ட பயி ரென்க. வனபாலகரைக் கொண்டே உலகபாலகர் வனச்சிறப்புகளை முறை யிற்பார்க்க வேண்டுதலாலே, காட்டக்கண்டானென்றார்.

(க-து.) காவலாளர் வனவளப்பத்தைக்காட்ட நளன் கண்டான்-எ-ம்.

கோங்கிளமுலைகடாங்கிக் கொடியிடைதுடங்கக்கூவு
மாங்குயிற்கிளவிதன்னால் வருகெனமுகமன்கூறித்
தேங்கமழ்வனமான் புன்னைப் பூம்பொரிசிதறிச்செவ்வி
தாங்குமென்றளிர்க்கைதன்னாற் கனிதரத்தகவிற்கண்டான்.

(இ-ள்.) தேம்-பரிமளமானது, கமழ் (தன்கண்) மணக்கின்ற, வனமான்- அவ்வனமாகிய மங்கையானவள், கோங்கு-கோங்கரும்புகளாகிய, இளமுலை கள்-இளமைபொருந்திய முலைகளை, தாங்கி-சுமந்து, கொடி-பூங்கொடியாகிய இடை-இடையானது, துடங்க-அசைய, கூவும்-கூவுகின்ற, மா-மாமரத்திலிரு க்கின்ற, குயில்-கோகிலத்தினது, கிளவிதன்னால்-இசையினாலே, வருகென (அரசனே) வாவென்று, முகமன்-இன்சொல்லை, கூறி-சொல்லி, புன்னையினு டைய, பூ-மலர்களாகிய, பொரி-பொரிகளை, சிதறி-இறைத்து, செவ்வி-அழகை தாங்கு-தாங்கிய,மென்றளிர்-மெல்லிய, தளிராகிய, கைதன்னால்-கையினாலே,

கனி-பழத்தை, தர (தனக்குக்) கொடுத்த, தகவின்-தகுதியாக, கண்டான்(அரசன்) பார்த்தான், எ-று.

தன்வரவைக்கண்ட அளவிலே முலைகளின் பாரத்தைச்சுமந்த இடையசையாநிற்க அன்பிற் கடையாளமாக நல்வார்த்தைசொல்லி மங்களத்தின் பொருட்டுப் பொரியிறைத்துக் காணிக்கையாகக் கனிகொடுத்துக் காண்கின்ற ஒரு சுமங்கலைபோல, வனமானது கோங்கரும்புகளைத் தாங்கிக் கொடியசையாநிற்பக் குயிற்சொற்களைக்காட்டிப் புன்னைப்பூக்களை யிறைத்துத் தனிநிடைத் தொங்குகின்ற கனியைத்தருகின்றதுபோலத்தோன்ற அரசன்காணற்குரிய தகுதியின்படி கண்டானென்க. [வனமுதலியவற்றில் மான் முதலியவற்றின் அபேதத்தை யாரோபித்தலாலே, உருவக வணியாம்.]

(க-து-) வனமென்னும்பெண் கனிகொடுக்க நளன் கண்டான்-எ-ம்.

அரும்பிளநகையிற்றோன்ற வழிநறுவெயர்விற்றோன்றச்
சுரும்பிமிர்முல்லைவீசுந் தென்றலாற்றுவளுந்தோற்றம்
விரும்பினர்ப்புணர்ந்தமாதர் மெய்யெழில்காட்டக்கண்டு
பொருந்தலர்வணங்கும்வேலாற் கச்சமுமகிழும்பூத்த.

[இதுமுதற் பத்துபாட்டுகளால் வனத்தின்கண் முல்லையாதிகளின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்-) அரும்பு-அரும்புகளி (னொளி) இளநகையின்-சிறுநகைபோல, தோன்ற-விளங்கவும், அழிநறு-சிதறியதேன் (துளிகள்) வெயர்வின்-வெயர்வு போல, தோன்ற-தோன்றவும், வீசும்-எறிகின்ற, தென்றலால்-தென்காற்றால், துவளும்-அசைகின்ற, தோற்றம்-தோற்றத்தையுடைய, சுரும்பு-வண்டுகள், இமிர்-ஒலிக்கப்பெற்ற, முல்லை-முல்லைக்கொடியானது, விரும்பினர்-விரும்பிய ஆடவரை, புணர்ந்த-கூடிய, மாதர்-மாதருடைய, மெய்-வடிவங்களது, எழில்-அழகை, காட்ட-காண்பிக்க, கண்டு (அதனைப்) பார்த்து, பொருந்தலர்-பகைவரானவர், வணங்கும் தொழப் பெறுகின்ற, வேலாற்கு-வேலையுடைய அரசன்கண், அச்சமும்-அஞ்சுதலும், மகிழும்-மகிழ்தலும், பூத்த-உண்டாயின, எ-று.

அரும்பு அதனொளியை யுணர்த்தலால், ஆகுபெயர். [illegible] புணர்ந்த மங்கையர்க்கு உடனே பிறரைக் காணும்பொழுது தமது புணர்ச்சி நிகழ்ந்ததை குறிகளாலே வெளிப்படுமென்று நாணத்தாற் புன்சிரிப்பும், புணர்ச்சி வருத்தத்தால் வெயர்வும், உடம்பு துவளுதலும், வண்டிசைபோன்று சொல்லிசைபிறத்தலும், உளவாமென்க. தனது காமத்தை யெழுப்புதலால் அச்சமும், தன் காதலி போலுதலால் மகிழும், அரசனடைந்தனன். அச்சமு மகிழும் அகத்தியும் வகுளமும் பூத்தனவென்னும் பொருளுங் குறிக்கப்படுகின்றது. [முல்லைக்கொடி தன் செய்கையினாலே புணர்ந்தமகளிர் வடிவத்தழகைக் காட்டுதலால், நட்பொருட் காட்சியணியாம்.] இதற்கு இளநகையிற் றோன்றுகைமுதலிய உவமை யங்கம்,

(க-து) முல்லைக்கொடியானது புணர்ந்தமாதரைப்போலுங்குறிகள்காட்டநளனுக்கு அச்சமுமகிழும் உண்டாயின. 27

விரும்பியகணவர்க்கண்டார் மெய்புளகுற்றவென்ன
வரும்புகண்டகத்தவாகு மாதுளைபருவத்தன்றித்
தரும்புகையிடையிற்றோன்றுங் கனிதமயந்திகொங்கைக்
குரும்பையைநிகர்ப்பப்பொன்னங் குடந்தவமுயல்வபோன்ற.

(இ-ள்.) விரும்பிய (தம்மால்) விரும்பப்பட்ட, கணவர்-நாயகரை, கண்டார்-கண்டமகளிருடைய, புளகுற்ற-மயிர்க்குச்செறிந்த, மெய்யென்ன, உடம்புகள்போல, அரும்பு-அரும்பிய, கண்டகத்தவாகு முள்ளுகளையுடையனவாகிய, மாதுளை-மாதுளைமரங்களில், பருவத்தன்றி (பழுத்தற்குரிய) காலமல்லாத காலத்திலே, தரும் (பழுக்கத்) தரப்படுகின்ற, புகை-புகையினது, இடை-நடுவிலே, தோன்றும்-தோன்றுகின்ற, கனி-கனிகளானவை, தமயந்தி-தமயந்தியினுடைய, கொங்கை-முலைகளாகிய, குரும்பையை-குரும்பைகளை, நிகர்ப்ப-ஒப்படைய, தவம்-தவத்தை, முயல்வ-செய்கின்றனவாகிய, பொன்னங்குடம்-பொற்குடங்களை, போன்ற-ஒத்துத் தோன்றின (அரசனுக்கு) எ-று.

விரும்பிய கணவரைக்கண்ட மகளிர் மெய்யிற் புளகரும்பல், உவகையைப்பற்றி யுண்டாவது. மாதுளைக்குரித்தல்லாத வேறுபருவத்திலே அதிற்பயனுண்டாக்கவேண்டி ஆட்டுத்தோலூற நீர்ப்பாய்ச்சி அதன் மயிர்ப்புகையூட்டப்படுமென்க. மாதுளங்கனிகள் தமயந்தி முலைகளின் சாரூப்பியத்தைப்பெறுதற்குப் புகைத்தீயினிடைத் தலைகீழாகநின்று தவஞ்செய்யும் பொற்குடம்போலிருந்தனவென்க. பெரும்பயன் வேண்டினோர் உக்கிரதவஞ் செய்வரென்க. [அம்மாதுளங் கனிகளை அப்படிப்பட்ட பொற்குடங்களாகக் குறித்தலாலே, தற்குறிப்பணியாம்.]

(க-து.) மாதுளங் கனிகளானவை தமயந்தி முலைகளை ஒப்புறத்தவம்பண்ணும் பொற்குடங்களை ஒத்திருந்தன-எ-ம். 28

தண்ணறுக்கொழிக்குஞ்செய்யசண்பக நனைகள்வேனி
லண்ணல்பாசறைவிளக்கம் போன்றன வவைமேல்வண்டு
நண்ணியதூமம்போன்று நகையுநர் துயரவேளீட்
டெண்ணறும்பகழிபோன்றுந் தனித்தனி யிருந்தமாதோ.

(இ-ள்.) தண்-குளிர்ச்சிபொருந்திய, நறு-தேனை, கொழிக்கும்-சொரிகின்ற, செய்ய-சிவப்பாகிய, சண்பகம்-சண்பகத்தினுடைய, நனைகள்-அரும்புகளானவை, வேனில்-வசந்தகாலத்திற்குரிய, அண்ணல்-தலைவனது, பாசறை (சோலையாகிய) படைவீட்டினுள்ளே வைக்கப்பட்ட, விளக்கம்-தீபங்களை, போன்றன-ஒத்திருந்தன, அவைமேல்-அவ்வரும்புகளின்மேலே, வண்டு(விழுகின்ற) வண்டுகளானவை, நண்ணிய-பொருந்திய, தூமம்-புகையை, போன்றும்

ஒத்தும், நசையுனர் -காமிகள், துயர-துன்பமுற, வேள்-மன்மதனால், ஈட்டு-சம்பாதிக்கப்பட்ட, எண்ணரு-எண்ணுதற்கரிய, பகழி-பாணங்களை, போன்றும்-ஒத்தும், தனித்தனி-வேறுவேறாக, இருந்த-இருந்தன (அரசனுக்கு)எ-று.

சண்பகமும் வேங்கையும் வண்டுறுமலர்மரமெனவிருக்கச், சண்பகத்தின் மேல் வண்டுசேர்ந்ததாகச் சொல்லிய தென்னையெனின்; அதற்கு வண்டு சேர்ந்து தேனை யுண்டாலிறந்து படு மெனப மேத கருத்தாதலின், மற்றை மலர்போலஅதன் கண்ணுஞ் சேருமென்க. மன்மதனுக்குப்படைவீடுசோலையே யாகலின், வெனிலண்ணல் பாசறையென்றார். "தொடையிலஞ்சி மஞ்சளிளஞ்சோலை படைவீடு" என்பதனாலறிக. [சண்பக வரும்புகளை மன்மதன் படைவீட்டில் விளக்குகளாகவும், அவ்வரும்புகளின் மேல் மொய்த்தவண்டுகளை அவ்விளக்குகளின்மேற்றங்கிய புகைகளாகவும்பகழிகளாகவும் குறித்தலாலே, தற்குறிபணியாம்.] பகழியாகக் குறித்ததற்கு நசையுனர் துயரவென்னும் உருவகம் அங்கம்.

(க-து.) சண்புகத்தரும்புகளானவை தீபங்களை ஒத்திருந்தன அவ்வரும்புகளின்மேல் மொய்த்த வண்டுகளானவை புகைகளையும் மன்மதபாணங்களையும் ஒத்திருந்தன எ-ம். 29

பூங்கழைக்குமரனேவாற் புலம்புகொண்டினை வார் துன்ப
மாங்குயி லுரைப்பமூசும் வரியளிமுரல்வ வாசத்
தேங்கமழ்பொழில் வாய்விட்டுக் கேட்பது சிவனும் கூறு
மாங்கதற்கன்றிலோதை யதிசயித் தரற்றல்போலும்.

(இ-ள்.) பூ-அழகிய, கழை-கருபபுவில்லையுடைய, குமரன்-மன்மதனது, ஏவால்-அம்பினாலே, புலம்பு-துன்பத்தை, மா-மாவிலுள்ள, குயில்- குயில்கள், உரைப்ப- சொல்லாநிற்க, வரிமுரல்வ-இசை பாடுவனவாகிய, மூசும்-மொய்க்கின்ற, அளி-வண்டுகளுக்கு, வாசம-இருப்பிடமாகிய, தேம்-தேனினாலே,கமழ் மணக்கின்ற, பொழில்-சோலையானது, வாய்விட்டு-உவகொத்து, கேட்பது சிவனும்-கேட்பதுபோலுமிருந்தன, கூறும்-சொல்லப்படுகின்ற, ஆங்கு-அவ்விடத்தே, அதற்கு-அச்செய்திக்கு, அன்றில்-அன்றிற்பறவைகளுடைய, ஓதை-ஒலிகளானவை, அதிசயித்து-ஆசசரியப்பட்டு, அரற்றல்போலும்-கூவுதல்போலுமிருந்தன (அரசனுக்கு) எ-று.

குயிலுரைப்ப வென்றோனுக், குயிலினது கூவுதல் அதனைதுரைத்தல் போலத் தோன்றாநிற்பவென்பது பொருளாகக்கொள்க. இடைவிடாது நிகழும் வண்டொலி இடைவிட்டு நிகழும் உவகொலித்தல்போலுதற் கியையுமோவெனின், அவ்வண்டினது சிற்றொலி குயிலினது பேரொலியில் இடையிடை மறைத்து அங்ஙனந் தோன்றுதலா லியையுமென்க. திட்பமில்லாத கரும்புவில்லையுடைய வனப்பால் வருந்துதல் ஆச்சரியத்திற்குக் காரணமாமென்க. குயில்களைச் சொல்வனவாகவும் வண்டுகள் பாடுஞ் சோலையைக் கேட்பதாக

வும் அன்றில்களின்ஒலிகளை அவற்றினதிசயவெலிகளாகவும் குறித்தலாலே, தற்குறிப்பணியாம்.]

(க-து.) காமிகள் துன்பத்தைக் குயில்கள்சொல்ல, வண்டுகள் பாடுஞ் சோலை கேட்பதுபோலுமிருந்தன. அன்றில்கள் சத்தங்கள் அதிசயித்தார்ப் பனபோலுமிருந்தன எ-ம். 30

வெண்மதிக்கவிகைவேந்தன் விழாவயர்வனமான்பைந்தாட்
டண்மலர்க்காந்தளங்கை மறித்தளித்தைவபோன்ற
மொண்மலர்ப்பொதுளுந்தேமா தளிர்விரலசைத்துள்ளூறுங்
கண்ணுகர்வண்டினார்ப்பாற் காமுகர்ச்சினவல்போலும்.

(இ-ள்.) வெண்மதி-வெள்ளிய சந்திரனை, கவிகை - குடையாகவுடைய, வேந்தன்-மன்மதனது, விழா-உற்சவத்தை, அயர்-செய்தற்கிடமாகிய, வனமான்-வனமாகிய மங்கையை, காந்தள்-காந்தள்களானவை, பைந்தாள் - பசிய காம்பை டைய, தண்மலர்-தண்ணியமலர்களாகிய, அங்கை-அழகிய கைகளாலே, மறித்து (அச்செய்தியைக் கேளேலென்று) தடுத்து, அளி-கருணையினாலே, ததைவபோலும்-நிறைகின்றனபோலும், ஒண்மலர்-ஒள்ளியமலர்களாலே பொதுளும்-நிறைந்திருக்கின்ற, தேமா-தேமாமரங்களானவை, தளிர்-தளிராகிய, விரல்-விரலை, அசைத்து-ஆட்டி, உள்ளூறும் - உள்ளொழுகுகின்ற, கள்-தேனை, நுகர்-உண்கின்ற, வண்டின்-வண்டுகளது, ஆர்ப்பால் ஒலியினாலே, காமுகர்-காமிகளை, சினவல்போலும் (உங்காரஞ்செய்து) கோபிக்கின்றனபோலும் (அரசனுக்கு இருந்தன) எ-று.

மன்மதன் விழாவாவது-ஆடவருமகளிருஞ்சென்று சோலையின்கண்ணே பூக்கொய்தும் புனல்விளையாடியுங் காமவின்பத்தை யனுபவித்தலாம். மன்மதனுக் கெடுப்பதோர் சிறப்பெனினுமாம். இன்னும் - வெண்மதிபோலுங் கவிகையுடைய ஈஜராஜனது விழாவெனினுமமையும். முன் பாட்டில் குயில் சொல்ல வந்ததாற் கேற்கப்பட்ட செய்தி கொடிதாதலின், அவ்வனத்தை நோக்கி நீ யதைக் கேளற்கவெனக் காந்தள் மலர்க்கைகளாலே விலக்கின வென்க. அளித்ததைதற்குச் சிலேடையாற் கருணை கூர்தலென்றும், வண்டுகணிறைதலென்றும், பொருள் கொள்க, இக்காந்தள் விலக்குதலை இதன் முதனூலிற் சொல்லப்பட்டபடியே முன் பாட்டிலே யடக்காமல் வேறு முடிபு செய்தற்கு ஏதுவென்னையெனின், அம்முதனூலுளில்லாத அன்றிலினதிசயித்தரற்றலை அதிலே மிகுத்துச் சொல்லியவதனாலிதனை வேறுமுடிபு செய்தார்போலும். இப்பாட்டிலே காந்தளது தோற்றமும் மாவினது தோற்றமுஞ் சொல்லப்பட்டது. [காந்தட் செடிகளை அங்ஙனந் தடுப்பனவாகவும் மாமரங்களை அப்படி வெருட்டுவனவாகவுங் குறித்தலாலே, தற்குறிப்பணியாம்.]

(க-து.( காந்தள்களானவை - வனமென்னும் பெண்ணை மலரென்னுங் கரங்களாலே அக்குயில்கள் சொற்களைக் கேளாதே என்று தடுத்து இருபை

நிறைந்தனபோலுமிருந்தன. மாமரங்களானவை-தளிரென்னும் விரலை அசைத்து வண்டுகளார்ப்பால் காமுகரைக் கோவிப்பனபோலுமிருந்தன எ-ம்.

பொன்னிதழ்சண்பகத்திற் புரிமுறுக்கவிழத்தூங்கி
யின்னறுத்துளியினோடு மகரந்தமிறைப்பவூதித்
தென்னிடுங்களிகொள்வண்டு சேர்ந்தமைகாமவெங்நோய்
துன்னினர்க்கின்னல்காட்டு தூமகேதுவினைப்போன்ற,

(இ-ள்.) புரி-கட்டினது, முறுக்கு-முறுக்கானது, அவிழ-விரிய, தூங்கி-ஆடி, இன்-இனிதாகிய, நறு-தேனினது, துளியினோடு-துளியுடனே, மகரந்தம்-மகரந்தப்பொடியை, இறைப்ப-உதிர்க்க, ஊதி (வாயினூ) லூதி, தென்னிடும்-இசைபாடுகின்ற, களிகொள்-களிப்பைக்கொண்ட, வண்டு-வண்டுகளானவை, பொன்-பொன்னிறம்பொருந்திய, இதழ்-இதழ்களையுடைய, சண்பகத்தில்-சண்பகப்பூக்களின்மேலே, சேர்ந்தமை-சேர்ந்தமையால் (அம்மலர்கள்) காமம்-காமமாகிய, வெங் நோய்-வெப்பநோயை, துன்னினர்க்கு-அடைந்தவர்க்கு, இன்னல் (பின்வரும்) துன்பத்தை, காட்டும்-காண்பிக்கிற, தூமகேதுவினை - வான்மீனை, போன்ற-ஒத்துத் தோன்றின (அரசனுக்கு) எ-று.

வண்டுகள் சண்பகத்திலே தேனுண்டவளவில் விறந்துபடுமாதலால், அப்படி ஆடியூதல் மற்றைமலர்களிலென்றுகொள்க. களிப்பினாலே தம்பகைமை கருதாது சேர்ந்தனவெனினு மமையுமெனபதற்குத் தென்னிடுங்களிகொள் வண்டென்றார். சேர்தல்-மாலைபோ லொன்றன்பின்னொன்றாக வந்துவீழ்தல். தூமகேது உலகத்தார்க்குப் பெருந் துன்பத்தைச் செய்தல்போல, வண்டொழுங்கோடு கூடிய சண்பகமலர் காமிகளுக்குப் பெருந் துன்பத்தைச் செய்தலாலும், வண்டொழுங்குவாள் போலவுஞ் சண்பகமலர் அதனையுடைய மீன்போலவு நிற்றலுந், தூமகேது வினைப்போலுமென்றார். தூமகேது பின் வரும் பஞ்சமுதலியவற்றிற்கு உற்பாதமாதலாற். பெருந் துன்பத்திற் கேதுவாமென்க. [சண்பகமலரோடுசேர்ந்த வண்டொழுங்கை அப்படிப்பட்ட தூமகேதுவாகக் குறித்தலாலே; தற்குறிப்பணியாம்.

(கு-து.) வண்டுகள்சேர்ந்த சண்பகமலர்களானவை வான்மீனை ஒத்திருந்தன-எ-ம்.

32
குளிர்நறுஞ்சாந்தநாறுங் கூவிளங்கனிமுள்ளேறுண்
டொளிர்வனகணிகைமாதர் வரிமுலைக்குவமைசான்ற
தளையவிழ்புட்டலத்தின் கவரினார்சம்பராரி
யுளைவுறவிருவர்மேலு முதற்றினம்பகழிபோன்ற.

(இ-ள்.) முள்-முள்ளினாலே, ஏறுண்டு-கிழிக்கப்பட்டு, ஒளிர்வன-விளங்குகின்றவையாகிய, குளிர்-குளிர்ச்சிபொருந்திய, நறுஞ்சாந்தம் - நல்ல சந்தனம் போல, நாறும்-மணக்கின்ற, கூவிளங்கனி-வில்வப்பழங்களானவை, கணிகை

மாதர்-பரத்தையருடைய (சாந்தம்)சந்தனத்தினுலே,(நாறும்)மணக்கின்ற,வரி-நகக்குறிகளை டைய, முலைக்கு-முலைகளுக்கு, உவமை-ஒப்புமையில், சான்ற-சிறந்தன, தளையவிழ்-கட்டவிழ்ந்த,பாடலத்தின்-பாதிரிமரங்களுடைய, கவர் தற்குரிய, இணர்-பூங்கொத்துக்களானவை, சம்பராரி-மன்மதனனவன், உளே வுற-வருந்தும்படியாக, இருவர்மேலும்-நாயகனுயகிகளிருவர்மேலும்,உடற்று-கோபித்தற்கு (வைத்திருக்கப்பட்ட) இனப்பகழிபோன்ற - அம்புக்கூட்டம் போன்றன (அரசனுக்கு) எ-று.

சாந்தநாறுதல் முலைக்கு ங் கூட்டப்பட்டது. குலமங்கையர் முலைகட்கு நகக்குறி விசேடித்துச் சொல்லுதல் தகுதியன்றாகலின், கணிகைமாதர் வரிமுலையென்றார். அன்றியும் அவர் பலரையும் புணர்தலின், நகக்குறிமிக்குத் தோன்றுமென்க. இனப்பகழி யென்றதற்கு அதற் கிடமாகிய அம்பறாத் தூணியென்பதும், இருவரென்றதற்கு விரும்பிய ஆடவரு மகளிருமென்பதுங், கருத்தாகக்கொள்க. (கவரிதழ் சம்பராரி யுளேவுற விருவர்மே மு முடற்றினைப் பகழி போன்ற) எனப் பாடமுமுண்டு; இருப்பினப்பாகிய விதழ் அதற் கின்மையானும், இரண்டம்புகளை யொன்றாகச்சேர்ந்து இருவர்மேற் செலுத்துதல் கூடாமையானும், இதன் முதனூன் முடிபிற்கு வேறுபடுதலானும், பொருந்தாமை யுணர்க. இப்பாட்டில் வில்வமும் பாதிரியுங் கூறப்பட்டன. [வில்வக்கனிகளுக்குக் கணிகைமாதர் முலைகளை யுவமித்தலால், உவமை யணியும்; பாதிரிப் பூங்கொத்துகளை அம்பறாத்தூணியாகக் குறித்தலால், தற்குறிப்பணியுமாம்.]

(கு-து.) வில்வப்பழங்களானவை வேசைகள் முலைகளை யொப்பாகவிருந்தன. பாதிரிமரங்களின் பூங் காத்துகளானவை மன்மதன் பாணங்களையொப்பாக விருந்தன-எ-ம். 33

பாசிலையிடையிற்பூத்த பைந்துணரகத்தி தூய
மாசறுநிலவுகாலு மதியினைவிழுங்குநாளிற்
றேசுறுகலைகளியாவுந் தின்றுதின்றுமிழ்ந்து துத்திக்
காசுறுசுடிகைச்செங்கட் கருநிறப்பாந்தன்போன்ற.

(இ-ள்.) பாசிலை-பச்சிலைகளையும், இடையில் - நடுவிலே, பூத்த-மலர்ந்த பைந்துணர்-தளிர்ச்சிபொருந்திய மலர்களையுடைய, அகத்தி-அகத்திமரங்களானவை, தூய-பரி த்தமாகிய, மாசறு-குற்றமற்ற, நிலவு-சந்திரிகையை,கா ும்-வீசுகின்ற, மதியினை-சந்திரனை, விழுங்குநாளில்-உட்கொள்ளுகிறநாளிலே,தேசுறு-காந்திபொ ுந்திய, கலைகள்யாவும்-கலைகளையெல்லாம், தின்றுதின்று-ஒவ்வொரு கலையாகத்தின்று, உமிழும்-உமிழ்ந்துகொண்டிருக்கின்ற, துத்தி-படப்புள்ளிகளையும், காசுறு-இரத்தினம்பொருந்திய, சுடிகை - உச்சியையும், செங்கண்-செய்யகண்களையும், கருநிறம்-கரியநிறத்தையுமுடைய, பாந்தள் போன்ற-பாம்பாகிய இராகுபோன்றன (அரசனுக்கு) எ-று.

துணர்-மலரென்பது "போதவிழ் துணர்மலர்" என்பதனாலறிக. தூயமா சறு நிலவென்னுமடையை அம்பலர்க்குங் கூட்டுக. மதியினை விழுங்கு நாள் அபரபட்சத்துப் பதினைந்து நாட்களுமென்றும், அவற்றுள்ளே சந்திரனுக்குத் தினம் ஒவ்வொரு கலைகுறைதலை இராகுவினாலே அங்ஙனந் தின்னப்பட்டுக் குறைதலென்றும் கற்பித்து அப்பொருண்மை தோன்ற, நாளிற் றின்றுதின் றன்றூர். சந்திரகிரகண காலமெனினுமாம். தேவ நாகமாகிய விராகுவென் பது தோன்றற்குக், காருசுடிகைச் செங்கணென்னு மடைகொடுத்தார்போ லும். இராகு கரிதென்பது "இராகுக்கோள் கரும்பாம்பு" என்பதனாலறிக. கருமைக்கும் பசுமைக்கும் மிக்க வேற்றுமை தோன்றாமையிற் பச்சென்ற தழைகளாற் சூழப்பட்ட வகத்தி கரியவிராகுபோலுதலும், அதன் மலர்கள் அவ் விராகு வான்மென்று உமிழப்பட்ட சந்திரகண்டங்கள் போலுதலுங் கொள்க. [அகத்தியை இராகுவாகக் குறித்தமையால், தற்குறிப்பணியாம்.]

(க-து.) அகத்திமரங்களானவை கரும்பாம்பிற் றொப்பாயிருந்தன-எ-ம்.

கலிவிருத்தம்.

விண்புகுவியன்கிளைத் தருக்கண்மேவிய
தண்கனிப்பொறையினாற் றலைவணங்கின
தெண்கடற்கலைபுனை செல்வமானிலப்
பெண்கொடிதாடொழும் பெற்றிபோன்றவே.

(இ-ள்.) மேவிய - விரும்பப்பட்ட, தண் - தண்ணிய, கனி - பழங்களது, பொறையினால்-பாரத்தினாலே, தலை-தலைகள், வணங்கின-வளைந்த வையாகிய விண்-ஆகாயத்தில், புகு - நுழைந்த, வியன் - விசாலமாகிய, கிளை-கிளைகளையு டைய, தருக்கள்-மரங்களானவை, தெள்-தெள்ளிய, கடல் - கடலாகிய, கலை- ஆடையை, புனை-உடுத்த, செல்வம் - செல்வத்தையுடைய, மா - பெரிய, நிலப் பெண்கொடி-பூமிதேவியினது, தாள்-அடியை, தொழும்-வணங்காநின்ற, பெ ற்றி போன்ற-தன்மையையுடையனபோன்ற (அரசனுக்கு) எ-று.

பெற்றியனவென்பது-இறுதிநிலை கெட்டது. தம்மைப் பெற்றுவளர்த்த தாயென்று வணங்குதல்கொள்க. [அவ்வணங்கிய மரங்களைப் பூமிதேவியைத் தொழுவெனவாகக் குறித்தலாலே, தற்குறிப்பணியாம்.]

(க-து.) மரங்களானவை பூமிதேவியினடியை வணங்குகின்றன போலு மிருந்தன-எ-ம். 35

அளிமுறுலணிமல ரசோகம்பூத்தன
தெளிவருநரணப் பெயரின்செவ்வியா
லெளிவருகாமுகர்க் கிரங்கிவேணுறுந்
தளிர்மறையழற்கனை தரித்தபோன்றவே,

(இ-ள்.) பூத்தன-மலர்ந்தனவாகிய, அளிவண்டுகளானவை, முரல்-ஒலிக்கப்பெற்ற, அணி - அழகுபொருந்திய, மலர் - மலர்களையுடைய, அசோகம்-அசோகமரங்களானவை, தெளிவரு-தெளியவந்த, காரணப்பெயரின்-காரணப்பெயரினது, செவ்வியால்-அழகினாலே, எளி-எளிமையோடு, வரு (தம்மிடத்திலே) வருகின்ற, காமுகர்க்கு-காமிகளுக்கு, இரங்கி-உள்ளிரங்கி. வேள்-மன்மதனது, அழற்கணை-நெருப்பம்புகளை, நறுந்தளிர்-நல்ல தளிர்களிலே, மறை-மறைத்து, தரித்தபோன்ற-தரித்திருக்கின்றவை போன்றன (அரசனுக்கு) எ-று.

அசோகம் - சோகமில்லாததாம். சோகமில்லாததாகையால் எம்மையுஞ் சோகமில்லாதவராகச் செய்யுமென்று சரணமடைகின்றாரென்க. தமக்கடைக்கலமாயினாரைக் காவாதுவிடல் மாபாதகமாதலால், இரங்கினவென்க. அந்நெருப்பம்புகளை யஞ்சினோர்க்கு அவற்றை வெளிப்படுத்தாமலிருக்கையே, காத்தற்குபாயமென்பது கருத்து. மலருக்குச் சொல்லப்பட்ட அளிபோல் அழற்கணைக்குப் புகை குறிக்கப்படுகின்றது. அசோகமலர் அழல்போற் சிவந்து தோன்றலின், அழற்கணையென்றார். மறைத்தென்பது-மறையென வீறுகெட்டு நின்றது. "வரிப்புனை பந்தொடு பாவைதூங்க" என்பதில் வரிந்தென்பதுபோல. [அசோகமென்னும் பெயர்க்கு வேறுபொருளைக் கற்பித்தலால், அங்கமாகிய பிரிநிலை நவிற்சியணியும், அவ்வசோகத்தை அம்பினைத் தரித்தனவாகக் குறித்தலால், அங்கியாகிய தற்குறிப்பணியாம்.]

(க-து.) அசோகமரங்களானவை அச்சினிக்கணைகளைத் தரித்தல் போலுமிருக்கின்றன-எ-ம். 36

அறுசீர்க் கழிநெடிலடி விருத்தம்.

மணங்கமழ் முடவெண் டாழை மலரின்வார் நறவமாந்திக்
கணங்கொள் வண்டினமுந் தேனுங் களித்திடைவதிந்த தோற்ற
மணங்கர வசைத்தோ னீத்த வரும்பழி யமைத்த தென்ன
நிணங்கமழ் வேலான் கண்டு நெஞ்சுற விழித்துச் சொல்வான்

[இதுமுதல் நான்குபாட்டுகளால் தாழம்பூவை வெறுத்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) நிணம் (பகைவரது) கொழும்பானது, கமழ்-நாறுதற் கிடமாகிய வேலான்-வேலையுடையவன், முடம்-முடமாகிய, தாழை-தாழையினது, மணங்கமழ்-மணக்கின்ற, வெள்-வெண்மைபொருந்திய மலரின்-பூவின், வார்-ஒழுகாநின்ற, நறவம்-தேனை, மாந்தி-குடித்து, கணம்-கூட்டத்தை கொள்-கொண்ட, வண்டு-கருவண்டுகளின், இனமும் - சாதிகளும், தேனும் - தேன் வண்டுகளும், களித்து-மகிழ்ந்து, இடை (அத)னடுவில், வதிந்த-தங்கிய, தோற்றம்-தோற்றத்தை, கண்டு-பார்த்து அணங்கர வசைத்தோன்-பரமசிவனால், நீத்த-தள்

* தொல்காப்பியம், மூவாறெழுத்தே கழிநெடிற்களவே-யீரெழுத்து மிகுதலு மியல்பென மொழிப,

ளிவிடப்பட்ட, அரும்பழி-நீக்கக் கூடாதபழியை, சுமந்தென்ன (இம்மலர்) சும ந்தனென்று, நெஞ்சு-ற-நினைப்புண்டாக, இழித்து-இகழ்ந்து, சொல்வான்-கூறுவான், எ-று.

“ கேட்குநபோலவுங் கிளக்குநபோலவு-மியங்குநபோலவு மியற்றுநபோலவு- மஃறிணைமருங்கினு மறையப்படுமா” இவ்விதியால் தாழையொடு கூறி னனென்க. நான்முகனுக்குப் பொய்க்கரிகூற உடம்பட்டும் பரமசிவனு லிகழ் ந்து தள்ளப்பட்டது தாழம்பூவென்பது புராணகதை. சிறந்தோனுக்குப் பெரி யோரால் தள்ளப்படுதலே பழிவிளைக்குமென்பது கருத்து. [தாழம்பூவைப்பழி சமந்ததாகக் குறித்தலாலே, தற்சுறிப்பணியாம்.]

(க-து.)நளமகாராஜன் தாழைமலரைப்பார்த்து இகழ்ந்து சொல்லுவான்- எ-ம். 37

நாகிள வரிவண் டுண்டு நறவுகொப் புளிக்குங் கைதாய்
பாகுறு கழைவே ளெய்யிற் பறிப்பரி தாயுள் ளாவி
யேகமெய் தளர்ந்தோர் நெஞ்ச மீர்ந்திடு முள்ளம் பென்றே
வாகைவின் மதனைச் செற்றோன் வனைந்திடா திகழ்ந்தவாறே.

(இ-ள்.) நாகிள-இளமைபொருந்திய, வரி-இசைபாடுகின்ற, வண்டு-வண் டுகளானவை, நறவு, தேனை, உண்டு-குடித்து, கொப்பளிக்கும் - உமிழ்தற்கிட மான, கைதாய்-தாழம்பூவே, பாகு-சாறுண்டு, உறு - பொருந்திய, கழை-கருப்பு வில்லினால், வேள்-மன்மதனானவன், எய்யின்-எய்தால், பறிப்பரிதாய்-பிடுங்கப் படாதத்தாகி: உள் - உள்ளிருந்த, ஆவி - உயிரானது, ஏக-நீங்க, மெய்-உடம்பு, தளர்ந்தோர்-தளர்ந்த விரகிகளுடைய, நெஞ்சம்-மனத்தை, ஈர்ந்திடும் - அறுக் கின்ற, முள்ளம்பென்றே-முள்ளம்பென்று, (உன்கொடுமையை நினைத்தே)வா கை-வெற்றிபொருந்திய,வில்-வில்லை டைய, மதனை-மன்மதனை,செற்றோன்- வென்றபரமசிவன், வனைந்திடாது - சூடாமல், இகழ்ந்த (உன்னை) யிகழ்ந்த தற்கு, ஆறு-காரணமாம், எ-று.

நாகிளவென்பன-ஒருபொருள்குறித்த விருசொற்கள். தாழம் பூவினுடை ய நடுமுட்களும் இருபுடைமுட்களும் எதிரிட்டடுக்கி நிற்றலால், அதனடி நு னிகளில் யாதொன்றைப்பற்றி இழுக்கினு மறுக் தமாதலாற், பறிப்பரிதாயென் றார். வாகைவின்மதனைச் செற்றோனென்றமையாலே, தன்பகைவனுக்கு உப கரணமாயிருப்பதே பொறுக்ககூடாததா யிருக்குமாயிற், கொல்வதாயுமிருந் தாற் சொல்வானேன் என்றதாயிற்று. [சூடாதிகழ்தற்கு ஏதுவாகாத அப்ப டிப்பட்ட முள்ளம்பாயிருக்கையை ஏதுவாகக் குறித்தலாலே, ஏதுத்தற் குறிப் பணியாம்.]

(க-து.) தாழம்பூவே நீ முள்ளம்பென்று சிவன் அணியாதிகழ்தான் என்று நளன் சொன்னான்-எ-ம். 38

பசியநெட் டிலைய தாழை மடலெனு மீர்வாள் பற்றி
வசைபறு காமத் தச்சன் மையலாம் வளியி னாளு
மசையொடு தளர்ந்து கல்வி யருந்தழை யுகுத்து நிற்கு
நசையுணர் நெஞ்சத்தாரு நடுவிறப் போழுமாதோ.

(இ-ள்.) பசிய-பசுமைபொருந்திய, நெடு-நெடிய, இலைய-இலைகளையுடையனவாகிய, தாழை-தாழம்பூவே, மடலெனும் (உன்) னிதழென்கிற, ஈர்வாள்-பல்வாளை, பற்றி-பிடித்து, வசைபறு-பழியற்ற, காமத்தச்சன்-மன்மதனாகிய தச்சனானவன், மைபலாம்-மயக்கமாகிய, வளியின்-காற்றினாலே, நாளும்-பல நாளும், அசையொடு-அசைதலுடனே, தளர்ந்து-வாடி, கல்வி-கல்வியறிவாகிய, அருந்தழை-அரியதழையை, உகுத்து-உதிர்த்து, நிற்கும்-நிற்கின்ற, நசையுநர்-காமிகளுடைய, நெஞ்சம்-மனமாகிய, தாரு-மரத்தை, நடு-நடுவிலே, உற-பொருந்த, போழும்-பிளப்பான், எ-று.

தாழை-அண்மைவிளி. காமத்தச்சனென்பதில், நிலைமொழியீறு கெட்டது. காமமேலிடுவார்க்குக் கல்வியறிவு குறையுமாதலால், மையலாம் வளியிற் கல்வி யருந் தழையுகுத்தென்றார். [மடலாதிகளிலே ஈர்வாளாதிகளின் அபேதங்களை யாரோபித்தலாலே, உருவக வணியாம்.]

(க-து.) தாழம்பூவே உன்னிதழென்னும் வாளாலே மன்மதனாகிய தச்சன் காமிகளுடைய நெஞ்சமாகிய மரத்தைப் பிளப்பான் என்று நளன் சொன்னான்-எ-ம். 39

விழையுநராவிபோழும் வேனிலா னிரத மூறுங்
கழைகுழைத் தளிநா ணேற்றிக் கணைமலர் தொடுக்கிற் றீந்தேன்
மழையினிற் கரங்க ணாளும் வழுவழுத் திழுக்கா வண்ணந்
தழைமடற் கைதாய் நின்பொற் றாதுகை திமிர்ந்தெய் வானால்

(இ-ள்.) விழையுநர்-விரும்பினவருடைய, ஆவி-உயிரை, போழும்-பிளக்கின்ற, வேனிலான்-மன்மதனானவன், இரதம்-சாறானது, ஊறும்-ஒழுகுகின்ற, கழை-கருப்புவில்லை, குழைத்து-வளைத்து, அளிநாண்-வண்டுநாரியை, ஏற்றி-பூட்டி, கணைமலர்-பூவம்புகளை, தொடுக்கின்-எய்யும்போது, தீம்-மதுரம்பொருந்திய, தேன்-தேனினது, மழையினில்-மழையினாலே, கரங்கள் (தன்) கைகளானவை, நாளும்-தினந்தோறும், வழுவழுத்து-நழுவிநழுவி, இழுக்காவண்ணம்-தப்பிப்போகாதபடி, தழை-தழைத்த, மடல்-மடல்களையுடைய, கைதாய்-தாழம்பூவே, நின்-உனது, பொன்-பொன்னிறம்பொருந்திய, தாது-தூள்களை, கை-அக்கைகளிலே, திமிர்ந்து-பூசிக்கொண்டு, எய்வான் (அவன் என்மேற்) செலுத்துகிறான், எ-று.

அத்தாழம்பூவில் மற்றைய மலர்களினு மிக்க தாதுவிளைந்திருத்தல்பற்றி, அங்ஙனங் கூறப்பட்டது.

(க-து.) தாழம்பூவே மன்மதன் கருப்புவில்வளைத்து அளிநாணேற்றிமலர்க்கணை தொடுக்கில் வழுக்காதிருக்க உன் மகரந்தங்களைத்திமிர்ந்து அக்கணையெய்கிறான் என்று நளன் சொன்னான்-எ-ம். 40

குனிசிலை வேனிலான் கைக் குருதிதோய் பிறைவா யம்பின்
றனியெழில் கவர்ந்து தோன்றித் தணந்தவர் தமையெஞ்ஞான்
றுனியுற முருக்கு கின்ற தொழிலினு லன்றோ நின்னை [றுஞ்
முனிவுட னுலகில் யாரு முருக்கல ரென்கின்றாரே.

[இதனால் முருக்கம்பூவை வெறுத்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) குனிசிலை-வளைக்கப்பட்ட வில்லையுடைய, வேனிலான்-வசந்த காலத்திற்குரிய மன்மதனது, கை-கையிலிருக்கின்ற, குருதி-உதிரத்திலே, தோய்-முழுகிய, பிறைவாயம்பின்-பிறைவாயம்பினது, தனி-ஒப்பற்ற, எழில்-அழகை, கவர்ந்து-வௌவி, தோன்றி-விளங்கி, தணந்தவர் தமை-பிரிந்தவரை, எஞ்ஞான்றும்-எந்நாளிலும், துனியுற-துன்பத்தையடைய, முருக்குகின்ற-கொல்கின்ற, தொழிலினாலன்றோ-செய்கையினாலன்றோ, நின்னை (முருக்கம்பூவே) உன்னை, முனிவுடன்-வெறுப்புடனே, உலகில்-உலகின்கண்ணே, யாரும்-எவரும். முருக்கல ரென்கின்றார்-முருக்கலரென்று சொல்லுகின்றார், எ-று.

பிறைவாயம்பு-அர்த்த சந்திரபாணம். அதுநிறத்திற்கு உவமையாக்க வேண்டிக் குருதிதோயென்றார். முருக்குதல்-கொல்லுதல், முருக்குகின்ற வல ரெனவிரியும். விரகிகளேயன்றி மற்றையோரும் அப்பெயர் கூறுகின்றாரென்பது தோன்ற, யாருமென்றார். [பிறைவா யம்பினழகைக் கவர்ந்தென உவமானத்தன்மையை யுவமேயத்தி லாரோபித்தலாற், காட்சியணியும், முருக்கலரென்னும் பெயர்க்கு உருப்பாற்றலான் மற்றொருபொருளைக் கற்பித்தலால், பிரிநிலை நவிற்சியணியுமாம்.]

(க-து.) முருக்கம்பூவே கொல்லுகிற தொழிலாலல்லவோ உன்னைமுருக்கலர் என்கிறார்களென்றான் நளமகாராஜன்-எ-ம். 41

எனவிவை யெடுத்துரைத் தின்ன தன்மைய
பனிமலர்க் காவினிற் பயிலு மாங்குயில்
குனிசிலை மாரனைக் கூவல் கேட்டலு
மனநிலை தளர்வுற மதி மயங்கினன்.

[இதனால் குயில் கூக்குரல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) என-என்று, இவை-இவைகளை, எடுத்து-எடுத்து, உரைத்து-சொல்லி, இன்னதன்மைய-இப்படிப்பட்ட தன்மையையுடைய, பனி-குளிர்ச்சிபொருந்திய, மலர்-மலர்களையுடைய, காவினில்-சோலையில், பயிலும்-பழகியிருக்கின்ற, மா-மாவிலுள்ள, குயில்-குயில்களானவை, குனி-வளைக்கப்பட்ட, சிலை-வில்லையுடைய, மாரனை-மன்மதனை, கூவ-அழைக்க, கேட்டலும்-கேட்டவளவிலே, மனநிலை-தைரியமானது, தளர்வுற-சோர, மதிமயங்கினன் (அரசன்) அறிவுகலங்கினன், எ-று

இவை யன்றது-கீழ்ப் பான நான்கு பாட்டுகளைச் சுட்டிநின்றது. குயில் கூவல் தன் பகைவனுகிய மாரனை யழைத்தல்போலுதலால், தைரிய மிழந்து மதிமயங்கினுனென்க.

(க-து.) குயில்களானவை மன்மதனை அழைக்க நளன் மதிமயங்கினுன்-எ-ம். 42

வெங்கதிர் தென்றலிற் குளிர்ந்தும் வீழ்நறுந்
தங்கிய மலர்நறுந் தளிக்குண் மூழ்கியும்
பொங்குபூந் தைநதைவெண்டாது பூசியுந்
திங்களிற் றேன்றலான் மகிழ் சிறந்திலான்.

[இதனுல் அங்கே வெயில் நில போலுதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) வெங்கதிர்-சூரியகிரணமானது, தென்றலின்-தென்றற்காற்றுல், குளிர்ந்தும்-சீதளித்தும், மலர்-மலர்களிலே, தங்கிய-பொருந்திய, நறு-தேனினுடைய, வீழ்-விழுகின்ற, நறுந்தளிக்குள்-நல்ல துளிகளுள், மூழ்கியும்-படிந்தும், பொங்கு-எழும்புகின்ற, பூ-அழகிய, கைதை-தாழைமலரது, வெண்டாது-வெள்ளைப்பொடியை, பூசியும்-திமிர்ந்தும், திங்களின் - சந்திரகிரணம்போல, தோன்றலால் - காணப்படலால், மகிழ்சிறந்திலான் (அரசன்) களிகூர்ந்திலன், எ-று.

தேன் றுளிகளும் பொடியும் அத்தென்றலால் மலர்களிலிருந்து சொணரப்படுவன. திங்கள் அதன் கிரணத்தை யுணர்த்தலால், ஆகுபெயர்வெயிலானது தென்றலாலே குளிர்ந்தும், வெளித்துளிகள்போலுந் தேன்றுளிகளொடு கலந்தும், தாழம்பூப் பொடியால் விளர்ந்தும், நிலவுபோன்ற தென்க. அது மகிழ்சிறத்தற்குக் காரணமாயிருக்கவும் அரசன் விரகியாதலால், மகிழ் சிறந்திலனென்க. [இது உவமையணி.]

(க-து.) நளமகாராஜன் வெயிலானது நிலவைப்போலத் தோற்றலால் மகிழ்ச்சி யடைந்திலன்-எ-ம்.

அலியொலி முழவெழ வளியின் கம்பலை
குலவிய சுருதியாக் குயில்கள் பாண்செய
நிலவுபூந் தண்டலை யரங்கி னீடிய
கலவமா மயில்களித் தாடக் கண்டனன்,

[இதனுல் மயிற்கூத்துச் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) அலை யொலி - அலையினுெலியாகிய, முழவு - மத்தள வோசையானது, எழ-உண்டாகவும், அளியின்-வண்டுகளது, கம்பலை-ஒலியானது, குலவிய-கொண்டாடப்பட்ட, சுருதியா-சுருதியாகவும், குயில்கள்-குயில்களாகிய (பாடகர்) பாண்செய-இசைபாடவும், நிலவு-விலங்குகின்ற, பூந்தண்டலை-பூஞ்சோலையாகிய, அரங்கில்-சபையில், நீடிய-நீண்ட, கலவம்-கலாபத்தையுடைய

வெள்ளைமேகத்தை ஒளித்தற்கு, நீளிரமுகிலென்றார். பசியசைவலம்- முற்றிய கொடிப்பாசி. நெடுந்திரை யென்றதனால், கடலலையென்பது பெறப் பட்டது- தெள்ளற லென்றதனால், அதனால் மாசொழித்துத் தூய்தாக்கப்பட் டமை தோன்றுகின்றது. "கொண்டலுங்கூந்தற் கமுகுங் கொன்றைக்காயும் மிருளுந், தண்டலையுங் கார்மணலுஞ் சைவலமும்-வண்டினமுந், தண்குழலை யொப்பாம்" என்றவாறே உபமானங்களாகிய முகின்முதலியவற்றில் ஐயந் தோன்றிற்றென்க. கூந்தலென் றறிந்தபின் அதனிடத்தே சந்தேகம் பிறக்கு மோவென்னி, இங்கே பெயர்மாத்திரங் கூந்தலெனப்படுவதனறிப், பொருள் அம்மேகமுதலிய மூன்று ளொன்றென்பதே கருத்தாமெனக. இவ்வுரை பின் வருவனவற்றிற்குங்கொள்க. கோட்டுப்பூ-கொடிப்பூ-நீர்ப்பூ - நிலப்பூ - எனனு நான்கனுள்ளே கோட்டுப்பூச் சிறந்ததாதலிற், சினைமலரென்றது. அவை சண் பகம்-மகிழ்புன்னைகம்முதலியவாம். தொடையோ' என்றதில்-ஒடுவுருபு செயப் படுபொருளில் வந்தது, உருபுமயக்கம். "யாதனுருபிற்கூறிற்றாயினும், பொ ருள் சென்மருங்கின்வேற்றுமைசாரும்" என்பது விதி. தொடையொடுமென் னும் உம்மையால்,மற்றைக் கொடிப்பூ முதலியனவுங் கொள்ளப்படும். நள்ளிரு ளென்றது-சந்திரனது தேய்வுக்கும் வளர்ச்சிக்கும் நடுநாளாகிய அமாவாசையி னிருளெனினுமாம். ஒளிக்குமுன் நீங்காது விளங்கலால் குடியிருந்ததெனறது இருந்ததுவேயெனக்குற்றியலுகரத்தின்முன்வகரவுடம்படுமெய்வந்தது. [கூந் தலின் கருமையொளியைஇருளாகக்குறித்தலாலே, தற்குறிப்பணியும், முதல் வாக்கியத்தில்வந்த ஐயவணியும் இதுவுஞ் சேர்தலால், சேர்வையணியாம்.]

(க-து.) அன்னந் தமயந்தி கூந்தற்சிறப்பைச் சொல்லியது எ-று. 11

**கண்கவர் வனப்பிற் சிந்தூரந் தீட்டிக் கவின்செய்பொன் னிறத் ததாய்ச் சிறந்த, தண்பிறைக கொழுந்தொன் றுளதெனிற் றிலகத் தையல்வா ணுதலினை நிகழ்ந்குந், தெண்கடலமிழ்திற்கனிந்தவந் தீஞ் சொற் சேயிழை முகத்தொளிர் புருவம், வெண்கதிர்க் குடையி லிர தியு மதனும் வைத்தகை வில்லிணை பொருவும்.**

[இதனால் நெற்றிச்சிறப்பும் புருவங்களின் சிறப்புஞ் சொல்லப்படுகின றன.]

(இ-ள்.) கண்-கண்களின்பார்வையை - கவர், தன்னிடத்தேயிழுத்துக் கொள்ளுகின்ற, வனப்பின் அழகையுடைய, சிந்தூரம் - சிந்தூரத்திலகத்தை, தீட்டி-எழுதப்பெற்று, கவின்செய்-அழகைச்செய்கின்ற, பொன்னிறத்தாய்- பொன்னிறத்தையுடையதாகி, சிறந்த-உயர்ந்த, தண் - குளிர்ச்சிபொருந்திய, பிறைக்கொழுந்தொன்று, ஒரிளம்பிறையானது. உளதெனின் - உளதாயின் தையல்-தமயந்தியினது, திலதம்-சிந்துரத்திலகத்தையுடைய, வாள்-ஒளிபொ ருந்திய, நுதலினை-நெற்றியை, நிகர்க்கும் (அது) ஒக்கும், தெள்ளிய-கடல்-பாற் கடலினது, அமிழ்தின்-அமிர்தம்போல, கனிந்த-முதிர்ந்த, அம்-அழகிய, தீம் மதுரம்பொருந்திய, சொல் - சொற்களையும் உடைய, சேயிழை - தமயந்தி

யினது, முகத்து - முகத்திடத்து, ஒளிர்-விளங்காநின்ற, புருவம்-இரண்டுபுருவங்களும், இரதியும் - இரதிதேவியாலும், மதனும் - மன்மதனாலும், வெண்கதிர் - சந்திரனாகிய, குடையில்-குடையின்கண்ணே, வைத்த-வைக்கப்பட்ட கைவில்லிணை (அவர்) கைபுல்லிரண்டையும், பொருஉம்-ஒத்திருக்கும் எ-று.

சிந்தூரம்-அதனாலே செய்யப்பட்ட திலகத்தை யுணர்தலாய், ஆகுபெயர் உளதெனினிகர்க்கு மென்றதனால், இப்போதுள்ளபிறைக்கு அப்படிபபட்ட திலகமும் பொன்னிரமு மில்லாமையால் ஒவ்வாதென்றதமயிற்று. மன்மதனுக்குச் சந்திரன் குடையாதலால். வெண்கதிர்க் குடையிலென்றது. [அப்படிப் பட்ட பிறை ஒன்றுளதாயி னென்றதனாலும், நுதலினை நிகர்க்குமென உபமேயத்தை உபமானமாக்குதலாலும், இப்பொருளைநிரனிலை யணியும்; தமயந்தியின் முகத்தைச்சேர்ந்த இரண்டு புருவங்களையும் அக்குடையைச்சேர்ந்த அவ்விரண்டு விற்களாகக் குறித்தலாலே தற்சுறிப்பணியாம்.]

(க-து.) அன்னம் தமயந்தியின் நெற்றிச்சிறப்பும் புருவங்களின் சிறப்புஞ் சொல்லியது-எ-ம்.

<u>குசு</u> 12

குமிழ்மிசை மறிந்து குழையெதிர் நடந்துகொலைத்தொழின் மறலியைப் பயிற்றி யமிழ்தினின் விளர்த்து ணஞ்சினிற் கருகி யரிசிதறிமை தோய்ந்து, கமலமென் மலரை வனம்புகுத் தியவேர் கண்ணிணை மான்மரு ணோக்கந், தமதெனக் கவர்ந்து கொண்டவோமடமான் றடங்கணின் செயல்கவர்ந் தனவோ.

[இதனால் கண்களின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) குமிழ்-மகிழம்பூவினது, மிசை-மேற்பக்கத்தில், மறிந்து-மீண்டு, குழை - குழையெனப்படுகின்றகாதணிக்கு, எதிர்-முன்பாக, நடந்து-சென்று, கொலை-கொல்லுதலாகிய, தொழில்-தொழிலை, மறலியை-யமனுக்கு, பயிற்றி-கற்பித்து, அமிழ்தினில்-அமுதத்தினும்-விளர்த்து (சுற்றிடம்) விளர்த்து, உள்-நஞ்சில்- நஞ்சினில்-விஷத்தினும், கருகி-கறுத்து, ஐயரி-அழகியரேகைகள, சிதறி-சிதறப்பெற்று, மை-அஞ்சனத்திலே, தோய்ந்தும்-முழுகி, கமலமென்-தாமரையெனப்படுகிற, மலரை-பூவை, வனம-காட்டிலே, (நீரிலே) புகுத்திய-அடைலத்த, வேல்-வேல்போலும், கண்ணிணை (தமயந்தியின்) கண்களிரண்டும், மான்-மானினது, மருள்-மருட்சிபொருந்திய, நோக்கம் - பார்வையை, தமதென-தம்முடையதென்று, கவர்ந்து கொண்டவோ-கௌவிக்கொண்டவோமடமான-தமயந்தியினுடைய, தடம்-விசாலம் பொருந்திய, கணின் - கண்களினது, செயல்-செய்கையை, கவர்ந்தனவோ (அம்மான்கண்கள்) வௌவிக் கொண்டனவோ எ-று

மேன்மூக்கி னிருபக்கத்தினுந் தடையுண்டு சொல்லமாட்டாமையால், மறிந்தென்றது. எதிர் நடந்தென்றதனால், குழை காதைச் சூழவிடப்பட்ட ஒரு காதணியென்க. அன்றெனின் ஆகுபெயராக்கி அதனையடைய காதென்றுகொ

ள்க. "தமோ றுருபுகடாஞ் சிலவுளவே" இவ்விதியால் மறலிக்கு ஒனறது மற லியை என உருபு மயங்கிற்று. அமிழ்தும் நஞ்சுஞ் சேர்த்துச் சொல்லப்படுத லால், அவை பாற்கடலிற்பிறந்த தேவாமிர்தமும் ஆலாகலமுமாம். மருணோக் கம்-அஞ்சியனபோற் பார்த்தல் [குமிழென்றும் பூவமானச்சொல்லால் மூக் கென்னு முபமேயஞ்சொல்லப்படுதலால், உருவகவுயர்வு நவிற்சியணியும், ம றிதலும் எதிர் நடத்தலுங் கண்களுக்குச் சுபாவமாதலால், தன்மை நவிற்சிய ணியும், கொலைத்தொழில் மறலியைப் பயிற்றுத லில்லாதிருக்கப் பயிற்றுதற் சம்பந்தத்தைக் கற்பித்தலாலும், கமலத்தை வனத்திலே புகுத்தலாகிய சம்பந் தத்தைக் கற்பித்தலாலும், தொடர்புயர்வு நவிற்சியணிகளும் விழிக்கு வேலை யு வமித்தலால், உவமைத்தொகை யணியும் தொண்டவோ கவர்ந்தன வாளனச் சந்தேகத்தைச் சொல்லுதலால், ஐயவணியும், அங்ஙனம் பலவணிகளுஞ் சேர் தலால், சேர்வையணியுமாம்.] இவற்றுள் இரண்டாவது தொடர்புயர்வு நவிற் சி, சிலேடையை அங்கமாகக் கொண்டுவந்தது.

(க-நு.) அன்னம் தமயந்தியின் கண்களின் சிறப்புச்சொல்லியது-எ-ம்.

வேனில்வேள் வனப்பு நோக்குதற் கமைத்த விளங்குகண்ணு டியோ வொளிரும், பானலங் கண்வா டீட்டிய கிடந்த சாணையின் படிவமோ கபோலங், கான்வழுந் தொழுகுஞ் சண்பக மலரைக்கடி ந்து மென் குமிழினைத் துரந்துள், ளூனையு முருக்கு பொழுகுபொற் றொடிமூக் குவமையா முரைக்குமா றரிதே.

[இதனால் கபோலமகள் மூக்கு இவற்றின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) ஒழுகு-நேர்மைபொருந்திய, பொன்-பொன்மயமாகிய, கொடி-பூங்கொடிபோல்பவளது, கபோலம் - கதுப்பென்று சொல்லப்படுகின்ற பொ ருள்களானவை, வேனில் - வசந்திற்குரிய, வேள் - மன்மதனுனவன், வனப்பு-அழகை, நோக்குதற்கு-பார்ப்பதற்காக, அமைத்த (நான்முகனால்) உண்டாக்க ப்பட்ட, விளங்கு விளங்காநின்ற, கண்ணுடியோ - கண்ணுடிகளோ, ஒளிரும்-விளங்காநின்ற, பானலம்-கருங்குவளைமலர் போலும், கண்-கண்களாகிய,வாள் (அவனுடைய) வாள்களை, தீட்டிய - தீட்டுதற்பொருட்டு, கிடந்த-தங்கிய, சா ணையின்-சாணைக்கல்லினுடைய, படிவமோ-வடிவங்களோ,கான்-வாசனையான து, வழிந்து-பெறுக்கப்பெற்று, ஒழுகு-நீண்ட, சண்பகமலரை-சண்பகப்பூவை துரந்து-துரத்தி, உள் (கண்டோர்) ருள்ளத்தையும், ஊனையும் - உடம்பையும், உருக்கும் - உருக்காநின்ற, மூக்கு (அவளது) மூக்குக்கு, உவமை - உபமானத் தை, யாம்-நாம், உரைக்குமாறு-சொல்லும்வழி, அரிது-இல்லை எ-று.

ஒழுகுபொன் - மாற்றுயர்ந்திளகிய பொன்னெனினுமாம். மன்மதனை ழ கிற் சிறந்தவனுதலால் வனப்பு நோக்குதற்கென்றும், கண்ணினருகே யிருக்கை யால் கண்வாடீட்டியவென்றம், சொல்லிற்று. காவன் சம்பந்தமான பொருள் களெல்லாம் காமநோயை வளர்க்குமகதலால், அவன் சம்பந்தமான கண்ணுடி யுஞ் சாணைக் கல்லுமென்றது. [கபோலங்களை அப்படியபட்ட கண்ணுடிக

ளுஞ் சாணைக் கல்லுகளுமாகக் குறித்தலாலே, தற்சுறியாம்.] இதனை யுறுப்பாகக் கொண்டு ஐயவணி வந்தது.

சண்பகமணம் மூக்கின் சுவாசத் திருக்கின்றமையால் அதற்குக் கான்வழிந்தெங்கிற அடைகொடுக்கப்பட்டது. [சண்பகததைக் கடிதலுங் குமிழைத் துரத்தலு மில்லாதிருக்க அவைகளைக் கற்பிததால், தொடர்புயர்வு நவிர்சியணியும், உவமை இல்லையென்றதனுல். உவமானந் தொக்கதொகை யுவமையணியும், இவை பலவுஞ் சேர்தலால், சேர்வை யணியுமாம்]

(க-து.) அன்னம் தமயந்தியின் கபாலங்களின் சிறப்பும் மூக்கின் சிறப்புஞ் சொல்லியது எ-ம். 14

**வள்ளைவார் காது நோக்கின ருள்ள மகிழ்ந்தினி தாடுபொன்னூசல், கள்ளவிழாம்பற் செய்யவாய் பவளக் கடிகைவா ணகையொளிர் தாளந், தெள்ளிதிற் கோத்துப் பவளவள்ளத்திற் சேர்த்தியதாகுமஞ் செறிசொல கிள்ளையங் கிளவி குயிமொழி யலதியாதெனக் கிளக்கலா வதுவே.**

[இதனுல் காதுகள் வாய் பல்வரிசைகள் சொல் இவற்றின்சிறப்புசசொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) வள்ளை-வள்ளையிலைபோன்ற, வார்-நீட்சிபொருந்திய, காது (அவள்) காதுகளானவை, நோக்கினர்-பார்த்தவருடைய, உள்ளம்-உள்ளங்களானவை, மகிழ்ந்து-களித்து, இனிது-இனிதாக, ஆடு-ஆடப்பெறுகின்ற, பொன்னூசல் பொன்னூஞ்சல்களாகும், கள்-தேனையுடைய, அவிழ்-மலர்ந்த, ஆம்பல் அல்லிமலர்போலும், செய்ய-சிவப்புநிறம்பொருந்திய, வாய் (அவள்) உதடானது, பவளக்கடிகை-பவளத்துண்டாகும், வாள்-காந்திபொருந்திய, நகை (அவள் வாயைசசேர்ந்த) பல்வரிசையானது, ஒளிர்-விளங்குகின்ற, தாளம்-முத்துக்களை, பவலவள்ளத்தில்-பவளக் கிண்ணத்திலுள்ளே, தெள்ளிதின்-தெளிவுடையதாக, கோத்து-கோத்தல் செய்து, சேர்த்தியதாகும்-சேர்க்கப் பட்ட கோவையாகும். அஞ்செறி-அழகால் நிறைந்த, சொல் (அவள்) சொல்லுக்கு, கிள்ளை-கிளியினது. கிளவி-சொல்லும், குயில்-குயிலினது, மொழி-சொல்லும், அலது (உபமானமாக) எல்லாமல், யாதென (வேறே) யாதென்று, கிளக்கல்-சொல்லுதல், ஆவது-ஆகுமா எ-று.

காதுகள் தோள்களினளவுந் தொங்கி ஊசல்போல அசைவுறக்கண்டோர்மனந் தம்மைச்சேர்ந்து களிகூர்ந்திருக்கப் பெறுதலாலே, நோக்கினருள்ள மகிழ்ந்தினிதாடு பொன்னூசலென்றது. [காதை அப்படிப்பட்ட ஊசலாகக் குறித்தலாலே, தற்சுறிப்பணியும், வள்ளைவார்காது என்றதனுல், உவமையணியுமாம்]

கள்ளவிழாம்பல் என்றதனுல், ஆம்பலிலே தேன்போல வாயிலே தீஞ்சுவைநீர் கொள்ளப்படும். [உதட்டிலே பவளத்துண்டையும், வாயைச் சேர்ந்த

பல்வரிசையிலே பவளக்கிண்ணத்தைச் சேர்ந்த முத்துக்கோவையை ம்ஆரோ பித்தலால், அவ்விரண்டும் உருவகவணிகளாம்.]

உபமானத்திற்கேற்கப் பல்வரிசைக்கு வாயைச் சேர்ந்த வென்னுஞ் சொல் வருவிக்கப்பட்டது.

சொல்லுக்கழகு-சுருங்கச்சொல்லல் முதலியன. கிள்ளையங்கிளவி-சுரம் பற்றிஞ் சொற்பற்றியும் உபமானமாதலாலும், குயின்மொழி-சுரமொன் றையேபற்றி உபமானமாதலாலும், அது முன்னும் இது பின்னும் வைக்கப் பட்டன.

(க-து.) அன்னம் தமயந்தியின் செவ்-வாய்-பல்-சொல்-இவற்றின் சிறப் புச் சொல்லியது எ-ம். 15

ஒழுகொளிவிரிந்தகதிர்மணிவண்ணனுந்தியந்தாமரையுறைவோ ன், முழுமதிக்கலையு ணிறைத்தபேரழகை மொண்டுகொண்டரிபரந் தகன்ற, மழைமதர்நெடுங்கட் டமயந்திவதனம் வகுத்தன கரத்தினு லெடுத்த, புழைவழித் தோன்றும்விசும்பினையன்றேகளங்கமென் றின்னமும்புகல்வார்.

[இதனால் முகத்தின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) ஒழுகு-நீள்கின்ற, ஒளி-காந்தியையும், விரிந்த-பரந்த, கதிர்-கிர ணங்களையும், மணி-நீலமணிபோலும், வண்ணன்-நிறத்தையுடைய திருமா லது, உந்தி-நாபியிலுண்டாகிய, தாமரை-தாமரைப்பூவில், உறைவோன்- வாசஞ்செய்கிற நான்முகக்கடவுள், முழுமதிக்கலையுள்-பதினாறு கலைகளாலு நிறைந்த சந்திரனிடத்தே, நிறைந்த-நிரம்பிய, பேரழகை-உயர்வாகிய சார, த்தை, மொண்டுகொண்டு (கையினாலே) மொண்டுகொண்டு, அரி-இரேகை கள், பரந்து, படரப்பெற்று, அகன்ற-விசாலித்த, மழை-குளிர்ச்சிபொருந்திய மதர்-களித்திருக்கின்ற, நெடு-நெடிய, கண்-கண்களையுடைய, தமயந்தி-தம யந்தியினது, வதனம்-முகத்தை, வகுத்தனன்-படைத்தான், கரத்தினால்-கையி னால், எடுத்த-எடுக்கப்பெற்ற, புழைவழி-துவாரத்தின் வழியே, தோன்றும்- காணப்படுகிற, விசும்பினையன்றே (நீலநிறமுள்ள) ஆகாயத்தையன்றே, கள ங்கமென்று, இன்னமும்-இப்போதும், புகல்வார்-சொல்லுவார் (உலகத்தார்) எ-று.

மணியென்பது நவமணிக்குப் பொதுவாகியும் சில விடங்களிலே நீல மணிக்குச் சிறப்புப்பெயராகியும் வருதலாலே, நீலமணியென்பொருள்கூறப் பட்டது. ஒருபிரளயமுடிவிலே நான்முகக்கடவுள் திருமால்வயிற்றுட்சென்று அவனது நாபியிலே தோன்றிய கமலத்தின்வழியாக வெளிப்பட்டு அதிலிருக் கின்றானென்பது புராணகதை. பேரழகென்றது, இங்கே சந்திரனது சிறந்த பங்கு. அரிபரந்தகன்ற மழைமதர் நெடுங்கணென்னும் அடையை முகத்துக் குக் கொள்ளாது தமயந்திக்குக் கொள்க. புழைவழித்தோன்றும் விசும்பினை

யன்றோ களங்கமென் அன்னமுப்பு கல்வார் எனவே, அது களங்கமன்று-அப்பங்கு எடுபெட்ட பள்ளத்தே தோன்றுகிற நீல வாகாயமென்றதாயிற்று. "அறுதொகை யறைகுவ ரறிவுடையார்பலர், படுதொகை யொடுதொகை யேழென்பார்சிலர்" இவ்விதியால் தோன்றப்படு விரம்பனப் படுதொகை விரிக்க. காரணமாகச் சொல்லப்பட்ட சந்திரசாரத்தினாலே உயர்வுடையமுகத் தழகாகிய காரியந் தோன்றலாலே, காரணப் புனைவிலிப்புகழ்ச்சியணியும், களங்கத்திலே அவ் வாகாசத்தன்மையை ஆரோபித்தற்கு அதனது தன்மையை ஒழித்தலாலே, ஒழிப்பணியும், இவை பலவுஞ் சேர்தலாற், சேர்வையணியு மாம்.]

(க-து.) அன்னம் தமயந்தியின் முகத்தின் சிறப்புச் சொல்லியது எ-ம்.

செய்யுறு மமுதப் பசுங்கரும் பேய்ப்பத் திரண்டழ கொழுகு மென் றடந்தோள், பெய்வளை முன்கைக் கிணையயன்வகுத்தபொரு ள்களிற் பேசுவ தெவனோ, வெய்யவன் கதிர்க ளலர்த்து செங் கமல மெல்லடிக் குடைந்தன வென்றால், கையிணை மலருக்கிணையென வு ரைத்தல் கழிமட னலதுவே றிலையே.

[இதனால் தோள்கள் முன்னங்கைகள் கைகள் இவற்றின் சிறப்புச்சொல் லப்படுகின்றது.]

(இ-ள்.) மெல்-மெல்லிய, தடம்-பெரிய, தோள் தமயந்தியினுடையதோள் களானவை, செய்யுறும்-கழனியிலிருக்கிற, அமுதம்-அமிர்தத்தையுடைய பசு, ங்கரும்பேய்ப்ப-பசிய கரும்புபோல, திரண்டு-திரட்சிபொருந்திய, அழகொழு கும்-அழகு பெருகப்பெற்றிருக்கும், பெய்வளை - இடப்பட்ட வளையல்களையு டைய, முன்கைக்கு (அவளின்) முன்னங்கைகளுக்கு, இணை-உபமானம், அயன் நான்முகக்கடவுளால், வகுத்த-படைக்கப்பட்ட, பொருள்களில்-பொருள்களு ள்ளே, பேசுவது-சொல்லத்தகுவது, எவன்-யாது, வெய்யவன்-சூரியனுடைய கதிர்கள்-கிரணங்களால்-அலர்த்து-மலர்த்தப்படுகின்ற, செங்கமலம்-செந்தா மரைமலர்களானவை, மெல்லடிக்கு-மெல்லிய வடிகளுக்கு, உடைந்தனவென் றால்-தோற்றனவென்றால்-தோற்றனவென்று சொன்னால், இணை-இரண்டா கும், கை-கைகளாகிய, மலருக்கு-மலர்களுக்கு, இணையென-உபமானமென்று உரைத்தல்-சொல்லுதற்குக் காரணம், கழி-மிகுந்த, மடனலது-அறியாமையல் லாமல், வேறு-மற்றொரு காரணம், இலை-இல்லை, எ-று.

செழுமையுங் குளிர்ச்சியும் நல்லநிறமும் உபமேயத்திலே குறிப்பித்தற் குச், செய்யுறு மமுதப் பசுங்கதிரென்றது. [பசுங்கரும் பேய்ப்ப வென்றத னால், உவமையணியாம்.]

எவனென்பது-இன்மைப்பொருளில் வந்தது. அயன் வகுத்தபொருள்க ளில் முன்னங்கைக்கு ஒருப்மானந் தோன்றாமையால், தொகையுவமை யணி யாம்.]

[செங்கமலத்திற்கு-வெய்யவன் கதிர்களலர்த்தென்றவடை அதுதம்மி யல்பின் மலர்ச்சியையுடைய மெல்லடிகளுக்குத் தோற்றற்குரிய குணத்தை யுடையனவென்னுங் கருத்தை யுட்கொண்டிருத்தலாலே, கருத்துடையணி யும், இதனாலே உபமேயமாகிய அவ்வடிகளுக்கு விசேடந்தோன்றுவதாகிய, வேற்றுமை யணியும், கமலம் கீழ்ப்பட்ட அடிகளுக்குத் தோற்றமையைச் சொல்லவே மேற்பட்ட கைகளுக் கிணையாகாமை தோன்றுதலாலே, செய்யுட் பொருட் பேரணியும், இவை பலவுஞ் சேர்தலாற் சேர்வையணியுமாம்.]

(க-து.) அன்னம் தமயந்தியின் தோள்கள்-முன்னங்கைகள்-கைகள்-இவ ற்றின் சிறப்புச்சொல்லியது எ-ம். 17

இழையிடை புகாது மார்பிடங் கொண்ட வேரிள வனமுலை வள்ளைக், குழைபொருங் கண்ணி யெழிற்கடற் பிறந்த குமிழியோ வதனிடை நீந்த, விழைவுறு மதனும் பருவமு மமைத்து விளங்கு பொற் குடங்கொலோ வதனிற், றழைசிறை நேமிப் புட்கொலோ கமல முகைகொலோ வெண்கொல்சாற் றுவதே.

இதனால் முலைகளின் சிறப்புப் சொல்லப்படுகின்றது.

(இ-ள்.) இழை-நூலும், இடை-நடுவிலே, புகாது-நுழையாதிருக்கும்படி, மார்பு-மார்பை, இடம் (தமக்) கிடமாக, கொண்ட-கவர்ந்த, ஏரிளவனம்-அழ கும் இளமையுஞ் சந்தனக்கோலமும்பொருந்திய, முலை-முலைகளென்றுசொல் லப்படுகிற பொருள்களானவை, வள்ளை-வள்ளைபோலுங் காதுகளைச்சூழ்ந்த, குழை-குழைகளோடு பொரும்-போர்செய்கின்ற, கண்ணி-கண்களையுடைய வளது, எழில்-அழகாகிய, கடல்-கடலின்கண்ணே, பிறந்த-உண்டாகிய, குமி ழியோ-குமிழிகளோ, அதனிடை-அக்கடலின் கண்ணே, நீந்த-நீந்துதற்கு, விழைவுறு-ஆசைகொண்ட, மதனும்-மன்மதனாலும், பருவமும்-மங்கைப்பருவ த்தினாலும், அமைத்து-உண்டாக்கப்பட்டு, விளங்கு-விளங்காநின்ற, பொற் குடங்களோ, அதனில்-அக்கடலிலிருக்கின்ற, தழை-தழைத்த, சிறை-இறைக ளையுடைய நேமிப்புற்கொல்-சக்கரவாகப்பறவைகளோ (அதனில்) அக்கடலி லேதோன்றிய, கமலமுகைகொல்-தாமரையரும்புகளோ என் (இவற்றுள்ளே) யாது, சாற்றுவது (என்றற்) சொல்லப்படுவது எ-று.

இழையிடைபுகாது மார்பிடங்கொண்ட வென்றதனாலே, அம்முலைகள் அடிபரந்துயர்ந்து ஒன்றோடொன்று நெருங்கி விளங்குகின்றமை சொல்லப் பட்டதாயிற்று. நீந்துதல்-புனல்விளையாட்டைக் குறித்தென்க. பருவமெனப் பொதுபடக் கூறினும், எல்லாப் பருவங்களினுஞ் சிறந்த மங்கைப் பருவ மென்று கொள்க. ஆழநீரிலிரங்க வஞ்சியோர் குடமுதலியவற்றைப்பற்றி இர ங்குதல் உலகவழக்கம். [முலைகளை அக்குமிழி முதலியனவாகக் குறித்தலாலே, தற்குறிப்பணிகளாம்.] இந்நான்கு தற்குறிப்புகளையும் அங்கமாகக்கொண்டு ஐயவணி வந்தது. இத்தற்குறிப்புகள் எழிற்கடலென்ற உருவகத்தாலே பிறைப் பிக்கப்பட்டன.

(க-து.) அன்னம் தமயந்தியின் முலைகளின் சிறப்புச் சொல்லியது. எ-ம்.

மால்புரி முலைமென் கமலநாண் முகையில் வண்டுவீழ் மாலையோ பசும்பொற், சேலைமீ தணிந்த மேகலை மணியி னொருசுடர்செவ்வனின் றதுவோ நூலினு நுடங்கு மருங்கிறு தனங்க னுண்ணிதிற் சலாகை சேர்த்ததோ, வாலிளந் தளிரி னழகுவீற் றிருந்த வவ்வயி றணிமயி ரொழுங்கே.

[இதனால் வயிற்றுமயிரொழுங்கின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) ஆல்-ஆலினது, இளந்தளிரின்-சிறு தளிரினது, அழகு-அழகானது, வீற்றிருந்த-கொலுவிருக்கப்பெற்ற, அவ்வயிறு-அத்தமயந்தி, வயிற்றை அணி-அலங்கரித்துக்கொண்டிருக்கின்ற, மயிரொழுங்கு-மயிரொழுங்கென்று சொல்லப்படுகின்ற பொருளானது, மால்-ஆசையை, புரி-செய்கின்ற, முலை-முலைகளாகிய, நாள்-மலரும்பருவத்தையுடைய, மெல்-மெல்லிய, கமலம்-தாமரையினுடைய, முகையில்-அரும்புகளில், வீழ் (வந்து) விழுகிற, வண்டு-வண்டுகளது, மாலையோ-வரிசையோ, பசும்பொன்-பசியபொன்மயமாகிய, சேலைமீது-புடவையின்மேல், அணிந்த-தரிக்கப்பட்டிருக்கிற, மேகலை-மேகலாபரணத்தினது, மணியின்-நீலமணியினது, செவ்வன்-நேராக, நின்றது-மேலெழுந்து நின்றதாகிய, ஒருசுடரோ-ஒருகதிரோ, நூலினும்-இழையினுமதிகமாக, நுடங்கும்-அசைகின்ற, மருங்கு-இடையானது, இறுது-ஒடியாதிருக்க, அநங்கன்-மன்மதனால், நுண்ணிதின்-நுண்ணிதாக, சேர்த்தியது-சேர்க்கப்பட்டதாகிய, சலாகையோ-இருப்புக்கம்பியோ எ-று.

ஆடவர்க்கு மற்றை யவயவங்களினும் அதிக விருப்பஞ்செய்தல்பற்றி, மால்புரிமுலையென்றது. மணமுந் தேனும் வெளிப்படாமையால் வண்டு வீழ்தற் கியையில்லாத விளமுகைகளை யொழித்தற்கு, நாண்முகை யென்றது. அதாவது-அன்றைக்கு மலரும் பருவமுடைய வரும்பாம். வண்டு மாலையாவது, வண்டுக ளிடைவிட்டுப்போகாம லொன்றன்பி னொன்றாகத் தொடருந்தொடர்ச்சி- செவ்வனிற்றலாவது, சாய்வின்றி மேலே நிவந்திருத்தல். நூலினுநுடங்கு நுண்ணிய விடைக்குத் தகுதியாக, நுண்ணிதிற்சலாகையென்றது. "வடமொழித் திரிபினி லல்லென் மொழிகளி, லகாரியையு மகரமுமுன் வரும்" இவ்விதியால் அங்கமிலான் அநங்கனென்றாயிற்று. செவிமுதலிய உறுப்புகளுக்குக் குழைமுதலியனபோல வயிற்றிற் கணியாயழகு செய்தலின், அணிமயிரென்றது. [வயிற்று மயிரொழுங்கை அவ்வண்டு மாலைமுதலியனவாகக் குறித்தலாலே, தற்குறிப்பணியும், இதனை அங்கமாகக்கொண்டு ஐயங்களை வகுத்தலால், ஐயவணியும், உபமானமாகிய ஆலந்தளிரினது தன்மையை உபமேயமாகிய வயிற்றிலே ஆரோபித்தலாலே, காட்சியணியுமாம்.] இதனாலே அம்மயிரொழுங்குக் கிடன்சொல்வது போன்று, வயிற்றுச் சிறப்புஞ் சொல்லியதாயிற்று.

(க-து.) அன்னந் தமயந்தியின் வயிற்றுமடிப்பொழுங்கின் சிறப்புச் சொல்லியது எ-ம்.

**படைபுழி வேதன் கமல்மென் மலரைப் பழிக்குமென்கரத்தினு னடுவைப், பிடித்தலும் விரல்க ளழுந்திய வரையோ பெட்புறு மங்கையம் பருவ, மடித்தலஞ் சேர்த்தி யேறுதற் கமைத்த படிகொலோ வவ்வயி றணிந்த, மடிப்புறு வரையி னழகினுக் குவமை மற்றுநா முரைக்குமா றெவனோ.**

[இதனால் வயிற்றுமடிப்புக்களின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) அவ்வயிறு-அத்தமயந்தியின்வயிற்றினால், அணிந்த-தரிக்கப்பட்டிருக்கிற, மடிப்பு - மடிப்புக்களென்று சொல்லப்படுகிற பொருள்களானவை, படைப்புழி (அவளைப்) படைத்தபோது, வேதன் - நான்முகக்கடவுளானவன் கமலமென்-தாமரையெனப்படுகிற, மலரை-பூவை, பழிக்கும்-நிந்திக்கின்ற,மெல்-மெல்லிய, கரத்தினால்-கையினாலே, நடுவை-இடையை, பிடித்தலும்-பிடித்தவளவிலே, விரல்கள் (அவன்கை) விரல்களானவை, அழுந்திய - அழுந்துதலாலுண்டாகிய, வரையோ-மடிப்புக்களோ, பெட்புறு-விரும்பப்படுகின்ற, மங்கையம்பருவம்-மங்கைப்பருவமாகிய (பெண்) அடித்தலம்-அடித்தலங்களை, சேர்த்தி-ஊன்றி, ஏறுதற்கு - ஏறுதற்காக, அமைத்த (அவனாலே) உண்டாக்கப்பட்ட, படிகொல் - சோபானங்களோ, வரையின் - அம்மடிப்புக்களது, உறு-மிகுந்த, அழகினுக்கு-சௌந்தரியத்துக்கு, உவமை- உவமானம், நாம்-நாமம், உரைக்குமாறு-சொல்லுமாறு, எவன்-யாது எ-று. மற்றும்-அசைநிலை.

கமலமென் மலரைப் பழிக்குமென் கரமென்றதனால், அவன் மெல்லிய விடையைப் பிடித்தற்கு அக்கரந் தகுதியுடையதென்றாயிற்று நடுவைப்பிடித்தல் - அதனளவை யறிதற்கென்க. விரல்களழுந்திய வரையென்றதனால், அழுத்திப் பிடித்தானென்பதும், அங்ஙனம் பிடித்தபோது அங்குட்டம் புன்புறத்திற்செல்ல மற்றைச் சுட்டுவிரல் முதலிய நான்குவிரல்களும் முன்புறத்துச் சென்றழுந்துதலால், அவற்று ளொன்றற்கொன்றிடைவெளிகளி லெழும்பி மூன்றுவரைக ளுண்டாயின வென்பதுந் தோன்றுகின்றன. எவனென்பது இன்மைப்பொருளில் வந்தது [வயிற்ற மடிப்புக்களை அவ்விரல்க ளழுந்திய வரைகளாகவும் அப்படிகளாகவுங் குறித்தலால்,தற்குறிப்பணிகளும், இதனை அங்கமாகக்கொண்டு ஐயங்கள் பிறத்தலால் ஐயவணியும், அழகினுக் குவமையில்லை யெனலால், உபமானன் தொக்க, தொகைவுவமையணியுமாம்.] இங்ஙனஞ் சிறப்பிக்கப்பட்டதுவரையின் வடிமேயாதலால், வரையினழகினுக்குவமையென்ற பின்வேறு கூறப்பட்டது.

(க-து-) அன்னம் தமயந்தியின் வயிற்று மடிப்புக்களின் சிறப்புச் சொல்லியது எ-ம்.

**சுணங்குபூத் தொருகாழ் மணிவடங் கிடந்த துணையிள வனமுலை சுமந்து, வணங்கிநா டோறுந் தேய்ந்ததோபெருகும்வனப்பெ**

னுங் கடலுளாழ்ந் ததுவோ கணங்கொள் வண்டார்க்குங்கணை மதன் கண்ணேறெய்தலுங் கழிந்ததோ வன்றி யணங்கரவல்குற் றேர்மிசை வதியு மனங்கனோ விடையறி கிலேமால்.

இதனுலிடையின் சிறப்புச் சொல்லப்படுகின்றது

(இ-ள்.) இடை (அத்தமயந்தியினது) இடையென்று சொல்லப்படுகின்ற பொருளானது, சணங்கு-தேமல், பூத்து-படரப் பற்று, ஒருகாழ்-ஓராளவாகிய சரங்களையுடைய, மணிவடம்-ரத்நகாரம், கிடந்த-கிடக்கப் பற்ற, துணை-இரண்டாகிய, இளவனம்-இளமையுஞ்சந்தனக்கோலமும் பொருந்திய, முலை - முலைகளை, சுமந்தும்-சுமத்தலால், வணங்கி-வளைந்து, நாடோறும்-தினந்தோறும் தேய்ந்ததோ (சிறிதுசிறிதாகத்) தேய்ந்து போயிற்றோ, பெருகும் - பொங்குகின்ற,வனப்பெனும்-அழகென்கிற,கடலுள்-கடலுள்ளே,ஆழ்ந்ததுவோ-முழுகிப் போயிற்றோ, கணம்-கூட்டத்தை, கொள்-கொண்ட, வண்டு-வண்டுகளானவை, ஆர்க்கும்-ஒலிக்கப்பெறுகின்ற, கணை-பூவம்பையுடைய, மதன் - மன்மதனது, கண்ணேறு-பார்வைக்குற்றமானது,எய்தலும்-அடைந்தமாத்திரத்திலே,கழிந்ததோ-இறந்துபோயிற்றோ, அன்றி-அல்லாமல், அணங்கு-அழகாகிய, அரவு-பாம்பின்படம்போலும், அல்குல்-அல்குலாகிய, தேர்மிசை-தேரின்மேலே, வதியும்-இருக்கின்ற, அநங்கனோ- அங்கமில்லாதமன்மதனோ, அறிகிலோம் (யாம்) அறிந்திலோம் எ-று.

இடையானது நுண்ணியதாய்க் காணக்கூடாதிருத்தல்பற்றி அதனை அதன்மேலே கனங்கொண்டிருக்கிற விரண்டு முலைகளாலும் அழுத்தப்பட்டுத் தேய்தற்குவினைதலாகவும், அளவற்றிருக்கையால் அழகைக்கடலாகஉருவகஞ் செய்து அக்கடலிலே மூழ்தற்கு வினைமுதலாகவும்,ஒருவனொருபொருளை வியந்துற்றுப்பார்த்தால் அப்பொருள் அப்பார்வைக் குற்றந்தாங்கியழிதல் உலகியல்பாதலால் மன்மதனது அப்படிப்பட்ட பார்வைக்குற்றந்தாங்கி அழிதற்கு வினைமுதலாகவும், அரசனுக்குத் தேர்போல மன்மதனுக்குப் பகை வெல்லுதற்குத் துணைக்கருவியாகையால் அல்குலைத்தேராக உருவகஞ்செய்து அதன்மேலிருக்கிற உருவமில்லாத மன்மதனாகவுங் குறித்தலாலே, [இந்நான்குந் தற்குறிப்பணிகள்.] இவற்றை அங்கமாகக்கொண்டு ஐயவணிவந்தது. இவற்றுண் முன்னைய மூன்றும் வினைப்பொருட்டற் குறிப்புகள். பின்னது வடிவப்பொருட்டற் குறிப்பு. இவ்வேறுபாடறிதற்கு அவற்றிடை அன்றியென்னுஞ் சொல் வைக்கப்பட்டது. இரண்டாவது தற்குறிப்பு உருவகத்தா லுய்விக்கப்பட்டது.

(க-து.) அன்னம் தமயந்தியினது இடையின் சிறப்புச் சொல்லியது எ-ம். 21

வெங்கதிர் கடவுள் கொடிஞ்சியந் தேர்க்கு வியப்புறவாழியொன் றமைத்த, பங்கமில் ஞெழிலின் பயிர்ச்சியா லநங்கன் பைங்கிளிக் கூந்தன்மா றேர்க்குச், செங்கரும்புருந்த முலரியன் வகுத்ததிகிரியோ

செய்யபொற் றட்டோ வங்கர வல்கு லதனள வுரைக்கினடவ ரவா வின தளவே.

[இதனால் அல்குற்சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) அங்கு-அவ்வரையிடத்தைச்சேர்ந்த, அரவு-பாம்பின்படம்போ லும், அல்குல்-அல்கு லென்று சொல்லப்படுகின்ற பொருளானது, மலர்-தாம ரைப்பூவிலிருக்கின்ற, அயன்-நான்முகக்கடவுளானவன், வெங்கதிர்க்கடவுள் சூரியதேவனுடைய, கொடிஞ்சி-மேன்மொட்டையுடைய, தேர்க்கு-இரதத்தி ற்கு, வியப்புற-ஆச்சரியப்பட்ட, ஆழியொன்று-ஒருருளையை,அமைத்த, அமை வித்த, பங்கமில்-பழிதில்லாத, தொழிலின்-தொழிலினது, பயிற்சியால்-பழக் கத்தினலே, அநங்கன்-மன்மதனது, பைங்கிளி-பச்சைக்கிளியாகிய, கூந்தன் மான்-குதிரையையுடைய, தேர்க்கு-இரதத்திற்கு, செங்கரம்-செய்யகைகளான வை, வருந்த-வருத்தமுற, வகுத்த (அவனாலே) படைக்கப்பட்ட, திகிரியோ- ஒருருளையோ, செய்யபொற்றட்டோ (அக்கடவுளால் அம்மன்மதனுக்குப் படைக்கப்பட்ட) செம்பொற்கோடிகமோ, அதன்-அவ்வல்குலினது, அளவு (பரப்பி) னளவை, உரைக்கின் - சொன்னால், ஆடவர் - காளையாது, அவாவி னது (அதன்மேலுளதாகிய) ஆசையினது, அளவே-அளவேயாகும் (அது) எ-று.

கொடிஞ்சி-தேர்மேன்மொட்டு; "கூவிரம் கொடிஞ்சி கூப்புதேர்மொட் டே" என்பதனாலறிக. பலவுருளைகளின்றியமையாததேர்க்கு ஒருருளை அமை யும்படியாகச் செய்தல் அரியசெயலாதலால், வியப்புறவென்றும்; அங்ஙனஞ் செய்யப்பட்டது நெடுங்காலமாக நிலைபெறுதலாலே பங்கமி ்றெழிலென்றும் கூறிற்று. பின் செய்யப்பட்ட விதற்கு செங்கரம் வருந்தவெனலால், அதினு மிது சிறந்ததாகச் செய்யபட்டமை தோன்றுகின்றது. அதனளவு ஆடவரவா வின தளவெனவே, அவ்வவாவி னளவைப்போல வ அல்குற் பரப்பினள வைக் காணக்கூடா தென்றதாயிற் . "யோவகலல்குல் சூழ்வருதற் காழித் தேர், வேய்யோற்கனேகநாள் வேண்டுமே" என்றார் பிறரும். [அல்குலை அப் படிப்பட்ட உருளையும் பொற்றட்டுமாகக் குறித்தலாலே, தற்குறிப்பணிகளும் இவற்றை யுறுப்பாகக்கொண்டு ஐயம் பிறத்தலால், ஐயவணியும், அல்குலினள வுயாது அது ஆடவரவாவின தளவென்பது படத்தோன்றுகிற விரண்டு வாக் கியப்பொருள்களுக்கு ஐக்கியத்தைச் சொல்லுதலாலே, காட்சி யணியுமாம்.]

(க-து) அன்னம் தமயந்தியின் அல்குற் சிறப்புச் சொல்லியது எ-ம்.

மாந்தளிர்மேனி யரம்பையை வனப்பின் வென்றமான்றிரண் மணிக் குறங்கு, கூந்தலம் பிடியின் கொழுக்கரந் தூரந்து குலவியக வின்குடியிருந்து சேர்ந்தநுண் பஞ்சின் மென்மையவ்வாகிச் செழுமணி மேகலை தாங்கி, யேந்தெழிற் கன்னி யரம்பையின்குலங்களியாவையு மெளிதின் வென்றனவே.

[இதனால் தொடைகளின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மா-மாவினது, தளிர்-தளிர்போலும், மேனி-வடிவத்தையுடைய அரம்பையை-அரம்பையென்பவளை, வனப்பின்-அழகினால், வென்ற-வென்ற மான்-தமயந்தியினுடைய, திரண்மணி-திரட்சியும்அழகும்பொருந்திய, குறங்கு தொடைகளானவை, கூந்தல் - கூந்தலையுடைய, பிடியின்-பெண்யானையினது, கொழுங்கரம்-செழிய துதிக்கையை, துரந்து துரத்தி, குலவிய-விளங்குகின்ற, கவின்-காந்தியானது-குடியிருந்து, குடியிருக்கப்பெற்று, சேந்த-சிவந்த, நுண் நுண்ணிய, பஞ்சின்-பஞ்சினுமதிகமான, மேன்மையவாகி - மெல்லிய குணத்தையுடையனவாகி, செழுமணி-செழிய நவமணிகளாகிய, மேகலை-மேகலையை, தாங்கி-சுமந்து, ஏந்து-ஏந்தப்பட்ட, எழில்-அழகை டைய, கன்னியரம்பையின்-இளவாழைகளது, குலங்களியாவையும்-குலங்களையெல்லாம், எளிதின்-வருத்தமில்லாமல், வென்றன-வென்றன எ-று.

மாந்தளிர் மேனியரம்பை என்றதனாலே, அவளழகிற் சிறந்தவளென்றதாயிற்று. அரம்பை-தேவகன்னிகையருளொருத்தி. வென்ற வென்னும் பெயரெச்சங் குறங்கென்னும் பெயர்கொண்டது. அரம்பையை வனப்பின்வென்ற குறங்கெனவே, அவளுடைய வெல்லா வவயவங்களி னழகுங்கூடி இவளது தொடையழகுக்குங் குறைந்ததென்றதாயிற்று. அரம்பைக்கு அவ்விருபொருள்களும் "அரம்பைதெய்வப்பெண்வாழை"என்பதனாலறிக. [அவ்விரண்டரம்பைகளையும் வெல்லுதலும் பிடியின்கரத்தைத் துரத்தலு மில்லாதிருக்க அவற்றின் சம்பந்தத்தைக் கற்பித்தலாலே, தொடர்புயர்வு நவிற்சியணியாம்.]

(க-து.) அன்னம் தமயந்தியினது தொடைகளின் சிறப்புச் சொல்லியது எ-ம். 23

**பூங்கழை குழைக்கும் வேனில்வேள் பகழி பொதிந்தபொன் னாவம்வெந் கொடுப்ப, வாங்கவன் வெற்றி குறித்திட விரிஞ்சனமைத்தகா களம்வெரீ இயரற்றத் தேங்கமழ் வாவி நீரிடைக்குளித்துச் சினைவரான் மறைந்திட வரையிற்றாங்குதேன்பெய்தபசுசிளங் கழையத் தோழ்மை கொண்டன கணைக்கால்.**

[இதனால் கணைக்கால்களின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கணைக்கால் (தமயந்தியினுடைய) கணைக்கால்களானவை, பூங்கழை-அழகியகருப்புவில்லை, குழைக்கும்-வளைக்கின்ற, வேனில்-வசந்தகாலத்திற்குரிய, வேள்-மன்மதனது, பகழி-பூவம்புகளால், பொதிந்த-நிறைந்த, பொன்-பொன்மயமாகிய, ஆவம் -அம்புக்கூடானது, வெந்கொடுப்ப (தோற்றுப்) புறங்கொடுக்கவும், ஆங்கு-அந்தக்காலத்தில், அவன்-அம்மன்மதனது, வெற்றி வென்றியை, குறித்திட-குறிக்கும்படியாக, விரிஞ்சன் - நான்முகனால், அமைத்த-படைக்கப்பட்ட, காகளம்-காகளமானது, வெரீஇயரற்ற-அஞ்சியொலிக்கவும், தேங்கமழ்-தேன்மணக்கப்பெற்றிருக்கின்ற, வாவி-தடாகத்திலுள்ள, நீரி

டை-நீரின்கண்ணே, குளித்து-மூழ்கி, சினை-சூலையுடைய, வரால்-வராலானது மறைந்திட - ஒளித்துக் காள்ளவும் (செய்து) வரையில் - மலையின்கண்ணே தூங்கு-தங்கிய, தேன் - தேனை, பெய்த - வார்த்து (வளர்க்கப்பட்ட) பச்சிளங் கழையை-பசுமையு மிளமையும் பொருந்திய மூங்கிலோடு, தோழமை-நட்பை, கொண்டன-கொண்டிருந்தன எ-று.

ஆவத்திற்குப் பகழிபோதிந்தவென்றும் பொன்னென்றும் அடைகள் சேர்த்தமையாற், கணைக்காலில் ஆடவரது மனவலியைக் கெடுக்கின்ற குணமும் பொன்னிறமுங்கொள்க. மன்மதன் காகள மெனப்பட்டது-குயி லாம். "கடிமுரசவ கங்குல் களிறுகுயில்களாங்-கொடிமகரந்திங்கள் குடை" என்பதனாலறிக. குயில்-வடிவத்திற்கும் காமுகரை வருக்துதற்கும் கொள்ளப் படும். சினைவராலுக்கு வயிறுபோலக். கணைக்காலிறகுப் பின்புற மேற்பக்கு பருத்திருத்தல் கொள்க. வெங்கொப்ப-வெரீஇயற்ற-மறைந்திட-இவ்வினை யெச்சவடுக்கை முடித்தற்குச, செய்து என்னுஞ்சொல் வருவிக்கப்பட்டது. மூங்கிலுக்குக் கண்டோரால் விரும்பப்படுகிற அதன் செழுமைமுதலிய குண ஙகள் தோன்றற்கு, வரையிற் றூங்குதேன் பெய்தவென்னு மடை கொடுக்கப் பட்டதுபோலும். தோழமை கொண்டன வென்றதற்கு, அவைகளை யொத்தி ருக்கின்றன வென்பது கருத்து. [ஆவமுதலியவை வெங்கொடுக்கச் செய்கை முதலியவற்றின் சம்பந்தத்தைக் கற்பித்தலாலே, தொடர்புயர்வு நவிற்சி யணி யாம்]

(க-து.) அன்னம் தமயந்தியின் கணைக்கால்களின் சிறப்பிச் சொல்லியது எ-ம். 24

முருகவிழ் செய்ய கமலமுண் ணெகிழ்ந்து முகமலர்ந் துறு கணீர்சிந்தி, யொருபசுந் தாளின் வனத்தினின் றரிதி னுஞற்றிய தவ த்தினு லன்றே, விரிமல ரசோகின் றளிர்நலங் கவற்றிமென் சிறை யனமென மிழற்றும், பரிபுர மணிந்து பஞ்சியூட் டியபொற் பதத்தி னைச் சிறிதுபோன் றனவே

[இதனால் அடிகளின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) முருகு-பரிமளமானது, அவிழ்-விரியப்பெற்றிருக்கின்ற, செய்ய கமலம்- சேந்தாமரைமலர்களானவை, உண் ணெகிழ்ந்து-மனமுருகி, உட்கட்டு விட்டு, முகமலர்ந்து-முகக்கிளர்ச்சிகொண்டு, நுனிவிரிந்து, உறு-மிகுந்த, கணீர்-ஆனந்தக்கண்ணீரை, தேனாகியநீரை, சிந்தி-பொழிந்து, ஒருபசுந்தாளின்-பசிய ஒருகாலினலே, ஒருநாளத்தினலே, வனத்தில்-காட்டிலே, நீரிலே, நின்று-நின்று, அரிதின்-அரிதாக, உஞற்றிய-செய்த, தவத்தினுலன்றே-யோகத்தினு லன்றே, விரி-விரிந்த, மலர்-மலர்களை ம், அசோகின்-அசோகத்தினது, தளிர் நலம்-தளிர்களினுயர்ந்ததையும், கவற்றி-துன்பப்படுத்தி, மென்சிறை-மெல் லிய சிறைகளையுடைய, அனமென-அன்னம்போல, மிழற்றும்-ஒலிக்கின்ற, பரிபுரம்-சிலம்பை, அணிந்து-தரித்து, பஞ்சி-செம்பஞ்சை, ஊட்டிய- அப்பப்

பெற்ற, பொன்-பொன்னிறம் பொருந்திய,பதத்தினை-அடிகளை, சிறிதுபோன்றன-சிறியவளவில் ஒத்தன எ-று.

தாமரைக்கு முகமலர்தல் சூரியன்முன்னேயாதலால், அது தவத்திற்கும் கொள்க. வனத்திற்சென்றொருதாளால் நின்றுமனங்குழைந்து சூரியனை நோக்கி ஆனந்தக் கண்ணீர்பொழிந்து செய்யப்படுகிற யோகம் தாமரைக்குச் சிலேடையாற் சொல்லப்பட்டது. பதத்தினைச்சிறிதுபோன்றனவென்றதற்கு, அந்த யோகத்திற்குப் பயனாகத் தமயந்தியின் பதசாரூப்பியத்திற் சிறிது பெற்றனவென்பது பொருள், சரியை-கிரியை - யோகம் - ஞானம் - இவற்றிற்கு முறையே-சாலோக்கியம் - சாமீப்பியம்-சாரூப்பியம்-சாயுச்சியம்-இவை பயன்களாமென்பது சைவாகமத்திற் காணக. [பதத்தினைச் சிறிது போலுதற் கேதுவாகாத அத்தாமரையினது அப்படிப்பட்ட நிலைமையாகிய தவத்தை யேதுவாகக் குறித்தலாலே, ஏதுத்தற் குறிப்பணியும், தாமரை தன்னாலே விரும்பப்பட்ட பதசாரூப்பிய முழுதும் அடையாமையைச் சொல்லுதலாலே, தகுதியின்மை யணியும், இவை பலசேர்தலாலே, சேர்வை யணியுமாம்.]

(க-து.) அன்னம் தமயந்தியினது பாதங்களின் சிறப்புச் சொல்லியது எ-ம். 25

இத்தகைவனப்பின் மடவறன்னை யெவ்வுழிக்கண்டனை யென்னிற், பைந்தபாம்பல்குலரம்பையர் வதியும் பதிதுறந் திம்பரிற்போந்து, மொய்த்தபூம் பொய்கை காணியதேய முழுவதுங் குறுகினன் வற்றுட், கைத்தலமமர்ந்த நெல்லியங்கனியிற் கண்டனன் விதர்ப்பர் கோனகரில்.

[இதனால் நீ அவளை எங்கேகண்டாய் என்கிற வினாவோடுகூடிய உத்தரஞ் சொல்லப்படுகின்றது.

(இ-ள்.) இத்தகை இப்படிப்பட்ட, வனப்பின்-அழகினையுடைய-மடவாரறன்னை-மங்கையை, எவ்வுழி-எவ்விடத்தே, கண்டனை யன்னின்-பார்த்தாயென்று வினவினால், பைத்தபாம்பு-படம்விரித்தபாம்புபோலும்,அல்குல்-அல்குலையுடைய, அரம்பையர்-தெய்வமாதர், வதியும்-தங்கும், பதி-நகரத்தை,துறந்து-விட்டுநீங்கி, இம்பரில்-இவ்வுலகத்தில், போந்து-வந்து, மொய்த்த-நெருங்கிய, பூ-மலர்களையுடைய, பொய்கை-தடாகங்களை, காணிய-பார்க்கும்படியாக, தேயமுழுவதும்-தேயங்களனைத்தையும், குறுகினன்-அடைந்தேனாகி, அவற்றுள்-அத்தேயங்களுள்ளே, கைத்தலம்-உள்ளங்கையில்,அமர்ந்த-தங்கிய, நெல்லியங்கனியின்-நெல்லிப்பழத்தைப்போல,விதர்ப்பர்கோன்-வீமராசனது, நகரில்-பட்டணத்தில், கண்டனன் (அவளைப் பார்த்தேன் எ-று.

பூம்பொய்கைகாணுதல் விளையாடுதற் பொருட்டென்க. அவளிடத்தே சில குறைவுகள் உண்டு அறியப்படாதிருக்கலாகாதாவெனின் அப்படிக்கில்லையென்றற்குக், கைத்தலமமர்ந்த நெல்லியங் கனியெனறது. நெல்லிக்கனியை யுள்ளங்கையில் வைத்துப் பார்ப்போர்க்கு அதனுருவமுழுவதும் நன்றாய்க்

காணப்படுதலறிக. அன்றியும் அக்கனியின் புறவரைகளாலே அகத்துள்ள வித்துவரைகளையும் அளவறிதல்போல, அவள் புறத்துக் குணங்களாலே அகத்துக் குணங்களாலே அகத்துக் கருத்தின் குணங்களையும் அளவறிதற்குச் சொல்லப்பட்டதெனினுமாம்.

(க-து.) இவ்வழகுள்ள தமயந்தியை வீமராஜன் பட்டினத்திற்கண்டேனென் றன்னஞ் சொல்லியது எ-ம். 26

கண்டவுமவட்கு நிகராமகளிர் தம்மிலுங் கண்டிலேன் கதித்துப், பூண்டயங்கிளைய வனமுலைதிளைக்கும் புயமுடையிளைஞன் யாரென்றுத், தேண்டினன்மும்மை யுலகினுங்காணேன் றிருந்தலர்க்கசனி யேறன்ன, வாண்டகாய் நின்னைக் காண்டது நினைந்தே னவ்வளைத் தோளணங் கினையே.

[இதனாலே அப்படி யுன்னுற் காணப்பட்டவளை இங்கே நினைத்தற்குக் காரணம் யாதென்கிற வினாவிற்கு விடைதரல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) திருந்தலர்க்கு- பகைவருக்கு, அசனியேறன்ன-இடியுஞ் சிங்கமும்போலும், ஆண்டகாய்-ஆண்மையுடையவனே, காண்டலும்-கண்டவளவிலே, அவட்கு-அவளுக்கு, நிகர்-நிகர்வாளை, அரமகளிர் தெம்மிலும்-தெய்வமங்கையருள்ளும், கண்டிலேன்-பார்த்திலேன், கதித்து-பருத்து, பூண் ஆபரணங்களால், தயங்கு-விளங்காநின்ற, இளைய-இளமைபொருந்திய, வனம்-சந்தனக்கோலத்தையுடைய, முலை-முலைகளை, திளைக்கும்-தழுவுதற்கு தகுதியுள்ள, புயம்-தோள்களை, உடை-உடைய, இளைஞன்-காளை- யாரென்று-எவனென்று, தேண்டினன்-தேடினேன், மும்மையுளகினும்-மூன்றுலகங்களினும், காணேன்-கண்டிலேன், நின்னை-உன்னை, காண்டலும்-பார்த்தவளவிலே, அந்-அந்த, வளை-வளையல்களையும், தோள்-தோள்களையுமுடைய, அணங்கினை-கன்னியை, நினைந்தேன்-நினைத்தேன் எ-று.

முன்பாட்டிலே 'அரமபையர் வதியும் பதிதுறந்து' என்றதனாலே, தனக்கிடந் தேவலோகமென்பதும்; தேவமகளிரை யெல்லாந் தானறிந்திருக்கையுங் குறிப்பித்தலினாலே, காண்டலுமவட்கு நிகராமகளிர் தம்மிலுங் கண்டிலேன் என்றது. நிகர்வாளென்பவனீறு-கெட்டு நின்றது. அரமகளிர் தம்மிலுமென்றவும்மை-உயர்வு சிறப்பு. "யா அரென்னும் வினாவின் கிளவிய - யத்திணைமருங்கின் முப்பாற்கு முரித்தே" என்னும் விதியால், யாரென்று வென்றது. தேடினனென்னும் வினை எதுகைத்தொடை நோக்கி, விரித்தல் விகாரமாய் வந்த ணகரம்பெற்று நின்றது. யாரென்னு மெழுவாய் வருவிக்க. மும்மை யுலகினுங் காணேனென்றதனால்-தேவர்-உரகர்-மனிதர்-இம் முத்திறத்தாருள்ளுந் தக்கவ னில்லையென்றதாயிற்று. நின்னைக் காண்டது நினைந்தே னென்றதனால், நெடுங்காலத்தின் முன்னே அவனைக்கண்டு இன்றளவும் அவளுக்குத்தக்கவனைக் காணுமையால் அவளைமறந்திருந்து, இப்போது உனது பேரழகு

அவளை நினைப்பிக்க நினைத்தேனென்றதாயிற்று.[அழகொப்புமையால் நளனைக் கண்டு தமயந்தியை நினைத்தலால், நினைப்பணியாம்.]

(க-து.) இவளுக்கு நாயகன் மூன்றுலகினுங்காணேன் உனைக் கண்டவளை நினைத்தேன்-எ-ம். 27

**கேழ்கிளர் தரள வடமிள முலையிற் கிடப்பினன் றேசிறப்பெய்து, மாழையொண் கண்ணி மார்பிடங்கொண்டு வளரிளவனமுலை நினது, பாழியந் தடந்தோட் குவட்டினை யழுங்கப் புல்லினன் றே பயன்பயக்கு, மாழியாய் நினக்கு வனப்பவ ளிளலே லலர்ந்தபா டல நிக ராமால்**

[இதனாலே நீ அவளுக்கு இன்றியமையாச் சிறப்பினை யென்பதும் அவளும் உனக்கு இன்றியமையாச் சிறப்பினை யென்பதுஞ் சொல்லப்படுகின்றன.]

(இ-ள்.) ஆழியாய்-சக்கிரவர்த்தியே, கேழ் - நிறத்தினாலே, கிளர் - விளங்காநின்ற, தரளவடம்-முத்துமாலையானது, இளமுலையில்-இளமைபொருந்திய முலையின்கண்ணே, கிடப்பினன்றே-கிடந்தாலன்றே, சிறப்பெய்தும்-விளங்கும், மாழை-மாவடுப்போலும், ஒள்-ஒளிபொருந்திய,கண்ணி-கண்களையுடையவளது, மார்பு-மார்பை, இடங்கொண்டு-இடமாகக்கொண்டு, வளர்-வளர்கின்ற இளவனமுலை-இளமையுஞ் சந்தனக்கோலமும் பொருந்திய முலைகளானவை, நினது-உன்னுடைய, பாழியந்தடந்தோள்-வலிமையும் விசாலமும் பொருந்திய தோள்களாகிய, குவட்டினை-மலைகளை, அழுங்க-அழுந்த, புல்லினன்றே-சேர்ந்தாலன்றே, பயன்பயக்கும்-விளங்கும், நினக்கு-உனக்கு, அழகு-அழகானது, அவள்-அத்தமயந்தி.இலளேல்-இலளாயின், அலர்ந்த-மலர்ந்த,பாடலம்-பாதிரிப் பூவிற்கு, நிகராம்-ஒப்பாகும் எ-று.

இளமுலையிற் சிறப்பெய்துமென்றுந்-தோட்குவட்டினைப் புல்லிற்பயன் பயக்குமென்றுங்-கூறவே, மற்றையிடங்களிலே வீணுமென்றதாயிற்று. இதனாலே நீயவளுக்கு இன்றியமையாச் சிறப்பினையென்பது காட்டப்பட்டது. அன்றேவிரண்டும்-உலகறிதேற்றத்தில் வந்தன.பாதிரி மலரிலே தகுந்த காயுண்டாகாமைபற்றி, அலர்ந்தபாடல நிகராமென்றது. இதன் முதனூலிலே அவகேசியென்று சொல்லப்பட்டிருக்கின்றது. அது அத்திமுதலிய பூவாது காய்க்கு மரங்களுக்கெல்லாங் கோளியென்பது போலப், பூத்துக்காயாதமரங்களுக்கெல்லாம் பொதுப்பெயராம். இங்கே அவற்று ளொன்றாகியபாதிரிசொல்லப்பட்டது. "அல்கியுந் தீங்கனிமிக்காக்கும் பலவினலர், பல்கியும் பாடலப் பூப்பாழாகு-நல்கிசைகூர், நல்லோர்பார் செல்வஞ் சிறிது நலம் பயக்கு, மல்லோர் பேராக்கமும் வீணும். என்பதனாலறிக தற்கிழமைப்பொருளாகிய அழகைக்கூறவே, பிறிதின் கிழமைப்பொருளாகிய அரசாட்சி செல்வமுதலியவையும் வீணுமென்பது தானே தோன்றுமென்க. இதனாலே அவள் உனக்குக்கிடைப்பாளாயின் உன்னழகு முதலியனயாவும் பயன்படுமென்பது தோன்றலால்,

அவள் உனக்கின்றியமையாச் சிறப்பினளென்பது காட்டப்பட்டது. [இங்கே தாளவடமும் வனமுலையுமாகிய உபமானோபமேயங்களையுடைய விரண்டுவாக்கியங்களிலே இளமுலைக்கும் அரசனுக்கும் பிம்பப் பிரதிபிம்பபாவத்தைச்சொல்லுதலாலே, எடுத்துக்காட் டுவமையணியும்; அரசனாகிய புகழ்பொருளைத் தமயந்தியாகிய ஒருபொருளில்லாமையினாலே தாழ்வடைவதாகக் கூறலால், இன்மை நவிற்சியணியும்; இதுவும் பாடலதிகாரமென்றதனால். உவமையணியும்; இவை பல ஞ் சேர்ந்து வருதலால், சேர்வையணியுமாம்

(க-து.) சக்ரவர்த்தியே தமயந்தி முலைகளானவை உன்னுடைய தோளைச் சேர்ந்தாற் பயனடையும் அவளில்லாவிடில் உனக்கழகு பயன்படாது-எ-ம்.

**கரும்புயன் மறைக்கு மதிக்கதிர் வேட்டல் கைரவமலர் பெறு தனுபோ, லரும்பிளமுறுவ லிளமுலைப்போக மையநீ யெய்துதற்கரி தால், விரும்பினராகி யமரருமிருந்தார் விண்ணவரிடத் தவளார்வம், புரிந்திடாதுனது பேரெழி லவடனு ளத்திடைப் பொறிப்பல் காணு தியால்.**

[இதனால் தன்னுதவி வேண்டுமென்பதைக் காட்டுதற்கு அவளருமைகூறனும் ஆனால் எப்படி அவளை அடையலாமென்றதற்கு உத்தரமுஞ் சொல்லப்படுகின்றன.]

(இ-ள்.) ஐய-அரசனே, அமரரும்-தேவர்களும், பிரும்பினராகியிருந்தார் (அத்தமயந்தியை) விரும்பியிருந்தார், கைரவமலர் - அல்லிமலரானது, கரும்புயல்-கரியமேகத்தினாலே, மறைகரும்-மறைக்கப்பட்டிருக்கின்ற, மதி-சந்திரனது, கதிர்-கிரணத்தை, வேட்டல்-அனுபவித்தலை, பெறுது - பெறமாட்டாது அதுபோல்-அம்மலர்போல, அரும்பிளமுறுவல்-அரும்புகின்ற புன்சிரிப்பையுடையவளாகிய (அத்தேவரால் விரும்பப்பட்டிருக்கின்ற தமயந்தியினது) இளமுலை-இளமுலையினது, போகம்-அநுபவமானது-நீ-நீ, எய்தற்கு - அடைதற்கு, அரிது-அரிதாயிருக்கும், ஆர்வம்-ஆசையை, புரிந்திடாது-செய்யாதிருக்கும்படியாக, உனது-நினது, பேரெழில்-ஒப்புயர்வில்லாதவழகை,அவள்-அவளது, உளத்திடை-மனத்தின்கண்ணே,பொரிப்பல் (யான்) எழுதிவைப்பேன், காணுதி (நீ என்வல்லமையைப்) பார் எ-று.

அமரர் இந்திரன் முதலியோர். அமரருமென்னும் உம்மை-உயர்வு சிறப்பு தான் முன்னறிந்தமையைச் சொல்லுதலால், இருக்கின்றாரென்னாது இருந்தாரென் றிறந்தகாலத்தாற் கூறிற்று. உனது பேரெழிலவட னுளத்திடைப் பொறிப்பலெனவே, உனதுயர் வொப்பிலாத வழகைக்குறித்து அவளிடத்தே பலவிதத்தாலும் புகழ்ந்து அவளது நினைப்பைவிட்டு நீங்காதிருக்கச் செய்வேனென்றதாயிற்று. இங்ஙனஞ் செய்தல் அரிதாதலாலே தகுதிபற்றிப்பாரொன்றதற்கு வல்லமையென்னுஞ் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. [விரும்பினராகி யமரரு மிருந்தாரென்னும் புதப்பொருளால் எய்துத லரிதெனப்பட்ட

தைச் சாதித்தலாலே, செய்யுட் குறியணியாம்.] இதனை அங்கமாகக்கொண்டு உவமையணி வந்தது.

(க-து.) என்னழகை தமயந்தி உள்ளத்தெழுதுவேனென் றன்னஞ்சொல்லியது-எ-ம். 29

செய்தொழில்பயனு னுரைப்பரேயன்றித் தெளிகுநருரையினு னுரையா, ரையமுற்றுடன்பா டெய்துவான் முன்னரறைந்தன னென மடவன்னம், பெய்த சொல்லமுத முள்ளெலாம் பரந்து பெருகி மேல் வருதல்போ னகையாக், கையினாற் பசும்பொற் சிறகர்தைவந் துகாதல் கூர்மொழி சிலபுகன்றான்.

இதனாலே அப்படியே செய்யலாமே என்னோடு சொல்லுதலாற் பயனென்னென்றற்கு உத்தரமும், அரசன் அதற்குக் காதல்கூர்மொழி சிலசொன்னமையுஞ் சொல்லப்படுகின்றன.]

(இ-ள்.) ஐய-அரசனே, தெளிகுநர்-விவேகிகள், செய்தொழில் (தம்மாற்) செய்யப்படுமுபகாரத்தை, பயனால் (அதன்) காரியத்தினாலே, உரைப்பரேயன்றி-செல்லுவரேயல்லாமல், உரையினால்-வாக்கினால், உரையார்-சொல்லார் முற்று-முழுதும், உடன்பாடு (உன்) சம்மதியை, எய்துவான்-அடையும் பொருட்டாகவே, முன்னர்-முன்னாக, அறைந்தனனென-சொல்லினனென்று சொல்லியதாக, மடவன்னம்-இளமைபொருந்திய அன்னத்தினாலே,பெய்த-பெய்யப்பட்ட, சொல்லமுதம்-சொல்லாகிய அமிர்தமானது, உள்ளெலாம்-உள்ளிடமெல்லாம், பரந்து-பரவி, பெருகி-பெருக்கெடுத்து, மேல்-மேலே, வழிதல்போல் (வாய்வழியால்) வெளிப்படுதல்போலும், நகையா-நகைசெய்து, கையினால்-கரத்தினாலே, பசும்பொன்-பசியபொன்வடிவமாகிய, சிறகர்-சிறகுகளை தைவந்து-தடவி, காதல்கூர் மொழிசில-ஆசைமிகு சிலமொழிகளை, புகன்றான் (அரசன்) சொன்னான் எ-று.

முற்றுமென்பதனும்மை தொக்கது. அம்முற்றுமென்னுஞ் சொல் சிறிதும் பிரிதொன்றைக் குறித்ததன்றென்னும் பொருள்படநின்றது. உடன்பாடெய்தாமற் செய்தால் அங்ஙனஞ் செய்யப்பட்டதை நீ அங்கீகாரஞ் செய்யாமற் போவாயாயின் என் முயர்ச்சி வீணாய்த் தீராப் பழிதருமென்னும்பொருளைக் காட்டுதற்கு, உடன்பாடெய்துவான முன்ன ரறைந்தன னென்றது. இதனாலே பின்செய்யப்படு முபகாரத்தை முன்னே சொல்லுதல் தகாதென்றதாயிற்று. செய்தொழிற் பயனே யுரைப்பதையன்றி - ஐயமுற்றிடுதியென்பதான் முன்னர், எனவும் பாடமுண்டு. அப்பாடத்திற்கு இப்பொருளமையாமை காண்க. அன்றியும். ஐயமுற்றிடுதியென நிறுவி, நீ யங்கீகாரஞ் செய்வாயோ செய்யாயோ வென்று நான் சந்தேகமுற்று - எனப்பொருள் கூறினும் அமையும். காதல்கூர்மொழிசில வென்றதற்கு, அன்னத்தினாலே விரும்பப்படுகிற சில மொழியெனவும்; தனது ஆசைமிகுதியை

வெளிப்படுத்துகிற சில மொழியெனவும்; இருபொருள்க. [முதலடியிற் சொல்லப்பட்ட பொதுப்பொருளாலே இரண்டாமடியிற் சொல்லப்பட்ட முன்னாறைதல் தகாதென்னுஞ் சிறப்புப்பொருளைச் சாதித்தலாலே, வேற்றுப்பொருள் வைப்பணியும்; 'குடவளையினங்கள் வயிறுளைந்து' என்னும் பாட்டுமுதலியவற்றுற் சொல்லப்பட்டவை-பெய்த சொல்லமுதம். இதிற் சொல்லமுதமெனவாலே, உருவகவணியும், தெள்ளமுதமெனப் பாடங்கூறின், உருவகவுயர்வு நவிற்சியணியும்; அமுதத்தை அதிகமாகக் குடித்தவனுக்கு எதிர்த்துச் சிறிது வெளிப்படுமாதலின் வெண்மைபற்றி அவனது நகையை அவ்வெளிப்படு மமுதமாகக் குறித்தலாலே, தற்குறிப்பணியுமாம்,] இது அவ்வுருவகத்தாலுய்விக்கப்பட்டது எ-ம்.

(க-து.) அரசன் அன்னத்தைத் தடவிக்கொடுத்து ஆசையோடு சில வார்த்தை சொல்லுவான் 30

பொலன்சிறைப் பவளக்கடிகை வாயனநின் பொற்பினுக் குவமை வேறின்று, நலங்கெழுகுணனு முறைப்பதற்கரிது நல்லெழில் பகருமுன்னூலோ, ரிலங்கெழிலளவு குணமென வுரைப்ப ரிதற்கு மேற்கோளென நின்னைத், துலங்குறக்கண்டேன் விரகநோய் தீர்க்கு மருந்துநின் சொல்லின்வே றுளதோ.

[இதுமுதல் நான்கு பாட்டுகளால் முன்காதல் கூர்மொழி சில வென்னப்பட்டவை சொல்லப்படுகின்றன.]

(இ-ள்.) பொலன்-பொன்வடிவாகிய, சிறை-சிறைகளையும், பவளக்கடிகை-பவளத்துண்டுபோலும், வாய்-வாயையும் உடைய, அனம்-அன்னமே, நின்-உனது, பொற்பினுக்கு-அழகுக்கு, உவமைவேறு-வேறுவமை, இன்று-இல்லை, நலங்கெழு-நன்மைபொருந்திய, குணனும்-உன் குணமும், உரைப்பதற்கு-சொல்லுதற்கு, அரிது-அரிதாகும், நல்லெழில்-நல்லவழகினிலக்கணத்தை, பகரும்-சொல்லுகின்ற, முன்நூலோர்-பழையநூலோர், இலங்கு (ஒரு பொருளிலே) விளங்காநின்ற, எழிலளவு-அழகினனதாகவே, குணமென-குணமும் (அதிலிருக்கு) மென்று, உரைப்பர்-சொல்லுவார், இதற்கு-இந்தச் சித்தாந்தத்திற்கு, மேற்கோளென-உதாரணமாக, துலங்குற, விளங்காநிற்க, நின்னை-உன்னை, கண்டேன் (நான்) பார்த்தேன், விரகம்-விரகத்தாலாகிய, நோய்-காமவியாதியை, தீர்க்கும்-நீக்குகின்ற, மருந்து-ஔஷதம், நின்சொல்லின்-உனது சொல்லைப்பார்க்கிலும் வேறு-வேறாக, உளதோ (எனக்கு) இருக்கின்றதோ எ-று.

உவமை வேறின்றென்றதனுல், அதற்கு அதுவே ஒப்பென்றதாயிற்று. எழிலளவு குணமெனல், எதிலே யெவ்வள வழகிருக்குமோ அதிலே யவ்வளவு குணமிருக்குமென்றல். நின்னை மேற்கோளெனக் கண்டேனெனலால், ஒப்பில்லாத அவ்விரண்டிற்கும் நீ இடமாயிருக்கின்று யென்றதாயிற்று விரக

நோய் தீர்க்குமருந்து நின்சொல்லின் வேறுளதோ என்றதற்கு, அவளைக் கூடு தல் உன்னாலன்றி முடியாதென்பது கருத்து. [எழிலளவுகுணமெனப்பட்ட தைச் சாதித்தற்கு முன் வாக்கியபொருள் ஏது வாகையால், செய்யுட் குறி யணியாம்.]

(க-து.) அன்னமே என் விரகநோய்க்கு மருந்து உன் சொல்லேயல்லாது வேறுண்டோ என்றான் நளன் எ-ம். 31

வெண்ணகைத் துவர்வா யணங்கெழில் பலரும் விளம்பினர் நின்மொழியவளென், கண்ணெதிர்ப் பட்டாள்போலுமெய்த் துணை யாற் கருத்தினாற் காண்டலேகாண்ட, னண்ணிமுற் றோன்றும் பொ ருளுநுண்ணியதே னுடுதற்கரிய லாமுகத்திற், பண்ணியநோக்க நோ க்குநர்க்கழகு பயப்பதையன்றி வேறுளதோ.

(இ-ள்.) வெண்ணகை-வெள்ளியபற்களையும், துவர்வாய்-பவளம்போலும் வாயையுமுடைய, அணங்கு-தமயந்தியினது, எழில்-அழகை, பலரும் (விதர் ப்பதேயத்திலிருந்துவந்த) பலரும், விளம்பினர் (எனக்குச்) சொன்னார்கள் (ஆயினும்) நின்மொழி-உன்சொற்களாலே, அவள்-அம்மங்கை, என்-எனது, கண்ணெதிர்ப்பட்டாள்போலும்-கண்முன்பார்க்கப்பட்டவள்போல் நின்றாள், மெய்-மெய்மையாக, துணையால்-நட்பாளனாலும், கருத்தினால் (தன்) மனத்தி னாலும், காண்டலே (யாவுங்) காணலே, காண்டல்-காட்சியாகும்,முன்-எதிரிட த்தே, நண்ணி-பொருந்தி, தோன்றும்-தோன்றுகின்ற, பொருளும்-பொருளை யும், நுண்ணியதேல்-நுட்பமானதாயிருக்கின், நாடுதற்கரியலா-காணுதற்குச் சான்றாகாத, முகத்தில்-முகத்திடத்தே, பண்ணிய-உண்டாக்கப்பட்ட, நோக் கம்-கண்ணானது, நோக்குநர்க்கு (அப்படித்துணைவனாலும் கருதலினாலும்) காண்கிற வறிவுடையோர்க்கு, அழகு - அழகை பயப்பதையன்றி (அம்முகத் துக்குச் (செய்வதலால், வேறு - மற்றொருபயனைச் (செய்தற்கு) உளதோ - இ ருக்கின்றதோ எ-று.

ஆப்தவாக்கியப பிரமாணத்தினாலே, நின்மொழி அவளென் கண்ணெதி ர்ப் பட்டாள்போலு மென்றானென்க, மெய்யெனலால், சந்தேக விபரீதங்க ளொழிக்கப்பட்டன. துணையென்னும் பெயர் - வேந்து - அரசு - அமைச்சு - என்பவைபோல, உயர்திணை அஃறிணை ஈறுபோலாயது. 'உயர்திணையீறுபோ லஃறிணை வருதலு - மஃறிணை வருதலும் - யீறுபோ லுயர்திணை வருதலு - மரு கல் விதியென வறைந்தன ரான்றோர்" என்பதனாலறிக. தன்மனம்போலவே துணைவனுமென்று அவனிடத்துள்ள நம்பிக்கையை வெளிப்படுத்துதற்கு, க ருத்தினாலென்பது சொல்லப்பட்டது, இதனாலே தன் காட்சியினுந் துணை வன் காட்சியே உயர்வின தென்றதாயிற்று. எங்குமுள்ள வெல்லாவற்றையுந் துணைவன் வாய்மொழியையுந் தன் கருத்தையுங் கொண்டு காணக்கூடுமாத லால் அவற்றாற் காணுதலே காட்சியென்றும், தூரத்திலுள்ளவற்றையே யன்

றிச் சமீபத்திலுள்ள அணுமுதலிய நுண்ணியபொருள்களையுங் கண்ணைக்கொண்டு காணக்கூடாமையால் அவற்றைக் காண்பார்க்கு இக்கண்ணாற் பயனில்லையென்றுஞ், சொல்லப்பட்டன. நண்ணிமுற்றொன்றும பொருளும்பிரியினு மொடுதற் கரியவாண் முகத்திற் பண்ணிய நோக்கம் - எனப் பாடங்கூறி, அதற்கெதிரேயுள்ள பொருளை மனந் தன்னைவிட்டுப் பிரிந்தாற் காணமாட்டாத கண்ணெனப்பொருள் கூறுவாருமுண்டு. அது இதன்முதனூன்முடிபின் வேறுபட்டும் அத்துணைச் சிறப்பின்றி நிற்றலறிக.

(க-து.) அன்னமே உன்சொல்லானது தமயந்தி என்முவந்தாற் போலுமிருக்கின்றது என்றான் நளன் - எ-ம் 32

முருந்திளமுறுவ லழகுரைத்தெவரு மூட்டியகாம வெந்தீயிற், சொரிந்திடுநெய்யிற் குணனெலாமுரைத்தி சொல்லுமவ்வழலிடைப் பெய்து, கரிந்தபைந் தளிரின்வாடு மெற்குறித்துக் கனன்றுகூற்றுறு திசையமர்ந்து, வருஞ்சிறுதென்றன் மலையவெவ்விடங்கால் வாளராவுயிர்ப்பெனலாமால்.

(இ-ள்.) முருந்து மயிலிறகினடிபோலும், இளமுறுவல்-சிறிய பற்களையுடையவளது, அழகு-அழகை, உரைத்து (எனக்குச்) சொல்லி, எவரும் (விதர்ப்பதேயத்திலிருந்துவந்த) பலராலும், மூட்டிய (அச்சொற்களாகிய விறகிலே) மூட்டப்பட்ட, காமம்-காமமாகிய, வெந்தீயில்-வெப்பம்பொருந்திய நெருப்பிலே, சொரிந்திடு - சொரியப்பட்ட, நெய்யின் - நெய்யாக, குணனெலாம் (அவளழகையெல்லாம், உரைத்தி-சொல்லினை, சொல்லும்-சொல்லப்பட்ட அவ்வழலிடை-அக்காமநெருப்பில், பெய்து-இடப்பட்டு, கரிந்த-கரிகின, பைந்தளிரின்-பசியதளிராக, வாடும்-வாடுகின்ற, எற்குறித்து-என்னைக் குறித்து, கனன்று-சுட்டுக்கொண்டு, கூற்று-யமனுனவன், உறு-வாசஞ் செய்யப்பெற்ற, திசை-தென்றிசையில், அமர்ந்து-பொருந்தி, வரும்-வருகின்ற, சிறுதென்றல் இளந்தென்றலை, மலையம்-பொதியமலையிலுவுள்ள, வாள்-ஒளிபொருந்திய, அரா-பாம்புகளது,வெவ்விடம்-கொடிய நஞ்சத்தை,கால்-பொழிகின்ற, உயிர்ப்பெனலாம்-ஊதுகாற்றென்றுசொல்லலாம் எ-று.

அவர்போலத் தமயந்தியி னழகுமாத்திரமேயன்றி, நீயவள் பிறப்பு முதலியவற்றையுஞ் சொன்னையென்றதற்குக், குணனென்றும், அவற்றுளினியறியவேண்டுவது சிறிது மில்லையென்றற்கு, எலாமென்றுங், கூறினனென்க. கூற்றுறுதிசை யமர்ந்துவருஞ் சிறுதென்ற லென்றது, சகவாசகுணம்பற்றி உயிர்க்கொலை செய்யுந்தன்மைத்தென்பது தோன்றற்கென்க. பொதியமலையிலே சந்தனமரங்களின் மணம்பற்றிப் பாம்புகள் அதிகமாயிருந்தலால், மலயவெவ்விடங்கால்வாளராவென்றான். விறகிலே நெருப்புமூட்டி நெய்வார்த்து அதனை யெரிவித்தற்கு ஊதுதல் உலகவழக்கமாதலால், அங்ஙனஞ் சொல்லப்

பட்டது. [தென்றலை அவ்வூதுகாற்றாகக் குறித்தலாலே, தற்குறிப்பணியாம்.] இது உருவகத்தை அங்கமாகக் கொண்டுவந்தது.

(க-து.) தென்றற்காற்றைப் பாம்புகளினது உயிர்ப்பென்று சொல்லலாம் எ-ம். 33

**வெண்கதிர்பரப்பித் தணந்தவரிதய மெழுகெனவுருக்கும்வெண்டிங்கள், கண்கவர்வனப்பி னணங்கினைநினைந்து கவலுமென்னுளத்தினைக் கனத்தத், தண்கதிர்பெறு வென்றழற்று வெங்கதிர் கட்னித்தனிக்கவர் வதற்கன்றோ, வொண்சுட ரிரவியிடத்தினிற் றிங்கடொறுமினி துறவு செய்குவதே.**

(இ-ள்.) வெண்கதிர் - வெள்ளிய கிரணங்களை, பரப்பி - விரித்து. தணந்தவர் - பிரிந்தவரது, இதயம் - மனத்தை, மெழுகென (தீயிற்பட்ட) மெழுகென்னும்படி, உருக்கும் - உருக்காநின்ற, வெண்டிங்கள் - சந்திரனானது, ஒண்சுடர் - ஒள்ளிய கிரணங்களுடைய, இரவியிடத்தினில் - சூரியனிடத்தே, திங்கடொறும் - மாதந்தோறும், இனிது - இனிதாக, உறவு - நட்பை, செய்குவது - செய்துவருகிறது, கண் - கண்களை, கவர் - கவர்கின்ற வனப்பின்-அழகையுடைய, அணங்கினை - அந்தத்தமயந்தியை, நினைந்து-எண்ணி, கவலும்-துன்பப்படுகின்ற, என்னுளத்தினை - எனது மனத்தை, கனற்ற-சுடுதற்கு, தண்கதிர் - சீதளகிரணங்கள், பெறுவென்று (வல்லமை) பெறுவன வல்லவென்று, அழற்று-சுடுகின்ற, வெங்கதிர்கள்- உஷ்ணகிரணங்களை, தனித்தனி-ஒவ்வொன்றாக, கவர்தற்கன்றோ-வெளவுதற்கன்றோ எ-று.

சீதளகிரணத்தினாலே தணந்த பலரையுஞ் சுடாநின்ற சந்திரன் தன்னுள்ளத்தைச் சுடுதற்கு அக்கிரண முதவாதென்று சூரியகிரணத்தை வாங்குகிறதாகச் சொலல்லலால், தன்னை அவரின் மேற்பட்ட மனவலியையுடையவனென்று அங்ஙனஞ் செய்கின்றானென்பது குறிப்பிக்கப்பட்டதாயிற்று [சந்திரன் அமாவாசைதோறுஞ் சூரியனோடுறவுசெய்தற்குப் பயனாகாத அழற்றுவெங்கதிர்க டனித்தனிக்கவர்தலைப் பயனாகக் குறித்தலாலே, பயன்றற் குறிப்பணியாம்.]

(க-து.) சந்திரன் என்னைச் சுடுதற்கோ மாதந்தோறுஞ் சூரியனிடத்தில் உறவுசெய்கின்றது என்றான் நளன்-எ-ம். 34

**காதலங்கடலின் கரைபெறற்கயனார் காரணமின்றியேகாட்டப், பேர்தரும்புணைய தாதியென்னுள்ளம் புலம்புகொண் டினைவது தவிர்ப்பான், தூதுநீபோய்முன் னுரைத்தவா முடித்தனேறுமறு புகழ்தினைக்கென்று, வாதாம்பெருக நன்மொழி புகன்றவ் வனத்தினை மடந்தைபால் விடுத்தான்.**

[இதனாலே அன்னத்தைத் தூதுவிடுதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) காதல்-ஆசையாகிய, கடலின்-கடலினது, கரை-கரையை, பெற்கு (நான்) பெறுதற்கு, காரணமின்றி - ஏதுவில்லாமல், காட்ட (அதனைக்) காண்பிக்க, அயனுரா-விதியினால், போதரும்-வந்த, புணையதாதி-தெப்பமாகும், என்னுள்ளம்-என் மனமானது, புலம்புகொண்டு-துன்பதைக்கொண்டு, இனைவது-வருந்துதலை, தவிர்ப்பான்-தீர்க்கும்படியாக, நீ-நீ, தூது-தூதாக, போய்-சென்று, முன்-முன்னே, உரைத்தவா (உன்னால்) சொல்லப்பட்டவாறு. முடித்தல்-நிறைவேற்றல், தோம -குற்றமற்ற, புகழ்-கீர்த்தியாகும், நினைக்கென்று-உனக்கென்று, ஆதாரம்-அன்பானது, பெருக-வளர, நன்மொழி - முகமன் சொற்களை, புகன்று-சொல்லி, அவ்வனத்தினை - அவ்வன்னத்தை, மடந்தையால்-தமயந்தியினிடத்து, விடுத்தான்-அனுப்பினன் எ-று.

காதல்-தமயந்திமேலாசை- கரைபெறுதல்-அவளையடைதல் இங்கே காரணமின்மை-தன் முயர்ச்சியில்லாமை. காரணமின்றி அயனாற் போதரும் புணையெனவே, என்முயற்சியாலன்றி முன்னை நல்வினையாற்கிடைத்த புணையென்றதாயிற்று- முன்னுரைத்தவா முடித்தியெனவே, நீதானே இதுகாரியத்திலே முயலாநிற்க நான் உன்னை முயல்வித்தல் கிசைபட்டமாவைப் பிசைதல்போலுமா மென்றதாயிற்று. தோமறுபுகழ்-உலகமுள்ளளவும் அழியாது நிற்கும் புகழ். [அயனாற் பேதரும் புணையெனலால், உருவகவணியும்; முடித்தல் புகழெனக் காரணகாரியங்களுக்கு ஒற்றுமையைச் சொல்லுதலால், ஏதுவணியுமாம்.]

(க.து-) நளமகாராஜன் அன்னத்தைத் தமயந்தியினிடத்துத் தூது விட்டான் எ-ம். 35

போதருநெறியி னன்மைகள்பயக்க பொருந்துறு கிளையொடுபுல்லி
யாதரம்பெருகு மளியனைமறவே லாயிழையருண்முகம் பெற்றுத்
தீதறவிரைவில் வருதியென்றுரைத்துத் திங்களி னருஞ்சுதை தீற்று
தாதவிழ்தாம மாடமேற்றானுந் தனியுமாயிருந்துட னளர்ந்தான்.

[இதனால் போம்போது அதற்குச் சொல்லப்பட்டவையும் பின்வருந்தியிருக்கின்றபடியுஞ் சொல்லப்பட்டிருக்கின்றன.]

(இ-ள்.) போதரும்-போகின்ற, நெறியில்-வழியில், நன்மைகள்-சுபங்களானவை, பயக்க (உனக்கு) உண்டாகுக, பொருந்துறு-பொருந்திய, கிளையொடு (உன்) சுற்றத்துடனே, புல்லி-கூடி, ஆதரம்-ஆசையானது, பெருகும்-வளரப்பெற்றிருக்கின்ற, அளியனை-எளியேனை, மறவேல்-மறவாதே,ஆயிழை-தமயந்தியினது, அருண்முகம்-அருளோடுகூடிய வாக்கை, பெற்று-அடைந்து, தீதற-குற்றமற, விரைவில்-சீக்கிரத்தில்,வருதியென்று-வாவென்று,உரைத்து-சொல்லி திங்களின்-சந்திரன்போலும், அருஞ்சுதை-அரிய சுண்ணச்சாந்தை, தீற்று-தீற்றப்பெற்றுள்ள, தாது-பொடியை யுடைய, அவிழ்-மலர்ந்த, தாமம்-பூமாலைகள் பொருந்திய, மாட மேல்-மேல்வீட்டிலே, தானும், தனியுமாய்-ஒரு

வருடமுடனில்லாமையுமாகி, இருந்து-இருந்து, உடல்-உடம்பு, தளர்ந்தான்-தளரப்பெற்றிருந்தான் எ-று.

நன்மைகள் பயக்கவென்றது-வாழ்த்து. மறவேலென்றது-வேண்டிக்கோடல். வருதியென்றது-விதி. முகம்-ஆகுபெயர். நீமீண்டுவருவதற்குக்காலநீட்சியுண்டாமாயின் அதுவரையில் என்னுயிர் நிற்கமாட்டாது; உன் முயர்ச்சிவினையைப் பழிபடுமென்பது தோன்றற்குத், தீதறவிரைவில் வருதியென்றுனென்க. விடுத்தபின்னுரைத்தல் பொருந்துமோவெனின், போகத் தொடங்குகையில் ஆசைமிகுதியாற் சொல்லுதலும் உலகவழக்க மாதலாலே பொருந்துமென்க. தானுந் தனியுமாயிருந்தென்றதனால், உயிர்போற் சிறந்த நற்பாளரையும் விலக்கியிருந்தா னென்றதாயிற்று.

(க-து.) நளன் அன்னத்தைத் தூதுபோய் வாவென்றுசொல்லி யனுப்பித் தனித்திருந்து உடல் வருந்தினுன்-எ-ம். 36

ஈங்கிவன்மாழாந் தன்னமென் சொல்லா லின்னுயிர் தாங்கினனிருப்பத், தீங்கரும்பனுக்கு நவாங்குயிற்கிளவி செவ்விநண் களிப்புறநோக்கி, யாங்கணுற்றிற்றைப் பகலைநற்பகல தாக்குவலென்மனம் வலியாப், பூங்கனிநிறைநீர்ப் பொற்குடமெதிரப் போயதுபொலன் சிறை யன்னம்.

[இதுமுத லிரண்டு பாட்டுகளால் அன்னததின் செலவு சொல்லப்படுகின்றது.]

(இ-ள்) ஈங்கு - இவ்விடத்தே, இவன் - இவ்வரசன், மாழாந்து-அறிவு கலங்கி, அன்னம் - அன்னத்தினது, மென்சொல்லால் - மெல்லிய சொல்லால், இன்னுயிர்-இனிதாகிய வுயிரை, தாங்கினன்-தாங்கினவனாகி, இருப்ப-இருக்க, தீங்கரும்பு-மதுரமாகிய கன்னலை, அருக்கும்-கொடுக்கின்ற, மாங்குயில்-மாங்குயிலிசைபோலும், கிளவி-சொல்லையுடையவளது, செவ்வி-அழகை, ஆங்கண்-அவளிருக்கிறவிடத்தை, உற்று-அடைந்து, கண்களிப்புற (என்) கண்களிகூற, நோக்கி-பார்த்து, இற்றைப்பகலை - இரத்தினத்தை, நற்பகலதாக்குவலென-நல்லதினமாக்குவனென்று, மனம்வலியா - மனத்திலெண்ணி, பூங்கனி-அழகியபழமும், நிறைநீர்-நிறைந்த நீரையுடைய, பொற்குடம்-பொற்குடமும், எதிர-தனக்கெதிர்ப்பட்ட, பொலன்சிறை-பொற்சிறைகளை யுடைய, அன்னம்-அன்னமானது, போயது-போயிற்று எ-று.

அன்னமென்சொல்லா லின்னுயிர்தாங்குதல், அது தன் விருப்பப்பொருளைப் பெறுதற்கு உபாயமாகையாலே தைரியங்கொண்டிருத்தல். பூங்கனி - அவ்வனத்தில் ஓர் மரத்தின்பழம் பழமும் நிறைநீர்க்குடமும் எதிர்ப்படின் அவை விரும்பப்பட்ட காரியங் கைகூடுமென்பதை முன்னறிவிக்கின்ற நல்ல நிமித்தங்களாம். இது நிமித்தநூலிலே சொல்லப்படுவது.

(க-து.) அன்னமானது நற்சகுனங்காணச் சென்றது எ-ம். 37

கட்புலன் கதுவா துயர்ந்துபின் னெவருங் காண்வர வெள்ளி டைப்பறந்து, புட்செறிவாவிப் புகாதகல் விசும்பிற் பொன்னுரைத் தாலெனப்போகி, நட்பமாய் குநர்க்கு மதிசயம்பயப்ப நொடிவரைப் புகுந்ததவ் வன்னம், வட்கிவெண் மதியஞ் செவிகெட வொளிரு மாடமார் குண்டின புரமே.

(இ-ள்.) அவ்வன்னம்-அவ்வன்னமானது, கண்-கட்பொறிகளுக்கு,புலன் விஷயமாக, கதுவாது-பற்றப்படாமல், உயர்ந்து-மேலெழும்பி, பின் (அதன்) பின்பு எவரும் - யாவரும், காண்வர (தன்னைக்) காண, வெள்ளிடை - ஆகாயத தில், பறந்து-பறந்து, புள் - பறவைகளானவை, செறி - நெருங்கப்பெற்ற, வாவி-தடாகங்களிலே, புகாது- செல்லாமல், அகல்விசும்பில்-விரிவுள்ள வாகா யமாகிய (உரைகல்லில், பொன் (தன்சிறைகளின்) பொன்னை, உரைத்தாலெ ன - உரைத்ததுபோல, போகி-சென்று நட்பம்- காலநுட்பத்தில், ஆய்குநர்க் கும் - ஆராய்கின்றவருக்கும், அதிசயம்பயப்ப - ஆச்சரியமுண்டாக, நொடிவ ரை-நொடியளவில், வெண்மதியம்-வெள்ளைச்சந்திரனனது, வட்கி-நாணி, சவி கெட, ஒளிரும் - விளங்காநின்ற, மாடம் - மாளிகைகளால், ஆர் - நிறைந்த, குண்டினபுரம்-குண்டினபுரத்திலே, புகுந்தது-சென்றது எ-று.

மேலெழும்புகிற விசையாற் காணப்படாமைபற்றிக்,கட்புலன்கதுவா துயர்ந்தென்றும்; பின் மேலிருந்து வழி நிதானித்துச் செல்லுஞ் சிறிது காலத்தி லேயாவராலுங் கண்களிகூறக்காணப்படுதலால்,எவருங்காண்வரவெள்ளிடைப பறந்தென்றும்; சுற்றத்தோடுகூடியின்புறுதலையும் வழியிடையிற் சற்றேதங்கி இளைப்பாறுதலையும்விட்டு அரசன்காரியத்தையே பெரிதாக நினைத்துப்போத லாற், புட்செறிவாவி புகாதென் ம்; சொல்லப் பட்டன. உரைத்த தென்னும் வினைமுற் -உரைத்தாலெனத் திரிந்தது. நட்பமாய்குநர்-கீழே அந்நிலைக் கண்டு அக்கணத்திற்கு ினை மேலே பார்ப்பவர். [பறத்தல் வேகத்தினலே அதன் பொன்னொளி தாரையாக விழுதல்பற்றிபொன்னுரைத்ததெனக் குறி த்தலால், தற் குறிப்பணியுமாம்.]

(க-து.) அன்னமானது குண்டினபுரத்திற் சென்றது எ-ம். 38

† கலிவிருத்தம்.

மன்னு மாநகர் மேய வளனெலா
மன்னங் கண்ணுற் றதிசயத்தேகனு
முன்னங் கண்டது மூசுவண் டார்தெழப்
பொன்னந் தாதவிழ் பூந்துணர்ச் சோலையே.

[இதனல் வனக்காட்சி சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) அன்னம்-அன்னமானது, மன்னும்-நிலைபெற்ற, மா-பெருமை பொருந்திய, நகர்-குண்டினபுரத்தில், மேய - தங்கிய, வளனெலாம்-சிறப்புக்

களை யெல்லாம், கண்ணுற்று-பார்த்து, அதிசயித்து-ஆச்சரியப்பட்டு, எகலும்-போமளவிலே, முன்னம் (தன்) னெதிரே, மூசு-மொய்க்கின்ற,வண்டு-வண்டு களானவை, ஆர்த்து-ஒலிசெய்து, எழ-எழும்பாநிற்க, பொன்-பொன்னிறம பொருந்திய, தாது-பொடியுடனே, அவிழ்-விரிகின்ற, பூ-மலர்கள்பொருந்திய, துணர்-கொத்துக்களை டைய, சோலை (தமயந்தியினது) வனத்தை, கணடது பார்த்து எ-று.

அரும்புகளா யிருக்கும்போது மொய்த்தவண்டுகள் விரியும்போது அஞ்சி யெழுமாதலால், ஆர்த்தெழவென்னும் வினையெச்சம் அவிழென்னும் வினை கொண்டதென்க. அன்றி தன் சிறைக்காற்றால் அஞ்சியெழக் கண்டது என முடிக்கினுமமையும்.

(க-து.) அன்னமானது குண்டினபுரத்தைப்பாாத்துப் போம்போது தம யந்தி வனத்தைக்கண்டது. எ-ம். 39

சோலை வாயிற் சுடரு நிலாமணி
யால வாலத் தவிர்மதி யாற்புனல்
காலவாய்ந்த கதிர்மணி முல்லையின்
கோல நாண்மலர் கொய்வதற் கெய்தினாள்.

[இதனால் அசசமயத்திலே தமயந்தி அஙகே வருவதற்கு நிமித்தஞ் சொல் லப்படுகின்றது.]

(இ-ள்.) சோலைவாயில்-அச்சோலையின்கணணே, ஆலவாலத்து-பாத்தி களில், சுடரம்-விளங்குகின்ற, நிலாமணி-சந்திரகாந்தங்கள், அயிர்-விளங்கா நின்ற, மதியால்-சந்திரகிரணத்தினாலே, புனல்-நீரை, கால-உக்க,வாய்ந்த(அத னால்) நிலைபெற்ற, முல்லையின்-முல்லைக்கொடிகளுடைய, கதிர்கிரணத்தை யுடைய, மணி-முததுபபோலம், கோலம்-அழகிய, நாள்-அன்றுபூத்த, மலர்-மலர்களை, கொய்வதற்கு-பறிப்பதற்கு, எய்தினாள் (தமயந்தி) வந்தாள் எ-று.

[இப்பாட்டின் பொருள் செல்வமிகுதியைச் சொல்லதலென்னு மிலக் கணத்தால், வீறுகோளணியும்; சந்திரகாந்தத்தின் அவ்வளவு நீர்ப்பெருக்கு க்கு முல்லைக்குஞ் சம்பந்தமில்லாமையிலே சம்பந்தத்தைக் கற்பித்த லென்று மிலக்கணத்தால், தொடர்புயர்வு நவிற்சியணியும்; ஆதலால்-ஒருதொடர்ப்பொ ருட் கலவையணியாம்.]

(க-து.) தமயந்தி மலர் கொய்தற்குச் சோலைக்குள் வந்தாள்-எ-ம், 40

மீதுலாயவெண் டாரகைநாப்பணிற்
சீதவொண்கதிர்த் திங்கள்கண்டாலென

---

† தொல்காப்பியம்-பத்தெழுத்தென்பநோடிக்களவே, யொத்த நாலெழு த்தோற்றங் கலடியே,

மாதர்நோக்கின் மடந்தையர்நாப்பணிற்
காதல்கூர்தம யந்தியைக்கண்டதே.

[இதனாலே காட்சி சொல்லப்படுகின்றது.]

(இ-ள்) மீது-ஆகாயத்திலே, உலாய-திரிகின்ற, வெண்டாரகை-உடுக்களது, நாப்பணில்-நடுவில், சீதம் - குளிர்ச்சிபொருந்திய, ஒள்-ஒள்ளிய, கதிர்-கிரணங்களையுடைய, திங்கள்-சந்திரனை, கண்டாலென - கண்டதுபோல, மாதர்-அழகிய, நோக்கின்-பார்வையையுடைய, மடந்தையர்-மாதரது, நாப்பணில்-நடுவில், காதல்கூர்-விருப்பப்படுகிற, தமயந்தியை-தமயந்தி யென்பவளை, கண்டது (இவ்வன்னமானது) பார்த்தது எ-று.

இவ்வுவமையினாலே தமயந்தியினுடைய தோழிகளெல்லாரும் ஒரு நிகரான வழகுடையவர்களால் விளங்குதலும், அவள் அவர்களுக்குள்ளே நடுநாயகமாய் விளங்கலுங்காண்க.

(க-து.) அன்னந் தமயந்தியைக்கண்டது-எ-ம். 41

கண்ணுங்கைரி முகமுங்கமலமா
நண்ணுஞ்சண்பக நாண்மலர்மேனியா
வண்ணல்வேளை வழிபடற்காற்றிய
வண்ணமாலைகொ லொன்றுமருண்டதே.

[இதனால் அவளை வியந்தமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கண்ணும்-கண்களும், கையும்-கைகளும், முகமும்-வதனமும், கமலமா-தாமரை மலர்களாகவும், மேனி-வடிவமானது, நண்ணும்-பொருந்திய, நாள் - அன்றுபூத்த, சண்பகம் - சணபகத்தினுடைய, மலா - மலர்களாகவுந் தோன்றலால், அண்ணல்-தலைவனாகிய, வேளை-மதனை, வழிபடற்கு-பூசித்தற்பொருட்டு, ஆற்றிய-செய்யப்பட்ட, வண்ணம்-அழகிய, மாலையென்று-தொடையென்று, மருண்டது-மயங்கிற்று அன்னம் எ-று.

கமலமாக-மலராக-வென்கிற செயவென்வாய்ப்பாட்டுவினையெச்சங்களீறுகெட்டுவந்தன. அவற்றை முடித்தற்குத் தோன்றலாலென்னுஞ்சொல் வருவிக்கப்பட்டது. நான்கு ஜாதிகளினுஞ் சிறந்த பதுமினிச் சாதியால் "சண்பக மலரெனச் சிவந்தமேனியாள்" என்று சொல்லப்பட்டமையால், இவள் அச்சாதியாளென்றுயிற்று- [தமயந்தியைஅப்படிப்பட்டமாலையென்றுமயங்குதலால், மயக்கவணியாம்.]

(க-து) அன்னமானது தமயந்தியை மாலையென்று மயங்கியது-எ-ம். 42

வழிந்து தெள்ளமு தூர வளர்ந்துமா
சொழிந்த திங்களை யூர்வளைந் தாலெனச்
செழுந்தண் கோதை திருமுக முள்ளுறச்
சுழன்று தாழ்ந்தது தூச்சிறை யன்னமே.

[இதுமுதன் மூன்றுபாட்டுகளால் பின் அன்னத்தின் செயல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) தூ,பரிசுத்தமாகிய, சிறை-சிறைகளை உடைய, அன்னம்-அன்னமானது, வழிந்து-பெருக்கெடுத்து, தெள்ளமுது-தெள்ளியவமிர்தமானது, ஊற-சுரக்க, வளர்ந்து-நிறைந்து, மாசு-குற்றத்தின், ஒழிந்த-நீங்கிய, திங்களை-சந்திரனை, ஊர்-பரிவேடமானது, உளைந்தாலென-சூழ்ந்ததுபோல, கோதை-தமயந்தியினது, செழுந்தண்-செழுமையும் குளிர்ச்சியும் பொருந்திய, திரு-அழகிய, முகம்-முகமானது, உள்-நடுவில், உற-பொருந்த, சுழன்று-சுற்றிவந்து, தாழ்ந்தது-இறங்கிற்று எ-று.

மாசொழிந்த திங்களையென்றதற்குக் களங்கமில்லாத சந்திரன் ஒன்றுண்டாயின் அதனை யெனப்பொருள்கூறி இல் பொருளுவமையாக்கினு மமையும் சந்திரனுக்கு அமிர்தம்போல முகத்திற்கு மதுரவாக்குக் கொள்க. ஊர்வளைந்தாலெனச் சுழன்றெனவே, சுழற்சிவேகத்தினால் இதன் பொன்னொளி வலயமாக வீழ்ந்ததென்பது தோன்றுதலறிக. பறவைக்கு ஆகாயத்திலிருந்து கீழே இறங்கும்போது தங்குதற்குத் தகுந்த விடத்தைச் சுற்றிக்கொண்டே பார்த்தல் சுபாவம். [உவமையுந் தன்மைநவிற்சியுஞ் சேர்தலாற்,சேர்வையணியாம்.]

(க-து.) அன்னமானது தமயந்தியைச் சுற்றிவந் திறங்கிற்று-எ-ம். 43

தெய்வத் தாமரைப் போதுறை செல்வியுங்
கொவ்வைவா யயிராணியுங் கூறுமிந்
நவ்வி நோக்கிக் கிணையென நாட்டுத
லெவ்வமென்ன விகழ்ந்து வியந்ததே.

(இ-ள்.) தெய்வம்-தெய்வத் தன்மைபொருந்திய, தாமரைப்போது-தாமரைப்பூவின்கண், உறை-வாசஞ்செய்கின்ற, செல்வியும் - திருமாதும், கொவ்வை-கோவைப்பழம்போலும், வாய்-வாயையுடைய, அயிராணியும்-இந்திராணியும், கூறும்-சொலலப்பட்ட. இந்நவ்விநோக்கிக்கு மான்கண்போலுங் கண்களையுடைய இவளுக்கு- இணையென-உபமாவரென்று, நாட்டுதல்-நிறுத்துதல், எவ்வமென்ன-குற்றமென்று, இகழ்ந்து (அவ்விருவரையு) மிகழ்ந்து, வியந்தது (இவளழகைக்குறித்து) ஆச்சரியப்பட்டது அன்னம் எ-று.

தெய்வம்-அடங்காவழிச்சந்தி. [உபமானங்களுக்குக் குறைவைச்சொல்லுதலால், உதிர்நிலை யுவமையணியாம்.]

(க-து.) அன்னமானது இலக்குமியையும் இந்திராணியையு மிகழ்ந்து தமயந்தியைப் புகழ்ந்தது-எ-ம். 44

வேறு.

சுலவுற் றெதிர் போகிய தூவியனங்
குலவுற் றபெலன் சிறையைக் குவியா

நிலனுற் றெறிநீள் சிறைமெல் வளியா
லலைவுற்ற மருங்கி னளஞ்சின ளால்.

(இ-ள்.) சலவுற்று-சூழ்ந்து, எதிர் (தமயந்தி) முன்பு, போகிய - சென்ற, தூவி - இறகுகளையுடைய, அனம் - அன்னமானது, வலவுற்ற - வளைவுபொருந்திய, பொலன் - பொன்மயமாகிய, சிறையை - சிறைகளை, குவியா - குவித்து, நிலன்-பூமியின்கண்ணே, உற்று-பொருந்தி, எறி (அப்போது) உதரப்பட்ட, நீள்-விரிந்த, சிறை (அதன்) சிறைகளது, மெல்வளியால்-மெல்லியகாற்றோசையால், அலைவுற்றமருங்கினள்-அசைவுற்ற விடையையுடைய தமயந்தியானவள், அஞ்சினள்-அச்சமுற்றாள், எ-று.

வேறொன்றிற் கருத்துவைத்திருக்கின்றவளுக்கு முன்னே அன்னஞ்சரேலென்றிறங்குஞ் சமயத்தில் விரித்தடித்துக்கொள்ளுஞ் சிறைகளின்காற்றோசை ஆகஸ்மிகமாக உண்டாதலால், அச்சமுண்டாயிற் றென்க- அன்றியும்- அலைவுற்ற மருங்கினளெனலால், காற்றால் இடைமுரியுமென்றஞ்சினளெனினுமாம். [இது தன்மை நவிற்சியணி.]

(க-து.) தமயந்தியானவள் அன்னத்திறகுகளின் காற்றோசையாலச்சமுற்றாள் எ-ம். 45

பொறியின் வழிநெஞ்சு புகுத்தி யிடா
ரறிவின் னறிவா யவரும் பொருளைப்
பிறிதொன் றறநோக்குதல் போற் பிறழு
மறியுண் கணின் மங்கையர் நோக்கினரால்.

[இதனால் மங்கையர்க்கு அதனிடத்துண்டான விருப்பமிகுதி சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) பொறியின்வழி-ஐம்பொறிகளின்வழியிலே, நெஞ்சு-மனத்தை, புகுத்தியிடார்-செலுத்தாதயோகிகள், அறிவின்-ஞானக்கண்ணினாலே, அறிவாய-அறிவுருவாகிய, அரும்பொருளை - பிரமத்தை, பிறிதொன்று-மற்றொரு விஷயசம்பந்தம், அற-நீங்க, நோக்குதல்போல்-பார்த்தல்போல், மங்கையர்-தோழிகளானவர் (பிறிதொன்று) மற்றொருவிஷய சம்பந்தம் (அற) நீங்க, பிறழும்-புறளுகின்ற, மறி-மான்கண்போலும், உண் (மை) யுண்ட, கணின் (முகக்) கண்களாலே (அறிவாய) அறிவையுடையதாகிய (அரும்பொருளை) அபூர்வமாகிய அன்னத்தை, நோக்கினர்-பார்த்தல் செய்தார் எ-று.

அறிவினறிவாயவென ஒற்றிரட்ட வேண்டாவிடத்துச் சந்தநோக்கி இரட்டித்தது. உலகம் அஞ்ஞான மயமாகியும் பிரமம் ஞானமயமாகியு நிற்றலின் அறிவாயவென்றார். "அகரவுயிர்போ லறிவாகியெங்கு, நிகரிலிறைநிற்கு நிறைந்து" என்பதனாலறிக. பிறிதொன்றறவென்பதற்கு-அப்பிரமமன்றி இரண்டாவதொரு பொருளில்லையாமவெனினுமாம். [இது உவமையணி.]

(க-து.) பாங்கிமார்க ளன்னத்தைப் பார்த்தார்கள் எ-ம். 46

அணித்தா யரிதா யவரும் பொருளைப்
பிணிப்பாண சைவத் தமர்பெற் றியர்போ
லணித்தா யவனங் கவர்வா னசையான்
மணிப்பூ ணசையா தயந்திந் தனளால்.

[இதனால் தமயந்தி அந்நே விரும்பிப் பிடிக்கத் தொடங்கினமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) அணித்தாய்-தேகத்தினுளிருக்கின்றதாய் அரிதாய், (பெறுதற்) கரிதாகிய, அரும்பொருளை-பிரமத்தை, பிணிப்பான்-கண்டுபிடித்தற்பொருட்டு நசைவைத்து (அதனிடத்தே) ஆசைவைத்து, அமர்-அசைவற்று நிற்கின்ற, பெற்றியர்போல்-மனச்செய்கையையுடைய முனிவர்போல், அணித்தாய-சமீபத்திலுள்ளதாய் (அரிதாய) அபூர்வமாகிய, அனம்-அன்னப்பறவையை, கவர்வான்-பிடித்தற்பொருட்டு, நசையால் (அதன் மேல் வைக்கப்பட்ட) ஆசையினாலே, மணி-நவமணிகளாலாகிய, பூண்-ஆபரணமானது, அசையாது-அசையாதிருக்கும்படி, வதிந்தனள் (தமயந்தி) தங்கினள் எ-று.

பிரமம் உடம்புதோறும் உயிர்க்குயிராய்க் கலந்துநிற்றலின், அணித்தா யென்றதற்குத் - தேகத்தினுளிருக்கின்றதா யெனப்பொருள் கூறப்பட்டது. பூணசையாதெனவே, வடிவமசையாமை கூறப்பட்டதாயிற்று; அது யோகிகள் மன மசையாமல்வைத்துப் பிரமத்தைக் காணுமாறுபோல "வாயுநிற்ப மன நின்று மனந்தானிற்பப் பொறிநின்று, பாயபொறிகணிற்பவிடர் படிபுன்புல ன்க ணின்றனவா, லாயபுலன்க ணின்றமையா லகிலந்தோன்று துள்ளத்தே, தூயபரமானந்தபரஞ் சோதிதோன்றக் கண்டிருந்தார்" என்பதனாலறிக [இது உவமையணி.

(க-து.) தமயந்தி அன்னத்தைப்பிடிக்கும்படி யசைவற்றிருந்தாள் எ-ம்.

அவிர்பூ ணொலியாம லடக்கின ளாய்க்
கவர்வான் வரல்கண் டுமகன் றிலதாய்த்
துவர்வாய் மயிறொட் டிடலாகு மெனு
நவை தீரன் மெல்ல நடந்ததுவே.

[இதனால் அப்போது அன்னத்தின்செயல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) அனம்-அன்னமானது, அவிர்-விளங்காநின்ற, பூண்-பூண்களை, ஒலியாமல்-ஒலியாதிருக்க, அடக்கினளாய்-அடக்கினவளாகி, கவர்வான் (தன்னைப்) பிடிக்கும்படியாக, வரல்-வருதலை, கண்டும்-பார்த்தும், அகன்றிலதாய் (தைரியத்தினு) லோடிப்போகாததாகி, துவர்-பவளம்போலும், வாய்-வாயை யுடைய, மயில்-மயில்போல்பவளாலே, தொட்டிடலாகுமென்னும்-பிடிக்கக்

கூடுமென்கின்ற, நவை-இகழ்ச்சியானது, தீர்-தீர, மெல்ல நடந்தது-மெள்ள நடந்தது எ-று.

தொட்டிடலாகுமெனு நவை தீரென்றலிற், பிடித்தற் கெளிதென்னு மெண்ணத்தை அவளுக் குண்டாக்கி அவள்கை தன்மேல்விழவருந்தோறுந் தன் குதிப்பினாலே தப்பித்துக்கொண்டு அவண் முயற்சியை வீணாக்கிற்றென்க தீரவென் வினையெச்சம் ஈறுகெட்டது. விரைந்து நடப்பிற் பிடிபடாதென்று தொடாளெனா அவணடைக்கேற்ப மெல்ல நடந்த தென்க.

(க-து.) அன்னமானது தமயந்தி தன்னைப் பிடிக்கும்படி மெள்ள நடந்தது எ-ம். 48

புளினத் தடமேவிய போகுமென
மெளிதிற் றனகம் மலரெய் துறுமோ
வுளம்வைத் தமையென் னெனவொண் ணுதலார்
நளினக்கை புடைத்து நகைத்தன ரால்.

[இதனால் மங்கையர் தமயந்தியைத் தடுத்தமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) ஒள் - காந்திபொருந்திய, நுதலார் - நெற்றியையுடைய தோழிகள், புளினம் - மணற்குன்றுகளையுடைய, தடாகத்திலே, மேவிய - வாசஞ்செய்யும்படியாக, போகும்-போகின்ற, அனம்-அன்னமானது, எளிதில்-எளிதிலே, தன்-தன்னுடைய, கை-கைகளாகிய, மலர்-தாமரைமலர்களிலே, எய்துறுமோ-அடையுமோ, உளம்வைத்தமை (எம்பிராட்டி அதனிடத்தே) மனம்வைத்தமைக்குக் காரணம். என்னென-யாதென்று. நளினம்-தாமரை மலர்போலும், கை (தம்) கைகளை, புடைத்து-தட்டி, நகைத்தனர்-சிறித்தார் எ-று.

புளினமென்றதற்குப் பறவைகளினினத்தையுடைய வெனினுமாம். தமயந்தியின் முயற்சி வீணானதைக்கண்டு இங்ஙனம் பரிகாசஞ்செய்தாரென்க.

(க-து.) தமயந்தி அன்னத்தைப் பிடிக்க மனம் வைத்ததைப் பாங்கியர் கண்டு கைதட்டி நகைத்தார்கள் எ-ம். 49

புனைமே கலையீர் கைபுடைத்து நகைத்து
தனமேக வியற்றுத லன்பு கொலோ
தனியேகுவ னின்மி னெனத் தகையாற்
றுனியோ டுரைசெய்து தொடர்ந் தனளே.

[இதுமுதல் நான்கு பாட்டுகளாலே பிடித்தற்குச் செய்த முயற்சி சொல்லப்படுகின்றது.

(இ-ள்.) புனை-அலங்கரிக்கப்பட்ட, மேகலையீர்-மேகலாபரணத்தையுடையவரே, கைபுடைத்து-கைதட்டி, நகைத்து-சிறித்து, அனம்-அன்னத்

தை, ஏக-ஒடிப்போக, இயற்றுதல்-செய்ததற்குக் காரணம், அன்போ (என் மேலுள்ள) அன்போ, தனி-தனியாக, ஏகுவன் (நான்) போவேன், நின்மி னென்-நீங்கள் நில்லுங்களென்று, துணியோடு-கோபத்தோடு, உரைசெய்து சொல்லி, தகையா-ஆணையிட்டு, தொடர்ந்தனள் (தமயந்தியானவள்) அதன் பின் போயினாள் எ-று.

கைபுடைத்த வொலியோடு மேகலையொலியு மெழுதல் தோன்றப், புணை மேகலையீ ரென்றாளென்க. அன்புகொலோ வெனலால், என்மேலன்பிலீராத லால் இங்ஙனஞ் செய்கின்றீரென்றதாயிற்று. தகைதல்-என்பின்னேதொடரு வீராயின் எனக்குத் துரோகஞ்செய்தவராகக்கடவீரென்றாணைகூறல்.

(க-து.) தமயந்தியானவள் பாங்கிமாரை நிறுத்திவிட்டுத் தனியே அன் னத்தின்பின் போனாள் எ-ம். 50

முகிழ்மென் முலைவா ணுதன்மொய் குழலார்
நகைசெய் வதுகண் டுளநா ணினளா
யகல்கின்ற வொதுங் கிளமேனி ரிழையே
னிகரென்ன வொதுங்கின ணேரிழையே.

(இ-ள்.) நேரிழை-தகுந்த வணியையுடைய தமயந்தியானவள், முகிழ்-தாமரை யரும்புபோலும், மென்முலை-மெல்லிய முலைகளையும், வாணுதல்-ஒளி பொருந்திய நெற்றியையும், மொய்குழலார்-நெருங்கிய கூந்தலையுமுடைய தோழிகள், நகைசெய்வது-பரிகாசஞ்செய்தலை, கண்டு-பார்த்து, உளம்-மனத் திலே, நாணினளாய்-வெட்கமுற்றவளாகி, அகல்கின்ற-நீங்குகின்ற, பொலன் பொன்மயமாகிய, சிறை-சிறைகளையுடைய, அன்னம்-அன்னத்தினது, நிழல்-நிழலானது, நிகரென்ன (தனக்கு) நிகராமென, ஒதுங்கினள்-நடந்தாள் எ-று.

தகையப்பட்ட தோழிகள் தனது பிடிக்கமாட்டாமைக் கண்டு சிரித்த லால், நாணங்கொண்டாளென்க. அன்னனிழனிகரென்ன வொதுங்கின ளெனவே, அந்நாணம் அவளது முயற்சியை எழுப்பலால் அதன்சாயைபோல விடாது சென்றாளென்க. [இது உவமையணி.

(க-து.) அன்னந் தன்னிழல் தன்னொடு செல்லுதல்போலத் தமயந்தி அன் னத்தின்பின் சென்றாள் எ-ம். 51

வடியுண் கணி மாமுலை தாங்கியதா
லிடுகும் மிடையென் படுமேக லெனப்
பிடிமென் னடைமங் கையர்பேச மறுத்
தடிமென் மலர்பேர்த் தனளா யிழையே.

(இ-ள்.) வடி-கூர்மைபொருந்திய, உண் (மை) யுண்ட, கணி-கண்களை யுடையவுளே, மாமுலை-பெரியமுலைகளை, தாங்கியதால்-சுமத்தலால், இடுகும்-

துவளுகின்ற, இடை (உன்) னிடையானது, என்படும் (நடத்தலாலே)என்ன பாடுபடும், எகலெனை-போகாதேயென்று, பிடி-பெண்யானைபோல்,மென்னடை மெல்லிய நடையையுடைய, மங்கையர்-தோழிகள், பேச-சொல்ல, மறுத்து (அதை) மறுத்து, ஆயிழை-ஆராய்ந்துகொள்ளப்பட்ட வணியையுடையவளாகிய தமயந்தியானவள், அடி-அடியுருக்கொண்ட, மென்மலர்-மெல்லிய தாமரைமலர்களை, பேர்த்தனல் எடுத்தாள் எ-று.

என்படுமென்றதற்கு, இப்படியிருக்கிறவிது யான் நடந்து செல்லின்மிக வருந்துமென்று நீதானே யறிவாயென்பது பொருள். முன்னே "எளிதிற்றனைகைம்மல ரெய்துறுமோ" என்று பிடிபடாமை கூறிக் கேளாமற்போகையாலே பின்னும் வருத்தங்கூறி மறுத்தாரென்க. தகாததொழில்செய்யும்போதுவிலக்கல் தோழியர்கடனாதலின் "ஈகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண், மேற்சென் றிடித்தற்பொருட்டு" என்பதனாலுமறிக. அடிமென்மலரெனலால், அடிவருந்துதலுங் கொள்க. எகல்-முன்னிலையேவலொருமை யெதிர் மறை வினைமுற்று. [மலராகிய உபமானம் நடத்தற் செய்கையிலே உபயோகித்தற்கு அடியாகிய உபமேயத்தி னுருவங்கொண்டு வேறுபட்டதாகச் சொல்லலால், திரிபணியாம்.]

(க-து.) தோழிமார்தடுக்கத் தமயந்தி யன்னத்தைத் தொடர்ந்தாள் எ-ம்.

செய்ப்பட்ட செழுங் கமலத் திலனங்
கைப்பட்டது பட்ட தெனக் கருதா
மைப்பட்ட மலர்ப்பொழின் மாதவி யாய்ப்
பொய்ப் பட்ட மருங்கினள் புக்கனளே.

(இ-ள்.) பொய்யப்பட்ட-பொய்கூறுதற் கிடமாகிய, மருங்கினள்-இடையையுடைய தமயந்தியானவள், செய்யப்பட்ட-கழனியிலுண்டாகிய, செழுங் கமலத்தில்-செழிய தாமரைப்பூவிலிருக்கின்ற, அனம்-அன்னமானது, கை (என்) கையிலே, பட்டது பட்டதென-அகப்பட்டது அகப்பட்டதென்று, கருதா-நினைத்துக்கொண்டு, மைப்பட்ட-மேகத்தையளாவிய, மலர்-மலர்களையுடைய, பொழில்-சோலையிலே, மாதவிவாய்-குருக்கத்தியினிடத்தே,புக்கனள் சென்றாள் எ-று.

இருந்துஞ் சிறுத்துக் காணப்படாமைபற்றி இல்லையென்று கொள்ளப் படுதலாலே, பொய்ப்பட்ட மருங்கென்று சொல்லப்பட்டது. கருதாப்புக் கனளென்றதனால், அடிபெயர்க்குந் தோறு மப்படி நினைத்தாளென்க பட்டதென்பது-விரைவுபற்றி அடுக்கி இறந்தகாலத்திலே வந்தது. புக்கனளென்றதற்கு, அன்னம் அவளை அப்படி நினைக்கச்செய்து வஞ்சித்துக் குருக்கத்தியின்கீழ்த் தனிப்படக் கொண்டு போயிற்றென்பதே கருத்தாகக்கொள்க.

((க-து.) தமயந்தி அன்ன மகப்பட்டதென்று குருக்கத்திமரத்தினிடத்தே சென்றாள்-எ-ம். 53

தொடர்ந்தாள் கலுழ் தூமுகம் வேரொழுக
நடந்தாயிழை யெய்த்தன ளென்ன நயந்
திடந்தேர்ந் தவளின்புறு நன்மொழி கண்
மடந்தா ழிளவன்னம் வழங் கியதே.

[இதனால் அன்னம் நன்மொழிகள்பேசத் தொடங்கினமை சொல்லப்படு கின்றது.]

(இ-ள்.) மடந்தாழ்-அறியாமைபோகிய, இளவன்னம்-இளமைபொருந்திய அன்னமானது, தொடர்ந்தாள் (என்பின்னே) தொடர்ந்தவளாகி, கலுழ்-விளங்குகின்ற, தூ-பரிசுத்தமாகிய, முகம்-முகத்தினின்றும், வேர்-வெயரானது, ஒழுக-ஒழுகாநிற்க, நடந்து-நடந்து, ஆயிழை - தமயந்தியானவள், எய்த்தனளென்ன-இளைத்தாளென்று, நயந்து-விரும்பி, இடம்-தகுதியான (இடத்தை) தேர்ந்து-அறிந்து, அவள்-அத்தமயந்தியானவள், இன்பு-இன்பத்தை, உறு-அடைதற்குக் காரணமாவனவாகிய, நன்மொழிகள்-நல்ல சொற்களை, வழங்கியது-சொல்லிற்று எ-று.

இடந்தேர்தல் தனித்துப் பேசுதற்காமிடத்தை யறிதல்.

(க-து.) அன்னமானது தமயந்தி இன்பமடைய நல்ல வார்த்தைகள் சொல்லிற்று-எ-ம். 54

கோடுந்திய கொம்மை முலைப் பொறையால்
வாடும் மிடை மாமயில் வாரலெனத்
தோடுண் குழன்மங் கையரிற் றுணர்மா
வாடுந் தளிரங்கை மறித்தன பார்.

[இதனால் முன்சொல்லப்பட்ட நன்மொழிகள் இவையென்று சொல்லப் படுகின்றன.]

(இ-ள்) துணர்-பூங்கொத்துகளையுடைய, மா-மாமரங்களானவை, கோடு-யானைக்கொம்புகளை, உந்திய-கீழ்ப்படுத்திய, கொம்மை-திரட்சிபொருந்திய,முலை-முலைகளது, பொறையால்-பாரத்தினாலே, வாடும் - வாடுகின்ற, இடை-இடையையுடைய, மாமயில்-பெருமை பொருந்திய மயிலே, வாரலென (நடந்து) வாராதேயென்று, தோடு-மலரிதழ்களை, உண் - உட்கொண்ட, குழல்-கூந்தலையுடைய, மங்கையரின் (உன்னுடைய) தோழிகள்போல், ஆடும் - அசைகின்ற, தளிர்-தளிர்களாகிய, அங்கை-அழகியகைகளாலே, மறித்தன(உன்னை)விலக்குகின்றன, பார் (நீ அவற்றைப்) பார் எ-று.

"வடியுங்கணி" என்றபாட்டிலே மங்கையர் மறுத்தமையைச் சுட்டி இதிலே, மங்கையரினென்று உவமிக்கப்பட்டது. [மாமரங்களை அம்மன மறிக்கின்றனவாகக் குறித்தலினாலே, தற்குறிப்பணியாம்.] இதற்கு மங்கையரினென்னு முவமையும் தளிரங்கையென்னு முருவகமும் அங்கங்கள்.

(க-து.) மாமரங்களானவை தளிர்களாகிய விரல்களாலே வாராதே என்று விலங்குகின்றனபார்-எ-ம்.

விண்ணின் னியங்கும் வெனைமே வரநீ
மண்ணின் னடந்தெவ் வணம் வெளவுதியா
லெண்ணின் னிதுகண்டவர் யார் நகையார்
பெண்ணின் னமுதே வரல்பே தைமையே.

[இதனால் பிடிபடாமைக்குக் காரணம் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) பெண்-பெண்களிலே, இன்னமுதே-இனிய அமிர்தம்போல் விளங்குகின்றவளே, விண்ணின்-ஆகாயத்திலும், இயங்கும்-திரிகின்ற, எனை-என்னை- மேவர-அடைதற்கு, நீ-நீ, மண்ணில்-பூமியின்மேல், நடந்து-நடந்துவந்து எவ்வணம்-எவ்விதத்தினலே, வெளவுதி-பிடிக்கமாட்டிவாய், எண்ணின்-ஆலோசிக்குமிடத்து, இது-இச்செய்கையை, கண்டவர்-பார்த்தவருள், யார் - யாவர், நகையார்-சிரியார், வரல் (மங்கைப் பருவமடைந்தவுனது) வழிதல், பேதமை-பேதைப்பருவத்தின் செயலாயிருக்கின்றது எ-று.

"வலித்தன் மெலித்தனீட்டல் குறுக்கல்-விரித்த றெருகுத்தலும் வருஞ்செய்யுள் வேண்டுழி" இவ்விதியால் விண்ணின்னியங்கு விரித்தல் விகாரமாம். விண்ணினியங்குமெனை, என்றதற்குப் பூமியிலன்றி ஆகாயத்திலுஞ் சஞ்சரிக்கவல்ல வென்னையென்றும்; மண்ணினடந்து, என்றதற்குப் பூமியொன்றிலே மாத்திரஞ் சஞ்சரிக்கின்ற நீ அப்பூமியிலே நடந்தென்றும்; விரித்துரைத்துக் கொள்க. பெண்ணின்மனதே-எனலாலும், வரல் பேதமை-எனலாலும், மங்கைப்பருவமாமுடைமை சொல்லப்பட்டது. [விண்ணினியங்குமென்னும்பதப் பொருளாலும் மண்ணினடந்தென்னும் பதப்பொருளாலும் வெளவக்கூடாமையும், இம் முதல்வாக்கியப்பொருளாலே வரல்பேதைமை யென்றதையுஞ் சாதித்தலாலே, இவ்விரண்டு செய்யுட்குறியணிகள் கலந்துவந்த கலவையணியாம்.]

(க-து.) தமயந்தியே நீ என்னைப் பிடிக்கவருத லறிவீனமென் றன்னஞ் சொல்லிற்று-எ-ம்.

என்றின் மரபோது மிவட் கியைய
பின்னம் மொழி பேசுவ லென்றயனூ
ரன்னந் தனதன் புறுசுற் றமியாம்
பொன்னின் னகர் யாங்கள் பொருந்திடமே.

[இதனால் அரசன் காரியத்துக்கு உபயோகியாகிய தன்வரலாற்றின்சிறப்பை யுணர்த்தத்தொடங்கிச் சுற்றமுமிடமுமுணர்த்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) என்று-என்றுசொல்லி, இவட்கு-இவளுக்கு, இயைய - பொருந்த பின்-பின்பு, அம்மொழி-அவ்வரசன் காரியத்தை, பேசுவலென்று - சொல்வே

னென் றெண்ணிக்கொண்டு, இன்மரபு - இனிதாகிய (தன்) வரலாற்றை, ஓதும் - சொல்லுகின்றது, யாம் - யாங்கள், அயன் - நான்முகக் கடவுளால், ஊர் - செலுத்தப்படுகின்ற, அன்னந் தனது - அன்ன வாகனத்தினது - அன்புறு - அன்புமிகுந்த, சுற்றம் - உறவினேம், யாங்கள்- யாங்கள், பொருந்து-தங்கப்பெற்ற, இடம்-இடமானது, பொன்னின்னகர்- தேவநகரமாகும் எ-று.

என்றென்றது-முனனிரண்டு பாட்டையுஞ் சுட்டிநின்றது. பின்சொல்லப்படுவதாகிய அரசன் காரியத்திற்கு உபயோகியாதலால், இன்மர பென்றது. அன்புறு சுற்றமென்றதனால், நெருங்கிய சம்பந்தமுடைமை சொல்லப்பட்டதாயிற்று. பொன்னினகர் பொருந்திடமெனலால், எம்மோடு பயிலுதல் மனிதர்க்கு அரிதென்றதாயிற்று. தன்னினத்தையுந் தழுவிக்கொண்டு,யாமெ ன்றும்-யாங்களென் றுங் கூறிற்று.

(க-து.) அன்னமானது தன் சாதியையும் இருக்குமிடத்தையுங் கூறிற்று எ-ம். 57

மலர்மே லயன் மானதா வியினுட்
பொலன் மெல்லிதழ் பூத்தசெழுங் கமல
நலனுர் வளையம் பலநாளு மயின்
றுலவா தொளிர் பொன்னிற முற்றனமால்.

[இதனால் தன் வடிவின்காரணமுணர்த்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மலர்மேல்-தாமரைப் பூமேலுள்ள, அயன்-நான்முகனது, மானதவாவியினுள்-மானசதடாகத்திலுள்ள, பொலன்-பொன்மயமாகிய, மெல்- மெல்லிய, இதழ்-இதழ்கள், பூத்த-விரியப்பெற்ற, செழுங்கமலம்-செழிய தாமரைமலர்களையும், நலனுர்-நலம்பொருந்திய, வளையம்-இளவிலைச் சுருள் களையும், பலநாளும்-பலதினமும், அயின்று-தின்று, உலவாது-அழியாமல், ஒளிர்-விளங்குகின்ற, பொன்னிறம்-பொன்னுருவத்தை, உற்றனம்-அடைந் தோம் எ-று.

மானதவாவி-சத்தியலோகத்திலுள்ள. காரணகுணம் காரியத்தில் உளதா மென்பதுபற்றிப், பொற்கமலமாகிய தம் முணவின்குணந் தமக்குண்டான மை சொல்லிற்று.

(க-து.) அன்னமானது தன்வடிவு பொன்னிறமுற்ற காரணஞ் சொல் லிற்று எ-ம். 58

களிமா மயிலன் னவர் காதலுறு
மளிநாண் மலரைங் கணைவே ளனையா
னளன் மரநகர் நாண்மலர் வாவியினல்
வளநோக் குறமண் ணிடைவந் தனமால்.

[இதனால் பூமியில்வந்தமைக்குக் காரணமுணர்த்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) களி-களிப்பைத்தருகின்ற, மா-பெருமைபொருந்திய, மயிலன்னவர்-மயில்போலுஞ் சாயலுடையவராகிய மகளிரால், காதலுறும்- விரும்பப்படுகின்ற, அளிநாண்-வண்டுகளி ஞெழுங்காகிய நாரியையும், மலரைங்கணைமலர்களாகிய பஞ்சபாணத்தையுமுடைய, வேளனையான்-மன்மதன்போ லழகினனாகிய, நளன்-நளமகாராஜனது, மாநகர்-பெரியபட்டணத்திலேயுள்ள, நாள்-அன்றுபூத்த, மலர்-மலர்களையுடைய, வாவியின்-தடாகத்தினது, நல்வளம்-நல்லவளத்தை, நோக்குற-பார்த்தற்பொருட்டு, மண்ணிடை-பூமியினிடத்துக்கு, வந்தனம் (யாம் வானுலகத்தைவிட்டு) வந்தோம் எ-று.

நளன் மேல் அவளுக்கு ஆசையையெழுப்புதற்கு அவனழகை இங்ஙனஞ் சிறப்பித்துச் சொல்லியது. வளநோக்குற வென்றதற்கு, அதில் விளையாடுதற்பொருட்டென்பது கருத்து.

(க-து.) நளனது வாவியைப்பார்க்கப் பொன்னுலகத்தைவிட்டு இவ்வுலகிற்கு வந்தேமென் றன்னஞ் சொல்லிற்று எ-ம். 59

விண்ணம் புவிபா தலமே வுகினு
நண்ணுந் துயரின் றெனநல் வரமுன்
றண்ணங் கமலத் திறைதந் தனன்மைக்
கண்ணென் றயில்கொண்ட கனங் குழையாய்.

[இதனால் உலகமெங்கு மொழிவில்லாத திரிவிலேவியுந் தளர்வுதோன்றாமைக்குக் காரணமுணர்த்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மை-மையெழுதப்பெற்ற, கண்ணென்று-கண்களென்று (பெயர்த்துவைத்து) அயில் (நஞ்சம் பூசப்பெற்ற) வேல்களை, கொண்ட-கொண்டிருக்கிற, கனங்குழையாய்-கனம்பொருந்திய காதணியையுடையவளே, தண்ணங்கமலத்து-குளிர்ச்சிபொருந்திய தாமரைப்பூவிலிருக்கின்ற, இறை-தலைவன், விண்ணம்புவிபாதலம்-தேவலோகம் பூலோகம் பாதாளலோகம் இவ்வனைத்தையும், மேவுகினும்-ஒழிவின்றியடைந்து திரியினும், நண்ணும்(உன்னை) யடையக்கடவதாகிய, துயர் (தளர்ச்சித்) துயரமானது, இன்றென-இல்லையென்று, நல்வரம்-நல்லவரத்தை, முன்-முன்பு, தந்தனன்-எனக்குக் கொடுத்தான் எ-று.

ஒருகாலத்தில் நான்முகனுக்கு வாகனமாயிருந்ததற்காகக் கொடுத்தானென்க. இவ்வரத்தால் தளர்ச்சியின்றி இப்பூமியிலுள்ளதேசங்களையெல்லாம் ஒழிவின்றிநோக்கித் திரிகின்றேனென்பது-இசையெச்சம். கண்ணிற் குழைபோல வேலிற்கு நஞ்சம் வருவிக்கப்பட்டது.

(கது.) தமயந்தியே யாங்கள் மூவுலகிற் சென்றாலும் துன்பமில்லையென்று பிரமன் வரங்கொடுத்தானென் றன்னஞ்சொல்லிற்று எ-ம். 60

கௌவைக் கடல்சூழ்ந் தருகா சினியிற்
றெய்வத் திறமேவிய சீர் நளனே
வௌவுற் றிடினன் றியிம்மா னிடர்தா
மெவ்வெப் படிவெள வினுமெய் துவரோ.

[இதனால் வேட்டைக்காரர் முதலானவர் பிடிப்பரென்னு மச்சம் எனக் கில்லையெனல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கௌவை-ஒலியையுடைய. கடல்-கடலாலே, சூழ்தரு-சூழப் பட்ட, காசினியில்-பூமியிலே, தெய்வத்திறம்-தேவபோகத்தை, மேவிய பொருந்திய, சீர் பாக்கியத்தையுடைய,நளன்-நளராஜன், வௌவுற்றிடிலன்றி-பிடித்தாலன்றி, இம்மானிடர்தாம்-இம்மனிதர்தாம், எவ்வெப்படி-எந்தெந்த விதமாக, வௌவினும்-பிடித்தாலும், எய்துவரோ-அகப்படுவரோ எ-று.

நளன் பிறப்பினாலே மானிடனாயிருந்தும் போகத்தினாலே தேவனாகத் தோன்றலின், அவனிடத்தேமாத்திரம் என்னைப்பிடித்தற்கு வல்லமையுண் டென்று கூறிற்றென்பது கருத்து. மானிடரெனப் பொதுப்படக் கூறினாரேனும் தகுதிபற்றி வேட்டைக்காரர் முதலியோரென்று கொள்க. வலை கண்ணி - படைக்கலம் - முதலியவற்றைக்கொண்டு பறவைகளை வௌவுமாறு பலவு மடங்குதற்கு, எவ்வெப்படி வௌவினுமென்றது.

(க-து) அன்னமானது யான் நளன்கையிலகப்படுவதன்றி மற்றவர்கையி லகப்படேனென்றது.

61

ஒளிர்பொன் னுலகத் துறையும் பர்பிரா
னளியாற் புகலேவலு மாற் றுகிலேம்
வளர்பூ வுறைவா னவனே வலுமிந்
நளனே வலுமே நனிசெய் குவமால்.

[இதுமுதல் இரண்டு பாட்டுகளாலே அத்தெய்வபோகம் இதுவெனல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) ஒளிர் - விளங்குகின்ற, பொன்னுலகத்து - தெய்வலோகத்தின் கண், உறை-வாசஞ்செய்கின்ற; உம்பர்பிரான்-இந்திரனது, அளியால்-அன்பி னாலே, புகல்-சொல்லப்பட்ட, ஏவலும்-ஏவலையும், ஆற்றுகிலேம் (யாஞ்) செய் யோம், வளர்-வளர்கின்ற, பூ-தாமரைப்பூவின்கண், உறை-இருக்கின்ற, வான வன்-நான்முகக்கடவுளது, ஏவலும, ஏவலையும்-இந்நளன்-இந்தநளனது, ஏவ லுமே-ஏவலையுமே, நனி-மிகுதியாக செய்குவம் (யாஞ்) செய்வோம் எ-று.

தனக்கிடங்கினவென்றேவும் வல்லமையில்லாமையால், அளியாற் புக லேவலுமென்றது. "எழுத்துச்சொற் பொருடெய்தந்திரிபே" இவ்விதியால், ஆற்றுகிலேம் என்றது சொற்றிரிபு. நனிசெய்தல்-அவர் சொன்னவளவினு

மதிகமாகச் செய்துமுடித்தல். இங்ஙனங் கூறலால் இந்திரனைக்காட்டிலுஞ் சிறந்தவன் நளனென்று குறிப்பித்ததாயிற்று.

(க-து.) பிரமனேவலும் நளனேவலும் செய்வேம் என்றன்னஞ்சொல்லிற்று எ-ம். 62

துளிதூங் கியவா னதிதோய்ந்து நறுங்
குளிர்தூங்கு குறுந்துளி மென்சிறையாற்
களிதூங்கிய காமவிடா யகல
நளன் மேனியில் வீசுவநன் குறவே.

(இ-ள்.) துளி-துளித்தலோடு, தூங்கிய - தங்கிய, வானதி-ஆகாயகங்கையிலே, தோய்ந்து-முழுகி, நறுங்குளிர்-நல்ல குளிர்ச்சியானது, தூங்கு-நிலையுறப்பெற்ற, குறுந்துளி-சிறியதுளிகளை, மென்சிறையால்-மெல்லிய சிறைகளினலே, களி-களிப்பானது, தூங்கிய-தங்கும்படியாகவும், காமம்-காமத்தாலாகிய, விடாய்-தளர்ச்சியானது, அகல-நீங்கும்படியாகவும், நளன்-நளனது,மேனியில்-உடலில், நன்குற-நன்றாகப்பட வீசுவம் (யாம்) வீசுவோம் எ-று.

வீசுவமென்றது எதிர்காலமுற்றாயினும், எதிர்காலமுற்றுகள் இப்படிப்பட்ட விடங்களிலே செயலைமாத்திரமே யுணர்த்துமென்க. நளனுக்கு வேறு மகளிரோடு கூட்டுறவும் இவை அப்படி வீசுதலும் பொய்யாதலிற் குற்றமன்றோவெனின், அன்று "பொய்மையும் வாய்மையிடத்த புரைதீர்ந்த, நன்மை பயக்குமெனின" என்று சொல்லபபட்டமையின். புரைதீர்ந்தநன்மையாவது இதனல் அவளை வசப்படுத்தித் தகுந்த நாயகனேடு சேர்த்தலாம்.

(க-து.) ஆகாய கங்கையிலே மூழ்கித் துளிகள்பொருந்திய இறகுகளினலே நளனது திருமேனியில் வீசுவேம் எ-ம். 63

கலித்துறை.

தெள்ளா ரமுதத் தெளிவொத் தவந்தீஞ் சொரனல்லாய்
வள்வார் முரசங் கறங்கும் மணிமுன்றில் வேந்தன்
கள்வா யுமிழ்பூங் கணையேந்தி யகாம னன்று
னள்ளார் வணங்குநள னென்னுமோர் நாம வேலான்.

[இனி நளனுடைய பலவகைப்பட்ட குணங்களையுஞ் சொல்லத் தொடங்கி, இதனலே செல்வமும் அழகும் வேலின் சிறப்பும் உணர்த்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) தெள்ளார்-தெளிவுபொருந்திய, அமுதம்-தேவாமிர்தத்தினது தெளிவொத்த-சாரம்போன்ற, அம்-அழகிய, தீ-தித்திப்பாகிய, சொல்-வாக்கையுடைய, நல்லாய்-தமயந்தியே, வள்வார்-வலிபொருந்திய வாரினலிறுக்கப்பட்ட, முரசம்-முரசவாத்தியமானது, கறங்கு-ஒலிக்கப்பெற்றிருக்கின்ற, மணி

நவமணிகளையுடைய, முன்றில்-வீட்டின் முன்னிடத்தையும் நளனெனும்-நள னென்று சொல்லப்படுகிற, ஓர் நாமம்-ஒப்பற்ற நாமதேயத்தையுடைய, வேந் தன்-அரச (னொருவன்) கள்-தேனை, வாய் (இதழ்) வாயினால், உமிழ்-கக்குகி ன்ற, பூங்கணை-மலரம்புகளை, ஏந்திய-தாங்குகின்ற, காமனன்னான்-மன்மதன் போ லழகுடையவன், நள்ளார்-பகைவர், வணங்கும் (தன்னை) வணங்குதற்குக் காரணமாயிருக்கின்ற, வேலான்-வேற்படையையுடையவன் எ-று.

மணிமுன்றில்வேந்தன்-காமனன்னான்-நள்ளார்வணங்கு வேலான் என முறையே-செல்வம்-அழகு-வேற்படை-இவற்றின் சிறப்புக்கூறியவாறு காண்க மணி-பல தேயத்தாராலுந் திறையளக்கக் குவிக்கப்பட்டவை. இல்முன்-முன் றில்-எனநிலைமாறிய இலக்கணப்போலி.

(க-து.) தமயந்தியே மன்மதனுக்கொப்பானவன் நளனென்னும் பெயரை யுடையவன் எ-ம். 64

வண்டார் வஞ்செய்து மதுவுண் டுமிழ்மாலை மார்பன்
றிண்டோ ளெழில்கேட்ட வரம்பையச் செம்மன் மார்பந்
தண்டாது புல்லப் பெறுதாற் பெயர்ச்சார்பு நாடி
யொண்டார் புனையு நளகூபரன் றன்னையுற்றாள்.

[இதனாலே பின்னும் அழகின் புகழ்ச்சி சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) வண்டு-வண்டுகளானவை, ஆர்வஞ்செய்து-விரும்பி, மது-தேனை உண்டு-குடித்து, உமிழ்-உமிழப்பெறுகிற, மாலை-பூமாலை பொருந்திய, மார்பன்-மார்பையுடையநளனது, திண்டோள்-வலியதோள்களின், எழில்-அழகை, கேட்டு(எம்மிடத்திற்)கேட்டு, அ அரம்பை-அந்த வரம்பையானவள், அச்செம்மல்-அவ்வரசனது, மார்ப்பம்-மார்பத்தை, தண்டாது-நீங்காமல், புல்ல-தழுவுதற்கு பெறுதால்-பெறாத காரணத்தால், பெயர் (அவன்) பெயரினது; சார்பு-சம்பந் தத்தை, நாடி-ஆராய்ந்து, ஒண்டார்-ஒள்ளியபொனனரிமாலையை, வினையும் சூடியநளகூபரன்றன்னை-நளகூபரனை, உற்றாள்-அடைந்தாள் எ-று.

அரம்பைக்குஅகரச்சுட்டு அழகிற்சிறந்தவளென்று பெயர்பெற்று விளங் குகின்றமையைக் காட்டுகின்றது. தண்டாதுபுல்லல் - தனக்குக் கணவனைப் பெற்று எந்நாளும் புணர்தல். தாண்டாமை நீங்காமை. இது "ஆனமை தாண் டாமையாயிரண்டு நீங்காமை" என்பதனாலறிக. நளகூபரன் - குபேரன் மகன். [நளகூபரனைச் சேர்தற்கு எதுவாகாத நளனது பெயர்ச்சார்பு நாடுதலே எது வாகக் குறித்தலாலே, எதுத்தற் குறிப்பணியாம்.] இதனாலே அவனழகுக்கு ஒ ப்பு இல்லையென்பது குறிப்பிக்கப்படுகின்றது.

(க-து.) நளனழகை யரம்பைகேட்டு நளனைக் கூடப்பெறாமையால் நளன் பெயர்கொண்ட குபேரன்மகனாகிய நளகூபரனைச் சேர்ந்தாள்-எ-ம்,

ஏகாவிசும்பி னளன் பாடலை யாங்கள்கூற
மாகாதிப னிவ்வரிப் பாடல்வருங் கொலென்று
பாகூரவீணை பயில்வோன் முகம்பார்த் துரைப்ப
வாகா வெனலா லவர்க்கப் பெயர் சேர்த்தினரே.

[இதனால் இசைபாடற்புகழ்ச்சி சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) யாங்கள்-யாம், விசும்பின்-பொன்னுலகத்திற்கு. ஏகா (இவ்வுல கத்திருந்து) போய், நளன் - நளராஜனது, பாடலை-இசைபாடுதற் சிறப்பை, கூற - சொல்ல. மாமாதிபன் - தேவேந்திரன், இவ்வரிபாடல் - இப்பாட்டுப் பாடுத, வளிங்கோலென்று - உனக்கு வருமோ வென்று, பாகு - பாகின் சுவை (போலுஞ்சுவை) ஊற-பெருக, வீணைபயில்வோன்-வீணைபாடுகிற ஒரு கந்தர்வனது, முகம்-முகத்தை, பார்த்து-நோக்கி, உரைப்ப-சொல்ல, ஆகா வெனலால் (யாம்) ஹாஹாவென்று இகழ்தலால், அவற்கு-அக்கந்தர்வனுக்கு, அப்பெயர்-அந்த ஹாஹாவென்கிற பெயரை, சேர்த்தினர்-வைத்தார் எ-று.

மாகமென்னு மாகாயத்தின்பெயர் ஆகுபெயராய்த் தேவலோகத்தை யுணர்த்திநின்றது. அது வருமொழியோடும்மரம் X அடி = மராடி என்பதுபோ லப் புணர்ந்து நின்றது. கொல்-வினுப்பொருளில் வந்தது. வரி-பாட்டு. அது "வரிசுணங்கெழுத்துப்பாட்டு" என்பதனுலறிக. ஆகாவெனலாலென்றதற்கு, அக்கந்தருவன் என்னலாகாவெனலா லெனப்பொருள் கூறுவாருமுண்டு. அவ னுக்கு அப்பெயர் அங்ஙனந் தற்பவமாய்வந்தவடமொழிப்பெயராதலால், அது சிறப்பன்றென்க. வடமொழிப்பெயராதல்,அமரத்தினுங்காண்க.ஆகாவெனல் "மறைமூவகையாய் வழங்குவர் புலவர்" இவ்விதியால் எதிர்மறை வினையெச் சம். [அவ்வாகாவென்னும் பெயர்க்கு வேறுகாரணத்தைக் கற்பித்தலால், பிறி நிலை நவிற்சியணியாம்.] இதனால் நளன் இசைபாடலில் அக்கந்தருவனிலும் வல்லவனென்னும் பொருள் தோன்றுகின்றது.

(க-து.) இந்திரன்முன் நளன்பாடலையாங்கள் சொல்ல, இந்திரன் கந்த ருவனைப்பார்த் திப்பாடல்பாட வருமோவென, யாங்கள் ஆகாவெனலால் அவனுக்கு ஆகாவென்று பேர்கொடுத்தார்கள் எ-ம். 66

உலனூறுசெய்த வுயர்மாமணித் தூண்செய் தோளா
னலன்யா முரைப்ப நகைகூர விராணிகொம்மை
முலைமேற் பொடித்த புளகத்தினை மொய்த்த செங்கண்
மலர்நீ ரரும்புவதிற் கண்டிலன் வானவேந்தன்.

[இதனால் நற்குணப்புகழ்ச்சி சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) உலன்-திரண்டகல்லை, நூறுசெய்த-பொடிசெய்த,உயர்-உயர்வா வாகிய, மாபெரிய, மணித்தூண்-வச்சிரத் தூண்களைபோல, செய்-செய்யப்பட் ட, தோளான்-தோள்களையுடைய நளராஜனது, நலன்-நற்குணத்தை, யாம்-

யாங்கள், உரைப்ப-சொல்லக் (கேட்டு) நகைகூர (அவன்மேலாசைமிக்க, அயி ராணி-இந்திராணியுடைய, கொம்மை-இளமைபொருந்திய, முலைமேல்-முலை களின்மேலே, பொடித்த-உண்டாகிய, புளகத்தினை - மயிர்சிலிர்த்தலை, மொ ய்த்த (தன் வடிவத்திலே) நெருங்கிய, செம்-செவ்விய, கண்மலர்-நேத்திரா ரவிந்தங்களில், நீர் - ஆனந்த நீரானது, கண்டிலன்-பார்த்திலன் எ-று.

வச்சிரமணி மற்றைப் பலமணிகளையும் பேதிக்கு முறுதிடையுடையதாதலின் உயர்மாமணியெனப்பட்டது. நளன்-அவன் பலகுணங்களும். புளகம்-உவகைச் சுவையைப்பற்றிய விறல். இந்திரனுக்கு ஆயிரங்கண்களாதலின், மொய்த்த செங்கணென்றது. புளகத்தைக்கண்டால் உள்ளப்புணர்ச்சியின் குற்றநோக்கி மனைவியைத் தண்டிப்பனென்பது கருத்து.

(க-து.) நன் கீர்த்தியைக்கேட்டிந்திராணிமுலைகள் பூரித்ததை இந்திரனு க் கானந்தக்கண்ணீர்தோன்றலாற் கண்டிலன்-எ-ம். 67

முருகுண்டுவண்டு பயிறார்நளன்வாண்முகத்தைப்
பெருவெண்மதியநிகரெய்தப் பெறுமையன்றே
கருதுங்கமலத்துறை நான்முகன்கைவருந்த
வருதிங்கடோறும் புதிதாகவகுத்தல்செய்வான்.

[இதுமுதல் இரண்டுபாட்டுகளால் முகப்புகழ்ச்சி சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கருதும்-நினைக்கின்ற, கமலத்து-தாமரைப் பூவின்கண், உறை- இருக்கின்ற,நான்முகன்-நான்முகக்கடவுள்,வண்டு-வண்டுகளானவை,முருகு- தேனை, உண்டு-குடித்து, பயில்-வாசஞ்செய்யப்பெற்ற,தார்-மாலையையுடைய, நளன்-நளராஜனது, வாண்முகத்தை-காந்திபொருந்திய வதனத்திற்கு, பெரு வெண்மதியம்-கலைநிறைந்த சந்திரன், நிகர்-ஒப்பை, எய்த-அடைய, பெறுமை யன்றே-பெறுமையாலன்றே, கை (தன்) கைகள், வருந்த-நோவ, வரு-வரு கின்ற திங்கடோறும்-மாதந்தோறும், புதிதாக-நூதனமாக, வகுத்தல் செய் வான்-உண்டாக்குகிறான் எ-று.

கருதல்-நளன்முகத்துக்கொப்பாவதொரு சந்திரனைச்செய்ய நினைத்தல். வல்லவனொருவன் தன்னாலே தொடங்கப்பட்டது பலமுறை கெடுமாயினும அது செவ்வையாக முற்றுப்பெருமளவும் அதன் முயற்சியை விடானாதலால், வருதிங்கடோறும் புதிதாக வகுக்கின்றானென்க. [நான்முகன் மாதந்தோறுஞ் சந்திரனைப் புதிதாகப் படைத்தற்கு ஏதுவாகாத அந்நிகரெய்தப் பெறுமையை ஏதுவாகக் குறித்தலினாலே, ஏதுத்தற் குறிப்பணியாம்.] இதனாலே நளன் முகஞ் சந்திரனைப்பார்க்கிலுஞ் சிறந்து விளங்குகின்றமை தோன்றுகின்றது.

(க-து.) நளன்முகத்துக்குச் சந்திரனொவ்வாமையாற் பிரமன் அச்சந்திர னை மாதந்தோறும் புதிதாகப் படைக்கின்றான-எ-ம். 68

கோனைக்களிற்று நளன்வாண்முகங்கூறுகென்று
யாணர்த்திருமா லருள்செய்தலும்யாங்கள்கூற

நாணிக்கமல மயனோடுமுகிழ்ப்பநாடிப்
பூணிற்பொலிந்த முலைப்பூமகட்புல்லுமன்னே.

(இ-ள்.) கோண்-மாறுபாடுபொருந்திய, களிற்ற-யானைகளையுடைய, நளன்-நளராஜனது, வாள்-காந்திபொருந்திய, முகம் - முகச்சிறப்பை, கூறுகென்று-சொல்லக்கடவிரென்று, யாணர்-அழகிய, திருமால்-மகாவிஷ்ணு, அருள்செய்தலும்-சொல்லியவளவிலே, யாங்கள்-யாம், கூற-சொல்ல, நாணி - வெட்கி, கமலம்-நாபிக்கமலமானது, அயனோடு-நான்முகனோடு முகிழ்ப்ப-குவிய, நாடி (அத்தருணம்) பார்த்து, பூணின்-ஆபரணத்தினாலே, பொலிந்த - விளங்குகின்ற, முலை-முலைகளையுடைய, பூமகள்-திருமாதை, புல்லும் (அக்கடவுள்) கூடுவான் எ-று. ஐ-சாரியை. மன்-ஏ-அசைகள்.

[திருமால் நளன்முகத்தைப் புகழ்வித்தலாகிய கபடத்தினாலே நாபிக்கமலத்தைக் குவிவித்து நான்முகனை மறைத்து மனைவியைப் புணர்தலாகிய விருப்பத்தை முடித்தலால், பிறிதினவிற்சியணியாம்.] இதனாலே நளன்முகம் அக்கமலத்தினுஞ் சிறந்தமை தோன்றுகின்றது.

(க-து.) விஷ்ணு நளன்முகத்தழகைச் சொல்லென, யாங்கள் சொல்லத், தமது நாபிக்கமலம் பிரமனுடன்மூட, அதைக்கண்ட விஷ்ணுவானவரிலக்குமியை அணைந்தார் எ-ம்.

69
சிறைவண்டுதண்ணென் முகைசூழ்ந்து பைந்தேறன் மாந்தி
யறைகின்றதண்டார் புனையுந்திறலாடல்வேந்தன்
பொறைதேரினங்கட்புவி மாதினைப்பொங்குசெஞ்சூட்
டிறைவாளரவை நிகரென்னவியம்பலாமே.

[இதனால்பொறுமை பூபாரந்தாங்குதல்களின் புகழ்ச்சி சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) சிறை-சிறைகளையுடைய, வண்டு - வண்டுகளானவை, தண்ணென்-குளிர்ச்சிபொருந்திய, முகை-அரும்புகளை, சூழ்ந்து-சுற்றிக்கொண்டு, பைந்தேறல்-பசியதேனை, மாந்தி-குடித்து, அறைகின்ற - ஒலிக்கப்பெற்ற, தண்-குளிர்ச்சிபொருந்திய, தார்-மாலையை, புனையும் - தரித்திருக்கின்ற, திறல்-வலுமையாலுண்டாகிய, ஆடல் - வெற்றிபொருந்திய, வேந்தன் - நளராஜனுடைய பொறை-குற்றம் பொறுத்தலையும், பூபாரந் தாங்குதலையும், தேரின்-ஆராய்ந்தால், அங்கண் - அழகிய விடத்தையுடைய, புவிமாதினை - பூமிதேவியையும், பொங்கு-விளங்காநின்ற, செஞ்சூட்டு-சிவப்பாகிய சூட்டையுடைய, வாள்-காந்திபொருந்திய, இறை (பாம்புகளுக்கெல்லாந்) தலைவனாகிய, அரவை - ஆதிசேஷனையும், நிகரென்ன (அவனுக்கு) உபமானங்களாக, இயம்பலாம் (அறிவுடையோருக்குச்) சொல்லுதல்கூடும் எ-ம்.

குற்றம்பொறுக்குங் குணத்துக்குப் பூமியும், பூபாரந்தாங்குதலுக்கு அனந்தனுமென்றுகொள்க. முன்னதற்கு "அகழ்வாரைத் தாங்குநிலம்போலத் தம்

மை, யிகழ்வார்ப் பொருத்த நலே" என்றிருக்கையாலும்; பின்னதற்கு இந்நூலிலே "பன்னகஞ்சுமந்தவைப் போர் தோளினிற் பரிக்குமன்னர் மன்னனே" என்றுவருதலாலும்; அவை உபமானமாதற்கேற்றல் காண்க. [பொறையினிரு பொருளும்புகழ் பொருளாதலிற்; புகழ்பொருட் சிலேடையணியாம்.]

(க-து.) நளன் பொறுமையிலே பூமிதேவியையும் ஆதிசேஷனையும் ஒப்பானவன் எ-ம். 70

புற்றுருகுமாவ முறைவாளிப்புயங்கமுண்ணச்
செற்றார்தமாவி நுகர்விக்குஞ்சிலைக்கையாற்குக்
குற்றேவல்செய்யுங்கொடியன்னவர்பானடக்கக்
கற்றாடரம்பை பயில்வானடைகாட்டுகிற்பேன்.

[இதனால் நளராஜனிடத்து உத்தமமங்கையரிருக்கையைக் குறிப்பித்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) ஆவமாகும்-தூணியாகிய, புற்று-புற்றினுள், உறை-உருக்கின்ற, வாளி-அம்புகளாகிய, புயங்கம்-பாம்புகளானவை, உண்ண-உண்ணும்படியாக, செற்றார்-பகைவரது, ஆவி - பிராணவாயுவை, நுகர்விக்கும் - உண்பிக்கின்ற, சிலை-வில்லையேந்திய, கையாற்கு-கையையுடைய நளனுக்கு, குற்றேவல்-சிறிய வேவல்களை, செய்யும்-செய்கின்ற, கொடியன்னவர்பால்-பூங்கொடிபோல்பவரிடத்தே, நடக்க-நடத்தற்கு, கற்று (யான்) கற்றுக்கொண்டு, ஆடு (தெய்வச்சபையி) லாடுகின்ற, அரம்பை-அரம்பையானவள் பயில்வான்-கற்கும்படியாக, நடை-அந்நடையை, காட்டுகிற்பேன்-கற்பிப்பேன் எ-று.

வாயு அருவமாயினும் அசனையுண்ணுதல் பாம்பிற்கு இயல்பாதலால், ஆவிநுகர்விக்குமென்றது. கற்றுக்காட்டுகிற்பேனென்றதனால், எனது நடையினும் அரம்பைநடையினுஞ் சிறந்துளது நளன் குற்றேவல்செய்யுமகளிர் நடையென்றதாயிற்று. குற்றேவல்-சாமரம்வீசுதல், அடைப்பையேந்துதல், முதலியண. "எழுத்துச் சாற்றிரி பிரண்டேயன்றிப், பொருட்டிரிபெங்கும் பொருந்துமென்ப" இவ்விதியால், காட்டுகிற்பேனென்றது சொற்றிரிபு. இங்கேநளனுக்குச் சொல்லப்பட்ட விசேஷணத்தால், நளன் யுத்தபராக்கிரமமுஞ் சொல்லப்பட்டதாயிற்று. [ஆவமுதலியவற்றிலே புற்றமுதலியவற்றி னொற்றுமையை ஆரோபித்தலாலே, உருவகவணியாம்.]

(க-து.) யான் நளனிடத்தேவல்செய்யும் பெண்களிடத்து நடைபயின்று அரம்பைக்குக் கற்பிப்பேன் எ-று. 71

அறைபொற்கழற்கா லரசன்னகரஞ்சொனல்லார்
மறைசொற்கள்யாவு மறையாமலெனக்குரைப்பார்
பொறிமுற்றடக்கிப் புலன்போம்வழிபோக்கல்செய்யா
நெறியிற்பிறக்குப் புகலாதெனநெஞ்சிலெண்ணி.

[இதனால் நளனந்தபுரத்திலே தனக்குப்பழக்கமுண்டெனல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) அறை-ஒலிக்கின்ற, பொன் - பொன்னாலாகிய, கழல்-வீரக்கழலையணிந்த, கால்-பாதத்தையுடைய, அரசன் - நளராஜனது, நகர் - அரண்மனையிலுள்ள, அஞ்சொல் - அழகிய சொல்லையுடைய, நல்லார் - மாதரானவர், பொறிமுற்ற-ஐம்பொறிகளையும், அடக்கி-அடக்கி, புலன்-ஐம்புலன்களிலும், போம்வழி - செல்லும்வழியில், போக்கல்செய்யா (அவற்றைச்) செலுத்தாத, நெறியின்-ஒழுக்கத்தினாலே, பிறர்க்கு-அயலாருக்கு, புகலாதென-சொல்லாதென்று, நெஞ்சில்-மனதிலே, எண்ணி-நினைத்து, மறை-மறைக்கத்தக்க, சொற்கள்யாவும் - எல்லாச்சொற்களையும், மறையாமல்-ஒளிக்காமல், எமக்கு-எங்களுக்கு, உரைப்பார்-சொல்லுவார் எ-று.

[அந்தப்புரமாதர் சொல்லுவாரென்னும் பொதுப்பொருளினாலே உன் கருத்தைச் சொல்லென்னுஞ் சிறப்புப்பொருள் தோன்றுதலால், பொதுப்புனைவிலி புகழ்ச்சியணியாம்.]

(க-து.) நளன் அரண்மனைப்பெண்கள் இரகசியங்களை எங்களிடத்திற் சொல்வார்கள் எ-ம். 72

திங்கட்கலையின் செழும்பூங்கதிர்செவ்விவாய்ப்பக்
கங்குற்கமல மலர்தோய்ந்துகளிப்புறுமற்
பைங்கட் குமுதமுறல்போலுநின்பாலுறுமற்
றெங்கற்புயத்தான் பிறமாதரைத்தோய்தன்மாதோ.

[இதனால் அவளுக்கு நளன்மேற்காதலை யெழுப்புதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) திங்கட்கலையின்-சந்திரகலையினது, செழு - செழிய, பூ-அழகிய கதிர்-அமுதகிரணத்தை, செவ்வி-அழகானது, வாய்ப்ப-பொருந்த, கங்குல்-இரவின்கண், கமலமலர் - தாமரைமலரானது, தோய்ந்து-சேர்ந்து, களிப்பு-மகிட்சியை, உறுமல்-அனுபவியாதிருக்க, பைங்கள்-பசியதேனையுடைய, குமுதம் (அத்தாமரைமலரிற் குறைந்த) அல்லிமலரானது, உறல்போலும் (அப்படி அம்மகிட்சியை) அனுபவித்தல்போலும், நின்-உன்னுடைய, பால-இடத்து, உறுமல்-பொருந்தாமல், தொங்கல்-மாலையணிந்த, புயத்தான்-புயத்தையுடைய நளராஜன், பிறமாதரை-வேறுமாதரை, தோய்தல்-சேர்தல், எ-று. மாது-ஓ-இரண்டும்-அசைகள்.

தாமரைமலர்களினுஞ் சிறந்தழகாய் நிற்றலிற், செவ்விவாய்ப்பவென்றது. "பூவினுக்கருங்கலம் பொங்குதாமரை" என்பதனாலுமறிக. கமலமலர் களிப்புறுதல்-மலர்ச்சியுறுதல். நீ மகளிர்பலரினுஞ் சிறந்த அழகுடையவளாயிருந்து உனக்குத் தகுந்த நளனைப்பெறுதற்கு முயற்சிசெய்யாது, உன்னிற்குறைந்தவள் அவனைச்சேர்ந்தின்புறவிட்டிருத்தல் மடமையென்பது கருத்து. "பைங்

கட் குமுதமுறல்போலு நீ பார்த்திவன்றன்-ஒருங்கற்புயந்தோய்ந்துறுமற்பிற மாது துய்த்தல்" என புதனூடுக்கிணங்கப் பாடங்கூறுவாருமுண்டு.

(க-து.) நளனுன்னையல்லாது பிறமாதரைச்சேருதல் சந்திரனைத் தாமரைசேராது அல்லிசேருதல்போலிருக்கும் எ-ம். 73

மயிர்வாய்ச்சிறுகட்பிடி மென்னடைவாய்ந்தநல்லாய்
செயிர்தீர்விதியின்றிறம் யார்கொறெளிந்தநீரா
ரயில்வேனளன்றனழகுன் னெழிலொத்தவாற்றாற்
பயினேயவின்பநினக் கன்றிப்பயன்படாதால்.

[இதனால் அவளுக்கு நளனைப் பெறுதற்கு அனுகூலமிருக்கின்றபடியுணர்த்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மயிர்வாய்-மயிர்பொருந்திய, சிறுகண்- சிறியகண்களையுடைய, பிடி-பெண்யானை நடைபோலும், மென்னடை-மெல்லியநடை, வாய்ந்த-பொருந்திய, நல்லாய்-தமயந்தியே, அயில்-கூர்மைபொருந்திய, வேல்-வேலையுடைய, நளன் - நளராஜனது, அழகு-அழகும், உன்-உனது, எழில்-அழகும், ஒத்த (தம்மி) லொத்திருக்கின்ற, ஆற்றால்-காரணத்தினால், பயில்-தங்கிய, நேயம் (ஒப்புடை) யன்பாலுண்டாகும், இன்பம்-இன்பமானது, நினக்கன்றி-உனக்கல்லாமல் (மற்றொருத்திக்கு) பயன்படாது-கிடைப்பதில்லை,(அழகொத்திருந்தாலும் விதிசங்கற்பம் பிரதிகூலமாயிருந்தாலோவெனின்) செயிர்-குற்றத்தினின்றும், தீர்-நீங்கிய, விதியின்-விதியினது, திறம்-கருத்தை, தெளிந்த-அறிந்த நீரார்-குணத்தையுடையவர் யார்-எவர் எ-று.

இங்கே அழகும் எழிலும் ஆண்மைவடிவும் பெண்மைவடிவும் பிறழ்ச்சியின்றி யமைந்தவனப்பாம். அன்றியும், உயர்குடிப்பிறப்பு-நல்லொழுக்கம்-பருவம்-அறிவு-செல்வம்-என்பவை முதலியனவும் ஒரோவழி அழகெனவும்படுமாகலின்; அவையுமிங்கே யடக்கிக்கொள்ளப்படும். நும்மிருவருக்கும் அழகொத்தலால் அன்புமொத்து இன்பம் சிறக்குமென்பது தோன்ற, நேயவின்பமென்றது. இருவர்க்கு மன்பொத்தமாயி னின்பஞ் சிறக்குமென்பது "தாம்வீழ்வார் தம்வீழப்பெற்றவர் பெற்றாரே, காமத்துக்காழில்கனி" என்பதனாலுமுணர்க. நினக்கன்றிப்பயன்படாதெனவே, நீயயவனுக்கு மனைவியாவையென்றதாயிற்று. விதியெனவாளாகூறாது செயிர்தீர்விதியெனச் சிறப்பித்துக் கூறுதலால், விதிசங்கற்பமும் இந்தக்காரியத்துக்கு அனுகூலித்தேயிருக்குமென்பது குறிப்பிக்கப்பட்டது. யாரென்றது - ஒருவருமில்லையென்னும் பொருளில் வந்தது.

(க-து.) தமயந்தியே உன்னழகும் நளனழகும் ஒத்திருக்கிறதால் அவனின்பமுனக்கே கிடைக்கும் வேறொருத்திக்குப் பயன்படாது விதிவசமெவ்வாறோ எ-ம். 74

விரைசேர்கமலவிதியுந்தநக் கூட்டுமென்க
திருவோடுசெங்கட் டிருமாலினைச்சேர்த்தலானும்
வரைமானை முக்கட் பெருமானிடம்வைத்தலானு
மிரவோடுதண்ணெண் கதிர்த்திங்களியைத்தலானும்.

[இதனால் அழகொத்திருக்கையினாலே விதிசங்கற்பமும் அனுகூலித்திருக்குமென்று துணிதற்கு உதாரணமுண்டோவெனின், உண்டெனல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) விரைசேர்-வாசனைபொருந்திய, கமலன்-உந்திக்கமலத்துற்றபிரமனானவன், நறும்போதினில்-நற்றுமரைமலரில், வீற்றிருக்கும்-எழுந்தருளியிருக்கும், திருவோடும்-திருமாதோடு, செங்கண்-செய்யகண்களையுடைய,திருமாலினை-விஷ்ணுவை, சேர்த்தலானும்-கூட்டினமையாலும், வரைமானை-பார்வதிதேவியை, முக்கண் -மூன்றுகண்களையுடைய, பெருமானிடம்-கடவுளிடத்தே, வைத்தலானும் - இருத்தினமையாலும், இரவோடு - இராத்திரியோடு, தண்ணென்-குளிர்ச்சிபொருந்திய, கதிர்-கிரணங்களையுடைய, திங்கள்-சந்திரனை, இயைத்தலானும்-பொருத்தினமையாலும் எ-று.

ஒருவர்க்கொருவர்தகுந்தவராகத் திருவோடு செங்கட்டிருமாலினைச்சேர்க்கைமுதலிய உதாரணங்களால், விதிசங்கற்பமும் இதுகாரியத்திலே அனுகூலித்திருக்குமென்று அறியப்படுகின்றதென்பதுகருத்து. விரைசேர்கமலநறும்போதினில் வீற்றிருக்கும்" எனப்பாடமோதி, இலக்குமிக்கு அடைமொழியாக்குவாருமுண்டு. அவ்வாறு அடைமொழிகூறில் எழுவாயின்மையாற் பொருந்தாது. இச்செய்யுளும் வருஞ்செய்யுளுங்குளகம்.

(க-து.) பிரமதேவன் திருமகளையுந் திருமாலையும், பார்வதியையும் பரமசிவனையும், இரவையுஞ் சந்திரனையும் சேர்த்தமையாலும். (75

குயின் மென்குதலைத் திருவேயினைக் கூடுமின்ப
மயில்கொண்ட வொள்வே னளற்காக வமைத்திலானே
லியைபெண் ணியன்றி விதிகூட்டலனென்னுஞ்சிர்த்தி
பயனின்றி மாறிப் பழியாகப் பயக்குமன்றே.

[இதனால் விதியின்செயலுஞ் சொல்லுமப்படியிருந்தாலும் அவன் சுதந்தரனாகையால் இப்போது வேறுவிதமாகச் செய்யலாமேயென்றால், அதற்குத் தடையுண்டெனல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) குயில்-குயிலிசைபோலும், மென்குதலை-மெல்லிய மழலைச்சொற்களையுடைய, திருவே-தமயந்தியே, நினை-உன்னை, கூடும்-அனுபவித்தடைவதாகிய, இன்பம்-இன்பத்தை, அயில்கொண்ட-கூர்மைகொண்ட, ஒள்வேல்-ஒள்ளியவேலையுடைய, நளற்காக-நளராஜன்பொருட்டு, அமைத்திலானேல்-புடைத்திலனாயின், இயைபு-தகுதியை, எண்ணியன்றி-நினைத்தல்லாமல், விதி-

நான்முகனானவன், கூட்டலனென்னும் (ஒருவரோடொருவரைச்) சேர்க்கல னென்கிற, கீர்த்தி-கீர்த்தியானது, பயனின்றி-பயனில்லாமல், மாறி வேறு பட்டு, பழியாக-நிந்தையாக, பயக்கும் (அவனுக்கு) விளையும் எ-று.

இங்ஙனங் கூறவே நளனை நீ நாயகனாகப்பெறுதற்கு விதியினாலுந்தடை யுண்டாவதில்லையென்று வலியுறுத்திக் கூறியவாறாயிற்று.

(க-து.) தமயந்தியே உன்னை நளனுக்காகப் படைத்திலனானால் பிரமனுக் குப் பழிவிளையுமென் றன்னங்கூறிற்று எ-ம். 76

போர்வேனளன்றன் புனைதாரகன்மார்புபுல்லு
மேரார்மகள்யாரென யானயனோடுகேட்பக்
காரோதிநின்பேர் கழலுற்றனன்போலுமாங்குத்
தேரோதைதன்னாற் றெளிவுற்றிடக்கேட்டிலேன்யான்.

[இதனால் அவ்வனுமானமேயன்றி இதற்கு ஆகமப்பிரமாணம் உண்டெ னல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கார்-மேகம்போலும். ஓதி-கூந்தலையுடையவளே, போர்-போர் செய்தற்குறிய, வேல்-வேலையுடைய, நளன்-நளராஜனது, புனை-சூழப்பட்ட, தார்-மாலையையுடைய, அகல்-பரந்த, மார்பு-மார்பை, புல்லும்-தழுவத்தகும், ஏர்-அழகினால், ஆர்-நிறைந்த, மகள்-மங்கை யாரென-எவளென்று, யான்-நான், அயனோடு-நான்முகனை, கேட்ப-வினவ, நின்-நினது, பேர் நாமதேயத் தை, கழலுற்றனன்போலும் (அவன்) சொன்னான்போலும், ஆங்கு-அப் போது, தேர் (அவனது) தேரினது, ஓதைதன்னால்-ஓசையினாலே, தெளிவுற் றிட-ஐயந்தீர, யான்-நான், கேட்டிலன் (அதைக்) கேட்டறிந்திலேன் எ-று.

57-ம் பாட்டில் "அயனூரன்னந் தனதன்புறு சுற்றமியாம்" என்றலின், அயனை வினவுதற்கு இயைபுடைமை பெறப்பட்டது. யாரென்றது-பெண் பாலில்வந்தது. அது உயர்திணை முற்பாற்கும் பொதுவாகலின்-இதற்கு யா அரென்னும் வினாவின்கிளவி-யத்திணை மருங்கின் முப்பாற்கு முரித்தே" என் பது விதி. அயனோடென்பது உருபுமயக்கம். இதற்கு "யாதனுருபிற் கூறிற்று யினும்-பொருள் சென்மருங்கின் வேற்றுமைசாரும்" என்பது விதி. ஒரு வேளை மற்றொருவன்மே லவளுக்கு விருப்பமுண்டாயிருப்பின் தன்சொல் லைப் பொய்யென்று கொள்வளென்று, நின் பேர்கழலுற்றனன்போலும்-தெளி வுற்றிடக் கேட்டிலனென்றது.

(க-து.) நளனுக்கு மனைவியாரென்று பிரமனையான்கேட்க, அவனுன் பேர் சொற்றனன்போலுமிருந்தது. தேரோசையாற் றெளிவுறக்கேட்டி லன் எ-ம். 77

கருந்தாரைவாய்வாள் பொருவுங்கயற்கண்ணிகேண்மோ
பொருந்தாதனயான் புகன்றேனவைவிற்கப்பூந்தாள்

வருந்தாவொதுங்கப் பிழைசெய்தனன்மாறவுள்ளம்
பரிந்தார்வமுற்றப் புரிவேனென்பணித்தியென்று.

[இதுமுதல் இரண்டுபாட்டுகளால் இப்படி அவளுக்கு ஆசையை வளர்த்தவன்னம் அவள்கருத்தையறிவதற்காக வேறொன்றைச்சொல்லி, முன் சொல்லப்பட்டதைமுடித்தமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கருந்தாரைவாய்-கருவிழிபொருந்திய, வாள்-வாளையும், கயல்-கெண்டையையும், பொருவும்-நிகர்க்கின்ற, கண்ணி-கண்களை யுடையவளே, கேள் (நீ) கேளு, யான்-நான், பொருந்தாதன-இப்போதைக்கு வேண்டாத சொற்களை, புகன்றேன்-சொல்லினேன், அவைநிற்க-அவை நிற்பதாக, பூ-மலர்போல (மெல்லிய) தாள்-உன்னடிகளானவை, வருந்தா-வருந்தி, ஒதுங்க (என்பின்னே) நடந்துவரும்படியாக, தழை-குற்றத்தை, செய்தனன் (உனக்குச்) செய்தேன், மாற-அதுதீர, உள்ளம்-உள்ளத்தில், பரிந்து-அன்புற்று, ஆர்வம் (உன்) விருப்பத்தை, முற்ற-நிறைவேற, புரிவேன்-செய்வேன், என்(அவ்விருப்பம்) யாது, பணித்தி (நீ) சொல்லு, என்று-என்றுசொல்லி எ-று. மோ-முன்னிலையசை.

வருந்தா வொதுங்கவென்றதற்கேற்பப் பூந்தாளென்றது. இப்பாட்டும் பின்வரும் பாட்டும் குளகம்.

(க-து.) தமயந்தியே விருப்பற்ற சொற்களைச் சொன்னேன். அவைநிற்கட்டும். உன்விருப்பத்தை நிறைவேற்றுவான், நீ சொல்லென் றன்னஞ் சொல்லி. 78

தோளாமணியைநிறைத் தன்னமென் றூயமூரற்
கோளார்மதிவாண் முகத்தருளுட்குறிப்புநாடித்
தாளாண்மையுள்ளங் குறிப்பிற்றெரிதன்மையோரின்
வாளாவதிந்தணிப் பொற்சிறைவாய்ந்தவன்னம்.

(இ-ள்.) அணி-அழகிய, பொன்-பொன்மயமாகிய, சிறை-சிறைகள், வாய்ந்த-பொருந்திய, அன்னம்-அன்னமானது, தோளா-துளைக்கப்படாத, மணியை-முத்துக்களை, நிறைத்தன்ன-ஒழுங்குபடுத்தது போலும், மெல்-மெல்லிய,தூய - பரிசுத்தமாகிய, மூரல் - பல்லொழுங்கையும், கோளார்-பெருமை பொருந்திய, மதி - சந்திரன்போலும், வாள் - காந்தி பொருந்திய, முகத்தாள் - முகத்தையு முடைய தமயந்தியினது, உட்குறிப்பு - உட்கருத்தை, நாடி - ஆராய்ச்சி செய்து கொண்டு, ஆண்மை - ஆழமாகிய, உள்ளம் (ஒருவர்) கருத்தை, குறிப்பின், தாள் (தமது) முயற்சியை, தெரி (அதன் பின்பு) தெரிவிக்கும், தன்மையோரின்-குணமுடையவர்போல்,வாளா சும்மா, வதிந்தது-இருந்தது எ-று.

தோளாமணியை நிரைத்தன்னமென றூயமூரலென்றும், கோளார்மதி வாண்முகமென்றும், சொல்லப்பட்டமையால்; நளன்செய்தி கேட்டுத் தமயந்

திக்கு நகையும் முகக்கிளர்ச்சியுந் தோன்றினமை குறிக்கப்பட்டதாயிற்று. ஆண்மை-இங்கே உள்ளக்கருத்தை வெளிப்படுத்தாதாளுதற் றன்மையாதலின் ஆழமெனப் பொருள் கூறப்பட்டது. பெரியோர் அப்படிப்பட்ட பிறர் கருத்தைத் தாமறிவாதலால், அன்னம் அவள் கருத்தை யறிந்தபின்னே தன் வரவின் காரியத்தைச் சொல்லுதற் கெண்ணிச் சும்மாவிருந்ததென்க. தெரியென்றது-தன்வினை பிறவினைகளுக்குப் பொதுவாகலின், இங்கே பிறவினைப்பொருளில் வந்தது. உட்குறிப்பு நாடித் தாளாண்மையுள்ளங் குறிப்பிற்றெரி தன்மையோரினென்றதற்கு, முயற்சியையுடைய உள்ளத்தை முகக்குறிப்பினு லாராயுந் தன்மையோர்போலத் தமயந்தியினுட்கருத்தை முகக்குறிப்பினு லாராய்ந்திருந்ததெனப் பொருள் கூறுவாருமுண்டு.

(க - து.) அன்னமானது தமயந்தி யுட்கருத்தை அறிந்து பேசாதிருந்தது எ-ம். 79

இவ்வாறுசெங்கான் மடவன்னமிருத்தலோடு
மைவ்வாணெடுங்கட் டமயந்திமனத்தினோர்ந்து
செவ்வாம்பலூறுஞ் செழுந்தேறலுளித்தலின்றி
யொவ்வாததீஞ்சொல் குயினாணவுரைக்கலுற்றாள்.

[இதனால் தமயந்தி பேசத் தொடங்கினமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) இவ்வாறு-இவ்விதமாக, செங்கால் - செய்யகால்களையுடைய, மடம்-இளமைபொருந்திய, அன்னம்-அன்னமானது, இருத்தலோடும்-இருந்தவளவில், மை-அஞ்சனமெழுதப்பெற்ற, வாள்-வாள்போலும், நெடு-நீட்சிபொருந்திய கண்-கண்களையுடைய, தமயந்தி-தமயந்தியானவள், மனத்தின்-மனத்தின்கண், ஓர்ந்து-ஆலோசித்து, செவ்வாம்பல்-செவ்வல்லிப் பூவிலிருந்து, ஊறும்-சுரக்கின்ற, செழுந்தேறல்-செழிய தேனானது, உளித்தலின்றி - சிந்துதல் (தன்னிடத்) தில்லாமல், ஒவ்வாத-நிகராகமாட்டாத, தீஞ்சொல் (தன் செவ்வாயிலிருந்து வருகிற) மதுரவார்த்தையை, குயில் - கோகிலமானது, நாண-வெட்கமுற, உரைக்கலுற்றாள்-சொல்லத் தொடங்கினாள் எ-று.

செவ்வாம்பலுக்கேற்பச் செவ்வாய் வருவிக்கப்பட்டது, ஆம்பலூறுஞ் செழுந்தேற்றுளித்தலின்றி யொவ்வாத தீஞ்சொலெனவே, அல்லிமலரிலிருந்து வெளிப்படுந் தேன்போல் வாயிலிருந்து வெளிப்படுதலுஞ், தீஞ்சுவையுமுடைய சொல்லென்றதாயிற்று. [இது உவமையணி]

(க-து.) தமயந்தி குயிலும் நாணச்சொல்லத் தொடங்கினாள் எ-ம். 80

கலித்துறை.

பேதைநீர்மையிற்பெட்புறின்யாங்களு
மேதமெய்துறு மென்பர்சரதமே
யாதலானிற் றொடர்ந்தனரெய்துறத்
தீதிழைத்தனன் யானுன்றிறத்தினே,

[இதுமுதல் இரண்டு பாட்டுகளாற் 'பூந்தாள்வருந்தா வொதுங்கப் பிழை செய்தனன்' என்றதற்கு மாறுன உத்தரஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) பேதை நீர்மையில்-பேதைமைக் குணத்தினுலே, யாங்கணும்-எல்லாவிடங்களிலும், பெட்புறின்-விரும்பினுல், ஏதம்-குற்றமும் (அதனுல் விளைவதாகிய) துன்பமும், எய்துறும்-அடையும், என்பர்-என்று சொல்லுவார்(பெரியோர்) சரதமே (அது) சத்தியமே, ஆகலால்-ஆகையால், நின்-உன்னை, தொடர்ந்து-பின்சென்று, அருர்-துன்பமானது, எய்தற (என்னை) யடைய, யான்-நான், உன்றிறத்தின்-உன்னிடத்தே, தீது-குற்றத்தை, இழைத்தனன்-செய்தேன் எ-று.

பேதை நீர்மையாவது - செயத்தகுவதுந் தகாததும் பகுத்தறியமாட்டாத குணம். அது பெண்மைக்குச் சிறந்த குணமாய் நிற்றலிற், பேதை நீர்மையிற் பெட்புறினென்ருள். அது பெண்மைக்குச் சிறந்ததென்பது-"நுண்ணறிவுடையோர் நூலொடுபழகினும், பெண்ணறிவென்பது பெரும் பேதைமைத்தே" என்பதனுலறிக. இரட்டுற மொழிதலென்னு முத்தியால், ஏதத்திற்குக் குற்றமும்-அதனுல்வருந் துன்பமு முரைக்கப்பட்டன. அவ்விருபொருளும் "ஏதந் துன்பங் குற்றப்பேர்" என்பதனுலறிக. என்பர் சரதமேயென்ருள்; "பேதைமையுளெல்லாம் பேதைமைகாதன்மை, கையல்ல தன்கட்செயல்" என்பவாகலின். பேதைமையினுலே விஷயநியமமில்லாமல் எல்லாப்பொருள்களிலும் விருப்பம்வைத்தால் அதனுலேதான் பிறருக்கு அபகாரஞ்செய்யவும், பின்பு அதைக்குறித்துத்தான்மனம் வருந்தவுநேரிடும்; அதையன்னிடத்துத்தானே காணலாமென்பது கருத்து. [முன் வாக்கியத்தின் பொதுப்பொருளாற் பின் வாக்கியத்தின் சிறப்புப்பொருள சாதிக்கப்படுதலால், வேற்றுப்பொருள் வைப்பணியாம்.]

(க-து.) தமயந்தியானவள் அன்னமே உன்னிடத்திற் குற்றஞ் செய்தேனென்ருள் எ-ம்.

81

பளிங்கிற்றுன்னிய பல்பொருண்மற்றதில்
விளங்கித்தோன்றல்போல் யான்செய்தவெம்பிழை
களங்கமற்றவுன் னுள்ளத்திற்கண்டுகொற்
றுளங்கயான்பிழைத் தேனென்றுசொற்றதே.

(இ-ள்.) (களங்கமற்ற) மாசற்ற, பளிங்கில்-கண்ணுடியிடத்து, துன்னிய-கிட்டியிருக்கின்ற, பல்பொருள்-பலபொருளும், அதில்-அதனுள், விளங்கித் தோன்றுதல்போல்-பிரதிபிம்பத்துத் தோன்றல்போல் (துன்னிய) (உன்னிடத்துக்) கிட்டியிருக்கின்ற, யான்-நான், செய்த (உனக்குச்) செய்த, வெம்பிழை, கொடிய பிழையானது, களங்கமற்ற-மாசற்ற, உன்-உனது, உள்ளத்தில்-நெஞ்சுகள், கண்டுகொல்-பிரதிபிம்பித்துத் தோன்றியோ, யான்-நான், துளங்க-நடுங்கும்படியாக, பிழைத்தேனென்று (உனக்குக்) குற்றஞ்செய்தேனென்று-சொற்றது (நீ) சொல்லியது எ-று.

பெரியோர் தமக்கொருவனொருபிழை செய்தவிடத்து அவனைநோக்கிநான்றானுனக்குப்பிழைசெய்தேனென்று(கண்ணாடியானது தன்முன்னுள்ளபொருளைத் தனனிடத்தே காட்டுதல்போல்) அவனிடத்துள்ள பிழையைத்தம்மிடத்தே காட்டுவாராதலால், அவர் கண்ணாடிபோற் களக்கமின்றி விளங்குவார், நீயவர்களிற்சேர்ந்துளாயாதலால் அங்ஙனஞ் சொன்னாயென்பது கருத்து- கண்டுகொல் - தோன்றலைக் கண்டோவெனினுமாம். சொற்றனைதென்றது-இறந்தகாலம்பற்றிவந்த தொழிற்பெயர். [இது உவமையணி.]

(க-து.) கண்ணாடியானது தன்முன்னுள்ள பொருளைத் தான் காட்டுதல் போல என்குற்றத்தை நீ யேற்றுக்கொண் டெடுத்துக் காட்டினாயென்றன்னஞ்சொல்லிற்று எ-ம்.

வேண்டல்செய்வ லென்றாய்விழைவா னினைக்
காண்டலன்றியென் வேண்டுங்கதிர்மதி
யீண்டுநோக்குநற் கண்களிப்பெய்துறச்
சேண்டயங்கு வதன்றியென்செய்யுமால்.

[இதனால் 'மாறவுள்ளளம்பரிந் தார்வமுற்றப்புரிவேன்' என்றதற்கு உத்தரஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) வேண்டல்-வேண்டப்பட்டதை, செய்வலென்றாய்-செய்வேனென்று சொன்னாய், விழைவால்-ஆசையினாலே, நினை (அழகிய) வின்னை (கண்களிப்பு) நேத்திரானந்தத்தை, எய்துற-அடைய,காண்டலன்றி,காணுதலல்லாமல், என்-யாது, வேண்டும் (எனக்கு) வேண்டும், கதிர்-கிரணத்தையுடைய, மதி-சந்திரனானவன், ஈண்டு-இவ்விடத்திருந்து, நோக்குநர்-பார்ப்பவர், கண்களிப்பு-நேத்திரானந்தத்தை, எய்துற-அடைய, சேண் - ஆகாயத்திலிருந்து, தயங்குவதன்றி-விளங்குவதல்லாமல், என்-யாதுபயனை, செய்யும் (அவர்க்குச்)செய்வான் எ-று.

வேண்டல்-வேண்டப்படுபொருளை யுணர்த்தலால், ஆகுபெயர். அவ்வன்னத்தைக் காணுதலினுஞ் சிறந்தபொருள் தனக்கில்லையென்பது தோன்ற, நினைக்காண்டலன்றி என்வேண்டுமென்றாள். சந்திரன் இங்கேயிருந்து பார்ப்பவருக்குக் கண்களிப்பைச் செய்வதன்றி வேறே விசேஷமாகச் செய்யக்கிடந்ததொன்றில்லை; அதுபோல-நீயும் எனக்குக் கண்களிப்பைச் செய்வதன்றி வேறே விசேஷமாகச் செய்யக்கிடந்ததொன்றில்லை என்பது கருத்து. [அன்னத்தையுஞ் சந்திரனையுங்குறித்துச் சொல்லப்பட்ட விரண்டு வாக்கியங்களுக்கு பிம்ப பிரதிபிம்பபாவந் தோன்றலால், உடுத்துக்காட்டுவமையணியாம்.]

(க-து.) தமயந்தியானவள் அன்னமே யான் விரும்பியதைச்செய்வேனென்றாய். உன்னைக்கண்டதேயல்லாமல் எனக்கென்ன வேண்டுமென்றாள் எ-ம்.

கோச்சகக்கலிப்பா.

விழையுமனத்ததுமன்னத்தை விட்டகல்வதெனினன்றோ
தழையவுரைதருநாவாற் சாற்றலாந்தகைமைத்தா

மெழுபுவிவாழ்கன்னியரி லிருவிசும்பிற்றருவினறுங்
கொழுநனைநல்குதியென்று கூறுநருமுளல்கொல்லோ.

[இதனால் விரும்பப்பட்டபொருள் எப்படிப்பட்டதாயினுஞ் சொல்லலா மெனின் அது கூடாதெனல் சொல்லப்படுகின்றது.)

(இ-ள்.) விழையும்-விரும்பப்படுகின்ற, மனத்தது - மனத்திலுள்ளதென்று, மனத்தை-அம்மனத்தை, விட்டகல்வதெனினன்றோ - விட்டுவெளிப்படுவதாயினன்றோ, தழைய-பெருக, உரைதரும்-பேசுகின்ற, நாவால் - நாவினாலே காற்றலாந்தகை-மைத்தாம் சொல்லப்படுந் தகுதியுடையதாகும், எழுபுவி-எழுதீவுகளிலேயும், வாழ்-வாழ்கின்ற, கன்னியரில்-பெண்களுள், இருவிசும்பில்-பெரிய வானுலகத்துள்ள, தருவின்-கற்பகத்தருவினது, நறு-பரிமளம்பொருந்திய, கொழுநனை-செழியவரும்பை, நல்குதியென்று (கொணர்ந்து) கொடுவென்று, கூறுநரும்-சொல்வாரும், உளர்கொல்-இருக்கின்றரோ (அப்படியே) தருவின்-கற்பகதருப்போலும், நாறு-நற்குணம்பொருந்திய, கொழுநனை-நளராஜனை நல்குதியென்று - கொணர்ந்துகொடுவென்று, கூறுநரும-சொல்வாரும், உளர்கொல்-இருக்கின்றரோ எ-று.

மனத்தைவிட் டகலாமைக்குக் காரணம்-மனம் அதனை யுறுதியாகப் பிடித்திருத்தலேயாம். கொழுநனை யெனவே, மலரும்பருவத்துப் பேரரும்பென்றதாயிற்று. மலர்மேல் விருப்பமகளிர்க் கியல்பாதலால் அதனை யெடுத்துக்காட்டினாள். கொழுநன்-தலைவன். "பிரானே கொழுநனரசனுதியெனப் பதினைந்துமுறை செய்யப்பொருட்கு மிறைவன்மேற்றே" என்பதனாலறிக, அது சிறப்புப்பற்றி நளனை யுணர்த்திற்று - கணவனென்பாருமுளர். கிடைத்தற்கரிய வொருவனைப் பெறவேண்டுதல், கிடைத்தற்கரிய கற்பகவரும்பைப் பெறவேண்டற்கொப்பாதலாற்; பழிப்புக்கிடமாதல்பற்றி நாணமுடையவளெப்படிக் கூறுவளென்பது கருத்து. [சிலேடையி னிருபொருளுக்கும் பிம்ப பிரதிபிம்ப பாவத்தால், எடுத்துக்காட்டுவமையணியாம்.]

(கு-து.) தமயந்தியானவள் கொழுநனைத் தாவென்று சொல்லுவளுண்டோ வென்று சிலேடையாகச் சொன்னாள் எ-ம்.

தழைசிறையமடவனமே சாற்றுதியென்றிவ்வாறு
குழைகிழிக்குமதர்நெடுங்கட் கொம்பர்மகிழ்நாணினொடு
மொழிவதுகேட்டையுற்று முகிழ்நகைவாணிதலுளத்தில்
விழைவுறுநன்மொழிகள் சிலமடவன்னம்விளம்புமால்.

[இதனால் தமயந்தியின் இச்சொல்லைக்கேட்டு அன்னம் பேசத்தொடங்கினமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) தழை-தழைத்த, சிறைய-சிறைகளையுடைய, மடம்-இளமைபொருந்திய, அனமே-அன்னமே, சாற்றுதியென்று-சொல்லென்று, இவ்வாறு-இவ்விதமாக, குழை-குழையையுடைய (காதை) கிழிக்கும்-கிழிக்கின்ற, மதர்-மத

ர்த்த, நெடு-நீட்சிபொருந்திய, கண் - கண்களையுடைய, கொம்பர் - பூங்கொம்பு போல்பவள், மகிழ்-மகிழ்ச்சியாகும், நாணிலனும்-வெட்கத்தோடும், மொழிவது-சொல்வதை, கேட்டு (தான்) கேட்டு, ஐயுற்று-சந்தேகித்து, முகிழ் (முல்லை) யரும்புபோலும், நகை - பற்களையும், வாள் - காந்திபொருந்திய, நுதல்-நெற்றியையுமுடையவளது, உளத்தில்-உள்ளத்தின்கண்ணே, விழைவுறு-விரும்பப்படும், நன்மொழிகள்சில - சில நல்ல சொற்களை, மடவன்னம் - இளமை பொருந்திய வன்னமானது, விளம்பும் (அவளுக்குச்) சொல்லும் எ-று.

கொம்பு-கொப்பரென ஈறுதிரிந்தது. மகிழ்-தன் விருப்பத்தை முடித்தற்கு உபாயங் கிடைத்ததென் றுண்டாகியது. ஐயமுற்றென்பது விகாரப்பட்டது ஐயம்-நளன்மே லிவளுக்கு விருப்பமுண்டோ வில்லையோவென்னுஞ் சந்தேகம்.

(க-து) தமயந்திசொற்களைக்கேட் டன்னஞ்சொல்லியது எ-ம். 85

தருவினறுங்கொழுநனையார் தருகவெனவுரைப்பளெனு
மரியமறைப்பொருளதனை யான்கேட்கலாகாதோ
தெரியவருமறைப்பொருளைச் செவிப்புலத்திலுறநான்காம்
வருணமுடையவர்கேட்கலாகாதவாறேபோல்.

[இதனல் அது நான்கேட்கத்தக்கதுதானெனல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) தருவின்-கற்பகத்தருவினது, நறு-பரிமளம்பொருந்திய, கொழுநனை-செழியவரும்பை, யார்-எவர், தருகவென-கொடுவென்று, உரைப்பரெனும்-சொல்லுவாரென்று சொல்லப்பட்ட, அரிய-அரிதாகிய மறைப்பொருளதனை-இரகசியப்பொருளை, யான்-நான், கேட்கலாகாதோ-கேட்கத்தகாதா, தெரியவரு - அதிதுற்சரிய, மறைப்பொருளை - வேதப்பொருளை-செவிப்புலத்தில்-சுரோத்திரேந்திரியத்தினாலே-உற-பொருந்த, நான்காம் வருணமுடையவர்-சூத்திரர், கேட்கலாகாதவாறேபோல்-கேட்கத்தகாதவிதம்போல் எ-று.

அம்மறைப்பொருளைக் கேட்டற்குச் சூத்திரர்போல், இம்மறைப்பொருளைக் கேட்டற்கு யான் அனதிகாரியல்லேன்; அதிகாரியே: அதனை நன்றாகச் செல்லென்பது கருத்து. பின் மறைபபொருள்-வேதவாக்கியம்; அன்றி-வேதத்தினது அர்த்தமெனினுமாம்.

(க-து.) அன்னமானது தமயந்தியே நீ சொன்ன இரகசியப்பொருளை யான் கேட்கலாகாதோவென்று சொல்லிற்று எ-ம். 86

மனமுறுமோர்பொருளடைத லரியதோமனத்தாலு
நினைவரியபொருளினையு நிறையுடையோரடைகுவராற்
புனைவணிமேகலைதாங்கிப் புடையகன்றவகலல்குற்
கனியனையவர்தீஞ்சொற் கற்பகப்பூங்கொம்பன்னாய்.

இதனால் அப்பொருள் பெறுதற்கரியதாகையாற் சொல்லுதற்கு நாணு கின்றேனெனின் அதற்குத்தரும் உத்தரஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) புனை-அலங்கரிக்கப்பட்ட, மணிமேகலை-இரத்தினமேகலையை, தாங்கி-சுமந்து, புடையகன்ற-புடைபரந்த, அகல்-பரப்பையும், அல்குல்-அரைக்கீழிடத்தையும், கனியனைய-முக்கனிபோலும், அம்-அழகிய, தீ-மதுரம்பொருந்திய, சொல்-சொல்லையுமுடைய, கற்பகப்பூங்கொம்பன்னாய்-கற்பகத்தின் மலர்க்கொம்புபோல்பவளே, மனம்-மனத்தின் கண், உறும்-இருக்கின்ற, ஓர் பொருள்-ஒருபொருளை, அடைதல் - பெறுதல், அரியதோ (கற்பகவரும்பை யடைதல்போல்) அரியதோ (அரியதன்று) (அரியதென்றேன் சொல்லக்கூடா தெனின்) நிறையுடையோர்- யாகிகள், மனத்தாலும்-அம்மனத்தினாலும், நினைவரிய-நினைத்தற்கெட்டாத, பொருளினையும்-பரப்பிரமத்தையும், அடைகுவர்-பெறுவார் எ-று.

மனமுறுமோர் பொருளடைதலரியதோ வென்றதற்கு, அப்பொருள்கட் பொறிமுதலியவற்றிற்குப புலனாகாதிருப்பினும் மனமொன்றற்காவதுபுலனாயிருக்கையால் உனக்கு அதனையடைதல் அரியதன்றென்பது கருத்து. ஆணவமலந்தடையா யுயிரைச்செறிந்துநிற்கையாற், சச்சிதானந்த சொரூபமாகிய பரப்பிரமத்தை நினைத்தல் மனத்திற்குக் கூடாமையறிக. நிறை-அம்மனத்தைப் பொறிகளிற் செலுத்தாது சமாதியினிறுத்தல். நில்லென்முதனிலை நிறுவெனப் பிறவினையாய்ப் பின்னர் நிறையெனத் தொழிற் பெயராயிற்று. [மனத்திற் கெட்டாததையும் அடைவரென்னு மொருபொருளைச்சொல்லத் தண்டாபூபிகநியாயத்தினாலே மனத்திற் கேட்டிய பொருளையடைதல் சொல்லவேண்டுவதில்லையென்னு மற்றொருபொருள் தோன்றலால், செய்யுட்பொருட் பேறணியாம்.]

(க-து.) தமயந்தியே நினைத்ததையடைதல் அரிதன்றென் றன்னஞ்சொல்லியது எ-ம். 87

பொய்ம்மைமொழிபுகன்றறியேம் புகலமனமெண்ணுகினு
மெய்ம்மைபலதுரையாநா வேதநவில்பயிற்சியாற்
கெம்மைவருமுலைவாய்மை யுடையோரைக்குறித்துரைப்பி
னெம்மைமுதலெடுத்துரைப்ப ரீற்கமலத்திறைமுண்ணும்,

[இதனால் இது பொய்சொல்வதென்று சொல்லாதிராதே யெனல்சொல்லப்படுகின்றது.

(இ-ள்.) கொம்மை-இளமைபொருந்திய, வரு-வளர்கின்ற, முலை-முலைகளையுடையவளே, பொய்ம்மைமொழி-அசத்தியவார்த்தையை, புகன்றறியேம் சொல்லியறியேம், புகல (ஒரு சமயத்திலே) சொல்லுதற்கு, மனம்-மனமானது, எண்ணுகினும்-நினைத்தாலும், நா (எம்முடைய) நாக்களானவை, வேதம்-வேதத்தை, நவில்-ஓதிவருகின்ற, பயிற்சியால்-பழக்கத்தினாலே, மெய்ம்மை

(மொழி) யலது-சத்தியவார்த்தையை யல்லாமல், உரையா-சொல்லாவாம், ஈர்ங்கமலத்து-குளிர்ச்சிபொருந்திய தாமரைப் பூவிலுள்ள, இறைமுன்னும் நான்முகக்கடவுண்முன்னும், வாய்மையுடையோரை - சத்தியத்தையுடையவரை, குறித்து-கருதி, உரைம்பின்-பேசின், எம்மை-எம்மையே, முதல்-முதலில், எடுத்து-குறித்து, உரைப்பர்-சொல்லுவார் எ-று.

தன்னினத்தையுந்தழிவிப் புகன்றறியேம் பொய்ம்மையென்றது. புகல மனமெண்ணுகினுமென்றும், உம்மை-மனமும்மப்படி எண்ணுகிறதில்லை யென்னும் பொருளைப் பயத்தலால், எதிர்மறை. சத்தியத்தைச் சொல்லுகிறவேதத்தோடு பழகலால், நாவிற்கு அப்பழக்கக்குணம் விடாதென்க. "பழக்கங்கொடியது பார் பாறை யினுங்கோழி. கிழிக்கும்பொலியைக்கிளரும்-விழித்துங், குருடர்க்கொளிபகையாக் கூசிக்கோல்போடா, ரருளைப்பகுக்குமான்மா" என்பதனுமறிக. தேவலோகத்துப் பறவையாதலின் வேதமோதுதற் குரித்தாயிற்றென்க. கமலத்திறைமுன்னு மென்னு மெச்சப்பொருளில்வந்த உயர்வுசிறப்பும்மையால். இந்திரன் முதலியோரிடத்து முரைப்பமென்பது தோன்றுதல் காண்க.

(க-து.) தமயந்தியே பொய்வார்த்தைகள்சொல்லி யறியோம். சொல்ல நினைக்கில் வேதப்பயிற்சியால் நாக்கள் எழாவாம் எ-ம். 88

பாட்டுவரிச்சுரும்புமுரல் பங்கயமெல்லரும்பேய்ங்கு
மோட்டிளவெம்முலையெனக்கு முடியாதபொருளுளதோ
சூட்டிரவின்மேற்கிடந்த தொடுகடன்ஞாலத்திடைநீ
வேட்டதுகூறுதிகொணர்வல் விரைவினெனக்கூறிதலால்.

[இதனால் ஆனய் நீ என்னசெய்யமாட்டுவாயெனின் அதற்குத்தரும் உத்தரஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) வரி-இரேகைகளையுடைய, சுரும்பு-வண்டுகளானவை, பாட்டு-பாட்டை, முரல்-பாடப்பற்றிருக்கின்ற, பங்கயம்-தாமரையினது, மெல்லரும்பு-மெல்லியவரும்பை, எய்க்கு-நிகர்க்கின்ற, மோட்டிளவெம்-உயர்ச்சியும் இளமையும் விரும்பப்படுங்குணமும்பொருந்திய.முலை-முலைகளையுடையவளே எனக்கு-என்னால், முடியாத-முடிவுபெறாத, பொருள்-காரியமானது, உளதோ (ஒன்) றிருக்கின்றதோ, சூட்டு-உச்சிக்கொண்டையையுடைய, அரவின்மேல்-ஆதிசேஷன்மேல், கிடந்த-தங்கிய, தொடு-தோண்டப்பட்ட, கடல்-கடலாற் சூழப்பட்ட, ஞாலத்திடை - பூமியின்கண், வேட்டது (உன்னால்) விரும்பப்பட்டபொருளை, நீ-நீ, கூறுதி-சொல்லு, விரைவில்-சீக்கிரத்தில், கொணர்வல் (யான் அத்தனைக்) கொண்டுவருவேன், என-என்று, கூறியது (அன்னம்) தமயந்திக்குச் சொல்லியது எ-று.

சுரும்பு முரலுதலைப் பங்கயவரும்பிற்கு அடையாக்கிது, மலரும் பருவத்துப் பெரியவரும்பென்று தோன்றுதற்கென்க, எனக்கு முடியாதபொருளுள

தோவெனவே-அற்பமான பறவையென்று நினையாதே (சிறியவச்சாணி பெரிய தேரை நடத்துதல்போல்) எப்படிப்பட்ட பெரிய காரியத்தையு முடிக்கின்ற வல்லமை எனக்குண்டென்றதாயிற்று.

(க-து.) தமயந்தியே-நீ இச்சித்ததைச்சொல் விரைவிற்கொண்டு வருவே னென் றன்னஞ் சொல்லிற்று எ-ம். 89

மருவுபுரிநரம்பிசைக்கு மாட கநல்யாழினிசைகேட்
டுருகினளன்பாலவேட்கை யுற்றனளென்றறிகில்லா
யரியபசுபொன்னிரத்த வாய்தூவிமடவனமே
தெருமரலுற்றேன்விழைவு செப்புமாறெவனென்றாள்.

[இதனால் வேட்டது கூறுதியென்றதற்குத் தரும் உத்தரஞ் சொல்லப்படு கின்றது.

(இ-ள்.) அரிய-பெறுதற்கரிய, பசும்பொன்-பசியபொன்னினது, நிறத்த-உருவமுள்ள, ஆய்-தேடத்தக்க, தூவி-இறகுகளையுடைய, மடம்- இளமை பொருந்திய, அனமே-அன்னமே, மருவ-சேர்ந்த, புரி-வலிக்கட்டுகளையும், நரம்பு-தந்திகளை, இசைக்கும்-இசைவிக்கின்ற, மாடகம்-முறுக்காணிகளையும் உடைய, நல்யாழ்-நல்ல வீணையிசைபோல்கின்ற, இசை (என்) சொல்லை, கேட்டு (இவள்) கேட்டு, உருகினள்-மனங்குழைந்தவளாகி, அன்பால்-ஆசை யினாலே, வேட்கையுற்றனளென்று (அச்சொல்லையே) கேட்கவேண்டுதலுற்றா ளென்று (இன்னுஞ் சிலேடையால்) உருகு-உளமுருக நின்ற, இன்-இனிமை பொருந்திய, நளன்பால்-நளனிடத்தே, வேட்கையுற்றனளென்று-ஆசைமிகுந் தாளென்று, அறிகில்லாய்-அறியாயா, தெருமரலுற்றேன்-மனச்சுழற்சியை ய டைந்தநான், விழைவு-அவ்வாசையை, செப்புமாறு (வெளிப்படையாகச்) சொ ல்லும்விதம், எவன்-யாது, என்றாள்-என்று சொல்லினாள் (தமயந்தி) எ-று.

வீணையிசைபோல்கின்ற என்சொல்லை இவள்கேட்டு மனங்குழைந்தவ ளாகி ஆசையினாலே இன்னு மச்சொல்லையே கேட்கவேண்டுகிறாளென்றறி யாயாவெனலால், உன்சொல் கேட்குந்தோறுஞ் செவிக்கின்பஞ் செய்தலால், நான் இன்னும் அதனையே கேட்கவேண்டுகின்றேனல்லது, பிறிதொன்றை வேண்டுகின்றிலேன் என்றாளென்பதாயிற்று. இப்பொருளிலே வேட்கை- பெறல்வேண்டுதல். வீணையிசைபோலு மென்சொல்லை இவள் கேட்டு உள முருகநின்ற வினிமைபொருந்திய நளனிடத்தே விருப்பமுற்றாளென் றறி யாயாவெனலால், உன் சொல்லினாலே நளனுடைய குணங்களை நன்றாகவறி ந்து அவனிடத்தே விருப்பமுற்றேன் என்றாளென்பதாயிற்று இப்பொருளில் தமயந்தியை வினைமுதலாகவுடைய-உருகென் வினைத்தொகை-நளனென் பெயர்கொண்டு முடிந்தது. உற்றேனென்றது. வினையாலணையும்பெயர்.

((க-து.) அன்னமே-இசைகேட்டுருகினளன்பாலாசையுற்றனளென்றறி யாயா எ-ம். 90

வேட்கைதனதுளத்தடக்கி மெய்நாணான்மறைத்திகலும்
வாட்படைபோ னெடுங்கண்ணாள் வழங்கியசொற் பொருடேர்
நாட்கமலவள்ளவாய் நறும்போதிலமர்செய்ய [ந்து
தாட்பவளக்கடிகைவாய் மடவன்னஞ்சாற்றுமால்.

[இதனால் அன்னம் பேசத்தொடங்கினமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) நாள்-அன்றுபூத்த, கமலம்-தாமரையினது, வள்ளம்-கிண்ணம் போலும், வாய்-வாயையுடைய, நறும்போதில்-நல்லமலரில், அமர்வாசஞ் செய்கின்ற, செய்ய-சிவப்புநிறம்பொருந்திய, தாள்-அடிகளையும், பவளக்கடிகை-பவளத்துண்டம்போலும், வாய்-வாயையுமுடைய, மடம்-இளமைபொருந்திய, அன்னம்-அன்னமானது, இகலும்-போர்செய்தற்குரிய, வாட்படைபோல்-வாளாயுதம்போலும், நெடுங்கண்ணாள்-நெடிய கண்களையுடையவள் வேட்கை (நளன்மேலுண்டாகிய) வாசையை, தனது-தன்னுடைய, உளத்து-மனத்தின்கண், அடக்கி-வெளிப்படாமல்வைத்து, நாணால்-வெட்கத்தினால், மெய்-அவ்வாசைகொள்ளப்பட்டபொருளை, மறைத்து (சிலேடையால்) மறைத்து வழங்கிய-சொல்லிய, சொற்பொருள்-வாக்கியார்த்தத்தை, தேர்ந்து-அறிந்து, சாற்றும்-சொல்லும் எ-று.

(க-து.) தமயந்தி நளனிடத் திச்சைவைத்து மறைபொருளாகச் சான்ன சொல்லையறிந் தன்னஞ் சொல்லும் எ-ம். 91

தருவினறுங்கொழுநனையார் தருகென்பாரென்றதுஞ்சீர்
மருவுபுரிநரம்பிசைக்கு மாடகநல்யாழிசைகேட்
டுரிகினளன்பால்வேட்கை யுற்றனளென்றுரைத்ததும்யான்
கருதினாற்பலகலையும் கற்றுணர்ந்ததெளிவினால்.

[இதனால்நீ என்னாலே மறைத்துச் சொல்லப்பட்ட பொருளையறிந்திலையா வென்பாயாயின், அறிந்துளேனெனல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) தருவின் - கற்பகதருவினது, நறும் - வாசனை பொருந்திய, கொழுநனை - செழியவரும்பை, யார்-எவர், தருகென்பார் - தருகவென்று சொல்லுவார், என்றதும் - என்று சொன்னதும், மருவு - பொருந்திய, புரி வரிக்கட்டுகளையும். நரம்பு-தந்திகளை, இசைக்கும்-இசைவிக்கின்ற, மாடகம்-முறுக்காணிகளையுமுடைய, நல்-நல்ல, யாழ்-வீணையின், இசைகேட்டு-இசையைக்கேட்டு, உருகினளன்பால் - ஆசையால் னெஞ்சுழைந்தவளாகி, வேட்கை-ஆசை, உற்றனளென்று - அடைந்தனளென்று, உரைத்ததும்-சொன்னதும், யான் - நான், பலகலையும்-பலவகை நூல்களையும், கற்றுணர்ந்த-கற்று (அவற்றின் பொருளை யறிந்த, தெளிவினால்-தெளிவைக்கொண்டு, கருதினன் (நளனைக் குறித்துக் சொல்லப் புட்டதை யென்று) அறிந்தேன் எ-று.

நளனைக்குறித்துச் சொல்லப்பட்டவைகளென்பது - இசையெச்சம். கருதல்-அங்கே அறுதற்பொருளைப் பயந்துநின்றது. பலகலை-வியாகரணம்-தருக்கம்-முதலியன.

(க-து.) தமயந்தியே-நீ சிலேடையாகச் சொன்னதை யானறிந்தேன் என்றன்னஞ் சொல்லிற்று எ-ம். 92

மறங்கிளருமதர்நெடுங்கட் கன்னியர்தமனமொன்றிற்
செறிந்துமுடன்புரியுமெனத் தெளிவுடையோர்செப்புதலா
னறுந்துணரொண்சில்லோதி நயப்புறுநின்குறிப்புரைக
ளறிந்துமறியேன்போல் வையிறவுற்றிருந்தனன்பான்.

[இதனால் 'இருவிசும்பிற் றருவினறுங் கொழுநனை' என்றும் 'யாழிசை கேட்டுருகி னளன்பால் வேட்கையுற்றனள்' என்றும் கூறிய வாக்கியங்களின் பொருளை நீ யறிந்திருந்தால், அறியாய்போற் சொல்லியதற்குக் காரணம் யாதெனின் அதனை யுணர்த்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) நறுந்துணர்-நறியமலர்களையும், ஒண்சில்-ஒள்ளிய பொன்வட்டதகட்டணியையுமணிந்த, ஓதி-கூந்தலையுடையவளே, மறம் - கொலைத்தொழிலால், கிளரும்-விளங்காநின்ற, மதர்-மதர்த்த, நெடி-நெடிய, கண்-கண்களையுடைய, கன்னியர்-கன்னியர்களின், மனம் - மனங்களானவை, ஒன்றில் ஒரு பொருளில், செறிந்தும்-அழுந்தியும், உடன்-விரைவில், பிரியுமென (அந்நிலையில்) நீங்குமென்று, தெளிவுடையோர்-அறிவுடையோர், செப்புதலால்-சொல்லுதலினாலே, நயப்புறு - விரும்பப்படுகின்ற, நின்-உன்னுடைய, குறிப்புரைகள்-குறிப்புச்சொற்களின் பொருளை, யான்-நான், அறிந்தும் - தெரிந்தும், அறியேன்போல-அறிந்திலேன்போல, ஐயுறவுற்று - சந்தேகமடைந்து, இருந்தனன்-இருந்தேன் எ-று.

மனமொன்றில் அழுந்துதல்-ஒருபொருளைப் பெறல்வேண்டுமென்று மிகவிரும்பி அதனையே நினைத்திருத்தல். தெளிவுடையோர் செப்புதல் "இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர், மனம்போல வேறுபடும்." என்பதனாலறிக. கன்னியர்மன மொன்றிலழுந்தியும் உடனே நீங்குமெனச் சொல்லுதலாலே. உன் மனமும் நளனிடத்தே இப்போது அழுந்தி நிற்பினும் இன்னுஞ் சிறிதுபொழுதிலே விட்டுநீங்கும் ஆதலால்; உனது நிச்சயம் அறியப்படாமைபற்றி அறியேன்போலச் சந்தேகித்திருந்தே னென்றதாயிற்று.

(க-து.) தமயந்தியே - பெண்கள் மனங்கள் விரைவிற் பிரியுமென அறிவுளோர் சொல்லுதலால், உன் குறிப்புச்சொற்களை நானறிந்தும் அறியாதுபோலச் சந்தேகித்தேன் என்றது அன்னம் எ-ம்.

உலகமெலாம்பொதுநீக்கி யோராழிதனையுருட்டி
யலகில்புகழ்ப்படாம்போர்த்த வரசர்பிரான்றிருமுன்னர்

மலர்பொதுளுஞ்சில்லோதி யையுற்றும டநாணாற்
சிலமொழிசொற்றனளென்னச் செப்புவதுஞ்சீர்மைத்தோ.

[இதனால் அன்றியும் நளன் அரசர்க்கரசனாயிருக்கையால் அவனுக்கு நிச்சயமில்லாத செய்தியைச் சொல்லலாகாதெனல் சொப்படுகின்றது.]

(இ-ள்.) உலகமெலாம்-பூமிமுழுதையும், பொது (பலவரசர்க்கும்)பொதுமையினின்று, நீக்கி-நீங்குவித்து, ஓராழிதனை-ஒரு சக்கரத்தை, உருட்டி-செலுத்தி, அலகில்-அளவில்லாத, புகழ்-புகழாகிய, படாம்-ஆடையை, போர்த்த (அந்த பூமியின்மேற்) போர்த்தல்செய்த, அரசர்பிரான் - ராஜாதிராஜனது, திருமுன்னர் - சந்நிதானத்தில், மலர்-மலர்கள், பொதுள் நெருங்கப்பெற்ற, அம்-அழகிய, சில்-பொன்வட்டத் தகட்டணியணிந்த, ஓதி - கூந்தலையுடையவள், ஐயுற்று-சந்தேகித்து, மடம்-அறியாமையோடுகூடிய, நாணால்-வெட்கத்தினாலே, சிலமொழி (உன்னைக்குறித்துச்( சில சொற்களை, சொற்றனளென்று-சொல்லினளென்று, செப்புவதும் - சொல்லுவதும், சீர்மைத்தோ - சிறப்புடைத்தாமோ எ-று.

"வேற்றுமைவழி வேற்றுமைவழியன்றியு, மவ்விருவழியு மடங்கும் பொதுவழி, யம் மூன்றுள்ளே யடங்காவழியு, மெனநான்கொன்றே யியம்புவர் சந்தி." இவ்விதியால், உலகம்-பேடு-தெய்வம்-அலி-இவற்றிற்குச் சொற்பொருடிணைபால் தொடக்கிற் சிறப்புமன்று பொதுவுமன்று, அடங்கா வழியென்க. எலாமென்பது-எஞ்சாப்பொருளில் வந்தது; மேனியெலாம் பசலையாயிற்றென்பதிற்போல். ஆணையைச் சக்கரமாகச் சொல்வது செய்யுள் வழக்கு. புகழ்ப் படாம் போர்த்தவெனவே, அவன் புகழ் பூமியெங்கும் வியாபித்திருக்கின்றதென்றதாயிற்று. பெண்களுக்கு விவாகமளவுந் தகப்பனுடைமையாயிருக்கவெண்டெலிற், கருத்தின்படி முடியுமோ முடியாதோவென்று சந்தேகித்தல். சீர்மைத்தோவெனவே, ஐயம்-மடம்-நாணம்-சொற்குறைவு - இவற்றுளொன்றே சொல்லுதற்குத் தடையாமெனின்; இந்நான்குஞ் சேர்ந்த இக்காரியத்தை நானதனால்வரும் பழிக்கஞ்சாது எப்படி சொல்லமாட்டேனென்றதாயிற்று.

(க-து.) தமயந்தியே-நளராஜன் திருக்கொலுவின்முன்னே யான்போய், அரசனே உன்னைக்குறித்துத் தமயந்தி வெட்கத்தாற் சில சொற்கள் சொன்னாள் என்று சொல்லுவது சிறப்பாகுமோ என் றன்னஞ்சொல்லிற்று எ-ம்.

கந்தடுகிம்புரிக்கோட்டுக் கறைநளிநிங்கடாயானை
மந்தரத்தாற்பகைக்கடலை மதித்தடையும்வயவேந்தன்
சிந்தையைநின்பாற்பிணிப்பிற் றெள்ளமுதத்திருவேயுன்
றந்தைபிறற்களிதிடினென் வாய்மைதவறுகாதோ.

[அப்படிதான் சொல்லினாற் குற்றமயாதெனின் அதற்குத்தரும் உத்தரஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) தெள்ளமுதம் - தெள்ளிய பாற்கடலிற் பிறந்த, திருவை-திருமாதே, கந்து-கட்டுத்தறியை, அறு-ஒடிக்கின்ற, கிம்புரி - பூணையணிந்த, கோட்டு-கொம்புகளையுடைய, கனழ-கரும்புகளை, சுளியும் - முறிக்கின்ற, கடாயானை-மத யானையாகிய, மந்தரத்தால் - மந்தரகிரியினாலே, பகை - பகைவராது, கடலை (சேனையாகிய) பாற்கடலை, மதித்து - கடைந்து, அடையும் - அடையப்பட்ட, வயம் - வெற்றித் (திருவை) யுடைய, வேந்தன் - நளராஜனது சிந்தையை - மனத்தை, நின்பால் - உன்னிடத்தே, பிணிப்பின் (யான்) கட்டிவைத்தால், உன் - உன்னுடைய, தந்தை - தகப்பனானவன், பிறற்கு - மற்றொருவனுக்கு, அளித்திடின் (உன்னைக்) கொடுப்பவனேயானால், என்-எனது, வாய்மை-வாய்ச்சொல்லின் றன்மையானது, தவறாகாதோ-வழுவாகாதோ எ-று.

பகை என்னும் பண்புப்பெயர் பண்பிக்காயிற்று. பகைக்கடலோடு ஆரோபித்தற் கிடமாகிய சேனையும், வயத்தோடு ஆரோபிக்கப்படு பொருளாகிய திருவும், வருவித்துக் கூட்டப்பட்டன. நளனுக் குன்மேலாசைபிறத்த லெளிதன்றென்பது தோன்ற, இப்படிப்பட்ட வெற்றிச்சிறப்பை யடையாக்கியது. உன்னைக்குறித்துப் பலவாறு புகழ்ந்தன்றி அவன் மனத்தை யுன்னிடத்தே திருப்புதல் கூடாதென்பதுபடப், பிணிப்பினென்றது. அரசன் மனத்தை யுன்னிடத்தே திருப்பியபின்பு உன் றந்தையார்பிறழநேருமாயின் நம்பவைத்து மோசஞ்செய்தவனாவே னென்பது தோன்ற, என் வாய்மைதவறாகாதோ வென்றது. சந்தேகத்திற் கிடமில்லாத பொருளையே சொல்லல்வேண்டுமென்பது கருத்து. [யானைமுதலியவற்றிலே மந்தரமுதலியவற்றை யாரோபித்தலால், உருவகவணியாம்.]

(க-து.) தமயந்தியே-நளன்மனதை யான் உன்னிடத்தில் வசப்படுத்தி வைத்தால், உன் பிதா உன்னைப் பிறனுக்குக் கொடுத்துவிட்டால் என்சொற் பழுதாமென் றன்னஞ் சொல்லிற்று எ-ம். 95

என்னுளத்திலையுறல்போல் யார்க்களிப்பான்றந்தையென
வுன்னுளத்துமைமுளதாதலா லிஃதொழிக
பின்னரெவையுரைத்திடினு முடிப்பலெனப்பேரெழில்கூ
ரன்னமடவரலுள்ள மறியுமாறுரைத்ததுவே.

[இதனால் அது சந்தேகத்திற் கிடமாகையால் அதனைவிட்டு என்பிரதிக்கினை வழுவாமல் வேறுபகாரஞ் செய்வேனெனல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) பேரெழில்-பெரியவழகினால், கூர்-மிகுந்த, அன்னம்-அன்னப்பறவையானது, என்னுளத்தில்-எனது மனத்தில், ஐயுறல்போல்-சந்தேகமிருத்தல்போல், தந்தை - தகப்பனானவன், யார்க்கு - யாருக்கு, அளிப்பானென-கொடுப்பானோவென்று, உன்னுளத்தும் - உனது மனத்திலும், ஐயம்-சந்தேகமானது, உளது-இருக்கின்றது, ஆதலால்-ஆகையினாலே, இஃது-இக்காரியம்,

ஒழிக-நீங்கக்கடவது, பின்னர்-அதுவன்றி, எவை-எந்தக்காரியங்களை, உரைத்திடினும் (நீ எனக்குச்) சொன்னாலும், முடிப்பலென (யான்) முடிப்பேனென்று, மடவரல்-தமயந்தியுனது, உள்ளம்-கருத்தை, அறியுமாறு-உணரும்படியாக, உரைத்தது-சொல்லிற்று எ-று.

"விரம்பெகாலந் திசையோடான்மா, மனமெனு மைந்து நிலைப்பொருளாங்கண், முன்னையநான்ந நிறை யுடையவ்வே" இவ்விதியால்-மனம்நிலையுள்ள பொருளாம் யார்க்களிப்பாளோ வென்னும் ஒகாரந் தொக்குவந்தது. உனக்கே சந்தேகத்திற் கிடமாகிய விக்காரியத்தி லென்னைத் தூண்டுதல் நன்றன்றென்பது தோன்ற, இஃதொழிக வென்றது. இஃதொன்றுநீங்கலாக வேறுயுளளனவற்றை யுனக்கு முடிப் பனெனற்கு, எவையுமெனப் பன்மையாற் கூறியது.

(க-து.) தமயந்தியே-என் மனதிற் சந்தேகமிருக்கிறதுபோல உன்மனதிலுஞ் சந்தேகமிருக்கிறது. இது நீங்க வேறுகாரிய மிருந்தாற் சொல்முடிப்பேன் என் றன்னஞ் சொல்லிற்று எ-ம். 96

கன்னிமனஞ்சூழ்கிடந்த நாணென்னுங்கடியரண
மன்மொழியெனும்படைகள் வழங்குதலுமறிந்ததான்
முன்னியுளந்தனிற்சிறிது முறுவலித்துமுகங்கோட்டி
யின்னமுதமுகுவதுபோல் வெளிப்படையினியம்புவாள்.

[இதனால் தமயந்தி நாணம்விட்டுப் பேசத்தொடங்கினமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கன்னி-தமயந்தியானவள், மனம் - மனத்தை, சூழ்கிடந்த-சூழ்ந்துகிடந்த, நாணென்னும்-நாணமென்கின்ற, கடி-காவலாகிய, அரணம்-மதிலானது, அன்னம்-அன்னத்தினது, மொழியெனும்-சொற்களென்கிற, படைகள்-ஆயுதங்கள், வழங்குதலும்-மேற்சென்றவளவில், அறிந்ததால்-கெட்டமைபால், சிறிது-சிறிதுபொழுது, உளந்தனில் (தன்)மனத்திலே, முன்னி-ஆலோசித்து, முறுவலித்து-சிரித்து, முகங்கோட்டி-முகங்கவிழ்த்து. இன்னமுதம்-இனியவமிர்தத்தை, உகுவதுபோல்-சொரிவதுபோல், வெளிப்படையின்-வெளிப்படையினாலே, இயம்புவாள்-சொல்லுவாள் எ-று.

மனத்திலுள்ள பொருள்களை வெளிப்படாமற் காத்துநிற்றலால், நாணென்னுங் கடியரண மெனப்பட்டது. முன்னுதல் - அதிரகசியமாகிய விக்கருத்தையெப்படி வெளிப்படையாற் சொல்வதென் றாலோசித்தல். நாணமழியினும் அதன் பழக்கவாசனை சிறிது நிற்கையாற், சிரிப்பும்-முகங்கோட்டலும்-உண்டாயின. [நாணமுதலியவற்றிலே அரணமுதலியவற்றை யாரோபித்ததால் உருவகவணியாம்.]

(க-து.) தமயந்தியானவள் வெளிப்படையாகச் சொல்லுவாள் எ-ம். 97

விரையுயிர்க்குந்தாமரைக்கு வெய்யவனுஞ்சேதாம்பன்
மருவுயிர்க்குநாண்மலர்க்கு மாமதியுமல்லாம
லுரைபெறுநற்றலைவர்பிற ருளர்கொல்லோபொலஞ்சிறைய
வரசமடவனமெனையு மன்னளாயெண்ணுதியால்.

[இதனால் நளனே தனக்குத் தலைவனென்று நிச்சயமுறுத்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) பொலன்-பொன்மயமாகிய, சிறைய-சிறைகளையுடைய, மடம்-இளமைபொருந்திய, அரசவனம்-அரசவன்னமே, விரை-வாசனையை, உயிர்க்கும்-வீசுகின்ற, தாமரைக்கு-தாமரைப்பூவிற்கு, வெய்யவனும்-சூரியனும், சேதாம்பல்- செவ்வல்லியினது, மரு-வாசனையை, உயிர்க்கும் - வீசுகின்ற, நாள்-பருவமுள்ள, மலர்க்கு-பூவிற்கு,மாமதியும்-பெரியசந்திரனும், அல்லாமல்-அன்றி, பிறர்-அன்னியர்களாகிய, உரைபெறு-புகழ்பெற்ற, நற்றலைவர்-நல்லநாயகர், உளர்கொல்லோ-இருக்கின்றாரோவில்லை, எனையும்-என்னையும், அன்னளாய்-அப்படிப்பட்டவளாய், எண்ணுதி (நளனன்றி நாயகனில்லையென்) றெண்ணக்கடவாய் எ-று.

(க-து.) அன்னமே தாமரைக்குச் சூரியனும் அல்லிக்குச் சந்திரனும்அன்றி வேறுநாயக னில்லாதுபோல, எனக்கு நளனையன்றி நாயகனில்லை யென் றெண்ணக்கடவாய் என்றாள் எ-ம். 98

ஐயமுறேநளன்மார்பி லணியலணிகுவனன்றி
மையல்புரிவேல்வரினு மன்றலந்தார்சூட்டிவனோ
நெய்யொழுகுவேற்றாதை பிறர்களிப்பநேர்குவனேல்
வெய்யதழற்புகுந்தாவி விட்டுனுரைநிறுத்துவனால்.

[இதனால், விபரீதம்-பிரமாதம்-சாதனக்குறைபாடு-வஞ்சவிருப்பு-இவற்றுளொன்றாற் பிறனைத் தான் கணவனாகக் கொள்ளாமையை வலியுறுத்தித் தன் பிதாவினாலும் அது முடியாமையை யுணர்த்துதல் சொல்லப்படுகின்றது.

(இ-ள்.) ஐயமுறேல்(அன்னமே!)சந்தேகப்படாதே,நளன்-நளராஜனது, மார்பில்-மார்பின்கண், அணியல்-மாலையை, அணிகுவனன்றி-சூடுவனல்லாமல், மையல்புரி-மயக்கத்தைச் செய்கின்ற, வேள்-மன்மதனாவன், வரினும்-வந்தானாயினும், மன்றல்-வாசனைபொருந்திய, அம்-அழகிய, தார்-மாலையை, சூட்டுவனோ (யான்) சூட்டுவேனோ, நெய்-நெய்யானது, ஒழுகு-ஒழுகப்பெற்ற, வேல்-வேலையுடைய, தாதை (என்) தகப்பனானவன், பிறர்க்கு-மற்றொருவனுக்கு, அளிப்ப (என்னைக்) கொடுக்க நேர்குவனேல்-உடம்படுவானாயின்,வெய்ய தழல்-வெப்பம் பொருந்திய நெருப்பினுள், புகுந்து-முழுகி, ஆவிவிட்டு-உயிரைவிட்டு, உன்-உனது, உரை-சொல்லை,நிறுத்துவன் (நளனிடத்தில்) நிலைபெறுவிப்பேன் எ-று.

மூன்றுலகத்தினும் அழகாற்சிறந்த மன்மதனையொழிக்கவே, மற்றை யாடவர்களையு மொழித்ததாயிற்று. வெய்யதழற்புகுந்தாவிவிட்டென்றதனால், கொடுந்துயர்விளைக்கு மரணமே நளனையன்றி மற்றொருவனை மணத்தலினும் இனிதென்றதாயிற்று. அரசனுக்குத் தன்னைக்குறித்து அன்னத்தாற் சொல்லப்படுஞ் சொல்லை, உன்னுரையென்றாள்.

(க-து.) அன்னமே-யான் நளனுக்கே மாலையிடுவேன். என்பிதா பிறனுக்கென்னைக்கொடுக்க வுடம்பட்டால் அக்கினியுள் வீழ்ந்திறந் துன்சொல்லை நிலைநிறுத்துவேன் என்றாள் தமயந்தி எ-ம். 99

ஊழியல்பிற்றிறல்வேந்தை வேட்டுள்ளமுருகுமெனை
வாழிமடவனம்கூட்ட லரிதென்னமதித்திடேல்
கேழ்கிளர்தாமரையின்முகை கிளரொளித்தண்ணோர்கலரா
தேழ்பரித்தேரவர்க்காணி னலர்ந்திடுதலியல்பன்றே.

[இதனால் தனக்குள்ள நிச்சயத்தை யுணர்த்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மடம்-இளமைபொருந்திய, அனம்-அன்னமே, வாழி-வாழக்கடவாய், ஊழ்-விதியினது, இயல்பின்-சம்பந்தத்தினால், திறல்-வலிமையுள்ள, வேந்தை-நளராஜனை, வேட்டு-விரும்பி, உள்ளமுருகும்-மனமுருகாநின்ற, எனை-என்னை, கூட்டல்-அவனுக்கு மனைவியாக்குதல், அரிது(எனக்கு)பெரிது, என்ன-என்று, மதித்திடேல்-நினைத்திடாதே, கேழ்-நிறத்தினாலே, கிளர்-விளங்காநின்ற, தாமரையின்-தாமரையினது, முகை-அரும்புக்கு, கிளர்-விளங்காநின்ற, ஒளித்தண்ணோற்கு-சீதள கிரணத்தை யுடைய சந்திரனால், அலராது-மலராமல், எழ்பரித்தேரவன்-சூரியனை, காணின்-கண்டால், அலர்ந்திடுதல்-மலர்தல், இயல்பன்றே-சுபாவமன்றோ எ-று.

வாழியவென்னும் வியங்கோளினீற்றின் யகரவுயிர் மெய்கெட்டு வாழியென நின்றது. என்னை மதித்திடேலெனவே, இப்படிப்பட்ட நிச்சயத்தை அறிவிக்கப்பட்ட நீ என்னை இனிச் சோதித்தல் அரைபட்டமாவை யரைத்தல் போலுமாம்; ஆதலால் கூட்டுதற்கு வேண்டுமுயற்சி செய்யென்றதாயிற்று. தாமரையைக்குறித்துச் சொல்லப்பட்ட உபமான வாக்கியத்தால், எப்படி தாமரையரும்பு சூரியனையன்றிச் சீதளகிரணத்தை யுடையனா யிருந்தாலுஞ் சந்திரனை விரும்புகிறதில்லையோ; அப்படியே நான் நளனையன்றிக்குணமுடையவ னொருவ னில்லாதிருக்கவுந், தனது நிச்சயத்தை நம்புவித்தற்குஇங்ஙனங் கூறினாள். "ஊழியஞ்செய் திறய்வேந்தை வேட்டுள்ள முருகுமெனை, வாழிமடவனங்கூட்டலரிதென்னை" என்று பாடமோதி; தனக்கு நானூழியக்காரியாம் பதத்தைப்பெற விரும்பும்படியிருக்கின்ற அப்படிப்பட்ட நளனுக்கு மனைவியாம்பதம் எனக்குக் கிடைத்தால் அது எப்படிப்பட்ட பெரும்பேறுயிராதென்னும் பொருள்பட, இதன் முதனுன் முடிப்பிற் கொக்க உரை கூறுவாருமுளர். [தாமரைச் செய்தியாகிய அல்பொருளினொப்புமையின் சம்பந்தத்தால்தமயந்தி

செய்தியாகிய புகழ்பொருள் தோன்றுதலால், ஒப்புமைப் புணைவிலி புகழ்ச்சி யணியாம்.

(க து.) அன்னமே-விதியின் சம்பந்தத்தினாலே நளனை யிச்சித்து மனமுருகுமென்னை அந்த நளனோடு கூட்டுவித்தல் உனக்குப் பெரியகாரியமல்லவென்று சொன்னாள் எ-ம். 100

வாட்டிறல்சேர்வயவேந்தின் மணிப்புயத்தென்முலைதிளைப்பக்
கூட்டுதியேலுயிர்வாழ்வல் கூட்டாயேலுலகறிய
முட்டழலிற்புகுந்தாவி முடித்திடுவலொலிகெழுசெஞ்
சூட்டுமடவனமிவற்றுளென்செய்வான்றுணிந்தனையால்.

[இதனால் தனது நிச்சயத்தை யறிவித்து அன்னத்தினது நிச்சயத்தை வினவுதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) ஒலிகெழு-காந்திபொருந்திய, செஞ்சூட்டு-செய்யவுச்சிக்கொண்டையையுடைய, மடம்-இளமைபொருந்திய, அனம்-அன்னமே, வாள்-வாளினது, திறல்-போரினாலே, சேர்-சேர்ந்த, வயம்-வெற்றிபொருந்திய, வேந்தின்-நளராஜனுடைய, மணி-அழகிய, புயத்து-தோள்களிடத்து, என்-என்னுடைய, முலை-முலைகளானவை, திளைப்ப-அழுந்தும்படியாக, கூட்டுதியேல் (என்னை அவனோடு) சேர்ப்பாயானால், உயிர்வாழ்வல்-உயிர்வைத்திருப்பேன், கூட்டாயேல்-சேர்க்காயானால், உலகறிய-உலகத்தாரறிய, மூட்டு-மூட்டப்பட்ட, அழலில்-நெருப்பினுள், புகுந்து-முழுகி, ஆவி-உயிரை, முடித்திடுவல்-விட்டுவிடுவேன், இவற்றுள் (கூட்டலும் கூட்டாமையுமாகிய) இவ்விரண்டினுள், என்செய்வான்-எதுசெய்யும்படியாக, துணிந்தனை (நீ) நிச்சயித்தாய் எ-று.

கூட்டுதியே லுயிர் வாழ்வலென்றும் - கூட்டாயே லுலகறிய மூட்டழலிற் புகுந்தாவி முடித்திடுவலென்றுங் கூறுதலாலே, கூட்டிப் பிழைப்பிக்கவும்-கூட்டாமலிறப்பிக்கவும் - வல்லமை உனக்குண்டாயிருத்தலால், உன்னையே தஞ்சமாக நம்பியிருக்கிற வென்னைப் பிழைப்பித்தாற் புகழும் புண்ணியமும் உண்டாமென்றும், அது செய்யாயாகிற் பழியும் பாவமுமுண்டாமென்றுங் குறிப்பித்தவாறாயிற்று. தனது தீப்பாய்தலை யாவரும் புகழ்தற்பொருட்டுத் தன்னுத்தம சிந்தையை வெளிப்படுத்த வேண்டுமென்பது பற்றி, உலகறியவென்றாள்.

(க-து.) அன்னமே-நீ என்னை நளனோடு சேர்த்தால் உயிர்வைத்திருப்பேன். சேர்க்காவிட்டால் உயிரை விட்டுவிடுவேன் என்றாள் எ-ம். 101

உயிருதவிசெய்தவர்க்கொன்றுற்றக்காலுணர்வுடையோர்
செயிரறுதம்முயிரளித்துச் செய்நன்றிக்கடன்கழிப்பார்
மயர்வறவென்னுயிரினுஞ்சீர் வாய்ந்தநளன்றனையளிப்பி
னயர்வருமோதிமமதற்குக் கைம்மாறேதறிகிலன்யான்.

[இதனால் அக்கூட்டலுதவியின் பெருமைகூறல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) அயர்வறு (மனச்) சோர்வற்ற, ஓதிமம்-அன்னமே, உணர்வுடையோர்-அறிவுடையோர், உயிருதவிசெய்தவர்க்கு (ஆபத்துவந்தபோது தம்) மூயிரைக் காப்பாற்றினவர்க்கு, ஒன்று-ஓராபத்து, உற்றக்கால்-வந்ததாயின், செயிரறு-குற்றமற்ற, தம்-தம்முடைய, உயிர்-உயிரை, அளித்து-கொடுத்து, செய் (அவரால்) செய்யப்பட்ட, நன்றி-உபகாரமாகிய, கடன்-கடனை, கழிப்பார்-தீர்ப்பார், மயர்வு-மயக்கமானது, அற-நீங்க, என்-எனது, உயிரினும்-உயிரைக்காட்டிலும், சீர்வாய்ந்த-சிறப்புப்பொருந்திய, நளன்றனை - நளராஜனை, அளிப்பின்-கொடுப்பாயானால், அதற்கு-அவ்வுபகாரத்திற்கு, கைம்மாறு-எதிருபகாரம், எது-யாது, யான்-நான், அறிகிலன் (அதனை) யறியேன் எ-று-

யாது அறியேனெனவே, இல்லையென்றதாயிற்று. கடன்கழிப்பாரென உலகத்தின்மேல்வைத்துக் கூறினும், நீயெனக்கு உயிருதவிசெய்யின் உன் பொருட்டென் னுயிரைக்கொடுத்து அக்கடனைத் தீர்ப்பேன் என்பதே கருத்தாகக்கொள்க. அதற்குக் கைம்மாறேதறிகிலன் யான் என்றதற்கு உயிர்க்குயிரே ஈடாமாதலின், என்னுயிரின் மேற்பட்ட நளனுக்கீடாக நளனிற் கீழ்ப்பட்டவென்னுயிரைக் கொடுத்து அக்கடனைத் தீர்க்கக்கூடாமையால், நீ அவனையெனக்குக்கொடுத்து என்னை உனக்கு இனியென்றன்றைக்குந் தீர்க்கமாட்டாத கடன்பட்டவளாக்கென்பது கருத்து.

(க-து.) அன்னமே-உயிர்க்குதவி செய்தவர்க்கு உயிர்க்குதவி செய்வார்கள் உணர்வுடையவர்கள். என்னுயிரினுஞ்சிறந்த நளனை நீ எனக்குக்கொடுத்தால் உனக்கென்ன பிரதி உபகாரஞ்செய்வேன் என்றாள் எ-ம். 102

கைம்மாறுநினக்காற்ற லரிதெனினுங்களிப்பினுளஞ்
செம்மாந்துன்செயிரறுசீ ரோவாதுசெப்புவல்யா
னெம்மாவியிறந்துபடா திருக்குங்கொல்விரைவினிற்போய்த்
தெம்மாறுசுடர்வேலான் றிருவருள்பெற்றிடாயெனினே.

[இதனால் ஈடில்லாத வுதவி செய்தலாற் பயன் யாதெனின், அதற்குத் தருமுத்தரஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கைம்மாறு-பிரதியுபகாரத்தை, நினக்கு-உனக்கு, ஆற்றல்-செய்தல், அரிதெனினும்-இல்லையாயினும், களிப்பின்-மகிழ்ச்சியினாலே, உளம்-உள்ளத்தில், செம்மாந்து-இறுமாந்தும், உன்-உனது, செயிரறு-குற்றமற்ற, சீர்-குணத்தை, ஓவாது - இடைவிடாமல், யான்-நான், செப்புவல் - சொல்லுவேன் (ஆனால் அதை நன்றாகவாலோசித்து விரையாமற் செய்வேனென் பாயாயின்) விரைவினில்-சீக்கிரத்தில், போய்-சென்று, தெம்-பகைவரும், மாறு (நட்பினராய்) வேறுபடுதற்குக் காரணமாகிய, சுடர்-ஒளிபொருந்திய, வேலான்-வேலையுடையவனது, திரு-அழகிய, அருள்-அருளை, பெற்றிடாயெனின்-பெறுயா

யின், எம்-எம்முடைய, ஆவி-உயிர்களானவை, இறந்துபடாது-நீங்கிப்போகா மல், இருக்குங்கொல்-இருக்குமே எ-று.

ஈடில்லாத உபகாரத்தைச் செய்யுஞ் சீராதலாற், செயிரறு சீரென்றாள். உன் செயிரறு சீரோவாது செப்புவனெனவே, என்னாலே யுலகத்திலே பெரும்புக ழுண்டாதலாலே யுனக்குப் பயனென்றதாயிற்று. அன்றியும் "எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை, செய்ந்நன்றி கொன்றமகற்கு" என்றிருக்கையால், பின்னே தான் செய்யக்கடவதாகிய நன்றி பாராட்டலைக்காட்டித் தான் அவ்வுபகாரத்துக்குப் பாத்திரமாயிருக்கையைக் குறிப்பித்தவாறாயிற்று- தானிறக்கும்போது அது பொறாது தாயார் பாங்கியரும் இறப்பரென்பது கருதி அவரையுந் தழுவி எம்மாவியெனப் பன்மையாற் கூறினாள். பகைமைப்பொருளை யுணர்த்துந் தெவ்வென்பதின் வகரமெய் வருமொழி மகரத்தைநோக்கி மகரமெய்யாயிற்று. "தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க, தூங்காது செய்யும்வினை." என்றிருக்கையால், விரைந்து செய்யத்தகுவதாகிய இக்காரிய முயற்சியில் ஆயிசியஞ் செய்யாதே யெனனுங்கருத்தால், விரைவினிற்போய் அருள்பெற்றிடாயெனின் எம்மாவி இறந்துபடாதிருக்குங்கொல்- என்றாள்.

(க-து.) அன்னமே-நானுனக்குப் பிரதி பகாரஞ் செய்தலரிதென்றாலும் உன் புகழ்ச்சியை இடைவிடாது சொல்லுவேன். நீ விரைவிற்போய் நளனருளைப் பெறுவிடில் எங்களுயிர்களிருக்குமோ என்றாள் எ-ம். 103

என்குறைநீவயவேந்தற் கியம்புதியேல்வடங்கிடந்து
பொன்பிதிர்மின்சுணங்கார்ந்த பொம்மலிளமுலையினர்பா
லன்புறுநல்லமயமதி லறையற்கவறைகுதியே
னன்குறைதீங்காமவர்பா னயப்பிற்றதன்மையினால்.

[இதுமுதல் நான்குபாட்டுகளால் பின்பு அன்னஞ் செய்யத்தகுமவற்றை யறிவித்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) என்-எனது, குறை-குறையை, நீ-நீ, வயம்-வெற்றியையுடைய, வேந்தற்கு-நளராஜனுக்கு, இயம்புதியேல்-சொல்வாயாயின், வடம்-முத்துவடமானது, கிடந்து தங்கப்பெற்று, பொன்பிதிர்-பொன்பொடிபோல், மின்-விளங்குகின்ற, சுணங்கு-தேமலால், ஆர்ந்த-நிறைந்த பொம்பல், பொலிவும், இள-இளமையும் பொருந்திய, முலையினர்பால் - முலையினரிடத்து, அன்புறு-அன்புபற்றிருக்கின்ற, நல்லமயமதில் - நல்லசமயத்தில், அறையற்க (அதனைச்) சொல்லாதே, அறைகுதியேல்-அப்போது சொல்வையேயானால், அவர்பால்- அவரிடத்தே, நயப்புற்ற - இன்பமுற்ற, தன்மையினால் - குணத்தினாலே, நன்குறை (உனது) நல்லசொல்லும், தீங்காம் (அவனுக்குக்) குற்றமுள்ளதாகும் எ-று.

பொம்மலுக்கு அப்பொருள். "பொமமலே பொலுவும்சோறும்" என்பதனாலறிக. எப்படி நீரைக்குடித்து அதனாலே திர்ப்தி யடைந்திருக்கிறவருக்கு அப்போது தெளிவுந் தீஞ்சுவையும் பரிமளமுஞ் சீதளமுமுடையதாயிருந்தாலும் வேறு நீர் விரும்பப்படாதோ அப்படியே ஒருத்தியைப் புணர்ந்து அவளாலே திருப்தியடைந்திருக்கிறவனுக்கு அப்போது பலகுணங்களுமுடையளாயிருந்தாலும் வேறொருத்தி விரும்பப்படாளாதலால், நன்குணர்தீங் காமவர்பானயப்புற்ற தன்மையினால் என்றாள்.

(க-து.) அன்னமே நீ என் குறைகளை அரசனிடத்திற் சொல்லுவையேயானால் அரசன் பெண்களிடத் தன்புள்ள சமயத்திற் சொல்லாதே. சொன்னால் நல்லவார்த்தையும் குற்றமாய்விடும் என்றாள் எ-ம். 104

வேற்றரசர்திறைகொணரும் வேலையிலுஞ்சொல்லற்க
மாற்றரசர்பால்வெகுளு மமயத்தும்வகுத்துரையே
றேற்றமுடைமதிவல்லோர் தேர்ச்சியிலுந்தெரிந்துரையேல்
சாற்றினுரைத்தனவெல்லாந் தவறுதலறிதியே.

(இ-ள்.) வேற்றரசர்-பிறவரசருடைய, திறை-இறைப்பொருளைகொணரும்-வருவிக்கின்ற, வேலையிலும்-காலத்திலும் சொல்லற்க-சொல்லாதொழிக, மாற்றரசர்பால்-பகையரசரிடத்து, வெகுளும்-கோபஞ்செய்கின்ற, அமயத்தும்-காலத்திலும், வகுத்துரையேல்-சொல்லாதே, தேற்றம்-தெளிவை, உடை-உடைய, மதிவல்லோர்-மந்திரிகளோடு, தேர்ச்சியிலும்-ஆலோசனை செய்யுங்காலத்திலும், தெரிந்துரையேல்-சொல்லாதே, சாற்றின் (நீ) சொல்லின், உரைத்தனவெல்லாம் (உன்னாற்) சொல்லப்பட்டனவெல்லாம், தவறுதல்-குற்றமுடையனவாதலே, அறிதி (நீ) அறிவாய் எ-று.

"எதிர்மறை யேவற்கேலேயெல்லே-யன்மோவற்க வாகு மாருமைக்-காமினன்மி னற்பீர்பன்மை" இவ்விதியால் அற்கவிகுதி ஒருமையில் வந்தது. செல்வப்பொருளிலே சென்றிருக்கிற மனமானது தத்துவப்பொருளிலே சென்றிருக்கிற யோகிமனம்பொறி பிறிதொன்றிலே விரைந்து திரும்பாதாதலாலும், கோபத்தாற் கலங்கியமனத்திற்கும் பித்தத்தாற்குணம் வேறுபட்டவாய்க்குச் சர்க்கரைபோல் நற்செய்தியுங் கசக்குமாதலாலும், மந்திரிகளோடு செய்யும் ஆலோசனை வேளையிலே கனவுவேளையிற் சொல்வதுபோல் சொல்வது செவியிலே நுழையாதாதலாலும், அப்படிப்பட்ட சமயங்களிலே சொல்லலாகாதென்றாள். வகுத்துரை-தெரிந்துரை ஒருசொற் றன்மைப்பட்டுவந்தன.

(க-து.) அன்னமே-அரசர் திறைதரும்போது, பகையரசரைக் கோபிக்கும்போது, மந்திரிகள் மதிசொல்லும்போது, என் வார்த்தைகளைச் சொல்லாதே யான் சொன்னதெல்லாந் தவறுகுமென்றாள் எ-ம். 105

பொறிசெறித்தமாண்பினராய்ப்பொருந்தளர்ச்செற்றிருநிதியஞ்
செறிதருமாறீட்டியரு வினைவாங்குசெயலினரு

முறுபிழைபுட் சிறிதியற்றி னொறுத்திடுவர்வயவேந்த
ரறுதிபெறநீமொழியு மமயமறிந்துரைத்தியால்.

(இ-ள்.) பொறி-ஐம்பொறிகளையும், செறித்த-அடக்கிய, மாண்பினராய்-நற்குணமுடையவராகி, பொருந்தலர்-பகைவரை, செற்று-வென்று, இருநிதியம்-அதிக திரவியத்தை, செறிதருமாறு-நெருங்குமாறு, ஈட்டி-சேர்த்து, அருவினை-பெரிய தொழில்களை, வாங்கு (தம்மிடத்து) வாங்கிய, செயலினரும்செய்கையை உடையவரும், உறு (பலவா) யுறுகின்ற, பிழையுள் - குற்றங்களுள், சிறிது-சிறிய வொரு குற்றத்தை, இயற்றின்-செய்தாலும், வயம் வெற்றியையுடைய, வேந்தர்-அரசராயினோர், அறுதி (தம்பி) னொழிவை, பெற-அடைய, ஒறுத்திடுவர் (அப்படிப்பட்டவரையும்) தண்டிப்பார் (ஆதலால்) நீ (விவேகியாகிய) நீ, மொழியும்-சொல்லுதற்குறிய, அமயம்-காலத்தை, அறிந்து-தெரிந்து, உரைத்தி-சொல்லு எ-று.

பொறி செறித்தலாவது-அரசன் ஒருவரோடு ரகசியம் பேசும்போது தான் செவிகொடுத்துக் கேளாமையும் கண்ணுற் பாராமையு முதலியன. "எப்பொருளு மோரார் தொடரார் மற்றப் பொருளை, விடக்காற் கேட்கமறை" என்பதனாலு மறிக. நல்ல குணத்தையும்-பகைவெல்லு முபாயத்தையும்-பொருள்சேர்க்கு முத்தியையும்-எவரிடத்தே காண்கின்றரோ, அவரை அரசர் பெரிய உத்தியோகத்தில் வைப்பாரென்க. பெரிய தொழில்களாவன, மந்திரித்துவம்-சேனாதிபத்தியம்-நியாயாதிபத்தியம்-முதலியனவாம். அப்படி பலவிதத்தாலுந் தமக்கு உதவிசெய்தவரையே சிறிது பிழையாலொறுத்தல் அரசர்க்குச் சுபாவகுணமாதலால், அச்சமயத்திலே சொன்னுல் நமதுகாரியம் எப்படி முடியும் என்பது கருத்து.

(க-து.) அன்னமே-பகைமன்னரை வென்று பாக்கியஞ் சம்பாதித்துத் தரும் வல்லவர்களும் அற்பகுற்றஞ் செய்தால் அரசர் தண்டிப்பாராகையால் குற்றமின்றிக் காலமறிந்து கூறென்றுள். 106

உளத்தனவான்முகத்தனவா யுதிக்குமவைகுறிப்பினுற்
றெளிந்துரைத்தல்சீர்மைத்தே தூதர்செயலிற்றாகும்
விளக்கமுறநீயலதா ரறிவரிவைமெலியுமெனை
யளித்திடுதிவிரைவினிற்போ யாய்தூவிமடவனமே.

(இ-ள்.) ஆய்-மிகமெல்லிய, தூவி-இறகையுடைய, மடம்-இளமைபொருந்திய, அனமே-அன்னமே, உளத்தன (ஒருவர்) மனத்திலுள்ள குணங்களானவை, வாள்-ஒளியுள்ள, முகத்தனவாய்-முகத்திடத்தனவாகி, உதிக்கும்-தோன்றும். அவை-அக்குணங்களை, குறிப்பினுல் (அம்முகக்) குறிப்பினுலே; தெளிந்து-அறிந்து, உரைத்தல்-சொல்லுதல்-சீர்மைத்தே-சிறப்புடைத்தாகும், தூதர்-தூதரது, செயல்-தொழிலானது; இற்றாகும்-இத்தன்மைத்தாகும்-இவை(நளன் மனதிலுள்ள விவற்றை, விளக்கமுற-விளங்குதலுற, நீயலது-நீயல்லாமல், யார்

(வேறே) யாவர், அறிவர்-அறியவல்லவர் விரைவினில் - சீக்கிரத்தில், போய் (நளராசனிடத்துப்) போய், மெலியும்-வருந்துகின்ற, எனை-என்னை, அளித்தி டுதி-காப்பாற்று எ-று.

உளத்தன-விருப்பு வெறுப்புமுதலியன. அவை முகத்தனவா யிருக்குமென்றது. "அடுத்தது காட்டும் பளிங்குபோனெஞ்சங் கடுத்தது காட்டு முகம்" என்பதனாலும், அவை குறிப்பினாற் றெரிந்துரைத்தல் சீர்மைத் தென்றது. "குறிப்பிற் குறிப்புணர்வாரை யுறுப்பினுள், யாதுகொடுத்துங் கொளல்" என்பதனாலும் அறிக. தெளிந்தெனற்பாலது தொடைநோக்கித் தெளித்தென விகாரப்பட்டது. விளக்குமுறல்-ஐயந்திரிபின்றி யறியநிற்றல். நீயலதியாரறிவரெனவே, விவேகியாகிய நீயே யறியவல்லா யென்றதாயிற்று,

(க-து) அன்னமே-அகத்திலுள்ளவை முகத்திற்காட்டும். முகக்குறிப்பறிந்து சொல்லுதல் தூதர்திறமாகும், நளன் மனத்துள்ளவை நீயல்லாமல் யாரறிவார்கள். சீக்கிரம்போய் என்னைக்காப்பாற்று என்றாள் எ-ம். 107

அறுசீர்க் கழிநெடிலடி விருத்தம்.

என்னவாங்கு வெளிப் படையிற் குயிலுநாண வின்னமிழ்திற்
கன்னற்பாகிற் கோற்றேனிற் கனியிற்கனிந்த மொழிநவிலும்
பொன்னம்பாவை யன்னுடன் னுள்ளந்தேர்ந்து மகிழ் புரியா
வன்னங்கண்ணாலருந்துதல்போனோக்கிச்சிலசொல்லறையுமால்

[இதனாற் பின்பு அன்னஞ் சில சொற்கள் பேசத்தொடங்கினமை சொல்லப்படுகின்றது]

(இ-ள்.) என்ன-என்று, அன்னம்-அன்னமானது, ஆங்கு-அந்தச் சோலையினிடத்து, வெளிப்படையின்-வெளிப்படையினாலே. குயிலும்-கோகிலமும், நாண-வெட்கமுற, இன்னமிழ்தின்-இனிதாகிய வமிர்தத்தினும், கன்னற்பாகின்-சர்க்கரைக் குழம்பினும்; கோற்றேனின்-கொம்புத்தேனினும், கனியின்-முக்கனியினும், கனிந்த-சுவைமிகுந்த, மொழி-இந்தச்சொற்களை, நவிலும்-சொல்லிய, பொன்-பொன்மயமாகிய, அம்-அழகிய, பாவையன்னாள்-பாவை, போல்பவளது, உள்ளம்-கருத்தை, தேர்ந்து-அறிந்து, மகிழ்புரியா-மகிழ்ந்து, கண்ணாலருந்துதல்போல்-கண்களால் விழுங்குதல்போல, நோக்கி (அவளைப்) பார்த்து, சிலசொல்-சில சொற்களை, அறையும்-சொல்லும் எ-று.

"சாரியைவிகுதி தாங்கெடலுரித்தே" இவ்விதியால் இனிப்பு என்றதில் இகரச்சாரியையும்-பு-விகுதியையும்கெட்டன. பொன்னம்பாவையன்னாடனுள்ளம்-நளனிடத்துப்புற்றிய அவளது மனோநிச்சயம். தன்னைத் தூதனுப்பியவரசன்காரியங் கைகூடுதலால் மகிழ்ந்ததென்க. கண்ணாலருந்துதல்போனோக்கல்-அதிக விருப்பத்தோடு பார்த்தல்; [இது உவகவழக்கச் சொல்லாதலால், உலகவழக்கு நவிற்சியணியாம்.]

(க-து.) அன்னமானது தமயந்தியைப்பார்த்துச் சில சொற்களைச் சொல்லும் எ-ம். 108

சுணங்குபூத்துக்குலிகச்செப்பென லாச்சுருங்கிநுழைநுசுப்பு
வணங்கித்தேம்பவருமுலையா யுரைத்தமாற்றமெய்யாமே
லிணங்குவாயில்யார்வேண்டு நளற்குநினக்குமிதயத்து
ளணங்குநோய்செய்தலர்தூற்று மனங்கனொருவனிருக்கவே.

[இதனால் நிச்சயமிருந்தாற் காரியம் எளிதின் முடியுமெனல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) சுணங்கு-தேமலானது, பூத்து-படரப்பெற்று, குலிகச்செப்பெனலாய்-இங்குலிகத்தினாலாகிய செப்புகளென்றதாகி, நுழை-நுண்ணிய, நுசுப்பு-இடையானது, சுருங்கி-இளைத்து, வணங்கி-வளைந்து, தேம்ப-வருந்த, வரு-வளர்கின்ற, முலையாய்-முலைகளையுடையவளே, உரைத்த (உன்னால்) சொல்லப்பட்ட, மாற்றம்-சொல்லானது, மெய்யாமேல்-சத்தியமாயின், நளற்கும்-நளராஜனுக்கும், நினக்கும்-உனக்கும், இதயத்துள்-மனத்தின்கண், அணங்கு-வருத்தஞ்செய்கின்ற, நோய் (காம) நோயை, செய்து-உண்டாக்கி, அலர்தூற்றும்-பழிமொழியைப் பரப்புகின்ற, அனங்கனொருவன்-மன்மதனொருவன், இருக்க-உளனாக, இணங்கு (உம்மிருவரையும்) பொருத்துதற்கு, வாயில்-சந்தி செய்வோர், யார்-எவர், வேண்டும் (உங்களுக்கு) வேண்டும் எ-று.

இங்குலிகமெனற்பாலது - குலிகமென முதற்குறைந்தது. இங்குலிகச் செப்பை உபமானமாக்கியது, செந்நிறமும் ஒளியும்பற்றியென்க. அனங்கனொருவனிருக்க இணங்குவாயில் யார் வேண்டும் எனவே, உங்கட்கு யான் செய்யக்கிடந்த உபகாரமொன்றுங் கண்டிலேனென்றதாயிற்று. இணக்கென்னும் பிறவினை தொடைநோக்கி இணங்கென விகாரமாயிற்று.

(க-து.) தமயந்தியே-நீ சொன்னசொல் மெய்யானால் இருவரையுங் கூட்டிவைக்க இடையில் மன்மதனொருவனிருக்க, வேறே யொருவர்வேண்டுமோவென வன்னஞ் சொல்லிற்று எ-ம். 109

கடல்சூழ்புவியிற்பாதலத்தி லமரருலகிற்கவின்திகழும்
கொடிநேரிடையாள்யாரென்ன நின்னையாங்கள்கூறுதலும்
படியேழ்புரக்கும்வேந்துளத்துப்படைவேள்பகழிபுகுவழிபோய்
மடமானேக்கினீயுறைதன் மறந்தாய்கொல்லோமறைத்தனையோ.

[இதுமுதலொன்பது பாட்டுகளால் அன்னம் நளன்றுகாட்சி முதலிய அவத்தைகளையுணர்த்தத் தொடங்கி, இதனாலே செவிப்புலக்காட்சி யுணர்த்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மடம்-இளமைபொருந்திய, மான்-மான் (கண்போலும்)நோக்கி-கண்களையுடையவளே, படியேழ்-எழுதீவுகளையும்,புரக்கும்-காக்கின்ற,வேந்து நளராஜனானவன், கடல்-சடலானது, சூழ்-சூழப்பெற்ற, புவியில்-பூலோகத்திலும், பாதலத்தில்-நாகலோகத்திலும்,அமரருலகில்-தேவலோகத்திலும்,கவின்-அழகினாலே, திகழும்-விளங்காநின்ற, கொடிநேரிடையாள்-கொடிபோலிடையையுடைய மங்கை, யாரென்ன-எவளென்று வினவ, யாங்கள்-நாங்கள், நின்னை-உன்னை, கூறுதலும்-சொல்லுதலும், படை-படையையுடைய, வேள்-மன்மதனது, பகழி-பாணமானது, புகும்-சென்ற, வழி-வழியால், போய்-சென்று, உளத்து (அவன்) மனத்தின்கண், நீ - நீ, உறைதல் - இருக்கையை, மறந்தாய்கொல் - மறந்தாயோ, மறைத்தனையோ (எனக்கு) ஒளித்தனையோ எ-று.

நாங்கள் உன்னுடைய குணநிசயங்களைச் சொல்ல என்று கேட்டறிந்தானே, அன்றுமுதலாக உன்மேலாசைகொண்டு மன்மத பாணங்களினாலே வருந்தி உன்னை நினைத்திருக்கின்றானென்பது கருத்து. மறத்தற்குப் பேதமையும்-மறைத்தற்கு நாணமும்-காரணங்களாகும். கேட்டறிதலும் பார்த்தறிதலோடொத்தலிற் காட்சியாதலறிக.

(க-து.) தமயந்தியே-நளமகாராஜன் அழகுள்ள பெண்யாரென்றெங்களைக் கேட்க யாங்களுன்னைச் சொல்லுதலும், மன்மதபாணஞ்சென்றவழியே நீபோயிருந்ததை மறந்தாயோ. அல்லது மறைத்துச் சொல்லுகிறாயோ என்றன்னஞ் சொல்லியது. 110

ஈட்டுமணிகள்பலதெளித்துன் னெழுதற்கரியதிருவுருவங்
கோட்டுங்கிழிதான்முலைகோட்டுப்பரப்பின்றென்னுங்கொடிமருங்கு
நீட்டவினைகோனுதினுண்மையிலதென்றெண்ணித்திகைக்குமுளம்
வேட்டுநெடுங்கண்ணிமையாம னோக்கித்தளரும்வேல்வேந்தே

]இதனால் சித்திரக்காட்சி சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) வேல் - வேற்படையையுடைய, வேந்து - நளராஜனானவன், உன் - உனது, எழுதற்கரிய (சித்திரக்காரரா) லெழுதற்கரிதாகிய, திரு அழகிய, உருவம் (உனது) வடிவத்தை, ஈட்டு (தன்னாற்) சம்பாதிக்கப்பட்ட, பல-பலவகையாகிய, மணிகள்-மணிகளை, தெளித்து-பதித்து, கோட்டும்-எழுதுகிறான், முலை (உன்) முலைகளை, கோட்ட-எழுதுதற்கு, கிழி-படத்தில், பரப்பு-அகலம், இன்றென்னும்-இல்லையென்கிறான், கொடி - பூங்கொடிபோலும், மருங்குல் (உன) திடையை, நீட்ட-எழுதுதற்கு, வினைகோல்-தூரிகைக்கோலினது, நுதி-நுனியின்கண்; நுண்மை-கூர்மையானது, இலதென்று-இல்லையென்று, எண்ணி-நினைத்து, திகைக்கும்-திகைக்கிறான், உளம்-மனத்தில், வேட்டு விரும்பி, நெடுங்கண்-நெடிய கண்களானவை, இமையாமல்-இமையாதிருக்க, நோக்கி (அவ்வடிவத்தைப்) பார்த்து, சோரும்-வருந்துகிறான் எ-று.

மணிகள்பல தெளித்தலாவது, ஒன்பதுவகை மணிகளிலே எவ்வெம்மணி யெவ்வெவ் வுறுப்பிற்கு ஒத்திருக்குமோ அவ்வம்மணியை அவ்வவ் வுறுப்பைச் செய்யுமிடத்துப் பதித்தலாம். அவையாவன-கண்ணுக்கு நீலமும், பல்லுக்கு முத்தமும், அதரத்துக்குப் பவளமும் போல்வனவாம். "பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையிற்-சொல்லாதாகுஞ் செய்யுமென்முற்றே" இவ்விதியால் கோட்டும் என்றது கோட்டுகின்றானென்றாயிற்று. இதுபோல் வருவன பிறவும் இவ்வாறே யமைத்துக்கொள்க. "கனவு நினைவு கட்பொறி-யென நான் காகு மெவ்வகைக் காட்சியும்" இவ்விதியால் சித்திரக்காட்சி சொல்லப்பட்டது. விநோதோபாயமாகத் தமயந்திக்குச் சமானமாக வெழுதப்பட்ட சித்திரமாதலால், அதனைப் பார்த்தலுங் காட்சியாமென்க.

(க-து.) நளமகாராஜன் உனது திருவுருவத்தை யெழுதுகிறான்; உன் தனதனங்களை யெழுதப் படமகலமில்லை யென்கிறான்; உனதிடையை எழுதுதற்குத் தூரிகைக்கோல் கூர்மையில்லையென்றான்; உன்னுருவத்தை இமையாது நோக்கி வருந்துகிறான் என்று சொல்லிற்று எ-ம். 111

பருந்துங்கழுகுங்கொடியினமு மருந்தப்பகைஞருடறடிந்து
விருந்துசெய்யுஞ்சுடர்வடிவேல் வேந்தனுயிருநீயென்னும்
பொருந்துங்காமப்பிணிநீக்கிப் புலம்புதீர்த்தின் னுயிரளிக்கு
மருந்துநீயேயென்றெண்ணி மகிழ்தூங்குளத்தோடிருந்தயரும்.

[இதனால் வேட்கையும் உள்ளுதலுஞ் சொல்லப்படுகின்றன.]

(இ-ள்.) பருந்தும்-சேனங்களும், கழுகும்-எருவைகளும், கொடியினமும்-காக்கைக் கூட்டங்களும். அருந்த-தின்னும்படியாக, பகைஞர்-பகைவருடைய, உடல்-உடம்புகளை, தடிந்து-துணித்து விருந்துசெய்யும் (அவற்றிற்கு) விருந்து செய்கின்ற, சுடர்-ஒளியும், வடி-கூர்மையும்பொருந்திய. வேல்-வேலையுடைய, வேந்தன்-நளராஜனானவன், உயிரும் (தன்) னுயிரும், நீயென்னும்-நீயாகவேண்டுகிறான், பொருந்தும் (தன்னைப்) பற்றிய-காமப்பிணி - காமநோயை, நீக்கி-ஒழித்து, புலம்பு (அதனாலாகின்ற) துன்பத்தை, தீர்த்து-தீர்வித்து, இன்-இனிதாகிய, உயிர் (தன்) னுயிரை, அளிக்கும்-காப்பாற்றும், மருந்தும்-ஔஷதமும், நீயேயென்று-நீயேயாக, எண்ணி (இடைவிடாது) நினைத்து, மகிழ்-மகிழ்ச்சியில், தூங்கும்-பரவசப்பட்டிருக்கின்ற, உளத்தோடு - மனத்துடனே, இருந்து-தங்கி, அயரும்-வருந்துகிறான் எ-று.

அரசனுக்குச் சொல்லப்பட்ட வெகுளிச்சுவையைப்பற்றிய விசேடணம் உவகைச்சுவை சொல்லப்படு மிவ்விடத்திற்குப் பொருந்துமோவெனின், அரசனது நிகரற்ற பாராக்கிரம தைரியத்தைக்காட்டி இப்படிப்பட்ட தைரியமும் உன்பொருட்டு இப்போது இழிந்ததென்று அறிவித்தற்கு அவ்விசேடணஞ் செய்தலாற் பொருந்துமென்க. இதுபோல் வருவனபிறவும் இப்படியே யமைத்துக்கொள்க. அவளைத் தன்னுயிர்போற் சிறந்த பொருளாகப் பெறல்

வேண்டுதலால் வேட்கையும், அவளாலன்றித் தன் காமநோய் தீராதென்று அதற்கு மருந்தாக இடைவிடாது நினைத்திருத்தலால் உள்ளுதலும், ஆயின.

(க-து.) தமயந்தியே - நளமகாராஜன் உன்னைத் தன்னுயிராக நினைக்கிறான்; அன்றியுந் தன் காமநோயைத் தீர்த்து உயிரைக் காப்பாற்று மருந்து நீயே என்றெண்ணுகிறான் என்று சொல்லிற்று எ-ம். 112

தேற்றாரொளிருமணிமௌலி யிடறித்தேய்ந்துவிளங்குநகக்
கூற்றாமென்னுமால்யானைப் பிடரிற்றோன்றுமெழில்குறியா
வாற்றாராகியாடவரும் பெண்மைவிரும்புமடல்வேந்தன்
வேற்றோர்பொருளிலைம்புலனும் விழையாவாகமெலியுமால்.

[இதனால் உள்ளுதலாலாகிய வேற்றுப் புலவெறுப்புச் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) தேற்றார்-பகைவரது, ஒளிரும்-விளங்காநின்ற, மணி-நவமணிகளாலாகிய, மௌலி-மகுடத்தில், இடறி-தாக்குண்டு, தேய்ந்து - தேய்தலால், விளங்கு-விளங்காநின்ற, நகம்-நகங்களையுடைய, கூற்றாமென்னும் (கொலையிலே) யமனெனப்படுகின்ற, மால்-பெரிய, யானை-யானையினது, பிடரில்-எருத்தத்தில், தோன்றும்-காணப்படுகின்ற- எழில் (தன்) னழகை, குறியா-நினைத்து, ஆடவரும்-புருஷரும், ஆற்றாராகி - பொருக்கமாட்டாதவராகி, பெண்மை-பெண்வடிவத்தை, விரும்பும்-விரும்பப்பெறுகின்ற, அடல்வேந்தன் - வெற்றிவேந்தனானவன், வேற்றோர் பொருளில் (உன்னிடத்தன்றி) வேறொரு பொருளிடத்து, ஐம்புலனும்-பஞ்சவிஷயங்களும்; விழையாவாக - விரும்பப்படாதனவாக, மெலியும்-தளர்கின்றான் எ-று.

வேற்றோர் பொருளிலைம்புலனும் விழையாவாக மெலியுமெனவே,உணவு முதலியவற்றையும் வெறுத்து உன்னையே விரும்புகின்றனனென்றதாயிற்று ஆடவருமென்னும் உம்மை உயர்வுசிறப்பு. ஐம்புலன்- சுவை-ஒளி-ஊறு-ஓசை-நாற்றம்-ஐம்புலன்களும் ஒருத்தியிடத்தே யுளவென்பது, "கண்டுகேட்டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு, மொண்டொடி கண்ணேயுள" என்பதனாலறிக விழை யாவென்னுஞ் செய்வினை- செயப்பாட்டு வினைப்பொருளிலே வந்தது. [தமதாண் வடிவத்திற்றாழ்ந்த பெண்வடிவமாகிய குற்றத்தால் நளனைப் புணர்தலாகிய குணம் உண்டாதல் கண்டு அதனைப் பெறல்வேண்டுதலால், வேண்டலணியாம்.]

((க-து.) நளமகாராஜனானவன் உன்னையல்லாமல் வேறொரு பொருளிடத்தி லிச்சைவைத்திலன் என்று சொல்லிற்று எ-ம். 113

கார்க்குமெண்மையரித்திருண்ட கரியகூந்தற்கனங்குழையா
யார்க்குஞ்சுரும்புமிசைத்தேனும் வண்டுஞ்சுழலுமைங்கணைவேள்
போர்க்குமெலிந்தொவெண்டிங்கள் பொழியுநிலவிற்றேம்பியோ
யூர்க்குந்தோறும்புதிதாக வுடலுமெலியும்பார்வேந்தே.

[இதனால் மெலிதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கார்க்கும்-மேகத்திற்கும், வெண்மை-வெள்ளைநிறத்தைக், அளித்து-கொடுத்து, இருண்ட-கறுத்த, கரிய-பெரிய, கூந்தல்-கூந்தலையும், கனம்-கனம்பொருந்திய, குழையாய-குண்டலத்தையுமுடையவளே, பார்-பூமியையுடைய, வேந்து-நளராஜன், ஆர்க்கும்-ஒலிசெய்கின்ற, சுரும்பும்-பொறிவண்டுகளும், இசை-இசைபாடுகின்ற, தேனும்-தேன்வண்டுகளும், வண்டும்-கருவண்டுகளும், சுழலும்-சுழலப்பெறுகின்ற, ஐங்கணை-பஞ்சபாணத்தையுடையவேள்-மன்மதனது, போர்க்கு-சண்டையினால், மெலிந்தோ-இளைத்தோ, வெண்டிங்கள்-வெள்ளிய சந்திரனது, பொழியும்-சொரியப்பட்ட, நிலவின்-நிலாவினாலே தேம்பியோ-வருந்தியோ. பார்க்குந்தோறும்-காணுந்தோறும், புதிதாக-நூதனமானதாக, உடலம்-உடம்பு, மெல்லியும், இளைக்கப்பெறுகின்றான் எ-று.

கார்க்கும்வெண்மை யளித்திருண்ட வென்றதற்கு, மேகத்தைப்பார்க்கிலும் மிகக் கறுத்துவென்பது பொருள். பார்க்குந்தோறும் புதிதாக வுடல் மெலிதலாவது, முன் பார்க்கப்பட்டவளவிற் பின் பார்க்கப்படுகிற வளவுகுறைந்து போதலாலே வேறுபட்டுத் தோன்றல். "இன்பத்தை வெறுத்ததுன்பத்துப் புலம்ப-லெதிர்பெய் தபுரித லேதமாய்தல்-பசிபட நிற்றல் பசலைபாய்த-லுண்டியிற்குறைத லுடம்பு நனிசுருங்கல்-கண்டுயின்மறுத்தல் கனவொடுமயங்கல்" இவ்விதியால் உடன்மெலிவு கூறினர். [மன்மதனை வேந்தனியல்பனைத்துங் கவர்ந்தவனாகக் குறித்தலால், தற்குறிப்பணியாம்.]

(க-து.) தமயந்தியே-நளமகாராஜனானவன் மன்மதன் போரினாலேயோ சந்திரகிரணங்களாலேயோ உடலிளைக்கப் பெறுகின்றான் என்று சொல்லிற்று எ-ம். 114

அலர்வார்பகழிதுரந்துதுரந் தாகமெலிவித்திடுதலன்றிச்
சிலைவேள் வேந்தனியல்பனைத்துங் கவர்ந்தான்போலுந்தீங்கிழைத்து
முலைமேற்கூடப்பெறுமெனிலோ வதுவுமியற்றுமுதுக்குறைவற் [ன்
றுலையாக்காமங்கொடுமென்றொழும்பு முழப்பநாணுமிழக்குமால்.

[இதனால் நாணுவரையிறத்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) சிலை - கருப்புவில்லையுடைய, வேள் - மன்மதனானவன், வார்-நெடிய, அலர்-மலர்களாகிய, பகழி-பாணங்களை, துரந்துதுரந்து-செலுத்திச் செலுத்தி, ஆகம் - உடம்பை, மெலிவித்திடுதலன்றி-இளைப்பித்தலல்லாமலும், வேந்தன்-அரசனுடைய, இயல்பனைத்தும்(பாவத்தை யஞ்சுதல் இழிதொழிறொணல் முதலாகிய) சுபாவகுணமுழுதையும், கவர்ந்தான்போலும்-வெளவிக்கொண்டானோ (எனென்றால்) தீங்கு-பாவத்தை, இழைத்து-செய்தலினாலே, உன்முலைமேல்-உன் கொங்கைகளின்மேலே, கூடப்பெறுமெனிலோ-கூடப்பெறலாமென்றாலோ, அதுவும்-அப்பாவத்தையும், இயற்றும் (அஞ்சாது) செய்வான், முதுக்குறைவற்று-பேரறிவற்று, உலையா-கெடாத், காமம்-காமத்தை,

கொடு-கொண்டு, உன்-உன்னிடத்தே (செய்யப்படுவதாகித்) தொழும்பும்-அடிமைத்தொழிலிலும், உழப்ப-முயலுதற்கு, நாணும்-நாணத்தையும், இழக்கும்-விட்டுவிடுகிறான் எ-று.

பாவம்-கொலைமுதலியன. பெண்ணேவல்இழிதொழிலாதல் "பெண்ணேவல் செய்தொழுகு மாண்மையினுணுடைப், பெண்ணே பெருமையுடைத்து" என்பதனாலறிக. ஆயினும்-அது காமமிக்க வாடவர்க்குரித்தாதல் "மடுக்கோகடலின் வடுதிமிலன்றி மறிதிரைமீன், படக்கோபணிலம் பலகுளிக்கோபான்றில்லைமுன்றிற், கொடுக்கோ வளமற்றுநம்மையர்க் காயகுற்றேவல்செய்கோ, தொடுக்கோபணியீ ரணியீர்மலர் நுஞ்சுரிகுழற்கே" என்பதனாலறிக. உலையாக்காமக் கொடுந்துயரமுழந்து என்றும் பாடமுண்டு. ஆக்கஞ் செய்பற்குத் தடையாகிய நாணத்தினிழப்பை இங்ஙனங் கூறவே, அதுவுந் தோன்றுதலறிக.

(க-து.) தமயந்தியே-நளன் பாவஞ்செய்தாவ துன்னைக் கூடப்பெறுவானாகில் அதுவுஞ் செய்வான். பேரறிவிழந்து காமத்திலுழந்து நாணத்தையும்விடுகிறான் எ-ம்.

115

நின்சீருருவுவெளிப்படுத னோக்கிநோக்கிநிலை தளரு
மென்பூடுருகவிளமுலைமேற் புல்லுமினிந்தாயெனவருந்து
மன்படூடறீர்த்தனன்போ னகைக்குமகன்றுயென்வெளியிற்
பின்போதருநல்லுணர்விழந்த பித்தர்போலப்பேதுறுமால்.

[இதனால் மறத்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) நின்-உனது, சீர்-சிறப்புப்பொருந்திய, உருவு-வடிவமானது, வெளிப்படுதல்-தோன்றுதலை,நோக்கிநோக்கி-பார்த்துப்பார்த்து, நிலை(தன்னறிவு) நிலை, தளரும்-தளரப்பெறுகின்றான், என்பு-எலும்பும், ஊடுருக-உள்ளுருக, இள-இளமைபொருந்திய, முலைமேல் (அவ்வடிவத்தின்) முலைகளின்மேல் புல்லும்-தழுவுகின்றான், முனிந்தாயென-ஊடினையென்று, வருந்தும்-வருந்துகின்றான், அன்போடு-ஆசையினால், ஊடல்-அவ்வூடலை, தீர்த்தனன்போல்-நீக்கினவன்போல், நகைக்கும்-சிரிக்கின்றான், அகன்றாயென-நீங்கினையென்று வெளியில்-வெறுவெளியில், பின் (அவ்வடிவத்தின்) பின்னே, போதரும்-போகின்றான், நல்லுணர்வு-நல்லறிவை, இழந்த-துறந்த, பித்தர்போல-பித்தநோயினர்போல, பேதுறும்-மறவியுற்றிருக்கின்றான் எ-று.

உருவுவெளிப்படுதல்-விருப்பத்தா லிடைவிடாது சிந்திக்கப்பட்ட வுருவு போல்வது புத்திவிகாரத்தினாலே வெளியிலே தோன்றுதல். "காட்சிவேட்கையுள்ளுதன்மெலிதலாக்கஞ்செப்பனுணுவரையறுத்த-நோக்குவவெல்லாமவையே போறன்-மறத்தன் மயக்கஞ் சாக்காடென்ற-வையிரண்டவத்தையும்பெய்கழற்காளையும்-புகுமுகம்புரிதன் முதலவாகிக்-காட்சிமுதன் மூன்றையுங் கருதிநான்காய்-மாட்சியி னமைந்த வீராறு மெய்ப்பாடுருந்திளமூழவலும்பொ

(க-து.) மன்மதன் கரும்பாகிய வில்லைவளைத்து அக்கினியாஸ்திரந்தொடுத்தவளவில், தமயந்திபுருவமாகிய வில்லைவளைத்துக் கண்ணீராகிய வருணாஸ்திரம் தொடுத்தாள் எ-ம். 18

தூயதிங்கள்வெண்குடைக் கருப்புவில்லிதொடுமலர்ச்
சேயதேறல்வருணவாளி முனிவினிற்செலுத்தலும்
வேயைவென்றதோளினாள் வெதும்பியுள்ளம்விம்முறா
வாயுவாளிபோலநெட்டுயிர்ப்பெறிந்து வாடுமே.

(இ-ள்.) தூய-பரிசுத்தமாகிய, திங்கள் சந்திரனாகிய, வெண்குடை-வெள்ளைக் குடையையும், கருப்புவில்-கருப்புவில்லையுமுடைய மன்மதனால், தொடு-தொடப்பட்ட, மலர்-மலர்களது, சேயதேறல் - செந்தேனாகிய வருணவாளி - வருணாஸ்திரத்தை, முனிவினில்-கோபத்தால், செலுத்தலும்-செலுத்தியவளவில், வேயை-மூங்கிலை, வென்ற-ஜயித்த, தோளினாள்-தோள்களையுடையவள், வெதும்பி-வெம்பி, உள்ளம்-உள்ளத்தில், விம்முறா-வருந்தி, வாயுவாளிபோல-வாயுவாஸ்திரத்தைச் (செலுத்தல்) போல், நெட்டுயிர்ப்பு-பெருமூச்சை, எறிந்து-மட்டு, வாடும்-சோர்வாளானாள் எ-று.

மழையைத் துரப்பது காற்றாதலால், வருணாஸ்திரத்துக்கு வாயுவாஸ்திரம் பகையாதலறிக. [பூந்தேனாகிய வருணாஸ்திரம் பொறாமல் தமயந்தி பெருமூச்சுவிடுதலை, அதற்கு எதிர்வாயுவாஸ்திரஞ் செலுத்தலாகக் குறித்தலாலே, தற்குறிப்பணியாம்.]

(க-து.) மன்மதனானவன் மலர்த்தேனாகிய வருணாஸ்திரந் தொடுத்தபோது, தமயந்தியானவள் பெருமூச்சாகிய வாயுவாஸ்திரந் தொடுத்தாள் எ-ம்.

கூறுமங்கைமீருளங் கொதித்துவெம்புகாமநோய்
தேறுகின்றிலீரிதென்கொல் நீறவியைப்பிரிந்ததா
லாறணிந்தும்விரகவெம்மை யழலவெடித்ததன்றுகொல்
நீறணிந்தகடவுளுக்கு நெற்றியிற்கண்ணதே.

[இதுமுதல் இரண்டு பாட்டுகளாலே தமயந்தி காமநோயின் கொடுமையை மகளிர்க்குக் கூறுமாறு சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கூறு (என்னிடத்தே குறையைச்) சொல்லுகின்ற, மங்கையீர்-மாதரே, உளம் (என்) னுள்ளமானது, கொதித்து-கொதிப்புற்று, வெம்பு-வெம்புதற்குக் காரணமாகிய, காமநோய்-காமநோயின் (கொடுமையை) தேறுகின்றிலீர்-அறிகின்றீரில்லை, இது-இது, என்-என்னப்பதைமை, நீறு-விபூதியை, அணிந்த-பூசிய, கடவுளுக்கு-பரமசிவனுக்கு, நெற்றியில்-நெற்றியினிடத்து,கண்ணனது (நெருப்புக்) கண்ணனது, தேவியை (தன்) மனைவியை, பிரிந்ததால்-நீங்கியதால், ஆறு-கங்கையை, அணிந்தும் (முடியின்மேலே)தரித்தும், வெடித்

தது (அந்நெற்றியைப்) பிளந்துதோன்றியதான, விரகம் - காமமாகிய, வெம்மை-வெப்பத்தையுடைய, அழலன்றுகொல்-நெருப்பன்றோ எ-று.

தேவியை என்னும் ஐ உருபு நீக்கப்பொருளில் வந்தது- தக்கன் கடவுளை இகழ்ந்து வேள்விசெய்தபோது அவன் மகளென்னு முறைபற்றிவந்த தாக்ஷாயணியென்கிற பேரையொழித்துப் பார்வதியென்கிற பெயரைக்கொள்ள மலையரசனிடத்து வளர்ந்தபோது அவளைப் பிரிந்திருந்தமைகொள்க. தலைமேற் கங்கையிருக்கவும் காமத்தீ யடங்காமல் நெற்றியைப் பிளந்து வெளிப்பட்டதென்க. கடவுளுக்கே அப்படி நேரிட்டவாயின், மெல்லிய வொருசிறு பெண்பாலாகிய எனக்கு எப்படி யிராதென்றதாயிற்று. [கடவுள் காமத்தாற்படும் பாட்டைச்சொல்லித் தண்டாபூபிக நியாயத்தினாலே தான் படும்பாடு தோன்றச் செய்தலால் செய்யுட் பொருட் பேறணியாம்.]

(க-து.) பெண்களே - காமக்களற் கொடுமையை நீங்க ளறியவில்லை. சிவனுமையைப் பிரிந்தகாலத்து கங்கையைத் தரித்தும் அக்காமாக்கினி நெற்றிக்கண்ணாக வெடித்ததல்லவோ எ-ம். 20

பண்ணமைந்ததீஞ்சொலீர் பழிப்பதென்னைமாநிலத்
துண்ணயந்ததலைவர்வீயி னுயிரையன்னமாதரா
ரெண்ணுகின்றகாமமென்னு மெரியழற்குவெந்தழ
றண்ணிதென்றுமூழ்கியந்த வெம்மையைத்தணிப்பரால்.

(இ-ள்.) பண்-பாட்டிசைபோல், அமைந்த-நிறைந்த, தீ - மதுரம்பொருந்திய, சொலீர் - சொற்களையுடையவரே - பழிப்பது - பழிப்பதற்குக் காரணம், என்னை-யாது, மாநிலத்து-பெரிய பூமியின்கண், உள்-உள்ளத்தில், நயந்த-விரும்பப்பட்ட, தலைவர் (தங்) கணவரானவர், வீயின் - இறந்துபோனால், உயிரையன்ன (அக்கணவ) ருயிர்போலும், மாதரார்-மங்கையரானவர். எண்ணுகின்ற-சிந்திக்கப்படுகின்ற, காமமென்னும-காமமாகிய. எரியழற்கு-நெருப்புக்கு, வெந்தழல்-வெப்பம்பொருந்திய நெருப்பானது, தண்ணிதென்று - குளிர்ச்சியதாயிருக்கிறதென்று நினைத்து, மூழ்கி (இந்நெருப்பினுள்ளோ) மூழ்கி, அந்த வெம்மையை-அக்காமநெருப்பின் வெப்பத்தை, தணிப்பர்-நீக்குவார்கள் எ-று.

உயிரை யன்னமாதரெனவே - கற்புடைய மகளிரென்றதாயிற்று. வெந்தழறண்ணிதென்று மூழ்கல்-உடன்கட்டை ஏறுதல்-அல்லது, தீப்பாயுதல். கணவருட னிறந்தவர் வானுலகத்திலே, பழையபடியே அவருக்கு மனைவியராயிருந்து காமசுகத்தை யனுபவிப்பரென்பது அறநூலிற் சொல்லப்படுமாதலாலே அவ்வெம்மையைத் தணிப்பரென்றால். காமநோய் பொறாமைமகளிர்க்கெல்லாமியல்பாயிருக்க, நீங்கள் பேதமையால் என்னைப் பழிக்கின்றீரென்றதாயிற்று. [அப்படி மரணமடைதற்கு ஏதுவாகாத அத்தண்ணிதென்று முழுகுதலை ஏதுவாகக் குறித்தலால் ஏதுத்தற்குறிப்பணியாம்.]

(க-து.) மாதர்களே-உலகிற் பெண்கள் தங்கள் கணவர்க ளிறந்தபோது காமாக்கினிக்குப் பயந்தல்லவா தீப்பாய்கிறார்கள் எ-ம். 21

என்றுகூறிநுழைநுசுப் பிறுங்கொலென்னவினமணிக்
குன்றுபோலெழுந்துவீங்கு கொம்மைவெம்முலைத்தடம்
பொன்றயங்குபசலைபோர்ப்ப மம்மர்நோய்பொறுக்கலா
மன்றலோதிதுயருழந்து மதிமயங்குகாலையில்.

[இதுமுதல் இரண்டு பாட்டுகளால் மாலையின்வரவுக் கேதுவாகிய சூரிய னஸ்தமித்தலைச் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) என்றுகூறி-என்றுசொல்லி, நுழை-நுண்ணிய, நுசுப்பு-இடையானது, இறுமென்ன-ஒடியுமென, இனம்-இனமாகிய, மணி-மணிகளின் மயமாகிய, குன்றுபோல்-மலைபோல். எழுந்து - உயர்ந்து, வீங்கு-படுத்திருக்கின்ற, கொம்மை-இளமைபொருந்திய, வெம்-விருப்பத்தைத் தருகின்ற, முலைத்தடம் முலைகளினிடங்கள், பொன்-பொன்போல, தயங்கு-விளங்காநின்ற, பசலை-பசப்பு நிறத்தினால், போர்ப்ப (தம்மை) மூடிக்கொள்ள, மம்மர்நோய்-காமநோயை பொறுக்கலா-பொறாமல், மன்றல்-வாசனைபொருந்திய, ஓதி-கூந்தலையுடையவள், துயர்-துன்பத்தில், உழந்து-வருந்தி, மதிமயங்கு-அறிவுகலங்கப்பெறுகின்ற, காலையில்-காலத்திலே எ-று.

"புணராக்காலைப் பொன்பசலை பாயும்" இவ்விதியால் பொன்றயங்கு பசலைபோர்ப்பவென்றார். இப்பாட்டும் பின்பாட்டுங் குளகம்.

(க-து) தமயந்தியானவள் காமவிரகத்தைச் சகியாமல் அறிவுகலங்குங்காலத்தில் எ-ம். 22

நையநுண்மருங்குல்காம வெம்மைபற்றுநாண்மலர்
கையிலங்குவாண்முகங் கருந்தடங்கண்மெல்லடித்
துய்யபங்கயந்தொடிற் சுடுமெனவெண்ணியோ
வெய்யவன்கரஞ்சுருக்கி வேலைபுக்கொளித்ததே.

(இ-ள்.) நையும்-தேய்கின்ற, நுண்-நுண்ணிய, மருங்குல்-இடையையுடையவளது, காமம்-காமத்தீயினது, வெம்மை-வெப்பத்தை, பற்று-கொண்டிருக்கின்ற, கை-கைகளும், இலங்கு-விளங்காநின்ற, வாள்-ஒளிபொருந்திய, முகம்-முகமும், கரு-கரிய, தடம்-விசாலம்பொருந்திய, கண்-கண்களும், மெல்-மெல்லிய, அடி-அடிகளுமாகிய, நாண்மலர்-அன்றுபூத்த, துய்ய-பரிசுத்தம்பொருந்திய, பங்கயம்-தாமரைமலர்களை, தொடின், தொட்டால், சுடுமென்ன- சுடுமென்று, எண்ணியோ-நினைத்தோ, வெய்யவன்-சூரியனானது, கரம் (தன்) கிரணமாகிய கைகளை, சுருக்கி-சுருக்கிக்கொண்டு, வேலை-மேல்கடலுள்ளே, புக்கு-முழுகி, ஒளித்தது-மறைந்தது எ-று.

"அவற்றுள்-வேற்றுமைத்தொகையே வேற்றுமையியல்" இவ்விதியால் (வெம்மைபற்று) என்பதில் ஐயுருபு தொக்கது. சூரியன் தாமரைக்கு நாயகனாதலால்

லால், அவற்றைத் தொடுதல் அவனுக்குக் குறித்தாயிற்று. சூரியன் எல்லாவற்றுக்கும் வெப்பஞ்செய்பவனுயிருந்தும், தமயந்தியின் காமவெப்பத்திற்கு அஞ்சினனெனவே, அவ்வெப்பத்தின் கொடுமை சொல்லவேண்டாவாயிற்று. [காஞ்சுருக்குதற்கு ஏதுவாகாத அவ்வெண்ணத்தை ஏதுவாகக் குறித்தலால், ஏதுத்தற்குறிப்பணியாம்] இது புராணிகர் கூற்று.

(க-து.) சூரியனனவன் தமயந்தியினுடைய அவயவத் தாமரைகளைத்தொட்டால் சுடுமென்று நினைத்தோ அஸ்தமனமாயினன் எ-ம். 23

கைக்கிளைப்படலம் முற்றுப்பெற்றது.

---

# மாலைப்படலம்.



இப்படலத்தால் முன்சொல்லப்பட்ட தமயந்திகாமநோய் மிகுதற்குக் காரணமாகிய மாலையின்வரவு சொல்லப்படுகின்றது.

கலிநிலைத்துறை.

ஒற்றை யாழியான் படமென வுறுபகற் சிறுவன்
கற்றைவார் கதிர்க் கயிற்றினல் விடுதலுங் கதித்து
முற்றுமுமூலை நெட்டுயிர்ப் பெறிதலான் மொத்துண்
டற்றுவீழ்ந்த போற்குட திசைக்கடலு ளாழ்ந்ததுவே.

(இ-ள்.) ஒற்றையாழியான்-சூரியனனது, படமென (தனக்குக்)காற்றாடியாக, உறு-உறப்பெற்ற, பகல்-பகலாகிய, சிறுவன்-சிறியோனனவன். கற்றை திரளாகிய, வார்-நெடிய, கதிர்-கிரணமாகிய, கயிற்றினல்-கயிற்றைக்கொண்டு, விடுதலும் (ஆகாயத்தின்கண்) விட்டவளவில், கதித்து-பருத்து, முற்றுமு-முற்றுத, முலை-முலைகளையுடைய தமயந்தியானவள், நெட்டுயிர்ப்பு-பெருமூச்சை, எறிதலான்-விடுதலினல், மொத்துண்டு-தாக்கசண்டு, அன்று (அக்கயி) றற்று, வீழ்ந்தபோல்-வீழ்ந்ததுபோல. குடதிசை - மேற்குத்திசையிலுள்ள, கடலுள்-சமுத்திரத்தினுள் (அது) மூழ்கிற்று எ-று.

வீழ்ந்ததென்பது-வீழ்ந்தவெனத் துவ்விகுதி குறைந்துநின்றது. இதனல் மாலைப்பொழுது வருவதற்குக் காரணமும், அப்பொழுது உளதாகுந் தமயந்தி வருத்தமுஞ் சொல்லப்பட்டன. பிரிந்தோரை மாலைவருந்துமென்பது. "காதல ரில்வழி மாலை கொலைக்களத், தேதிலர் போலவரும்" என்பதனுலுணர்க. [சூரியனிற்படமும் பகலிற் சிறுவனும் கதிரிற்கயிறும் ஆரோபித்தலால், உருவகவணியும்; சூரியன் மேற்கடலுள் இயல்பாய் வீழ்தலைக் கதிர்க்கயிறற்று வீழ்வதாகக் குறித்தமையால், முன்னுருவகத்தை யுறுப்பாகக்கொண்ட-பொருட்டற் குறிப்பணியுமாம்.]

(க-து.) பகல் என்னுஞ் சிறுபிள்ளை சூரியனைக் காற்றுடியாகக் கிரணக்க யிற்றாற் கட்டிவிட்டவளவில், தமயந்திபெருமூச்சால் அக்காற்றுடியற்றுமேற் கடலில் வீழ்ந்து மூழ்கிற்று எ-ம். 1

புதைத்த காரிருட் படமொழித் தித்துணைப்போது
முதித்த கீழ்த்திசை மகட்புணர்ந் தாயெனவூடிக்
கொதித்துமேற் றிசையணங் கலத்தகப் பதங்கொடுமே
லுதைத்த தாமெனச் சிவந்தது வெய்யவனுடலம்.

(இ-ள்.) புதைத்த-மறைத்த, காரிருள்-கரியவிருளாகிய, படம்-போர்வையை, ஒழித்து-களைந்து, இத்துணைப்போதும்-இவ்வளவுகாலமும், உதித்த (நீ) உதயஞ்செய்யப்பெற்ற, கீழ்த்திசை-கிழக்குத்திக்காகிய, மகள்-மாதை, புணர்ந்தாயென-கூடிக்கொண்டிருந்தாயென்று, மேற்றிசை-மேற்குத்திக்காகிய, அணங்கு-மாதானவள், ஊடி-பிணங்கி, கொதித்து - வெப்பமுற்று, அலத்தகம்-செம்பஞ்சூட்டப்பெற்ற, பதங்கொடு, அடிகளைக்கொண்டு, மேல்-வடிவத்தின் மேல், உதைத்ததாமென- உதைக்கப்பெற்றதுபோல், வெய்யவன்-சூரியனது, உடலம்-வடிவம், சிவந்தது - சிவப்பையடைந்தது எ-று.

சூரியனுக்குச் செந்நிறம் இயற்கையாயினும் காலையினு மாலையினும் மிகுந்து தோன்றுமென்க. மாலையிற் சிவத்தற்குக் காரணமேற்றிசை மாதினுடைய அலத்தகப்பதத்துதை யெனவே, காலையிற் சிவத்தற்குக் கீழ்த்திசைமா துதையாமெனக்கொள்க. தலைவனோ டூடுதற்குப் பலகாரணங்களுளவேனும் பிறமாதரை நயந்தானெனப் பிணங்குவதைமகளிர்க்கு இயல்பாமென்பதுதோன்றக், கீழ்த்திசை மகட் புணர்ந்தாயென வூடி என்றார். தாயைப் புணர்ந்தோனென்பது தோன்ற, உதித்த கீழ்த்திசைமகட் புணர்ந்தாய் என்றார். அவனைக் கண்டுழி யூடுதன் மாத்திரத்தி னடங்காது அழற்சினமுமிகுமாதலால், ஊடியென்றொழியாது கொதித்தென்றார். திசைகளை மாதராகச் சொல்லியதால், உருவகவணியும்; சூரியன் அப்போதடைந்த சிவப்பை அவ்வுதையின் சிவப்பாகக் குறித்தலால், பொருட்டற் குறிப்பணியுமாம்.]

(க-து.) மேற்குத்திசைப் பெண் காதலுதைப்பட்டதுபோலுஞ் சூரியன் மேனி சிவந்தது எ-ம். 2

சகரர்தொட்டவெண்டிரையெறிதடங்கடற்புகுதும்
புகரில்வெங்கதிர்க்கடவுண்முன்போக்கியகதிர்க
ணிகரினித்திலங்குளிப்பவர்நீர்நிலையறிவா
னகநெடுங்கடல்விடுத்தபொற்கழையெனலாமல்.

(இ-ள்.) சகரர்-சகரனென்னப்பட்ட வரசர்களாலே, தொட்ட-தோண்டப்பட்டிருக்கின்ற, வெள்-வெள்ளிய, திரை-அலைகளை, எறி-வீசுகின்ற, தடம்-விசாலம்பொருந்திய, கடல்-கடலின்கண், புகுதும்-புகுகின்ற, புகரில், குற்றமில்

லாத, வெங்கதிர்க்கடவுள்-சூரியதேவனாலே, முன்-முன்னே, போக்கிய - செலுத்தப்பட்ட, கதிர்கள்-கிரணங்களானவை, நிகரில் - ஒப்பில்லாத, நித்திலம்-முத்துக்களைக் (குறித்து) குளிப்பவர் (அக்கடலிலே) மூழ்குவோர், நீர்நிலை - நீராழத்தை, அறிவான்-அறியும்பொருட்டு, அகல்-விரிந்த, நெடுங்கடல் - நெடிய கடலிலே, விடுத்த-விடப்பட்ட, பொற்கழையெனலாம்-பொன் மூங்கில்களென்று சொல்லலாம் எ-று. ஆல்-அசை

சகரவாசனால் வேள்வியின்பொருட்டு விடப்பட்ட குதிரையை இந்திரன் பற்றிப் பாதாளலோகத்திற் றவஞ்செய்திருந்த கபிலமுனிவன் புறத்துக் கட்டுதல் செய்ய அதைத் தேடும்பொருட்டு அவனுடைய புதல்வராகிய சாகரர் அறுபதினாயிரவராலுந் தோண்டப்பட்டபடியால், சகரர்தொட்ட கடலென்றார். கடலைச் சாகரமென்பதும், இதினாலெனவறிக. [இரவி முன் செல்லுகின்ற கதிர்களில் நீராழம்பார்க்கு மூங்கிலை ஆரோபித்தலால், உருவகவணியாம்.]

(க-து.) கடலிற் சூரியனாற் செலுத்தப்பட்ட கிரணங்களானவை அக்கடலின் முத்தெடுக்க மூழ்குவார் ஆழம்பார்க்க விடுத்த மூங்கில்கள் போன்றிருந்தன எ-ம். 3

மையுண் கண்ணியைமதிவரின் வருத்துமென் றிரங்கி
யையபோகவென் றாம்பல்வாய்மலர்ந்தனவாவி
வெய்யவன்செழுங்கரங்களை விழைவொடுந்தமது
கையினாலுறப்பிடித்தெனக் குவிந்தன கமலம்.

(இ-ள்.) மையுண்கண்ணியை-அஞ்சனத்தைக்கொண்ட கண்களையுடையளாகிய தமயந்தியை, மதி-சந்திரனானவன், வரின்-வந்தால், வருத்துமென்று வருத்துவானென்று, இரங்கி-உள்ளிரங்கி, ஐய-சாமி, போகவென்று (இவளைக் கைவிட்டுப்) போகாதேயென்று (சொல்வனபோல்)வாவி-குளங்களிலே, ஆம்பல்-அல்லிமுகைகள், வாய்மலர்ந்தன-முகமலர்ந்தன, வெய்யவன்-சூரியனது, செழும்-செழிய, கரங்களை (கிரணங்களாகிய) கைகளை,விழைவொடும்-ஆசையோடும், தமது-தம்முடைய, கையினால்-கைகளால், உற-பொருந்த,பிடித்தென-பிடித்தனபோல, கமலம்-தாமரைமலர்கள், குவிந்தன-கூம்பின எ-று.

வாவியில் ஆம்பல்வாய்மலர்ந்தன-தாமரை குவிந்தனவெனக் கூடுக.

சூரியனது இருத்தல் நன்னயகன் வரவிற்குத் தடையாயினும் தமயந்தியின் வருத்தத்திற் கிரங்கி இருக்கவேண்டிக்கொண்டானென்பது தோன்ற ஆம்பல்வாய் மலர்ந்தன வென்றும், நன்னயகனென்னுஞ் சுதந்தரம் பற்றிக் கையினாற் பிடித்துத் தடுத்தானென்பது தோன்றக், கமலம் பிடித்தனவென்றும், சொல்லினார். [மாலைப் பாழுதில் அல்லிதாமரைகட்கு இயல்பாகியமலர்தலையுங் குவிதலையுஞ் சொல்லுதலும் பிடித்தலுமாகக்குறித்தமையால், பொருட்டற் குறிப்பணியாம்.]

(க-து.) தமயந்தியைச் சந்திரன்வரில் வருத்துவானென்று சொன்னது போல ஆம்பல்க ளலர்ந்தன; சூரியனைப் போகாதேயென்று கையாற் பிடித்தல் போலுங் கமலங்கள் குவிந்தன எ-ம். 4

பொருவிலாழியொன் றுருட்டியெப்புவனமும்விளக்கு
மிரவிமன்னவனிறத்தலுமெதிர்ந்தபுன்மாலை
பரவைமாநிலமுழுவதும்பரிப்பவனிறப்ப
விரவிவெந்தொழிற்குறுநிலவேந்துபோன்றுளதே.

(இ-ள்.) பொருவில்-ஒப்பில்லாத, ஆழியொன்று-ஒருசக்கரத்தை, உருட்டி-செலுத்தி, எப்புவனமும்-எல்லாவுலகங்களையும், விளக்கும்-ஒளிர்விக்கின்ற, இரவிமன்னவன்-சூரியனாகிய வரசன், இறத்தலும் இறந்தவளவில், எதிர்ந்த-தோன்றிய, புன்மாலை-புல்லியமாலைக்காலமானது, பரவை - கடலையுடைய, மாநிலமுழுவதும்- பெரியவுலகமுழுதையும், பரிப்பவன்-காப்பாற்றுகின்றவரசன், இறப்ப-இறத்தலைச்செய்ய, விரவு (அத்தருணத்திலே) வியாபிக்கின்ற, வெந்தொழில் - கொடிசெய்கையையுடைய, குறுநிலவேந்து போன்றுளது-சிறிய நிலத்தையாளு மரசன்போலிருந்தது எ-று.

"இறப்பேசா மிகுதிபோக்காம்" என்றதனால், ஈண்டு சூரியனிறத்தல்-போதுதம், அரசனிறத்தல்-சாதலுமாகப்பொருள்கொள்க. உலகமுழுவதும் புரத்தல்செய்த அரசனீங்கிய வளவிற்றோன்றி ஏழைகளை வருத்துதலால் வெந்தொழிற் குறுநிலவேந்தனென்றும், சூரியனீங்கிச் சந்திரன் றோன்றுதற் கிடையே தோன்றிச் சிறிதுபொழுது நின்றலிவராதலிற், புன்மாலையென்றுஞ் சொல்லினர். [மாலைக்குக் குறுநிலமன்னனை ஒப்புமை சொல்லலால், உவமையணியாம்.]

(க - து.) சூரியன் சென்றவளவிலே மாலைக்காலம்வந்து சம்பவித்தது தனிச்செங்கோல்வேந்தனிறந்தபின்பு குறுநிலவேந்தன் பெருநிலமாளவந்தது போலும் எ-ம்.

காலமென்னுமோர்வணிகன்மேலகன்றவான்கல்லின்
ஞாலநீளிருள்சீப்பவனலங்கொள்பொன்னாக
வேலுமாறுரைத்தெனவொளிர்செக்கர்வானிருண்ட
நீலவார்குழலுயிர்சுடவெழுந்தசெந்நெருப்பே.

(இ-ள்.) காலமென்னு மோர்வணிகன்-காலமாகிய வொரு வைசியனானவன, மேல்-மேலாக, அகன்ற - பரந்த, வான்கல்லின் - ஆகாயமாகிய (உரை) கல்லிலே, ஞாலம்-பூமியினிடத்து, நீளிருள்-மிக்கவிருளை, சீப்பவன்-கெடுப்பவனாகிய சூரியனை, நலங்கொள்-நற்குணத்தைக்கொண்ட, பொன்னாக-கனகமாக ஏலுமாறு - பொருந்துமாறு, உரைத்தென - உரைத்ததுபோல, ஒளிர்-விளங்குகின்ற, செக்கர்வான் - செவ்வானமானது, இருண்ட-இருளூர்ற, நீலம்-நீலநி

றம்பொருந்திய, வார்-நெடிய, குழல்-கூந்தலையுடைய தமயந்தியினது, உயிர்-ஆவியை, சுட-சுடுதற்பொருட்டு, எழுந்த-தோன்றிய, செந்நெருப்பு-செந்தீயே (யாம்) எ-று.

[செவ்வானத்தில் பொன்னுரைத்தாலென்னுந் தற்குறிப்பணி, காலத்தில் வணிகனையும் - ஆகாயத்தில் உரைகல்லையும்-சூரியனிற் பொன்னையும்-ஆரோபித்தலாகிய உருவகவணியை உறுப்பாகக்கொள்ளுதலால், உறுப்புறுப்புக் கலவையணியும்; செவ்வானத்திற் செந்தீக் குறிக்கப்பட்டமையால், பொருட்டற் குறிப்பணியும்; இவ்விரண்டுஞ் சேர்ந்துவருதலாற், சேர்வையணியுமாம்-]

(க-து.) செவ்வானந்தோன்றியது தமயந்தி யுயிரைச்சுடவெழுந்த செந்தீக் கொப்பாயிருந்தன எ-ம். 6

செய்யவெங்கதிரிறத்தலுமவனுழைச்சிறந்த
மொய்கொள்பேரொளி மனிவைக்குமூட்டுசெந்தழலின்
வெய்யதீதாய்ப்பரந்தெழு செக்கர்வான்மெலிந்த
வையநுண்ணிடையணங்கினுக் கென்கொலாமையும்.

(இ-ள்.) செய்ய-செந்நிறம் பொருந்திய, வெங்கதிர்-சூரியனானவன், இறத்தலும்-இறந்தவளவில், அவனுழை-அவனிடத்தே, சிறந்த-சிறப்புற்றிருந்த, மொய்கொள் - மொய்த்தல்கொண்ட, பேர்-பெரிய, ஒளிவனிதைக்கு-சாயாதேவிக்கு, மூட்டு - மூட்டப்பட்ட, செந்தழலின் - செந்நெருப்புப்போல், வெய்ய தீதாய்-கொடிய குணத்ததாய், பரந்து-விரிந்து, ஒளிர் - விளங்காநின்ற, செக்கர்வான்-செவ்வானமானது, மெலிந்த - காமநோயாலிளைத்த, ஐயம்-ஐயத்துக்கிடமாகிய, நுண்ணிடை-நுண்ணிய விடையையுடைய, அணங்கினுக்கு-தமயந்திக்கு, என்கொலாயமையும் - எப்படிப்பட்டதாயிருக்கும் எ-று.

இருவகைப் புணர்ச்சியுள் உள்ளப்புணர்ச்சியின்வழித்தாகிய மெய்யுறு புணர்ச்சி யுற்றோர்க்கு விருப்பின்திண்மை சிறிதொழிந்து நிற்குமாயினும், தலைவனிங்கியவளவில் இவர்களும்பொறுது சாக மனஞ்செய்வரென்பதுதோன்ற ஒளிவனிதைக்குமூட்டு செந்தழலினென்றார். "மருவுகாதலராருயிர் மாய்ந்திடவெரியின்மூழ்கி யிறந்துபடுவதற், கருநெறித்தலை வைக்கு மடிக்கடி, புரவிதன் மகப் பேறுகொருந்துவார்" என்பதனாலறிக. [செக்கர்வானத்தை ஒளிவனிதைக்குமூட்டு செந்தழலாகக் குறித்தமையால், தற்குறிப்பணியாம்.]

(க-து.) சூரியனிறந்தவுடனவன்மனைவி சாயாதேவிக்கு மூட்டு நெருப்பைப்போலிருஞ் செவ்வானமானது தமயந்திக் கெவ்வாறு யிருக்கும் எ-ம். 7

தணத்தலெண்ணி மெய்தளர்வுறுநேமிபம்பறவை
புணர்த்தவஞ்சிறைப்புல்லு விட்டொழியகெட்டுயிர்ப்பாற்
றுணர்த்தமௌவல்வண்டு தநீள்கங்குன்முன்றோன்றிப்
பனைத்தவெம்முலைப்பா சிழையல்குலென்படுமே.

(இ-ள்.) தணததல்-பிரிவை, எண்ணி-நினைத்து, மெய்-உடம்பு தளர்வுறு-தளர்ச்சியடைகின்ற, நேமியம்பறவை-சக்கரவாகப்பறவைகள், நெடுயிர்ப்பால்-பெருமூச்சோடு, புணர்த்த-கலந்த, அம்-அழகிய, சிறை-சிறைகளின்,புல்லு-தழுவுதலை, விட்டு-விடுத்து, ஒழிய-நீங்கவும், வண்டு-வண்டுகளானவை, துணர்த்த-கொத்துகளரகப்பூத்த, மௌவல்-முல்லைமலரிலே, ஊத - ஆரவாரிக்கவும், நீள்-நெடிய, கங்குன்முன்-மாலையானது, தோன்றின் - உதிக்குமாயின், பணைத்த-பருத்த, வெம்-விருப்பஞ்செய்கின்ற, முலை-முலைகளையும், பாசிழை-பசிய வாபரணத்தைக்கொண்ட, அல்குல் - அல்குலையுமுடைய தமயந்தியானவள், என்பரும்-என்பவோள் எ-று.

ஒழிய-ஊத-என்னும் வினையெச்சங்கள், தோன்றினென்னும் வினைகொண்டு முடிந்தன. புணர்ந்தவெனற்பாலது புணர்த்தவென எதுகை நோக்கி விகாரமாயிற்று. இடைவிடாமற் கூடுதலுற்ற பகுப்பறிவில்லாத சக்கரவாகப்பறவைகள் பிரியவும், மன்மதனது அம்பாய்ப் புரிந்தவர்க்குக் கிடைகாட்டுமுல்லைமலரில் வண்டுகளாகிய வின்ஞண் போர்க்குறியாகிய ஒலியைச் செய்யவும்,மாலைப்பொழு துண்டாகுமளவில் இவள்படுந் துன்பம் அளவிறந்ததாகலின் என்படுமென்றார். மாலையிற்காமநோய் மிகுமென்பது காலையரும்பிப் பகலெல்லாம் போதாகி, மாலை மலருமிந் நோய்" என்பதனாற் காண்க.

(க-து.) சகோதரர்கள் புணர்ச்சிவிட்டு நீங்கவும் வண்டுகள் சத்திக்கவும் மாலைக்கால முதிக்குமானால் தமயந்தி என்னபாடுபடாள் எ-ம். 8

அங்கண்வானகமுழுவது மவிரொளிபரப்பிக்
கங்குள்வாயடர்தாரகை யெழுந்தன கடலுட்
பொங்குவெங்கதிர்மணி விழுந்தெனத்திசைபுரப்போ
ரெங்குநாடுதற்கெடுத்தவஞ் சுடரெனவியையும்.

(இ-ள்.) கங்குல்வாய் - இரவின்கண், அங்கண் - அழகிய விடத்தையுடைய, வானகமுழுதும் - ஆகாயத்திடமெங்கும், அவிர்-விளங்காநின்ற, ஒளி-ஒளியை, பரப்பு - விரித்துக்கொண்டு, எழுந்தன - தோன்றினவையாகிய, அடர் - நெருங்கிய, தாரகை - உடுக்களானவை, கடலுள - சமுத்திரத்தினுள், பொருங்கு - விளங்காநின்ற,வெங்கதிர் - சூரியனாகிய, மணி - மணியானது, விழுந்தென - விழுந்ததென்று, திசைபுரப்போர - திக்குப்பாலகர், எங்கும் - எவ்விடங்களிலும், நாடுதற்கு - தேடுதற்பொருட்டு, எடுத்த - எந்திய, அஞ்சுடரென - அழகிய தீபங்கள்போல, இயையும் - பொருந்தும் எ-று.

திக்குப்பாலகரது காப்புப் பெரும்பாலுஞ் சந்திரசூரியர் பொருட்டாதலால், அவர்க்குத் தேடல் சொல்லப்பட்டது. கங்குல்வாயடர் தாரகையெனலால், பகலிற் சூரியனொளியால் மழுங்கிநிற்குமென்க. [வெங்கதிர் மணியெனலால், உருவகவணியும்; தாரகைகளில் தீபங்களைக் குறித்தலால், தற்குறிப்பணியுமாம்.]

(க-து) நட்சத்திரங்களின் தோற்றங்களானவை-சூரியனாகிய மணி கடலில் வீழ்ந்ததென்று திக்குப்பாலகரம்மணியைத்தேட எடுத்த தீபங்களைப் போன்றிருந்தன எ-ம். 9

கருத்தினூடெழு காமமென் கொடுங்கனல்கனற்ற
அருத்தியுற்றவராருயிர்க் குளகினையயில்வா
னுருத்திவெங்கதிர்ப்பாகெறிந்துடுப்புகர்முகத்த
விருட்கடாக்களிற்றிருநிலத் திறுத்ததையன்றே.

(இ-ள்.) உடுப்புகர்-தாரகைகளாகிய புள்ளிகள் பொருந்திய, முகத்த-முகத்தினையுடைய, இருட்கடாக்களிறு-இருளாகிய மதயானை,உருத்து-கோபித்து, வெங்கதிர்ப்பாகு-சூரியனாகிய பாகனை, எறிந்து-வீசி, கருத்தினூடு-நெஞ்சினுள், எழு-வளர்கின்ற, காமமென்-காமமென்கிற, கொடுங்கனல்-கொடியதீயானது, கனற்ற-சுடாநிற்க, அருத்தி-ஆசையை, உற்றவர்-பொருந்தினவருடைய, ஆர்-நிறைந்த, உயிர்க்குளகினை-உயிராகிய தழையை, அயில்வான்- உண்ணும்பொருட்டு இருநிலத்து-பெரிய பூமியினிடத்து, இறுத்தது-தங்கியது எ-று.

ஆருயிர்க் குளகினையயில்வானென்பதினால், இருளானது பிரிந்தவர்க்கு மரணவேதனை பொத்தவேதனையை விளக்குமென்க. குளகு-விலங்குண்ணுந் தழை. "இலைநுகர்விலங்கி னுணவு குளமென்ப" [உயிரிற் குளகையும், வெங்கதிரிற் பாகனையும், உடுவிற் புகரையும், இருளிற் களிற்றையும், ஆரோபித்தலால்,உருவகவணியாம்.]

(க-து.) இருளாகிய மதயானையானது சூரியனாகிய பாகனைக் கொன்று காமிகளது உயிராகியதழைகளையுண்ணும்பொருட்டுப்பூமியில் வந்ததுஎ-ம். 10

தோட்டுமென்மலர்ப் பூங்கணை துரப்பமெல்லளிநாண்
பூட்டுபைங்கழை குழைத்தெதிர் வேனிலான்புகழைத்
தீட்டுதாரகையெழுத்தொளி சிறந்திடவணிவான்
கூட்டுமையெனச்செறிந்தது கூரிருட்பிழம்பே.

(இ-ள்.) தோட்டு-இதழ்களையுடைய, மெல்-மெல்லிய, மலர்-பூக்களாகிய, பூங்கணை-அழகியவம்புகளை, துரப்ப-செலுத்த, மெம்-மெல்லிய, அளிநாண்-வண்டுகளாகிய நாரியை, பூட்டு-பூட்டிய, பைங்கழை-பசியகருப்புவில்லை,குழைத்து-வளைத்து, எதிர்-எதிர்க்கின்ற, வேனிலான்-மன்மதனது, புகழை-கீர்த்தியை, தீட்டு-எழுதப்பட்ட, தாரகை-உடுக்களாகிய,எழுத்து-எழுத்துக்களினது, ஒளிசிறந்திட-ஒளிவிளங்குதற்கு, அணிவான்-அழகிய வாகாயத்தால், கூட்டு-கூட்டிய, மையென்-மைபோல், கூர்-மிகுந்த, இருள்-இருளினது,பிழம்பு-திரட்சியானது, செறிந்தது-நெருங்கியது எ-று.

தோடேமடலே யோலையென்று-வேடேயிதழே பாளையென்று-ஈர்க்கே குலையென நேர்ந்தனபிறவும-புல்லொடு வருஉமெனச் சொல்லினர் புலவர்-இவ்விதியால் தோடென்றது புறக்காழென்னும் புல்லாம். வேனிலானை எழு

வாயாக்கி, அவன் தனது புகழைத்தீட்டிய தாரகையாகிய எழுத்தொளி சிறந்திட அணிவதற்குக் கூட்டுமையெனப்பொருள்கொள்ளினுமமையும்.[தாரகையிலெழுத்தை யாரோபித்தலால், உருவகவணியும்; இருளில் மையைக்குறித்தலால், தற்குறிப்பணியும்; இது மூன்றுருவகத்தை யுறுப்பாகக் கொண்டமையால், கலவையணியுமாம்]

(க-து.) இருட்கூட்டமானது-மன்மதனது கீர்த்தியை எழுதப்பட்ட நட்சத்திர வெழுத்தொளி சிறப்படைய ஆகாயத்திற் கூட்டிய மைபோலிருந்தது எ-ம். 11

பட்டகாரிருட்கங்குல் போதரப்படர்திசைக
ளெட்டினுள்ளனபொருள் கவர்ந்தேகிலனென்று
விட்டிலங்கொளிவெய்ய வன்றனதுமெல்விரலாற்
சுட்டியெங்கணுங்காட்டல் போற்சுடர்வனசுடர்கள்.

(இ-ள்.) பட்ட-உண்டாகிய, கார்-கரிய, இருள்-இருளையுடைய, கங்குல்-இரவானது, போதர-வர, படர்-படர்ந்த, திசைகளெட்டின்-எட்டுத் திக்குகளினும், உள்ளன-இருக்கின்றனவாகிய, பொருள்-பொருள்களை, கவர்ந்து-அபகரித்துக்கொண்டு, ஏகிலனென்று-நான்போகவில்லையென்று,ஒளி-காந்தியை, விட்டு-வீசி, இலங்கு-விளங்காநின்ற, வெய்யவன்-சூரியனானவன், தனது-தன்னுடைய, மெல்விரலால்-மெல்லிய விரலினாலே, சுட்டி-குறித்து, எங்கணும்-எவ்விடங்களிலும், காட்டல்போல்-காட்டுதல்போல, சுடர்கள்-தீபங்கள், சுடர்வன-விளங்குவன எ-று.

பிறர்பொருளைப் பாதுகாப்போர் அவ்விடத்தைவிட்டு நீங்குமிடத்துப் பின்காப்பவர்க்குத் தங்காப்பிலுள்ள பொருள்களை யொப்புவித்தல்உலகவழக்கமாதலிற், பகலிற்காத்த சூரியனீங்குமிடத்து இரவிற்காக்குஞ் சந்திரன் வருதற்குப்பொழுது நீட்டித்தலால், அவ்வுடைமையைக்காத்தற் குரிய அவன்மனைவியாகிய இராமடந்தைக்கு ஒப்புவிக்குமிடத்துச் சொன்னமாத்திரத்தாற்புலப்படாதென்பது தோன்ற, வெய்யவன் றனது மெல்விரலாற் சுட்டிக்காட்டலென்றார் [அம்மாலைக்காலத்திலே உண்டாகிய தீபங்களில் சூரியன் விரலையாரோபித்தலால், தற்குறிப்பணியாம்.]

(க-து.) தீபங்கள்-சூரியன் எண்டிக்கிலுமுள்ள பொருள்களைக் கவர்ந்தேகிலேனென்று இரவினுக்குத் தன் விரலாற் சுட்டிக்காட்டல்போல்பிரகாசிக்கின்றன எ-ம்.

மாலைப்படலம் முற்றுப்பெற்றது.

——

# நிலாத்தோற்றுப்படலம்.

இப்படலத்தால் அம்மாலைக்குப் பின் வரும் நிலவினது தோற்றஞ் சொல்லப்படுகின்றது.

கலி நிலைத்துறை.

வெவ்வராவினைவிண்டொடர் மந்தரம்பிணித்துக்
கௌவைமிக்கெழக்கடவுளர் கடைந்திடுங்காலைப்
பவ்வவெண்டிரையுயிர்த்த செம்பதுமைவாண்முகம்போற்
றெவ்வவொண்கதிர்பரப்பிமீ தெழுந்தது திங்கள்.

(இ-ள்.) கடவுளர்-தேவர்கள், வெவ்-வெவ்விய, அராவினை-வாசுகியென்னும் பாம்பை, விண்-ஆகாயமுகட்டை, தொடர்-அளாவிய, மந்தரம்-மந்தரமலையின் கண், பிணிந்து-கயிற்றாகக்கட்டி, கவ்வை-ஒலியானது, மிக்கெழ-அதிகரிக்க, கடைந்திடுங்காலை-மதிக்குங்காலத்தில், வெண்டிரை-வெள்ளிய அலைகளையுடைய, பவ்வம்-பாற்கடலானது, உயிர்த்த-ஈன்ற செம்பதுமை-செந்தாமரையிலிருக்கின்ற, இலக்குமியினது, வாள்-காந்திபொருந்திய, முகம்போல்-முகத்தைப்போல், தெய்வம்-தெய்வத்தன்மையுள்ள, ஒண்கதிர்-ஒளிபொருந்திய கிரணங்களை, பரப்பி-விரித்து, திங்கள்-நிலவானது, மீது-ஆகாயத்தின்கண், எழுந்தது-உதித்தது எ- .

கடவுளரு முடிவுகாலம் அடைந்ததென்று நடுநடுங்கக் கொடியகடுவைத் தந்ததென்பார், வெவ்வராவென்றும்; பெரியமலையென்பார், விண்டொட்டர் மந்தரமென்றும்; மற்றைபாற் கடைதற்கரிதென்பார், கட ளர் கடைந்திடுவென்றும; ஒருகருப்பத்திற் றோன்றின ளல்லவென்பார், பௌவவெண்டிரையிர்த்தவென்றும்; மாதர் முகத்துக்கு உபமானமாகுமதி இவன் முகத்துக்குஉபமேயமாகுமென்பார், பதுமைவாண்முகம் போலென்றும்; நெடுந்தூரத்துற்றும் இருளை யோட்டுமென்பார், தெய்வவொண்கதிர் பரப்பியென்றும்; இவ்விடத்திலுதித்ததென்பார், மீதெழுந்ததென்றும்; சொல்லினர். [திருவின்முகத்தை உபமானமாகவும் சந்திரனை உபமேயமாகவுஞ் சொல்லுதலால், உவமையணியாம்.]

(க-து.) திருப்பாற்கடல் கடையும்போது அதிற் பிறந்த திருமகள் திருமுகத்தைப்போலுஞ் சந்திரோதயமாயிற்று எ-ம். 1

செறிந்தவாழ்கடற்செல்வனுமவனுறைச்சிறந்தாங்
குறைந்தவாருயிர்த்துணை யிபர்பலருமுள்ளுவந்து
நிறைந்ததெண்டிரைநீர் குடைந்தாடலினிகலி
யெறிந்தமென்மலர்ப்பந் தெனவெழுந்ததுதிங்கள்,

(இ-ள்.) செறிந்த-மிகுந்த, ஆழ்-ஆழ்ந்த, கடற்செல்வனும்-சமுத்திரராஜனும் அவனுழை-அவனிடத்து, சிறந்து-சிறப்பையடைந்து, ஆங்கு-அச்சமுத்திரத்தின்கண், உறைந்த-தங்கிய, ஆர்-நிறைந்த, உயிர்-உயிர்போன்ற, துணைவியர்பல்ரும்-மனைவியரனைவரும், உள்ளுவந்து-மனமகிழ்ந்து, நிறைந்த-நிறைவையடைந்த, தெண்டிரை-தெளிந்த வலைகளையுடைய, நீர்-நீரில், குடைந்து-களித்து, ஆடலின்-விளையாடற்கண், இகலி-பகைத்து, எறிந்த-வீசிய, மெல்-மெல்லிய, மலர்ப்பந்தென-பூச்செண்டுபோல, திங்கள்-நிலவானது, எழுந்தது-தோன்றிற்று எ-று.

கடல்வேந்தனென்றமையால், அவனுயிர்த்துணைவியர் நதிமாதரெனக்கொள்க. இகலி என்பதை, வலிந்தெனினுமொக்கும். [உதயமாகிய சந்திரனிடத்து மலர்ப்பந்தைக் குறித்தமையால், தற்குறிப்பணியாம்.]

(க-து.) சமுத்திரராஜனு மவன் மனைவியரும் நீராடும்போது அவர்கள் பகைத்தெறிந்த பந்தைப்போன்று மெழுந்தது சந்திரன் எ-ம். 2

கதிர்செய்நித்திலங்கறங்கு தெண்டிரைக்கரத்தெறியு
முதிர்பனிக்கடன்முகட்டினுள் முளைத்தொளிர்திங்கள்
விதியின்மாலையாந் துணைவியை வீங்கிருட்டலைமன்
வதுவையாற்றுவான் வைத்த பொற்குடமெனவயங்கும்.

(இ-ள்.) கதிர்செய்-கிரணத்தைச்செய்கின்ற, நித்திலம்-முத்துக்களை, கறங்கு-ஒலிக்கின்ற, தெண்டிரை-தெளிந்தவலைகளாகிய, கரத்து-கைகளால், எறியும்-வீசுகின்ற, முதிர்-முதிர்ந்த, பனிக்கடல்-குளிர்ச்சியையுடைய கடலினது, முகட்டினில்-உச்சியில், முளைத்து-தோன்றி, ஒளிர் விளங்காநின்ற, திங்கள்-நிலவானது, விதியின்-விதியினால், மாலையாம்-மாலைக்காலமாகிய, துணைவியை-மனைவியை, வீங்கு மிகுந்த, இருள்-இருளாகிய, தலைவன்-நாயகன், வதுவையாற்றுவான்-மணஞ்செய்யும்பொருட்டு, வைத்த-வைக்கப்பெற்ற, பொற்குடமென-பொன்னாலாகிய குடத்தைப் போல், வயங்கும்-விளங்கும் எ-று.

விவாகத்தில் கரணம்பிழைக்கின் மரணந்தருமென்பது அறநூலிற் சொல்லப்பட்டதாகலின், விதியின்வைத்த பொற்குடமெனருர். [மாலைப்பொழுதிற் றுணைவியையும்-இருளிற் றலைவனையும்-ஆரோபித்தலால், உருவகவணியும்; சந்திரனிடத்துப் பொற்குடத்தைக் குறித்தலால், தற்குறிப்பணியும்; இத்தற்குறிப்பு உருவகத்தை அங்கமாக வுடைமையால், உறுப்புறுப்பிக் கலவையணியுமாம்]

(க-து.) சந்திர னுதயமானது-இருளாகிய நாயகன் மாலைக்காலமாகிய மனைவியைக் கலியாணஞ் செய்யும்பொருட்டு வைத்த குடம்போலு மிருந்தது எ-ம். 3

தெள்ளுதெண்டிரைக் கருங்கடலெழுந்தவெண்டிங்கள்
புள்ளுவாங்கழைமதனனைப் பூம்புனலாட்ட

வள்ளிதழ்க்கருங்குவளை பெய்திரவெனுமடந்தை
வெள்ளிவெண்குடமேந்தினளா மெனவிளங்கும்.

(இ-ள்.) வெள்ளு-கொழிக்கின்ற, தெண்டிரை-தெளிந்த வலைகளையுடைய, கருங்கடல்-கரியகடற்கண், எழுந்த - தோன்றிய, வெண்குங்கள் - வெள்ளிய சந்திரனானது, புள்-வண்டுகளானவை, அவாம்-விரும்புகின்ற, கணை- மலர்க்கணைகளையுடைய, மதனனை-மன்மதனுக்கு. பூம்புனல்-அழகிய நீரினாலே, ஆட்ட-அபிடேகஞ்செய்ய, இரவெனுமடந்தை-இரவாகிய மடந்தையானவள், வள்ளிதழ்-கூரிய விதழ்களையுடைய, கருங்குவளை-நீலோற்பலப்பூவை, பெய்து-மேலேசூட்டி, வெள்ளி-வெள்ளியினாலாகிய, வெண்குடம்-வெள்ளியகுடத்தை, ஏந்தினளாமென-ஏந்தினளென்று சொல்லும்படியாக, விளங்கும்(களங்கத்தோடு) விளங்கும் எ-று.

புள்-வண்டு. "புள்ளுவண் டவிட்டம் புட்பேர்" என்பதனாலுமறிக. அவாவும் என்பது அவாமென உகரங்குறைந்தது. இரவு மன்மதனரசச்சரிய காலமாதலால், பட்டாபிஷேகமில்லாமல் அரசுசெய்யக் கூடாமையின், புனலாட்ட இரவெனுமடந்தை வெள்ளிவெண்குட மேந்தினளென்றார். மடந்தையர் அவன் றொழிற்குக் காரணமாகையால், இராமடந்தைக்கு அபிஷேகஞ்செய்யும் உயர்வு சொல்லப்பட்டது. [இரவென்னுமடந்தை யென்றதால், உருவகவணியும்; களங்கமென்னும் உபமேயத்தைவிட்டுக் கருங்குவளையென்னும் உபமானத்திரத்தைக் கூறலால், உயர்வுநவிற்சியணியும்; சந்திரனிடத்திலே வெள்ளிக்குடத்தைக் குறித்தலால், தற்குறிப்பணியுமாம்.]

(க-து.) சந்திரனுதயமானது-இரவென்னும் பெண்ணானவள் மன்மதனுக் கபிஷேகஞ்செய்ய நீலோற்பலஞ்சூட்டி வெள்ளிக்குடத்தை யேந்தினள் போலும் விளங்கும் எ-ம். 4

புலவுநாறுவெஞ்சுறவெறி பொருதிரைமுகட்டி
னிலவுகொப்புளித் துயரியநிகரில்வெண்மதிய
மலகிறாரகைமீன்பயிலாரிருட்கடலி
னுலகமாழ்தலுமெழுந்த புற்புதமெனவொளிரும்.

(இ-ள்.) புலவுநாறு-புலானாற்றநாறுகின்ற, வெய்-வெவ்விய, சுறவு - சுறாமீன்களை, எறி-எறியும், பொரு-கரையின்மோதுகின்ற, திரை-அலைகளையுடைய கடலினது, முகட்டு-உச்சியில், நிலவு-சந்திரிகையை, கொப்புளித்து-உமிழ்ந்து, உயரிய-எழுந்த. நிகரில்-ஒப்பில்லாத, வெண்மதியம்-வெள்ளிய சந்திரனானது, அலகில்-கணக்கில்லாத, தாரகை-உடுக்களாகிய, மீன்-மீன்களானவை, பயில்-சஞ்சரிக்கின்ற, ஆரிருள்-நிறைந்த அந்தகாரமாகிய, கடலில்-சமுத்திரத்தில், உலகமாழ்தலும்-உலகமுழுகிப்போதலும், எழுந்த-அதிலிருந்து மேலெழுந்த, புற்புதமென-குமிழியைப்போல, ஒளிரும்-விளங்கும் எ-று.

"நிலந்தீ நீர்வளி விசும்போடைந்து-கலந்தமயக்கமுலகமாதலி-னிருதிணை யைம்பா லியனெறிவழாமைத்-திரிவில் சால்லொடு தழா அல்வேண்டும்" இவ் விதியால் உலகமைம்பூதமுடைத்து. [வான்மீனில் மீனையும் இருளிற் கடலை யும் ஆரோபித்ததால், உருவகவணியும்; சந்திரனில் நீர்க்குமிழியைக் குறித்த லால், பொருட்டற் குறிப்பணியும்; இத்தற்குறிப்பு உருவகத்தை அங்கமாக வுடைமையால், கலவையணியுமாம்.]

(க-து.) சமுத்திரத்திடத்துதித்த சந்திரனனது இருட்கடலி லெழுந்த நீர்க்குமிழியை ஒக்கும் எ-ம். 5

திரைநெடுங்கடல்வயிறுளைந் தீன்றவெண்டிங்க
ணிரைசெழுங்கதிர்க்கரங் களாலம்பரநீவ
விரவுகின்றபுன்மாலையாந் தெரிவையுள்வெள்கி
யருணவெங்கதிர்ச்சுடரினையொளியறவவித்தாள்.

(இ-ள்.) திரை-அலைகளையுடைய, நெடுங்கடல்-நெடிய கடலானதுவயிறு ளைந்து-வயிறுநொந்து, ஈன்ற-பெற்ற, வெண்டிங்கள்-வெள்ளிய சந்திரனான வன், நிரை-வரிசையாகிய, செழுங்கதிர்-செழுமையுள்ள கிரணங்களாகிய, கர ங்களால்-கைகளால், அம்பரம்-ஆகாயமென்னுந் தனதாடையை, நீவ-தடவ, விரவுகின்ற-கலக்கின்ற, புல்-புல்லிய,மாலையாம்-மாலைக்காலமாகிய,தெரிவை-பெண்ணானவள், உள்-உள்ளத்தில், வெட்கி-நாணி,அருணம்-சிவப்பாகிய,வெங் கதிர்-சூரியனாகிய, சுடரினை-தீபத்தை, ஒளியற ஒளிநீங்க, அவித்தாள்-அவித் தாள்-அவித்தனள் எ-று.

அம்பரமென்பது, ஆகாயமும்-ஆடையும். "அம்பரங் கடல்விண்சோம்" என்பதனாற்காண்க. தினமுங் கலந்துநீங்குந் தன் புருடனாயினும், நாணிற் கெடாது என்னும்ஒருதன்மைக்காய்ப் பழகுங் குணமுள்ள குலமடந்தைபோல், சந்திரன்கதிர்க் கரங்களால் ஆகாயமாகிய கலையைத்தடவ, மாலைமாது நாணந் தலைக்கொண்டு சூரியனாகியதீபத்தை யவித்தாளென்றார். [கதிரிற கரங்களை யும், மாலைப்பொழுதிற் றெரிவையையும், வெங்கதிரிற் சுடரினையும் ஆரோபி த்தலால், உருவகவணியும்; அம்பரமென்றது முன் சொல்லப்பட்ட உருவகம் ஏதுவாகக்கொண்டு அம்பரமென்னும் அம்பரமெனப் பொருள் கொள்ளுத லால், தொடர் புருவகவணியுமாம்.

(க-து.) சமுத்திரமீன்ற சந்திரனனவன் கிரணக்கரங்களால் மாலைக்கால மாகியபெண் வஸ்திரத்தைத்தடவ, அப்பெண் வெட்கிச் சூரியனாகிய விளக்கை அவித்தாள் எ-ம்.

குறைவில்வெண்மதிதோற்ற மென்குமுதநாண்முகையிற்
சிறைகொள்வண்டுபோன் முரலனும்முயிரினிற்சிறந்த
விறைவன்வார்திரைக்கடன் முகட்டெழுந்தனனென்று
வுறையவந்ததூதர்கள் சொலிற்றோன்றியதன்றே.

(இ-ள்.) குறைவில்-நிலைகணிரம்பிய, வெண்மதி-வெள்ளிய சந்திரனென வன், தோன்ற-உதயமாக, மெல்-மெல்லிய, குமுதம்-அல்லிகளுடைய, நாள்-புதிய, முகையில்-அரும்புகளில், சிறகா-இறகுகளையுடைய, வண்டு-வண்டுகள், பாண்-இசைகளை, முரலல்-ஒலிசெய்தல், நம்-உம்முடைய, உயிரினில்-உயிரைக்காட்டிலும், சிறந்த-சிறந்திருக்கின்ற, இறைவன்-நாயகனானவன், வார்-நெடிய, திரை-அலைகளையுடைய, கடல்-கடலினது, முகட்டு-உச்சியில், எழுந்தனனென்று புறப்பட்டானென்று, அறையவந்த-சொல்லவந்த, தூதர்-தூதர்களுடைய, சொலில்-சொல்லைப்போல், தோன்றியது-தோன்றியது எ-று.

ஒருவர்பால் நாடோறும் பயன்பெற்று வருபவர், தம்மாலடுக்கப்பட்டவர் உயிரிற்சிறந்த பொருளடைவது நாமுன்னர்த்தெரிந்து, அதை அவர்க்குவிரைந்துசொல்லி, அவ்வின்பத்தைத் தாமுமடைவர்; அதுபோல என்றும் அம்மலரிற் றேனுண்டு வண்டினம்பாடல், அவற்றிற்குத்தலைவன் வரவுகூறுந் தூதர் சொல்லிற்றோன்றிய தென்றார். எந்தத் தூதுகளினும் வண்டு தூதிற்குச் சிறந்ததென்பது, வண்டுவிடு தூதிற்காண்க. [வண்டினிசையிற்றூதர்கள்சொல்லைக் குறித்தமையால், தற்குறிப்பணியாம்.

(க-து.) சந்திரனுதயமாக அல்லிமலரில்வண்டுகளொலிசெய்தல், உங்கள் நாயகன் புறப்பட்டா னென்று சொல்லவந்த தூதர் சொல்லைப்போலு மிருந்தது எ-ம். 7

தெண்பனிக்கடற்றிரை யினிதுயிர்த்தவெண்டிங்க
டண்புனற்றடத்தாம்பன் மெல்லிதழ்த்துகிறைவந்
தொண்கரத்தினெகிழ்த்தலு நாணமிதூரக்
கண்புதைத்தெனக்குவிந்தனகடிகமழ்கமலம்.

(இ-ள்.) தெள்-தெள்ளிய, பனி-குளிர்ச்சிபொருந்திய, திரை-அலைகளையுடைய, கடல்-கடலானது, இனிது-இனிதாக, உயிர்த்த-ஈன்ற, வெண்டிங்கள்-வெள்ளியசந்திரன், தண்-தண்ணிய, புனல்-நீரையுடைய, தடத்து-தடாகத்திலுள்ள. ஆம்பல்-அல்லியினுடைய, மெல்-மெல்லிய, இதழ்-இதழ்களாகிய, துகில்-ஆடையை, ஒள்-ஒள்ளிய, கரத்தினால்-கிரணமாகிய கையினால், தைவந்து-தடவி-நெகிழ்த்தலும்-அவிழ்த்தவளவிலே, கடி-வாசனை, கமழ்-மணக்கின்ற, கமலம்-தாமரை, நாணம்-அச்செய்கையைக் கண்டுண்டாகியநாணம், மீதூர-அதிகரிக்க, கண்புதைத்தென-கண்களை மூடிக்கொண்டனபோல், குவிந்தன-முகிழ்ந்தன எ-று.

புலவர்தொன்றுதொட்டுரைக்குமுறைமைப்படி, சந்திரன் அல்லிமனைவியினது இதழ்த்துகிலை நெகிழ்த்தலுமென்றதற் கேற்பச், சூரியன் மனைவியாகியதாமரைகுவிதலை, நாணிக் கண்களை மூடிக்கொண்டன போன் முகிழ்த்தனவெனக்கொள்க. [இதழ்த்துகிலென்றலால், உருவகவணியும்; கரத்தினால் என்றலிற் கிரணமாகிய கரமென்று முன்னுருவக வேதுவாகப் பொருள்கொ

ள்ள வேண்டலால், தொடர்புருவகவணியும்; கமலம் கண்புதைத்தெனவென லால், தற்குறிப்பணியுமாம்.]

(க-து.) கடலீன்ற சந்திரனானவன் கிரணக்கரங்களால் அல்லிகளிதழாகிய வஸ்திரங்களை யவிழ்த்தவளவில், தாமரைகள்வெட்கிக் கண்களைமூடிக் கொண்டனபோலும் குவிந்தன எ-ம். 8

களிசெய்காமநோய்விளைந் திடுமிரவென்னுங்கன்னி
நளிகொள்வெண்மதிநலங்கிளர் வாண்முகமதனாற்
றெளிநிலாக்கதிர்த்தேறல் கொப்புளித்தலுஞ்சிறந்த
வொளிகொள்வான்மகிழ்தல் பூத்தெனவிளங்கினவுடுக்கள்

(இ-ள்.) களிசெய் - களிப்பினைசெய்கின்ற, காமநோய் - காமமாகிய நோயை, விளைத்திடும் - உண்டாக்கும், இரவென்னுங்கன்னி-இரவென்னு மங்கையானவள், நளிகொள் - குளிர்ச்சியைக்கொண்ட, வெள் - வெள்ளிய, மதி - சந்திரனாகிய, நலங்கிளர்-நன்மைவிளங்காநின்ற, வாள் - காந்திபொருந்திய, முகமதனால் - முகத்தைக்கொண்டு, தெளி - தெளிந்த, நிலா-ஒளிபொருந்திய, கதிர்-கிரணமாகிய, தேறல் - மதுவை, கொப்புளித்தலும் - உமிழ்தலும், சிறந்த - சிறக்கப்பெற்ற, ஒளிகொள் - ஒளியைக்கொண்ட, வான்-ஆகாயமாகிய, மகிழ் - மகிழமரமானது, பூத்தென - மலர்ந்ததுபோல, உடுக்கள் - தாரகைகள், விளங்கின - ஒளிசெய்தன, எ-று.

"மாதர் வைக்க மகிழமரமலர்வது" என்பதுபற்றி-இரவென்னுங்கன்னி மதிமுகத்தாற சுவைக்க, வான்மகிழிற் றாரகைமலர் பூத்தனவென்றார். [இது உருவகத்தை அங்கமாகக் காண்ட பொருட்டற் குறிப்பணி.]

(க-து.) இரவாகிய பெண்ணானவள் சந்திரனாகிய முகத்தைக்கொண்டு கிரணமாகிய மதுவைக் கொப்புளிக்கச், சிறப்புற்ற வாகாயமாகிய மகிழமரங்கள் பூத்தனபோலும் நட்சத்திரங்களுதயமானது எ-ம் 9

நள்ளிருட்குறும்பெறிந் தெழுநளிர்மதிச்செல்வன்
விள்ளுமாம்பல்வாய்க்கங் குலாந்தெரிவைமையல்வேட்ப
வள்ளிவான்மகள்சிதறு வெண்பொரிவனமமைந்த
புள்ளிமீனினமகலிருவிசும் பினிற்பொடித்த

(இ-ள்.) அமைந்த-நிறைந்த, புள்ளி-பொறிகளாகிய, மீனினம் தாரகைகளுடைய கூட்டங்களானவை, நள்-மிக்க, இருள்-இருளாகிய, குறும்பு-குறுநில மன்னனை, எறிந்து-அழித்து, எழு-தோன்றிய, நளிர் - குளிர்ச்சிபொருந்திய, மதி-சந்திரனாகிய, செல்வன்-அரசிளங் குமரனானவன், விள்ளும்-மலர்கின்ற, ஆம்பல்-செவ்வல்லிப்பூவாகிய, வாய்-வாயையுடைய, கங்குலாம் இரவாகிய, தெரிவையை - மங்கையை, வேட்ப - மணஞ்செய்ய, வான் - ஆகாயமாகிய மகள்-மாதானவள், அள்ளி-கைகளாலள்ளி, சிதறு-இறைத்த, வெண்பொரி

யுன-வெள்ளிய பொரிகளைப்போல, அகல்-அகன்ற, இருவிசும்பினில்-பெரியவாகாயத்தின்கண், பொடித்த-தோன்றின, எ-று.

மணமுதலிய செய்யும்போது பொரிஇறைத்தல் விதியென்பது விவாககற்பத்திற் சொல்லப்பட்டது. [இதுவும் அவ்வணி.]

(க-து.) சந்திரன் இரவென்னும் பெண்ணை மணஞ்செய்ய, ஆகாயமென்னும் பெண்ணானவள் அள்ளித்தூவிய பொரிகளைப்போல நட்சத்திரங்க ளுதயமாயின எ-ம். 10

திங்கள்வேந்துவெண்டாரகைத் துணைவியர்செறிக
வங்கண்வானகத்தெழுதலு மாரமுதுகுக்கும்
பொங்குவெண்கதிர்வெள்ளியம் பிரம்புபார்போர்த்த
துங்கவல்லிருட்குறுநில வேந்தினைத்துரந்த.

(இ-ள்.) திங்கள்-சந்திரனாகிய, வேந்து-அரசனானவன், வெண்டாரகை-வெள்ளிய உடுக்களாகிய, துணைவியர்-மனைவியர், செறிய-தன்னோடு நெருங்கிவர, அங்கண்-அழகிய விடத்தையுடைய, வானகத்து-ஆகாயத்தின்கண், எழுதலும்-தோன்றியவளவில், ஆர்-நிறைந்த, அமுது-அமிர்தத்தை, உகுக்கும்-சிந்துகின்ற, பொங்கு-மிகுந்த, வெள்-வெள்ளிய, கதிர்-கிரணங்களாகிய, வெள்ளியம்பிரம்பு-வெள்ளிப்பிரம்புகளானவை, பார்-பூமியை, போர்த்த-மூடிய, துங்கம்-உயர்ச்சியுள்ள, வல்-வலிய, இருள்-இருளாகிய, குறுநிலவேந்தினை-குறுநிலமன்னனை, துரந்த-துரத்தின, எ-று. இம்-சாரிசை.

திங்களெழ அவனது கிரணத்தால் இருணீங்கினதென்பார்; கதிர்வெள்ளிப்பிரம்பு இருளைத் துரந்தவென்றார். [சந்திரனில் வேந்தனையும், கிரணத்திற் பிரம்பினையும் இருளிற் குறுநில்மன்னனையும், ஆரோபித்தலால், உருவக வணியாம்.]

(க-து.) சந்திரனாகிய வரசன் நட்சத்திர மனைவிகளோடு வானத்திலுதித்தவளவில், அவன் கிரணமாகிய பிரம்புகள் இருளாகிய குறுநிலவரசனைத் துரத்தின எ-ம். 11

தாழும்வண்டிமிர்தண்மலர்த் தடஞ்சினைத்தருவி
னீழலெங்கணுந்துயல் வருகின்றன நெடுநீ
ராழிவெண்டிரைமுகட்டெழு மவிர்மதிக்கதிர்வாள்
போழும்வல்லிருட்டுணி பலபதைப்பன போலும்.

(இ-ள்.) வண்டிமிர்-வண்டுகளொலிக்கின்ற, தண்-குளிர்ச்சிபொருந்திய, மலர்-மலர்களையுடைய, தாழும்-தாழ்ந்த, தடம்-விசாலமுள்ள, சினை-கிளைகள் பொருந்திய, தருவின்-மரத்தினுடைய, நிழல்-நிழல்களானவை, எங்கணும்-எவ்விடத்தும், துயல்வருகின்றன-அசைகின்றன, நெடுநீர்-நெடிய நீரையுடைய, ஆழி-கடலினது, வெண்டிரைமுகட்டு-வெள்ளிய அலைகளினுடைய

வுச்சியில், எழும்-தோன்றும், அவிர்-காந்திபொருந்திய, மதி-சந்திரனானவன், கதிர்வாள்-கிரணங்களாகிய வாளினாலே, போழும்-பிளக்கப்பட்ட, வல்-வலிய, இருள்-இருளினது, துணி-துண்டங்கள், பல-அநேகம், பதைப்பனபோலும்-பதைப்பனவற்றையொக்கும் எ-று.

தாழுஞ்சினையென முடிக்க. [நிலவினிற் காற்றினா லலைகின்ற மரத்தினிழல் நிலத்திலசைவதில், வெட்டுப்பட் டுயிரிழக்கும் இருளின்பதைப்பைக் குறித்தலால்; தற்குறிப்பணியாம்.]

(க-து.) தருக்களினிழல்க ளசைதன எவைபோலவெனின், சந்திர கிரணங்களென்னும் வாட்களால் வெட்டுப்பட்ட இருட்டுண்டங்கள் பதைப்பன போலாம் எ-ம். 12

செருவின்மாண்டவரரம்பையர்ச் சேர்குவரன்றே
பொருவில்வெண்மதி பொழிகதிர்வாளினாற்போழ்ந்த
விருளுமின்னகிற்கொழும் புகையுருவெடுத்தெழில்சே
ரரமடந்தையர்கருங்குழற் கற்றைசென்றடைந்த.

(இ-ள்.) செருவில்-போரின்கண், மாண்டவர்-இறந்தவர், அரம்பையர்-அரம்பையரை, சேர்குவர்-அடைகுவர், அன்றே-அன்று, பொருவில்-ஒப்பில்லாத, வெண்மதி-வெள்ளிய சந்திரனானவன், பொழி-பொழிகின்ற, கதிர்-கிரணமாகிய, வாளினால்-கத்தியினால், போழ்ந்த-வெட்டப்பட்ட, இருளும்-அந்தகாரமும், இன்-இனிய, அகில்-அகிற்கட்டைகளினது, கொழும்புகை - கொழுமிய தூபத்தினது, உருவெடுத்து-வடிவெடுத்து, எழில்சேர்-அழகுபொருந்திய, அரமடந்தையர்-தெய்வமங்கையருடைய, கரும்-கரிய, குழற்கற்றை-மயிர்முடியை, சென்று-போய், அடைந்த-சேர்ந்தன எ-று.

[முற்கூறப்பட்ட பொதுப்பொருளாற் பிற் கூறப்பட்ட சிறப்புப்பொருள் சாதிக்கப்படுதலால், வேற்றுப்பொருள் வைப்பணியாம்.]

(க-து.) போரின்மாண்டவ ரரம்பையரைச் சேர்குவர்; ஆகையால் சந்திர கிரணவாளால் வெட்டப்பட்ட விருட்களும் அகிற்புகை வடிவெடுத்தரம்பையரின் கூந்தல்களை யடைந்தன எ-ம். 13

களிகொள்வண்டினமாம்பல் சேர்ந்திசைபயில்காட்சி
யொளிரும்வெண்மதிதூரத் தனுடைந்தகாரிருள்போ
யளியின்மெல்லுருவெடுத்தனருந்துணைவியர்பா
லெளிமையின்னுரைாயிரக்கி வீழ்ந்திசைப்பனவியையும்

(இ-ள்.) களிகொள் - மகிழ்ச்சியைக்கொண்ட, வண்டினம்-வண்டுக்கூட்டங்கள், ஆம்பல்சேர்ந்து-அல்லிமலர்களையடைந்து, இசைபயில்-இராகத்தைப் பாடுகின்ற, காட்சி-தோற்றமானது, ஒளிரும்-விளங்காநின்ற, வெண்மதி-வெள்ளிய சந்திரனானவன், தூரத்தலும்-துரத்தியவளவிலே, உடைந்த-சிதை

ந்த, காரிருள்-கரியவிருளானது, போய் (தன்னுருவு) நீங்கி, அளியின்-வண்டு களுடைய, மெல்லுருவெடுத்து-மெல்லிய உருவங்கொண்டு, அவன்-அச்சந்திர னுடைய, அரும்-அருமையாகிய, துணைவியர்பால்-மனைவியரிடத்து, எளிமை-எளிமையாகிய, இன்னுரை-இனியசொற்களை, இரங்கி-புலம்பி, வீழ்ந்து-அடி பணிந்து, இசைப்பனவியையும்-சொல்வனவற்றை யொக்கும் எ-று.

ஒருவரா லிடுக்கணுற்றவர் றங்குறை முடித்தற்கு நினைத்து, அவன்நட்பாளார் முதலியோரினும் அவனுயிர்த் துணைவியரை யடுக்கின் எளிதின் முடிப்பரென்பது தோன்ற, அவனருந்துணைவியர்பா லெளிமையின்னுரையிரங்கி வீழ்ந்திசைப்ப னவியையும் என்முர். [வண்டினிசையை இருளின் வேண்டு கோளாகக் குறித்தலால், தற்குறிப்பணியாம்.]

(க-து.) அல்லிமலர்களில் வண்டுகள்சேர்ந் திசைபாடுங் காட்சியானது, சந்திரன் றூரத்தியவளவில் சிதைபட்ட விருட்களானவை வண்டுருக்கள் கொண்டு அச்சந்திரன் மனைவியரிடத் திரங்கிச் சொல்வன போலுமிருந்ததுஎ-ம். 14

முன்னரைச்செழுமுளரியு முருகுகொப்புளிக்கு
மள்ளலங்கயத்தாம்பலு முறவெனவறிந்தேங்
கள்ளுலாமலர்முகிழ்த் தவக்கடிமலர்க்கமலக்
பிள்ளைவண்டினுக்கூறு தேன்பெரிதளித்ததனுல்.

(இ-ள்.) கள்ளுலாம் - தேனெழுகின்ற, மலர்-அல்லிப்பூவானது, முகிழ்த்த-குவிந்த, அக்கடிமலர்க்கமலம்-அப்படிப்பட்ட வாசனையுள்ள தாமரை மலரினது, பிள்ளைவண்டிக்கு-பிள்ளையாகிய வண்டுக்கு, ஊறு-சுரக்கின்ற, தேன்-தேனை, பெரிது-மிகவும், அளித்ததனுல்-கொடுத்ததனுல், அள்ளள்-சேற்றையுடைய, அம்-அழகிய, கயத்து-கயத்திலுள்ள, முள்-முட்களையுடைய, அரை-தாள்பொருந்திய, செழு-செழிய, முளரியும்-தாமரைப்பூவும், முருகு-தேனை, கொப்புளிக்கும்-உமிழ்கின்ற, ஆம்பலும்-அல்லிப்பூவும், உறவென-தம்முளுறவுடையனவென்று, அறிந்தேம்- (நாம்) அறிந்துகொண்டோம் எ-று.

தாமரையின் பிள்ளையாகிய வண்டினுக்கு அல்லி தேனைக்கொடுத்தலால், மலர்கின்ற காலவேற்றுமைபற்றிப்புறத்தே பகையுடையனபோலத் தோன்றினும் அகத்தே நட்புடையன வென்பார்; உறவென வறிந்தேம்-என்முர். [முளரியும் ஆம்பலும் உறவென வறிந்தேமெனலால், தற்குறிப்பணியும்; இவ்வாக்கியப்பொருள் கமலப்பிள்ளையாகிய வண்டினுக்கு அல்லி தேனளித்ததென்னும் பின் வாக்கியப்பொருளாற் சாதித்தலால் செய்யுட் குறிப்பணியுமாம்.]

(க-து.) அல்லிமலர்களானவைதாமரைகளிலுள்ள வண்டுகளுக்குத் தேன் கொடுத்தமையால், இரண்டு முறவென் றறிந்தோம் எ-ம். 15

கங்குலெய்தியகாரிருட் கருங்கடறெளியத்
திங்களென்கடர்த்தேற்றினுற் றேற்றலுஞ்சிறந்து

பொங்குவெண்ணிலாத்தெளிந்த நன்னீரெனப்பொலிந்த
பங்கமென்னநீடருநிழல் படியினிற்படிந்த.

(இ-ள்.) கங்குல்-இரவில், எய்திய-அடைந்த, கார்-கரிய, இருள்-இருளாகிய, கருங்கடல்-கரிய கடலானது, தெளிய-கலக்கந்தீர, திங்களென் - சந்திரனென்னும், சுடர்-காந்தியையுடைய, தேற்றினல்-தேற்றும் வித்தினலே, தேற்றலும்-உரைத்துத் தெளிவித்தவளவில், சிறந்து-சிறப்புப்பெற்று, பொங்கு-விளங்குகின்ற, வெண்ணிலா-வெள்ளிய சந்திரிகைகள், தெளிந்த-தெளிவையடைந்த, நன்னீரென-நல்லநீர்போல, பொலிந்த-பொலிவையடைந்தன, நீள்-நெடிய, தருநிழல்-மரங்களுடைய நிழல்களானவை, படியினில்-பூமியின்மேல், பங்கமென்ன-சேறுபோல, படிந்த-படிந்தன எ-று.

[இருளில் கடலையும், திங்களில் தேற்றுவித்தையும் ஆரோபித்தலால், உருவகவணியும்; நிலாநன்னீரெனத் தருநிழல் பங்கமென்னவென்றலால், உவமையணியுமாம்.]

(க-து.) இருட்கடலானது தெளியச் சந்திரனென்னுந் தேற்றும் வித்தினலே உரைத்துத் தெளிவித்தவளவில், அவன்கிரணங்களே நீர்போலிருந்தன தருக்களி னிழல்களானவை சேற்றைப்போ லிருந்தன எ-ம். 16

அகல்விசும்பெனுமாவின் மென்மடியெனத்தோன்றித்
திகழும்வெண்மதியுமிழ்தரு செழுங்கதிர்த்தீம்பான்
முகைநெகிழ்ந்துதேன்பிலிற நியமுல்லையம்புறவி
னுகள்புளிற்றிளங்கன்றெனச் சகோரநின்றுண்ணும்

(இ-ள்.) அகல்-அகன்ற, விசும்பெனும்-ஆகாயமென்கின்ற, ஆவின்-பசுவினது, மெல்-மெல்லிய, மடியென-மடியைப்போல, தோன்றி-உண்டாகி, திகழும்-விளங்காநின்ற, வெண்மதி-வெள்ளிய சந்திரன், உமிழ்தரு-சொரிகின்ற, செழும்-செழிய, கதிர்-நிலாவாகிய. தீம்-மதுரம்பொருந்திய, பால்-பாலை, முகை அரும்புகள், நெகிழ்ந்து-விரிந்து, தேன்-தேனை, பிலிற்றிய-துளித்த, முல்லை-முல்லைக்கொடியையுடைய, அம்-அழகிய, புறவின்-முல்லை நிலத்தின்கண், சகோரம்-சகோரப் பறவையானது, உகள்-துள்ளுகின்ற, புனிற்றிம்-மிகுந்தவிளமையையுடைய, கன்றென-கன்றுபோல், நின்று-நிலைபெற்று, உண்ணும்-குடிக்கும் எ-று.

[ஆகாயத்திற் பசுவினையும்-சந்திரனில் மடியையும்-நிலவினிற் பாலையும் ஆரோபித்தலால், உருவகவணியும்; சகோரங்கன்றென வெனலால், உவமையணியுமாம்.]

(க-து.) ஆகாயமென்னும் பசுவினது மடியாகத்தோன்றுஞ் சந்திரனது கிரணமாகியபாலை, முல்லைநிலத் திளங்கன்றைப்போற் சகோரங்களுண்ணும்.

நன்கமைந்தசாளரத்துறு நகைநிலாக்கொழுந்தை
யன்பினீடுகூர்வாயினுற் சகோரங்களருந்தன்

மின்செய்வெள்ளிவெண்கம் பியைவிளங்குநூலச்சிற்
பொன்செய்கம்மியர்குறட்டி னல்வாங்குதல்போலும்.

(இ-ள்) நன்கமைந்த-அழகுபொருந்திய, சாளரத்து-பலகணியினுள், அறு அடைகின்ற, நகை-ஒளிபொருந்திய, நிலாக்கொழுந்தை-சந்திரனுடைய கிரணங்களை, அன்பின்-ஆசையோடு, நீடு-நீண்ட, கூர்வாயினுல்-கூரியவாயினுல், சோரங்கள்-சகோரப்பறவைகள், அருந்தல்-உண்ணுதல், மின்செய்-காந்தியைச்செய்கின்ற, வெள்ளி-வெள்ளியினுலாகிய, வெண்கம்பியை (மாட்டி) விளங்கு-விளங்காநின்ற, நூலச்சில்-கம்பியச்சென்னும் கருவியில், பொன்செய் கம்மியர்-பொன்வேலை செய்யுங் கம்மாளர், குறட்டினுல் - குறட்டினுற்பற்றி, வாங்குதல்போலும்-இழுத்தலையொக்கும், எ-று.

நூல்போல் வெள்ளிக்கம்பியைச்செய்தலாற்,கம்பியச்சை நூலச்சென்றார். [இது உவமையணி.]

(க - து.) பலகணியுட்பொருந்துஞ் சந்திரகிரணங்களைச் சகோரங்களுண்ணுதல் எதுபோலெனின், பொற்கொல்லர் வெள்ளிக்கம்பியைக் கம்பியச்சிற் குறட்டால் இழுத்தல்போலும் எ-ம். 18

துலங்குவெண்மதித்தூநி லாக்கதிரினின் றிலங்கு
பொலங்கொண்மாடமேற் புதுநிலாமணிபுனல்பொழித
னலம்பெய்நேமியம்புட்குலம்பிரிவுளநலியப்
புலம்புமாறுகண்டுள்ளநெக்குருகுதல்போலும்.

(இ-ள்·) துலங்கு-விளங்குகின்ற, வெண்மதி-வெள்ளியசந்திரன்து, தூ-பரிசுத்தமாகிய, நிலாக்கதிரில்-சந்திரிகையில், நின்று-நிலைபெற்று, இலங்கு-ஒளிர்கின்ற, பொலங்கொள்-அழகினைக்கொண்ட, மாடமேல்-உப்பரிகைமேற்பதித்த, புது-புதிய, நிலாமணி-சந்திரகாந்தங்கள், புனல்-நீரை, பொழிதல்-சொரிதலானது, நலம்பெய்-சுகத்தைத்தருகின்ற, நேமியம்புள்-சக்கரவாகப் பறவைகளது, குலம்-கூட்டத்தினது, பிரிவு-ஆண்பெண்களின் பிரிவானது, உளம்-அவற்றின்மனத்தை, நலிய-வருத்த, புலம்புமாறு அவைவருந்துந் தன்மையை, கண்டு (அச்சந்திரகாந்தங்கள்) கண்டு, உள்ளம்-தமதுள்ளம்,நெக்குருகுதல்போலும்-கரைந்துருகுதல்போலும் எ-று.

[நிலாமணி புனல்சொரிதலில் உள்ளநெக்குருகுதலைக் குறித்தலால், தற்குறிப்பணியாம்.]

(க-து.) சந்திரகிரணங்களால் சந்திரகாந்தம் நீரைப்பொழிதலானது. சகோரங்கள் பிரிதலைக்கண் டுருகுதல்போலும் எ-ம். 19

இன்னகாரிருட்கங்குனுங்கெல்லைகாண்கில்லாய்க்
கன்னலஞ்செழுங்கழனிசூழ் விதர்ப்பநாட்ளிக்கு

மன்னர்மன்னவ னருந்தவப்பெற்றினால்வந்த
பொன்னவாஞ்சுணங் கணிமுலைப்பூங்கொடி புலம்பும்.

(இ-ள்.) கன்னல் - கரும்புகளையுடைய, அம் - அழகிய, செழும் - செழுமையுள்ள, கழனிசூழ் - வயல்கள்சூழ்ந்த, விதர்ப்பநாடு-விதர்ப்பதேசத்தை அளிக்கும்-காக்கின்ற, மன்னர்-மன்னவன்-அரசர்க்கரசனாகிய வீமனது, அருந்தவப்பேற்றினால்-அரியதவப்பலத்தினால், வந்த- தோன்றிய, பொன்னவாம்-பொன்விரும்புகின்ற, சுணங்கணி-தேமலணிந்த, முலை - தனத்தினையுடைய, பூங்கொடி-மலர்க்கொடிபோல்பவளாகிய தமயந்தி, இன்ன - இத்தன்மைத்தாகிய, காரிருள்-கரியவிருளையுடைய, கங்குலுக்கு - இரவிற்கு, எல்லைகாண்கிலளாய்-அளவுகாணாதவளாகி, புலம்பும்-புலம்புவாள் எ-று.

"அகமெய்ப்பாடே யறையுங்காலை-விளர்ப்பேபசப்பே மெலிவே விதிர்ப்பே-துளக்கந் துயர்தல் தும்மல் சோர்தல் - வியர்த்தல் வெருவுதல் விம்முதல் விரும்புதல்-ஒப்பிலாமை யுருகுதன் மயங்குதல் - மூரியுயிர்ப்பு மூர்ச்சனை முறுவல், காரிகைகிடத்தல் கழிநண்ணோட்ட-மிருந்தழியராமை யாரமிழ்கமழ்தல் வருந்திக்காட்டுதல் வாய்நனியுறுதல் - சிந்தனைகூர்தல் சேர்துயிலின்மை-கண்டதுமறுத்தல் காட்சிவிரும்ப, லுண்டிவிரும்பாமை யுரைத்ததுமறுத்தல்-கண்ணீர்வழித்தல் கனவுநனிகாண்டலென - வெண்ணாற்றறையு மென்மனார்புலவர்" இவ்விதியாற்புலம்புவாள் என்க.

(க-து.) தமயந்தியானவள் இவ்விராக்காலத்தளவு காணாதவளாய்ப்புலம்புதலுறுவாளாயினாள் எ-ம். 20

நிலாத்தோற்றுப்படலம் முற்றுப்பெற்றது.

---

# சந்திரோபாலம்பனப்படலம்

இப்படலத்தால் மேலுதித்தசந்திரனை விரகநோய்கொண்ட தமயந்தியானவள் நிந்தித்தல் சொல்லப்படுகின்றது.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

விரிதெண்டிரைநீர்க்கருங்கடல் வான்முகட்டிலெழுதவெடிங்காண்
மருவுதிரைநீர்ச்சுவற்றுசிகைவடவை யிடத்தோமைவிளர்ப்பக்
கருகுங்கொடியவெவ்விடத்தின் கண்ணோதணந்தாருயிர்பருக
வெரிவெங்கதிரா னுடல்வெதுப்ப யாண்டுக்கற்றுயறிபேமால்.

(இ-ள்.) விரி - விரிந்த, தென் - தெள்ளிய, திரை-அலைகளையுடைய, நீர்-நீரையுள்ள, கருங்கடல்-கரியகடலினது, வான்-உயர்ந்த, முகட்டில்-உச்சியில்,

எழுந்த-உதயஞ்செய்த, வெண்டிங்காள்-வெள்ளியசந்திரனே, தணந்தார்-பிரிந்தவர்களுடைய, உயிர்பருக உயிரைக்குடிக்க, எரி - எரிகின்ற, செங்கதிரால் - வெவ்வியகிரணததினால், உடல்வெதுப்ப-உடலைச்சுட, மருவு-பொருந்துகின்ற திரைநீர் - அலையையுடைய நீரினே, சுவற்று-சுவறச்செய்கின்ற, சிகை-கொழுந்தினையுடைய, வடவைபிடததோ-வடவைத்தீயிடத்தோ, மைவிளர்ப்ப-அஞ்சனமும்வெள்ளிதாக, கருகும்-கருகிய, வெவ்விடத்தின் கண்ணோ-வெவ்வியவிடத்தினிடத்தோ, யாண்டுக்கற்றாய் (இவ்விரண்டினுள்) எதனிடத்துக் கற்றுக்கொண்டாய், அறியேம் (யாம்) அதனை-அறிந்திலேம் எ-று. ஆல்-அசை.

திஙகளென்பது உயர்திணைப்பெயராதலில், திஙகாளென விளிததற்கணீற்றயனீண்டது. மைவிளர்ப்பவென்பதில், உயர்வு சிறப்பும்மைதொக்கது. கடலினிடத்து வடவைத்தீயும் விடமுந்தோன்றுதல்பற்றி, அதிற்றோன்றிய சந்திரனுக்கு அவற்றினிடத்தில் கற்றுக்கொள்ளுதல் சொல்லப்பட்டது. அவனது கதிர்தண்ணியவாயிருந்தும் பிரிந்தவரைச சுடுதல்பற்றி, எரிவெங்கதிரெனப்பட்டது. அறியேமென்பது, தன்போலியோரையுந் தன்னுடன்படுத்துக் கூறிய உளப்பாட்டுத் தன்மைப்பன்மைமுற்று. [வடவையினிடத்தோவிடத்தின் கண்ணோவெனலால், ஐயவணியும்; அறியேமெனலால், தற்சுறிப்பணியுமாம்.]

(க-து.) சந்திரனே - வெவ்வியகிரணஙகளாலே பிரிந்தவருடலைச்சுட வடவாமுகாக்கினியிடத்துக் கற்றாயோ, விஷத்தினிடத்துக்கற்றாயோ, எவ்விடத்திற் கற்றாய் எ-ம். 1

செய்யகமலமலர்கூம்பச்சேர்ந்தகொடியவெண்டிங்காள்
வெய்யகதிர்வாள்வீசியுயிர்வீட்டியதனாற்புகழ்பெறுக
பொய்யிறவத்தினிற்பயந்தபுணரிவேந்தின்குலம்வாழ்க
மையல்கூரென்றனைநாளும்வருத்தாதொழிதல்வேண்டுமால்.

(இ-ள்.) செய்ய-சிவந்த, கமலமலர் - தாமரைப்பூக்களானவை, கூம்ப-குவிய, சேர்ந்த-அடைந்த, கொடிய-கொடுமைபொருந்திய, வெண்டிங்காள்-வெள்ளியசந்திரனே, மையல்கூர் - மயக்கமிகுந்த, என்றனை-என்னை, நாளும்-எந்நாளும், வருத்தாது-வருத்தஞ்செய்யாமல், ஒழியல்வேண்டும்-தவிரல்வேண்டும் வெய்ய-வெவிய, கதிர்வாள்வீசி-கிரணமாகியவாளைவீசி, உயிர்வீட்டி - என்னுயிரைக்கொன்று, அதனால் - அக்கொலைத்தொழிலினாலே, புகழ்-கீர்த்தியை, பெறுக-பெறக்கடவாய், பொய்யில்-பொய்தவிர்ந்த, தவத்தின் தவத்தினால், நிற்பயந்த-உன்னைப் பெற்ற, புணரிவேந்தின்-கடலரசனுடைய, குலம்-குரபு, வாழ்க-வாழக்கடவது எ-று.

பலநாளுந் துன்பப்படுதலில் இறத்தல் ஒருநாளைத் துன்பமென்பாள், உயிர்வீட்டியதனாற்புகழ்பெருகவென்றாள். "சாத, லொருநாளொருபொழுதைத் துன்பமவைபோ, லருநவையாற்றுதலின்று" என்றார்பலநம். நீ புகழ்பெறுக-நின்குலம்வாழ்க-என்னுளேனும், நீ நிந்தைவடைக - நின்குலங்கேடடைக-என்

பது கருத்து. "புற மெய்ப்பாட்டேதிறனுளிப் புகலி - லாரணங்காயவக் காமந் தானே-காரணம்பற்றிக்கருத்துவேறுபட்டு - மற்றுமோரேழாய்மெய்க்கண்டது ஒனுடு-மெட்டாமென்பரியல்புணர்ந்தோரே" இவ்விதியால் ஆரணங்காகியது வருத்தம்; இதையுற்றுணர்க. [வருத்தாது உயிர்வீட்டிப்புகழ்பெருக வெனப் பொருள்படலால், வஞ்சப்புகழ்ச்சியணியாம்.]

(க-து.) கொடுமையுள்ள சந்திரனே-என்னை வருத்தாதொழிவாயாக. கிரணவாளால்வெட்டிப் புகழ்பெறுவாயாக. உன்னைப்பெற்ற வருணராஜன் குலமும்வாழ்க எ-ம். 2

விரவுகரியகூரிருள்வாய்வெய்யோனென்னக்கதிர்பரப்பி
மருவுகொழுநர்ப்பிரிந்தாரைவருத்தாநிற்குமாமதியே
திரைசெய்கடல்பொன்னுருக்கியபோற்செங்கேழெய்தப்புலரியெழு
மிரவிகதிராற்சவிமழுங்கியிருத்தல்யானேகாண்குவனால்.

(இ-ள்.) விரவு (உலகமெங்கணும்) கலந்த, கரிய-கறுத்த, கூரிருள்வாய்-மிக்கவிருளினிடத்தில், வெய்யோனென்ன-சூரியனென்றுசொல்ல, கதிர்-கிரணங்களை, பரப்பி-விரித்து, மருவு - தம்மை மணந்த, கொழுநர்ப்பிரிந்தாரை-தலைவரைப்பிரிந்த மாதரை, வருத்தாநிற்கும்-வருத்துகின்ற, மாமதியே - பெரிய சந்திரனே, திரைசெய்-அலைகளை உண்டாக்குகின்ற, கடல்-கடலானது, பொன்னுருக்கியபோல்-பொன்னையுருக்கியதுபோல், செங்கேழெய்த-செந்நிறமுடைய, புலரி-விடியற்காலத்தில், எழும்-எழுகின்ற, இரவிகதிரால்-சூரியகிரணத்தினால், சவிமழுங்கி - ஒளிகெட்டு, இருத்தல் - இருக்கையை, யானே - நானே, காண்குவன்-பார்ப்பேன எ-று.

உருக்கிய து-உருக்கியவெனக்கடைகுறைந்தது. ஒருவர்க்குத் தீங்கிழைப்பவர் அவர்கண்முன்னே கேடுறுவரென்பது கருத்து. [வெய்யோனென்ன வென்றதனால், உவமையணியும்; கடல்பொன்னுருக்கியபோ லென்றதனால், தற்குறிப்பணியுமாம்.]

(க-து.) மகிழ்நரைப்பிரிந்த மாதரை வருத்துகின்றசந்திரனே-நீ சூரியகிரணத்தால் ஒளிமழுங்கி இருத்தலை யானேகாண்பேன் எ-ம். 3

கன்றுகுணிலாக்கனியுகுத்தோன் கடலினமுதங்கடைந்தெடுப்ப
குன்றமிடலுங்கலையனைத்துந் தகர்ந்துள்ளாவிகுறைந்திலையே
துன்றுகதிர்வெண்கலைமதியேசலவு திரைநீர்க்கடல்குடித்த
வன்றுகலசமுனிவயிற்றி லற்றுயென்னிலழலாயே.

(இ-ள்.) துன்று-நெருங்கிய, கதிர்-கிரணங்களையுடைய, வெள்-வெள்ளிய கலைமதியே-கலைகளையுடைய சந்திரனே, கன்று - பசுவின்கன்றை, குணிலா-குறுந்தடியாகக்கொண்டு, கனி-விளங்கனியை, உகுத்தோன் - உதிர்த்த நாரண

ஞனவன். கடலின்-பாற்கடலிலே, கடைந்து-மதித்து, அமுதம்-அமிர்தத்தை, எடுப்ப-எடுத்தல்வேண்டி, குன்றம்-மந்தரமலையை, இடலும்-இட்டவளவில், கலையனைத்தும் - பதினாறுகலைகளும், தகர்ந்து - உடைந்து, உள்ளாவி-உள்ளேயிருக்கின்ற உயிர், குறைந்திலே-நீகுறைந்தாயில்லை, கடல்-கடலினுடைய சலம்-சுழல்கின்ற; திரை-அலைகளையுடைய, நீர்-நீர்முழுவதையும், குடித்த-பானம்பண்ணின, அன்று - அந்நாளில், கலசமுனி - அகத்தியமுனிவருடைய, வயிற்றில்-வயிற்றினிடத்தில், அற்றாயென்னில்-நீ சீரணித்தாயானல், அழலால் (இன்று) சுடமாட்டாய் எ-று.

கண்ணன் கன்றுமேய்த்துக் கொண்டிருந்தபோது அவனை வஞ்சித்துக் கொல்லும்படி கன்றினுருக்கொண்டிருந்த அசுரனைக்குறுந்தடியாகக்கொண்டு விளவினுருக்கொண்டிருந்த அசுரனை அவ்விளங்கனி பெறிதல்போலவடித்து அவ்விருவரையுங் கொன்றானென்பதைப். பாகவதத்துட்காண்க. அப்படி உருமாறிவந்தபகைவரையுங்கொன்ற சூழ்ச்சியுடைய நாரணன்கடலிலே மந்தரமலையிட்டுக்கடைந்தும், தன உதராக்கினியில் வாதாவியைச்சீரணிக்கச்செய்த அகத்தியமுனி கடலைநீரோடுண்டும், நசியாமலிருப்பது எனது தவக்குறையென்பது கருத்தாகக்கொள்க.

(க-து) வெள்ளியசந்திரனே - திருமாலானவர் திருப்பாற்கடலி லமுதங்கடைந்தெடுக்க மந்தாமலையை விட்டவளவில் கலைகள் கெட்டாவிகுறைந்திலே. அந்நாளில் கடலைக்குடித்த அகத்தியர்வயிற்றிற் சீரணித்தாயெனனில் என்னைச்சுடாய் எ-ம். 4

மட்டுவிரியுமலர்வாளிவருந் துந்தமியேனுயிர்சோரப்
பட்டபுழையிலழலுமிழுங்கதிர்கள் சுருக்கிப்பார்வேந்தி
னெட்டுவரையுமிகழ்ந்துபொலங் கிரியோடிகலுமிருதடந்தோ
டொட்டகதிர்மென்காத்தாலென் னுடலந்தொடுவாய்சுடர்திங்கள்.

(இ-ள்.) சுடர்த்திங்காள்-ஒளியையுடையசந்திரனே (நீ) வருந்தும் - (விரகத்தினல்) வருந்துகின்ற, தமியேன்-தமியேனாகியவென்னுடைய, உயிர்சோர-ஆவிசோர, மட்டுவிரியும்-தேனொழுகுகின்ற, மலர்வாளி-மலர்ப்பாணங்கள், பட்ட-தைத்த, புழையில்-துவாரத்தால். அழலுமிழும்-அக்கினியையுமிழ்கின்ற, கதிர்கள்-கிரணங்களை, சுருக்கி-அடக்கிக்கொண்டு, பார்வேந்தின்-புவிக்கரசனாகிய நளமகாராஜனுடைய, எட்டுவரையும் - அட்டகுல கிரிகளையும், இகழ்ந்து-இகழ்ச்சிசெய்து, பொலங்கிரியோடு-மேருமலையுடனே, இகலும்-பகைக்கின்ற இரு-இரண்டாகிய, தடந்தோள்-பெரியபுயங்களை, தொட்ட-தீண்டிய, கதிர்-கிரணங்களாகிய, மென்கரத்தால்-மெல்லியகிரணங்களால், என்னுடலம்-என்னுடையதேக முழுவதையும், தொடுவாய்-தீண்டுவாயாக எ-று.

மேருமலை எல்லாமலைகளினும் பெரியதாயும் அட்டகுலவரைகள் அதனிற்பசிறியவாயும் நிற்றலால், நளன் புயங்கள் இகலுமென்றும் இகழ்ந்தென்றுங்

அருவமாயு மென்னுவி பதைத்துளம்
வெருவுமாறு வினைசெயும் வேனிலான்
கருமிடற் றிறைகண்ணி லெரிந்திடா
துருவமெய்தி னுலகமு முய்யுமே.

(இ-ள்.) அருவமாயும்-அருவமடைந்தும், என்-என்னுடைய, ஆவி பதைத்து-உயிர்பதைத்து, உளம்-மனம், வெருவுமாறு-பயங்கொள்ளும்படி, வினைசெயும்-மலர்க்கணைகளைத் தொடுக்கின்ற, வேனிலான்-வசந்தகாலத்திற் குரிய மன்மதனானவன், கருமிடற்றிறை-நீலகண்டத்தையுடைய பரமசிவனது, கண்ணில்-நெற்றிக்கண்ணில், எரிந்திடாது-எரிந்திடாமல், உருவமெய்தில்-வடிவத்தை ப் பெற்றிருப்பானுனால், உலகமும்-உலகமும், உய்யுமே-பிழைக்குமா, எ-று.

உலகமென்ப துயர்ந்தோர் மாட்டேயென்பவாகலின், இங்கே உலகமென்றது சிதேந்திரியராகிய முனிவரை யெனக்கொள்க. "இறையே யீசன்முற்றறிவனோர்முதலே" என்பதனாலறிக. சரீரமில்லாதிருக்கும்போதும்இவ்வளவு துன்பஞ்செய்கின்றவன் மற்றவீரர்கள்போலச் சரீரமுண்டா யிருக்குமாயின் சிதேந்திரியரென்பதில்லாமற் போய்விடுமென்பாள், உருவமெய்தி னுலகமு முய்யுமே என்றாள்.

(க-து.) அருவமடைந்திருந்தும் என்னுவிபதைக்க வம்பெய்யு மன்மதனானவன் உருவமடைந்தா லுலகம் பிழைக்குமா என்றாள், எ-ம். 7

விரிந்தவேணி விமலன் வெகுளியா
லெரிந்துளாரிற் பிழைத்தவர் யாவரே
கரிந்தவேள் பிழைத்தெய்வது கன்னியர்
புரிந்த தீவினையின் புணர்ப்பாகுமே.

(இ-ள்.) விரிந்த-விரியப்பெற்ற, வேணி-சடையையுடைய, விமலன்-பரமசிவனது, வெகுளியால்-கோபத்தினால், எரிந்துளாரில் - எரிக்கப்பட்டவர்களிலே, பிழைத்தவர்-பின்னும் பிழைத்தவர்கள், யாவர்-எவர், கரிந்தவேள்-கரிந்துபோன மன்மதன், பிழைத்து-பின்னும்பிழைத்து, எய்வது - பாணங்களையெய்வது, கன்னியர்-மாதர்கள், புரிந்த-செய்த, தீவினையின் - பாவத்தினுடைய, புணர்ப்பாகும்-சம்பந்தமாகும், எ-று.

பரமசிவனுடைய வெகுளியால் எரிந்த திரிபுரர்முதலியோர் பின்னும் பிழைத்திலரென்க. [கன்னியர் புரிந்த தீவினையின் புணர்ப்பென்று மாதரைப் பழித்தலின் மிகவுங் கொடியனென மன்மதன் பழிப்புத் தோன்றுதலால், வஞ்சப் பழிப்பணியாம்.]

**(க-து.)** சிவன் கோபத்தாலெரிந்தவரிற் பிழைத்தவர் யாவர். மன்மதன் பிழைத்தெய்வது மாதர்கள்செய்த தீவினையின் சம்பந்தமாம் என்றாள் எ-ம். 8

சடிலமன்றுபைந்தார்சூழற்பின்னல்கார்
மிடறுதோன்றல்விடமன்றுநானமே
யுடல்விளர்ப்புவெண்ணீறன்றுருவிலா
யடர்வதென்னையரனலன்காண்டியால்.

(இ-ள்.) உருவிலாய்-வடிவமில்லாதமன்மதனே, அடர்வதென்னை-என்னுடன் போர்வதென்ன, சடிலமன்று-சடையன்று, பை-பசிய, தார்-பூமாலையையணிந்த, சூழல்-கூந்தலினது, பின்னல்-வேணி, கார்-கருமை, மிடறு-கழுத்தினிடத்தில், தோன்றல்-தோன்றுதல், விடமன்று - நஞ்சமன்று, நானமே-கத்தூரியாம், வெள்-வெள்ளிய, நீறன்று-விபூதியன்று, உடல்விளர்ப்பு-சரீரத்தினது வெண்ணிறமாம், அரனலன்-(ஆதலால்) பரமசிவனலன், காண்டி-(நீ) காண்பாயாக, எ-று.

மன்மதனுக்குந் தனக்கும் பகையின்மையால் அவன் தன்னை வருத்துதற்குக் காரணந் தன்னுடற்குறியால் அவன் பகைவனாகிய பரமசிவனென்று நினைப்பேயாகுமென் றெண்ணி அதனைச் சொல்லி யொழிந்தாளென்க. [கூந்தன்முதலியவற்றிற் சடிலமுதலிய பிராந்தியைக் கற்பித் தொழித்தலால், மயக்கவொழிப்பணியாம்.]

(க-து.) மன்மதனே - சடையல்ல, கூந்தலின்பின்னல். கண்டக்கறுப்பு விஷமல்ல, கஸ்தூரி. பூசும்வெண்ணீறல்ல. உடல்வெளுப்பு. நான்சிவனல்ல, என்னிடத்திலேன் போர்செய்கிறாய் என்றாள், எ-ம். 9

கொன்செய்வாளிகுளித்தசெய்புண்ணிடைத்
துன்பமெய்தத்தழல்சொரிந்தாலென
வன்பர்போலநின்றாரமிறைப்பரா
லென்செயாருயிர்த்தோழியரின்னுமே.

(இ-ள்.) உயிர்த்தோழியர்-உயிரையன்ன தோழியராயிருந்தவர்கள், அன்பர்போல-இப்பொழுதென்னிடத் தன்புடையவர்போல, நின்று-என்னைச்சூழ்ந்துநின்று, கொன்செய்-அச்சத்தைச் செய்கின்ற, வாளி-மன்மதபாணங்கள், குளித்த-தைத்த, செம்-சிவந்த, புண்ணிடை-புண்ணினிடத்திலே, துன்பமெய்த-யான்றுன்பத்தையடைய, தழல் சொரிந்தாலென-நெருப்பைச் சொரிந்தது போல, ஆரம்-சந்தனக்குழம்பை, இறைப்பர்-வீசுவார்கள், இன்னும்-இன்னமும், என்செயார்-யாதுசெய்யார்கள், எ-று.

இருந்தவரென்றும்-இப்பொழுதென்றும் - பொருளுக்கேற்பக் கூறப்பட்டன. [தோழியர்செய்யு முபகாரமாகிய குணத்தைக் குற்றமாகக் கூறலால், இலேசவணியாம்.].

(க-து.) தோழிமார்கள் மன்மதபாணம்பட்ட புண்ணிடத்துத் தீயைப்போலுஞ் சந்தனத்தையிறைக்கிறார்கள். இன்னு மென்செய்யமாட்டார்கள் என்றாள், எ-ம். 10

தேற்றுவார்சிலர்தேங்கமழ்வாசநீர்
தூற்றுவார்சிலர்தொல்குலதெய்வதம்
போற்றுவார்சிலர்பூண்முலைச்சாந்தினு
லாற்றுவாரினமழற்றுகின்றார்சிலர்.

(இ-ள்.) சிலர்-தோழிகளிற்சிலரானவர், தேற்றுவார்-தேறச் சொல்லுவார்கள், சிலர்-சிலரானவர், தேம்-வாசனையானது, கமழ்-மணக்கின்ற, வாசநீர்-பனிநீரை-தூற்றுவார்-வீசுவார்கள், சிலர்-சிலரானவர், தொல்-தொன்றுதொட்டாரதித்துவருகின்ற, குலதெய்வம்-குலதெய்வத்தை, போற்றுவார்-பிரார்த்தனைசெய்வார்கள், சிலர்-சிலரானவர், பூண்-ஆபரணத்தையணிந்த, முலை தனத்தின்வெப்பத்தை, சாந்தினால்-சந்தனக் குழம்பினால், ஆற்றுவாரின்-தணிப்பவர்களைப்போல, அழற்றுகின்றார்-வெப்பமிகச்செய்வார்கள், எ-று.

தேற்றுதலாவது-நின்னால் விரும்பப்பட்ட நாயகனை நீ பெறுவை, உன்றந்தையும் உன்விருப்பத்திற்கு மாறுசெய்யான், என்பனசொல்லி அவளுள்ளவருத்தத்தைப் போக்கல். தெய்வதம்போற்றுதலாவது-தாம்வழிபடுங் கடவுளைநோக்கி இவளுக்கிஷ்டஞ் சித்தியாகவுந் துன்பநீங்கவுமருள்செய்கவென்று வேண்டிக்கோடல்.

(க-து.) சிலர் தேற்றுவார். சிலர் பனிநீரை தூற்றுவார்கள். சிலர்குலதெய்வத்தைப் போற்றுவார்கள். சிலர் சந்தனத்தாலாற்றுவார்கள் போலச் சுடுகிறார்கள், எ-ம். 11

இன்னவாறுமகளிரியற்றவுங்
கன்னன்மாரன்கணையுயிரீரவும்
பொன்னின்வார்முலைமுத்தம்பொரிந்திடத்
தன்னையும்மறந்தாடமயந்தியே.

(இ-ள்.) இன்னவாறு-இவ்விதமாய், மகளிர்-தோழிகள், இயற்றவும்-உபசாரஞ்செய்யவும், கன்னல் - கருப்புவில்லேந்திய, மாரன் - மன்மதனுடைய, கணை-பாணங்கள், உயிர்-ஆவியை, ஈரவும்-பிளக்கவும்,பொன்னின்-பொன்னாற்செய்த, வார்-கச்சையணிந்த, முலை-தனங்களின் மீதிற்றரித்த, முத்தம் - முத்துக்கள் பொரிந்திட-நீறாகவும்,தமயந்தி-தமயந்தியானவள்,தன்னையுமறந்தாள்-தன்னையு மறந்துவிட்டாள், எ-று.

மன்மதபாணஞ்செய்கின்ற வெம்மையானது தோழியர்கள்செய்கின்ற சைத்திய உபசாரத்தினாலுந் தணியாமல் மூர்ச்சித்தாளென்க. இயற்றவும்-ஈரவும்-பொரியவும்-என்னு மெச்சங்கள், மறந்தாளென்னும் வினைகொண்டன.

(க-து.) இவ்வாறுபெண்கள்செய்யவும், மன்மதன் பாணமெய்யவும், முத்துக்கள் பொரிந்திடத் தமயந்தி தன்னையுமறந்தாள், எ-ம். 12

நாவிமென்குழனன்னுதற்றோழியர்
காவியங்கட்கதிர்முலைக்கன்னியைப்
பூவின்மெல்லணைசேர்த்திப்புடையிருந்
தாவியுண்டுகொலோவென்றழுங்குவார்.

(இ-ள்.) நாவி-கஸ்தூரியணிந்த, மெல்-மெல்லிய, குழல்-கூந்தலையும்-நன்னுதல்-நல்லநெற்றியையுமுடைய, தோழியர்-தோழிகள், காவி-கருங்குவளை போன்ற, அம் - அழகிய, கதிர்-காந்திபொருந்திய, முலை-தனங்களையுடைய கன்னியை-தமயந்தியை, பூவின்-மலரினாற்செய்யப்பட்ட, மெல் - மெல்லிய அணை-மெத்தையின்மேல், சேர்த்தி-சேர்த்து, புடையிருந்து-பக்கத்திலிருந்து ஆவி-உயிரானது, உண்டுகொலோவென்று - உண்டோவில்லையோவென்று, அழுங்குவார்-வருந்துவார் எ-று.

மூர்ச்சையுஞ் சாக்காடோடொக்குமாதலின், இவளுயிரைக் குறித்துச்சந்தேகித்தற் கிடமுண்டாயிற்றென்க. கைக்கிளைப்படலத்திலே "மதுவிலிற்று" என்னுஞ் செய்யுளில் இந்துகாந்த மெல்லணைக் கிடத்தினரென்றும், சந்திரோபாலம்பனப்படலத்திலே "பதுமமலர்" என்னுஞ் செய்யுளில் பூவின்மெல்லணைசேர்த்தியென்றுங்கூறி, ஈண்டுமீட்டும்அப்பூவின்மெல்லணை சேர்த்தியென்றுகூறல் (கூறியதுகூறல்) என்னுங்குற்றமாகாதோவெனின்; பெருஞ்செல்வர்க்குப் பலவணைகள் பரப்பப்பட்டிருத்தலும், ஒவ்வொன்றும் சிறிது சிறிதுகாலம் படுத்தலால் வாடிக் கழிபடுதலு மியல்பாதலால்; அக்குற்றமாகாதென்க. அன்றியும்-முன்னுள்ளவணையினு மெல்லியவணையிற் கிடத்தினரென்றுமாம். ஆவியுண்டுகொலோவென்றதனால், இல்லையோ வென்பது வருவிக்கப்பட்டது.

(க-து.) தோழிமார்கள் தமயந்தியை மலரணையிற்கிடத்தி உயிருண்டோவில்லையோவென் றழுவார்கள் எ-ம். 13

எண்ணியெண்ணியிரங்குவதென்னுயிர்ப்
புண்ணிகழ்ந்தது யிர்துறந்தாளலல்
வண்ணமென்றுவர்வாய்துடிக்கின்றது
கண்ணிமைத்தனகாணுமென்பார்சிலர்.

(இ-ள்.) சிலர்-அத்தோழிகளிற்சிலர், எண்ணியெண்ணி-நினைத்து நினைத்து, இரங்குவதென்ன, உள்-உள்ளே, உயிர்ப்பு-மூச்சு, நிகழ்ந்தது-அசைந்தது, உயிர்-ஆவி, துறந்தாளலள்-நீங்கினவளல்லள், வண்ணம்- அழகிய, மெல்-மெல்லிய, துவர்-பவளம்போன்ற, வாய்-வாயானது, துடிக்கின்றது - துடியாநின்றது, கண்-கண்களானவை, இமைத்தன-இமைத்தல்செய்கின்றன, காணுமென்பார்-பாருமென்பார்கள் எ-று.

இந்நிகழ்ச்சிகளால் அம்மூர்ச்சைதெளிந்தன வெனவறிதல் கூறப்பட்டது எண்ணியெண்ணி யிரங்கலாவது, இவள்சாக்காடுறின் இவளாற்செய்யப்பெற்

றதிறப்புமுதலியவெல்லாம் இழக்கப்படுவோமென்றிரங்கல். ஆதலால்-[இது தன்மைநவிற்சியணி.]

(க-து.) தோழிகளிற்கிலர் அழவேண்டியதென்ன. உயிரிருக்கின்றது.வாய் துடிக்கின்றது கண்களிமைக்கின்றன பாரென்பார்கள் எ-ம். 14

மைத்தடங்கணீர்மாற்றுமின்சோர்ந்துவீ
ழுத்தரீகமுயர்முலைசேர்த்துமின்
கொத்துநாண்மலரோடுங்குலைந்துசோர்
மொய்த்தகூந்தன்முடிமினென்பார்சிலர்.

(இ-ள்.) சிலர்-தோழிகளிற்சிலரானவர், மை-அஞ்சனந்தீற்றிய, தடம்-விசாலம்பொருந்திய, கண்ணீர்-கண்களினீரை-மாற்றுமின்-மாற்றுங்கள், சோர்ந்து-சோர்வையடைந்து, வீழ்-வீழ்கின்ற, உத்தரீகம்-மேற்போர்வையை, உயர் உயர்ந்த, முலை-தனத்தின்மேல், சேர்த்துமின்-சேருங்கள், கொத்து-கொத்தாகிய, நாள்-அன்றலர்ந்த, மலரோடும்-பூக்களுடனே, குலைந்து-அவிழ்ந்து, சோர் சோர்கின்ற, மொய்த்த-நெருங்கிய, கூந்தல்-குழலை முடிமினென்பார்-முடியுங்களென்றுசொல்லுவார் எ-று.

இனி எற்பாடு அணித்தாகலின் இவளுடைய தந்தைமுதலியோர் வருதற்கு முன்னமே முன்போல ஆடையணிமுதலியவற்றைத் திருத்த முயல்கின்றுரென்பது தோன்ற, இங்ஙனங்கூறினுரென்க. [இதுவும் அவ்வணி.]

(க-து.) தோழிகளிற்சிலர்கண்ணீரைத்துடையுங்கள். மேற்போர்வையால் முலையைமூடுங்கள். அவிழ்ந்தகூந்தலை முடியுங்கள் எ-ம். 15

சுடரும்வெண்மதிதூற்றுந்தழல்சுட
விடரின்மூழ்கியிறந்துபடுமுன
மடவரற்கிடர்மாற்றுவள்யானெனக்
கடன்முகடடிற்கதிரவன்றோன்றினன்.

(இ-ள்.) சுடரும்-பிரகாசியாநின்ற, வெள்-வெள்ளிய, மதி-சந்திரனுனவன், தூற்றும்-தூற்றுகின்ற, தழல்-தீயானது, சுட-சுடுதல்செய்ய, இடரில்-துன்பத்தில், மூழ்கி-முழுகி, இறந்துபடுமுனம் - உயிர்நீங்குமுன்னே; மடவாற்கு-தமயந்திக்கு, இடர்-துன்பத்தை, யான்-நானே, மாற்றுவன்-நீக்குவன், என-என்பவன்போல், கடன்முகட்டில்-கடலினதுச்சியில், கதிரவன்-சூரியன்,தோன்றினன் எ-று.

சந்திரனும்-மன்மதனும்-இரவின் மிகுகின்ற தமயந்தியின் றுயரம் பகல்வா ஒருபுடைநீங்குமென்பார், இடர்மாற்றுவன் யானெனக்கடன் முகட்டிற் கதிரவன்றோன் றினன் என்றுர். [இரவியுதயத்தில் தமயந்திவருத்த நீக்குவிப்போன் றன்மையைக் குறித்தலால், தற்குறிப்பணியாம்.]

(க-து.) சந்திரனாகிய நெருப்புச்சுட தமயந்தி துன்பத்திலழுந்தி யிறக்குமுன் சூரியனுதயமாயினான் எ-ம்.

மன்மதோபாலம்பனப் படலம்

முற்றுப்பெற்றது.

---

# இந்திரப்படலம்

இப்படலத்தால் தமயந்தியின் சுயம்வரத்திற்கு இந்திரன் முதலிய தேவர்வரவு சொல்லப்படுகின்றது.

கலிவிருத்தம்.

இடுக்கணெய்தவிகந்துகளித்துளார்
நடுக்கமெய்தநலிதருவேந்தரின்
விடுத்ததண்கதிர்த்திங்கள்விளங்கொளி
கெடுத்துவெய்யவன்கீழ்த்திசைதோன்றினான்.

[இதுமுதல்ஆறுபாட்டுகளால் சூரியனுதயமாதலும் தமயந்தியின் ஆற்றாமைக்குறிகளைப் பாங்கியராலுணர்ந்த காஞ்சனமாலை வீமராஜனுக்கறிவிக்க, அவன் தேசத்தரசர்களுக்குத் திருமண ஓலைசெலுத்த, அதனை நாரதமுனிவனறிந்து இந்திரனுலகஞ் சென்றமைசொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) இடுக்கண் - துன்பத்தை, எய்த - அந்நாட்டிலுள்ளோருடைய, இகந்து - அதிக்கிரமித்து, களித்துளார் - செருக்கடைந்த குறுநிலமன்னர், நடுக்கம் - நடுக்கத்தை, எய்த - அடைய, நலிதரு-வருத்துகின்ற, வேந்தரின்-அரசரைப்போல, விடுத்த (தமயந்தி வருந்தும்படி) விடுக்கப்பெற்ற, தண் - குளிர்ச்சிபொருந்திய, கதிர் கிரணங்கள்நிறைந்த, திங்கள் - சந்திரனுடைய, விளங்கு - விளங்குகின்ற, ஒளி - காந்தியை, கெடுத்து - அழித்து, வெய்யவன்-சூரியனானவன், கீழ்த்திசை-கீழ்த்திசையில், தோன்றினான்-உதித்தான் எ-று.

ஏழையரை வருத்தியவருக்குக் கேடுதாமே வருமாதலின், தமயந்தியை வருத்திய சந்திரனும் ஒளியிழந்தானென்க. கேடுதாமேவருதல் - "பிறர்க்கின்னாமுற்பகற்செய்யிற்றமக்கின்னா, பிற்பகற்றாமேவரும்" என்பதனாலறிக. [வேந்தரைப்போல வெய்யவன் கீழ்த்திசைத்தோன்றினானென்றமையால், உவமையணியாம்.]

(க-து.) குறுநிலமன்னர் தன்பமடையப் பெருநிலமன்னர் புறப்பட்டாற் போலச் சந்திரபிரகாசத்தைக்கெடுத்துச் சூரியனுதயமாயினன், எ-ம். 1

வையமேழுடைமன்னனிறுத்தலும்
வெய்யபாசறைவிட்டகல்வேளிரி
னையசெங்கதிராதவன்றோன்றுமுன்
செய்யவான்விட்டகன்றதுதிங்களே.

(இ-ள்.) வையமேழுடை - எழுதீபங்களையு முடைய, மன்னன் - அரசனானவன், இறுத்தலும் - வந்து தங்கினமாத்திரத்தில் வெய்ய - வெவ்விய, பாசறைவிட்டு - படைவீட்டைவிட்டு, அகல் - நீங்குகின்ற, வேளிரின் - குறுநிலவேந்தரைப்போல், ஐய - அழகிய, செங்கதிர் - சிவந்தகிரணங்களுள்ள, ஆதவன் - சூரியனானவன், தோன்றுமுன் - உதிக்குமுன்னே, செய்ய - சிவந்த, வான்விட்டு - ஆகாயத்தைவிட்டு, திங்கள் - சந்திரனானது, அகன்றது - நீங்கியது. எ-று.

[இதுவும் அவ்வணி.]

(க-து.) சூரியனுதயமாகுமுன்னே சந்திரனீங்கினன், எ-ம். 2

அன்னகாலையிலாய்வளைத்தோழியர்
சென்னல்வாட்டுநிலவுங்கதிர்மதி
யின்னுமெய்திலிறந்துபடுமென
வுன்னியன்னையொடுற்றவைகூறினர்.

(இ-ள்.) அன்னகாலையில் - அப்பொழுதில், ஆய் - ஆராய்ந்தெடுக்கப்பட்ட, வளை - வளையலையணிந்த, தோழியர் - தோழிகள், சென்னல் - நேற்றைப்பொழுதில், வாட்டு - வாட்டிய, நிலவு-பிரகாசம்பொருந்திய, கதிர்-கிரணங்களையுடைய, மதி-சந்திரனானவன், இன்னும்-இன்னமும், எய்தில்-வந்தால், இறந்துபடுமென-தமயந்திமரணத்தை யடைவாளென்று, உன்னி-நினைத்து, அன்னையோடு-தாயுடனே, உற்றவை-அடைந்த காரியங்களை, கூறினர்-சொல்லினார்கள், எ-று.

இங்கேதோழியர்-என்றது, உயிர்த்தோழியரை. அன்னை என்றது, செவிலியையெனக் கொள்க. இதுமுதல் ஐந்துபாட்டுக் குளகம்.

(க-து.) தோழிமார்கள் தமயந்தியின் செவிலித்தாயிடத்து நடந்த காரியங்களைச் சொன்னார்கள், எ-ம். 3

அத்திறந்தெரிந்தாய்மலர்க்கோதைவெண்
முத்தமூரன்முதுக்குறைந்தாளென
வுய்த்துரைத்தனளோர்டைப்புகர்முக
மத்தமால்கரிமன்னவர்மன்னற்கே.

(இ-ள்.) அத்திறந்தெரிந்து-அச்செவிலிசொல்லிய திறத்தைத் தெரிந்து கொண்டு, ஆய்-ஆராய்ந்தெடுக்கப்பட்ட, மலர் - மலர்களையணிந்த, கோதை-கூந்தலையுடைய நற்றாயானவள், வெள்-வெள்ளிய, முத்தம்-முத்துக்களையொத்த, மூரல்-பற்கள்பொருந்திய (தமயந்தியானவள்) முதுக்குறைத்தாளென - பேரறிவடைந்தாளென்று, ஓடை-பட்டமணிந்த, புகர்முகம்-புள்ளிபெற்ற முகமுள்ள, மத்தம்-மதங்கொண்ட, மால்-பெரிய, கரி-யானையையொத்த, மன்னவர்மன்னற்கு-வீமராஜனுக்கு, உய்த்து-அவ்விடத்திற் கருத்தைச்செலுத்தி, உரைத்தனள்-சொல்லினாள், எ-று.

"தலைவிபாங்கிக் கறத்தொடுநிற்கும்-பாங்கிசெவிலிக் கறத்தொடுநிற்குஞ்-செவிலிநற்றாயக் கறத்தொடுநிற்கு-நற்றாய்தந்தைதன்னையர்க்கறத்தொடு-நிற்குமென்ப நெறியுணர்ந்தோரே" இவ்விதியால் முறைபெயறிந்தனரென்க.

(க-து.) காஞ்சனமாலையதையறிந்து தமயந்தி பேரறிவடைந்தாளென்று தன்கணவனாகிய வீமராஜனுக்குச் சொன்னாள். (4)

தடங்கொள்வெம்முலைசாற்றியமாற்றமு
நடங்குசிற்றிடையாக்கமுநோக்கிய
மடங்கலேறனையான்மணநாட்டிய
முடங்கல்போக்கினன்மொய்கழல்வேந்தர்க்கே

(இ-ள்.) தடங்கொள்-பருமையைக்கொண்ட, வெம்-விருப்பத்தைத்தருகின்ற, முலை-தனத்தைப்பெற்ற துணைவியானவள், சாற்றிய-சொல்லிய, மாற்றமும்-சொல்லையும், நடங்கு-அசையாநின்ற, சிற்றிடை-சிறியவிடையையுடைய தமயந்தியினது, ஆக்கமும்-பருவத்தையும், நோக்கிய-கண்ட, மடங்கலேறனையான்-ஆண்சிங்கத்தையொத்த வீமராஜனானவன், மணம்-விவாகநாளை, நாட்டிய-குறிக்கப்பெற்ற, முடங்கல்-ஓலையை, மொய்-நெருங்கிய, கழல்-வீரக்கழலணிந்த, வேந்தர்க்கு-அரசர்க்கு, போக்கினன்-செலுத்தினான், எ-று.

ஓலையின் சொற்குறியாலும், தமயந்தியின் மெய்க்குறியாலும், அந்தப்புரத்தினிகழ்ந்த ஆசாரத்தினாலும், இந்நோய்க்குக் காரணங்கண்ட வீமராஜன்; வடிவும்-அழகும்-நற்குணமும்-நற்செய்கையும்-நிறைந்த தன் மகளின் கருத்துக்கிசைந்த அரசன் இன்னானென்பது தெரியக்கூடாமையால், சுயம்வரம் நாட்டிய விவாகவோலையை அரசர்யாவருக்கும் விடுத்தானென்க.

(க-து.) வீமராஜன் தன்மனைவிசொன்ன சொல்லையும் தமயந்தி பருவத்தையும் பார்த்துத், திருமணவோலையைத்தேசத்தார்களுக் கனுப்பினான். 5

வேலைசூழ்புவிமன்னர்க்குவேந்தர்கோ
னோலைபோக்கியதோர்ந்துயர்கற்பக
மாலைதாழ்முடிவாசவற்கோதுவான்
ஞாலமேற்றிசைநாரதன்போயினான்,

(இ-ள்.) வேந்தர்கோன்-வீமராஜனென்பவன், வேலைசூழ்-கடல்சூழ்ந்த, புவி மன்னர்க்கு-பூமண்டலத்தையாளுகின்ற அரசர்க்கு, ஓலை-ஓலையை, போக்கியது-செலுத்தியதை, ஓர்ந்து-அறிந்து, உயர்-உயர்ந்த, கற்பகமாலை-கற்பகத்தினுடைய மலர்மாலை, தாழ்-தாழ்கின்ற, முடி-மகுடமணிந்த, வாசவற்கு-இந்திரனுக்கு, ஓதுவான்-சொல்லும்பொருட்டு, ஞாலம்-உலகத்தார், ஏத்து-துதிக்கின்ற, இசை-புகழ்பெற்ற, நாரதன்-நாரதமுனிவன். போயினான்-போயினான், எ-று.

திரிலோக சஞ்சாரியாகிய நாரதமுனிதான் இச்சுயம்வர அதிசயத்தை இந்திரனுக்குச் சொல்லி அவனையும் இதற்கு வருவித்தல் சிறப்பென்று நினைத்துப் பொன்னுலகத்திற்குச் சென்றானென்க.

(க-து.) நாரதமுனிவனானவன் வீமராஜன் அரசருக்கோலைவிட்டதையறிந்து தேவேந்திரனுக்குச் சொல்லும்பொருட்டுப் போனான்-எ-ம். 6

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

வானவர்கோன் சுடரெறிக்கு முடிதாழ்த்து வனைகழற்கால் வணங்
கிப்போற்றத், தேனிமிருங் கற்பகநாண் முகையுடைந்து பசியநறுந்தே
றல் மாற்ற, மேனகைசாமரையிரட்ட வுருப்பசி வெள்ளடையுதவ விளரி
த்தீஞ்சொற், பானலங்கட் டிலோத்தமைமென் சதிமுறையிற் பதம்
பெயர்க்கும் பாணிதூங்க.

[இதுமுதல் ஐந்துபாட்டுகள் ஒருதொடர். இவ்வைந்து பாட்டுகளால் இந்திரலோகத்தின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) வானவர்கோன்-தேவேந்திரனுடைய, ஒளிர்-ஒளிரிய, சுடர்-காந்தியை, எறிக்கும் வீசுகின்ற முடி-மகுடத்தை, தாழ்த்து-தாழச்செய்து, வனைகழற்கால்-வீரக்கழலையணிந்த பாதங்களை, வணங்கி-தாழ்ந்து, போற்ற-புகழவும், தேன்-வண்டுகளானவை, இமிரும்-ஒலிக்கின்ற, கற்பக-கற்பகத்தினுடைய, நாள்-அன்றலர்ந்த, முகை-அரும்புகள், உடைந்து-உடைபட்டு, பசிய-பசுமைபொருந்திய, நறும்-நறிய, தேறல்-தேனை, மாற்ற-சொரியவும், மேனகை-மேனகையானவள், சாமரை-சவரிகளை, இரட்ட-அசைக்கவும், உருப்பசி-உருப்பசியானவள், வெள்ளடை-தாம்பூலத்தை, உதவ-கொடுக்கவும், விளரி-விளரியென்னுமிசையையொத்த, தீ-மதுரம்பொருந்திய, சொல்-சொல்லையும், பானல்-நீலோற்பலம்போன்ற, அம்-அழகிய, கண்-கண்களையுமுள்ள, திலோத்தமை-திலோத்தமையானவள், மெல்-மெல்லிய, சதிமுறையில்-தாளவொத்தின் முறைப்படி, பதம்பெயர்க்கும்-பதம்பெயர்த்தற்குரிய, பாணிதூங்க-அஸ்தாபிநயஞ்செய்யவும், எ-று.

[“இயைபிசைசொல்லிறுதியிலொத்தலே” இவ்விதியால், போற்ற-உதவ-முதலியனவாக ஈற்றிலொத்துவருதலால், இயைபிசையணியாம்.]

(க-து.) தேவர்கள்வணங்கவும், கற்பகத்தருக்கள் தேன்சொரியவும், மேனகை சாமரைபோடவும், உருப்பசிதாம்பூலங் கொடுக்கவும், திலோத்தமை யபிநயஞ்செய்யவும், 7

தண்டரளமணிமுறுவல யிராணிவரிபரந்ததடங்கட்காமர், வண்டுபெகட்டெழின்மார்பின்மந்தாரநறுந் தெரியன்மலரின்வீழப், புண்டரிகச்செழுங்காடுபூத்ததெனவிழிமலர்கள்பொலிந்துதோன்றத், தெண்டிரைவாயமிழ்தமெனத்தெள்விளித்தேனரமகளிர்செவியினூற்ற.

(இ-ள்.) தண்-குளிர்ந்த, தரளம்-முத்துக்கள்போன்ற, மணி-அழகிய முறுவல்-பற்களையுடைய, அயிராணி-இந்திராணியின், வரி-இரேகைகளானவை, பரந்த-பரவப்பெற்ற. தடம்-விசாலம்பொருந்திய, கண்-கண்களென்னும், காமர்-அழகிய, வண்டு-வண்டுகளானவை. பகு-பெருமைபொருந்திய, எழில்-அழகிய, மார்பின்-மார்பிலணிந்த, மந்தாரம்-மந்தாரத்தின், நறும்-நல்ல, தெரியல்-மாலையினுடைய, மலரில்-பூவில், வீழ-மொய்க்கவும், புண்டரீகம்-தாமரையின், செழுங்காடு-செழுமையுள்ளவனம், பூத்தது என-பூத்ததென்னும்படி, விழி மலர்கள்-நேத்திரகமலங்கள், பொலிந்து-பிரகாசித்து தோன்ற-விளங்கவும், தெள்-தெள்ளிய, திரைவாய்-கடலிடத்துண்டாகிய, அமிழ்தமென-அமிர்தமென்றுசொல்ல, தெள்விளித்தேன்-தெள்விளியென்னு மிசைத்தேனை, அரமகளிர்-அரம்பையரானவர்கள், செவியின்-காதினிடத்திலே, ஊற்ற-சொரியவும், எ-று. [இதுவும் அவ்வண்.]

(க-து.) இந்திராணிகண்கள் மந்தாரைமாலைமலரில் வீழவும், ஆயிரங்கண்கள் விளங்கவும், அரம்பையர்கள் பாடவும், எ-ம்.

மருவுயிர்க்குநறுந்துணர்மென்மலர்பொதுளும்பொலன்றருவுமணியுமானு, மிருநிதியும்விழிக்கடையினருணோக்கி முறைமுறைநின்றேவல்கேட்பக், கருதினர்கண்கவர்வனப் பிற்கந்தருவமடமகளிர்கனிந்தபாடற், சுருதிமுறைபி[illegible]றாமன்மாடகயாழ்நரம்புளருந்துழனியாப்ப.

(இ-ள்) மரு-வாசனையை, உயிர்க்கும்-வீசுகின்ற, நறும்-நறிய, துணர்-கொத்தாகிய, மெல்-மெல்லிய, மலர்-மலர்களானவை,பொதுளும்-நெருங்கிய. பொலன்-பொன்மயமாகிய, தருவும்-ஐந்தருவும், மணியும்-சிந்தாமணியும் ஆனும்-காமதேனுவும், இருநிதியும்-சங்கநிதிபதுமநிதியென்னுநிதிகளிரண்டும், விழிக்கடையின்-கடைக்கண்களினுடைய, அருள்-அருளை, நோக்கி-பார்த்து, முறைமுறைநின்று-வரிசைவரிசையாகநின்று, ஏவல்-ஏவலை, கேட்ப-கேட்கவும், கருதினர்-நினைத்தவர்களுடைய, கண்-கண்களை, கவர்-பற்றிகொள்ளுகின்ற, வனப்பின்-அழகினைப்பொருந்திய, கந்தருவர்-கந்தருவருடைய, மடம்-இளமைபொருந்திய, மகளிர்-மாதர்கள், கனிந்த-முதிர்ந்த, பாடல்-பாடல்களாலே, சுருதி-ஒலியினது, முறை-வரிசைகள், பிறழாமல்-வேறுபடாமல், மாடக

ம் முறுக்காணியோடுகூடிய, யாழ்-வீணையின், நரம்பு-நரம்பினை, உளரும்-தடவுகின்ற, துழனி-ஒலியானது, ஆர்ப்ப-ஒலிக்கவும், எ-று.

[இதுவும் அவ்வண்.]

(க-து.) ஐந்தருவும்-சிந்தாமணியும்-காமதேனுவும்-சங்கநிதியும் பதுமநிதியும்-வேலைகேட்கவும், கந்தருவமாதர்கள் வீணைவாசிக்கவும்-எ-ம். 9

மருங்கினொருபுடைவிசித்த சுற்றுடைவாள் கட்டுடையின்வயங்க வோர்பால் பொருங்குலிசப்படைநமஞ்சூழ்முகிலினிடைவிளங்கு மின்னிற்பொலிவுகாட்ட, கரும்பிமிரஞ்சில்கலாதிப்புலோமிசைசெம்பஞ்சடிமென்சுவடுதோய்ந்து, விரிந்ததடம்புயம்பவளக்கொடிபடர்ந்த குலவரையின்விளங்கித்தோன்ற.

(இ-ள்.) மருங்கின் புடையில், ஒருபுடை ஒருபக்கத்தில், விசித்த கட்டிய, சுற்றுடைவாள்-சூரியசுரிகையானது, வட்டுடையின் அரைக்கவசத்தின் மீது, வயங்க-பிரகாசிக்கவும், ஓர்பால்-ஒருபக்கத்தில், பொரு-போர்செய்கின்ற, குலிசப்படை-வச்சிராயுதமானது, நமம்-நறைவுபொருந்திய, சூல்-கருப்பத்தையுடைய, முகிலினிடை-மேகத்தினிடத்திலே. விளங்கு-பிரகாசிக்கின்ற, மின்னில் மின்னலைப்போல் பொலிவு-காந்தியை, காட்ட-காண்பிக்கவும், சுரும்பு-வண்டுகளானவை, இமிர்-ஒலிக்கின்ற, அம்-அழகில், சில்-பொன்வட்டத்தகட்டினையணிந்த, ஓதி-கூந்தலையுடைய, புலோமிசை-இந்திராணியினது, செம்பஞ்சு-செம்பஞ்சுக்குழம்பணிந்த, அடி-பாதங்களின், மெல்-மெல்லிய, சுவடு-தழும்பு, தோய்ந்து-பொருந்தி, விரிந்த-விரிவுபெற்ற, தடம்-விசாலம்பொருந்திய, புயம்-தோள்களானவை, பவளக்கொடி-பவளக்கொடிகள், படர்ந்த-படரப்பெற்ற, குலவரையின்-குலகிரிகளைப்போல, விளங்கித் தோன்-பிரகாசித்துத்தோன்றவும், எ-று.

[இதுவும் அவ்வண்.]

(க-து.) ஒருபக்கத்திலுடைவாள் பிரகாசிக்கவும், மற்றொருபக்கத்தில் வச்சிராயுதம் பிரகாசிக்கவும், இந்திராணிகாற்சுவடுபட்ட புயங்கள் பிரகாசிக்கவும், எ-ம். 10

விஞ்சையர்கிந்நரரவுணருரகர்புவிமுழுதாளும்வேந்தர்யாரு
மஞ்சலிசெய்திருமருங்கும்புடைசூழமுனிவர்குழாமாசிகூற [ந்தைக்
வெஞ்சலில்பவளஞ்சிறப்பவணையில்வீற்றிருக்கு மிமையோர்வே
கஞ்சமலரயனளித்தமறைபயின்றதனிருகண்களிப்பக்கண்டார்

(இ-ள்.) விஞ்சையர்-விச்சாதரர்களும், கிந்நரர்-கிந்நரர்களும், அவுணர்-அசுரரும், உரகர்-நாகரும், புவிமுழுதாளும்-பூலோகமுழுதையுமாட்சிசெய்கின்ற, வேந்தர்யாரும்-அரசர்கள்யாவரும், அஞ்சலிசெய்து-வணக்கஞ்செய்து, இருமருங்கும்-இரண்டுபக்கத்திலும், புடைசூழ-நெருங்கிச் சூழவும், முனிவர்

குழாம்-முனிவர்கூட்டங்கள், ஆசிகூற-ஆசீர்வதிக்கவும், எஞ்சலில்-குறைவில்லாத, பல்-பலவாகிய, வளஞ்சிறப்ப-வளங்களானவைமிக, அரியணையில்-சிங்காதனத்தில், வீற்றிருக்கும்-வீற்றிருக்கின்ற,இமையோர்வேந்தை-இந்திரனை, கஞ்சமலர்-தாமரைமலரிலிருக்கின்ற, அயன்-பிரமனுடைய வன், அளித்த-பெற்ற, மறை-வேதத்தை, பயில்-பயிற்சிசெய்கின்ற, நாரதன்-நாரதமுனிவன், இருகண்-தன்னிருகண்களும், களிப்ப-களிப்பையடைய, கண்டான்-பார்த்தான், எ-று.

"வானவர" என்னும்பாட்டுமுதல் இந்தப் பாட்டிலும் வந்த "எந்த" என்பதுமுதலிய வினையெச்சங்கள்; இப்பாட்டில்-வீற்றிருக்கும் என்னும் பெயரெச்சவினையும், அது இமையோர் வேந்தென்னும் பெயரையுங்கொண்டுமுடிந்தன. [இதுவும் அவ்வணி.]

(க-து.) விஞ்சையர்களும்-கின்னரர்களும்-அசுரர்களும்-நாகர்களும்-புவியரசர்களும் புடைசூழவும், முனிவர்களாசீர்வதிக்கவும், சிம்மாதனத்திலிருக்குமிந்திரனை நாரதன்கண்டான்-எ-ம். 11

பொன்னகரந்தனிபுரக்கும்புரந்தரனாரதமுனிவன்புகுதலோடு
முன்னரியற்றியதவத்தினெய்துபயனிப்பிறப்பின்முடிந்ததாமென்
றன்னமுனிவரனுவப்பவருக்கியபாத்தியமுதலாவனைத்துநல்கி [ன்
யின்னமுதமுகுவனபோலினிதுவரைக்குமுகமனொடிருக்கைநயிந்தா

(இ-ள்.) பொன்னகரம்-அமராவதியை, தனி-ஒப்பற, புரக்கும்-அளிக்கப்பெற்ற, புரந்தரன்-இந்திரனானவன், நாரதமுனிவன்-நாரதமுனிவன், புகுதலோடும்-அடைந்தமாத்திரத்தில், முன்னர்-முற்பிறப்பில். இயற்றிய-பாண்செய்த, தவத்தின்-தவத்தினுடைய எய்து-அடையவேண்டிய, பயன்-பிரயோசனம். இப்பிறப்பின்-இந்தப்பிறப்பில், முடிந்ததாமென்று-முற்றுப் பெற்றதாமென்று, அன்னமுனிவன்-அந்தநாரதமுனிவன், உவப்ப-மகிழ்ச்சியடைய-அருக்கியபாத்தியமுதலா-அருக்கியபாத்தியமுதலாக, அனைத்தும்-யாவையும், நல்கி-கொடுத்து, இன்னமுதம்-இனியவமிர்தமானவை, உகுவனபோல்-சொரிவனபோல், இனிது-இனிதாக, உரைக்கும்-சொல்லுகின்ற, முகமனொடும்-உபசாரத்துடன், இருக்கை-ஆசனத்தை, ஈந்தான்-கொடுத்தான், எ-று.

(க-து.) தேவேந்திரன் நாரதன் வந்தமாத்திரத்தில் ஆசனங்கொடுத்தான்-எ-ம். 12

உருகியுளங்களிசிறப்பவாயிரங்கண்மலராலுமொருங்குநோக்கி
[illegible]றையோயிவணீங்கினெடுங்காலமெவ்வுலகிலடைந்தாயென்னப்
பொருவரியதவமுனிவன்வானவர்கோன்முகநோக்கிப்புனரிசூழ்ந்த
திருநிலத்திற்கட்வுணதிப்புனலாடியித்தனைநாளிறந்ததென்றான்.

(இ-ள்.) உருகியுளம்-மனமுருகி, களிசிறப்ப-களிப்புமிக, ஆயிரங்கண்மலராலும்-ஆயிரங்கண்களாகிய தாமரைமலராலும், ஒருங்கு-ஒருமிக்க, நோக்கி-

பார்த்து, அருமறையோய் - நாரதமுனியே, இவணீங்கி - இவ்விடம்விட்டு, நெடுங்காலம்-நெடுநாளாக, எவ்வுலகில்-எந்தவுலகத்தில், அடைந்தாயென்ன-போயினுயென்றுகேட்க, பொருவரிய-ஒப்பில்லாத, தவமுனிவன்-தவத்தையுடைய நாரதமுனிவன், வானவர்கோன்-இந்திரனது, முக நோக்கி முகத்தைப் பார்த்து, புணரிசூழ்ந்த-சமுத்திரஞ்சூழ்ந்த இருநிலத்தில்-பெரியபூமியினிடத்தில், கடவுள்-தெய்வத்தன்மையுள்ள, நதிப்புனலாடி-நதிதீர்த்தங்களிலே ஸ்நானஞ்செய்து, இத்துணைநாள்-இவ்வளவுநாள், இறந்தது என்றான் கழிந்ததென்றான். எ-று.

(க-து.) தேவேந்திரன் நாரதனைப்பார்த்து இவ்வளவுநாளெங்கே போனீரென்றுகேட்க, நாரதன் பூலோகத்திற் தீர்த்தமாடப் போனேனென்றான். 13

என்றுமுனிவ னுரைப்பக் கடல்புடைசூழ் நிலத்திகல் வேல் மன்னர், துன்றுசமர் துறந்தனர்கொல்சுடர்க்கதிர்போழ்ந்தர மகளிர் துணைமென்கொங்கை, மன்றல்விழைந்திங் கெமக்கோர்நல்விருந்தாய்வரலொழிந்தவாறேதென்றான், குன்றினிருஞ்சிறையரிந்தசுடர்வைரப்படைசுமந்த குவவுத்தோளான்

(இ-ள்.) என்று-இப்படியென்று, முனிவன்-நாரதமுனிவன், உரைப்ப-சொல்ல, குன்றின்-பர்வதங்களுடைய, இரும்-பெரிய, சிறை-இறகுகளை, அரிந்த-அறுத்த, சுடர்-பிரகாசம்பொருந்திய, வைரப்படை-வச்சிராயுதத்தை, சுமந்த-தாங்கிய, குவவு-திரட்சிபொருந்திய, தோளான் - புயங்களையுடையவனாகிய விந்திரன், கடல்புடைசூழ்-கடலாற்புடைசூழப்பட்ட, நிலவலயத்து-பூமண்டலத்தில், இகல்-போர்செய்கின்ற, வேல்-வேற்படையேந்திய, மன்னர் அரசரானவர், துன்று-நெருங்கிய, சமர்-போரை, துறந்தனர்கொல்-விடுத்தனரோ, சுடர்கதிர்போழ்ந்து - சூரியமண்டலத்தைக் கிழித்துக்கொண்டு, அரமகளிர்-அரமங்கையர்களின், துணை-இரண்டாகிய, மெல்-மெல்லிய, கொங்கை-தனத்தினுடைய, மன்றல்-மணத்தை, விழைந்து-விரும்பி, இங்கு-இவ்விடத்தில், எமக்கு-எமக்கு, ஓர்-ஒப்பற்ற, நல்விருந்தாய்-நல்லவிருந்தாகி, வரல்-வருதலை, ஒழிந்தவாறு-நீங்கியவிதம், ஏதென்றான்-என்னகாரணமென்றான், எ-று.

புண்ணியத்தினுற் கிடைத்த சம்பத்துக் குறைவுபடாது சற்பாத்திரமாயிருந்து வளப்பவராதலால், விருந்தென்றொழியாது நல்விருந்தென்றார். பொய்சொல்வோனை யெவருஞ் சேராததுபோல், பூலோகத்தில் அரசர்கள் போர்செய்து மனிததேகம் விடுத்துத் திவ்வியதேகம்பெற்று விருந்தாய் வாராமல், தன்னுடைய சம்பத்தைத் தானேயனுபவித் தழிக்கும்படி நிற்றலால் வரலொழிந்தவா றேதென்றான். தானேயனுபவித்தல் இன்னதென்பதை- "இரத்தலின்னுது மன்றநிரப்பிய, தாமேதமியருணல்" என்பதனுலறிக.

(க-து.) இப்படி நாரதன்சொல்லத் தேவேந்திரன் உலகத்தரசர்யுத்தத்தை விட்டார்களா? வீரசொற்கத்துக்கு வாராதிருந்தவகையென்ன வென்றான் எ-ம்.

கன்னல்கமுகெழில்காட்டுந் தண்பணைசூழ்விதர்ப்பநகர்காவல்பூண்ட, மன்னருந்தவம்பெற்ற வுலகில்வனப்பனைத்துமொருவடிவமாகி யன்னநடைவாய்ந்தமதர்விழியெனவாண்முகத்தினிரண்டயில் வேறுங்கிப், பொன்னவிர்பூண்முலையென்னப்பொருப் பேந்தியிருநிலத்திற்பொலிந்ததன்றே.

(இ-ள்.) கன்னல்-கருப்புகளானவை, கமுகு-கமுகைப்போலும், எழில்காட்டும்-அழகுடையதாய் (வளர்ந்து) காட்டுகின்ற, தண்-தண்ணிய, பணைசூழ்-வயல்களாற்சூழப்பட்ட, விதர்ப்பநகர்-விதர்ப்பதேசத்தை, காவல்பூண்ட-காக்குந்தொழிலையடைந்த, மன்னன்-வீமராஜனுடைய, அருந்தவப்பேறு-அரிய தவப்பேறானவள், உலகில்-உலகத்திலிருக்கின்ற, வனப்பனைத்தும் - அழகெல்லாம், ஒருவடிவமாகி-ஒருருவாகி, அன்னநடை-அன்னத்தினடையை, வாய்ந்து பொருந்திய, மதர்-மதர்த்த, விழியென-கண்களென்றுசொல்லும்படி, வாள்-ஒளிபொருந்திய, முகத்தின்-முகத்தினிடத்திலே, இரண்டயில்வேல்-கூரியவிரண்டு வேற்படைகளை, தாங்கி-தாங்கிக்கொண்டு, பொன்-பொன்னினாற்செய்யப்பட்டு, அவிர்-பிரகாசிக்கின்ற, பூண்-ஆபரணங்களையணிந்த, முலையென்ன-தனங்களென்று சொல்லும்படி, பொருப்பு-இரண்டுமலைகளை, ஏந்தி-தாங்கி, இருநிலத்தில்-பெரியபூவுலகில், பொலிந்து-பிரகாசித்தது, எ-று

(க-து.) விதர்ப்பதேசத்தரசனுகிய வீமன்றவத்தால் உலகத்தழகெல்லாமொருவடிவாகித் தமயந்தி உதித்தாள் - எ-ம். 15

ஆங்கவண்மேல்விழைவினராய்நின்னுலகிற்போகமுமின்னமிர்தும் அன்னாண், மாங்குயிலின்றீங்குதலைமொழிக்கிணையாச்சிறிதேனுமதிக்ககில்லார், பூங்கமலமுகையனைய பொறிசுணங் கரிளமுலையின்பூசல் வேட்டு, வீங்குதடம்புயமெலியவிளைத்திடும்வாளமர்துறந்தார்வேந்தரெல்லாம்.

(இ-ள்.) ஆங்கு - அவ்விடத்தில், அவண்மேல் - அத்தமயந்தியென்னுமாதின்மேல், விழைவினராய்-விருப்பையுடையவராகி, நின்னுலகில்-உன்னுடையவுலகத்தில், போகமும்-போகத்தையும், இன்னமிர்தும் - இனியவமிர்தத்தையும், அன்னாள்-அவளுடைய, மாங்குயிலின்-மாமரத்திலுள்ளகுயிலின் மொழியையொத்த, தீ-மதுரம்பொருந்திய, குதலைமொழிக்கு-மழலைச்சொல்லுக்கு, இணையா- ஒப்பாக, சிறிதேனும்-அற்பமாயினும், மதிக்ககில்லார்-மதியாதவர்களாய், பூ-அழகிய, கமலமுகையனைய-தாமரையரும்பை யொத்த, பொறி-புள்ளிகள் போன்ற, சுணங்கு-தேமல், ஆர்-நிறைந்த, இளமுலையின்-இளமைபொருந்திய தனங்களின், பூசல்-போரை, வேட்டு-விரும்பி, வீங்கு-பருத்த, தடம்-விசாலம் பொருந்திய, புயம்-தோள்கள், மெலிய-வாட, விளைத்திடும்-செய்கின்ற, வாளமர்-வாட்படையாற்செய்யும்போரை, வேந்தரெல்லாம்-அரசர்யாவரும், துறந்தார்-விட்டனர்கள் எ-று.

(க-து.) அரசர்கள தமயந்தியின் கனதனப்போரைவிரும்பி வாட்போரை விட்டார்கள் என்றான் - எ-ம். 16

அத்தகையமடவரலோராண்மையையுளத்தமைத்தாளவளையீ
ன்ற, முத்தநெடுங்குடைவேந்தனிலவலயமினி தளிக்குமுதல்வர்க்கெ
ல்லா, முய்த்துணரச்சுயம்வரமென்றோலைபோக்கினனதனையுரைப்பா
னெண்ணி, யித்தலையெய்தினனென்றானின்னிசை நூன்மு
ழுதுணர்ந்தயாழ்வல்லோனே.

(இ-ள்.) அத்தகைய-அப்படிப்பட்டகுணமுள்ள, மடவரல்-தமயந்தியானவள், ஓர்-ஒரு, ஆண்டகையை-ஆண்மகனிற்சிறந்தவனை, உளத்து-மனத்தின்கண், அமைத்தாள்-வைத்தாள். அவளையீன்ற-அவளைப்பெற்ற, முத்தம்-முத்தினாற்செய்த, நெடுங்குடை-நெடியகுடையையுடைய, வேந்தன் - வீமராசனானவன், நிலவலயம்-பூமண்டலத்தை, இனிது-இனிதாக, அளிக்கும்-புரக்கின்ற, முதல்வர்க்கெல்லாம்-தலைமைபூண்டவரசர்களெவர்க்கும், உய்த்து-கருத்தைச்செலுத்தி, உணர-அறிய, சுயம்வரமென்று-சுயம்வரநாளிந்நாளென்று, ஓலைபோக்கினன்-எழுதப்பட்டஓலையைச்செலுத்தினான், அதனை-அச்செய்தியை, உரைப்பான்-உரைக்கும்படிக்கு, எண்ணி-நினைத்து, இத்தலை-இவ்விடத்தில், எய்தினனென்றான்-வந்தேனென்று சொன்னான், இன்னிசை நூல்-இனியவிசைநூல், முழுது-முழுவதையும், உணர்ந்த-அறிந்த-யாழ்வல்லோன்-யாழின்வல்லநாரதமுனிவன், எ-று.

“உயர்திணையஃறிணையிருதிணைதனிலும்-வருபொருள்பலவும் பொருளெனவறைப” இவ்விதியால்-ஆண்மை-அஃறிணை. அவ்வுளம் பரமாணுரூபமாகையால், அதனுளடக்கிய புருஷனை நாணால் அவளேவெளியிற்சொல்லாமையால், ஆண்டகையென்றும்; போகியரும் அணுமாத்திரமன்றி அதன்உள்ளீடறியாராதலால், அவராலுமறியக்கூடாமையால் சந்தேகித்து, வீமராஜன் சுயம்வரநாட்டிய ஓலைபோக்கினனென்றும்; சொல்வினார். யாவராலுமறியக்கூடாமை-“அத்திமலருமருங்காக்கை வெண்ணிறமும், கத்துபுனன்மீன்பதமுங் கண்டாலும்-பித்தரே, கானார்தெரியற்கடவுளருங்காண்பரோ, மானார்விழியார்மனம்.” என்பதனாலறிக.

(க-து.) அத்தமயந்தி ஓர்அரசனை இச்சித்தாள். அவளைப்பெற்றவீமன்உலகத்தரசர்க்கெல்லாம் சுயம்வரமென்றோலைவிட்டான். அதனைச்சொல்லும்பொருட்டிங்குவந்தேன் என்றான் - எ-ம். 17

விண்ணகத்தும்பெறற்கரியவிழுப்பொருணீபெறவேண்டில்விரி
நீர்சூழ்ந்த, மண்ணகத்துவருதியெனமகபதியாண்முகநோக்கிமகிழ்
ந்து கூறிப், பண்ணமைந்ததீங்குதலைத்தமயந்திசுயம்வரத்திற்பாரில்
வேந்தர்,கண்ணரியமர்விளைப்பரதுகாண்குவலென்றசிபலநின்றுபோ
னான்.

(இ-ள்.) விண்ணகத்தும்-தேவருலகத்தும், பெறற்கரிய-பெறுதற்கருமையாகிய, விழுப்பொருள்-சிறப்புப்பொருளை, நீபெறவேண்டில்-நீபெறவிரும்பினையாயின், விரிநீர்சூழ்ந்த-கடலாற் சூழப்பட்ட, மண்ணகத்து-பூவுலகத்தில், வருதியென-வருவாயென்று, முகபதி-இந்திரனுடைய, வாள்-ஒளிபொருந்திய, முகநோக்கி-முகத்தைப்பார்த்து, மகிழ்ந்து-மகிழ்ச்சியடைந்து, கூறி-சொல்லி, பண்ணமைந்த-பண்பொருந்திய, தீ-தித்திப்புள்ள, குதலை-மழலைச்சொல்லையுடைய, தமயந்தி-தமயந்தியினது, சுயம்வரத்தில்-சுயம்வரநாளில், பாரில் பூமியிலிருக்கின்ற, வேந்தர்-அரசரானவர்கள், நண்ணி-அடைந்து, அமர்-போர்த்தொழிலை, விளைப்பர்-செய்வார், அது-அப்போரை, காண்குவலென்று-பார்பேனென்று, ஆசிபல-அனேகஆசீர்வாதங்களை, நவின்று-சொல்லி, போனான்-நாரதமுனிவன் போயினான், எ-று.

(க-து.) விண்ணிற்பெறுதற்கரியபொருளை மண்ணிற்பெற விரும்புவையாகில் வாவென்றுவாழ்த்தி, போரைக் காண்பேனென்று நாரதன்போனான்-எ-ம். 18

அருந்தவனேகலு மிறைவனடன்மாரன்பகழிபொரவாற்றானாகிக், கருந்தடங்கட்டமயந்திகதிர்முலையுங்காதுங்கமைமென்றோளுமுருந்தினிளமுறுவலும்வாண்முகமதியுமுருவெளியாய் முன்னர்த்தோன்ற வருந்தியயிராணிமுதலரம்பையர்பா லுறுநலனுமறந்தானன்றே.

(இ-ள்.) அருந்தவன்-நாரதமுனிவன், ஏகலும்-போனவளவில், இறைவன்-இந்திரனானவன், அடல்-வலுமைபொருந்திய, மாரன்-மன்மதனது, பகழி பாணங்கள், பொர-போர்செய்ய, ஆற்றானாகி-பொறுக்கமாட்டாதவனாய், கரு-கரிய, தடம்-விசாலம்பொருந்திய, கண்-கண்ணையுற்ற, தமயந்தி-தமயந்தியினுடைய, கதிர்முலையும்-காந்திபொருந்திய தனங்களும், வார்காதும்-நெடிசெவிகளும், கமை-மூங்கில்போன்ற, மென்றோளும்-மெல்லியதோளும், முருந்து-மயிலிறகின்முதன்முள்போன்ற, முறுவலும்-பற்களும், வாள-ஒளிபொருந்திய முகமதியும்-முகமாகிசந்திரனும், உருவெளியாய்-உருவெளித்தோற்றமாய், முன்னர்-எதிரே, தோன்ற-தெரிய, வருந்தி-வருத்தப்பட்டு, அயிராணிமுதல்-இந்திராணிமுதலாகிய, அரம்பையர்பால்-அரமகளிரிடத்தில், உறு-மிகுந்த, நலனும்-நலத்தையும், மறந்தான்-மறந்துவிட்டான், எ-று.

(க-து.) தேவேந்திரன் மன்மதபாணத்துக்குச் சகியாதவனாய்த் தமயந்தியுருவெளியாகத்தோற்றவருத்தப்பட் டிந்திராணி முதலியோ ரின்பங்களைமறந்தான் - எ-ம். 19

மண்ணுலகின்மடவரலைவிழைந்தனனம்மிறைவனெனவருந்திமாழார், தெண்ணிரமதெழினலனுமிளநமையுநன்றாயவெனவிகழ்ந்துகூறி

வெண்ணிலவுபொழிதரள முறுவலயிராணிமுதல் விண்ணில்வாழு, மொண்ணுதன்மங் கையர்மடநாண் மீதூரவோவியம்போன் றுணர் வுதீர்ந்தான்.

(இ-ள்.) மண்ணுலகின்-பூவுலகத்திலிருக்கின்ற, மடவாலை-ஒருபெண்ணாகிய தமயந்தியை, விழைந்தனன்-விரும்பினான், நம்மிறைவனென-நம்முடைய வரசனென்று, வருந்தி-வருத்தப்பட்டு, மாழாந்து-மயக்கமடைந்து, எண்ணின்-எண்ணுமிடத்தில், நமது-நம்முடைய, எழிநலனும்-அழகினுடையநன்மையும், இளமையும்-இளமைப்பருவமும், நன்றாயவென-நல்லதாயவென்று, இகழ்ந்து கூறி-பழித்துச்சொல்லி, வெள்-வெள்ளிய, நிலவு-பிரகாசத்தை, பொழி-பொழிகின்ற, தரளம்-முத்தினையொத்த, முறுவல்-பற்கள்பொருந்திய, அயிராணிமுதல்-இந்திராணிமுதலாகிய, விண்ணின்வாழும்-தெய்வலோகத்தில்வாழ்கின்ற, ஒள்-ஒள்ளிய, நுதல்-நெற்றியையுடைய, மங்கையர்-மாதர்கள், மடம்-அறியாமையும், நாண்-நாணும், மீதூர-அதிகரிக்க, ஓவியம்போன்று-சித்திரத்தையொத்து, உணர்வுதீர்ந்தார்-அறிவுநீங்கினார்கள், எ-று

அயிராணிமுதல் விண்மாதரென்றமையால், அச்சபையிலிருந்த-மேனை - உருப்பசி - திலோத்தமை - அரம்பை - முதலியதெய்வமங்கையராம் இவர்கள் அழகுமுதலியவற்றில் மிக்கவரென்றுமதித்திருந்த தம்மைத்தாமே வெறுத்துக்கொண்டு, மானமுடையவராகையால்புறத்திற்சொல்லாமல் சித்திரம்போல் அசைவற்றிருந்தனரென்க. [ஓவியம்போலென்றமையால், உவமையணியாம்.]

(க-து.) இந்திராணிமுதலான மங்கையர்கள் நமதரசன் தமயந்தியை இச்சித்தானென்று சித்திரத்தையொத் தறிவிழந்தார்கள் எ-ம். (20)

மதர்நெடுங்கணரமகளிரிவ் வாறுதுயருழப்பமனத்தினோராத், தைமலர்க்கற்பகநறுந்தார்மணிமார்பன் றுயர்கூர்ந்து தருமன்வெய்ய, கதழெரிப்புத்தேள்வருணனுடனேகம் கொடிஞ்சியந் தேர்கடிதிற்றாண்டி, யதிருநெடுந்திரைபாழிசூழ்புவியினெல்லையில்வந்தடைந்தான் மன்னோ.

(இ-ள்.) மதர்-மதர்த்த, நெடுங்கண்-நெடியகண்களையுடைய, அரமகளிர்-அரம்பையரானவர்கள், இவ்வாறு-இந்தப்பிரகாரம், துயருழப்ப-துன்பப்பட்ட, மனத்தின்-மனத்தினிடத்திலே, ஓரா-எண்ணாமல், ததை-நெருங்கிய, மலர்-மலரையுடைய, கற்பகநறுந்தார-நறியகற்பகமாலையணிந்த, மணிமார்பன்-அழகியமார்பையுற்றவிந்திரன், துயர்கூர்ந்து-துயரமிகுந்து, தருமன்-யமனும், வெய்ய-வெவ்விய, கதழ்-வேகம்பொருந்திய, எரிப்புத்தேள்-அக்கினிதேவனும், வருணன்-வருணனும், உடனேக-உடனாகவர, கொடிஞ்சி-மேன்மொட்டையுடைய, அம்-அழகிய, தேர்-இரதத்தை, கடிதில்-சீக்கிரத்திலே, தாண்டி-செலுத்தி, அதிரும்-அதிர்கின்ற, நெடுந்திரை நெடியஅலைகளையுடைய, ஆழிசூழ்-கட

லாலாற்சூழப்பட்ட, புவியின்-பூவுலகில், ஒல்லையில்-விரைவில், வந்தடைந்தான்-வந்துசேர்ந்தான் எ-று.

(க - து.) இந்திரன் அரம்மையர் முதலானவர்கள் துன்பப்படுதலை எண்ணுமல் துன்பப்பட்டு. யமன்-அக்கினி-வருணன்-இவர்களுடன் தேரிலேறிப் பூமியில் வந்தான் எ-ம். (21)

இந்திரப்படலம் முற்றிற்று.

---

# நளன்றூதுப்படலம்

இப்படலத்தால் இந்திரன்முதலிய நால்வர் பொருட்டுத் தமயந்தியினிடத்து நளன்றூது சென்றமை சொல்லப்படுகின்றது.

கலிவிருத்தம்

அண்டருலகத்திறைவன அவ்வுழியிறப்ப
மண்டுபுனல்வாளைவளர்பூகமடல்கீறுந்
தண்டலையுடுத்தநிடதந்தனிபுரக்கு
மொண்டிறலுடைக்குரிசில்செய்திறமுரைப்பாம்.

[இதுமுதல் பதினாறுபாட்டுகளால் தமயந்தியின் கலியாண ஓலைகண்டு தேரேறிச்செல்லு நளராஜனை இந்திரன் முதலிய நால்வருங்கண்டு வியந்தமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) அண்டருலகத்து-தேவருலகத்தைபாளுகின்ற, இறைவன்-இந்திரன், அவ்வுழி-அவ்விடத்தில், இறப்ப-தங்க, மண்டு-நெருங்கிய, புனல்-நீரிலிருக்கின்ற, வாளை வாளைமீன்களானவை, வளர்-வளர்கின்ற, பூகம்-கமுகினுடைய, மடல்-பாளைகளை, கீறும்-கிழிக்கின்ற, தண்டலை - சோலைகளை, உடுத்த-உடுக்கப்பெற்ற, நிடதம்-நிடததேசத்தை, தனி-ஒப்பற, புரக்கும்-காக்கின்ற, ஒள்-ஒள்ளிய, திறலுடை-வலிமையையுடைய, குரிசில்-நளமஹாராஜன், செய்திறம்-செய்தகாரியத்தை, உரைப்பாம் (யாம்) சொல்லுவோம் எ-று.

இதுகவிக்கூற்று,

(க-து.) தேவேந்திரனவ்விடத்திருக்க நளன்செய்கையைச் சொல்லுவாம் எ-ம். (1)



8 தமயந்தி சுயம்வரம்-௨௪௩-வது-பக்கம்.

அன்னமுரைசெய்தவெழிலாயிழையைநெஞ்சத்
துன்னியயர்வோடுமுயிருண்டிலைகொலென்னக்
கன்னன்மதனைங்கணைகருத்திடைகுளிப்ப
மன்னவர்கண்மன்னன்மதிமாழ்கியயர்காலை.

(இ-ள்.) அன்னம்-அன்னப்புள்ளானது, உரைசெய்த-சொல்லிய எழில்-அழகிய, ஆயிழையை-தமயந்தியை, நெஞ்சத்து-மனத்திலிடத்து, உன்னி - நினைத்து, அயர்வோடும்-சோர்வுடனே, உயிர் - உயிரானது, உண்டிலைகொலென்ன-உண்டோவில்லையோவென்றுசொல்ல, கன்னல்-கரும்புவில்லேந்திய, மதன்-மன்மதனுடைய, ஐங்கணை-பஞ்சபாணங்களும், கருத்திடை-கருத்தினிடத்து, குளிப்ப-தைக்க, மன்னவர்கண்மன்னன்-நளனானவன், மதிமாழ்கி-அறிவுமயங்கி, அயர்காலை-துன்பப்படுஞ்சமயத்தில் எ-று.

இச்செய்யுளும் வருஞ்செய்யுளும் குளகம்.

(க-து.) நளன் தமயந்தியை நினைத்து வருத்தப்படுங்காலத்தில் எ-ம். 2

பூகமடல்கீறியிளவாளைபுனல்காலு
மேகமிசைதாவிடும்விதர்ப்பநகர்மன்ன
னோகையொடளித்தவுயிரோவியநிகர்க்குந்
தோகைமணவோலைகொடுதூதுவரடைந்தார்.

(இ-ள்.) பூகமடல்-கமுகமடலை, கீறி-கிழித்து, இளவாளை-இளமைபொருந்தியவாளைமீன்களானவை, புனல்காலும்-சிந்தைசொரிகின்ற, மேகமிசை-மேகத்தின்மீது, தாவிடும்-தாவுகின்ற, விதர்ப்பநகர்-விதர்ப்பதேசத்தையாளுகின்ற, மன்னன்-வீமராசனானவன், ஓகையொடு-மகிழ்ச்சியுடனே, அளித்த-பெற்ற, உயிர்-உயிரையுடைய, ஓவியம்-சித்திரத்தை-நிகர்க்கும்-ஒப்பாயிருக்கின்ற, தோகை-தமயந்தியினது, மணவோலைகொடு-கலியாணவோலையைக்கொண்டு, தூதுவர்-தூதர்கள், அடைந்தார்-சேர்ந்தார்கள் எ-று.

(க-து.) தூதர்கள் தமயந்தி கலியாணவோலையைக்கொண்டு வந்தார்கள் எ-ம். 3

முடங்கலின்வரைந்தவுரைமுற்றுமுணராமுன்
றடம்புயம்வளர்ந்தனவரைக்குமவமைசாலக்
குடங்கையினகன்றவிழிகோநகரிசெல்வான்
மடங்கலனையானுளமகிழ்ச்சியொடெழுந்தான்.

(இ-ள்.) முடங்கலின்-ஓலைச்சுருளில், வரைந்த-எழுதப்பட்ட, உரை-சொல்லுகளை, முற்றும்-முழுவதும், உணராமுன்-அறியாமுன்னே, தடம்-பெரிய புயம்-தோள்களானவை, வரைக்கு-பர்வதங்களுக்கு, உவமைசால-உவமைபொருந்த, வளர்ந்தன-பருத்தன, குடங்கையின்-உள்ளங்கைபோல, அகன்ற-பரந்த

விழி-கண்களையுடையதமயந்தியினது, கோநகரி-குண்டினபுரத்துக்கு, செல்வான்-செல்லும்பொருட்டு, மடங்கலனையான்-சிங்கவேற்றினையொத்த நளமஹாராசன், உளமகிழ்ச்சியொடு-மனக்களிப்பினுடனே, எழுந்தான் - எழுந்தனன் எ-று.

(க-து.) நளன் திருமணவோலையின் செய்தியறியுமுன் புயங்கள் பூரித்தன. விதர்ப்பதேசத்துக்குச் செல்லும்பொருட்டெழுந்தான் எ-ம். 4

தொய்யுளைவயப்புரவிகோடியுபமுழைபோத
மையன்மதவாரணமருங்குறநெருங்க
வெய்யதிறல்வாளுழவர் வேலைபுடைசூழ
மொய்திரையளக்கரினியம்பலமுழங்க.

(இ-ள்.) தொய்-தொய்துகட்டிய, உளை-புறமயிரையுடைய, வயம்-வலிமைபொருந்திய, புரவிகோடி-கோடிகுதிரைகள், உழைபோத-பக்கங்களிலேவரவும், மையல்-மயக்கம்பொருந்திய, மதவாரணம்-மதயானைகள், மருங்குற-பக்கத்திலே, நெருங்க-நெருங்கிவரவும், வெய்ய-வெவ்விய, திறல்-வலிமைபொருந்திய, வாள்-வாட்படையையுடைய, உழவர்வேலை-காலாள்களாகியகடலானது புடைசூழ-பக்கங்களிலேசூழ்ந்துவரவும், மொய்-மொய்க்கப்பெற்ற, திரை-அலைகளுள்ள, அளக்கரின் - கடல்போல், இயம்பல - பலவாத்தியங்கள், முழங்க-ஒலிக்கவும் எ-று.

இச்செய்யுளும் வருஞ்செய்யுளுங் குளகம்.

(க-து.) கோடிகுதிரைகள்சூழ, யானைகள் நெருங்க, சுத்தவீரர்கள் சூழ கடல்போலவாத்தியமுழங்க எ-ம். 5

விரிகதிரெறிக்குமதி வெண்குடைநிழற்றத்
தரளநகைமாதர்பலர் சாமரையிரட்ட
வெரிமணியிமைக்குமுடி மன்னவரிறைஞ்சத்
திருவளரும்மார்பனுயர் தேரின்மிசைபோனான்.

(இ-ள்.) விரி-விரியப்பெற்ற, கதிர்-கிரணங்களை, எறிக்கும்-வீசுகின்ற, மதி-சந்திரனையொத்த, வெண்குடை-வெள்ளியகுடைகள், நிழற்ற-நிழலைச்செய்யவும், தரளம்-முத்தினையொத்த, நகை-பற்களையுடைய, மாதர்பலர்-அநேகமகளிர்கள், சாமரையிரட்ட, கவரிகள்வீசவும், எரிமணி - காந்திபொருந்தியமணிகள், இமைக்கும்-பிரகாசிக்கின்ற, முடி-மகுடத்தையுடைய, மன்னவர் அரசர்கள், இறைஞ்ச-வணங்கவும், திரு-திருமாதானவள், வளரும்-வளர்கின்ற, மார்பன்-மார்பையுடையவனாகிய நளமகாராசன், உயர்-உயர்ந்த, தேரின்மிசை-தேரின்மேல், போனான்-போயினான், எ-று.

"படையுங் கொடையுங் கொடியுமுரசு, நடைநவில்புரவியுங்களிறுந்தேரும்-தாருமுடியுநேர்வனபிறவுந், தெரிவுகொள்செங்கோ லரசர்க்குரிய" இவ்விதியால் கொடைமுதலங்கங்க ளரசர்க்குரித்தாதல்காண்க.

(க-து.) வெண்குடைபிடிக்க, பெண்கள் சாமரைவீச, மன்னவர்வணங்க, நளன் தேர்மேற்சென்றான் எ-ம். 6

தேர்நடவுகம்பலை செவிப்புகுதலோடும்
வார்கடன்முழக்கொலி கொலோமழைமுழக்கோ
சார்வதென்ன வையமுறும் வானவர்கண்மு
னேர்கெழுமுமாட நிடதத்திறைஎதிர்ந்தான்.

(இ-ள்.) தேர் தேரை, நடவு-செலுத்துகின்ற, கம்பலை - ஒலியானது செவி-காதினிடத்து, புகுதலோடும்-நுழைந்தமாத்திரத்தில், வார்-நெடிய,கடன்முழக் கொலிகொலோ-கடலொலியோ, மழைமுழக்கோ-மேகத்தினொலியோ சார்வதென-அடைவதென்று, ஐயமுறும்-ஐயமடைகின்ற, வானவர்கண்முன்-தேவர்களுக்குமுன்னே, ஏர்-அழகானது, கெழுமு-பொருந்திய, மாடம்-மாளிகைகளிரிடைய, நிடதத்திறை-நிடதேசத்தரசன், எதிர்ந்தான்-எதிர்ப்பட்டான், எ-று.

கொல்-ஐயப்பொருள்.

(க-து.) நளன்தேவர்களுக்கு முன் சென்றான்-எ-ம். 7

(இதுவுமது.)

பொற்றடந்தேர்மிசைப்பொலிந்து தோன்றிய
மற்றடந்தோளினன்வனப்புநோக்கினா
ருற்றதோர்வியப்பினுக்குள்ளமீந்துதாம்
வெற்றுடம்பாயினார் விண்ணுளோரெலாம்.

(இ-ள்.) பொன்-அழகிய, தடம்-பெரிய, தேர்மிசை-தேரின்மீது, பொலிந்து-பிரகாசித்து, தோன்றிய-வந்த, மல்-மற்போர்செய்கின்ற, தடம்-பெரிய, தோளினன் - தோள்களையுடைய நளமகாராசனது, வனப்பு-அழகை, நோக்கினார் - பார்த்தார், உற்றது-அதனாலடைந்ததாகிய, ஓர் - ஒப்பற்ற, வியப்பினுக்கு-ஆச்சரியத்துக்கு, உள்ளமீந்து-மனத்தைக்கொடுத்து, விண்ணுளோரெலாம்-இந்திரன்முதலிய நால்வரும், வெற்றுடம்பாயினார்-உயிர்நீங்கிய உடம்பு போனார், எ-று.

ஆச்சரியத்தால் அபகரிக்கப்பட்ட மனத்தையுடையவராயினாரெனக் கொள்க.

(க-து.) இந்திரன் முதலானவர்கள் தேரின்மேலேறிய நளனழகைக் கண்டு மனதை நளனிடத்திற் செலுத்தி வெறியவுடம்பினரானார்கள்-எ-ம் 8

மாயிருஞாலத்துவந்துமன்னர்கோ
னேயபேரழகுகண்டிமைப்பினாட்டமோ
ராயிரம்பெற்றபேறடைந்துளேனெனச்
சேயுயிர்விசும்பினுக்கிறைவன்செப்பினான்.

(இ-ள்.) மா - மகத்தாகிய, இரு-பெரிய, ஞாலத்துவந்து-பூமியில்வந்து, மன்னர்கோன் - நளனுடைய, எய-பொருந்திய, பேரழகு - பெரிய அழகினை, கண்டு-பார்த்து, இமைப்பில்-இமைத்தலில்லாத, நாட்டமோராயிரம்-ஆயிரங் கண்களை, பெற்றபேறு-பெற்றபேற்றினை, அடைந்தனேனென-இன்று அடையப்பெற்றேனென்று, சேய்-தூரமாக, உயர்-உயர்ந்த, விசும்பினுக்கிறைவன்-சுவர்க்கத்துக்கரசனாகிய இந்திரன், செப்பினான்-சொல்லினான், எ-று.

இப்படிப்பட்ட அழகுள்ளபுருஷனைக் கண்டதில்லையென்னுங் கொள்கையனாயினானென்க.

(க-து.) இந்திரன பூமியில்வந்து நளனழகைக்கண்டு நான் ஆயிரங்கண் பெற்றதற்கு இன்று பயன்பெற்றேனென்றான்-எ-ம். 9

மண்டமர் கடந்தவேன் மன்னர்மன்னனைக்
கண்டுமற்றொருவர் தோள்காமுற்றீர்ந்தொடை
தொண்டைவாய்மடமயி லாட்டுமோவெனாத்
தெண்டிரைக்கனைகடற்செல்வன் கூறினான்.

(இ-ள்.) மண்டு-நெருங்கிய, அமர் - போரை, கடந்த-செயித்த, வேல்-வேற்படைபொருந்திய, மன்னர்மன்னனை-நளனை, கண்டு-பார்த்து, மற்றொருவர்தோள்-வேறொருவர் புயங்களை, காமுற்று-ஆசைப்பட்டு, தொண்டை-கோவைக்கனிபோன்ற, வாய்-வாயையுடைய, மடமயில்-தமயந்தியானவள், ஈர்ந்தொடை-குளிர்ச்சிபொருந்திய மாலையை, சூட்டுமோவெனா-தரிப்பாளோவென்று, தெள்-தெள்ளிய, திரை-அலைகளையுடைய, கனை-ஒலிக்கின்ற, கடற்செல்வன்-கடலுக்கரசனாகிய வருணன், கூறினான்-சொல்லினான், எ-று.

(க-து.) நளனைக்கண்ட தமயந்தியானவள் வேறொருவனுக்கு மாலையிடுவளோவென்று சமுத்திரராசன் சொன்னான்-எ-ம். 10

பாந்தள்மேற்கிடந்தபார் பரிக்குந்திண்டிறல்
வேந்தனுக்கேதொடைவேய்ந்திலாளெனி
லேந்திழையெழினல மென்கொலமெனாக்
காந்துவெங்கதவெரிக்கடவுள்சாற்றினான்.

(இ-ள்,) பாந்தண்மேல்-ஆதிசேடன்மீது, கிடந்த-இருந்த, பார்-பூமியை, பரிக்கும்-சுமக்கின்ற; திண்-திண்ணிய, திறல்-சௌரியத்தையுடைய, வேந்தனுக்கே-நளமகாராஜனுக்கே, தொடை-மாலையை, வேய்ந்திலளெனில்-சூட்டாளேயானால். ஏந்திழை-தமயந்தியினது, எழில்-அழகினது, நலம்-நன்மை, என்கொலமென-என்னபிரயோசனமாகுமென்று, காந்து-காந்துகின்ற, வெம்-வெவ்விய, கதம்-வேகத்தையுடைய, எரிக்கடவுள் - அக்கினிதேவன், சாற்றினான்-சொல்லினான், எ-று.

[கொல் - அசைநிலை.]

(க-து.) நளனுக்குத் தமயந்தி மாலையிடாளேயானால் இத்தமயந்தி அழகு என்ன பயன்படும். என்றக்கினிதேவன் சொன்னான்-எ-ம். 11

கழைகளிபுகர்முகக்களிநல்யானையா
னிழைசுடரெறிப்பமந்திறுத்தவேந்திழை
விழவினுக்காயின்யாமீண்டுபோதலே
யழகிதென்றந்தகனறைந்திட்டானரோ.

(இ-ள்.) கழை-கரும்புகளை, சுளி-முறிக்கின்ற, புகர்முகம்-புள்ளிபெற்ற முகத்தையுடைய, களி-களிப்புப்பொருந்திய, நல்-நல்ல, யானையான்-யானையையுடைய நளமகாராஜன். இழை-ஆபரணங்கள், சுடர்-காந்தியை, எறிப்ப-வீச, வந்திறுத்தது-வந்துதங்கியது, ஏந்திழை-தமயந்தியினது, விழவினுக்காயின்-விவாகத்துக்கானால், யாம்-நாம், மீண்டுபோதலே-திரும்பிச்செல்லுதலே, அழகிதென்று-அழகையுடையதென்று, அந்தகன்-யமனானவன், அறைந்திட்டான் சொல்லினான், எ-று.

(க-து.) நளன் தமயந்திக்கு நாயகனானால் நாம் மீண்டுபோதலுத்தமமென்று யமன்சொன்னான் எ-ம். 12

போர்த்தொழில்வைரவாட்பொருவிலண்ணல்செந்
தார்ப்பசுங்கிளியனாள்பெறுதுபோய்ப்
கார்க்குழலரம்பையர்கமலவாண்முகம்
பார்ப்பதெவ்வாறெனப்பரிவிற்கூறினான்.

(இ-ள்.) போர்-போர்செய்கின்ற, தொழில்-தொழிலையுடைய, வைரவாள், வச்சிராயுதமேந்திய, பொருவில் - ஒப்பில்லாத, அண்ணல்-இந்திரனானவன் செம்-சிவந்த, தார்-இரேகையையுடைய, பசும்-பசுமைபொருந்திய, கிளியனாள்-கிளியையொக்கின்றவளாகிய தமயந்தியினது, தார்-மாலையை, பெறுது-பெற்றுக்கொள்ளாமல், போய்-சென்று. கார்-கரிய, குழல்-கூந்தலையுடைய, அரம்பையர்-அரம்பைமாதருடைய, கமலம்-தாமரைமலர்போன்ற, வாள்-ஒளிபொருந்திய, முகம்-முகத்தை, பார்ப்பது-நோக்குவது, எவ்வாறென-எவ்வாறென்று, பரிவில்-துன்பத்தினால், கூறினான்-சொல்லினான், எ-று.

சந்தேகத்தால் இந்திரன் இவ்வாறு கூறினானென்க.

(க-து.) இந்திரன் தமயந்திமாலையைப் பெறுது போய் அரம்பை முதலியோர் முகத்தை எப்படி பார்ப்பதென்று சொன்னான் எ-ம். 13

அரத்தமுண்டொளிரும் வாளவுணர்ச்செற்றுநந்
திருத்தகுசெல்வமுஞ் சிறப்புநல்கிய
விரைத்துணரலங்கலான் வீரசேனன்போன்
றிருத்தலாலிவனள னென்னவேண்டுமால்,

(இ-ள்.) அரத்தம்-உதிரத்தை, உண்டு-பானம்பண்ணி, ஒளிரும்-பிரகாசிக்கின்ற, வாள்-வாட்படையையுள்ள, அவுணர்-அசுரர்களை, செற்று-கொன்று நம்-நம்முடைய, திருத்தரு-திருவிற்குத்தக்க, செல்வமும்-செல்வத்தையும்,சிறப்பும்-சிறப்பையும், நல்கிய-கொடுத்த, விரை-வாசனைபொருந்திய, துணர்-பூங்கொத்துக்களையுற்ற, அலங்கலான் - மாலையையுடையவனாகிய, வீரசேனன் போன்ற-வீரசேனராசனை யொத்தவனாகி, இருந்தலால்-இருந்திடலால், இவன்-இவனை, நளனென்னவேண்டும் - நளமகராசனென்று சொல்லவேண்டும் எ-று.

மிகுந்த வலிமையுடையவரென்பது தோன்ற, அரத்தமுண்டொளிரும் வாளவுணரென்றும்; அவர்களான்முழுவது மிழந்தமைதோன்ற, திருத்தரு செல்வமுஞ் சிறப்புநல்கிய வென்றும்; வெற்றிமாலை யணிந்தோனென்பது தோன்ற, விரைத்துணரலங்கலானென்றும; சொல்லினர். முன்னொருகாலத்திலே தன்னைப் புறங்கண்ட அசுரர்களைவென்று, தெய்வலோகத்தை நிலைநிறுத்தி, இழந்தசெல்வத்தையுஞ் சிறப்பையுந்தந்த வீரசேனனைப் போலுதலால்; அவன் குமாரனாகிய நளனென்று இந்திரன் நிச்சயித்தான். தந்தைபோலும் புதல்வரென்பது -"செந்நெலாலாய செழுமுளைமற்றுமச், செந்நெலேயாகி விளைதலா-லந்நெல், வயனிறையக்காய்க்கும் வளவயலூர, மகனறிவுதந்தையறிவு." இதனாற்காண்க.

(க - து.) அசுரர்களைக்கொன்று நமது செல்வத்தைக் கொடுத்த வீரசேனனை ஒத்திருத்தலால், இவன் அவன்மகனாகிய நளனெனச் சொல்லவேண்டுமென்றானிந்திரன் எ-ம். 14

சேற்றிதழ்த்தாமரை மலரத்தெண்கட
ோற்செங்கதிரெனத் தோன்றுநின்னையா
மேற்றநல்லோரையி லெழுந்ததாலன்றோ
வாற்றெதிர்ப்பட்டன மலங்கல்வேலினாய்.

(இ-ள்.) அலங்கல்-வெற்றிமாலையணிந்த, வேலினாய்-வேற்படையேந்திய நளமகாராசனே, சேறு-சேற்றிலிருக்கின்ற, இதழ்-இதழ்களையுடைய, தாமரை-தாமரைகள், மலர-விகசிக்க, தெள்-தெள்ளிய, கடல்-கடலினிடத்து,தோற்று-தோற்றுகின்ற, செங்கதிரென-சூரியனைப்போல, தோன்றுநின்னை-வந்தவுன்னை, யாம்-யாங்கள், ஏற்ற-தக்க, நல்-நல்ல, ஓரையில்-இராசியில், எழுந்தாலன்றோ-புறப்பட்டபடியாலல்லவா, ஆறு-வழியில், எதிர்ப்பட்டனம்-எதிர்ப்பட்டோம் எ-று.

ஓரை-இராசி. "ஓரையேமாதர்கூடிவிளையாடலுடனிராசி" என்பதனலறிக. [இது உவமையணி.]

(க-து.) சூரியன்போலத் தோற்று முன்னை நல்ல இலக்கினத்திற் புறப்பட்டபடியால் வழியிற்கண்டனமென்றானிந்திரன் எ-ம். 15

இவனழற்கடவுண் மற்றிவள்வெங்கூற்றுவ
அவனெறிகடற்கிறை யொழிந்துநின்றயான்
கவனவாம்பரியுள முணருங்காவல
வவிரொளிமணிமுடி யமரர்வேந்தனே.

(இ-ள்.) கவனம்-வேகத்தையுடைய, வாம்-தாவுகின்ற, பரியுளம்-குதிரையினதுகருத்தை, உணருங்காவல-அறியும் நளமகாராசனே, இவனழற்கடவுள் இவனக்கினிதேவன், இவன்வெங்கூற்றுவன் - இவன்வெப்பம்பொருந்திய யமன், உவன்-அவன், எறிகடற்கிறை-அலையைவீசுகின்ற கடற்கரசனாகியவருணன், ஒழிந்துநின்ற-இவரொழியநின்ற, யான்-யாரோவெனில், அவிர்-பிரகாசிக்கின்ற, ஒளி-காந்திபொருந்திய, மணி-மணிகளாலிழைக்கப்பட்ட, முடி-கிரீடத்தையுடைய, அமரர்வேந்தன்-தேவர்க்கரசனாகியவிந்திரன் எ-று.

ஒழிய - என்னுஞ் செயவெனெச்சம், செய்தெனெச்சப்பொருளில் வந்தது.

(க-து.) குதிரைக்கருத்தையறியு நளராஜனே, இவனக்கினிதேவன்-இவன்யமன்-இவன்வருணராசன்-யான் இந்திரன் என்றான் எ-ம். 16

உன்னுழைவேண்டுவ தொன்றுண்டாங்கது
பின்னர்யாங்கூறுது மென்றுபெட்புறும்
பொன்னகர்க்கிறையவ னிருந்தபோதினின்
மன்னவனவரடி வணங்கினனரோ.

(இ-ள்.) உன்னுழை - உன்னிடத்தில், வேண்டுவது - யாம்விரும்புவது, ஒன்றுண்டு-ஒருகாரியமுண்டு, அது-அதனை, பின்னர்-பின்பு, யாங் கூறுதுமென்று-யாம் சொல்லுவேமென்று, பெட்புறும் - விருப்பமடைந்த, பொன்னகர்க்கிறையவன்-இந்திரனானவன், இருந்தபோதினில்-இருந்தபொழுதில், மன்னவன்-நளமகாராஜன், அவரடி-இந்திரன்முதலிய அந்நால்வர்பாதங்களையும், வணங்கினன்-வணங்குதல்செய்தான் எ-று.

(க-து.) உன்னிடத்தில் வேண்டுவதொன்றுண்டு அதைப்பின்னே சொல்வேமென் றிந்திரன்சொல்ல, நளனிந்திரனைவணங்கினான் எ-ம். 17

உண்ணெகிழ்ந்திறைஞ்சியவலங்கொடோளினான்
விண்ணுலகாள்பவர்க்கரியமேம்பொருண்
மண்ணுலகாள்பவர்மாட்டுவைகுமோ
வெண்ணின்மற்றிவருளம்யாவதாங்கொலோ.

[இதுமுதல் ஆறுபாட்டுகளால் நளனுடைய சிந்திப்புச் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) உள்-உள்ளம், நெகிழ்ந்து-குழைந்து, இறைஞ்சிய-வணங்கிய, உலங்கொள்-திரள் கல்லினுடைய வலிமையைக்கொண்ட, தோளினன்-தோள்களையுடைய நளமகாராசன், விண்ணுலகாள்பவர்க்கு - தெய்வலோகத்தையாளுகின்றவர்க்கு, அரிய-அருமையாகிய, மேம்பொருள் - மேன்மைப்பட்டபொருள், மண்ணுலகாள்பவர்மாட்டு - மண்ணுலகாள்பவரிடத்து, வைகுமோ - இருக்குமோ, எண்ணில்-எண்ணுமிடத்தில், இவருளம் - இவருடையமனம், யாவதாங்கொலோ-யாதாகுமோ எ-று.

மண்ணுலகத்தோர் வருந்தித் தவஞ்செய்து பெறற்குரியது பொன்னுலகம்; அதனையாளுகின்ற தலைமைபெற்ற இந்திரனுக்கும் அரியபொருளுண்டோ. ஆயின் அது நம்பாலுளதாகுமோ. ஆதலின் இஃதியாதோவென ஐயுற்றனனென்க. மண்ணுலகென்றதனால், விண்ணுலகைப் பொன்னுலகெனக் கொள்ளப்பட்டது.

(க-து.) அவ்வாறுவணங்கிய நளன் விண்ணாட்டரசர்க்கரியபொருள் மண்ணாட்டரசர்க்குக்கிடைக்குமோ, இவர்கருத்தென்னவோ, என்றான் எ-ம். 18

குறிப்பறிந்தீதலேகொடைமற்றின்றென
மறுத்தலேகேட்டபின்வழங்கலாதலித்
பெறற்கருமாவியும்பெட்பினீகுவன்
றிறப்படவிவருளந்தெரிந்ததில்லையால்.

(இ-ள்.) குறிப்பறிந்து-ஒருவர் குறிப்பினைத்தெரிந்து, ஈதலே-கொடுத்தலே, கொடை-கொடுத்தலாகும், கேட்டபின்-கேட்டபின்பு, வழங்கல்-கொடுத்தல், இன்றென-இல்லையென்று, மறுத்தலே-தடுத்தலேயாகும், ஆதலின் - ஆகையால், பெறற்கரும்-பெறுதற்கரிய, ஆவியும்-உயிரையும், பெட்பின்-அன்பினாலே, ஈகுவன்-கொடுப்பேன், திறப்பட-நிச்சயமாக, இவருளம்-இவருடையமனம், தெரிந்ததில்லை-தெரியவில்லை எ-று.

உம்மை-உயர்வுசிறப்பு. குறிப்பறிதலாவது-தன்னிடத்தொன்றை விரும்பி வருபவனது முகக்குறிகளா லவன்கருத்தையறிதல். அது - "உயிர்க்கொலை புரிந்தவர் முகக்குறியுரைக்கும்" இதுபோல்வனவாத லறிக. அஃதறிந்தீதலாவது - "இலனென்னுமெவ்வ முரையாமையீதல், குலமுடையான் கண்ணேயுள" என்பதனாலறிக. கேட்சமிடத்துண்டாவனவாகிய மானமிழத்தல்-அச்சப்படுதல்-முதலியவருத்தம், இல்லையென்னும்போ துண்டாகும்வருத்தத்தோடொப்பாதலின்; இன்றெனமறுத்தலே கேட்டபின்வழங்கலென்றார். கொடுக்கும்பொருளின் முடிவாகிய ஆவியெனினும், அன்போடு கொடுப்பேனென்றதாம்.

(க-து.) குறிப்பறிந்து கொடுத்தலேகொடையாகும். கேட்டபின்கொடுத்தல் மறுத்தலாகும். ஆகையால் என்னுயிரையுங் கொடுப்பேன் உண்மையாக இவருள்ளத்தை யறிந்திலேன் என்றான் எ-ம். 19

ஒளிமுகமிழப்பவந்துற்நாணமீக்
கிளர்தரவில்லெனக்கிளக்குமூர்ச்சனை
தெளிதரமுகத்தினிற்றெளித்தற்கன்றுகொல்
நளிபுனல்பொருளொடுநல்குகின்றதே.

(இ-ள்.) முகம்-முகமானது, ஒளியிழப்ப-ஒளிநீங்க, வந்து-வந்து, உற்ற-மிகுந்த, நாணம்-நாணமானது, மீக்கிளர்தர-அதிகரிக்க, இல்லெனக்கிளக்கும்-இல்லையென்றுசொல்லும், மூர்ச்சையாது, தெளிதர-தெளியும்படி, முகத்தினில்-முகத்தினிடத்தில், தெளித்தற்கன்றுகொல் - தெளித்தற்கல்லவா, நளி-குளிர்ந்த, புனல்-நீரை, பொருளோடு-திரவியத்துடனே, நல்குகின்றது-கொடுக்கின்றது எ-று.

நாணந்தலைக்கொண்டு எனக்கில்லையென்று சொல்லும்பொழுதுண்டாகுமூர்ச்சைதெளிதற்கு, முகத்திற்றெறிப்பத் தண்ணீரைப் பொருளொடுகொடுப்பதென்க. [விதிப்படி கொடுக்குநீரில் மூர்ச்சை தெளிதற்பொருட்டெனக் குறித்தலால், தற்குறிப்பணியாம்]

(க-து.) அகமலர்ந்து கொடுத்தல் முகமலர்தற்பொருட்டு எ-ம். 20

ஐந்தருநீழலினரசுவைகிய
விந்திரன்முதலினோரீகென்றென்னுழை
வந்துயர்பெரும்புகழ்வழங்கினாரிவர்
சிந்தனைமகிழ்வுறவென்கொல்செய்வதே.

(இ-ள்.) ஐந்தருநிழலின்-பஞ்சதருவினிழலினிடத்து, அரசுவைகிய-அரசிருக்கின்ற, இந்திரன்முதலினோர்-இந்திரனாதியோராகியநால்வரும், ஈகென்று-தருவாயென்று, என்னுழைவந்து-என்னிடத்தில்வந்து, உயர்-உயர்ந்த, பெரும்புகழ் - பெரியகீர்த்தியை, வழங்கினார் - கொடுத்தார்கள், இவர் - இவர்களுடைய, சிந்தனை-மனங்கள், மகிழ்வுற-மகிழ்ச்சிபொருந்த, என்செய்வது - யாது செய்வது எ-று.

யாதுவிரும்பினும் இந்திரனுக்கொரு குறைவில்லை யென்பதுதோன்ற, ஐந்தருநீழலினரசுவைகிய வென்றார். யாசகர்கள் எதைக்கேட்க நினைத்தார்களோ அதைக்கொடுத்தலல்லாமல், அவராற்றரப்பட்டபுகழ் நில்லாதென்பது கருத்து.

(க-து.) இந்திரன் முதலானவர்களென்னிடத்தில்வந்து ஈந்தருள்செய்யென்றார்கள். இவர்கள்மனமகிழும்படி என்செய்யலாமென்றான் எ-ம். 21

உரவுநீர்க்கருங்கடலுடுத்தமாநிலத்
தருளுடனிம்மையினளித்தவான்பொருண்

மருவியமறுமையில்வழங்குபான்மை
லிரவலர்தமரினுமினியராவரே.

(இ-ள்.) உரவு-ஒலிக்கின்ற, நீர்-நீரையுடைய, கருங்கடல் - கரியகடலை, உடுத்த - ஆடையாகத்தரித்த, மாநிலத்து-மகத்தாகியபூமியில், அருளுடன்-கருணையுடனே, இம்மையில் - இப்பிறப்பில், அளித்த-கொடுத்த, வான்பொருள்-மேலாகியபொருளை, மருவிய-பொருந்திய, மறுமையில்-மறுபிறப்பில், வழங்குபான்மையால் - கொடுக்கின்ற தன்மையால், இரவலர்-யாசகர்கள், தமரினும்-தம்மவரினும், இனியராவர்-இனிமையுடையராவர் எ-று.

தம்மவர் - உறவோர். இப்பிறப்பிற்கொடுப்பதை மறுபிறப்பிலவரிருக்குமிடத்திற்குச்சென்று தருபவராதலால், யாசகரைத் தம்மவரினும் இனியரென்றார். "அற்றாரழிபசிதீர்த்தலஃதொருவன், பெற்றான்பொருள்வைப்புழி" என்றார்போல - அதுகொடுப்பவருக்கு ஆஸ்தியென்பதறிக.

(க-து.) இப்பிறப்பிற்கொடுத்த பொருள் மறுபிறப்பில் வருமாதலால், யாசகர்கள் உறவினரைப்பார்க்கிலும் இனிமையுடையவராவார்கள் எ-ம். 22

உடைப்பெரும்பொருளினை யுலகினூதியங்
கிடைப்பதற்களித்தலிற்கிளர்நிரப்பினா
லடுத்துவந்தேற்குநர்க்கார்வமீதுறக்
கொடுக்கிலொன்றேபலகோடியாகுமால்.

(இ-ள்.) உடை-தமதாகவுடைய, பெரும்பொருளினை - பெரியதிரவியத்தை, உலகில்-உலகத்தில், ஊதியம்-இலாபம், கிடைப்பதற்கு-கிடைக்கும்பொருட்டு, அளித்தலில்-கொடுப்பதிலும், கிளர்-மிகுந்த, நிரப்பினால்-வருமையினால் அடுத்துவந்து-அனுசரித்துவந்து, ஏற்குநர்க்கு-யாசிப்பவர்க்கு, ஆர்வம்-ஆசை, மீதுற-அதிகரிக்க, கொடுக்கில்-கொடுத்தால், ஒன்றே-ஒருபொருளே, பலகோடியாகும்-பலகோடிப்பொருளாகும், எ-று.

உலகத்திலே ஒருவருக்கு இலாபத்திற்குக் கொடுப்பதைக்காட்டிலும், யாசகர்க்குக் கொடுப்பதில், அனேகங்கோடி இலாபம் உண்டென்பதாம்.

(க-து.) தமகுள்ளபொருளை இலாபங் கிடைக்கும்பொருட்டுக்கொடுப்பதிலும் யாசகருக்குக்கொடுக்குமொன்றே பலகோடியாகும் எ-ம். 23

என்றுமற்றினையனவெண்ணிவண்ணவான்
குன்றெனப்பணைத்துயர்குவவுத்தோளினான்
வன்றிறல்வாசவன்வதனநோக்கிமற்
றென்றுநீகேட்டியென்றுரைத்தன்மேயினான்.

[இதுமுதல் இரண்டுபாட்டுகளால் நளன்சொல்லுதல் சொல்லப்படுகின்றது.

(இ-ள்.) என்று-இப்படியென்று, இனையன-இத்தன்மையவாக, எண்ணி-நினைத்து, வண்ணம்-அழகிய, வான்மேலாகிய, குன்றென - மலையைப்போல, பணைத்து-பருத்து, உயர்-உயர்ந்த, குவவு - திரட்சிபொருந்திய, தோளினன்-தோளையுடைய நளமஹாராஜன், வன்திறல் - மிகுந்தவலுமைபடைத்த, வாசவன்-இந்திரனுடைய, வதனநோக்கி - முகத்தைப்பார்த்து, ஒன்று-ஒருசெய்தி, நீகேட்டியென்று-நீகேட்பாயாக வென்று, உரைத்தன்மேயினன் - சொல்லத்தொடங்கினன், எ-று. மற்றிரண்டு அசைநிலைகள்.

(க-து.) நளனிவ்வாறு நினைத்துத் தேவேந்திரன் முகத்தைப்பார்த்துச் சொல்லத்தொடங்கின எ-ம்.

என்னருந்தவத்தினன்றெனதுதொல்குல
முன்னையோரருந்தவமுயன்றபான்மையாற்
பொன்னகர்துறந்துநீர்போதப்பெற்றனன்
சொன்னவைமறுக்கிலன்சொல்கவென்றனன்.

(இ-ள்.) என்-என்னால் செய்யப்பட்ட, அருந்தவத்தின் - அரியதவத்தினாலே, அன்று-அன்றாகும், எனது-என்னுடைய, தொல்குலம்-பழையகுலத்திற்றோன்றிய, முன்னையோர்-பெரியோர்கள், அருந்தவம்-அரியதவத்தை, முயன்றபான்மையால் - முயன்றுசெய்தபடியினாலே, பொன்னகர் - தெய்வலோகத்தை, துறந்து-நீக்கி, நீர்போதப்பெற்றனன்-நீவிர் இங்கே வரப்பெற்றேன், சொன்னவைமறுக்கிலன்-சொல்லியசெய்திகளை மறுக்கமாட்டேன், சொல்கவென்றனன்-சொல்லக்கடவீர்களென்றான் எ-று.

மேன்மையுள்ள நீவிர்வருவதற்கு ஏற்றதவம் யானொருவன்செய்ததுபோதாதாதலால், எனக்கு முற்பட்டவர்செய்த தளமாகுமென்றான்.

(க-து.) என்றதவத்தாலல்ல, எங்குளத்தோர செய்ததவத்தால் நீங்களிங்கேவரப் பாக்கியம்பெற்றேன். தாங்கள் சொல்பவற்றைத்தடுக்கேன்சொல்லுங்களென்றான் எ-ம்.

25 ஆங்கதுகேட்டவானரசன்பொற்பினால்
வீங்குதோண்மாரனைவென்றநீயலால்
யாங்குளரவன்றெடுத்தெய்புமின்னாப்
பூங்கணையால்வருந்துயரம்போக்குவார்.

[இதுமுதல் இரண்டுபாட்டுகளால் நளனுக்கு இந்திரன்சொல்லுதல்சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) ஆங்கு-அவ்விடத்தில், அது-அம்மொழியை, கேட்ட - கேள்விப்பட்ட, வானரசன்-இந்திரனானவன், பொற்பினால்-அழகினால், வீங்கு-மிகுந்த, தோள்-தோளையுடைய, மாரனை-மன்மதனை, வென்ற - வெற்றிகொண்ட, நீய

லால்-நீயொருவனல்லாமல், அவன்-அம்மன்மதனானவன், தொடுத்து-நாரியிற் றொடுத்து, எய்யும்-பிரயோகஞ்செய்கின்ற, இன்-இனிய, நறு-தேனொழுகுகின்ற, பூங்கணையால்-மலரம்பால், வரும்-வருகின்ற, துயரம்-துக்கத்தை, போக்குவார்-நீங்குவார், யாங்குளர்-எவ்விடத்திலுளர் எ-று.

அழகினான்மிகுந்த தோளையுடையமன்மதனைசெயித்து நீயல்லாமல், அவன்வாளியால் வருந்துன்பத்தை நீக்குவோர்பிறர்யார். அழகினாலென்றதை வீங்குதலோடுங் கூட்டுக. அன்றி-வென்றவென்பதோடுங் கூட்டிப் பொருள்களின் மிகுந்தவழகுள்ளவனென்னும் பொருள்படுதலால்; துன்பநீக்குதற்குவல்ல ஏதுவில்லையாயிற்று. முற்படியாயின் - காமனை வென்றவனென்றலில் சிதேந்திரியன் என்னும் பொருள்படலால் அத்துன்பமடங்கியவன் பிறர்க்கும் அத்துன்பத்தை நீக்குவானென்பது பெற்றாம்.

(க-து.) அவ்வார்த்தையைக்கேட்ட இந்திரனானவன் உன்னையல்லாது மன்மதபாணத்தை நீக்குபவர்யார் என்றான் எ-ம். 26

வெயில்விரிமணிமுடிவீமனல்கிய
மயிலியன்மதர்விருவளைக்கைமங்கைபாற்
செயிரறுதூதுநீசெலவேண்டுமென்
றுயிரிரப்போரினுமுளையக்கூறினான்.

(இ-ள்.) வெயில்-பிரகாசம், விரி-விரிகின்ற, மணி-மணிகள்பதித்த, முடி-முடியையுடைய, வீமனல்கிய-வீமராசன்பெற்ற, மயில்-மயிலையொத்த, இயல்சாயலும், மதர்-களிப்புமிக்க, விழி-கண்களும், வளைக்கை-வளையலையணிந்தகைகளைப்பெற்ற, மங்கைபால்-தமயந்தியிடத்தில், செயிரறு-குற்றமற்ற, தூதுசெல்லவேண்டுமென்று, நீதூதுபோகவேண்டுமென்று, உயிரிரப்போரினும்-உயிரைக்கொடுவென்றிரப்பவரைப் பார்க்கிலும், உளைய-வருந்த, கூறினான்-சொல்லினான் எ-று.

நளனால் விரும்பப்பட்ட உயிரினுஞ்சிறந்த தமயந்தியினிடத்து அவனே தூதுசெல்லுதலில், ஒருவருயிரிரத்தற்கணுளதாந்துன்பத்தினும் அதிகவருத்தமிருத்தலால்; உயிரிரப்போரினு முளையக்கூறினான் என்றார்.

(க-து.) இந்திரன் நளனைப்பார்த்துத் தமயந்தியிடத்துத் தூதுசெல்லவேண்டுமென்றான் எ-ம். 27

திருத்தகுசெவியிடைச்சிலையினூடுற
வுருக்கியசெம்பினையூற்றினாலென
மருத்துவன்றீமொழிகேட்டுமன்னர்கோன்
கருத்தழிந்தாருயிர்கலங்கினானரோ.

இதுமுதல் நான்குபாட்டுகளால் நளன்வருத்தமடைதல் சொல்லப்படுகின்றது.]

[(இ-ள்.) திருத்தகு-அழகுபொருந்திய, செவியிடை-காதினிடத்திலே, சிவையினூடு-உலைமூக்கில், உற-பொருந்த, உருக்கிய-உருக்கப்பெற்ற, செம்பினை-செம்பை, ஊற்றினுலென-ஊற்றியதுபோல, மருத்துவன்-இந்திரனது, தீமொழி-தீமையொத்த சொல்லை, கேட்டு-கேள்விப்பட்டு, மன்னர்கோன்-நளனுனவன், கருத்தழிந்து-நினைவுமறந்து, அர்-நிறைந்த, உயிர்-ஆவி, கலங்கினுன்-கலக்கமுற்றுன் எ-று.

தான்விரும்பிய தமயந்தியை யபகரிக்கத் தன்னையே தூதுசெல்லச் சொன்னதாதலால், நளனுக்கு இந்திரன்சொல்லியது தீமொழியாயிற்று. [செம்பையூற்றினுலென வெனலால், உவமையணியாம்]

(க-து.) நளன் உருக்கியசெம்பினைக் காதிலூற்றினுற்போலும் இந்திரன் கொடுமொழிகேட்டுக் கருத்தழிந்து உயிர்கலக்கமடைந்தான் எ-ம். 28

குருமணிமேகலைத் தவளைக்கண்கொலோ
பொருமதன்பகழியோபொய்ம்மைதீதெனுந்
தருமமோவுயிர்நிலைதளர்ந்துவாடுமென்
மருமமீதூன்றியவாளிற்போழ்வதே.

(இ-ள்.) குரு-நிறம்பொருந்திய, மணி-இரத்நங்கள்பதிக்கப்பெற்ற, மேகலை-மேகலாபரணமணிந்த தமயந்தியினது, குவளை-நீலோற்பலம்போன்ற, கண்கொலோ-கண்ணோ. பொரு-போர்செய்கின்ற, மதன்-மன்மதனுடைய, பகழியோ-பாணமோ, பொய்ம்மை-பொய்யுரை, தீதெனும்-குற்றமென்றுசொல்லும், தருமமோ-அறமோ, உயிர்நிலை-சீவநிலையானது, தளர்ந்து-தளர்ச்சியடைந்து-வாடுமென்-மெலிவேறுகிய வென்னுடைய, மருமமீது-மார்பினிடத்தில், ஊன்றிய-தைக்கச்செய்த, வாளில்-வாளாயுதத்தைப்போல், போழ்வது-பிளக்கின்றது எ-று.

மேகலை-எட்டுகோமுள்ளது. [கண்கொலோ-பகழியோ-தருமமோ - எனலால், ஐயவணியும்; வாளிற்போழ்வதே யெனலால், உவமையணியும்; இவ்விரண்டுகலந்து வருதலால், கலவையணியுமாம்.]

(க-து.) தமயந்தியின்கணணோ, மன்மதன் பாணமோ, பொய்யுரைதீதென்னுந் தருமமோ, என்னுடையமார்பில் வாளாயுதம்போலும் பிளக்கப்பட்டது என்றுன் நளன் எ-ம். 29

என்னும்வி்ள்ளாதயர்ந்திருக்குமேமுறுந்
தன்னையுமறக்குமெய்த்தருமநன்றெனுப்

புன்னகைகோட்டுமெய்புழுங்கும்வெய்துயிர்த்த
தன்னமுன்னுரைத்தவையனைத்துமெண்ணுமால்.

(இ-ள்.) என்னும்-இப்படியென்றுசொல்லுவான், விள்ளாது-பேசாமல், அயர்ந்திருக்கும்-துன்பப்படுவான், எமுறும்-மயங்குவான், தன்னையுமறக்கும்-தன்னையுமறப்பான், மெய்-உண்மைபொருந்திய, தருமம்-அறம், நன்றெனு-நல்லதென்று, புன்னகைகோட்டும்-புன்சிரிப்புச்கொள்ளுவான், மெய்புழுங்கும்-உடல்வெதும்புவான், வெய்துயிர்த்து-அச்சமடைந்து, அன்னம்-அன்னப்புள்ளானது, முன்னுரைத்தவையனைத்தும்-(தூதுபோய்வந்து) முன்சொல்லிய செய்தியாவையையும், எண்ணும்-நினைப்பான் எ-று.

காம்பீரநடை டையவனுதலால், விள்ளாதயர்ந்திருக்குமென்றும்; செய்வதுந்தவிர்வதுந் தோற்ருமையால், எமுறுமென்றும்; இப்படிப்பட்ட சிந்தையுடையவனுதலின், தன்னையுமறக்குமென்றும், சத்தியமிவ்வாறவருத்துவதாதலின் வஞ்சப்புகழ்ச்சியாம், தருமநன்றெனுப் புன்னகைகோட்டுமென்றும்; இதனுல் அகத்தில் அதிகதாகமுண்டானையால், மெய்புழுங்குமென்றும்; தருமத்திற்குடன்பட்டவனுகையால் இனிதனக்குக்கிடையாளென்னு நிச்சயத்தால், வெய்துயிர்த்தென்றும்; பெருதபொருளின்மேல் விருப்பம் அதிகரித்தலால் அன்னமுன்னுரைத்தவையனைத்துமெண்ணுமென்றும்; சொல்லினர். வருத்தமிகுதியின்-நகைசெய்வது. "இடுக்கண்வருங்கானகுகவதனை, யடுத்தூர்வதஃதொப்பதில்" என்பதனுலறிக. [பகையில்லாமல் ஒருகாலத்திலேகூடத்தக்க என்னும் அயர்ந்திருக்குமுதலிய பலவற்றிற்குக் கூட்டத்தைச் சொல்லுதலினுலே, கூட்டவணியாம்.]

(க-து.) இவ்வாறுசொல்வான், பேசாதுதுன்பப்படுவான் தன்னையுமறப்பான், நல்லதருமமென்றுசிரிப்பான், வெதும்புவான், அன்னஞ்சொன்னவற்றை நினைப்பான் எ-ம்.

30

முற்றிழைவனமுலைமுயங்குநன்னலம்
பெற்றிலனெனினும்வெள்பெய்யும்வாளியான்
மற்றுயிரிறப்பினும்வானவேந்தொடு
சொற்றதுமறுக்கிலனென்றுசொல்லுவான்.

(இ-ள்.) முற்று-முற்றிய, இழை-ஆபரணங்களையணிந்ததமயந்தியினது, வனம்-அழகிய, முலை-ஸ்தனங்களை, முயங்கும்-தழுவுகின்ற, நன்னலம்-நல்ல சுகத்தை, பெற்றிலனெனினும்-பெருமற்போனேனுயினும், வேள்-மன்மதனுனவன், பெய்யும்-சொரிகின்ற, வாளியால்-பாணங்களினுலே, உயிரிறப்பினும் ஆவியாயினும், வானவேந்தொடு-இந்திரனுடன், சொற்றது - சொல்லியதை, மறுக்கிலன்-தடுக்கமாட்டேனென்று நிச்சயித்துக்கொண்டு, சொல்லுவான்-சொல்லுவான் எ-று.

முற்றுதல்-விளைத்தல், இம்மைப்பயனைத் துரும்பெனநினைத்து மறுமைப் பயனை விரும்பிய காமமீரநடையையுடைய சத்தியசந்தனுகையால், இவ்வாறு கூறினனென்க.

(க-து.) தமயந்தி இன்பத்தைப்பெறேனுயினும், மன்மதன்கணையாலுயிர் போயினும், இந்திரனேடுசொன்னதைமறுக்கிலேன் என்முன் எ-ம். 31

எப்பொருளாயினும்யாவருள்ளமுங்
கைப்படுநெல்லியங்கனியிற்காணுநீர்
துப்பிதழ்மடந்தைபாற்றூதுபோமெனச்
செப்பியதெவன்கொலெஞ்சிந்தையோர்ந்துமே.

[இதுமுதல் இரண்டுபாட்டுகளால் தூதுபோகச்சொல்லிய இந்திரனை நோக்கி நளன்சொன்னவை சொல்லப்படுகின்றன.]

(இ-ள்.) எப்பொருளாயினும்-எந்தப்பொருளானாலும், யாவருள்ளமும்-எவர்களுடையமனமும், கைப்பட-உள்ளங்கையிற்பட்ட, நெல்லியங்கனியில்-நெல்லிப்பழத்தைப்போல, காணும்-அறிகின்ற, நீர்-நீவிர், துப்பு-பவளம்போன்ற, இதழ்-அதரத்தையுற்ற, மடந்தைபால்-தமயந்தியினிடத்து, தூதுபோமெனை-தூதுபோவென்று, எம்-எம்முடைய, சிந்தை-மனதை, ஓர்ந்தும்-தெரிந்தும், செப்பியது-சொல்லியது, எவன்கொல்-எவன்கொல் எ-று.

என்னுள்ளம் அவளிடத்தும் அவளுள்ளம் என்னிடத்தும் ஒருமித்துநின்றதென்பதுதோன்ற (எஞ்சிந்தையோர்ந்தும்) எனத் தன்மைப்பன்மையாகச் சொல்லினர். "ஒருதலையானின்னுது காமங்காப்போல, விருதலையானுமினிது" எனவிருததலால், ஒத்தகாமமுள்ள வெனக்கன்றி ஒருதலைக்காமமுள்ள உனக்குச் சந்துபொருந்தாதென்பது கருத்து. நெல்லிக்கனி யுள்ளும்புறமுந் தோற்றும். [நெல்லியங்கனியிலென்றமையால், உவமையணியாம்.]

(க-து.) எல்லாமறிந்தநீர் தமயந்தியிடத்துத் தூதுபோவென்றுசொல்லியதென்னவோவென்முன் எ-ம். 32

வழங்கியநும்முரையறுதுசென்றியான்
மொழிந்தனனுயினுமுன்னரேயெனை
விழைந்தவத்தளிரியல்வெள்குறுதுளங்
குழைந்துநும்பாண்மணம்பொருந்தல்கூடுமோ.

(இ-ள்.) வழங்கிய-சொல்லிய, நும்முரை-உம்முடையசொல்லை, மறுது-மறுக்காமல், யான்சென்று-யான்போய், மொழிந்தனனுயினும்-சொன்னேனுனும், முன்னரே-முன்னமே, எனைவிழைந்த-என்னைவிரும்பிய, அத்தளிரியல்-அத்தமயந்தி, வெள்குறுது - நாணுமல், உளங்குழைந்து-மனங்கரைந்து, நம்பால்-உம்மிடத்தில், மணம்-விவாகத்திற்கு, பொருந்தல்கூடுமோ-சம்மதிப்பாளோ எ-று.

யான்விழைந்தவென்னில் தன்னறிவுங் கேலாதென்பதுபற்றி, எனைவிழைந்தவென்றான். விழைந்தவளாதலால், யான்சொல்லுவதற்கு எதிர்மொழி கொடுத்தற்கே நாணும். அங்ஙனம் நாணுபவள் வவ்வாறு நின்விவாகத்திற்குச் சம்மதிப்பாளென்பது கருத்து.

(க-து.) உமதுசொல்லை நான்சொன்னேனானாலும், என்னைவிரும்பியதமயந்தி உம்மை விரும்புவாளோ என்றான் எ-ம். 33

என்னவேந்துரைத்தலுமிசைத்தசொன்மறா
நின்னைமெய்ப்பரதனைநிகரில்பார்த்தனை
முன்னினுநினைத்தவையனைத்துமுற்றுமா
லன்னநீயேகிலேதரியதாகுமே.

[இதனால் என்னால் முற்றுமோவென்றநளனுக்கு இந்திரன்சொல்லியது சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) என்ன-இப்படியென்று, வேந்து-நளமகாராசனானவன், உரைத்தலும்-சொல்லலும், இசைந்த-சொல்லிய, சொல்-சொல்லினை, மறா-மறுக்காத, நின்னை-உன்னையும், மெய்-உண்மையையுடைய, பரதனை-பரதனையும், நிகரில் ஒப்பில்லாத, பார்த்தனை-அருச்சுனனையும், முன்னினும்-நினைத்தாலும், நினைத்தவையனைத்தும்-நினைத்தகாரியங்களியாவும், முற்றும்-முடியும், அன்ன-அத்தன்மையையுடைய, நீ-நீயே, எகில்-போனால், எது-எந்தக்காரியம், அரியதாகும்-அருமையுடையதாகும், எ-று. ஆல்-அசை நிலை.

பரதன்-அர்ச்சுனன்-எனப்பொதுப்படக்கூறினும், சகுந்தலைபுத்திரனாகிய பரதனும்-எகையபுத்திரனாகிய கார்த்தவீரிய அர்ச்சுனனுமெனக் கொள்க. பரதனை இராமற்கிளவலென்றும்,பார்த்தனைவீமற்கிளவலென்றும்,பொருள்கொள்வாருமுண்டு. அவ்வாறுகொள்ளிற் காலவேற்றுமைப் படலானும், வடநூலையுடன் மாறுபடலானும், சான்றோராட்சியல்லாமையானும், மரபுவழுவாதலானும், இழுக்காமென்க. "தமைதிருத்தியசீர் வைணியனெனுந் தனிக்குடைப் பிருதுவேந்தினையும், விரைமலர்த்தொடையே கையன்றருகார்த்த வீரியவருச்சுனன்றனையும், உரைசகுந்தலை புத்திரனெனும் பரதனென்ற நளனையுமொரு செயற்குப், புரையறச்செல்லும்பொழுது முன்னினரப் பொருள்பெற்றிவிரைந்துமீள்குவரால்" இச்செய்யுள் வடநூலுரை மேற்கோளின்படி இவ்வுரைகாரரான் மொழிபெயர்க்கப்பட்டது. [பிறர்க்கும் உன்னினைப்பால் முடியுங்காரியம் நீயேசென்றால் முடிதற்குச் சந்தேகமில்லை யென்றலால், செய்யுட்பொருட்பேறணியாம்.]

(க-து.) உன்னையும்-பரதனையும், அருச்சுனனையும்-நினைத்தால், நினைத்தகாரியமுடியும். நீயேபோனால்காரியமறிதோ என்றானிந்திரன் எ-ம். 34

இனையனவாசவனியம்புமெல்லையின்
வனைமலர்க்கோதைதன்வயத்தனாகியுங்

தனியறனிழுக்குறுத்தகையனாதலி
னனையதற்கிசைந்தன னலங்கல்வேலினான்.

[இதனால் நளன் துணிந்தமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) வாசவன்-இந்திரனானவன், இனையன-இத்தன்மையாகியசொற்களை, இயம்புமெல்லையின்-சொல்லுகின்றபொழுதில், வினை-கட்டுகின்ற, மலர்க்கோதைதன்-மலரையணிந்தகூந்தலையுடைய தமயந்தியினது, வயத்தனாகியும்-வசப்பட்டவனாயிருந்தும், தனி-ஒப்பற்ற, அறன்-தருமத்தினின்றும், இழுக்குறு-கெடுதலடையாத தகையனாதலின் - குணத்தையுடையவனாதலால், அனையவற்கு-அவ்விந்திரன்சொன்னதற்கு, அலங்கல் - வெற்றிமாலையைத்தரித்த, வேலினான்-வேற்படையேந்திய நளமகாராசன், இசைந்தனன் - உடன்பட்டான் எ-று.

(க-து.) நளன் தூதுப்போகச் சம்மதித்தான் எ-ம். 35

பொருந்தியமன்னர்கோன்பொம்மல்வெம்முலைத்
திருந்திழைகடிநகர்ச்சேமமாகிய
வருந்திறல்வாயிலோரறிவுறாதுபோய்
வருந்திறன்யாதெனமறித்துங்கூறினான்.

[இதனால் நீசொல்லத்தடையுளதோ வென்ற இந்திரனுக்கு நளன்சொல்லியது சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) பொருந்திய-சம்மதிப்பட்ட, மன்னர்கோன்-நளன், பொம்மல்-பொலிவுபொருந்திய, வெம்-விருப்பத்தைத்தருகின்ற, முலை-தனங்களையும்-திருந்திழை-திருத்தமாகிய ஆபரணங்களையுமணிந்த தமயந்தியினுடைய, கடிநகர்-புதுமைபெற்றநகர்க்கு, சேமமாகிய-காவலாகிய, அருந்திறல்-அரியவல்லமைபொருந்திய, வாயிலோர்-வாயில்காப்பவர், அறிவுறாதுபோய்-அறியாமற்படிபுகுந்து, வருந்திறம்-வருகின்றவிதம், யாதென-எப்படியென்று, மறித்தும்-மறுபடியும், கூறினான்-சொல்லினான் எ-று.

(க-து.) நளன் தமயந்தியரண்மனைக்காவலாளரறியாதுபோய் வரும்விதமெப்படியென்றான் எ-ம். 36

விட்புலந்தனிபுரந்தருளும்வேந்தர்கோ
னட்பொடுமினியனநவின்றியாவர்க்குங்
கட்புலனாலுருக்காண்கிலாததோர்
நுட்பநூல்விஞ்சையைநுவன்றிட்டானரோ.

இதுமுதல் நான்குபாட்டுகளால் மறைந்துசெல்வதற்கு உபாயமுளதோ வென்ற நளனுக்கு இந்திரனருளியதும், அவ்வருள்பெற்று நளன்சென்றமையுஞ்சொல்லப்படுகின்றன.]

(இ-ள்.) விட்புலம்-விண்ணுலகத்தை, தனி-ஒப்பற, புரந்தருளும்-காக்கின்ற, வேந்தர்கோன்-இந்திரனானவன், நட்பொடும்-சினேகத்துடனே, இனியன-இன்சொற்களை, நவின்று-சொல்லி, யாவர்க்கும்-எவர்களுக்கும், கட்புலன்-கண்ணறிவினால், உரு-வடிவத்தை, காண்கிலாது - அறியப்படாததாகிய, ஓர்-ஒரு, நுட்பநூல்-நுண்ணிய நூலிற்சொல்லும், விஞ்சையை-மந்திரத்தை, நுவன்றிட்டான்-சொன்னான் எ-று.

விஞ்சை-மந்திரத்துக்காதலால், ஆகுபெயர்.

(க-து.) இந்திரன்நளனுக்குரூபமாறும்வித்தையைக்கற்பித்தான் எ-ம்.

பெறலரும்விஞ்சையும்பெற்றுவானவர்க்
கிறையவனிணையடியிறைஞ்சிவண்டிமிர்
நறைமலர்க்கூந்தலாணகரிநண்ணுவா
னறைகழலிலங்குதாளரசனேகினான்.

(இ-ள்.) பெறலரும்-பெறுதற்கரிய, விஞ்சையும்-மந்திரத்தையும், பெற்று-பெற்றுக்கொண்டு, வானவர்க்கிறையவன்-இந்திரனது, இணையடி-இரண்டு பாதங்களையும், இறைஞ்சி-வணங்கி, வண்டு-வண்டுகள், இமிர்-ஒலிக்கின்ற, நறை-தேனொழுகுகின்ற, மலர்-மலரையணிந்த, கூந்தலாள்-அளகபாரத்தையுற்றதமயந்தியினது, நகரி-குண்டினபுரத்திலே, நண்ணுவான்-சேரும்பொருட்டு, அறை-ஒலிக்கின்ற, கழல்-வீரக்கழலானது, இலங்கு-பிரகாசிக்கின்ற, தாள்-பாதத்தையுடைய, அரசன்-நளன், ஏகினான்-போனான் எ-று.

நெடுநாள் தவஞ்செய்து யோகிகளும் அடைதற்கரிதாதலில், பெறலரும் விஞ்சையெனப்பட்டது. எடுத்தகருமம் இடையூறின்றி இனிது முடியும்பொருட்டு உலகவழக்கப்படிகடவுளை வணங்குவது முறைமையாதலின், வானவர்க்கிறையவனிணையடியிறைஞ்சி எனப்பட்டது.

(க-து.) நளன்மந்திரத்தைக்கற்று இந்திரனைவணங்கிச்சென்றான் எ-ம்.

பண்ணமைகூந்தன்மான்றேரிற்பார்புக
ழண்ணலுமிமையவரார்வம்பின்செல
மண்ணிடைவானவாமகளிர்தம்மொடும்
விண்ணிழிந்திருந்தனநகரமேயினான்.

(இ-ள்.) பண்ணமை கல்லணையமைந்த, கூந்தல்-புறமயிரையுற்ற, மான்-குதிரைகட்டிய, தேரில்-இரதத்தில், பார்-பூமியிலுள்ளார், புகழ்-புகழ்கின்ற, அண்ணலும்-நளமகாராசனும், இமையவர்தேவர்களுடைய, ஆர்வம்-ஆசையானது, பின்செல-பின்றொடர, மண்ணிடை-மண்ணுலகத்தில், வானவர்மகளிரோடும் - அரம்பையருடன், விண்-சுடர்க்கமானது, இழிந்திருந்தன-இழிந்திருந்ததையொத்த, நகரம்-குண்டினபுரத்தை, மேயினான் - பொருந்தினான் எ-று.

இதுகுண்டினபுரமென்னும் பெயரினாலேமாத்திரம் - வேற்றுநகராகத் தோன்றுவதன்றி, சகலசம்பத்து நிறைந்திருக்கின்றபடியால் அமராவதியென் பதற்கு சந்தேகமில்லையென்பதுகருத்து. [ஆர்வம்பின்செலவெனலால், உட னிகழ்ச்சியணியும்; மண்ணுலகத்துள்ள இந்நகரை வானவர்நகரினோடு மணி னிழிந்தவிண்ணெனக்குறித்தமையால், தற்குறிப்பணியாம்.]

(க-து.) நளன்குண்டினபுரத்திற் போயினான் எ-ம். 39

வாம்பரித்தேரினின்றிழிந்துவண்டுளர்
தேம்பொதிநறுமலர்த்தெரியன்மார்பினான்
காம்புறழ்தோளினாள்செவ்விகாண்குறு
மேம்பலிற்கோநகரெய்தினானரோ.

(இ-ள்.) வாம்-தாவுகின்ற, பரி-குதிரையையுடைய, தேரினின்றிழிந்து-தேரினின்றுமிறங்கி, வண்டு-வண்டுகளானவை, உளர்-ஒலிக்கின்ற, தேம்-வாசனை, பொதி-நெருங்கிய, நறும்-பரிமளம்பொருந்திய, மலர்-மலராற்றொடுத்த, தெரியல்-மாலையணிந்த, மார்பினான்-மார்பையுடையவனாகிய நளமகாராசன், காம்பு-மூங்கிலை, உறழ்-ஒத்த, தோளினாள்-தோளினையுடையவளாகிய தமயந்தியினது, செவ்வி-அழகை, காண்குறும்-காணவேண்டுமென்கிற, ஏம்பலின்-ஆசையினாலே, கோநகர்-குண்டினபுரத்தை, எய்தினான்-அடைந்தான் எ-று.

(க-து.) நளன்தமயந்தியைக்காணு மாசையால் குண்டினபுரத்தையடைந் தான் எ-ம். 40

உருகுதங்கொழுநர்பாலூடிநீத்தநல்
விரைகமழ்தெரியலுமின்செயாரமுங்
குருமணிக்கலன்களுங்குலவுவீதிவா
யெரிமணிப்பூணினானிடறியேகினான்.

[இதுமுதல் பதினெட்டுபாட்டுகளால் நளன் குண்டின புரத்திற்குச் செல்லுகையி னிகழ்ந்தவைசொல்லப்படுகின்றன.]

(இ-ள்.) உருகு-விருப்பத்தால் தளர்கின்ற, தம்-தம்முடைய, கொழுநர் பால்-கணவரிடத்து, ஊடி-பிணங்கி, நீத்த-நீக்கிய, நல்-நல்ல, விரைவாசனை, கமழ்-வீசுகின்ற, தெரியலும்-மாலையும், மின்செய்-பிரகாசத்தைச்செய்கின்ற, ஆரமும்-பதக்கமும், குரு-நிறம்பொருந்திய, மணிக்கலன்களும்-ரத்தினாபரணமும், குலவு-பிரகாசிக்கின்ற, வீதிவாய்-வீதியினிடத்தில், எரி-ஒளிபொருந்திய, மணி-மணிகள்பதித்த, பூணினான்-ஆபரணத்தையுடைய நளமகாராசன், இடறி காலினா லிடறிக்கொண்டு, ஏகினான்-போனான் எ-று.

மிகுந்த அன்புடையோரென்றதற்கு, உருகுதங்கொழுநரென்றும்; அவரி டத்தும் ஊடினாலன்றி இன்பம் பயவாமையால், ஊடியென்றும்; ஊடலில்தம் மெய்யிலணிவனவற்றில் வெறுப்புண்டாதலில், நீத்தவென்றும்; செல்வச்செரு

க்கினால் நாடோறுங் கழித்தெறிவதாதலில், குலவுவீதியென்றும்; காலால்நட ந்துசெல்வோனாதலில், இடறியேகினானென்றும்; சொல்லினர். [செல்வமிகு தியைச் சொல்லுதலால், வீறுகோளணியாம்.]

(க-து.) நளன்பூமாலைஇரத்தினாபரணமிவற்றை இடறிநடந்தான் எ-ம். 41

மணங்கவர் வனப்பமைவடிவினன்றியுங்
கனம்பயில்வாயிலோர் காண்குறாவகை
சினங்கொள் கூரிலைபவேற்செம்மல்போதலா
லனங்கனென் றுரைப்பதற் கையமில்லையே.

(இ-ள்.) மனம்-மனதை, கவர்-கவர்ந்துகொள்ளுகின்ற, வனப்பு-அழகு, அமை-அமைந்த, வடிவின்-வடிவினாலும், அன்றியும்-அல்லாமலும், கனம்-மே கங்கள், பயில்-சஞ்சரிக்கின்ற, வாயிலோர் - வழியிலிருக்குங் காவலாளர்கள், காண்குறாவகை-காணாதவிதம், சினங்கொள்-கோபங் கொண்ட, கூர்-கூர்மை பொருந்திய, இலைய-இலையையுடைய, வேல் வேற்படையேந்திய, செம்மல் நளமகாராசன், போதலால்-செல்கின்றபடியால் அனங்கனென்று - அருவத் தையுடையவனாகிய மன்மதனென்று, உரைப்பதற்கு- சால்வதற்கு, ஐயம்-சந் தேகம், இல்லை-இல்லை எ-று.

[இது தற்குறிப்பணி.]

(க-து.) நளன்-அருபமாய்ச் செல்லுதலால் மன்மதனென்று சொல்லுவத ற்குச் சந்தேகமில்லை எ-ம். 42

கண்ணகன்மணிக்கடைக்காவலாளர்தா
நண்ணினரெவரெனவெவரைநாடினுந்
தண்ணறுந்தெரியலான்றன்னையாமென
வெண்ணிவெம்மடங்கலினெருத்தங்கோட்டுமால்.

(இ-ள்.) கண்ணகல்-இடமகன்ற, மணி-அழகிய, கடை-வாயிலிலிருக்கின் ற, காவலாளர்தாம்-காவல்செய்வோர், நண்ணினர்-வந்தவர்கள், எவரென-யா வரென்று, எவரைநாடினும்-யாரைநாடிப்பார்க்கினும், தண்-நண்ணிய, நறும்-பரிமளம்பொருந்திய, தெரியலான்-மாலையையுடையவனாகிய நளமகாராசன, தன்னையாமென-தன்னையாகுமென்று,எண்ணி-நினைத்து, வெம்-வெவ்விய,மட ங்கலின்-சிங்கத்தைப்போல,எருத்தங் கோட்டும்-திரும்பிப்பார்ப்பான் எ-று.

இவர்கள் நம்மை எவ்வாறு பார்த்தார்களென்கிற ஆச்சரியத்தினாலே,திரு ம்பிப்பார்த்தானென்க. சிங்கத்துக்குத் தான்வந்தவழியைத் திரும்பிப்பார்த்தலி யற்கையென்க. [மடங்கலினென்றமையால், உவமையணியும்; மறைந்துசெல் லுமவனியல்புகூறுதலால், தன்மைநவிற்சியணியும்; இவ்விரண்டுங் கலத்தலா ல், கலவையணியுமாம்.]

(க-து.) வாயில்காப்பார் யாரென, நளன்றன்னையென்னு திரும்பிப்பார்ப்பான் எ-ம். 43

மலர்பயில்வாவிதோய்மாதர்நுண்டுகி
லலைபுனனனைதலுமல்குறோன்றலாற்
கலைவலான்கண்முகிழ்த்தேகக்காண்குறான்
முலைமுகடழுந்துறவொருத்திமுட்டினாள்.

(இ-ள்.) மலர்பயில்-மலர்கள்நெருங்கிய, வாவி-தடாகத்தில், தோய்-முழுகிய, மாதர்-மடவாருடைய, நுண்-நுண்ணிய, துகில்-ஆடையானது, அலை-அலைவீசுகின்ற, புனல்-நீரிலே, நனைதலும்-நனைந்தவளவில், அல்குல்-நிதம்பமானது, தோன்றலால்-வெளிப்படலால், கலைவலான்-அறநூலில்வல்லவனாகிய நளமகாராசன், கண்முகிழ்த்தேக-கண்களைமூடிக்கொண்டுபோக, காண்குறான்-காணானாகி, முலை-தனங்களினுடைய, முகடு-உச்சி, அழுந்துற-அழுந்தும்படி, ஒருத்தி-எதிர்ப்பட்டவொருமங்கை, முட்டினாள்-முட்டினாள் எ-று.

அறத்தின்வழிநிற்போனாதலால், பிறர்மாதர்களுடைய மறைத்தற்குரிய உறுப்புக்களைநோக்குதலிற் பாவமுண்டாகுமென்றஞ்சிக் கண்களை மூடிக்கொண்டானென்க

(க-து.) நளன்வாவியிலாடுமாதரல்குலைக்கண்டு கண்மூடிச்செல்லுதலால் எதிரில்வருமொருத்தி முலைமுகடழுந்தமுட்டினாள் எ-ம். 44

காமுறுமொருத்திதன்வதனங்கண்டகண்
கோமகன்முகிழ்த்தலாற்கோதைமார்முக
மாமதியென்பதுமன்னன்செய்யகண்
டாமரையென்பதுந்தக்கவாயவே

(இ-ள்.) காமுறும்-விரும்புதற்குரிய, ஒருத்தி-ஒருமங்கையினுடைய வதனம்-முகத்தை, கண்டகண்-பார்த்தகண்களை, கோமகன்-நளமகாராசன், முகிழ்த்தலால்-மூடிக்கொள்ளுதலால், கோதைமார்முகம் - மாதருடையமுகம், மா-பெரிய, மதியென்பதும்-சந்திரனென்றுசொல்வதும், மன்னன் - இந்தநளமகாராசனுடைய, செய்ய-சிவந்த, கண்-கண்கள், தாமரையென்பதும் - தாமரைமலரென்றுசொல்வதும், தக்கவாய-தகுதியாயின எ-று.

இவன் விவேகமுடையோனாதலால், அம்மங்கையர் முகத்தைக்கண்டு மனமயங்கிற் பாவமுண்டென்று மூடிக்கொண்டனனென்க. [தக்கவாயவெனலால், தகுதியணியாம்.]

(க-து.) நளன் ஒருபெண்முகத்தைக்கண்டகண்களை மூடலால் பெண்கள் முகஞ்சந்திரனென்பதும் நளன்கண்கள் தாமரையென்பதுஞ்சரியே எ-ம்.

செய்யகண்முகிழ்த்திடல்விழித்தற்றெனு
மையனுங்கடைக்கணானோக்கவன்பிதென்

றெய்யும்வேள்கணைமலரிதயமோர்ந்துமால்
பொய்யெனவருச்சனைபுரிதல்போன்றதே.

(இ-ள்.) செய்ய-சிவந்த, கண்-கண்களை, முகிழ்த்திடல்-மூடிக்கொள்ளுவதும், விழித்தல்-விழிப்பதும், தீதெனு-குற்றமென்றுநினைத்து, ஐயனும் - நளமஹாசனும், கடைக்கணுனோக்க-கடைக்கண்ணினுலேபார்க்க, அன்பிதென்று-இது ஆசையினுலேபார்ப்பதென்று, எய்யும் - பிரயோகஞ்செய்கின்ற, வேள்-மன்மதனுடைய, கணைமலர்-பாணமலர்கள், இதயம்-கருத்தை, ஓர்ந்து-அறிந்து, மால் மயக்கமானது, பொய்யென-பொய்யென்று, அருச்சனை-பூசை, புரிதல்போன்றது-செய்வதுபோலுமாயிற்று எ-று.

கண்களைமூடில், எதிர்ப்படுமாதர் தெரியாமன் முட்டிக்கொள்வதாலும்; திறக்கில், அவர்களது அழகியவடிவ நோக்குதலிற் பாவமுண்டாதலாலும்; இவ்வாறன்றிக் கடைக்கண்ணுல் நோக்கினுனென்க.

(க-து.) நளன் கடைக்கண்ணுற்பார்க்க, அன்பானபார்வையென்று மன்மதனறிந்து பாணந்தொடுக்க, அப்பாணம் அருச்சனை செய்தமலருக் கொப்பாயிற்று எ-ம். 46

தெரிவையென்றுருவெளியோடுசெப்பிய
வரசனதுரையசரீரியாமென
வெருவியமாதர்சொற்கேட்டுவெள்குரு
வுருவெளியிதுவெனவுள்ளந்தேறினுன்.

(இ-ள்.) தெரிவையென்று-தமயந்தியென்று, உருவெளியோடு - உருவெளித்தோற்றத்துடனே, செப்பிய-சொல்லிய, அரசனது-நளமகாராசனது, உரை-சொல்லை, அசரீரியாமென-அசரீரிவாக்கென்று, வெருவிய-பயந்த, மாதர்-மாதருடைய, சொற்கேட்டு-சொல்லைக்கேட்டு, (அந்தநளனுனவன்) வெள்குரு-நாணி, உருவெளியிதுவென - உருவெளித்தோற்றமிதுவென்று, உள்ளம்-மனம், தேறினுன்-தெளிவையடைந்தான் எ-று.

உருவெளித்தோற்றமானது-தன்னுல் விரும்பப்பட்ட பொருள்போல் எதிரேதோற்றுதல், செப்பிய உரையென்பது-இந்திராதிகள் தமயந்திக்குச் சொல்லும்படி தன்னோடுசொல்லிய செய்திகளாம். அவளைக்கண்டும் தன் விருப்புக் குறியவற்றைப் பேசாமல் இவ்வாறு சொன்னுனென்று பொருள் கொள்வானேன்- என்னில், அறத்தின்வழிதாதுசெல்வோர்க்கு வழுவாதலானும்' இதற்குமுதனூலாகியவடமொழியுளிருத்தலானு மெனக்கொள்க. மாதர்க்கு அச்சமியற்கையாதலின், இதுதெய்வமோ மாயமோவென அசரீரிக்கு வெருவினுனென்க. அவர்களுரையால் உருவெளித்தோற்றத்தொடுசொன்னரகசியமான தன்சொல் வெளிப்பட்டதெனத் தெளிந்து நாணுற்றுனென்க.

(க-து.) உருவெளியோடுசொல்லியநளன்சொல்லை மாதர் அசரீரிவாக்கென்றுசொல்ல நளன் தெளிவுடைந்தான் எ-ம். 47

விழைவெனும்பாகெறிந் தமரர்விஞ்சையாந்
தழைமுகபடாத்தமை தறுகண்வாரணங்
கழைமதனியற்றிய கருங்கண்மங்கைய
ரழகெனும்படுகுழி யாழ்ந்ததில்லையால்.

(இ-ள்.) விழைவெனும்-ஆசையென்கின்ற, பாகு-பாகனை,எறிந்து-தள்ளி அமரர்-தேவர்களுடைய, விஞ்சையாம்-மந்திரமாகிய, தழை - தழைந்த, முகபடாத்து-முகப்போர்வையினாலே, அமை-பொருந்திய; தறுகண்-அஞ்சாமையை யுற்ற, வாரணம்-யானையானது, கழைமதன்-கருப்பு வில்லேந்திய மன்மதன், இயற்றிய-செய்த, கருங்கண்-கரியகண்களையுடைய, மங்கையர்-மாதரது, அழ கெனும்-அழகென்று சொல்லும், படுகுழி-பள்ளத்தில், ஆழ்ந்ததில்லை, எ - று. ஆல்-அசை.

தூது சொல்லுமிடத்து அறத்தின்வழி மகளிர் விழைவை நீக்கியோனாக லின், அவர்கள் அழகில் மயங்கவில்லை யென்பது கருத்து. [நளனை யானையா கவும்-விழை வைப்பாகனாகவும்-விஞ்சையை முகபடாமாகவும்-ஆரோபித்தலால், உருவகவணியாம்.]

(க-து.) நளனென்னும் யானை மாதரழகென்னும் படுகுழியில் வீழ்ந்ததி ல்லை எ-ம். 48

அங்கலுழ்மேனியவணங்கைநாடொறு
மெங்கணுங்காண்குறுமயக்கமேனைய
பங்கயவாண்முகபாவைமாரையம்
மங்கையென்றெண்ணுறுமயக்கந்தீர்த்ததே.

(இ-ள்.) அம்-அழகானது, கலுழ்-ஒழுகுகின்ற, மேனிய - மேனியை யுடைய, அணங்கை-தமயந்தியை, நாடொறும்-எந்நாளும், எங்கணும்-எவ்வி டத்திலும், காண்குறும்-உருவெளித்தோற்றமாகக்காணுகின்ற, மயக்கம்-மய க்கமானது, ஏனைய-மற்றைய, பங்கயம்-தாமரை மலர்போன்ற, வாள்-ஒளி பொருந்திய, முகம்-முகமுள்ள, பாவைமாரை-மகளிரை, அம்மங்கையென்று- அத்தமயந்தியென்று, எண்ணுறும்-நினைக்கின்ற, மயக்கம்-மயக்கத்தை, தீர் த்து-நீங்கியது-எ-று.

அழகுமிகுதிபற்றி, கலுழ் எனப்பட்டது. உருவெளித்தோற்றத்திற்கு நிக ராகிய அந்தப்புரத்து மங்கையர்வடிவங்களில் நளனுக்குத்தமயந்தி யென்னு மயக்கம் ஏனுண்டாகவில்லையெனில், அதனுறுதியாலென்க.

(க-து.) நளனுக்குத் தமயந்தியென்கிற மயக்கமற்றது. 49

கணங்குழைமுகத்தியர்கதிர்த்துவிம்மிய
கணங்கவிரிளமுலைச்சுவடுதாக்கிய

மணிந்தகுங்குமமெழிலகலமூழ்கிய
மணந்தனர்போன்றனன்மன்னரேறனான்.

(இ-ள்.) மன்னர்-அரசர்களுக்கு, ஏறனான்-ஆண்சிங்கத்தையொத்தநளன், கணம்-கூட்டமாகியமணிபதித்த, குழை-குண்டலந்தரித்த, முகத்தியர்-முகத்தையுடையவராகியமாதர், கதிர்த்து-காந்திபொருந்தி, விம்மிய-பருத்த, சுணங்கு-தேமலானது, அவிர்-பிரகாசியாநின்ற, இளமுலை - இளமைபொருந்தியதனங்களுடைய, சுவடு-தழும்புகள், தாக்கியும்-மோதப்பெற்றும், அணிந்த-தரித்த, குங்குமம்-குங்குமக்குழம்புகள், எழில்-அழகிய, அகலம்-மார்பினிடத்து மூழ்கியும்-மூழ்கப்பெற்றும், மணந்தனர்-கூடினவர்களை, போன்றனன்-ஒத்தனன் எ-று.

கூடினவர்க்குள்ள குணம் இவனிடத்துண்டாதலின், மணந்தனர் போன்றனன் என்றார். [இது உவமையணி.]

(க-து.) நளன்மார்பில் மாதர்தனங்களழுந்தப்பெற்றும், குங்குமமூழ்கப்பெற்றும், புணர்ந்தவரை ஒப்பாயினான் எ-ம். 50

விளங்கிழையொருத்திபேரணியில்வேந்தெழி
றுளங்கலுமதிசயந்தோன்றநோக்கினாள்
வளங்கெழுபுகழினான்மறையக்காண்கிலா
ளுளம்புகுந்தொளித்ததவ்வுருவென்றெண்ணினாள்.

(இ-ள்.) விளங்கு-பிரகாசியாநின்ற, இழை-ஆபரணத்தையணிந்த, ஒருத்தி-ஒருமாதரானவள், பேர்-பெரிய, அணியில்-தன்னாபரணத்தில், வேந்து-அரசனுடைய, எழில்-அழகானது, துளங்கலும்-பிரகாசித்தலும், அதிசயம்-ஆச்சரியம், தோன்ற-உண்டாக, நோக்கினாள்-பார்த்தாள், வளங்கெழு-வளம்பொருந்திய, புகழினான்-கீர்த்தியையுற்றநளன், மறைய-மறைந்துபோக, காண்கிலாள்-காணாதவளாகி, உளம்-மனத்தினிடத்து, புகுந்து-நுழைந்து, ஒளித்தது-ஒளித்துக்கொண்டது, அவ்வுருவென்று-அவ்வடிவமென்று, எண்ணினாள்-நினைத்தாள் எ-று.

உளம்புகுந்தொளித்ததெனலால், நளனுடைய நிழன்மாத்திரம் அவளுடையவணியினின்றும் நீங்கியதல்லது; அந்நளன் அவள்மனத்தைவிட்டு நீங்கவில்லையென்பது கருத்து. [மறைதலில் உளம்புகுதலைக் குறித்தலால், தற்குறிப்பணியாம்.

(க-து.) ஒருத்தி தன்னாபரணத்தில் நளன்வடிவு தோன்றப்பார்த்தாள். நளன்மறைய அவ்வடிவுதன்னுளத்துட் புகுந்ததெனறெண்ணினாள் எ-ம்.

வாட்டிறன்மன்னவன்வனிதைபேரரு
ளீட்டியொண்கதிருமிழ்செய்யவார்வடஞ்

சூட்டினனகலவிவ்வுருவுதோன்றயார்
கோடடிரெனச்சிலர்குறிப்பினூடுவார்.

(இ-ள்.) வாள்-வாளாயுதத்திலே, திறல்-வல்லமைபெற்ற, மன்னவன்-நளமகாராசனானவன், வனிதை-தமயந்தியினது, பேர்-பெரிய, எழில்-அழகை, தீட்டி-எழுதி, ஒள் ஒள்ளிய, கதிர்-கிரணங்களை, உமிழ்-உமிழ்கின்ற, செய்ய-சிவந்த, வார்-நெடிய, வடம்-ரத்நமாலைகளை, சூட்டினன்-தரித்தனனாகி, அகல-நீங்க, இவ்வுருவுதோன்ற-இந்தவடிவந்தெரிய, யார்-எவர்கள், கோட்டினர்-செய்தாரென்று, சிலர்-சிலர்கள், குறிப்பின்-குறிப்பினாலே, நாடுவார்-தேடுவார்கள் எ-று.

விஞ்சையைவிட்டு உருத்தெரிய நிற்பினும் ஒருவராலும் வெல்லக் கூடாமைதோன்ற, வாட்டிறன்மன்னவனென்றும்; உருவெழுதுவதிலுங் கைபோயவனென்பதுதோன்ற, வணிதைபேரிழி தீட்டியென்றும்; அவளிடத்தின்மிகுந்த அன்புள்ளவனென்பதுதோன்ற, வடஞ்சூட்டினனென்றும்; அறிவினால் அவ்வன்பையு நீக்கினானென்பதுதோன்ற, அகலவென்றும்; இப்படிப்பட்ட உருவமெழுதினவரைக் காணவேண்டுமென்கிற அவாவினாலும் இவனுருத்தெரியாமையினாலும் தேடுவாரென்பதுதோன்ற, சிலர் குறிப்பினாடுவாரென்றும்; சொல்லினார். ஒருநாளுங் காணாதவடிவை இவன் எவ்வாறெழுதினனெனில், முன்னே "வெண்ணகைத்தூவர்வாயணங்கெழில்பலரும் விளம்பினர் நின்மொழியவளென் கண்ணெதிர்ப்பட்டாள்" என்றிருப்பதாலும்; அன்னப்புள்ளானது தாமரையிலையிலெழுதிக்காட்டியதென்று வடநூலிலிருத்தலாலுமென்க.

(க-து.) நளன் தமயந்தி வடிவத்தையெழுதி இரத்நாபரணஞ் சூட்டிப்போக, வடிவத்தை யாரேழுதினாரென்று சிலர்தேடுவார்கள் எ-ம். 52

பூந்துகள்செறிந்தகோமறுகிற்போகிய
வேந்தருளழுந்துமவ்விடங்கணோக்குறு
மாந்தளிர்மேனியார்வையங்காவல்செய்
வேந்தர் தாளிலக்கணமேயதென்னென்பார்.

(இ-ள்.) பூந்துகள்-மகரந்தப்பொடிகள், செறிந்த-நெருங்கிய, கோமறுகில்-அரசவீதியில், போகிய - சென்ற, ஏந்தல்-நளமகாராஜனுடைய, தாள்-பாதங்கள், அழுந்தும்-அழுகின்ற, அவ்விடங்கள்-அந்தவிடங்களை, நோக்குறு - பார்த்து, மாந்தளிர்-மாந்தளிர்போன்ற, மேனியர் - வடிவத்தையுடையமங்கையர், வையம்-உலகத்தை, காவல்செய்-காத்தல்செய்கின்ற, வேந்தர்-அரசரின் தாள்-பாதங்களிலிருக்கும், இலக்கணம்-இலக்கணங்கள், மேயது - இவ்வடிச்சுவட்டிற்பொருந்தியது, என்னென்பார்-என்ன ஆச்சரியமென்பார் எ-று.

வேந்தர்தாளிலக்கமென்பது, சக்கிரரேகைமுதலியனவாம். அம்மாதர் சாமுத்திரிகநூலிலும் வல்லவராகையால், இது அறிந்தனரென்க.

(க-து.) மகரந்தநிறைந்த இராசவீதியில் நளன் அடிவைத்தவிடத்தை மாதர்கள்கண்டு அரசர்களடிக்சுவடுபொருந்தியதென்னவென்பார்கள் எ-ம்.

கள்ளவிழ்கோதையரெறிந்தகந்துகம்
வள்ளன்மார்புற்றெதிர்மறிந்துவீழ்தலுந்
தள்ளருமதிசயமெய்தித்தத்தமில்
வெள்ளிடைப்பட்டிவண்மீண்டதென்னென்பார்.

(இ-ள்.) கள்விழ்-தேனொழுகுகின்ற, கோதையர் - மாலையையணிந்தமாதர், எறிந்த-வீசிய, கந்துகம்-பந்துகள், வள்ளல் நளமகாராஜனுடைய, மார்பு-மார்பினிடத்திலே, உற்று-பொருந்தி, எதிர்-எதிராக, மறிந்து-மறுபட்டு, வீழ்தலும்-வீழ்ந்தவளவில், தள்ளரும்-தள்ளுதற்கரிய, அதிசயம்-ஆச்சரியத்தை, எய்தி-அடைந்து, தத்தமில்-தங்கள் தங்களுக்குள்ளே, வெள்ளிடைப்பட்டு-வெளியிடத்திற்பட்டு, இவண்-இவ்விடத்தில், மீண்டது-திரும்பியது, என்னென்பார்-என்னவென்றசொல்லுவார்சள் எ-று.

[மீள்தற்குக்காரணமில்லாதிருக்க மீண்டதைச்சொல்லுதலால், பிறிதாராய்ச்சியணியாம்.]

(க-து.) மாதர்களெறிந்த பந்துகள் நளன்மார்பில் பட்டெதிராகவிழுந்தமாத்திரத்தில் பெண்களிதென்னவாச்சரியமென்பார்கள் எ-ம். 54

எதிர்முகமாயிருந்திருவர்பைந்துணர்ப்
புதுமலர்தொடுத்தலுநடுவட்புக்கவன்
கதுமெனவேகலுமறைப்பக்கன்னியர்
மதிமயக்குறமுகமறைத்ததென்னென்பார்.

(இ-ள்.) எதிர்முகமாயிருந்து-அபிமுகமாவிருந்து, இவர்-இரண்டுபேர், பைந்துணர்-பசியபூங்கொத்துகளிலிருக்கின்ற, புதுமலர் - அன்றலர்ந்தமலரை, தொடுத்தலும்-கட்டலும், நடுவண் - அவருக்கிடையில், புக்கவன்-புகுந்தநளன், கதுமென-விரைந்து, ஏகலும்-போனவளவில், மறைப்ப-மறைக்க, கன்னியர் - அம்மாலைத்தொடுத்தமாதர்கள், மதி-புத்தி, மயக்குற - மயக்கத்தைப்பொருந்த, முகமறைத்தது-முகத்தைமறைத்துவிட்டது, என்னென்பார்-என்னஆச்சரியமென்றுசொல்லுவார்கள் எ-று.

[மறைத்தற்குக்காரணமில்லாதிருக்கமறைப்பைச்சொல்லுதலால், இதுவுமவ்வணியாம்.]

(க-து.) மாலைகட்டுமாதரிருவர்நடுவேநளன்போனவளவில் அம்மாதர்கள் முகத்தையறைத்துவிட்டதென்பார்கள் எ-ம். 55

அண்ணறன்மார்பகத்தணிந்தபேரணி
மண்ணியம்மணிவயின்வடிவுதோன்றலுங்

கண்ணுறநோக்குவாள்கன்னிமாரொடும்
விண்ணிடையெனதுருவிளங்கலென்னென்பாள்.

(இ-ள்.) அண்ணறன்-நளமகாராஜனுடைய, மார்பகத்து-மார்பினிடத்து, அணிந்த-தரித்த, பேர்-பெரிய, அணி-ஆபரணங்களிலுள்ள, மண்ணிய - தெளிந்த, மணிவயின்-மணியினிடத்தில், வடிவு-உருவமானது, தோன்றலும்-தெரிதலும், கண்ணுற-கண்ணிறப்பொருந்த, நோக்குவாள் - பார்ப்பாளாகியவொருத்தி, கன்னிமாரோடும்- மாதர்களுடன், விண்ணிடை-ஆகாயத்தினிடத்து, எனதுரு-எனதுவடிவம், விளங்கல்-பிரகாசித்தல், என்னென்பாள்-என்னஆச்சரியமென்றுசொல்லுவாள் எ-று.

[வடிவுதோன்றற்குறிய கண்ணுடிமுதலியவையின்றி நிழலின் றோற்றஞ் சொல்லப்படுதலால், சிறப்புநிலையணியாம்.]

(க-து.) நளனுபரணத்தில் ஒருத்தி தன்வடிவுதோன்றியவளவில் என்வடிவுவெளியிற்றோன்றிய தென்னென்பாள் எ-ம். 56

வெற்பினதெழில்கெடவிளங்குதோளினன்
பொற்பொளிர்பித்திகைப்புறத்திற்றோன்றலு
மற்புதமிதுவெனநோக்கியன்பினாற்
கற்புடைமகளிருநிலைகலங்கினார்.

(இ-ள்.) வெற்பினது-மலையினது, எழில் - அழகு, கெட - கெடும்படி விளங்கு-பிரகாசியாநின்ற, தோளினன்-தோளினையுடைய நளமகாராசனது பொற்பு-அழகானது, ஒளிர்-பிரகாசிக்கின்ற, பித்திகைபுறத்தில்-சுவர்த்தலத்தினிடத்து, தோன்றலும்-தோன்றுதலும், அற்புதமிதுவென - ஆச்சரியமீதுவென்று, நோக்கி-பார்த்து, அன்பினால்-ஆசையினால், கற்புடைமகளிரும் - கற்புடையமாதர்களும், நிலைகலங்கினார்-மயங்கினார்கள் எ-று.

உம்மை-உயர்வுசிறப்பு. கற்புடைமகளிர் நிலைகலங்கலுண்டோவெனின், அழகிற்சிறந்த ஆண்மக்களைக்காணின் உண்டாம். அது - "தந்தையாயினும்விழைவிற் றன்னுடனேயொருவயிற்றிற்சார்ந்தாரெனு, மைந்தரா யினுமிகவும் வனப்புடையரெனிலவர்மேன்மடநல்லார்தஞ், சிந்தைநடத்திடுமெதனாற் சாம்பன்மலர்க்கணேவோளிற்செவ்விவாய்ந்தோன், பைந்தொடியாரினிதமருமுவளகத்திற்றனிவருதல்பான்மையன்றே" இதனாலறிக.

(க-து.) நளன்வடிவு சுவரிற்றோன்ற; கற்புள்ளமாதரும் நிலைகலங்கினார்கள் எ-ம். 57

இழைவளர்முலையினாரொருவனேர்பெறு
நிழலிவனோக்கினனெனவுநீளிடை
மொழிவனகேட்டனனெனவுமொய்ப்பூபுறத்
தழிவினனென்னவுந்தம்மிற்கூறுவார்.

(இ-ள்.) இழை-ஆபரணத்தோடுகூடி, வளர்-வளர்கின்ற, முலையினார்-முலையையுள்ளமாதர்கள், ஒருவன்-ஒருஆண்மகனுடைய, ஏர்பெறு-அழகைடபெற்ற, நிழல்-நிழலை, இவண் - இவ்விடத்தில், நோக்கினனெனவும் - பார்த்தேனென்றும், நீளிடை-இந்நீண்டவிடத்தில், மொழிவன-பேசுவனவற்றை, கேட்டனனெனவும்-கேட்டேனென்றும், மெய்ப்புற-தோள்கள்பொருந்த, தழுவினனென்னவும்-தழுவினேனென்றும், தம்மில் - தங்களுக்குள்ளே, கூறுவார்-பேசிக்கொள்ளுவார்கள் எ-று.

(க-து.) மாதர்கள் ஒருவனிழலைக்கண்டேனென்றும், ஒருவன்சொல்லைக் கேட்டேனென்றும், ஒருவனைததழுவினேனென்றும் சொல்லிக்கொள்வார்கள் எ-ம்.

58

இன்னிசையளிபயில்பொழிலினேந்தன்முன்
பொன்னவிர்முலைத்தமயந்திபோதனு
மன்னமுன்கூறியவற்றைநாண்முதன்
முன்னுறமுருவெனமுன்னினனரோ.

[இதுமுதல் ஐந்துபாட்டுகளால் வழியிற்கண்ட தமயந்தியோடு நளனுக்குண்டாகியசெய்கை சொல்லப்படுகின்றது]

(இ-ள்.) இன்-இனிய, இசை-இசையைப்பாடும், அளி-வண்டுகள்-பயில்-சஞ்சரிக்கின்ற, பொழிலின்-சோலையிடத்தில், ஏந்தல் - நளமகாராசன், முன்-தன்னெதிரே, பொன்-பொன்னையொத்த, அவிர்-பிரகாசியாநின்ற, முலை-முலையையுடைய, தமயந்தி-தமயந்தியானவள், போதலும்-வருதலும், அன்னம் அன்னப்புள்ளானது, முன்கூறிய-முன்சொல்லிய, அற்றைநாண்முதல்-அன்றையநாண்முதலாக, முன்னுறும்எதிரேதோன்றுகிற, உருவென-உருவெளித்தோற்றமென்று, முன்னினன்-நினைத்தான்-எ-று. அரோ-அசை.

நாடோறுங்கண்டது பொய்யாகவே, இக்காட்சியிலு மிவ்வாறு மதியுண்டாயிற்றென்க. [அன்னத்தின்சொல்லால் நாடோறுங்காண்கின்ற தமயந்தியினுருவெளித்தோற்றத்திற்கும் மெய்யாகக்கண்ட தமயந்திக்கும் அங்ஙனம் வற்றுமைதோன்றாமைகூறப்படுதலால், மறைவணியாம்.]

(க-து.) சோலையில் நளன்முன்னே தமயந்திவருதலும், அவனுருவெளியென்றெண்ணினன் எ-ம்.

59

மடவரலுருவெளிமன்னன்றோண்மிசை
யிடையறுவிழைவுடனென்றுஞ்சூட்டல்போன்
மிடைமலர்ப்பூந்தொடைசூட்டமேவிய
சுடரிலைவேலினன்றோளில்வீழ்ந்ததே

(இ-ள்.) மடவரல்-தமயந்தியானவள், உருவெளி, உருவெளியாய்த்தோன்றிய-மன்னன், நளமகாராசனுடைய, தோண்மிசை-தோளின்மேல்,இடையறு

இடைவிடாத, விழைவுடன்-ஆசையுடனே, என்றும்- என்றைக்கும், சூட்டல் போல-சூட்டுதல்போல, மிடை-நெருக்கிய, மலர்-மலராற்றொடுத்த, பூந்தொடை-பூமாலையை, சூட்ட-தரிக்க, மேவிய-அங்கிருக்கின்ற, சுடர்-காந்திபொருந்திய, இலைவேலினுள்-இலைபோன்றவேற்படையுள்ள நளமகாராசன், தோளில் புயங்களில், வீழ்ந்தது-விழுந்தது எ-று.

(க-து.) தமயந்தியானவள் உருவெளித்தோற்றமென்றுமாலைசூட அம்மாலை நளனுடையதோளில் விழுந்தது எ-ம். 60

உருவெளியாகயான்கண்டவொண்ணுதன்
மருமலர்மாலிகைவளைந்ததென்னென
வரசனுமெண்ணினனவளுஞ்சூட்டிய
தெரியல்காண்கிலனெனத்தெருமந்தாளரோ.

(இ-ள்.) உருவெளியாக-உருவெளித்தோற்றமாக, யான்கண்ட-என்னாற் காணப்பட்ட, ஒண்ணுதல்-ஒள்ளிய நெற்றியையுடையதமயந்தியானவள், மருமலர்மாலிகை-வாசனைபொருந்திய பூமாலையை, வளைந்ததென்னென-சூட்டியதென்னகாரணமென்று, அரசனும்-நளமகாராசனும், எண்ணினன்-நினைத்தான், அவளும்-அத்தமயந்தியும், சூட்டிய-தரித்த, தெரியல்-மாலையை, காண்கிலனென-கண்டிலேனென்று, தெருமந்தாள் - மனஞ்சுழன்றாள், எ-று. அரோ-அசைநிலை.

நளன் நாடோறுங்கண்டவிடத்தில்லாமல் இப்போதுசூடியது புதுமையாதலால், இது என்னெனவியந்தான். தமயந்தியும் நாடோறுஞ் சூடியமாலை தெரிய இதுமாத்திரமறைதலால், என்னமாயமென்று திடுக்கிட்டாளென்க.

(க-து.) உருவெளியாகக் காணப்பட்டதமயந்தி மாலைசூடியதென்னவென்று நளன்எண்ணினன். தமயந்தி மாலையைக் காணேனென்று மயங்கினாள் எ-ம். 61

முருகவிழ்குழலினுடனையுமுன்னுறு
முருவெளியெனவிறையுவந்துபுல்லினு
னரிவையுமன்னவாறெண்ணியாங்கெதிர்
புரவலன்மார்புறப்புல்லினாளரோ.

(இ-ள்.) முருகவிழ்-வாசனைவீசுகின்ற, குழலினுடனையும்-கூந்தலையுடைய தமயந்தியையும், முன்னுறும்-முன்னேதோன்றுகின்ற, உருவெளியென-உருவெளித்தோற்றமென்று, இறை-நளமகாராசன, உவந்து - மகிழ்ச்சியையடைந்து, புல்லினன்-தழுவினன், அரிவையும்-தமயந்தியும், அன்னவாறு அந்தப் பிரகாரம், எண்ணி-நினைத்து, ஆங்கு-அவ்விடத்திலே, எதிர்-எதிரேவந்த, புரவலன்-அரசனது, மார்புற-மார்புபொருந்த, புல்லினாள்-தழுவினாள் எ-று.

தமயந்தியை உண்மையாகக் கண்ட நளன் உருவெளியென மயங்கினானென்றும், அவ்வாறின்றி உருவெளியாகக்கண்ட தமயந்தியானவள் நளனை

உண்மையென் றன்னிப் புல்லினுனென் றுங்கொள்க. [தெய்வவரத்தினுலிவனு ருவை யறியாளாகலின் ஒருவர்க்கொருவர் மயக்கஞ்சொல்லப்பட்டமையால், மயக்கவணியாம்.]

(க-து.) நளன்உருவெளித்தோற்றமென்று தமயந்தியைப் புணர்ந்தான், தமயந்தி மப்படியே நினைத்து நளனைப்புணர்ந்தாள் எ-ம். 62

சொல்லருமின்பமீதூறத்தோன்றலும்
புல்லுவிட்டவ்வுருப்பொலிவுநோக்கினுன்
மெல்லியலவ்வுருவிழியிற்காண்குறு
தல்லலுற்றணிவளையங்கைநீக்கினுள்.

(இ-ள்.) சொல்லரும்-சொல்லுதற்கரிய, இன்பம்-இன்பமானது, மீதூற-அதிகரிக்க, தோன்றலும்-நளனும், புல்லுவிட்டு-தழுவுதலைநீக்கி, அவ்வுரு-அந்தவடிவினுடைய, பொலிவு-காந்தியை, நோக்கினுன்-பார்த்தான், மெல்லியல்-தமயந்தியானவள், அவ்வுரு-அந்தவடிவத்தை, விழியில்-கண்ணினுல், காண்குறுது-காணுதவளாகி, அல்லலுற்று-பயந்தையடைந்து, அணிவளை-அழகியவளையலையணிந்த, அங்கை-அழகியகையை, நீக்கினுள்-விடுத்தாள் எ-று.

மாதர்கட்கு அச்சம் உரியகுணமாதலின் உருவுகண்ணிறமுன்று துகையிலகப்படலால், இவ்வாறுவெருவிவிடுத்தனளென்க.

(க-து.) நளன் இன்பந்தோன்றப்புணர்ந்து தமயந்திவடிவத்தைப்பார்த்தான். தமயந்திஅவ்வடிவத்தைக்காணுது கையைவிட்டாள் எ-ம். 63

பொன்னடிப்பூஞ்சிலம்பொலிப்பமேகலை
யின்னரிக்கிண்கிணியிகலியார்ப்பெழ
மின்னடைகற்பதுபோன்றுமெல்லெனத்
தன்னமர்கோயிலுட்டையலெய்தினுள்.

[இதுமுதல் மூன்றுபாட்டுகளால்தனித்தனி அவ்விருவர்செய்கையும்வெவ்வேறுநடந்தமை சொல்லப்படுகின்றன.]

(இ-ள்.) பொன்-பொன்னினுற்செய்த, அடிப்பூஞ்சிலம்பு-பாதத்திலணிந்தஅழகியசிலம்புகள், ஒலிப்ப-ஒலித்தலைச்செய்ய, மேகலை-மேகலையிலிருக்கின்ற, இன்-இனிய, அரி-பருக்கைக்கல்லையுடைய, கிண்கிணி-சதங்கைகள், இகலி ஒன்றோடொன்றுதாக்கப்பட்டு, ஆர்ப்பெழ - ஒலியெழும்ப, மின்-மின்னல், நடைகற்பதுபோன்று-நடத்தலைக்கற்பதொத்து, மெல்லென-மிருதுவாக, தன் தனது, அமர்-அமர்கின்ற, கோயிலுள்-கன்னிமாடத்தில், தையல்-தமயந்தியானவள், எய்தினுள்-அடைந்தாள் எ-று.

[இதுதற்குறிப்பணி.]

(க-து.) தமயந்திகன்னிமாடத்திற்சேர்ந்தாள் எ-ம். 64

கருந்தடங்கண்ணியைக்கைவிட்டுப்புல்லியும்
பொருந்தியவுருவெளியென்றுபோக்கிநல்
லருந்தனம்பெற்றிழந்தாரிலையனும்
வருந்திவெந்துயரொடுமதிமயங்கினன்.

(இ-ள்.) கரும்-கரிய, தடம்-விலாசம்பொருந்திய, கண்ணியை கண்களையுடையதமயந்தியை, கைவிட்டுப்புல்லியும்-கையினாலேதழுவியும், பொருந்திய-பொருந்தப்பெற்ற, உருவெளியென்று-உருவெளித்தோற்றமென்று, போக்கி-விட்டு, நல்-நல்ல, அருந்தனம்-அரியதிரவியத்தை, பெற்று-எளிதிற்பெற்று, இழந்தாரில்-இழந்தவர்களைப்போல, ஐயனும்-நளமகாராசனும், வருந்தி-வருத்தமடைந்து, வெந்துயரொடு-வெவ்வியதுன்பத்துடன், மதிமயங்கினன்-புத்திமயங்கினன் எ-று.

பின்நடக்கைகளால் நளன் மெய்த்தமயந்திபென்றறிந்துவருந்தினனென்க. [அருந்தனம்பெற்றிழந்தாரில் என்றமையால், உவமையணியாம்.]

(க-து.) நளன் கைப்பொருளிழந்தவர்கள்போலத் தமயந்தியைவிடுத்துத்துன்புற்றுமயங்கினன் எ-ம். 65

பாணிகர்வண்டினம்பாடுஞ்சோலையுஞ்
சேணுறநிவந்தசெய்குன்றுந்தேடியுங்
காணலனாகியகளிநல்யானையான்
மாணிழையுறைதருமாடமெய்தினன்.

(இ-ள்.) பாண்-இசைப்பாட்டுக்கு, நிகர்-நிகராக, வண்டினம்,வண்டுக்கூட்டங்கள், பாடும்-பாடுகின்ற, சோலையும்-சோலையிடத்திலும், சேண்-ஆகாயத்தில், உற-பொருந்த, நிவந்த-உயர்ந்த, செய்குன்றும்-கட்டுமலையினிடத்திலும், தேடியும் - தேடுதல்செய்தும், காணலனாகிய - காணாதவனாகிய, களிநல்யானையான்-நளமகாராசாவானவன், மாணிழை-தமயந்தி, உறைதரும்-வசிக்கின்ற, மாடம்-கன்னிமாடத்தை, எய்தினன்-அடைந்தான் எ-று.

மாணிழை-ஆகுபெயர். இவ்வளவுகாலமிவ்விடந்தோறுந்தேடியறியாத நளன் தமயந்திசென்ற நெறிபற்றி அவளுறையுமிடத்துச்சென்றானென்க.

(க-து.) நளன்தமயந்திகன்னிமாடத்திற்சேர்ந்தான் எ-ம். 66

மின்னிடையரம்பையர்குழாத்துண்மேவிய
வன்னமென்னடையயிராணியாமென
நன்னுதன்மடந்தையர்நாப்பணின்னகைக்
கன்னிவீற்றிருந்தல்கண்களிப்பநோக்கினன்.

[இதனால் தமயந்திக்காட்சிசொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மின்-மின்னலையொத்த, இடை-இடையையுடைய. அரம்பையர் குழாத்துள்-தெய்வமாதர்கள்கூட்டத்துள், மேவிய-பொருந்திய, அன்னம்-அன்னநடைபோன்ற, மெல்-மெல்லிய, நடை-நடையையுடைய, அயிராணியா மென-இந்திராணியாமென்றுசொல்லும்படி, நல்-நல்ல, நுதல்-புருவத்தையுற்ற, மடந்தையர்மாதர்களது, நாப்பண்-நடுவே, இன்-இனிய, நகை-புன்சிரிப்பையுடைய, கன்னி-தமயந்தியானவள், வீற்றிருத்தல்-வீறுடனிருத்தலை, கண் களிப்ப-கண்களிக்க, நோக்கினான்-பார்த்தான் எ-று.

[அயிராணியாமெனவென்றமையால், உவமையணியாம்.]

(க-து.) நளன் தமயந்தியைக் கண்டான் எ-ம்.

மண்டமர்கடந்தவேனளன்வந்தானெனத்
தொண்டைவாய்மடந்தையர்நாளுஞ்சொல்வன
பண்டருமொழிக்கிளிபயின்றுகூறலுங்
கண்டதோவிஃதெனக்காளையெண்ணினான்.

[இதனால் நளன் தன்னுளத்தையுரைத்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மண்டு-நெருங்கிய, அமர்-போரை, கடந்த-வென்ற, வேல்-வேற்படையையுள்ள, நளன்வந்தானென-நளமகாராஜன்வந்தானென்று, தொண்டைவாய்-கொவ்வைக்கனிபோன்றவாயையுடைய, மடந்தையர் - மாதர்கள், நாளும்-நாடோறும், சொல்வன-சொல்வனவற்றை, பண்டரு-இசையத்தருகின்ற, கிளி-கிளிப்பிள்ளை, பயின்று - பழகி, கூறலும்-சொன்னவளவில், இஃது-இந்தக்கிளிப்பிள்ளை, கண்டதோவென-பார்த்ததோவென்று, காளை-நளமகாராசன், எண்ணினான்-நினைத்தான் எ-று.

தமயந்திவருந்துங்காலத்து அதுதீர்ந்து மனங்களிக்க நளன்வந்தானென்று தோழிகள்சொல்லுஞ்சொல்லைக்கேட்டு அவள்கையிலிருக்குங் கிளிப்பிள்ளை சொல்லுவதாகலின், இவ்வாறுகூறிற்று. தெய்வவரத்தான் மறைந்துவந்த நம்மை இது எவ்வாறு கண்டதென்று சிந்தித்தானென்க. யார் எதையுரைப்பினும் அதையுடையோர் தம்மையாமென்று எண்ணுதலியல்பென்க. [இது தன்மைநவிற்சியணி.]

(க-து) கிளி வழக்கமாக நளன்வந்தானென்றுசொல்ல, நளன் இது தன்னையறிந்ததென்று சந்தேகித்தான் எ-ம். 68

ஒருத்தியானளனெனவிருப்பவுள்ளுறும்
விருப்பினுலொருத்தியான்வீமன்மாதனை
யருக்கமழ்பூந்தொடைசூட்டமன்னவன்
பொருப்புறழ்தடம்புயம்புளகம்பூத்தவே.

[இதுமுதல் இரண்டுபாட்டுகளால் நளன்மகிழ்ச்சியடைதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) உள்ளூறும்-உள்ளேயிருக்கின்ற விருப்பினால்-ஆசையினால், யானெனா-நளமகாராசனென்று, ஒருத்தியிருப்ப-ஒருமங்கையிருக்க, ஒருத்தி-ஒருமங்கையானவள், யான்-நான், வீமன்மாதென-தமயந்தியென்றுசொல்லி, மருக்கமழ்- வாசனைகமழ்கின்ற, பூந்தொடை-மலர்மாலையை, சூட்ட-தரிக்க, மன்னவன்-நளமகாராஜனுடைய, பொருப்புறழ்-மலையையொத்த, தடம்-பருத்த, புயம்-தோள்களானவை, புளகம்பூத்த-மயிர்க்குச்செறிந்தன எ-று.

நளனுக்கே தமயந்திமாலைசூடுதற்குச் சந்தேகமில்லையென்னும் தெளிவாலும், அவனுக்கே சூட்டவேண்டுமென்கிற ஆர்வத்தாலும், அவ்வார்வமுற்றுபெறுந்துணையும் பொறுக்கமாட்டாத மங்கையர் தமக்குள்ளே அவ்வாறுசெய்தேனு நோக்குச்வாமெனுமன்பால் நாடோறுஞ் செய்துவருகையில், அன்றுஞ் செய்தனராக-அதுகண்ட அவனுக்குத் தன்னிடத்து ஆர்வம்வைத்தமை தெரிந்து தனக்கே மாலைசூட்டுவாளென்னுந் தோற்றத்தால், தோள்கள் புளகம் பூத்தனவென்க.

(க-து.) ஒருத்திநளனாகவும் மற்றொருத்தி தமயந்தியாகவும் மாலைசூட்டக் கண்டநளன் மகிழ்ந்தான் எ-ம்.

69

மலர்ந்தசெந்தாமரைமென்மடலின்மேற்றனக்
கிலங்கிழையுகிரினாலெழுதுபாசுர
நலம்பெறக்காண்டலுநண்ணலார்புக
ழுலம்பொருதோளினனுவகையெய்தினான்.

(இ-ள்.) மலர்ந்த-விரிந்த, செந்தாமரைமென்மடலின்மேல-சிவந்ததாமரையினுடையமெல்லியவிதழின்மேல், தனக்கு-தனக்கு, இலங்கிழை-தமயந்தியானவள், உகிரினால்-நகத்தினாலே, எழுது-எழுதப்பட்ட, பாசுரம்-வசனங்களை, நலம்பெற, நன்மைபெற, காண்டலும்-பார்த்தவளவில், நண்ணலார்-பகைவரால், புகழ்-புழப்பட்ட, உலம்-திரள்கல்லை, பொரு-ஒத்த, தோளினன் - தோள்களையுடையநளமகாராசன், உவகை - சந்தோஷத்தை, எய்தினன் - அடைந்தான் எ-று.

தமயந்தி நாடோறுந்தன்வருத்தத்தை எழுதிக்கொள்ள வேண்டுமென்கிற அன்புடையவளாயிருந்துஞ் சிலஇடையூறுகளால் ஒத்துக்கொள்ளாமையால், அவ்வன்பை யொருவாறு நிறைவேற்றற்பொருட்டுத் தாமரைமடலிலே தனக்கெழுதிக்கிடந்த செய்யுளைக்கண்டு, மகிழ்ச்சியடைந்தனனென்க.

(க-து.) தமயந்தி தாமரை மடலின்மேல்நகத்தினாலே தனக்கெழுதும் வசனங்களைப் பார்த்தவளவில் நளன் மகிழ்ச்சியடைந்தான் எ-ம்.

70

செழுமணிப்பித்திகைத்தலத்திற்றீதறு
மழவிடையனையவன்தோன்றலும் |வன்
கழையமைதோளினர்காளைபேரெழு
தெழுதியவுருவிலொன்றென்னவெண்ணினர்.

[இதனால் நளனது நிழல்வடிவால் மாதர்மனம்பேதியாமை சொல்லப்படு கின்றது.]

(இ-ள்.) செழுமணி-செழுமையுள்ள மணிகள்பதித்த, பித்திகைத்தலத் தில்-சுவர்த்தலத்தில், தீதறு-தற்றமற்ற, மழ-இளமைபொருந்திய, விடையனை யவன்-இடபத்தையொத்த நளமகாராசனுடைய, வடிவும்-உருவம், தோன்ற லும்-தெரிந்தவளவில், கழை-மூங்கில்போல, அமை-பொருந்திய தோளினார்-தோளையுடையமாதர்கள், காளை-நளமகாராசனது, பேர்-பெரிய, எழில்-அழ கை, எழுதிய-தம்மாலெழுதப்பட்ட, உருவில்-வடிவத்தில் ஒன்றெண-ஒருவடி வென்று, எண்ணினார் நினைத்தார்கள் எ-று.

மந்திரத்தால் நளன் மறைந்திருப்பினும் அவன்வடிவந்தோன்று மாகை யால், அதைச் சுவர்த்தலத்திற்கண்ட மங்கையர் அந்தப்புரத்தில் ஒருவன்வந்த னனென்னு நினைப்பு அணுத்துணையுமின்றி, தமயந்திமுதலியதாங்கள்பார்க் கும்பொருட்டுச் சித்திரித்திருக்கு நளவடிவங்களிலே இவனையும் ஒன்றெனம தித்திருந்தனரென்க. [அவ்விடத்துச் சித்திரத்தோடு நளனுடையநிழலுக்குவே ற்றுமையின்மை கூறப்பட்டமையால், பொதுமையணியாம்.]

(க-து.) இரத்தினச்சுவரில் நளன் வடிவுதோன்றிய வளவில் பெண்கள் எழுதியவுருவி லொன்றென் றெண்ணினார்கள் எ-ம்.

நாமவேல்வலனுயர்நளனுக்காங்கமர்
வாமமேகலையினர்நடுவண்வைகுவா
டாமமார்குழற்றமயந்தியென்றவள்
காமருபேரெழில்காட்டுகின்றதே. 71

[இதனால் நளன் தமயந்தியைத் தெரித்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) நாமம்-அச்சத்தைத்தருகின்ற, வேல்-வேற்படையால், வலனுயர்-வெற்றிமிகுந்த, நளனுக்கு-நளமகாராஜனுக்கு, ஆங்கு - அவ்விடத்தில், அ மர்-அமர்ந்த, வாமம்-அழகிய, மேகலையினர்-மேகலாபரணமுள்ள மகளிரு டைய, நடுவண்-நடுவே, வைகுவாள்-இருப்பவள், தாமம்-மாலைகள், ஆர்-நிறை ந்த, குழல்-கூந்தல்பொருந்திய, தமயந்தியென்று - தமயந்தியென்னும் பெய ரையுடையவளென்று, அவள்-அவளது, காமர்-ஒளியுள்ள, பேர்-பெரிய, எழில்-அழகானது, காட்டுகின்றது-காண்பிக்கின்றது எ-று

(க-து) அழகினால் தமயந்தியென் றறியப்பட்டது. 72

ஏதமில்குணத்தினளினையளாக நண்
டாதவிழ்பூங்குழற்றையல்பாற்றம
தாதரம்பெருகியவமரரேவிய
தூதியர்செய்திறஞ்சொல்லுவாமரோ.

[இதனால் கடக்கூற்று சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) ஏதமில்-குற்றமற்ற, குணத்தினன்-குணத்தையுடைய நளமகாராஜன், இனையனாக-இத்தன்மைபொருந்தியவனாக, நுண்-நுட்பமாகிய, தாது-மகரந்தப்பொடிகள், அவிழ்-உதிர்கின்ற, பூ-மலரையணிந்த, குழல்-கூந்தலையுடைய, தையல்பால் - தமயந்தியினிடத்தில், தமது-தமது, ஆதரம் - ஆசையானது, பெருகிய-மிகுந்த, அமரர் - தேவர்களால், ஏவிய-ஏவப்பட்ட, தூதியர்-தூதிகள், செய்திறம்-செய்தவகையை, சொல்லுவாம்-சொல்லுவாம் எ-று. (அரோ-அசை.)

(க-து.) நளனிப்படியிருக்க, தேவர்கள் தமயந்தியிடத்து ஏவப்பட்ட தூதிகள் செய்கையைச் சொல்லுவாம் எ-ம். 73

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

கானமரலங்கன்மாலைக் கடவுளர்விடுப்பவந்த
பானலங்கடந்ததீஞ்சொற் பணைமுலைப்பாவைநல்லா
ரூனொடுபழகிநெய்த்தோ ருமிழ்ந்துவெம்புலவுநாறு
மானவேல்வீமனீன்ற வனிதையையினிதுகண்டார்.

[இதுமுதல் எட்டுபாட்டுகளால் இந்திரன்முதலிய நால்வராலேவப்பட்ட தூதிகள் தமயந்தியோடுபேசினவை சொல்லப்படுகின்றன.]

(இ-ள்.) கான்-வாசனை, அமர் - பொருந்திய, அலங்கல்-அசையாநின்ற, மாலை-மாலையையுடைய, கடவுளர்-தேவர்களால், விடுப்ப-அனுப்பப்பட்டு, வந்த-வந்த, பால்-பாலினது, நலம்-நன்மையை, கடந்த-வென்ற, தீ-தித்திப்பொருந்திய, சொல்-சொல்லையும், பணை-பருத்த, முலை-முலையையுமுடைய, பாவைநல்லார்-பாவைபோலுமிருக்கின்ற மாதர், ஊனொடு-மாமிசத்துடன், பழகி-பழகுதல்செய்து, நெய்த்தோருமிழ்ந்து-உதிரத்தையுமிழ்ந்து, வெம்-வெம்மைபொருந்திய, புலவு-புலானாற்றம், நாறு-நாறுகின்ற, மான-ஒப்பற்ற, வேல்-வேற்படைபெற்ற, வீமனீன்ற-வீமராஜன்பெற்ற, வனிதையை-தமயந்தியை, இனிது-இனிதாக, கண்டார்கள் எ-று.

(க-து.) தேவர்கள் விடுக்கப்பட்ட தூதிகள் தமயந்தியைக் கண்டார்கள் எ-ம். 74

பொருவருவனப்பின்மிக்க புலோமசைமுதல்வராய
வரி| ~~விருவிழிக்குமுதஞ்~~செவ்வாய் வானவர்மகளிர்தாமித்
தெரியிழைசெவ்விநோக்கிற் சேணிடைப்பொலிந்துதோன்று
மிரவிமுன்மதியமாவ ரெனவுளத்தெண்ணினாரால்.

(இ-ள்) பொருவரு-ஒப்புசொல்லுதற்கரிய, வனப்பின்-அழகினாலே, மிக்க-மிகுந்த, புலோமசைமுதல்வராய-இந்திராணிமுதலியராகிய, வரி-இரேகையுள்ள, விழி-கண்களையும், குமுதச்செவ்வாய்-அல்லிமலர்ப்போன்ற சிவந்தவாயினையுமுடைய, வானவர்மகளிர்-தெய்வமாதர், இத்தெரியிழை-இந்தத்தமயந்

தியினது, செவ்வி-அழகை, நோக்கில்-பார்த்தால், சேணிடை-ஆகாயத்தினிட த்து, பொலிந்து-பிரகாசித்து, தோன்றும்-தோன்றுகின்ற, இரவிமுன்-சூரிய ன்முன்னே, மதியமாவரென-சந்திரன்போலாவரென்று, உளத்து-மனதிலே, எண்ணினார்-தூதியர் சிந்தித்தார்கள் எ-று. தாம்-ஆல்-அசைகள்.

தெய்வமாதரிற் சிறந்த இந்திராணிமுதலான மங்கையரும் இவளழகை நோக்கில் தாமழகுடையோமென்னுஞ் செருக்கை யொழிவார்களென்பது கருத்து.

(க-து.) தமயந்தி அழகுக்குமுன்னே தேவமாதரழகு சூரியன் முன்னே தோன்றுஞ் சந்திரன்போலும் என்றெண்ணினார்கள் எ-ம். 75

எய்தியமகளிர் தம்மி லிமையவர் தலைவன்றூதி
ஐயரிநெடுங்கட்செவ்வா யணங்கிற்கு மணங்குபோல்வாய்
கொய்துணர்த்தருவினீழற் கோமகன்பணியாற்போந்த
செய்திநீகேட்டியென்று சீறடிவணங்கிச்சொல்வாள்.

(இ-ள்.) எய்திய-அடைந்த, மகளிர்தம்மில் - தூதியர்நால்வருள், இமைய வர்தலைவன்-இந்திரனது, தூதி-தூதியானவள், ஐ-அழகிய, அரி-இரேகைகளை யுற்ற, நெடுங்கண்-நெடியகண்களையும், செவ்வாய்-சிவந்த வாயினையுமுடைய, அணங்கிற்கும்-தெய்வமங்கைக்கும், அணங்குபோல் வாய்-தெய்வமாதையொ த்த தமயந்தியே, கொய்-கொய்கின்ற, துணர்-பூங்கொத்துகளுள்ள, தருவினீ ழல்-ஐந்தருவினிழலிலிருக்கின்ற, கோமகன்-இந்திரனது, பணியால்-ஏவலினு லே, போந்த-வந்த, செய்தி-செய்தியை, நீகேட்டியென்று - நீகேட்பாயாகவெ ன்று, சீறடி-சிறியபாதங்களை, வணங்கி-வணங்குதல்செய்து, சொல்வாள்-சொ ல்லுவாள் எ-று.

தான்தெய்வமங்கையாயினுந் தன்னிறைவனுக்குத் தலைவியாக்குவிக்கத் தூதியாகவந்தமையால், தமயந்தினிடத்து அவளுக்கு வணக்கஞ் சொல்லப் பட்டது.

(க-து.) இந்திரன்றூதியானவள் தமயந்தியைவணங்கிச் சொல்லுவாளா யினள் எ-ம். 76

இருவிசும்பொருகோலோச்சி யேதிலர்க்கடந்துதேவர்
பரவிநின்றிறைஞ்சநாளும் பனிமலர்த்தருவினீழ
லரியணைப்புறத்துவைகு மண்ணலுக்கமிர்தமன்ன
யுருவிலாளொருவன்செய்யு முறுபகைகாத்தல்வேண்டும்.

(இ-ள்.) இரு-பெரிய, விசும்பு-வானுலகை, ஒருகோலோச்சி - ஒருசெங் கோல்செலுத்தி, ஏதிலர்-சத்துருக்களை, கடந்து-வென்று, தேவர்-தேவர்கள், பரவிநின்று-துதிசெய்துநின்று, இறைஞ்ச-வணங்க, நாளும்-நாடோறும், பனி-குளிர்ச்சி பொருந்திய, மலர்-மலரானிறைந்த, தருவினீழல்-ஐந்தருவினிழலில்,

அரியணைப்புறத்து-சிங்காதனத்தினிடத்து, கைகுய்-தங்கிய, அண்ணலுக்கு-இந்திரனுக்கு, அமிர்தமன்னாய் - அமிர்தத்துக்கொப்பானவளே, உருவிலான்-வடிவமில்லாதவனாகிய, ஒருவன்-மன்மதனானவன், செய்யும்-செய்கின்ற, உறு-மிகுந்த, பகை-பகையைநீக்கி, காத்தல்வேண்டும்-(நீ) காக்கவேண்டும் எ-று.

இருவிசும்பென்றதனால், பொன்னுலகென்பதும்; ஒருகோலோச்சியென்றதனால், பொதுவறப்புரப்பவனென்றும்; எதிலர்க்கடந்தென்றனால், வீரனென்பதும்; தேவரிறைஞ்சவென்றதனால், அவரினுஞ்சிறந்தோனென்பதும்; தருனிழலென்றதனால், மிகுந்தசெல்வமுடையோனென்பதும்; அரியணைப்புறத்தென்பதனால், அரசுசெய்பவனென்றும், அண்ணலென்றதனால், பெருமையிற்சிறந்தோனென்பதும்; கருத்தாகப்பெற்றும். [இந்திரனை மணப்புரிவாயென்பது உருவிலான்செய்யும் பகையொழித்தல்வேண்டுமென்னும் வாக்கியத்தாற்பெறப்படுதலால், பிறிதுநவிற்சியணியாம்.]

(க-து.) இந்திரனுக்கமிர்தம்போனற தமயந்தியே-நீ மன்மதபாணத்தை நீக்கிக் காக்கவேண்டுமென்றாள் எ-ம். 77

எம்மிறையிளவற்காக விருங்கடல்கடைந்துவாசச்
செம்மலர்த்திருவையீந்த தேவர்வாசவற்குமின்னுங்
கைம்மலர்வருந்தவிக்குங் கடல்நடந்துழலாவண்ணம்
பொம்மல்வெம்முலைபாயன்னோற் கின்னருள்புரிதல்வேண்டும்.

(இ-ள்.) எம்மிறை-எங்களரசனது, இளவற்காக-உபேந்திரனுக்காக, இரும்-பெரிய, கடல்கடைந்து-பாற்கடலைக்கடைந்து, வாசம்-வாசனை பொருந்திய, செம்மலர்த்திருவை-செந்தாமரைமலரிலிருக்கின்றது திருமகளை, ஈந்த-தந்த, தேவர்-தேவதைகள், வாசவற்கும்-இந்திரனுக்கும் இன்னும்-இன்னமும்,கைம்மலர்வருந்த-கைகளாகியமலர்கள்வருந்த, இக்குக்கடல்கடைந்து - கருப்பிரசக்கடலைக்கடந்து உலாவண்ணம்-அலையாதவிதம், பொம்மல்-பொலிவினையுடைய வெம்-விரும்பத்தக்கவாகிய, முலையாய்-முலைகளுள்ளதமயந்தியே, அன்னோற்கு-அவ்விந்திரனுக்கு. இன்னருள்-இனியவருளை, புரிதல்வேண்டும்-(நீ) செய்தல்வேண்டும் எ-று.

இங்கு இளவலென்றது - இந்திரனுக்குச் சயந்தருவதற்காக அவன்தம்பியாயவதரித்து உபேந்திரனாகி யுடனிருக்கின்ற திருமாலையெனக்கொள்க.[தேவர்க்கு இம்முயற்சியில்லாதிருக்கவும் அவர்க்குளதாகக்கூறலால், உயர்வுநவிற்சியணியாம்.]

(க-து.) இந்திரனுக்கருள்செய்ய வேண்டுமென்றாள் எ-ம். 78

மாயிறுஞாலந்தன்னின் மகம்பலவியற்றிப்பெற்ற
மீயுயர்பசும்பொன்னாட்டின் மேதகுசெல்வமெல்லா
மேயினநின்பாலன்றோ விமையவர்க்கிறைவன்பாணின்
சேயரிக்கடைக்கணோக்கஞ் சிறிதருள்புரியின்மாதே.

(இ-ள்.) மா-மகத்தாகிய, இரு-பெரிய, ஞாலந்தன்னின்-பூமியிலே, மகம் பலவியற்றி-நூறுவேள்வி, செய்து, பெற்ற-பெற்றுக்கொண்ட, மீ-மேலாக, உயர்-உயர்ந்த, பசு-பசுமைபொருந்திய, பொன்னாட்டின்-பொன்னுலகத்தில், மேதகு-மேன்மையுடைய, செல்வமெல்லாம் - பாக்கியமெல்லாம், நின்பால்-உன்னிடத்து, எயினவன்றோ-பொருந்தியனவல்லவா, இமையவர்க்கிறைய வன்பால்-இந்திரனிடத்தில், நின்-உன்னுடைய, சேயரி-செவ்வரிபரந்த, கடைக்கணோக்கம்-கடைக்கண்பார்வையானது, சிறிது-கொஞ்சம், அருள்புரியின் அருள்செய்தால் எ-று.

செல்வமாவன, மூவுலகாட்சி-கற்பகமுதலியவைந்தருக்கள்-காமதேனு-சிந்தாமணி-சங்கநிதி-பதுமநிதி-பொன்னுலகம்-அமராவதி-வைசவந்தமாளிகை ஐராவதயானை-உச்சைசிரவக்குதிரை-சுதர்மசபை-நந்தனவனம்- அமிர்தம்-தேவர்-அரம்பையர்-இவைமுதலியனவாம். [செல்வத்திற்கும் அருட்குமாற்றிக்கோடல் சொல்லப்பட்டமையால், மாற்றுநிலையணியாம்.]

(க-து.) உன் கடைக்கண்பார்வை சிறிது இந்திரனிடத்தில் வைத்தால் அவன்செல்வமெல்லாம் உனக்குடையவாம் என்றாள்தூது எ-ம். 79

மண்ணினிற்சிறந்துவாழு மன்பதைத்தொகுதிதன்னி
லெண்ணிசிறந்தாரன்றோ வியக்கரவ்வியக்கர்தம்மில்
விண்ணவர்சிறந்தாரன்றோ விண்ணவர்தமையுமாளு
மண்ணினின்னை வல்கேட்பி னதனினுஞ்சிறந்ததுண்டோ.

(இ-ள்.) மண்ணினில்-பூவுலகத்தில், சிறந்து-சிறப்பைப்பொருந்தி,வாழும்-வாழ்கின்ற, மன்பதைத்தொகுதிதன்னில்-மக்கட்கூட்டத்துக்குள், எண்ணிடில்-நினைக்குமிடத்தில், இயக்கர்-இயக்கரானவர்கள், சிறந்தாரன்றோ-சிறந்தவர்களல்லவா, அவ்வியக்கர்தம்மில்-அந்தவியக்கருக்குள்ளே, விண்ணவர்-தேவர்கள், சிறந்தாரன்றோ-சிறப்பைப்பொருந்தினவர்களல்லவா, விண்ணவர்த்தமையுமாளும்-அத்தேவர்களையுமாட்சிசெய்கின்ற, அண்ணல்-இந்திரனானவன், நின்னைவல்கேட்பின் - உன்னுடையஏவற்றொழிலைக்கேட்பானாயின், அதனினும்-அதைக்காட்டிலும், சிறந்தது-சிறப்பையுடையது, உண்டோ-ஒருபொருளுண்டோ இல்லை எ-று.

"இம்மனைக்கிம்மனை விசேடஞ்சித்திர-மிம்மணிக்கிம்மணி விசேடஞ்சோதி-யெனவேவிளங்கும் விசேடத்தின்பொருள்" இவ்விதியால்-ஒன்றற்கொன்றுவிசேடமாதலறிக. [மேன்மேலுஞ்சிறப்பைச்சொல்லுதலால், மேன்மேலுயர்ச்சியணியாம்.]

(க-து.) இந்திரனுக் கேவல்செய்தால் இதிலுஞ் சிறந்ததில்லை என்றாள் எ-ம். 80

தாதொடுநறவுதூற்றுந் தருநிழலினிதுவைகு
மேதகுதிருமாளும் வேட்டனவுவந்துநல்கு

வேதமிலரம்பைமாதர முறைமுறையேவல்கேட்ப
நீதொழுமமரர்யாரு நிற்றொழப்பணித்தியென்றாள்.

(இ-ள்.) தாதொடு-மகரந்தப்பொடியோடு, நறவு-தேனையும், தூற்றும்-தூற்றுகின்ற, தருநிழல்-ஐந்தருநிழலில், இனிது-இனிதாக, வைகும்-தங்கிய, மேதகு - மேன்மைபொருந்திய, நிதியும் - சங்கநிதி பதுமநிதிகளும், ஆனும்-காமதேனுவும், வேட்டன - விரும்பியவைகளை, உவந்து - மகிழ்ந்து, நல்க-கொடுக்க, ஏதமில்-குற்றமில்லாத, அரம்பைமாதர்-தெய்வமடவார்கள், முறைமுறை-வரிசைவரிசையாக, ஏவல்கேட்ப-ஏவற்றொழிலைக்கேட்க- நீ தொழும்-நீவணங்குகின்ற, அமரர்யாரும்-தேவர்களியாரும், நிற்றொழ-நின்னை வணங்க, பணித்தியென்றாள்-சொல்லென்றாள் எ-று.

(க-து.) நீ வணங்கப்படுந் தெய்வங்க ளுன்னை வணங்கச்செய் யென்றாள் எ-ம். 81

இனைய னவுரைத்தலோடும் யாவர்தமுளமுந்தேறும்
பனியிருவிசும்பிற்றேவர் பரவவீற்றிருக்கும்வேந்தென்
மனநிலையுணரான்போலு மழைமதர்நெடுங்கணல்லா
யுனைவிரைந்திங்ஙன்றூது விடுத்ததென்னுரைத்தியென்று.

[இதுமுதல் இரண்டு பாட்டுகளால் தமயந்தி இந்திரன் தூதிக்கு விடைகொடுத்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) இனையன-இத்தன்மையவாகிய சொற்களை, உரைத்தலோடும்-சொன்னமாத்திரத்தில், யாவர்தம்-எவர்களுடைய, உளமும்-மனமும்,தேறும்-தெரியாநின்ற, பனி-குளிர்ச்சிபொருந்திய, இரு-பெரிய, விசும்பில்-தெய்வலோகத்திலிருக்கின்ற, தேவர்-தேவர்கள், பரவ-வணங்க, வீற்றிருக்கும்-அரசிருக்கின்ற, வேந்து-இந்திரனானவன், என்மனநிலை-என்மனத்திநிலையை; உணரான்போலும்-தெரியாதவன்போல மழை-குளிர்ச்சிபொருந்திய,மதர்-மதர்த்த, நெடுங்கண்-நெடியகண்களையுடைய. நல்லாய்-தூதியே, உனை-உன்னை, விரைந்து-சீக்கிரமாக, இங்ஙன்-இவ்விடத்தில், தூதுவிடுத்தது-தூதாகவனுப்பியது, என்-யாதுகாரணமாக, உரைத்தியென்று-சொல்லென்று எ-று.

இச்செய்யுளும் வருஞ்செய்யுளுங் குளகம். [அறியான்போலுமென்றமையால், தற்குறிப்பணியாம்.]

(க-து.) தமயந்தியானவள் தூதியே-இந்திரனெனது மனதையறியாதவன்போலே உன்னை யென்னகாரணமாகத் தூதுவிட்டானென்று சொல்லி எ-ம். 82

என்னுளத்தென்றுநீங்கா திருப்பவனளனேயாகும்
பொன்னகர்க்கிறைவன்றன்பாற் பொருந்துதியென்னுந்தூதுக்

கன்னவனியையுங்கொல்லோ வெனமறைந்தயலேநிற்கு
மன்னவன்மகிழ்ச்சிகூர மடவாலினிதுசொன்னாள்.

(இ-ள்.) என்னுளத்து-என்னுடையமனத்தில், என்றும்-எந்நாளும், நீங்காதிருப்பவன்-பிரியாமனிலைநிற்பவன், நளனேயாகும்-நளமகாராசனே யாகும்; பொன்னகர்க்கிறைவன்றன்பால்-இந்திரனிடத்து, பொருந்துதி-நீ பொருந்தக்கடவாய், என்னுந்தூதுக்கு-என்று சொல்லுந்தூதுக்கு, அன்னவன்-அந்நளமகாராசன், இயையுங்கொல்லோவென-சம்மதிப்பாளோ வென்று, மறைந்து-ஒளித்து, அயலேநிற்கும்-பக்கத்திலே நிற்கின்ற, மன்னவன்-அரசன், மகிழ்ச்சிகூர-மகிழ்ச்சிமிக, மடவரல்-தமயந்தி, இனிது-இனிதாக,சொன்னாள்-சொல்லினாள் எ-று.

அன்னவனியைதலாவது-தான்காணியாகக் கொண்ட மனத்தை விட்டு நீங்குதல். அவ்வாசனுவது என்னிடத்து வெறுத்து நீங்கல்வேண்டும், யானுவது அவனைவெறுத்து நீங்கல்வேண்டும். இருவரும் ஒத்திருக்கும்போது அவ்விடத்தை விரும்பத்தகாதென்றதாயிற்று. ஆயின்-ஓரிடத்தில் இருவர் எப்படி இருக்கலாமென்பது கருத்து. சுபாவத்திற்சொல்லுந் தமயந்தியினுரையைக் கேட்டமையால், நளனுக்கு மிகவுமகிழ்ச்சியுண்டாயிற்றென்க.

(க-து.) என்னுள்ளத்திருப்பவனளனுகும், இந்திரனுக்குப் பொருந்தென்னுந் தூதுக்கு நளனிசைவானோவென்றாள் எ-ம். 83

கோற்றொடிநளன்மேலுற்ற காதலைக்குறித்துநோக்கி
மாற்றுதலரிதென்றெண்ணி வாசவன்றூதியேக
வாற்றல்வாசவற்குநேரா வணங்கெவர்க்கியையுமென்னுந்
தோற்றமோடுரையாமற்றைத் தேவர்தூதியரும்போனார்.

[இதனால் தேவதூதியர்நால்வரு மீண்டமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கோற்றொடி-தமயந்தியானவள், நளன் மேல் - நளனிடத்தில், உற்ற-வைத்த, காதலை-ஆசையை, குறித்து நோக்கி-குறித்துப் பார்த்து, மாற்றுதல்-அதனைநீக்குதல், அரிதென்று-அரிதாகுமென்று, எண்ணி - நினைத்து, வாசவன்றூதி-இந்திரனுடையதூதி, ஏக-தன்னிடத்துக்குச் செல்ல, ஆற்றல்-வலிமைபெற்ற, வாசவற்கும்-இந்திரனுக்கும், நேரா-உடன்படாத, அணங்கு-தமயந்தி, எவர்க்கு-யாவர்க்கு, இயையுமென்னும்-சம்மதிப்பாள் (ஒருவருக்கும் சம்மதியாள்) என்கின்ற, தேற்றமோடு-தெளிவுடனே, உரையார்-பேசாதவர்களாய், மற்றைத்தேவர்தூதியரும்-மற்றைத்தேவர்கள்விடுத்த தூதிகளும், போனார்-சென்றார்கள் எ-று.

உம்மை-இறந்ததுதழிஇய எச்சம். தமயந்தி பூவுலகமடந்தையாயினு நம்மினுமிக்க கலைகளின் பயிற்சியுடையவளாகையால், அவளைநமதுசொல்லான மடக்கி இந்திரனுக்குத் துணைவியாக்குவது அசாத்தியமென்று இந்திரன்றூதி நீங்கினளென்க. அப்படிப்பட்ட சம்பத்துக்களையும்-போகத்தையும்-வலிமை

யையும்-சிறப்பினையும்-உடைய இந்திரனுக்குச் சம்மதியாதவள், நம்மிறைவர்க்குஞ் சம்மதிப்படாளென்பது கரதலாமலகம்போற் றெரிதலால்; மற்றைத் தூதிகள் அவளுடன் உரையாடி அவமானமடையாமையே நமக்கு மேன்மையென் றொழிந்தனரென்க.

(க-து.) தமயந்தி நளன்மேல்வைத்த வாசையைக்கண்டு இந்திரன்றூதி போக மற்றத்தூதியரும் போனார்கள் எ-ம். 84

தூதியரேகக்கண்டதோன்றல்செங்கமலக்கண்கண்
மேதகுசெல்வமிக்க விதர்ப்பர்கோன்றவத்திற்றோன்று
மாதர்மென்னோக்கினுடன் வடிவினிலழுந்திப்பின்னு
மாதரம்பெருகியின்ப வாரியினாழ்ந்தவன்றே.

[இதுமுதல் நான்குபாட்டுகளால் இவைப்யனைத்தையும் அயலின்மறைந்திருந்து கண்ட நளன்றன்மைகள் சொல்லப்படுகின்றன.

(இ-ள்.) தூதியர் - தேவர்தூதிகள், ஏக - தம்மிடத்துக்குப் போதலை கண்ட-பார்த்த, தோன்றல் - நளமகாராசன், செங்கமலக்கண்கள் - செந்தாமரைப்போன்ற நேத்திரங்கள், மேதகு-மேன்பட்ட, செல்வம்-செல்வத்தினாலே, மிக்க-மிகுந்த, விதர்ப்பர்கோன் - வீமராஜனுடைய, தவத்திற்றோன்றும்-தவத்தினாலவதரித்த, மாதர்-அழகிய, மெல்-மெல்லிய, நோக்கினுடன்-பார்வையையுற்ற தமயந்தியினது, வடிவினில்-உருவத்தில், அழுந்தி-ஆழ்ந்து, பின்னும்-பின்னும், ஆதரம்பெருகி-ஆசைமிகுந்து, இன்பவாரியின்-இன்பக்கடலிலே, ஆழ்ந்த-அழுந்தின எ-று.

கரவினிலொருமங்கையின் அழகைநோக்கும் ஆடவர்க்கு மற்றொருவர் அங்கில்லாதிருந்தால் மாத்திரஞ் சகிக்கமாதலால், தூதியரேகக்கண்டதோன்றல் என்றார். அங்குள்ளதோழிகளோவெனின், அவர்களுக்கிவனிருப்பது தெரியாதென்க. அவளவயவங்களைத் தனித்தனிநோக்குங்கால் அந்நோக்குதற்கிடையூறடையின் மற்றவைகளெப்படியுளவோவென்று கவுத்தலையுமாகலான் முழுவதுந் தன்சத்தியாலொருங்கு நோக்குதலால், வடிவினிலழுந்தி என்றும் அதில் ஆசைமிகுதலால், இனபவாரிதியினாழ்ந்த என்றுங் கூறினார்.

(க-து.) நளன்கண்கள் தமயந்தி உருவத்திலழுந்திப் பின்னுமின்பக்கடலில் மூழ்கின எ-ம். 85

பாசிழைபரந்தவல்குற் பனிமொழிக்குமுதச்செவ்வாய்
மாசறுமதியமன்ன வாண்முகத்தணங்கைநோக்கி
யாசையங்கடலுளாழ்ந்த கரைபெறுவரசநோக்க
மேகவதோன்றுமில்லா மூலைவரையிவர்ந்தவன்றே.

(இ-ள்.) பாசிழை-பசும்பொன்னாற்செய்த ஆபரணங்கள், பறந்த-பரவப்பெற்ற, அல்குல்-அல்குலையும், பனிமொழி - குளிர்ச்சிபொருந்திய சொற்களை

யும், குமுதம்-அல்லிமலர்போன்ற, செவ்வாய்-சிவந்தவாயினையும், மாசறு-குற்றமற்ற, மதியமன்ன - சந்திரனையொத்த, வாள்-ஒளிபொருந்திய, முகத்து-முகத்தையுடைய, அணங்கை - தமயந்தியை, நோக்கி-பார்த்து, ஆசையுங்கடலுள்-ஆசையாகியகடலுள், ஆழ்ந்து-முழுகி, கரைபெறு-கரையைப்பெறாத,அரசனேக்கம்-நளராஜனதுபார்வை, ஏசுவதொன்றுமில்லா - பழிப்பதொன்றுமில்லாத முலைவரை முலைகளாகிய மலையின்மேல், இவர்ந்த--ஏறின எ-று.

அல்குற்பாம்பையும்-வாய்க்குமுதத்தையும் - முகமதியத்தையும்-உடைய மங்கையினது ஆசைக்கடலில்வீழ்ந்து, அவைகளுறுபடுத்தவருந்தி, ஒருதுறையுங்காணுது தடுமாறும் அரசனேக்கங்கள் அங்குமுலைகளென்னு மலைகளைக் கண்டேறினவென்க. கச்சறுத்தல்-களபச்சேறணிதல்-முத்துவடமணிதல்-இறுமாந்துமேனேக்கல்-க்ண்கறுத்தல் - அடிகனத்தல்-திதலைபூத்தல்-பூரித்தல்-புளகிதல் - இழைநுழையாது நெருங்கல்-வெச்செனல் - தண்ணெனல்-இடையை வாட்டல் - முதலியாற்குணங்களிற் குறைவின்றியிருத்தலால், ஏசுவதொன்று மில்லாமுலையென்ருர். மிகுந்தவாசயோடும் ஸ்தனங்களைநோககினனென் பது கருத்து. (ஆசையங்கடலென்றலாலும், முலைவரையென்றலாலும், உருவகவணிகளும்; தமயந்தியைக்கண்ட கண்கள் மிகுந்த ஆசையையுடையதாய் முலையைப்பார்த்தனவென்னும் பொருள்பெறச்சொல்லிய நோக்கம் கடலுளாழ்ந்து மலையிலிவர்ந்ததென்றலில், கடலின் மூழ்கினோர்கரையிலேறுவதாகிய உலகர்செய்கைதோன்றுதலால்' முன்னுருவகத்தை அங்கமாகக்கொண்ட: சுருங்கச்சொல்லணியுமாம்.]

(க-து.) நளன் கண்கள் ஆசைச்சடலிலேமூழ்கித் தமயந்தி முலைகளாகிய மலைகள்மேலேயேறின எ-ம். 86

போர்க்களிறனையவீமன் புரிந்தமெய்த்தவத்திற்றோன்றுங்
கார்க்கருங்கூந்தலாண் மைக் கண்வலையதனுட்பட்டோ
வீர்க்கிடைபுகாதபொம்மல் இளமுலைநெருக்கிற்புக்கோ
பார்த்தசெங்கமலக்கண்கள் பறிப்பரியனவாய்நின்ற.

(இ-ள்.) போர்-போர்செய்கின்ற, களிறனைய-யானையையொத்த, வீமன்-வீமராஜன், புரிந்த - செய்த, மெய்த்தவத்தில் - உண்மையானதவத்தினலே, தோன்றும்-அவதரித்த, கார்-மேகம்போன்ற, கருங்கூந்தலாள் - கரியவளகபாரத்தையுடைய தமயந்தியினது, மை - மையையணிந்த, கண்வலையதனுட்பட்டோ - கண்ணுகியவலையிலகப்பட்டோ, ஈர்க்கு-ஈர்க்கானது, இடை-மத்தியத்திலே, புகாத-நுழையாத, பொம்மல்-பொலிவுபெறற, இளமுலை-இளமைபொருந்திய ஸதனபாரங்களின், நெறுக்கில் - நெருக்கத்தில், புக்கோ-புகுந்தோ, பார்த்த-நோக்கிய, செங்கமலக்கண்கள்-செந்தாமரை மலர்போன்ற நேத்திரங்கள், பறிப்பரியனவாய்-பறிப்பதற்கரியவாகி, நின்ற-நின்றன எ-று.

"குழ உப்புறந்தருதல் குருசரத்தியல்பே" என்றலின் அவ்வாறுலகினைரக்காப்பவனுகையால், போர்க்களிறனைய வீமனென்றும்; பொய்த்தவத்திற

ரேன்றினள் அன்றென்பதற்கு, மெய்த்தவத்திற் ரேன்றின ளென்றுங்கொள்க. ஈர்க்கிடைபுகாது விம்முதலால் மூத்தனவோவென்னும் ஐயநிகழாமைக்கு, இளமுலேயென்ருர். கண்கள் அழகுமுழுவதுநோக்கி முற்ருமையால், பறிப்பரியனவாய் நின்றனவென்க. அன்றி-"காரணமின்றிக் காரியந்தோன்ருது-காரியமின்றிக் காரணந்தோன்ருது" இவ்விதியால் காமங்காரணமாகக் கண்கள் நின்றனவெனினுமாம். [இது ஐயவணி.]

(க து.) நளன்கண்கள தமயந்தி கண்வலேயிற்பட்டோ தனநெருக்கிற்பட்டோ பறிப்பதற்கரியவாகநின்றன எ-ம். 87

விண்ணவர்மகளிர்யாரும் வெள்குறவனப்புவாய்ந்து
பெண்ணலங்கனியநின்ற பேதைபேரழகுமுற்றுங்
கண்ணெடுபிணித்தாலென்ன் வியப்புறக்களித்துநோக்கும்
புண்ணுறுபுலவுவேலா னுளத்தொடுபுகலலுற்ருன்.

(இ-ள்.) விண்ணவர்-தேவர்களுடைய, மகளிர்யாரும்-மங்கையரெல்லாம், வெள்குற-நாணமடைய, வனப்புவாய்ந்து - அழகைப்பெற்று, பெண்-பெண்களுக்குரிய, நறும்-நற்குணங்கள், கனிய-முதிர, நின்ற-நிற்கப்பெற்ற, பேதை-தமயந்தியினது, பேர்-பெரிய, அழகுமுற்றும்-அழகுமுழுவதும், கண்ணெடு-கண்களுடனே, பிணித்தாலென்ன - கட்டினதையொப்ப, வியப்புற-ஆச்சரியமிக, களித்து-களிப்பையடைந்து, நோக்கும்-பார்க்கின்ற, புண்ணுறு-மாமிசத்தையொத்த, புலவு-நாற்றத்தையுடைய, வேலான்-வேற்படையேந்தியநளமகாராஜன், உளத்தொடு - மனத்துடனே, புகலுற்ருன் - சொல்லத்தொடங்கினன் எ-று.

பெண்ணலமாவன, நாணம் - மடம் - அச்சம்-பயிர்ப்பு - முதலியகுணங்களும் பிறவுமெனக்கொள்க. உளத்தொடுபுகலல் - சிந்தித்தல்: என்ருல் - அவ்வழகின்கடலே யொருவாற்ருற்கடந்த நளன், தன்மனத்துக் கிசைந்தவர் வேருருவரும் அங்கில்லாமையால் தான்கண்ட வியப்பை மனத்துடன்சொல்லத்தொடங்கினனென்க. [பிணித்தாலென்றமையால், தற்குறிப்பணியாம்.]

(க-து.) தமயந்தியழகைககண்டு நளன் தன்னுள்ளத்தோடு சொல்வான் எ-ம். 88

வடிவமைமுறிற்சொல்லும் வனப்பெலாமமைத்துவேதன்
கடிமலர்ச்செங்கைவண்ணங் காட்கியவுருவுகொல்லோ
வடிகணைவேனிலானின் னமுதுகோரேய்த்துத்தீட்டும்
படிவமோவுயிரைவாட்டும் பாவைதன்வடிவந்தானே.

[இதுமுதல் பத்துபாட்டுகளால் நளன்சிந்திப்புச் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) உயிரைவாட்டும்-என்னுயிரைவாட்டுகின்ற, பாவை-இப்பாவைபோல்வா ளுடைய, வடிவம்-உருவமானது, வேதன்-பிரமனுனவன், வடிவமை

நூலில்-சாமுத்திரிகநூலிலே, சொல்லும்-சொல்லாநின்ற, வனப்பெலாம்-அழகனைத்தும், அமைத்து-அமையச்செய்து, கடி-புதுமைபெற்ற, மலர்-தாமரைமலர்போன்ற, செங்கைவண்ணம்-தனதுசிவந்தகைகளின் குணத்தை, காட்டிய-காண்பித்த, உருவுகொல்லோ-உருவமோ, அடு-கொல்லாநின்ற, கணை-பூங்கணைகளையுடைய, வேனிலான்-மன்மதனுனவன், இன்-இனிய, அமுது-அமிர்தத்தில், கோல்-தூரியக்கோலை, தோய்த்து-நனைத்து. தீட்டும்-எழுதப்பட்ட, படிவமோ-உருவமோ எ-று.

வேதன் செங்கைவண்ணங் கொல்லோவென்றவன் - பின்வேனிலான் தீட்டும் படிவமோவெனக்கூறியது, அவன்படைப்பிலிவ்வழகு கண்டிலேம்-அழகிஞல் உலகத்தைமயக்குங் காமனே படைக்கி லிவ்வழகுண்டாகலாமெனுங் கருத்தாலெனக்கொள்க. [வேதன்கைவண்ணங்காட்டிய உருவோ-வேனிலான் தீட்டும்படிவமோ-எனக்குறித்தலால், தற்குறிப்பணியாம்.]

(க-து.) நளன் தமயந்தி வடிவம் பிரமன்கைத்திறமோ, மன்மதனெழுதிய உருவமோ, என்றான் எ-ம். 89

குழையெதிர்நடந்துபைம்பொற் குமிழ்மிசைமறிந்துநீண்ட
வுழைபொருநெடுங்கணுடன் றுறுப்பினுக்குவமைபாகச்
செழுமலர்முதலவாய பொருள்களைத்தெரிந்துகூறி
னழகினுக்குவமைதீர்ந்த வவற்றினுக்கிகழ்ச்சியாமே.

(இ-ள்.) குழை-குழையென்னுங்காதணிக்கு, எதிர்நடந்து-முன்பாகச்சென்று, பைம்பொன்-பசியபொன்போன்ற, குமிழ்-குமிழம்பூவினது, மிசைமேற்பக்கத்தில், மறிந்து-மறிபட்டு, நீண்ட-நீட்சியடைந்து, உழைபொரு மான்போன்ற, நெடுங்கணுடன்-நெடியகண்களையுடைய தமயந்தியினது, உறுப்பினுக்கு அவயத்துக்கு, உவமையாக-உவமையாக - உவமானமாக, செழும் - செழுமைபெற்ற,மலர்முதலவாய-தாமரைமலர்முதலவாகிய,பொருள்களை-வஸ்துக்களை, தெரிந்து கூறின்-தெரிந்துசொல்லின், அழகினுக்கு-அழகுக்கு-உவமைநீங்கிய, அவற்றினுக்கு-அவ்வுறுப்புக்களுக்கு, இகழ்ச்சியாம்-பழிப்பாகும் எ-று.

குமிழெனபது-அதுபோன்ற மூக்கெனக்கொள்க. மலர்முதலாய பொருள்களாவன, மேகம்-நாகம்-பிறை-நறை-குவளை குமிழ் - குமுதம் - அமிர்தம்-காந்தள்-பாந்தள்-அரும்பு-கரும்பு - முதலியவாம். உவமையில்லாத அவயவங்கட்கு அவைகளைச் சொல்லுவது இகழ்வாமென்க. [உவமானப் பொருள்களாகிய தாமரைமலர் முதவானவற்றை இவளுறுப்புக்கு உவமையாகக்கூறின்இழிவென உவமேயத்தைச் சிறப்பித்தலால், எதிர்நிலையணியாம்.]

(க-து.) தமயந்தி அவயவங்களுக்கு உவமானப்பொருள்களிகழ்ச்சியவாம் என்றான் எ-ம். 90

குடைந்துவண்டிமிருஞ்செய்ய கொழுமலர்த்திருவினோடுந்
தடங்கிளைபொதுளுமென்பூந் தருநிழலுறையுந்தெய்வ

மடந்தையர் தம்மையெல்லாம்வைகலும்படைத்துச்செங்கை
படிந்தபினிந்தமாதைப் படைத்தனன்கமலத்தோனே.

(இ-ள்.) வண்டு-வண்டுகளானவை, குடைந்து-மூக்கினாலேகிண்டி, இமிரும்-ஒலிக்கின்ற, செய்ய-சிவந்த, கொழு-செழுமைபெற்ற, மலர்-தாமரைமலரிலிருக்கின்ற, திருவினோடும்-இலக்குமியுடனே, தடம்-பருத்த, சினை-கிளைகள், பொதுளும்-நெருங்கிய, மெல்-மெல்லிய, பூ-மலர்களையுடைய, தருநிழல்-ஐந்தருநிழலில், உறையும்-வசிக்கின்ற, தெய்வமடந்தையர் தம்மையெல்லாம்-தெய்வமங்கையரனைவரையும், வைகலும்-நாள்தோறும், படைத்து-சிருட்டித்து, செங்கைபடிந்தபின்-தன்னுடைய சிவந்தகைகள் பழகியபின்பு, இந்தமாதை-இந்தத்தமயந்தியை, கமலத்தோன்-பிரமனானவன், படைத்தனன்-சிருட்டித்தான் எ-று. ஏ-அசைநிலை.

அழகிற்சிறந்த இலக்குமி இந்திராணிமுதலிய தெய்வமங்கையராலும்விரும்பத்தக்க அழகுடையவளாயிருத்தலால், இவ்வாறுசொல்லினான். [இப்படிப்பட்ட படைப்பின்முயற்சி பிரமனுக்கு இல்லாதிருந்தும் உள்ளதாகக்கூறலால், உயர்வுநவிற்சியணியாம்.]

(க-து.) பிரமன் இலக்குமியையும் தேவமாதர்களையும் படைத்துக்கை தேர்ந்தபின் இவளைப்படைத்தான் என்றானளன் எ-ம். 91

விரிந்தசெங்கமலந்தண்பூம் பொகுட்டில்வீற்றிருக்குமேலோன்
முருந்திளமுறுவற்செவ்வாய் முகிழ்முலைக்கரியகூந்தற்
றிருந்திழை யழகுவாய்ந்த திருமுகந்திங்களாகப்
புரிந்தனன்களங்கமன்றே புருவமாவியற்றினானே.

(இ-ள்.) விரிந்த-விரியப்பெற்ற, செங்கமலம்-செந்தாமரையினது, தண்-குளிர்ச்சிபொருந்திய, பூம்பொகுட்டில்-மலர்க்கொட்டையின்மேல், வீற்றிருக்கும்-அரசிருக்கின்ற, மேலோன்-பிரமனானவன், முருந்து-மயிலிறகின் முதன்முன்போன்ற, இள-இளமைபொருந்திய, முறுவல்-தந்தங்களையும், செவ்வாய் சிவந்தவாயினையும், முகிழ்-அரும்பையொத்த, முலை-முலைகளையும், கரிய-கறுத்த, கூந்தல்-அளகபாரத்தையுமுடைய, திருந்திழை - தமயந்தியினது, அழகுவாய்ந்த-அழகுபொருந்திய, திருமுகமாக-திருமுகமாக, திங்கள்-சந்திரனை, புரிந்தனன்-செய்தான், களங்கமன்றே-அதன் களங்கத்தையல்லவா, புருவா-புருவமாக, இயற்றினான்-செய்தான், எ-று.

இவள் முகம் சந்திரனென்பதற்குச் சந்தேகமில்லையென்பது கருத்து. [இது உயர்வு நவிற்சியணி.]

(க-து.) பிரமனிவள்முகத்தைச் சந்திரனாகப்படைத்தான்என்றான் எ-ம்.

மணிமுடியநனைக்கொம்மை முலையெனவமைத்துமார
ன்மணிமலர்க்கணைகளைந்தி லான்றமூவுலகுமூன்று

கணைகளால்வென் றுமற்றைக் கணைகளுக்கெதிரில்லாமை
யிணைவிழியென் றபேரிட் டிவண்முகத்திருத்தினனே.

(இ-ள்.) மாரன்-மன்மதனானவன், மணிமுடியதனை-தன்னுடைய மணிகள் பதித்தகிரீடத்தை, கொம்மை- இளமைபொருந்திய, முலையென-ஸ்தனங்களென்றுசொல்ல, அமைத்து-பொருத்தி, அணி- அழகிய, மலர்க்கணைகளைந்தில்-பூவம்புகளைந்தினுள், ஆன்ற-நிறைந்த, மூவுலகம்-திரிலோகங்களையும், மூன்றுகணைகளால்-மூன்றுபாணங்களால், வென்று-வெற்றிகொண்டு, மற்றைக்கணைகளுக்கு - மற்றையிரண்டுபாணங்களுக்கு, எதிரில்லா-எதிரில்லாத, மை-அஞ்சனந்தீட்டிய, இணைவிழியென்று- இரண்டுகண்களென்று, பேரிட்டு-பேர்வைத்து, இவண்முகத்து-இந்தத்தமயந்தியினுடைய முகத்தில், இருத்தினன்-இருத்திவைத்தான் எ-று.

இவளுடைய கண்கள் மாரன்கணைகளாயின்வாற்றால் ஆடவரை மயக்கின: அல்லவாயின் எவ்வாறுமயக்குமென்பது கருத்து. [தமயந்தியின் விழிக்கண் மாரன்கணையை ஆரோபித்தற்பொருட்டு விழியின்பேரிட்டென்று அத்தன்மையையொழித்தலால், ஒழிப்பணியாம்.]

(க-து.) மன்மதன் தன்முடியை முலையாகவுங் கணைகளைக்கண்களாகவும் அமைத்தான் என்றான் எ-ம். 93

வெதிர்புரைபசியமென்றோள் வேனெடுங்கண்ணினுடன்
றிதலைவெம்முலைபோன்முத்தந்தெரிதரவணிந்திடாமன்
மதமழைகொழிக்கும்வேழமருப்பினைவெருவியன்றே
கதிர்மணிமுத்தமுள்ளேகரந்துவைத்திருக்குமாறே.

(இ-ள்.) வெதிர்புரை-மூங்கிலையொத்த, பசிய-பசுமைபொருந்திய, மெல்-மெல்லிய, தோள்-தோளையும், வேல்-வேற்படைபோன்ற, நெடு-நெடிய, கண்ணினுடன்-கண்களையுற்ற தமயந்தியின், திதலை-தேமலையுடைய, வெம்-விருப்பத்தைத்தருகின்ற, முலைபோல்-ஸ்தனங்களைப்போல், முத்தம்-முத்துக்களை, தெரிதர-தெரியும்படி, அணிந்திடாமல்-தரித்துக் கொள்ளாமல், மதமாகிய மழையை, கொழிக்கும்-கொழிக்கின்ற, வேழம்-யானையின், மருப்பிணை-கொம்பிரண்டும், வெருவியன்றே-பயந்தல்லவா, கதிர்-கிரணங்களையுடைய, மணி-அழகிய, முத்தம்-முத்துக்களை, உள்ளே-தமக்குள்ள, கரந்து-ஒளித்து, வைத்திருக்குமாறு-வைத்திருக்கும்விதம் எ-று.

முத்துக்கள் தம்மிடத்திற் பிறந்தனவாயிருந்தும் அம்முத்துக்களையணிந்த தனங்களால் வெல்லப்பட்டபடியால் அவ்வெற்றிதோன்ற; அரசனாற் பொருளிழந்தோனொருவன் தப்பிநின்ற திரவியத்தைத் தனக்குள்ளடக்கி வைப்பது போல; கரந்துவைத்ததென்க. கொழித்தல்-பெருக்குதல். [தந்தங்கள் தமக்குளியற்கையின் முத்துக்களுடைமையில் வெருவிகரந்துவைத்ததெனக் குறித்தலால், தற்குறிப்பணியும்; இவ்வாறுகூறலால் வர்ணியமாகிய தமயந்தியின் தனச்சிறப்புத் தோன்றுகின்றமையால், புனைவிலிப்புகழ்ச்சியணியாம்.]

(க-து.) தமயந்தி மூலைகளைப்போல முத்துக்களை வெளிப்படுத்தாமல் அம்மூலைகட்குப் பயந்தல்லவா யானைக்கொம்புகள் முத்துக்களை உள்வைத்திருக்கின்றன என்றானளன் எ-ம். 94

மடலவிழ்கமலப்புத்தேன்வடிவினையமைத்துவெய்ய
தடமூலையமைப்பமாதினுறுப்பலாற்றாமின்றென்று
இடையினுக்கமைத்தகூற்றையெடுத்தெடுத்தமைத்தலாலோ
கொடியெனத்தேய்ந்துதேய்ந்துகுறைத்ததுமருங்குறானே.

(இ-ள்.) மடல்-இதழ்களானவை, அவிழ்-விரிந்த, கமலப்பூத்தேள்-தாமரைமலரிலிருக்கும் பிரமனானவன், வடிவினை-உருவத்தை, அமைத்து-முன்பு செய்து, வெய்ய-வெவ்விய, தடம்-பருத்த, மூலை-ஸதனங்களை, அமைப்ப-பின்புசெய்ய, மாதின்-தமயந்தியினுடைய, உறுப்பலால்-அவயவமல்லாமல், தாமின்றென்று-தருந்தபொருளில்லையென்று, இடையினுக்கு - மருங்கிற்கு, அமைத்தகூற்றை - வைத்தபங்கை, எடுத்தெடுத்து-கொஞ்சங் கொஞ்சமாக வெடுத்துக்கொண்டு, அமைத்தலாலோ - செய்தபடியாலோ, கொடியென-கொடியென்று சொல்ல, தேய்ந்துதேய்ந்து-தேய்பட்டுத்தேய்பட்டு,மருங்குல்-இடையானது, குறைந்தது-குறைபட்டது எ-று.

தமயந்தின்தனங்கள் நாடோறும்பருத்து இடைசிறுக்கையால், அவைகளைக்கண்ட அரசன் மற்றைமாதரைப்போலாது முன்பு இவளைப்படைத்த பிரமன் வேறொருகருவிக்கூறு தாமன்றென்றுகருதி, இவளுறுப்புகளுள் இடையில்வைத்தைகூற்றைத் தனத்திற்கமைத்திருக்கலாகுமெனக் கருதினனென்க. [இயல்பிற்குறைந்த இடையினைத்தனத்திற்கமைத்தலாற் குறைந்ததெனக் குறித்தலாலே, தற்குறிப்பணியாம்.]

(க-து.) பிரமன் இடைக்கமைத்தபங்கை யெடுத்து மூலைக்கமைத்தபடியினாலல்லவோ இவளுக்கிடைசுருங்கிற்று என்றானளன் எ-ம். 95

மௌவலந்தெரியல்வேய்ந்துமணங்கமழ்கரியகூந்தற்
கொவ்வயங்கனிவாய்ப்பேதைகுவிமூலைக்களிநல்யானை
செவ்விதிற்பிணித்தநீலச்செழுமணிவல்லிபோலு
மவ்வயிறணிந்தகோலவணிமயிரொழுக்கந்தானே.

(இ-ள்.) மௌவல்-முல்லையினுடைய, அம்-அழகிய, தெரியல்வேய்ந்து-மாலையைத்தரித்து, மணம்-வாசனை, கமழ்-கமழ்கின்ற, கரிய-கறுத்த, கூந்தல்-அளகபாரத்தையும்,கொவ்வைபங்கனிவாய்ப்பேதை-கொவ்வைக்கனிபோன்ற வாயையுள்ள தமயந்தியின், குவி-குவிந்த, மூலை-ஸ்தனங்களானவை, களி-களிப்பையுடைய, நல்யானை-நல்லயானையை, செவ்விதின்-நேராக, பிணித்த-கட்டிய, நீலச்செழுமணிவல்லிபோலும்-செழுமையுள்ள நீலரத்தினக் கொடிபோலும், அவ்வயிறு-அந்தவயிறானது, அணிந்த-தரித்த, கோலம்-ஒப்பனையமைந்த, அணி-அழகிய, மயிரொழுக்கம்-மயிரொழுங்கு, எ-று; தான்-ஏ-அசைகள்.

தமயந்தியினுடைய தனங்களென்னும் யானைகள் கட்டாலிட்டால், எதிர்ப்பட்ட ஆடவரைக் கொல்லுமென்பது கருத்து. [மயிரொழுக்கத்தை நீவுச்செழுமணிவல்லிபோலுமெனக் குறித்தலால், தற்குறிப்பணியாம்.]

(க-து.) மயிரொழுங்கானது தமயந்திமுலைகளாகிய யானைகளைச்கட்டிய வல்லிபோலிருந்தது என்றான் நளன் எ-ம். 96

ஐங்கணைக்கிழவன் வைகுமணியாசிருங்கைப்பாங்கர்
தங்குறவமைத்தவாழைத்தண்டுகொல் றுகட்சீற்றத்
துங்கவெம்பருமயானைத்தடக்கைகொல் றுணிதறேற்றுஞ்
செங்கயற்கருங்கட்செவ்வாய்த்திருந்திழைகுறங்குதாமே.

(இ-ள்.) செங்கயல் - சிவந்தகயல்போன்ற, கருங்கண்-கரியகண்களையும்-செவ்வாய்-சிவந்தவாயினையும், திருந்திழை - திருத்தமாகிய ஆபரணத்தையுமுடைய தமயந்தியினது, குறங்கு-துடைகள்-ஐங்கணைக்கிழவன்-மன்மதன், வைகும்-தங்குகின்ற, அணி-அழகிய, அரசிருக்கை-அத்தாணியிடத்தின், பாங்கர்-பக்கத்தில், தங்குற-தங்கும்படி, அமைத்த-செய்த, வாழைத்தண்டுகொல்-வாழைத்தண்டோ, தறுகண்-அஞ்சாத, சீற்றம்-கோபத்தையுற்ற, துங்கம்-உயர்ச்சிபொருந்திய, வெம்-வெவ்விய, பருமம்-ஒப்பனையமைந்த, யானை-யானையினது, தடம்-பருத்த, கைகொல்-துதிக்கையோ, துணிதல்-இன்னதென்றுதுணிதலை, தேற்றும்-(யாம்) தேறும் எ-று.

மாதரது அல்குல் மாரனுக்கு அரசிருக்கைமண்டபமாகையால், அதற்கு அலங்கரித்த வாழைத்தண்டோவென்றார். தேற்றும் - எனத்தனவினைப்பொருள், பிறவினையில்வந்தது. [குறங்கைவாழைத்தண்டு கால்-யானைத்தடக்கை கொல்-எனவையறலால், ஐயவணியாம்.]

(க-து.) தமயந்திதுடைகள் மன்மதன் அத்தாணிமண்டபத்துவாழை ஸ்தம்பங்களோ யானைத்துதிக்கைகளோ அறியோம் என்றானளன் எ-ம். 97

பைந்தருநீழல்வைகும்பாவையர்பதுமபீடத்
திந்திரைக்கணங்குசெய்யுமேந்திழையெழிற்குத்தோற்று
வந்தடிபணியுந்தோறும்வாளுதல்கவினத்தீட்டுஞ்
சிந்தூரத்திலகந்தோய்ந்தோசீறடிசிவந்தவாறே.

(இ-ள்.) பைந்தருநீழல் - பசியவைந்தருநீழலில், வைகும்-தங்கிய, பாவையர்-அரம்பையர்கள். பதுமபீடத்து-தாமரைமலரிலிருக்கின்ற, இந்திரைக்கு-திருமாதுக்கு, அணங்குசெய்யும்-வருத்தத்தைச்செய்கின்ற, ஏந்திழை-தமயந்தியினது, எழிற்கு-அழகிற்கு, தோற்றுவந்து-தோல்விபெற்றவந்து, அடிபணியுந்தோறும்-அடிகளில்வணங்குந்தோறும், வாள-ஒளிபொருந்திய, நுதல்-நெற்றியானது, கவின-அழகுபெற, தீட்டும்-எழுதப்பட்ட, சிந்தூரத்திலகம்-சிந்தூரப்பொட்டு, தோய்ந்தோ-தோயப்பெற்றோ, சீறடி-சிறியபாதங்கள், சிவந்தவாறு-சிவந்தவிதம் எ-று.

அரம்பையர்-மேற்பிறப்பிலாவது நின்போலழகுபெறவிரும்பினம், நீமுற்பிறப்பில்யாதுசெய்து இவ்வழகுபெற்றனை, அதைச்சொல்லுவாயாகில் யாமும் அவ்வாறுசெய்துமெனப்பேற்றுதலால்; வந்தடிபணியுந்தோறு மென்றார்-[பார்த்தினியற்கைச்சிவப்பினில் அடிபணியுந்தேவமாதர் சிந்தூரத்திலதத்தோய்வைக் கறித்தலால், தற்குறிப்பணியாம்.]

(க-து) தேவமாதர்கள் தமயந்தியழகுக்குத்தோற்று அடியை வணங்குதலால், அவர்கள்நெற்றித் திலகப்பட்டுப் பாதஞ்சிவந்ததோ என்றானளன் எ-ம்.

இன்னவாறுளத்தினெண்ணியெழுழ்வலிமடங்கலன்னான்
மின்னவிர்குலிசவேந்தன் விஞ்ஞையின் புணர்ப்புனீங்கி
பொன்னவிர் சுணங்குபூத்தபொம்மல்வெம்முலையினாண்முன்
கன்னலஞ்சிலைவேளென்னக் கட்புலன் கதுவநின்றான்.

[இதுமுதல் எட்டுபாட்டுகளால் நளன் உருவோடுவெளிப்பட, அதனால் தமயந்திக்கும் நளனுக்கு நிகழ்ந்தவைகள் சொல்லப்படுகின்றன.]

(இ-ள்.) இன்னவாறு - இந்தப்பிரகாரம், உளத்தின்மனதிலே, எண்ணி-சிந்தித்து, எழுழ்வலி-மிகுந்தவலிமைபெற்ற, மடங்கலன்னான்-சிங்கத்தையொத்த நளன், மின்னவிர் - ஒளிவிளங்குகின்ற, குலிசவேந்தன் - வச்சிரப்படையையுடைய இந்திரனது, விஞ்ஞையுன்-வித்தையின், புணர்ப்பினீங்கி - சம்பந்தத்தினின்றுநீங்கி, பொன்-பொன்போலும், அவிர்-பிரகாசிக்கின்ற, சுணங்கு-தேமல், பூத்த-உண்டாகிய, பொம்மல் பொலிவினையுற்ற, வெம்-விருப்பத்தைத்தருகின்ற, முலையினாண்முன்-தனங்களையுள்ளதமயந்திக்குமுன்னே, கன்னலஞ்சிலைவேளென்ன-கருப்புவில்லேந்திய மன்மதன்போல, கட்புலன்-கண்ணறிவு-கதுவ-பற்றும்படி, நின்றான்-நின்றனன் எ-று.

நளன் இவ்வாறுசிந்தித்துப் பின்புதான்வந்தகாரியமுடித்தற்காக உருவின்றயுரைக்கின் வெருவுமென ஒளித்தலைவிட்டு வெளிப்பட நின்றனனென்க. [சிலைவேளென்னவெனலால், உவமையணியாம்.]

(க-து.) நளன் தமயந்திக்குமுன் அருவத்தைவிட்டு உருவமாய் நின்றான் எ-ம்.

99

விரைகமழ்நறியதண்டார் விதர்ப்பர்கோனளித்தபாவை
யரசிளங்குமரன்றன்னை யார்வமோடினிதுகண்டா
ளுருவெளிகண்டுநாளு முவந்துளமயர்வாண்முன்னந்
தெருளுறங்கரணிலெய்து முவகையார்தெரிக்கப்பாலார்.

(இ-ள்) விரை-வாசனை, கமழ்-கமழ்கின்ற, நறிய - நல்ல, தண்-குளிர்ச்சி பொருந்திய, தார்மாலையணிந்த, விதர்ப்பர்கோன்-வீமராசன், அளித்த-பெற்ற பாவை தமயந்தியானவள், அரசிளங்குமரன்றன்னை, நளமஹாராசனை, ஆர்வமோடு-ஆசையுடன், இனிது-இனிதாக, கண்டாள்-பார்த்தாள். உருவெளிகண்

டு-உருவெளித்தோற்றத்தைக்கண்டு, நாளும்-நாடோறும், உவந்து-உவப்படைந்து, உளம்-மனம், அறர்வாள்-வருந்துகின்றவள், முன்னம்-முன்னாக, தெருளுற-தெளிவுபொருந்த காணில்-கண்டால், எய்தும்-அப்போதடைகின்ற, உவகை-மகிழ்ச்சியை, யார்-எவர்கள்,தெரிக்கற்பாலார்-தெரியப்படுத்தவல்லவர்கள் (ஒருவருமில்லை) எ-று.

[அந்தப்புரத்திலே வந்த புருடனைநோக்குந் தமயந்தி வெருட்சிவெகுட்சிகளின்றி மகிழ்ந்தனளென்பது, நாடோறும் பொய்வடிவங்கண்டு மகிழ்பவளுக்கு மெய்வடிவங்காணப்பெறின் மண்டாமின்பஞ் சொல்லிமுடியாதென்னும் வாக்கியப்பொருளால் நிறுத்தப்படலால்; செய்யுட்குறியணியாம்]

தமயந்தி நளனை ஆசையோடுகண்டாள். அவள் மகிழ்ச்சியை யார் சொல்லவல்லார் எ-ம். 100

அங்கண்மாஞாலங்காக்கு மண்ணன்மேலணங்களுடன்
செங்கயற்கருங்கண்வாளி சிறிதுசென்றழுந்தாமுன்னம்
பைங்கழைதாங்கியாவம்பரித்திடம்பார்த்துநின்ற
துங்கவேள்விடுத்தவாளிதூவன்மட்டாழ்ந்தவன்றே.

(இ-ள்.) அம்-அழகிய, கண்-இடமகன்ற, மா-மகத்தாகிய, ஞாலம்-பூமியை, காக்கும்-அளிக்கின்ற, அண்ணன்மேல்-நளமகாராசன்மேல், அணங்குடன்-தமயந்தியினுடைய, செங்கயல்-சிவந்தகயல்போன்ற, கருங்கண்-கரியகண்ணாகிய, வாளி-பாணங்கள், சிறிதுசென்று-சொஞ்சம்போய், அழுந்தாமுன்னம்-அழுந்துவதற்குமுன்னமே, பைங்கழை-பசியகருப்புவில்லை, தாங்கி-சுமந்துகொண்டு, ஆவம்பரித்து-அம்பறுத்தூணியைத் தாங்கிக்கொண்டு, இடம்பார்த்துநின்ற-இடநோக்கியிருந்த, துங்கம் - உயர்ச்சிபொருந்திய, வேள்-மன்மதனானவன், விடுத்த-பிரயோகம்பண்ணின, வாளி-பாணம், தூவன்மட்டு - குதைவரையும், ஆழ்ந்த-அழுந்தின எ-று.

தம்மரசன் ஒருதொழில் செய்யத்தொடங்குதலேக்கிய ஏவலர் அவன்றொடங்குமுன்னமே விரைந்துசெய்து முடித்தல்போல,தமயந்தியின்கண்களாகிய பாணங்கள் சிறிதுபோய் நளன்மேலழுந்துமுன்னமே மன்மதபாணங்குதைவரையும் அழுந்தின. ஆயின் அக்காமன் இவள்கண்குறிப்பினிற்கும் ஏவலனாகினனென்க. [இவள்நோக்கியபின்செல்லுங் காமபாணத்திற்கு அந் நோக்கின் முற்காலஞ் சொல்லப்பட்டமையால், உயர்வுநவிற்சியணியாம்.]

(க-து.) தமயந்தி கண்கணையெய்யுமுன்னே நளன்மேல் மன்மதன் கணையெய்தான் எம்-. 101

கழிபெருங்காதலாள்கட் கருவிளைமலர்கள்வெய்ய
மழவிடையனையான்செய்ய மணிப்புயவரையிற்பூத்த
விழைவொடுமகிழ்ச்சிகூரும் வேனில்வேளனையான்செங்கண்
முழுநெறிக்கமலமன்னாண் முலைத்தடத்தலர்ந்தமாதோ.

(இ-ள்.) கழி-மிகுந்த, பெருங்காதலாள் - பேராசையுள்ளதமயந்தியின், கண்-கண்ணாகிய, கருவிளைமலர்கள்-காக்கணம்பூக்கள், வெய்ய - வெவ்விய, மழவிடைபனையான்-இளவேற்றைரயொத்தநளமகாராஜனது, செய்ய-சிவந்த, மணி-அழகிய, புயவரையில்-தோளாகியமலையில், பூத்த - மலர்ந்தன, விழைவொடும்-அன்புடனே, மகிழ்ச்சிகூறும்-மகிழ்ச்சியடைகின்ற, வேனில்வேளனையான்-நளமகாராசனுடைய, செங்கண்-சிவந்தகண்ணாகிய, முழுநெறி-முழுநெறிப்பையுடைய, கமலம்-தாமரைகள், அன்னாள் - அத்தமயந்தியின், முலைத்தடத்து-தனதடமாகிய குளத்தினிடத்து, அலர்ந்த-பூத்தன எ-று. தடமென்பது-மலையும்-குளமும், மாது-ஓ-அசைகள்.

தமயந்தியின்கண்கள் நளன்புயங்களினும் நளன்கண்கள் தமயந்தியின் தனங்களினும் பூத்தவென்றமையால், மாதர்க்கு அடவர்புயங்கள்போலும்ஆடவர்க்கு மாதர்முலைகள்போலும் காட்சிப்பிரமாணத்தின் முற்பட்டுவிளைந்தின் புஞ்செய்யு மவயவங்கள் வேறொன்றில்லையென்க. இவர்கள் எல்லையற்ற ஆசையுடையவரென்பதற்குப் பெருங்காதலென்றொழியாது, கழியென்றும்; மகிழ்ச்சியென்றொழியாது, விழைவொடென்றும்; கூட்டிச்சொல்லப்பட்டன. [கட்கருவிளைமலர்கள்-புயவரையென்றலாலும், செங்கண்முழுநெறிக் கமலம்-முலைத்தடமென்றலாலும், உருவகவணிகளாம்.] முலைத்தடமென்றலில் முலைத்தடமாகிய தடம் என உருவகஞ்செய்க.

(க-து.) தமயந்திகண்களாகிய நீலோர்ப்பலமலர்கள் நளன்றோட்களிற் பூத்தன. நளன்கண்களாகிய தாமரைமலர்கள் தமயந்திமுலைகளிற்பூத்தன எ-ம்.

பாடவரவல்குற்செவ்வாய்ப் பணிமொழிக்கொடியன்னாளை
மடலவிழ்மலப்போதின் மடந்தையென்பதற்குவெற்றிக்
கடகளிறென்னநின்ற காமருகாளைதன்னை
யிடையறாதினிதுநோக்கி யிமைப்புறுகுறையுந்தீர்ந்தாள்.

(இ-ள்.) படவரவல்குல்-அராப்படம்போன்றவல்குலையும், செவ்வாய்-சிவந்தவாயையும், பனி மொழி-குளிர்ந்தசொல்லையுமுடைய, கொடியன்னாளை-தமயந்தியை, மடலவிழ்-இதழ்விரிந்த, கமலப்போதின்-தாமரைமலரிலிருக்கின்ற, மடந்தையென்பதற்கு - இலக்குமியென்றுசொல்வதற்கு, வெற்றி-சயத்தைப்பெற்ற, கடகளிறென்ன-மதயானையைப்போல,நின்ற-அருகிலிருந்த, காமர்-அழகிய, காளைதன்னை- நளமகாராசனை, இடையறாது-இடைவிடாமல், இனிதுநோக்கி-இனிதாகப்பார்த்து, இமைப்புறு- (இதுவரையும்) இமைப்பினையடைந்த, குறையும்-குறையையும், தீர்ந்தாள்-நீங்கினாள் எ-று.

தமயந்திகண்ணிமைப்பினாலன்றி மற்றைக்குணங்களால் இலக்குமியை யொத்தவளென்க.

(க-து.) தமயந்தி நளனைப்பார்த்துக் கண்குறைதீர்ந்தாள் எ-ம்.

உண்ணிறைவுடைய காம முருவெடுத்தென்ன நின்ற
வண்ணலுமணங்கனாளு மழகெனுமினியதேற
லெண்ணருங்காதல்கூர வினிதினின் மாறிமாறிக்
கண்ணினாற்பருகியின்பக் களிப்பெனுங்கடலுளாழ்ந்தார்

(இ-ள்.) உள்-உள்ளே, நிறைவுடைய-நிறைவினையுடைய, காமம்-ஆசையானது, உருவெடுத்தென்ன-ஒருவடிவு கொண்டதுபோல, நின்றவண்ணலும்-நின்றநளனும், அணங்கனாளும்-தமயந்தியும், அழகெனும்-அழகென்றுசொல்லும், இனியதேறல்-இனிப்புள்ளதேனை, எண்ணரும்-எண்ணுதற்கரிய, காதல்கூர-ஆசைமிக, இனிதினின்-இனிமையினாலே, மாறிமாறி-ஒருவர்க்கொருவர்படிக்கடிமாறிக்கொண்டு, கண்ணினால்-நேத்திரேந்திரியங்களினால், பருகி-உண்டு, இன்பம்-இன்பத்தைத்தரும், களிப்பெனும்-களிப்பென்கிற, கடலுள்-கடலின்கண், ஆழ்ந்தார்-அழுந்தினார்கள் எ-று.

மாறியென்றது ஒத்தகாமமுள்ளவர் நாணத்தால் ஒருவர்நோக்குங்காலத்தொருவர்நோக்காமையினாலென்க. அது-“யானோக்குங்காலை நிலனோக்கு நோக்காக்கால், றானோக்கி மெல்லநகும்” இதனாலறிக, [காமமுருவெடுத்தென்னவெனலால், தற்குறிப்பணியும்; இன்பக்கடலெனலால், உருவகவணியுமாம்.]

(க-து.) நளனுந்தமயந்தியும் ஒருவரையொருவர்பார்த்து மகிழ்ச்சிக்கடலிலேமூழ்கினார்கள் எ-ம். 104

இருதடம்புயமுமந்தா ரகலமுமிமையைந்ததாலென்
றெரிவருமாவியென்றா டெரிவையுமண்ணறானு
முருகவிழ்குழலும்வெய்ய முகிழ்முலைத்துணையுந்தாங்கு
முருவுடைத்தாங்கொலென்ற னுயிரெனவியந்துநின்றான்.

(இ-ள்.) தெரிவையும்-தமயந்தியும், என்-எனது, தெரிவரும்-தெரிதற்கரிய, ஆவி-உயிரானது, இருதடம்புயமும்-பருத்ததோள்களிரண்டையும், அம்-அழகிய, தார்-மாலையணிந்த, அகலமும்-மார்பையும், இயைந்ததென்றாள்-பொருந்தியதென்றாள், அண்ணறானும்-நளனும் - என்றனுயிர்-என்னுடையவுயிரானது, முருகவில்-தேனொழுகப்பெற்ற, குழலும்-கூந்தலையும், வெய்ய-வெவ்விய, முகிழ்-அரும்பையொத்த, முலைத்துணையும் - இரண்டுஸ்தனங்களையும், தாங்கும்-சுமக்கப்பெற்ற, உருவுடைத்தாமென-உருவுடையதாமென்று, வியந்து-அதிசயித்து, நின்றான்-நின்றான், எ-று.

முன்பு நளன்புயங்களைக்கண்ட தமயந்திக்கு, இப்பொழுது அப்புயங்களுடன் மார்புந்தோன்றியது, அப்பொழுது தமயந்தி தனங்களைக்கண்ட நளனுக்கு, இப்பொழுது அத்தனங்களுடன் கூந்தலுந்தோன்றியதென்க. [நளனிடத்து (இருதடம்புயமுமந்தாரகலமுமியைந்ததாவி எனக்குறித்தலாலும், தமயந்தியினிடத்து (முருகவிழ்குழலும்வெய்ய முகிழ்முலைத்துணையுந்தாங்கு முயிர், எனக்குறித்தலாலும், தற்குறிப்பணிகளாம்.]

(க-து.) தமயந்தி நளன்றோட்களையுமார்பையுந் தன்னுயிரென்றாள். நளன் தமயந்திகூந்தலையுந் தனங்களையுந் தன்னுயிரென்றான் எ-று. 105

மாதுபால்விழைவினேகுமனத்தினையல்லசெய்த
தூதினுக்கியல்பன்றென்றுத்தோன்றல்பேரறிவின்மீட்பக்
காதலினவன்பாற்செல்லுங்கருத்தினைக்கமலத்தண்பூம்
போதுறைமடந்தையன்னாட்பொருந்துநாண்டடுத்ததன்றே

(இ-ள்.) அல்லசெய்தல் - தூதுக்குரியவல்லவைகளைச்செய்தல், தூதினுக்கு-தூதுக்கு, இயல்பன்றென்று-இயற்கையன்றென்று, தோன்றல்-நளமகாராசாவானவன், மாதுபால் - தமயந்தியினிடத்து, விழைவின்-ஆசையினாலே, ஏகும்-செல்லுகின்ற, மனத்தினை-மனத்தை, பேரறிவின்-பேரறிவினால், மீட்ப-மீட்க, கமலத்தண்பூம்போதுறை-குளிர்ச்சிபொருந்திய தாமரைமலரிலிருக்கின்ற, மடந்தையன்னாள்-இலக்குமியையொத்ததமயந்தியை, பொருந்துநாண-பொருந்தியநாணமானது, காதலின்-ஆசையினால், அவன்பாற்செல்லுங்கருத்தினை-அந்நளமகாராசனிடத்திற்சென்ற மனத்தை, தடுத்தது-தடுத்துவிட்டது எ-று.

அல்லசெய்வென்பதற்கு-அல்லவைசெய்யவென்பதற்குப் போல், எதிர்மறைப்பொருளாகக்கொள்க. ஆடவர்க்குப் பேரறிவுபோலும்-மாதர்க்குநாணம்போலும்-தருணத்தில் நன்மைவிளைப்பதொன்றில்லையென்பது கருத்து.

(க-து.) நளன் இச்செய்கை தூதற்குத்தகாதென்று மனதைமீட்கத் தமயந்திநாணந் தன்மனதைத்தடுத்தது எ-ம். 106

நாணமீதூரநின்றநகைமதிமுகத்தினாளும்
பூணினுக்கழகுசெய்யும்புணர்முலைத்தோழிமாரு
நீணகர்க்கடிகொள்வாயினீங்கிவந்தருகுநின்றான்
சேணுறையமரன்கொல்லோதிருந்தெழிலியக்கனேயோ

(இ-ள்.) நாணம்-நாணமானது, மீதூரநின்ற-அதிகரிக்கவிருந்த, நகை-ஒளிபொருந்திய, மதி-திங்கள்போன்ற, முகத்தினாளும்-முகத்தையுடைய தமயந்தியும், பூணினுக்கு-ஆபரணங்களுக்கு, அழகுசெய்யும்-அழகைச்செய்கின்ற, புணர்-ஒன்றோடொன்றுசேர்ந்த, முலை-ஸ்தனங்களையுள்ள, தோழிமாரும்-தோழிகளும், நீள்-நீண்ட, நகர்-இந்நகரத்தினது, கடிகொள் - காவலைக்கொண்ட, வாயில்-வாயிலை, நீங்கிவந்து-கடந்துவந்து, அருகுநின்றான்-நம்மருகேநின்றவன், சேணுறை-ஆகாயத்திலிருக்கின்ற, அமரன்கொல்லோ-தேவனோ, திருந்து-திருந்தப்பெற்ற, எழில்-அழகையுற்ற, இயக்கனேயோ-இயக்கனோ எ-று.

இப்பாட்டில் மதிமுகத்தினாளுந் தோழிமாரும் என்னும் எழுவாய்கள்யாவனோ என்னும்பாட்டில்-உரைக்கலுற்றாரென்னும் பயனிலைகொண்டு முடிந்தன. இச்செய்யுண்முன் மூன்றுங்குளகம்.

(க-து) தமயந்தியுந்தோழிமார்களும்- இவன்தேவனோ, இயக்கனோ எ-ம்.

**கடிகமழ்கமலச்செல்விகண்கவர்வனப்புவாய்ந்த**
**வடிவுறுகுலவுத்திண்டோள்வண்டுழாய்மாயன்கொல்லோ**
**மிடல்கெழுவெள்ளிவெற்பின்விஞ்சையர்க்கிறைவன்கொல்லோ**
**முடியுடையமரர்போற்றுமொய்கழற்குமரன்கொல்லோ.**

(இ-ள்.) கடி-வாசனை, கமழ்-கமழ்கின்ற; கமலச்செல்வி-தாமரைமலரிலிருக்கின்ற திருமாதினுடைய, கண்-கண்களை, கவர்-கவர்கின்ற, வனப்புவாய்ந்த-அழகுபெற்ற, வடிவுறு-வடிவின்மிக்க, குலவு-திரட்சிபொருந்திய, திண்டோள்-திண்ணிய புயங்களையுள்ள, வண்-அழகிய, துழாய-துளபமாலையணிந்த, மாயன்கொல்லோ-திருமாலோ, மிடல்கெழு-வலிமைபொருந்திய, வெள்ளிவெற்பின்-வெள்ளிமலைக்கணுற்ற, விஞ்சையர்க்கிறைவன்கொல்லோ - விஞ்சையர்க்கரசனோ, முடியுடை-மகுடத்தையுடைய, அமரர்போற்றும்-தேவர்களால்வணங்கப்பட்ட, மொய்-நெருங்கிய, கழல்-வீரக்கழலையணிந்த, குமரன்கொல்லோ-குமாரக்கடவுளோ எ-று.

பகைவரைத்துரத்தல்-மாதரால் விரும்பப்படல்-சராசரங்களைப்பாதுகாத்தல்-வீரமிகுதி-இவைமுதலியகுணத்தால் மாயனோவென்றும், இசைநூல்வல்லமைஇங்கிதநீர்மை, இறுமாப்புடைமை-இவைமுதலியகுணத்தால் விஞ்சையர்க்கிறைவனோவென்றும், அபயந்தருதல்-அசுரரைமாட்டல் அருளுடைமை-அனங்கனும்விரும்புங் கட்டழகுடைமை-இவை முதலியகுணத்தால் குமரனோவென்றுஞ் சொல்லினர். சூரன்முதலிய அசுரரைக்கொன்று இந்திரன்முதலிய தேவரைக்காத்தலால், அமரர்போற்றுங் குமரனெனப்பட்டது.

(க-து.) விஷ்ணுவோ, விஞ்சையர்க்கரசனோ, சுப்பிரமணியனோ எ-ம்.108

**விரும்பியவனைத்துநல்குமேதருதவத்தின்மாய்ந்தோர்**
**திருந்தெழில்யாக்கைபெற்றுத்திகழ்வரென்றுரைக்குநீராற்**
**கரும்புறழ்கிளவிபாகன்கட்டழற்பாய்ந்துதுஞ்சி**
**யரும்பெறல்யாக்கைபெற்றகாமனோவறிகிலேமால்.**

(இ-ள்.) விரும்பியவனைத்தும் - இச்சித்தவைகளையெல்லாம், நல்கும்-தருகின்ற, மேதரு - மேம்பட்ட, தவத்தின் - தவனால், மாய்ந்தோர் - இறந்தவர்கள், திருந்து-திருத்தமாகி, எழில்-அழகுபொருந்திய, யாக்கைபெற்று-தேகத்தைப்பெற்று, திகழ்வாரென்று-விளங்குவார்களென்று, உரைக்குநீரால்-சொல்லுகின்றதன்மையால், கரும்புறழ்-கரும்பிரதத்தையொத்த, கிளவி-சொல்லையுடையவுமைமாதை, பாகன் தனதிடப்பாகத்தில்வைத்தகடவுள், கண்-நெற்றிக்கண்ணினுடைய, தழல் - நெருப்பிலே, பாய்ந்து - புகுந்து, துஞ்சி-இறந்த, அரும்பெறல்-பெறுதற்கரிய, யாக்கைபெற்ற-(அழகுள்ள)தேகத்தைப்பெற்ற, காமனோ-மன்மதனோ, அறிகிலேம்-(யாம்) அறியேம் எ-று.

முற்பிறப்பிலே ஒன்றைவிரும்பி, அதன்பொருட்டு அக்கினிப்பிரவேசம்-வரைபாய்தல்-புண்ணியதீர்த்தங்களில் விழுதல்-முதலியவற்றால் உடலைநீத்தவர்கள், மறுபிறப்பிலே அதனைப் பெறுவார்களென்பது "முற்பவமுச்சியினின்று மிழிந்துயிர்முற்றுற்றோர், பிற்பவமெண்ணியவாறு பெறத்தருபேரோங்கல்" இதனாலறிக. இங்ஙனம் நளனை உவமித்தற்கரியவடிவம் வேண்டி, ஈசுரன் விழிநெருப்பில் உடலைநீத்து இவ்வடிவைப்பெற்ற மன்மதனோவெனக்கருதினார்களென்க. [நாணமீதூரவென்னும் பாட்டுமுதன் மூன்றுபாட்டாலும் நளனை, அமரனோ-இயக்கனோ-மாயனோ-விஞ்சையர்க்கிறைவனோ-குமரனோ-காமனோ-எனவையுறலால் ஐயவணியாம்.]

(க-து.) மன்மதனோ அறியோமென்றார்கள் எ-ம். 109

மங்கையர்நிறையுநாணுங்கவர்ந்திடவனப்புவாய்ந்த
விங்கிவன்றன்னைஞாலமின்புறப்படைத்திலானேற்
றிங்களங்கண்ணிவேய்ந்தசெஞ்சடைக்கடவுளெங்ஙன்
பைங்கழைமதனைக்கொன்றபடுபழிதீருமாறே.

(இ-ள்.) மங்கையர்-மாதர்களின், நிறையும்-கற்பையும், நாணும்-நாணையும், கவர்ந்திட-கொள்ளையிடத்தக்க, வனப்புவாய்ந்த-அழகுபெற்ற, இங்கு-இவ்விடத்து, இவன்றன்னை-இப்புருடனை, ஞாலம்-உலகம், இன்புற-இன்பத்தையடைய, படைத்திலானேல்-சிருட்டியாதிருப்பானேல், திங்களங்கண்ணிவேய்ந்த-மூன்றாம்பிறையைத்தரித்த, செஞ்சடைக்கடவுள் - சிவந்தசடாபாரத்தையுற்றபரமசிவன், பைங்கழை-பசிய கருப்புவில்லேந்திய, மதனைக்கொன்ற-மன்மதனைக்கொன்ற, படுபழி-கொலைப்பழி, தீருமாறு-தீரும்விதம், எங்ஙன்-எப்படி எ-று.

உலகம் என்பது-அதிலிருக்கும் உயிருக்காதலால், ஆகுபெயர். ஈசுரரும் இவனதுபடைப்பால் காமனை எரித்தபழியைத் தீர்ந்தாரெனலால், அக்காமனின் மிக்க அழகுள்ளவனென்பது பெறப்பட்டது. நல்லோர் ஆயினோர் ஒருவருக்குந் தீங்குசெய்யார்: ஒருகாரணம்பற்றிச் செய்யினும் அதனிலுமிக்க நன்மைசெய்து அத்தீங்கையொழிப்பரென்பது கருத்து. [பழிதீரரனென்பது-இவன்றனைப்படைத்திலானேலெனயூகித்தலால், உயர்த்துணர்வணியாம்.]

(க-து.) சிவன்மன்மதனைக்கொன்ற பழிதீர இவனைப்படைத்தான்-எ-ம்.

மாயிருஞாலத்தானேன்மண்ணினிற்பொலிந்ததில்லை
மீயுயர்விசும்புலானேல்விசும்பினிற்சிறந்ததுண்டோ
பாயொளிபரிதிவேலான்பாதலத்துள்ளானெயின்
மேயகீழுலகேயெல்லாவுலகினுமேலதாமால்.

(இ-ள்.) பாய்-தாவுகின்ற, ஒளி-காந்தியொருந்திய, பரிதி - சூரியனையொத்த, வேலான்-வேற்படையையுடையவிப்புருடன், மா-மகத்தாகிய, இரு-

பெரிய, ஞாலத்தானேல்-பூவுலகிலிருப்பவனுகில், மண்ணினில்-அப்பூவுலகை விட, பொலிந்து-பிரகாசமுள்ளதாகியவுலகம், இல்லை-இல்லை, மீ - மேலாக, உயர்-உயர்ந்த, விசும்புலானேல்-தெய்வலோகத்தானுகில், விசும்பினில் - அத் தெய்வலோகத்தைக்காட்டிலும், சிறந்த நு-சிறக்கப்பெற்றதாகியவுலகம், உணடோ-இல்லை, பாதலத்துள்ளானுயில்-கீழுலகத்திருப்பவனுகில், மேய-பொருந்திய, கீழுலகே - பாதாளவுலகமே, எல்லாவுலகினும் - உலகங்களனைத்தினுக்கும், மேலதாம்-மேற்பட்டதாகும், எ-று.

[இதுவும் அவ்வணி.]

(க-து.) இவனிருக்குமுலக மெதுவோ அதுவே எவ்வுலகினுஞ் சிறப்புற்றது-எ-ம்.

111

யாவனோவிவனன்றெண்ணியிருநிலத்திலங் குபைம்பொற்
சேவடிபொருந்துநீரற்றேவரினொருவனல்லன்
றாவியஞ்சிறையவன்னஞ்சொல்லியவனப்புவாய்ந்த
காவலனுங்கொலென்னக்கருதியொன்றுரைக்கலுற்றார்

(இ-ள்.) யாவனோவிவனென்று-இவனெவனோவென்று, எண்ணி-சிந்தித்து, இருநிலத்து-பெரியபூமியிடத்து,இலங்கு-பிரகாசிக்கின்ற,பைம்பொன்-பசியபொற்கழலணிந்த, சேவடி-சிவந்தபாதங்கள், பொருந்துநீரால்-பொருந்துகின்ற தன்மையால், தேவரின்-தேவர்கூட்டத்துள், ஒருவனல்லன்-ஒருத்தனல்லனுகும், தாவி-தூவியென்னும் பெயரைத்தரித்த, அம்-அழகிய, சிறைய-சிறகுள்ள, அன்னம்-அன்னப்புள்ளானது, சொல்லிய-முன்சொல்லிய, வனப்புவாய்ந்த-அழகுபெற்ற, காவலனுங்கொலென்ன - அரசனுமென்று, கருதி நினைத்து, ஒன்று-ஒருவார்த்தை, உரைக்கலுற்றார்-தொழிகள் சொல்லத் தொடங்கினார்கள் எ-று.

"எழுதியவல்லியுந் தொழில்புனைகலனும் - வாடியமலருங்கூடியவண்டு - நடைபயிலடியும் புடைபெயர்கண்ணு-மச்சமும்பிறவுமன்பானிகழுங் - கச்சயிலையங்கடிவனவாகும்" இவ்விதியால்பூமியிற்பாதம் பொருந்தலாலே, தேவரினொருவனல்லனென்று நிச்சயித்தமாதர்க்குக்கீழுலகத்தானோவென்னுமையமிகழவில்லை. அன்னஞ்சொல்லிய அழகுள்ள நளமகாராஜனெனக்குறித்தலாலென்க.

(க-து.) இவன்தேவனல்ல: நளனென்றுசொல்லத்தொடங்கினர்கள்எ-ம்.

கலைநிலாத்தவழுமாடக்கடிநகர்கடந்துகோந்த
சிலைவளையாநீயிங்கெய்தச்சிறப்புடைப்புவனந்தம்மிற்
பொலிவிழந்திருந்தநெந்தப்புவனநீபொருளதாக
நலனுறுபுனிதமாயதெப்பெயர்நவிற்றுகென்றார்,

[இதுமுதல் எட்டுபாட்டுகளால் தோழிகள்கேள்வியும் அதற்கு அரசன் கூறினமையுஞ் சொல்லப்படுகின்றன.]

(இ-ள்.) கலைநிலா-கலைகணிறைந்தசந்திரன், தவழும் - தவழ்கின்ற, மாடம் - உப்பரிகைகளையுடைய, கடிநகர் - காவலைப்பெற்றநகரத்தை, கடந்துபோந்த-கடந்துவந்த, சிலைவலாய்-விற்றொழிலில்வல்லவனே, நீயிங்கெய்த-நீயிங்கேவர, (அதனாலே) சிறப்புடைய-சிறப்பினையுற்ற, புவனந்தம்மில்-தேசங்களுக்குள்ளே, பொலிவிழந்து-அழகிழந்து, இருந்தது இருக்கப்பெற்றது, எந்தப்புவனம்-எந்ததேசம், நீபொருளாதாக-நின்னைப்பொருளாதாகவுடைய, நலனுறு-நன்மைபொருந்திய, புனிதமாயது-பரிசுத்தமானது, எப்பெயர்-எந்தப்பெயர், நவிற்றுகென்றார்-(தோழிகள்) சொல்லென்றார்கள் எ-று.

[உன்தேசம்யாது உன்பேர்யாது என்னும்வினைக்கள், நீபோதலால் (பொலிவிழந்திருந்த தெந்தப்புவனம்) எனலாலும், (நீபொருளாதாக நலனுறுபுனிதமாயதெப்பயர்) எனலாலும் பெறப்படுதலால், பிறிதினவிற்சியணிகளும்; இவ்விரண்டுஞ்சேர்தலால், சேர்வையணியுமாம்.]

(க-து.) தோழிகள் நளனைப்பார்த்து உமதுபேரெனன ஊரென்ன என்றார்கள் எ-ம். 113

கானமர்கரியகூந்தற்கன்னியரிவ்வாறோதத்
தேனிமிர்தெரியல்வேய்ந்துசிலைத்தழும்பிருந்ததோளான்
பானலங்கடந்ததீஞ்சொற்பைந்தொடிவதுவைவேட்டு
வானவர்விடுத்ததூதன்யானெனவழங்கலுற்றான்.

(இ-ள்) கானமர்-வாசனைபொருந்திய,கரியகூந்தல்-கறுத்தகுழலையுடைய, கன்னியர்-மாதர்கள், இவ்வாறோத-இப்படிசொல்ல, தேன்-வண்டுகள், இமிர்-ஒலிக்கின்ற, தெரியல்-மாலையை,வேய்ந்து-தரித்து, சிலைத்தழும்பு-விற்றழும்பு, இருந்த-தங்கிய, தோளான்-தோள்களையுடையநளன், பால்-பாலினது, நலங்கடந்த நலத்தைச்செயித்த, தீஞ்சொல் - இனியசொற்களுள்ள, பைந்தொடி-தமயந்தி, வதுவைவேட்டு-நின்விவாகத்தை யிச்சித்து, வானவர்-தேவர்களால், விடுத்த-விடுக்கப்பட்ட, தூதன்யானென-தூதுவன்யானென்று, வழங்கலுற்றான்-சொல்லத்தொடங்கினான் எ-று.

ஊர்பேர்முதலியவற்றையுரைக்கின்முன்னரேவிழைந்ததமயந்தியால் நந்தூதிற்குவழுவுண்டாமெண்றெண்ணி அவையுரையாது, தனது தொழிற்குரிய பெயராற் கூறினனென்க.

(க-து.) நளன் தேவர்கள்விட்டதூதன் யானென்றான் எ-ம். 114

ஐந்தருநீழல்வேந்தனார்நலிந்கிறைவன்வெய்ய
செந்தழற்கடவுடென்பாற்றிசையுறைதருமனின்னோர்

பைந்தொடி நின்னை வேட்டுப் படை மதன் பகழி பாயச்
சிந்தனை பிறிதாய் மாழ்கித் தெருமரலெய்துகின்றார்.

(இ-ள்.) ஐந்தருநீழல்வேந்தன்-இந்திரன், ஆர்கலிக்கிறைவன்-வருணன். வெய்ய-கொடிய, செந்தழற்கடவுள்-அக்கினிபகவான், தென்பாற்றிசையுறை-தெற்குத்திக்கிலிருக்கின்ற, தருமன்-யமன், இன்னோர்-ஆகிய இந்நால்வரும், பைந்தொடி-தமயந்தி, நின்னைவேட்டு - உன்மேல்விருப்புற்று, படை-சேனைகளையுடைய, மதன் பகழி-மன்மதன் பாணங்கள், பாய-தங்கண்மேற்றைக்க, (அதனால்) சிந்தனை-மனம், பிறிதாய்-வேறுபட்டு, மாழ்கி-மயங்கி,தெருமரல்-சுழற்சியை, எய்துகின்றார்-அடைகின்றார்கள் எ-று.

(க-து) இந்திரன்-வருணன்-அக்கினி-யமன்-இந்நால்வரும், தமயந்தியே-உன்னைவிரும்பி மன்மதபாணத்தால் வருந்துகின்றார்களென்றான் நளன் எ-ம்

இங்கிவர் தம்மையாசைக் கிறைவரென் றறைவதெல்லாந்
தங்கிய திசையின் பேரால் சாற்றிய மாற்றமன்றே
கொங்கவிழ் குழையிற் றாவிக் குமிழ்மிசை மறியும் வேற்க
ணங்கலுழ் மேனியாய் நின்னாசையால் வந்ததாமால்.

(இ-ள்.) இங்கு-இவ்விடத்தில், இவர்தம்மை-இந்நால்வரையும், ஆசைக்கிறைவரென்று - ஆசைக்கரசரென்று, அறைவதெல்லாம்-சொல்லுவதனைத்தும், தங்கிய-இவர்களிருக்கின்ற, திசையின்பேரால்-திக்கினதுபெயரினாலே, சாற்றிய-சொல்லப்பட்ட, மாற்றமன்று-சொல்லன்றாகும், கொங்கு-வாசனை அவிழ்-விரிகின்ற, குழையில்-காதணியில், தாவி-பாய்ந்து, குமிழ்-குமிழம்பூவினது,மிசை-மேற்பக்கத்தில், மறியும்-மீளுகின்ற,வேற்கண்-வேல்போன்றகண்களையுற்ற, அம்-அழகானது, கலுழ்-ஒழுகுகின்ற, மேனியாய்-வடிவையுடைய தமயந்தியே, நின்-உன்மேல்வைத்த, ஆசையால்-ஆசையினால், வந்ததாம்-வந்ததாகும் எ-று.

ஆசையென்பது - திசைக்கும், அன்புக்கும் பெயர். அது "ஆசையே திசைபொன்னன்பாம்" என்பதற்காண்க. [திசைக்கிறைமையால்வந்த ஆசைக்கிறைவரென்னும் பெயர்க்கு, அன்பினால்வந்ததெனப் பொருள்கூறுதலால்; பிரிநிலை நவிற்சியணியாம்.]

(க-து.) தமயந்தியே - இந்நால்வரும் உன்மேல்வைத்த ஆசையினாலே ஆசைக்கிறைவரென்று பேர்பெற்றார்கள் எ-ம். 116

பற்றிய காமத் தீயாற் பைம்பொனாட்டமரர்க் கெல்லாந் [தே
கொற்றவன் வருந்தா வண்ணங் கொய்துகொய் தணையிற் சேர்த்
யுற்றவர் வறுமை தீர்க்கு முயர் சினைத் தருக்களைந்தா
நற்றளிரின்மையாகி நல்குரவடைந்தமாதோ.

(இ-ள்.) பை-பசிய, பொன்னாடு-பொன்னுலகத்திலிருக்கின்ற; அமரர்க்கெல்லாம்-தேவரனைவர்க்கும், கொற்றவன் - அரசனாகிய இந்திரன், பற்றிய தன்னைப்பற்றிய, காமத்தீயால்-காமாக்கினியால், வருந்தாவண்ணம்-வருத்தப்படாதவிதம், உற்றவர்-தம்மையடைந்தவர்களுடைய, வறுமை-இல்லாமையை, தீர்க்கும்-நீக்கும, உயர்-உயர்ந்த, சினை-கிளைகளையுற்ற, தருக்களுந்தம்-பஞ்சதருக்களும், கொய்து காய்து பறித்துப்பறித்து, அணையிற்சேர்த்து- படுக்குமெத்தையிற்சேர்த்து (அதனால்) நல்-நல்ல, தளிர்-தளிர்களை, இன்மையாகி-இல்லாமையாய், நல்குரவு-வறுமையை, அடைந்த-சேர்ந்தன, எ-று

[கற்பகத்தருவுக்கு இதனால் நல்குரவில்லாதிருந்தும் உளதாகக் கூறலால் உயர்வு நவிற்சியணியாம்.]

(க-து.) இந்திரன் உன்மேல் விருப்புற்றடைந்த காமந்தணிக்கும்பொருட்டைந்தருக்களுந் தழைகளிழந்தன எ-ம். 117

கடிமலர்க்கூந்தனின்மேற் காதன்மீதூரநின்ற
வடுதொழிற்கூற்றுமஞ்ச வடர்கின்றானநங்கன்வெய்ய
வடவையோடிகலுமூந்நீர்க்கிறையையும்வருத்தியாவுஞ்
சுடுதழற்கடவுண்மீதுஞ்சுட்டதுகாமத்தீயே.

(இ-ள்.) கடி-வாசனைபொருந்திய, மலர்-மலரையணி, கூந்தல் - அளகபாரத்தையுற்ற தமயந்தி, நின்மேல்-உன்னிடத்தில், காதல்-ஆசை, மீதூரநின்ற-அதிகரிக்கவிரும்பி, அடுதொழில்-கொல்லுந்தொழிலையுடைய, கூற்றும்-யமனும், அஞ்ச-பயங்கொள்ள, அநங்கன்-மன்மதனானவன், அடர்கின்றான்-நெருங்குகின்றான், வெய்ய-கொடிய, வடவையோடு-வடவைத்தீயுடனே, இகலும்-பகைகொள்ளும் மூந்நீர்க்கிறையையும்-கடற்கரசனாகிய வருணனையும், வருத்தி-வருத்தப்படுத்தி, யாவும்-எவற்றையும், சுடு-சுடுகின்ற, தழற்கடவுண் மீதும்-அக்கினிபகவான்மேலும், காமத்தீ-காமாக்கினி, சுட்டது-சுட்டது எ-று.

கொல்லுந்தொழிலையுடைய கூற்றையும் அஞ்சச்செய்து, வடவைத்தீயையுமடக்கும் கடலரசனையும் வருத்தி, எல்லாவற்றையுஞ் சுடுகின்ற தீக்கடவுளையுஞ் சுடுதலால்; காமத்தீயை ஒருவராலும் வெல்லக்கூடாதென்றதாயிற்று. அது-"ஊருளெழுந்த வுருகெழுசெந்தீக்கு, நீருட்குளித்து முயலாகு-நீருட், குளிப்பினுங்காமஞ்சுடுமே குன்றேறி, யொளிப்பினுங் காமஞ்சுடும்" இதனாலறிக.

(க-து.) தூமத்தீயைப்பார்க்கிலும் காமத்தீகொடிதென்பதாம் 118

முருக்கிதழணங்கனுப்நின்முகிழ்முலைவேட்டனான்றே
செருக்கிளரநங்கன்வாளிச்செழுமலர்வருத்தவாடி
யிருத்தலாற்பழிச்சுகின்றேரேடவிழ்நறியபோதா
லருச்சனைபுரியுந்தோறுமஞ்சுவரமரர்மாதோ.

(இ-ள்,) முருக்கு-முருக்கமலரையொத்த, இதழ்-அதரத்தையுடைய அணங்கனும்-தமயந்தி, நின்-உன், முகிழ்-அரும்பையொத்த, முலை-ஸ்தனங்களை, வேட்டனான்றே-விரும்பியபொழுதே, செரு-போர்த்தொழிலில், கிளர்-கிளர்ச்சியுள்ள, அநங்கன்-மன்மதனுடைய, வாளி - பாணங்களாகிய, செழுமலர்-செழுமையுள்ளமலர்கள், வருத்த - வருத்தஞ்செய்ய, வாடி - அவைகளால் வாட்டமுற்று, இருத்தலால்-இருக்கையினால், பழிச்சுகின்றோர்-பரவுகின்றவர்கள், எடவிழ்-இதழ்கள்விரிந்த, நறியபோதால்-நல்லமணமுள்ள மலரால், அருச்சனைபுரியுந்தோறும்-பூசைசெய்யுந்தோறும், அமரர்-(அருகிலிருக்கும்) தேவர்கள், அஞ்சுவர்-பயங்கொள்ளுவார்கள் எ-று.

இந்திரன் தமயந்தியை விரும்பியநாண் முதலாக, இன்றளவு மன்மதபாணங்கள் வருத்தஞ்செய்ய வாடியிருத்தலை உணர்த்தியவாறு காண்க.

(க-து.) இந்திரன் மன்மதபாணத்தால் வருந்தி இருத்தலால் அவனைக் காணவருபவர் மலரால் அருச்சிக்குந்தோறும் அப்பாணமென்று தேவர்பயப்படுவர் எ-ம். 119

இன்னணந்தேவர்மாழாந்திருநிலவரைப்பிற்போந்துன்
பொன்னவிர்திதலையார்ந்தபுணர்முலைப்போகம்வேட்ப
முன்னமெத்தவஞ்செய்தாய்கொலியைவதேமுறைமையென்றான்
கன்னல்வில்லொளித்துநின்றகாமனையனையநீரான்.

(இ-ள்.) இன்னணம்-இவ்விதம், தேவர்-தேவர்கள், மாழாந்து-மயங்கி, இரு-பெரிய, நிலவரைப்பிற்போந்து-பூவுலகில்வந்து, உன்-உனது, பொன்-பொன்போலும், அவிர்-விளங்குகின்ற, திதலையார்ந்த-தேமலானிறையப்பெற்ற, புணர்-ஒன்றோடொன்றுநெருங்கிய, முலை-ஸ்தனங்களினுடைய, போகம்-போகத்தை, வேட்ப-விரும்ப, முன்னம்-முற்பிறப்பில், எத்தவஞ்செய்தாய், கொல்-என்னதவஞ்செய்தனையோ, இயைவதே-சம்மதிப்பதுவே, முறைமையென்றான்-கிரமமென்றான், கன்னல்வில்-கருப்புவில்லை, ஒலித்துநின்ற-மறைத்துவைத்துநின்ற, காமனையனைய-மன்மதனையேயொத்த, நீரான்-தன்மையுள்ள நளமகாரசன், எ-று.

தேவரிற்சிறந்தஇந்திரன்முதலியோரைத்தலைவராகப்பெறுவது எளிதன்றென்பது கருத்து.

(க-து.) இந்திரன்முதலியோருன்னையிச்சிக்க நீ முன்னென்ன தவஞ்செய்தாயோ: அவர்களுக்குச் சம்மதிப்பதே ஒழுங்கென்றான் எ-ம். 120

என்றிவன்மொழிதலோடு மினையனேநளனென்றெண்ணி
மன்றலங்குழலாணணி வருத்தமோடெருத்தங்கோட்டி
நின்றனன்மருங்குசூழ்ந்த தோழியர்கிடதங்கோட்டி றாள்.
வென்றிகொள்சுடர்வேல்வேந்தற் கெதிர்மொழிவிளம்பலொற்

[இதுமுதல் மூன்றுபாட்டுகளால் நளனென்றறிந்த தோழிகள் கூறினமை சொல்லப்படுகின்றன.]

(இ-ள்.) என்று-இப்படியென்று, இவன்-இந்நளன், மொழிதலோடும்-சொல்லியவளவில், இனையனே-இவனே, நளனென்றெண்ணி-நளனென்று நினைத்து, பன்றலங்குழலாள்-தமயந்தி,நாணி-நாணமடைந்து, வருத்தமொடு-வருத்தத்துடனே, எருத்தங்கோட்டி-தலையைவளைத்துக்கொண்டு, நின்றனள் நின்றாள், மருங்கு பக்கத்தில்-சூழ்ந்த-சுற்றியிருக்கின்ற, தோழியர்-தோழிகள், நிடதங்காக்கும்-நிடததேயத்தைப்புரக்கின்ற, வெற்றிகொள்-வெற்றியைக்கொண்ட, சுடர்-கிரணங்களையுடைய, வேல்-வேலபடையேந்திய, வேந்தற்கு-நளமஹாராசனுக்கு, எதிர்மொழி - எதிருத்தரத்தை, விளம்பலுற்றார்-சொல்லத்தொடங்கினார்கள், எ-று.

நளன் இவனேயென்று நிச்சயித்த தமயந்திக்கு இனி நமக்குத் தலைவனாகவருபவனென்னுந் துணிவினாலே, நாணமும்; நாம் இவனை விரும்பியிருக்க இவன்தேவர்பொருட்டுத் தூதுவந்தானென்பதால், வருத்தமும்; உண்டாயினவாற்றால் வாளாவிருந்தனள். உயிர்த்தோழிகள் அவள் கருத்துமுழுவதும் அறிந்தவராதலால், அவ்விறைக்கு இறைகொடுக்கத் தொடங்கினரென்க.

(க-து.) தயந்தி இவனேநளனென்று நாணிநின்றாள். நளனுக்குத்தோழியர் சொல்லத்தொடங்கினார்கள் எ-ம். 221

ஆற்றலாற் நளனேயன்றியாருயிர் பிறிதின்றென்னும்
வேற்றடங்கண்ணினாடன் மெய்பதைத்தாவிசோரச்
சாற்றியமாற்றந்தன்னாற்றழலுமிழ்தறுகட்பேழ்வாய்க்
கூற்றுவன்றூதனென்றுகூறியதியற்கையாமே.

(இ-ள்.) ஆற்றலால் - வலிமைமிக்க, நளனேயன்றி - நளமஹாராசனையல்லாமல், ஆருயிர்-நிறைந்தஆவியானது, பிறிதின்றென்னும் - வேறொன்றில்லை யென்கின்ற, வேற்றடங்கண்ணினாடன்-தமயந்தினது, மெய்பதைத்து தேகநடுங்கி, ஆவி - உயிரானது, சோர - சோர்வையடைய, சாற்றிய - நீ சொல்லிய, மாற்றந்தன்னால் - சொல்லினால், தழலுமிழ் - நெருப்பையுமிழ்கின்ற- தறுகண் - கொடியகண்களையும், பேழ்வாய் - பெருவாயையுமுற்ற, கூற்றுவன்றூதனென்று - யமதூதனென்று, கூறியது - (முன்) சொல்லியது, இயற்கையாம் (உனக்குத்) தகுதியாகும், எ - று.

தழலுமிழ் தறுகட்பேழ்வாய் - என்னும் அடைமொழிகள், கூற்றுவனது கொடுமையை விளக்கின்றன. [கூற்றுவன் தூதாகிவந்த நளனைக் கூற்றுவன்றூதனென விதித்தலால், விதியணியாம்.]

(க - து.) நளனை தன்னுயிரென்று நினைத்திருக்குந் தமயந்தி உயிர் சோர நீ சொல்லிய சொல்லால் யமதூதனென்பது சரியே என்கிறார்கள் எ-ம். 122

வையகமொருகோலோச்சிவான்புகழ்நிடதங்காக்கு
மையனைமணப்பதன்றியறிமதர் நெடுங்கட்செவ்வாய்த்
தையல்வேறொருவர் நாமஞ்சாற்றினுமாற்றாளாகி
வெய்யசெந்தழலின்மூழ்கி விளிவதற்கையமின்றே.

(இ-ள்.) வையகம் - பூவுலகத்தை, ஒரு கோலோச்சி - தனிச்செங்கோல் செலுத்தி, வான்புகழ் - மிகுந்தபுகழுடைய, நிடதங்காக்கும் - நிடததேசத்தைப் புரக்கும், ஐயனை - நளமஹாராசனை, மணப்பதன்றி - விவாகஞ் செய்து கொள்வதல்லாமல், அரி - செவ்வரிபரந்த, மதர் - களிப்பையுடைய, நெடுங்கண் - நெடியகண்களையும், செவ்வாய் - சிவந்தவாயினையுமுடைய, தையல் தமயந்தியானவள், வேறொருவர் நாமம் - வேறொருவர் பெயரை, சாற்றினும் சொல்லினும், ஆற்றாளாகி - பொறுக்கமாட்டாதவளாய், வெய்ய - கொடிய, செந்தழலின் - நெருப்பினில், மூழ்கி - முழுகி, விளிவதற்கு - இறப்பதற்கு இயமின்று - ஐயமில்லை. எ - று.

நளனை மணப்பதற்கு முன்பு செய்த தவம் போதாமையால், இப்படியாயிற்று: இப்பொழுதாவது விதிப்படி தீவளர்த்து அதில்விழுந்து நினைத்ததை மறுபிறப்பில் முடிப்பாளென்னுங் கருத்துதோன்ற, செந்தழலின் மூழ்கி விளிவதற்கையமின்று என்றார்.

(க - து.) தமயந்தி நளனை விவாகஞ்செய்வதன்றி வேறொருவர் பெயரைச் சொன்னாலு மக்கினியில் வீழ்ந்திருப்பாள் - எ-ம். 123

என்றவர்மொழியவேந்த னியம்புவானெரியின்வீழ்ந்து
பொன்றில்வெங்கனலிதன்னைப் புணர்ந்ததாம்புகன்றசெந்தீ
யன்றிவார்புனலின்வீழ்ந்து துள் ளாருயிர்விடுத்தாளேனுந்
துன்றுசீர்வருணன்றன்னைத் தோய்ந்ததாய்விளையுமன்றே.

[இதுமுதல் நான்கு பாட்டுகளால் நளன் வற்புறுத்திக்கூறல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) என்று இப்படியென்று, அவர்மொழிய - அந்தத் தோழிகள் சொல்ல, வேந்தன் - நளமஹாராசன். இயம்புவான் - சொல்லுவான், எரியின் வீழ்ந்துபொன்றில் - நெருப்பில் வீழ்ந்திருந்தால், வெங்கனலிதன்னை - அக்கினிபகவானை, புணர்ந்ததாம் - கூடியதாகும், புகன்ற (இப்பொழுது சொல்லிய, செந்தீயன்றி - அக்கினியல்லாமல், வார் - நெடிய புனலில், வீழ்ந்து - நீரிலேவிழுந்து, உள் - உள்ளே, ஆர் - நிறைந்த, உயிர்விடுத்தாளேனும் - உயிரை விட்டாளானாலும், துன்று - நெருங்கிய, சீர் - சிறப்பையுடைய,

வருணன்றன்னை - கடலரசனை, தோய்ந்ததாய்வினையும் - கலந்ததாகிவினை யும், எ - று.

நெருப்பில் வீழினும், நீரில்வீழினும், தீக்கடவுளையும் - கடற்கரசனையும் - புணர்ந்ததாக முடிதலானும், இவள் நினைப்பு இப்பிறப்பின் முற்றுமையானும் மறுமைப் பயனிம்மையிற் பயவாமையானும், அவர்களேவந்து பிரார்த்திக்கும் போது இசைந்தால், மிக்கநன்மையுண்டாமென்பது கருத்து.

(க - து) அக்கினியில் வீழ்ந்திறந்தால் அக்கினியைச் சேர்ந்ததாயிருக் கும். நீரில்வீழ்ந்திறந்தால் வருணனைச் சேர்ந்ததாயிருக்கும் - எ - ம். 124

அன்றிங்கனலிசான்றாயல் லதுவதுவையாற்றற்
கொன்றுமோவருணனொவ்வாது தகமோடளிக்குந்தூய
மன்றலெவ்வாறுமுற்றும் வானவரருளில்லாமற்
றுன்றுநீர்புவியில்யார்க்குஞ் சூழ்வினைமுடிக்கலாமே.

(இ-ள்.) அன்றியும் - அப்படியல்லாமலும், கனலிசான்றாயல்லது - அக் கினி சாக்ஷியாயல்லாமல், வதுவையாற்றற்கு - விவாகஞ் செய்தற்கு, ஒன் றுமோ - பொருந்துமோ, வருணன் - கடலரசன், ஒவ்வாது - சம்மதியாமல், உதகமோடளிக்கும் - நீரோடு கொடுப்பதாகிய, தூய - சுத்தமாகிய, மன்றல் - விவாகம், எவ்வாறுமுற்றும் - எவ்வழிமுடியும் (ஆதலால்) வானவர் - தேவர் களுடைய, அருளில்லாமல் - கிருபையில்லாமல், துன்றுநீர் - கடல்சூழ்ந்த, புவியில் - பூமியிலே, யார்க்கும்-எப்படிப்பட்டவர்களுக்கும், சூழ்வினை-நினைக் கப்பட்ட கருமங்களை, முடிக்கலாமே - முடிக்கக்கூடுமோ எ - று.

(க - து) எப்படிப்பட்டவர்க்கும் தீயுநீருமில்லாமல் விவாகமுடியாது: இவற்கிவர்களருள் வேண்டுமென்றான் - எ - ம். 125

வேயினைப்பழித்தமென்றோள் வேற்றடங்கண்ணினுட
னேயபேரழகுமாந்த ரிருகணானோக்கவற்றோ
தீயுமிழ்வைரவொள்வாளேந்தியதேவர்கோமா
னாயிரங்கண்களாலு நோக்குதற்கமைந்ததன்றே.

(இ-ள்.) வேயினை - மூங்கிலை, பழித்த - நிந்தித்த, மெல் - மெல்லிய, தோள் - தோளையுடைய, வேற்றடங்கண்ணினுடன் - தமயந்தியிடத்து, எய - பொருந்திய, பேரழகு - மிகுந்த அழகானது, மாந்தர் - மனிதரின், இருக ணால் - இரண்டுவிழிகளால், நோக்கவற்றோ - பார்க்கவல்லதோ, தீயுமிழ் - நெருப்பையுமிழ்கின்ற, வைரவொள்வாள் - வச்சிராயுதத்தை, எந்திய - தாங் கிய, தேவர்கோமான் - இந்திரனானவன், ஆயிரங்கண்களாலும் - ஆயிரம்விழி களாலும், நோக்குதற்கு - பார்க்கும்பொருட்டு, அமைந்தது - பொருந்தியதா கும், எ - று.

(க - து.) இந்திரன் ஆயிரங்கண்களாற் பார்த்தற்கமைந்த தமயந்தியழகை மனிதர்களிருகண்களாற் பார்த்தல் பயன்படாது - எ-ம். 126

வெந்திறற்களிநல்யானை விதர்ப்பர்கோனளித்தமாதைத்
தந்துயிரளித்தியென்னத் தனியிருவிசும்புகாக்கு
மிந்திரன் கேட்டபோதி லெண்ணியவனைத்தாநல்கு
மைந்தருவழங்கினும்மா லன்றெனமறுக்கலாமோ.

(இ-ள்.) தனி-ஒப்பற்ற, இனிவிசும்பு-பெரியவிண்ணுலகத்தை, காக்கும்-காக்கின்ற, இந்திரன்-இந்திரனென்பவன், வெந்திறல்-வெவ்வியவலிமைபெற்ற, களி-களிப்புள்ள, நல்-நல்ல, யானை-யானையையுடைய, விதர்ப்பர்கோன்-வீமனனவன், அளித்த-பெற்ற, மாதை-தமயந்தியை, தந்து-கொடுத்து, உயிர்-உன்னுயிரை, அளித்தியென்ன - காப்பாற்றென்று, கேட்டபோதில் - கேட்டாலப்பொழுது, எண்ணியவனைத்தும் - நினைத்தவைகளையெல்லாம், நல்கும் - தருகின்ற, ஐந்தரு-பஞ்சதருக்கள், வழங்கின்-கொடுத்தால், நும்மால் - உங்களால், அன்றென-அன்றென்று, மறுக்கலாமோ-மறுக்கக்கூடுமோ எ-று.

இந்திரன் தருமசிந்தனையையுடையவனாதலால், தன்னுயிர்போக வந்தவிடத்தும் அவ்வாறு செய்யாது சம்மதிப்படுத்த நினைத்தனனென்க. தனியிருவிசும்புகாக்கு மென்றலால், அவனுடைய ஆணைசொல்லப்பட்டது. பிறர் எண்ணியவனைத்துங் குறிப்பறிந்து கொடுக்கும் பஞ்சதருக்கள் தருமகாரசனாகிய இந்திரன்வாய்திறந்து கேட்கில். அது எப்படி இல்லையென்றுசொல்லும். "ஒறுக்கசமதுகையுரனுடையகளன், பொறுக்கும்பொறையே" என்றிருத்தலால், இந்திரன் பொறுமையுள்ளவனென்பது பெறப்பட்டது. ஐந்தருவிருட்டித்துக்கொடுக்கினெனப்பொருள்கொள்ளில், உலகத்தில் உவமையற்றவிவள் போற்பலருண்டாயின் இவளுக்குச் சிறப்பில்லையென்பது கருத்து.

(க-து.) இந்திரன் ஐந்தருக்களையடுத்துத் தமயந்தியைத்தாவென்றால் உங்களால் மறுக்கக்கூடுமோ எ-ம். 127

என்றிவன்புகன்றமாற்றமிருசெவிவெதுப்பக்கேட்டு
நின்றுளம்பதைப்பவாடிநெட்டுயிர்ப்போடுஞ்சோரு
மன்றலங்குழலிநுடன்மதர்நெடுங்கயற்கண்ணைவி
குன்றெனப்பணைத்துவீங்குங்குவிமுலைவார்ந்தவன்றே.

[இதுமுதல் ஒன்பதுபாட்டுகளால் நளன் கூறியவார்த்தையால்தமயந்தியும் பாங்கியரும் வருந்த, அன்னமானது தற்செயலாய்வந்துதோற்றி அரசனுக்குவிடைதர, அவன் முன்போல அருவமாய்ச்சென்று அத்தேவர்களைக்கண்டமை சொல்லப்படுகின்றன.

(இ-ள்.) என்று-இப்படியென்று, இவன்-இந்தநளனென்பவன், புகன்றமாற்றம் - சொன்னசொற்கள், இருசெவி - இரண்டுகாதுகளையும், வெதுப்ப-சுடு

நலைச்செய்ய, கேட்டு-அவைகளைக்கேள்விப்பட்டு, நின்று-நின்று, உளம்-மன மானது, பதைப்ப-பதைப்படைய, வாடி-வாட்டமுற்று, நெட்டுயிர்ப்போடும்-பெருமூச்சுட்டின, சோரும்-சோர்வையடைகின்ற, மன்றலங்குழலினுடன்-தம யந்தியின், மதர்-களிப்பையுடைய,நெடுங்கயற்கண்-நெடியகயல்போன்ற கண் களினின்றும், ஆலி-நீர்த்துளிகள், முன்றெனமலைகளென்றுசொல்ல, பணைத்து-பருத்து, வீங்கும்-வீங்கிய,குவிமுலை-குவிந்தஸ்தனங்களின்மேல், வார்ந்த-ஒழுகின எ-று.

ஆடவர் ஒருபொருளைக்குறித்து வினவும்போது அதற்கு விடைகூறத்தக்கபடின் அழுவது மாதர்க்குச் சுபாவமாதலால், கயற்கணூலிகுவிமுலைவார்ந்தனன்றூர். மிக்க கல்விப்பயிற்சியுள்ளவிட்டுந் தடைபடுவதேனென்னில், தான்பேசுவதற்குக் கூடாமையானும்-இவன்பேசுவதில் தோழிகட்கும் வாக்கு மிகுதலானும்-என்க. எப்படிப்பட்டவர்க்கு மனவருத்தமேலிடில் ஒன்றுந்தோன்றாதென்க.

(க-து.) நளன்சொன்னசொல்லைத் தமயந்திகேட்டு அவளிருகண்ணீர்த்துளிக ளிருமுலைமேல் விழுந்தன எ-ம். 123

மாதுகண்பனிப்பநோக்கித்தோழியர்மாழாந்துள்ளம்
பேதுறவெய்திநின்றபெல்வளைத்துயரமெல்லாந்
தூதுநாம்விடுத்தவன்னஞ்சொல்லியதென்னிற்சற்று
மாதரமின்றியிவ்வாறுரைக்குமோவரசனென்றூர்

(இ-ள்.) மாது-தமயந்தியின், கண்-கண்கள், பனிப்ப-நீரைச்சொரிய, நோக்கி-பார்த்து, தோழியர்-தோழிகள், மாழாந்து-மயங்கி, உள்ளம்-மனமானது, பேதுறவெய்தி-கவலையடைந்து, நின்றபெய்வளை-நிற்கின்ற தமயந்தியின், துயரமெல்லாம்-துன்பமனைத்தையும், தூது-தூதாக, நாம்விடுத்த-நம்மால்விடுக்கப்பட்ட, அன்னம்-அன்னப்பறவையானது, சொல்லியதென்னில்-சொல்லியிருந்ததானல், சற்றும்-கொஞ்சமும், ஆதரமின்றி-ஆசையில்லாமல்,இவ்வாறு-இப்படி, அரசன்-நளனானவன், உரைக்குமோவென்றூர் சொல்லுவானோவென்றூர்கள் எ-று.

இவன்நளனே அல்லனோ, நளனேயாயினும் நாமுன்னர்த் தூதாகவிடுத்த அன்னம் நமதுகுறைகளைச் சொல்லவில்லையோ, சொன்னதாயின் தமயந்தியிடத்து முன்னரேவிழைந்துள்ள அரசன் அவளைநேரிற்கண்டும் நம்முறைகளைக் கேட்டும் சிறிதேனு மன்பின்றி இவ்வாறு கூறுதலின் மற்றையரானே, எனவிடைகொடுத்தற்கு ஐயுற்றுத் தோழிகள் வருத்தமுற்றிருந்தனரென்க.

(க-து.) தோழிகள் தூதுசென்றவன்னம் தமயந்திதுயரத்தைச் சொல்லி இருக்குமானல் நளனிப்படிச் சொல்லுவானோவென்றூர்கள் எ-ம். 192

இன்னணமணங்கனைமாயமுமிரங்கநோக்கி
மன்னனுமறிவுதிர்ந்துமனஞ்சிறிதயரும்வேலைப்

பொன்னிறப்பவளச்செவ்வாய்ப்பொற்புறுபசியமென்கூட்
டன்னமும்விசும்பினீங்கியவ்வுழியடைந்ததன்றே

(இ-ள்.) இன்னணம்-இப்படி, அணங்களும் - தமயந்தியும், ஆயமும்-தோழிகளும், இரங்கஏக்கி-வருந்துவதைப்பார்த்து, மன்னனும்-நளனும்,அறிவுதீர்ந்து-மதிமயங்கி, மனம்-மனமானது, சிறிது-கொஞ்சம், அயரும்வேலை-தளர்வடையும்போது, பொன்னிறம் - பொன்போன்றநிறத்தையும், பவளம்போன்ற, செய்வாய் - சிவந்தவாயையும், பொற்புறு-அழகான்மிகுந்த, பசிய-பசுமைபொருந்திய, மென்கூட்டு - மெல்லிய உச்சிக்கொண்டையையுமுடைய, அன்னமும்-அன்னப்பறவையும், விசும்பினீங்கி-ஆகாயத்தினின்றுநீங்கி, அவ்வுழி-அந்தவிடத்தில், அடைந்தது-வந்தது எ-று.

தூதுவந்த நளனை இன்னனென்றறெதரியக்கூடாமையால், தமயந்தியுந்தோழிகளும் வருந்தினார்கள்: நளனும் அறவழியிற்செல்பவனாதலால், தன்னுடையவேட்கையை அவர்கண் முன்பு வெளிப்படுத்தக்கூடாமல் வருந்தினனென்க.

(க-து.) இப்படித்தமயந்தியுந் தோழிகளும் நளனும் அறிவுகலங்கிவருந்தும்வேளையில் அன்னம்வந்தது எ-ம். 13

எய்தியதூவியன்னமுன்னகைப்பவளச்செவ்வாய்
மையவாங்கரியகூந்தல்வாண்முகமினிதுநோக்கி
நெய்தவழ்புலவுவைவேனிடதர்கோனிவனேயுள்ளத்
தையுறேல்கமலப்போதிலணங்கிற்குமணங்குபோல்வாய்.

(இ-ள்.) எய்திய-அங்குவந்த, தூவி-இறகையுடைய, அன்னம்-அன்னப்பறவை, இன்னகை-இனியநகையையும், பவளச்செவ்வாய் - பவளம்போன்ற செவ்வாயையும், மை-மேகங்கள், அவாம்-விரும்புகின்ற, கரியகூந்தல்-கறுத்த குழலையுமுடைய தமயந்தியினது, வாள்-ஒளிபொருந்திய, மூகம்-திருமுகத்தை இனிதுநோக்கி-இனிதாகப்பார்த்து, கமலப்போதிலணங்கிற்கும் - தாமரை மலரிலிருக்குந் திருமாதுக்கும், அணங்குபோல்வாய்-திருமாதுபோன்ற தமயந்தியே, நெய்தவழ் - நிணந்தவழ்கின்ற, புலவு - புலாலுற்றம் பொருந்திய, வைவேல்-கூறியவேலையேந்திய, நிடதர்கோனிவனே-இவனேநளமகாராசன், உள்ளத்து-மனத்தில், ஐயுறேல்-ஐயப்படவேண்டாம் எ-று.

தெய்வத்தன்மையுள்ள, அன்னமாதலால், தான் எடுத்தகருமத்திற்கு இடையூறுவாராதபடி, நளன் தேவர்கள்பொருட்டுத் தூதாகவந்தமை தெரிந்து வருந்திநிற்கு மிருதிறத்தவர்க்கும் வாட்டமாற்றினமையறிக.

(க-து.) அன்னமானது தமயந்தியைப்பார்த்து இவனே நளமஹாராஜனென்றது எ-ம். 131

மழைமதர்நெடுங்கட்செவ்வாய்வளர்முலைமடந்தாய்நின்மேவ்
விழைவிகந்துரைந்தானல்லன்விண்ணவர்க்கிசைந்தமாற்றம்

பழுதுறுமென்னுமாற்றூர்பகர்ந்தனரின்பதிவேலா
னழுதகங்குழைந்திடேலென்றன்பினுலறைந்ததன்றே.

(இ-ள்.) மழை-குளிர்ச்சிபொருந்திய, மதர்-களிப்பையுடைய, நெடுங்கண்-நெடியகண்களையும், செல்வாய்-சிவந்தவாயையும், வளமுலை-வளர்கின்ற ஸ்தனங்களையுமுடைய, மடந்தாய் - தமயந்தியே, பரிதிவேலான்-நளமகாராஜன், நின்மேல் - உன்னிடத்தில், விழைவிகந்து - ஆசைநீங்கி, உரைத்தானல்லன் - சொன்னவனல்லனாகும், விண்ணவர்க்கு-தேவர்களுக்கு.இயைந்த-தூதின்பொருட்டுச் சம்மதித்த, மாற்றம், சொல், பழிதுறுமென்னுமாற்றல்-பழுதாகுமென்கிறபடியால், பகர்ந்தனன்-(இவ்வாறு) பேசினுன்,(அதனுல்) அழுது-நீபழுது அகங்குழைந்திடேலென்று - மனங்குழையவேண்டாமென்று, அன்பினுல் - விருப்பத்தினுல், (அன்னம்) அறைந்தது-சொல்லியது எ-று.

தேவர்பொருட்டுச் சம்மதித்த கருமத்திற்கோர் பழுதடையின், இம்மைக்குப் பழியன்றி மறுமைக்குப் பாவமும் உண்டா மாதலின்; அரசன் இவ்வாறு பேசினுனென்றது.

(க-து.) தமயந்தியே - நளனுன்மேல் ஆசையையாறு சொன்னவனல்ல, தூதுக்குப் பழுதில்லாமற் சொன்னுன் அழாதே யென்று சொல்லிற்று அன்னம் எ-ம். 132

வடுவகிரனையவுண்கண்மடந்தையோடிவ்வாறோதிக்
கடகளிறென்னநின்றகாளைதன்முகத்தைநோக்கா
வுடையபேரறிவாற்காமமுள்ளமைத்தின்னகூறிற்
கொடிநெடுந்தானைவேந்தேகோற்றொடியாற்றுங்கொல்லோ.

(இ-ள்.) வடு-மாவடுவினது, வகிரனைய-பிளப்பையொத்த, உண்கண்-மையுண்டகண்களையுற்ற, மடந்தையோடு - தமயந்தியுடனே, இவ்வாறோதி-இவ்விதமாகச்சொல்லி, கடகளிறென்னநின்ற-மதயானையென்னும்படிநின்ற, காளைதன்முகத்தை-அரசனதுமுகத்தை, நோக்க-பார்த்து, கொடிநெடுந்தானை வேந்தே-நளமகராஜனே, உடையபேரறிவால்-பேரறிவுடைமையால், காமம்-ஆசையை, உள்ளமைத்து-உள்ளேயடக்கி, இன்னகூறில்-இப்படிப்பட்டவார்த்தைகளைப்பேசினுல், கோற்றொடி - தமயந்தி, ஆற்றுங்கொல்லோ - பொறுப்பாளோ எ-று.

நின்போல்வார்க்கன்றிக் காமத்தைப் பேரறிவால் உள்ளடக்கிப் பேசுதல், மற்றையோர்க்கரிதென்றதாயிற்று. நின்னை விழைந்தவளாதலால், நீயோபேசில் அவளாற்றற்கரியதென்றதென்க.

(க-து.) அன்னம் நளனைப்பார்த்துத் தமயந்திக் கிவ்வாறுசொன்னுற்பொறுப்பாளோ என்றது எ-ம். 133

மாங்குயிற்குதலைப்பேதைமனமுநீயி யைந்தவண்ணந்
தீங்கறவுரைத்தவாறுந்தேவர்மற்றுணராரல்ல
ரீங்கினியுரைப்பதென்னையிவ்வயினிகழ்ந்தவெல்லா
மாங்கவர்தம்பாலேகியறைதியென்றறைந்ததன்னம்.

(இ-ள்.) மாங்குயில்-மாமரத்திலிருக்குங்குயிற் சொல்லையொத்த, குதலை-மதலைச்சொல்லையுடைய, பேதைமனமும்-தமயந்தியினதுமனமும், நீயியைந்த வண்ணம்-நீசம்மதித்துவந்தபடி, தீங்கற-தீங்குநீங்க, உரைத்தவாறும்-சொல்லியவிதமும், தேவர்-தேவர்கள், உணராரல்லர் - அறியாதவர்களல்லர், ஈங்கு-இவ்விடத்தில், இனியுரைப்பதென்னை - இனிபேசவேண்டுவதென்ன, இவ்வயின்-இவ்விடத்திலே, நிகழ்ந்தவெல்லாம் - நடந்தவையனைத்தும், ஆங்கவர்தம்பால்-அத்தேவரிடத்துக்கு, ஏகி-போய், அறைதியென்று - நீ சொலலுவாயாகவென்று, அன்னம்-அன்னப்பறவை, அறைந்தது-சொல்லியது எ-று.

"திரிகாலமறிந் தெய்வதவியற்கை" இவ்விதியால் எல்லாந் தேவர்களறிவார் ஆதலால், தமயந்தியினது கருத்தும்-நீதூதுக்குச் சம்மதித்துவந்தபடிபேசியதும்-நீபோய்ச் சொல்லுமுன்னே அறிவார்களென்றதென்க.

(க-து.) இங்கு நடந்தவையெல்லாந் தேவர்களறிவார்கள் நடந்தபடிநீ போய்ச்சொல்லென்றது அன்னம் எ-ம். 134

அவ்வுரைகேட்டலோடுமடையலர்செகுக்கும்வேலான்
மவ்வலங்குழலினுடமனவலியினிதினோர்ந்து
செவ்விதின்மனமுங்கண்ணுந்தெரிவைமேற்கிடப்பமாறுங்
கவ்வைகொள்வாயினீங்கிவிஞ்சையிற்கரந்துபோனான்.

(இ-ள்.) அவ்வுரை-அந்தவார்த்தையை, கேட்டலோடும்-கேட்டவளவில், அடையலர்-சத்துருக்களை, செகுக்கும்-கொல்லுகின்ற, வேலான்-வேற்படையையுடையவனன், மவ்வலங்குழலினுடன்-தமயந்தியினது, மனவலி-நெஞ்சினதுவலிமையை, இனிதினோர்ந்து-இனிதினறிந்து, செவ்விதின்-செம்மையையுற்ற, மனமும்-தனமனத்தையும், கண்ணும்-கண்களையும், தெரிவைமேற்கிடப்ப-அத்தமயந்தியின்மேலிருக்கவைத்து, மாறு-நீங்காத, கௌவைகொள்-ஓலித்தலைக்கொண்ட, வாயினீங்கி-வாயிலைக்கடந்து, விஞ்சையின்-மந்திரத்தினால், கரந்துபோனான்-ஒளித்துச்சென்றான் எ-று.

தேவர்கண்மேல் தமயந்திக்குக்காதலில்லாமையை யறிந்தவனாதலால், தன்மனமுங்கண்ணு மவள்மேற் கிடப்ப விஞ்சையிற்கரந்துபோனான் என்றார்.

(க-து.) நளன் கண்களுமனமுந் தமயந்தியிடத்திருக்க உருவமறைந்து அரூபமாகப் போனான் எ-ம். 135

காரிகையுள்முநாணுங்கவர்ந்தனன்கரந்துபோய
பூரிவெஞ்சிலைக்கைவீரன்கடவிளர்முன்னரேகி



6 தமயந்தி சுயம்வரத்துக்குச் செல்லுகின்ற இந்திராதி தேவர்களை காணுதல் 262-வது-பக்கம்.

நேரிழைதன்பாற்றாதுபோயபினிகழ்ந்தவெல்லாஞ் [ர்
சோர்வுறாதுரைத்தான்றேவர் தோன்றல்பான்மகிழ்ச்சிகூர்ந்தா

(இ-ள்.) காரிகை-தமயந்தியின், உளமும்-மனத்தையும், நாணும்-நாணை யும், கவர்ந்தனன்-கொள்ளைகொண்டானாகி, கரந்துபோய-மறைந்துசென்ற, சூரி - வலிமைபெற்ற, வெஞ்சிலைக்கைவீரன்-நளமகாராஜன், கடவுளர்முன் னர்-தேவர்களெதிரே, ஏகி-சென்று, நேரிழைதன்பால்-தமயந்தியினிடத்து தூதுபோயபின்-தூதுபோனபின்பு, நிகழ்ந்தவெல்லாம்-நடந்தவைகளனைத்தை யும், சோர்வுறாது-குறைவுபடாமல் உரைத்தான்-சொல்லினான், தேவர்-தேவர் கள், தோன்றல்பால்-அந்நளமகாராசனிடத்தில், மகிழ்ச்சிகூர்ந்தார்-உவகைய டைந்தார்கள் எ-று.

தாம்விரும்பியமாதிடத்தில் நம்முறைதவறாது தூதுசென்றுஉள்ளபடி பே சினானென்று, நளனிடத்தில் இந்திரன்முதலிய நால்வரு மகிழ்கூர்ந்தன ரென்க.

(க-து.) நளன் தேவர்கள்முன்சென்று தமயந்தி சொன்னவையெல்லாம் சொன்னான்தேவர்கள் நளனிடத்தில் மகிழ்ச்சிகூர்ந்தார்கள் எ-ம். 136

நளன்றூதுப்படலம் முற்றுப்பெற்றது.

---

# சுயம்வரப்படலம்.

[சுயம்வரமாவது-அரச மங்கையானவள் தனக்குமூத்தோர்கள் தன்னைமணப்பதற்காக அழைத்து வந்த அநேக அரசர்களை ஏககாலத்தில் வருவித்து,அவர் களில் தனக்கிசைந்த ஒருவனுக்குத் தானேமாலையிட்டுத் தலைவனாகக் கொள்ளுதலாம்.]

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

இன்னவைநிகழும்வேலைபெழுகடல்வரைப்பின்மேவு
மன்னவர்குழாமும்விண்ணோர்தொகுதிமணிச்செஞ்சூட்டுப்
பன்னகநாட்டுவேந்தர்வெள்ளமும்பரித்தோர்வீமன்
கன்னியம்புரிசைசூழ்ந்தகடிநகர்க்கெழுந்தவன்றே.

[இப்படலத்தால் தமயந்தியானவள் நளமகாராஜனைத் தலைவனாகத் தானேவரித்தாளென்று சொல்லத்தொடங்கி, இப்பாட்டால் தமயந்தியின் சுயம் வரத்திற்குத் திரிலோகத்தினுமுள்ளவர் வரவு சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) இன்னவை-இப்படிப்பட்டவைகள், நிகழும்வேலை-நடக்கின்றபொழுது, எழுகடல்வரைப்பின்மேவும்-எழுகடல்சூழ்ந்த தீவுகளிலிருக்கின்ற, மன்னவர்குழாமும்-அரசர்கூட்டமும், விண்ணோர்தொகுதியும் - தேவர்கூட்டமும், மணி-இரத்தினங்களாகிய, செஞ்சூட்டு-சிவந்தசூட்டையுடைய, பன்னகநாட்டு-நாகலோகத்துள்ள, வேந்தர்வெள்ளமும் - அரசர்கள்கூட்டமும், பரித்தேர்-குதிரைக்கட்டியதேரும், வீமன் - வீமராசனது, கன்னி-அழிவில்லாத, அம்-அழகிய, புரிசைசூழ்ந்த-மதிலாற்சூழப்பட்ட, காவலுள்ளகுண்டினபுரத்துக்கு, எழுந்த-எழுந்தன எ-று.

வீமன் பூமியிலுள்ள அரசர்க்குமாத்திரம் சுயம்வரவோலை செலுத்தியிருக்க மற்றையுலகத்தாரு மெழுந்தனரென இப்பொழுது சொல்லியதற்கு காரணமென்னெனில், முன்பு நாரதமுனி இந்திரனுக்குத் தமயந்தியின் செய்தி சொல்லும்போது "விஞ்சையர் கின்னராரண ருரகர்புவிமுழு தாளும்வேந்தர்யாரு மஞ்சலிசெய் திருமருங்கும் புடைசூழ முனிவர்குழாமாகிகூற" என்னும் பாட்டில், அங்கிருந்தாரெனச் சொல்லிய மேலுலகத்தாரும்-கீழுலகத்தாரும்-தீவிலுள்ளாரும்-அவளாவின்மிக்கவராய் அதைத்தமக்கும்வந்த செய்தியாகக்கொண்டு, நல்லூழிருக்குமாயின் அம்மாதுசூட்டுமாலை நமக்குக்கிடைப்பினுங் கிடைக்குமென வெழுந்தனரெனக் கொள்ளல்வேண்டுமென்க.

(க-து.) அரசர்கூட்டங்களும் தேவர்கூட்டங்களும் நாகலோகத்தரசர்கூட்டங்களும் குண்டினபுரத்திற் கெழுந்தன எ-ம். 1

பண்ணமை கலினப்பாய்மாபசியபொற்கொடிஞ்சித்திண்டேர்
கண்ணழற்சீற்றத்துப்பிற்கடாம்பொழிகளிநல்யானை
மண்ணமைமுழவுத்திண்டோள்வாகைவேலுழவரீட்ட
மெண்ணிடவிடமொன்றின்றியெங்கணும்பரந்தவன்றே.

[இதனால் மேற்சொல்லிய அரசர்களுடைய நால்வகைச்சேனைகளின் வரவு சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) பண்ணமை-கல்லணையமைத்த, கலினம்-கடிவாளம் பெற்ற, பாய்-தாவுகின்ற, மா-குதிரைகளும், பசியபொன்-பசியபொன்னினாற் செய்த, கொடிஞ்சி-மேன்மொட்டையுடைய, திண்-வலிமைபெற்ற, தேர்-தேர்களும், கண்-கண்களில், அழலை-தீயையும், சீற்றத்துப்பின்-மிகுந்த கோபத்தையுமுடைய, கடாம்பொழி-மதம்பொழிகின்ற, களிநல்யானை-களிப்புள்ள நல்ல யானைகளும், மண்ணமை-ஒப்பனையமைந்த, முழவு-மத்தளம் போன்ற, திண்டோள்-வலிமைபெற்ற புயங்களையும், வாகைவேல்-வெற்றிபெற்ற வேலையுமுடைய, உழவரீட்டம்-காலாள்களது கூட்டமும், எண்ணிட-எள்ளையிடுதற்கு, இடமொன்றின்றி - வெற்றிடமொன்றுமில்லாமல், எங்கணும்-எவ்விடங்களிலும், பரந்த-பரவின எ-று.

ஒவ்வொரு தேயத்தரசர்கள் சேனைகளே அநேகமாயிருப்பின், அனேக தேயத்தரசர் நால்வகைச் சேனைகளும் ஏககாலத்தில் ஓரிடத்திற்கு வருமாயின்' இவ்வளவென்று குறிக்கக்கூடாதென்பார்; எண்ணிட விடமொன்றின்றி யெங்கணும் பரந்த என்றாரென்க. எண்-எள். அது "எண்ணுந்திலமு மெள்ளென விசைப்பார்" என்பதனாலறிக.

(க-து.) குதிரைகளும், தேர்களும், யானைகளும், காலாள்களும், எங்கும்பரவின எ-ம். 2

கொய்யுளைக்கலினமாவின்குரத்துகளெழுந்துவிம்மி
வையகமுழுதுஞ்சூழ்போய்மறிகடற்கிடங்குதூர்த்து
மொய்பெறுதசலத்தோடு முரணியெண்டிசையுங்காக்குந்
தொய்யின்மாமுகத்தயானைக்கவுட்குழிதூர்த்தனவன்றே.

[இதனால் குதிரைக்குளம்புகளினெழுந்த புழுதியின்தோற்றஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கொய்-கொய்யப்பட்ட, உளை-புறமயிர்பொருந்திய, கலினமாவின்-கடிவாளம்பூண்ட குதிரைகளின், குரத்துகள்-குளம்புபட்டுண்டாகும் புழுதிகள், எழுந்து-எழும்பி, விம்மி-பரவி, வையகமுழுதும்-பூவுலகமுழுவதும், சூழ்போய்-வளைத்துக்கொண்டு, மறிகடல்-மடங்குகின்ற அலைகளையுடையகடலாகிய, கிடங்கு-அகழை, தூர்த்து-தூர்த்துவிட்டு, மொய்பெறுது-போர்பெறுமல், அசலத்தோடுமுரணி-குலகிரியுடன் மாறுகொண்டு, எண்டிசையுங் காக்கும்-திசைகளெட்டையும் புரக்கின்ற, தொய்யில்-சிந்துரமெழுதப் பெற்ற, மா-மகத்தாகிய, முகத்தயானை-முகத்தை யுடைய யானைகளின், கவுட்குழி, கன்னத்துளைகளை, தூர்த்தன எ-று.

பூவுலக முழுவதுஞ் சூழ்ந்து கடல்களைத் தூர்த்துத் திக்கயங்களினுடைய கன்னத்துளைகளையுந் தூர்த்த புழுதி அப்புறம் போதற்கிடமில்லாமையாற் றடைப்பட்டதன்றி, அதற்களவில்லையென்க. புழுதியிப்படிப்பட்டதாயின், அக்குதிரைகளின் ஆரவாரஞ் சொல்லவேண்டுவதில்லையாயிற்று. [இது உயர்வுநவிற்சியணி.]

(க-து) குதிரைகளின் குளம்பாலுண்டாகும் புழுதிகள் கடலையுந்தூர்த்து அட்டகஜங்களின்கவுட்குழிகளையுந் தூர்த்தன எ-ம். 3

மண்ணகவரைப்பின்வேந்தர்வரைபுயத்தெழுதுசாந்தம்
விண்ணகத்தமரர்மார்பங்கமழ்ந்தனவிண்ணோர்வேய்ந்த
தண்ணறவொழுகுமன்றற்றருமலர்ப்பசும்பொற்றாது
கண்ணகன்ஞாலங்காக்கும்வேந்தர்மெய்கமழ்ந்தமாதோ.

[இதனால் தேவர்கட்கும் அரசர்கட்குமிருக்குங்கலப்பு சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மண்ணகவரைப்பின்-பூவுலகத்திடத்திருக்கின்ற, வேந்தர்-அரசர்களின், வரைப்புயத்து-மலைகளையொத்த தோள்களில், எழுந்த-தூரியக்கோலாற்றீட்டிய, சாந்தம்-சந்தனங்கள் விண்ணகத்து-ஆகாயத்திடத்திருக்கின்ற, அமரர்-தேவர்களது,மார்பம்-மார்பிலே, கமழ்ந்தன-மணந்தன, விண்ணோர்-தேவர்கள்,வேய்ந்த-தரித்த,தண்-குளிர்ச்சி பொருந்திய,நறவொழுகு-தேனொழுகின்ற, மன்றல்-வாசனைபொருந்திய, தருமலர்-பஞ்சதருக்களினுடைய மலர்களின், பொற்றூது-மகரந்தங்கள், கண்ணகல்-இடமகன்ற, ஞாலங்காக்கும் பூமியைப் புரக்கின்ற, வேந்தர்மெய்-அரசர்களது தேகத்தில், கமழ்ந்த-மணந்தன எ-று.

தேவர்களை மனிதர்கள் அவ்வாறு நெருங்கலாமோவெனின், அரசரால் விரும்பப்படுந் தமயந்தியையே அவர்களும விரும்பிவருதலானும், அதிகநெருக்கமுள்ள விடத்தில் எவர்களும் அதிகமரியாதையை விரும்பாமையானும்,ஆகுமென்க.

(க-து.) அரசர்களில் தோட்களிலணிந்த சந்தனங்கள் தேவர்கள் மார்பிற் பரிமளித்தன. தேவர்களணிந்த கற்பக மலர்த்தாதுகள் அரசர்களுடலிற்பரிமளித்தனஎ-ம். 4

காந்தெரிகதுவுஞ்செங்கட்கரிமதக்கலுழியாறுங்
கூந்தன்மாவுமிழ்விலாழிப்பெருக்கும்வேற்குமரனன்ன
வேந்தர்திண்புயத்தில்வார்ந்தவிரைகமழ்நானச்சேறும்
பாந்தண்மேற்கிடந்தஞாலமெங்கணும்பரந்தவன்றே

[இதனால் மதநீர்முதலியவற்றின் பெருக்கஞ் சொல்லப்படுகின்றது.

(இ-ள்.) காந்து-முதிர்கின்ற, எரி-தீயானது, கதுவும்-பற்றுகின்ற செங்கண்-சிவந்தகண்களையுடைய, கரி-யானையினது, மதம்-மதநீராகிய, கலுழியாறும்-காடாறும், கூந்தல்-புறமயிர்பொருந்திய, மா-குதிரைகள், உமிழ்-சொரிகின்ற, விலாழிப்பெருக்கும்-நீர்ப்பெருக்கும், வேல்-வேற்படையேந்திய, குமரனன்ன-குமாரக்கடவுளையொத்த, வேந்தர் அரசர்களுடைய, திண்புயத்தில்-வலிமையுள்ளதோள்களில், வார்ந்த-ஒழுகிய, விரைகமழ்-வாசனை கமழ்கின்ற, நானச்சேறும்-கஸ்தூரிசசேறும், பாந்தண்மேல்-ஆதிசேடன்மேல். கிடந்த-இருந்த, ஞாலமெங்கணும்-பூமியெங்கும, பரந்த-பரவின எ-று.

மதக்கலுழியாறும்-விலாழிப்பெருக்கும்-நானசசேறும் - ஞாலமெங்கணும் பரந்தவென்றதனால், அவைகளையுடையவைகள் அளவில்லையென்பது கருத்தாகக் கொள்க.

(க-து) யானைகளின்மதமும், குதிரைகள்வாய்நீரும், அரசர்கள் புயத்தொழுகிய கஸ்தூரிச்சேறும், பூமியெங்கும் பரவின எ-ம். 5

வெள்ளியங்கிரியின்மேயவிஞ்சையரியக்கர்விண்ணோ
ரொள்ளொளியெறிக்கும்பைம்பொன்விமானமுமூலகின்வேந்தர்

நள்ளிருள் சீக்குஞ்செய்ய நகைமணிக்கொடிஞ்சித்தேருந்
தெள்ளிதினுணர்ந்துளோர்க்குந் தெரிவிலமயங்குமன்றே.

[இதனால் தேவராதியர் ஊர்திகளின் பெருக்கஞ் சொல்லப்படுகின்றது]

(இ-ள்.) வெள்ளியங்கிரியின்-கைலாசமலையில், மேய-பொருந்திய, விஞ்சையர்-விச்சாதரரும், இயக்கர்-இயக்கர்களும், விண்ணோர்-தேவர்களும் ஆகிய இவர்களுடைய, ஒள்ளொளி-மிகுந்தவொளியை, எறிக்கும்-வீசுகின்ற, பைம்பொன்-பசும்பொன்னாற்செய்த, விமானமும்-விமானங்களும், உலகில்-பூவுலகிலிருக்கும், வேந்தர்-அரசர்களுக்குரிய, நள்ளிருள்சீக்கும்-மிகுந்தவிருளினையோட்டுகின்ற, செய்ய-சிவந்த, நகை-ஒளிபொருந்திய, மணி-இரத்தினங்கள்பதித்த, கொடிஞ்சி-மேன்மொட்டையுடைய, தேரும்-தேர்களும், தெள்ளிதின்-தெளிவாக, உணர்ந்துளோர்க்கும் - அறிந்தவர்களுக்கும், தெரிவில - தெரிந்துகொள்ளக்கூடாமையாகி, மயங்கும்-ஒன்றோடொன்றுமயங்கும் எ-று.

இவ்வொருவிதத்தில் அனேகம் விமானங்களும் அனேகம் தேர்களுமாதலால், நுண்ணறிவுடையோராயினுந் தேவர்களுக்கும் அரசர்களுக்கும் நம்மது அதுவோ இதுவோவென்னத் தலைமயங்கிக் கிடக்குமென்க.

(க-து.) தேவர்கள் விமானங்களும், அரசர்கள் தேர்களும், பகுத்தறியப்படாவாம் எ-ம். 6

சிற்பநூல்கழியக்கற்றோர்சித்திரித்தென்னவாய்ந்த
பொற்புறுநெடியவேற்கட்பூங்கொடித்துவைவேட்டுப்
பற்பலதேயவேந்தர்தொகுதலிற்பாடைதேர்வா
னற்புடனவருந்தேவபாடையினறைவர்மாதோ.

[இதனால் அரசரனைவருங் கலந்துபேசல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்) சிற்பநூல்-சிற்பசாஸ்திரத்தை, கழிய-மிகவும், கற்றோர்-படித்தவர்கள், சித்திரித்தென்ன-சித்திரித்ததுபோல, வாய்ந்த-பொருந்திய, பொற்புற-அழகான்மிக்க, நெடிய-நீட்சியுள்ள, வேற்கண் - வேல்போன்ற கண்களையுடைய, பூங்கொடி-தமயந்தியினது, வதுவைவேட்டு-விவாகத்தைவிரும்பி, பற்பல-அனேகமாகிய, தேயவேந்தர்-தேயங்களிலிருக்கும் அரசர்கள், தொகுதலில் - கூட்டங்கொண்டிருந்தலால், பாடைதேர்வான் - (எல்லோர்க்குஞ்) சொற்பொருள் தெரியும்பொருட்டு, அற்புடன் - அன்புடனே, அவரும் - எவர்களும், தேவபாடையின்-கீர்வாணபாஷையால், அறைவர்பேசிக்கொள்வார்கள் எ-று. மாதோ-அசை.

அதிகவுந்தரியமுள்ள தமயந்தியினது விவாகத்தை விரும்பி அனேகதேயத்து அரசர்கள் கூடியபடியால், தேயங்கடோறும் பாடைகள் வேறாகலின், அவைகளாற் பேசின் ஒருவர்க்கொருவருரைக்கும் வார்த்தைகட்குப் பொருளறியக்கூடாதென்று கீர்வாணபாடையாற் பேசினரென்க. ஆதலாலே அதுவே

எப்பாடைகட்கு மூலமென்பதும், எத்தேயங்கட்கும் பொதுவென்பதும்பெற்றும். "செய்துசெய்யூச் செய்புசெய்தெனச்-செய்யியர்செய்யிய செலஞ்செயச் செயற்கென-வவ்வகையென்பது வினையெஞ்சுகிளவி" இவ்விசியால் தொகுதலில் என்றது, செயின் என்னும் வாய்பாட்டுவினையெச்சம், அன்பு-அற்பெனத்திரிக்தது.

(க-து.) யாவருந் தேவபாஷையிற் பேசுவார்கள் எ-ம். 7

கழைசுளிகளிநல்யானைபிளிறொலி கமஞ்சூல்வான
மழையொலியவியப்பம்புட்வார்முரசோதைத்தவர்
முழவொலிதடந்தேர்ச்சில்லிமுழக்கொலிபுடவிபோர்த்த
வெழுகடலொலியுமெஞ்சவெங்கணுமொலித்தவன்றே.

[இதனால் அங்குண்டாய ஒலியின்றோற்றஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கழை-கரும்புகளை, சுளி-முறிக்கின்ற, களி-களிப்புள்ள, நல்-நல்ல, யானை-யானைகளினிது, பிளிறு-ஆரவாரமாகிய, ஒலி - சத்தமும், கமம்-நிறைந்த, சூல்கருப்பத்தையுடைய, வானம்-ஆகாயத்திற்சஞ்சரிக்கும், மழை-மேகத்தினது, ஒலி-சத்தமானது, அவிய-கெடும்படி, பம்பும்-நெருங்கிய, வார்-வாரிறுக்கிய, முரசோதை-பேரிகைகளின்சத்தமும், தேவர்முழவொலி-தேவதுந்துபிகளின்சத்தமும், தடம்-பருத்த, தேர்-தேரினுடைய, சில்லி - உருளைகள், முழக்கொலி முழக்குகின்றசத்தமும், புடவிபோர்த்த-பூமியைச்சூழ்ந்த, எழுகடலொலியும் - எழுகடலினோசையும், எஞ்ச-குறையும்படி, எங்கணும்-எவ்விடத்தும், ஒலித்த-சத்தித்தன எ-று.

யானைகளின் பேரொலியைச் சொல்லவே "ஒருமொழி யொழிதறன்னினங்கொளற்குரித்தே" என்பதனால், அளவற்ற மற்றைச் சிற்றொலிகளுங் கொள்க. இவ்வொலி எவ்விடத்து மிருந்தலால், கரையருகின்மாத்திரமொலிக்குமேழுகடலொலிகள் எஞ்சவென்றார்

(க-து.) யானைகள்சத்தமும், பேரிகைகள்சத்தமும், தேவதுந்துபிகள்ன் சத்தமும், தேர்கள்சத்தமும், படலொலிமங்கவெங்குஞ்சத்தித்தன எ-ம். 8

அகலிருவிசும்போர்த்தவணிமதிக்கவிகைவட்டம்
பகலொளிகரப்பவெங்கும்பாயிருள்பரப்புமன்னர்
நகைமணிமகுடகோடிநள்ளிருட்பிழம்பைநக்கி
யிகலிவானிரவியோடவிளவெயிலெறிக்குமாதோ

[இதனால் அங்குண்டான இருளும் ஒளியுஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) அகல் அகன்ற, இரு-பெரிய, விசும்பு-ஆகாயத்தை, போர்த்த-மூடிய, அணி-அழகிய, மதிக்கவிகை-சந்திரவட்டக்குடைகளின், ஈட்டம்-கூட்

டங்கள், பகலொளி-சூரியப்பிரகாசம், காப்ப-மறைய, எங்கும்-எவ்விடத்தும், பாய்-பரவிய, இருள்-இருளை, பரப்பும்-பரவச்செய்யும், மன்னர்-அரசர்களது, நகை-ஒளிபொருந்திய, மணி-இரத்நங்கள்பதித்த, மகுடகோடி-அனேகமகுடங்கள், நள்ளிருட்பிழைம்பை-மிகுந்தவிருட்பிழம்பை, கக்கி-உண்டு, இகலி-பகைத்து, வான்-ஆகாயத்திலிருக்கும், இரவியோட-சூரியனை வளோடும்படி, இளவெயில்-இளங்கதிரை, எறிக்கும்-வீசும் எ-று.

அகல்-இரு-என்னும் அடைமொழிகளால், விசும்பின் அகற்சியும்-பெருமையுந்தோன்றின- அப்படிப்பட்ட விசும்பையுங் குடைகள்மறைக்க, அதனுளதாம் இருளையோட்டற்கு அரசர் மகுடங்களிற்பதித்த மணிகளில் ஒவ்வொன்றே போதுமானதாயிருக்க, அப்படிப்பட்ட மணிகள் பலவற்றையுடைய அனேக மகுடகோடிக்ளுக்கு இவ்விருள் போதாதென்பது தோன்ற; விழுங்கி என்னது-கக்கியென்றார்.

(க-து.) குடைகள்கூட்டம் இருளைக்கொடுக்கும்: மகுடகூட்டம் ஒளியைக்கெடுக்கும் எ-ம். 9

வெங்கதிர்நெற்றிதோய்ந்து விளங்குபொற்கொடியினீட்ட
மங்குல்வானிழியுந்தெய்வமடைந்தையர்வடிவுகாட்டக்
கொங்கலர்தெரியல்வேந்தர்கொற்றவெண்கவிகையீட்டந்
திங்களினழகுகாட்டத்திருநகர்பொலிந்ததன்றே.

[இதனுல் கொடிகளுங் குடைகளுஞ் சொல்லப்படுகின்றன.]

(இ-ள்.) வெங்கதிர்-சூரியனது, நெற்றிதோய்ந்து - நெற்றியிற் படிந்து, விளங்கு-பிரகாசிக்கின்ற, பொற்கொடியின்-பொன்னாற்செய்த கொடிகளின், ஈட்டம்-கூட்டங்கள், மங்குல்-மேகங்களுலவும், வானிழியும்-ஆகாயத்தினின்றிழிகின்ற, தெய்வமடைந்தையர் - தெய்வமாதர்களது, வடிவுகாட்ட-வடிவினைத்தெரிவிக்க, கொங்கு-வாசமிகுந்த, அலர்த்தெரியல்-மலர்மாலையணிந்த, வேந்தர்-அரசர்களது, கொற்றம்-வெற்றிபொருந்திய, வெண்கவிகை- வெள்ளிக்குடையினுடைய, ஈட்டம் - கூட்டங்கள், திங்களின்-சந்திரனது, அழகுகாட்ட-அழகைத்தெரிவிக்க, திருநகர் - குண்டினபுரமானது, பொலிந்தது - பொலிவைக டைந்தது எ-று. (அன்று-ஏ-அசைகள்.)

கொடிகள் அனேக அரம்பையர் வடிவங்களையும், குடைகள், அனேகசந்திரர் வடிவங்களையும் காட்டுதலால், விவாகத்திற்குச்சிறப்பு மங்கையராலன்றி வேறில்லை யாதலாலும்; ஒருசந்திரனுலுலகமகிழ்ச்சியடையும்போது, அனேக சந்திரர் ஏககாலத்தில் ஒரு நகரிற்றோன்றினல் எவ்வளவு சிறப்புண்டாகலாமாதலாலும்; திருநகர்ப்பொலிந்ததென்றார்.

(க-து.) கொடிகள் கூட்டம் தேவமாதர்கள்போலும், குடைகள்கூட்டம் சந்திரன்போலும் வடிவுகாட்ட; குண்டினபுரஞ்சிறப்புற்றது எ-ம். 10

குருமணியிமைக்கும்பைம்பொற்குடைநிழல்வெயிலையோட்ட
மருமலிநறியமென்பூமாலைவாடாமையானுந்
திருநகர்செல்விநோக்கியிமைப்பிலர்திரிதலானு
மரசரோடமரர்தம்மையறிவரிதாயதன்றே.

[இதனால் அரசர்க்குந் தேவர்க்கும் வேற்றுமைதோன்றாமைசொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) குரு-நிறம்பொருந்திய, மணி-இரத்நங்கள், இமைக்கும்-பிரகாசிக்கின்ற, பைம்பொன்-பசியபொன்னாற்செய்த, குடைநிழல்-குடைகளினுடைய நிழல்கள், வெயிலையோட்ட-வெய்யிலைத்துரத்த, (அதனால்)மருமலி-வாசம்பொருந்திய. நறிய-நறியவாகிய, மென்பூமாலை-மெல்லிய பூமாலைகள், வாடாமையானும் - வாடாமையாலும், திருநகர் - குண்டினபுரத்தினது, செல்விநோக்கி-அழகைப்பார்த்து, இமைப்பிலர்-கண்களிமையாதவர்களாய், திரிதலானும்-திரிகின்றபடியாலும், அரசரோடு-அரசர்களுடனே, அமரர்தம்மை-தேவர்களை, அறிவரிதாயது-பகுத்தறியலரிதாயது எ-று.

மாலைவாடிதல்-கண்ணிமைத்தல்-ஆகிய இரண்டு செய்கையால் தேவர்க்கு வேற்றுமைப்பட்டிருந்த அரசர், இப்போது எவ்விரண்டுமில்லாமையால் வேற்றுமைதோன்றிலவென்க. [அரசர்க்கும் அமரர்க்கும் வேற்றுமைதோன்றாமையால், மறைவணியாம்.]

(க-து) குடைகளின்நிழலால் மாலைகள் வாடாமையாலும், நகரத்தை இமையாது பார்த்தலாலும். அரசர்களென்றுந் தேவர்களென்று மறியப்படாதுஎ-ம்.

மாங்குயிலனையதீஞ்சொல்வடுவகிர்பொருவும்வேற்கட்
பூங்கொடிவதுவைவேட்டுப்புவியினில்வேந்தரெல்லாந்
தேங்கமழ்தெரியல்வீமன்றிருநகரிறுத்தறன்று
லாங்கவர்தேயம்யாவுமரும்பொறையுயிர்த்தவன்றே.

[இதனால்மற்றைத்தேயங்களின்பொறையொழிவு சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மாங்குயிலனைய-மாங்குயிற்சொல்லைநிகர்த்த, தீஞ்சொல்-தித்திக்கின்றசொல்லையும், வடுவகிர்பொருவும் - மாவடுவின்பிளப்பையொத்த, வேற்கண்-வேல்போன்றகண்களையுமுடைய, பூங்கொடி-தமயந்தியினது, வதுவைவேட்டு-விவாகத்தைவிரும்பி,புவியினில்வேந்தரெல்லாம்-பூவுலகத்திலிருக்கும் அரசர்களெல்லாரும், வீமன்-வீமராஜனது, திருநகர்-குண்டினபுரத்தில், இறுத்தனால்-வந்துதங்கியபடியால், அவர்தேயம்யாவும்-அவர்கள்தேசமெல்லாம், அரும்பொறை-பொறுத்தற்கரியசுமையை, உயிர்த்த-நீங்கின எ-று.

வீமன் அனேகர் வருத்தங்களுக்கு இடங்கொடுத்து அவர்களைமகிழ்வுறச்செய்வதுபோல், அவன்தேசமும் அனேகதேயத்தினர்க்கு இடங்கொடுத்து அவைகள் இளைப்பாறி மகிழ்வுறச்செய்ததென்பது கருத்து.

(க-து.) குண்டினபுரமொன்றே சுமைபெற்றது: மற்றத்தேசங்கள் சுமையற்றன எ-ம். 12

இழைபரந்திமைக்குமல்குலின்கனித்துவர்வாயேழை
மழைமதர்நோக்கிற்கஞ்சி மறியுமாறேனுமாதின்
விழைதருநகரிற்றுண்ட வெருவிமீண்டேகுமாற்றால்
கழிபெருங்காதல்கூர்ந்துங்காற்றிறைவரவுதீர்ந்தான்

[இதுமுதல் நான்குபாட்டுகளால் தமயந்தி சுயம்வரத்திற்கு வாயுமுதலிய நால்வரும் வாராமைக்குக் காரணஞ்சொல்லத்தொடங்கி, இதனால் வாயுவாராமைக்குக் காரணஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) இழை-ஆபரணங்கள், பரந்து-பரவி, இமைக்கும்-பிரகாசிக்கின்ற அல்குல்-அல்குலையும், இன்-இனிய, கனி-(கொவ்வைக்) கனிபோன்ற, துவர் வாயேழை - செவ்வாயையுமுடைய, தமயந்தியினது, மழை-குளிர்ச்சிபொருந்திய, மதர்-களிப்புள்ள; நோக்கிற்கஞ்சி-பார்வைக்குப்பயந்து, மறியும்-மடங்குகின்ற, நகரிற்றுண்ட - குண்டினபுரத்திற்குச் செலுத்த, வெருவி - பயந்து மீண்டு-திரும்பி, ஏகுமாற்றால்-போகின்றபடியால், கழி-மிகுந்த, பெருங்காதல் கூர்ந்தும் - பேராசையையடைந்தும், காற்றிறை - வாயுவானவன், வரவு-வருதலை, தீர்ந்தான்-நீங்கினன் எ-று.

நாம் விவாகத்திற்குச் செல்லவெழுந்ததற்கு அமங்களமாக நமதூர்தியே தடைசெய்தலால், நமக்கு அத்தமயந்தி மாலையிடுவது எம் அவ்வாறுமென்றுவாயுவானவனின்றனனென்க.

(க-து.) தமயந்திகண்களைக்கண்டு தானேறுமான்வாகனந்திரும்பிவிடுவதால், வாயுதேவன் வாராதிருந்தான் எ-ம். 13

ஐயரிபரந்துமைதோய்ந்தம்பலைத்திகலும்வேற்கட்
டையலோர்பாதியாயதன்மையாற்றனதுபைம்பொற்
செய்யதாள்பெயர்ப்பவன்னாள்சீறடியெழாமையாலோ
மையணிகண்டத்தோனுமன்றனுங்கெழுந்திலானே.

[இதுமுதல் ஈசன்வாராமைக்குக் காரணஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) ஐ-அழகிய, அரிபரந்து-செவ்வரிபரந்து, மைதோய்ந்து-அஞ்சனமணிந்து, அம்பலைத்து-அம்புகளையலைவுசெய்து-இகலும்-பொருகின்ற, வேற்கண்-வேல்போன்றகண்களையுடைய, தையல்-உவமையாதானவள், ஓர்பாதியாயதன்மையால்-வாமபாகத்திலிருக்கின்றபடியால், தனது-தன்னுடைய, பைம்பொன் - பசியபொன்போன்ற, செய்யதாள் - சிவந்தபாதங்களை, பெயர்ப்பதாக்க, அன்னாள்-அவ்வுமாதேவியினது, சீறடி-சிறியபாதங்கள், எழாமையாலே-எழுதலில்லாமையால், மையணிகண்டத்தோனும்-ஈசனும், மன்றனுக்கு-(தமயந்தியின்) விவாகத்திற்கு, எழுந்திலான்-புறப்பட்டிலன் எ-று.

சிவன் மன்மதனை எரிப்பினும் காமமுள்ளவனென்பது தோன்ற, ஐயலோர்பாதியாய தன்மையாலென்றும்; உமாதேவியைத் தமயந்தி விவாகத்திற்குச்-செல்லல்வேண்டும் நீயும்வாவென வாய்திறந்துரைக்கின் முனியுமென்று குறிப்பித்தமைதோன்ற, தனதுதாள் பெயர்ப்பவென்றும்; மாற்றவன் வருதற் கொருவருமுடன்படாரென்பதுதோன்ற, அன்னாள் சிறடியெழாமையாலென்றும்: விடத்தையுண்டு தேவரைப்புரந்த வல்லமையுற்றோனாயினுந் தன் மனைவிக்குச் சமாதானஞ்சொல்லிப்போதற் கரிதாய்நின்றனனென்பது தோன்ற, மையணிகண்டத்தோனு மன்றலுக்கெழுந்திலானென்றும்; சொல்லினார். உத்தமநாயகனானவன் தனக்கொருபொருளில் அதிக விழைவிருந்ததாயினும், தலைவிக்கு அதிலே வெறுப்புள்ளதாகத் தோன்றுமாயின் விடுப்பனென்பது கருத்து.

(க-து.) தன்னிலொருபங்காகிய உமையவள்பாதமெழாமையாலே,சிவன் வாராதிருந்தான் எ-ம். 14

உருவுகண்டுவப்பதன்றியோடரித்தடங்கணல்லார்
திருவினுங்குலத்தினானுஞ்செய்கிலரார்வமென்னா
மருவுதன்வடிவின்குற்றமனக்கொளாவயங்குபைம்பொற்
குரைகழலிலங்குநோன்றாட்குபேரனும்வந்திலானே.

[இதனால் குபேரன் வாராமைக்குக் காரணஞ்சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) உருவுகண்டு-அழகுள்ளவடிவத்தைப்பார்த்து, உவப்பதன்றி-மகிழ்வதல்லாமல், ஓடு-ஓடுகின்ற, அரி-செவ்வரிபரந்த,தடம்-விசாலம்பொருந்திய, கண்-கண்களையுடைய, நல்லார்-மங்கையர்கள், திருவினும்-செல்வத்தினாலும், குலத்தினும்-உயர்ந்தகுலத்தினாலும், ஆர்வஞ்செய்கிலரென்று - ஆசைசெய்யமாட்டார்களென்று, தன் வடிவின்-தன்னுடையதேகத்தில், மருவு-பொருந்திய, குற்றம்-குற்றத்தை, மனக்கொளா-மனதிலேகொண்டு, வயங்கு-பிரகாசிக்கின்ற, பைம்பொன் - பசும்பொன்னாற்செய்த, குரை - சத்தம்பொருந்திய, கழல்-வீரக்கழல்கள், இலங்கு-விளங்குகின்ற, நோன்-பொருமைதங்கிய,தாள்-பாதங்களையுடைய, குபேரனும்-குபேரனும், வந்திலான்-வந்திலான் எ-று.

தான் செல்வத்திலுங் குலத்திலு மிக்கவனாயிருப்பினும், மங்கையர் அழகுள்ளவரை விரும்புவதன்றி மற்றையரைவிரும்பாராகையால், தன்வடிவின்குற்றமாகிய ~~கண்ணொன்றில்லாமை~~ குஷ்டரோகத்தை மறைக்கக்கூடாத குற்றமாகையால் அதுகண்டு நம்மை விழையாளென்று குபேரன் வந்திலனென்க.

(க-து.) குபேரன் ~~குருடனாகையால்~~ குஷ்டரோகி, அக்குற்றத்தால் வாராதிருந்தான்.

விரைகமழ்கருவினீழல்விண்ணவரிடத்துமார்வம்
புரிகிலனளன்மேலன்புபூண்டனள்புலம்புகொண்டு

முருகவிழ்ந்நறுமென்கூந்தன்முகிழ்முலைத் துவர்வாய்ப்பேதை
நிருதரைவிழையாளென்ன நிருதியும்போந்திலானே.

[இதனால் நிருதிவாராமைக்குக் காரணஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) விரைகமழ்--வாசங்கமழ்கின்ற, தருவினீழல்-ஐந்தருவினிழலிலி ருக்கின்ற, விண்ணவரிடத்தும்-தேவர்களிடத்தும், ஆர்வம்புரிகிலன்-ஆசை செய்கிலள், நளன்மேல்-நளனிடத்தில், அன்புபூண்டனள்-அன்புவைத்தவளா கி, புலம்புகொண்ட-இரங்குதலைக்கொண்ட - முருகவிழ் - தேனொழுகுகின்ற, நறு-நறிய, மென்கூந்தல்-மெல்லியகுழலையும், முகிழ்முலை-அரும்பையொத்த முலையையும், துவர்வாய் - செவ்வாயையுமுடைய,பேதை-தமயந்தியானவள், நிருதரை-இராக்கதரை, விழையாளென்ன-இச்சிக்கமாட்டாளென்று, நிருதி யும்-நிருதியென்பவனும், போந்திலான் வந்திலன் எ - று.

முன்சொல்லப்பட்ட மூவருக்கு முண்டாகிய தடை இவனுக்கில்லா திரு ந்தும் இவன்வாராதது, அகத்துக்குணம்பல விருப்பினும் மாதராயினோர் முத ற்கண் வடிவழகையே விரும்புவராதலின், அவ்வழகுள்ள இந்திரன்முதலியோ ரை இகழ்ந்து நளனைவிழைந்துள்ள தமயந்தி அரக்கரென்னுங் குலம்பற்றி, மாலைசூட்டாள்; ஆயின்-அதுபெருந்துவரின் அதின்மிக்க அவமானமில்லையெ ன்று தன்பேரறிவாற் குறித்து நிருதிவந்திலனென்க. விவேகிகள் சிறந்ததாயி னும் அவமானப்படுவ காரியத்தைக்குறித்துச் செல்லாரென்பது கருத்து.

(க-து.) தேவர்களை விரும்பாதவள் இராக்கதர்களை விரும்பாளென்று நிருதியும் வாராதிருந்தான் எ-ம். 16

பொன்னகர்புரக்கும்வேந்தும்பொங்கழற்கிறையுமுந்நீர்
மன்னனுந்தறுகட்பேழ்வாம்மறலியுமடமானோக்கி
னன்னுதனளனுக்கன்றிநறுந்தொடைசூட்டளென்
வன்னவனுருவுதாங்கியணிநகர்மேயினாரே.

[இதனால் இந்திரன்முதலிய நால்வரும் வருதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) பொன்னகர்புரக்கும்வேந்தும் - இந்திரனும், பொங்கழற்கிறை யும் - அக்கினிபகவானும், முந்நீர்மன்னனும் - வருணனும், தறுகட்பேழ்வாய் மறலியும்-யமனும், மடமானோக்கின் - இளமான் பார்வையையொத்த பார் வையையுடைய, நன்னுதல் - தமயந்தியானவள், நளனுக்கன்றி-நளனுக்கல் லாமல், நறுந்தொடை-நறியமலர்மாலையை, சூட்டாளென்ன - தரிக்கமாட்டா ளென்று, அன்னவன்-அந்நளனுடைய, உருவுதாங்கி- (வடிவையொத்த)வடி வத்தைக்கொண்டு, அணிநகர்-அழகியநகரத்தில், மேயினார் - பொருந்தினார் கள் எ-று.

தறுகண்-அஞ்சாமை. பேழ்வாய்-பெரியவாய். நியாயமாகத் தம்முடைய பெருமைகளைத் தூதர்கள் மூலத்தில் விரும்பாத தமயந்தியை வஞ்சித்தாவது

பெறல்வேண்டுமென்னுங் கருத்தால், மனிதவடிவங்கொள்ளல் தமக்கிழிவாயி னுமாகுகவென்று துணிந்து, இந்திரன் முதலிய நால்வரும் அந்நளன் வடி வொன்றனையே கொண்டார்களென்க. காமமுள்ளவர்கள் அதன்விஷயத்தில் எதையுஞ் செய்வார்களென்பது கருத்து.

(க-து.) இந்திரன்-அக்கினி-வருணன்-யமன் - இவர்கள் நளனுருக் கொண்டு குண்டினபுரத்திற்கு வந்தார்கள் எ-ம். 17

கூற்றெனக்கொல்லும்வேழங் கொடியணிகொடிஞ்சித்திண்டேர்
பாற்றிரைக்கவரிநெற்றிப்பண்ணமைகலினப்பாய்மா
மாற்றருஞ்சீற்றத்துப்பின் வரிசிலையுழவரீட்ட
நாற்றிசைப்பரப்பும்போர்ப்பநாமவேனளனும்வந்தான்.

[இதனால் நளன்வருதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கூற்றென-யமனென்று சொல்லும்படியாக, கொல்லும்-கொலை செய்கின்ற, வேழம்-யானைகளும், கொடியணி-கொடிகளணிந்த, கொடிஞ்சி-மேன்மொட்டையுடைய, திண்-வலிமைபெற்ற, தேர்-தேர்களும், பால்-பாலி னுடைய, திரை-அலைகள்போன்ற, கவரி-சாமரைகள்கட்டிய, நெற்றி-நெற்றி விளங்கிய, பண்ணமை-நல்லணையமைந்த, கலினம்-கடிவாளமபூண்ட, பாய்-தாவுகின்ற, மா-குதிரைகளும், மாற்றரும்-நீக்குதற்கரிய, சீற்றத்துப்பின்-கோபமிகுந்த, வரிசிலை-நெடியவில்லேந்திய, உழவரீட்டம்-காலாள்கூட்டமும், ஆகிய இந்நால்வகைச்சேனைகளும்) நாற்றிசைப்பரப்பும்-நாலுதிசைகளின்-பரப்பெல்லாம், போர்ப்ப-மூடிக்கொண்டுவர, நாமம்-அச்சத்தைத் தருகின்ற, வேல்-வேற்படைதாங்கிய, நளனும்-நளமஹாராசனும், வந்தான்-வந்தான்எ-று.

இந்திரனமுதலிய தேவர்க ள தமயந்தியை விரும்பிய தன்னைத் தூதாக விடுத்தும் வேறுதூதிகளை யனுப்பியுந் தடைசெய்ததுமன்றி, பின்னுந் தன துருவங்கொண்டு வஞ்சித்தற்கு வருதலையறிந்த நளனைவன் 'இடுக்கணுழைப்பக் கங்காண்பருலவின்றித், தாழாதுஞற்றுபவர்" என்பதால் தாழாது செல்லுந் திறத்தினனாதலின், நளனுடைய உயர்வுசிறப்புவமை சொடுக்கப்பட்டது.

(க-து.) யானைகளும், தேர்களும், குதிரைகளும், காலாள்களும், சூழ்ந்து வர நளமகாராசனும் வந்தான் எ-ம். 18

உலகொருமூன்றினுள்ளவொளிமுடிமன்னரெல்லா
மிலகுபொற்குடிமிவான்றோயெயிற்புறத்திறுத்தாராக
வலகில்வெஞ்சேனைசூழவருபெறற்சுற்றத்தோடும்
விலகிவில்லுமிழும்பைம்பூண்விதப்பர்கோனெதிர்கொண்டானே.

[இதனால் சுயம்வரத்திற்குவந்தவரை வீமன் எதிர்கொள்ளல் சொல்லப் படுகின்றது.]

(இ-ள்.) உலகொருமூன்றினுள்ள-திரிலோகத்திலுமுள்ள, ஒளி-காந்தியை யுடைய, முடிமன்னரெல்லாம் - மகுடத்தையணிந்த அரசர்களெல்லாரும், இலகு-பிரகாசிக்கின்ற, பொற்குடமி-பொன்னலாகிய சிகரம், வான்றோய்-ஆகாயமளாவிய, எயிற்புறத்து-மதிற்புறத்திலே, இறுத்தாராத-தங்கினராக, (அதுகேட்டு) அலகில்-அளவற்ற, வெம்-வெவ்விய, சேனைசூழ-சேனைகள் சூழ்ந்துவர, அருமவெறல்-பெறுதற்கரிய, சுற்றத்தோடும்-கிளைஞருடன், விலங்கு-வீசி, வில்-ஒளியை, உமிழும்-உமிழ்கின்ற, பைம்பூண் - பசிய ஆபரணத்தை யுடைய, விதர்ப்பர்கோன்-வீமராசன், எதிர்கொண்டான்-எதிர் கொண்டனன் எ-று.

பலவித உபசாரங்களினும் எதிர்கொள்ளுதல் முற்பட்டதாதலின், அங்கு வந்த அரசர்களுக்கு வீமராசன் அதனைச்செய்தனனென்க.

(க-து.) திரிபுவனத்தரசர்களும் வந்திருக்கச் சுற்றத்தாரோடு வீமராசன் எதிர்கொண்டு போனன் எ-ம். 19

விரைசெறியலங்கன்மாலைவிண்ணவர்விஞ்சைமன்ன
ருருகெழுமுரகவேந்தரோங்குநீருடுத்தஞாலத்
தரசிளங்குமரரோடுமளவளாய்முகமன்கூறி
வரிசையின்வழாமைநோக்கிவான்சிறப்பியற்றினனே.

[இதனால்வீமன் அவர்களுக்குச்சிறப்புச் செய்தல்சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) விரைசெறி-வாசமிகுந்த, அலங்கன்மாலை-மலர்மாலையையணிந்த விண்ணவர்-தேவர்கள், விஞ்சைமன்னர்-வித்தியாதரவேந்தர், உருகெழும்-வடிவுள்ள, உரகவேந்தர்-நாகவேந்தர், ஓங்கு-உயர்ந்த, நீருடுத்தஞாலத்து-கடலாற் சூழப்பட்ட பூமியிலுள்ள, அரசிளங்குமரரோடும்-இராசகுமாரரோடும், அளவளாய்-கலந்து, முகமன்கூறி-உபசாரவார்த்தைகளைச்சொல்லி, வரிசையின்-கிரமத்தினில், வழாமை-தப்பாமல், நோக்கி-ஆலோசித்து, வான்-மேலாகிய, சிறப்பு-சிறப்பை, இயற்றினன்-செய்தான் எ-று.

தன்னின்மிக்கோர்க்குச் செய்யும் எழுவகைமரியாதைகளுள்-பிரியினுடங்குசேறல் ஒழித்து ஏனைய இருப்பெழுகை-விரைந்துபோதல்-எதிர்கொள்கை என்னுமூன்று முற்பாட்டிலும், தவிசினிடையிருத்தல்-பூசை செய்தல்-இன்சொலாதியா லுவப்புக்செயல்-என்னு மூன்று மிப்பாட்டிலும் அடங்குதல் காண்க.

(க-து.) தேவர்கள்-வித்தியாதரர்-நாகலோகத்தரசர்-பூவுலகத்தரசர்-இவர்களுக்கு வீமராசன் முறைப்படி சிறப்புச் செய்தான் எ-ம். 20

தோட்டலர்மாலைநாற்றித்துறக்கமோடுறழச்செய்த
வீட்டகந்தோறும்பைம்பொன்விளங்கிழைகெவ்விவாய்ப்பத்
தீட்டியவுருவுநோக்கித்தேறல்கொப்புளித்துமாந்தும்
பாட்டளித்தாமவேந்தர்பகற்பொழுதாற்றினரே.

[இதனால் அரசர்கள் பகற்பொழுது போக்கல் சொல்லப்படுகின்றது:]

(இ-ள்.) தோடு-இதழ்களையுடைய, அலர்-மலராற்றொடுத்த, மாலை-மாலைகளை, நாற்றி-தொங்கக்கட்டி, தூரக்கயோடு-தெய்வலோகத்துடனே, உறழ்-ஒக்கும்படி, செய்த-செய்யப்பெற்ற, வீட்டகந்தோறும்-வீடுகளினிடந்தோறும், பைம்பொன்-பசியபொன்னினால், விளங்கிழை-தமயந்தியினது, செவ்விவாய்ப்ப-அழகுபொருந்த-தீட்டிய-எழுதிய, உருவுநோக்கி-பதுமைகளின் வடிவங்களைப்பார்த்து, தேறல்-தேனை, கொப்புளித்து-கொப்புளித்து, மாந்தும்-உண்ணுகின்ற, பாட்டு-இசைகளைப்பாடுகின்ற, அளி-வண்டுகள்மொய்த்த, தாமவேந்தர்-மாலையையணிந்தவரசர்கள், பகற்பொழுது-பகற்காலத்தில், ஆற்றினார்-காமநோயைப்பொறுத்திருந்தார்கள் எ-று.

ஒப்புமைநோக்கல்-சிந்திரந்தீட்டல் - கனவிற்காண்டல் - அவர்மெய்யுற்றதைத் தீண்டல்-இந்நான்குங் காமநோய்க்குப் பரிகாரமாம். "கூடும்பிரிவினிலுங் கூடாப்பிரிவினிலு, மோடுமென்பர்நேர்காட்சி யோவியந்தி-னூடல், கனவவர்மெய்ப் பூண்டவற்றைத் தீண்டலென்பர்காமத், தினையுமவர்க்குற்ற மருந்தே" என்பதனாலறிக. கூடும்பிரிவு-ஒருநிமித்தம்பற்றிப் பிரிதல். கூடாப்பிரிவு-இறத்தல். இது வடநூலிற்கண்டுமொழிபெயர்க்கப்பட்டது. விளங்கிழைசெவ்விவாய்ப்பத்தீட்டியுவுரு-என்பதற்கு, பிரகாசிக்கின்ற ஆபரணங்கள் அழகுபொருந்த எழுதப்பட்ட சித்திரமென்பாருமுளர். [விளங்கிழை செவ்விவாய்ப்பவென உவமானமாகிய தீட்டிய உருவங்களை உவமேயமாகக் கூறலால், எதிர்நிலை யணியாம்.]

(க-து.) சுவர்க்கத்திற் கொப்பாகிய வீடுகளினிடங்கள்தோறும் எழுதப்பட்ட தமயந்தி திருவுருவத்தை அரசர்கள்பார்த்துப் பகற்பொழுதுபோக்கிக் காமத்தைப் பொருந்திருந்தார்கள் எ-ம். 21

சேயுயர்விசும்பிற்றேவர்தெண்டிரைப்பரவைசூழ்ந்த
மாயிருஞாலங்காக்குமன்னவருரகருற்ற
காயழற்காமவெந்தீக்கனற்றுமென்றஞ்சினான்போற்
பாயிருளுலகம்போர்ப்பப்பகல்செய்வான்கடலுளாழ்ந்தான்.

[இதனால் சூரியாஸ்தமயஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) சேயுயர்-மிகவுமுயர்ந்த, விசும்பில் - தெய்வலோகத்திலிருக்கும், தேவர்-தேவர்களும், தெண்டிரைப்பரவைசூழ்ந்த-தெள்ளிய அலைகளையுடைய கடலாற்சூழப்பெற்ற, மாயிருஞாலங்காக்கும்-மகத்தாகிய பெரியபூமியைப்புரக்கின்ற, மன்னவர்-அரசர்களும், உரகர்-நாகவேந்தர்களும், உற்ற-(ஆகிய இவர்க) ளடைந்த, காய்-சுடுகின்ற, அழல்-வெப்பம்பொருந்திய, காமவெந்தீ-காமாக்கினி, கனற்றுமென்று-தன்னைச்சுடுமென்று, அஞ்சினான்போல்-பயந்தவன்போல், பாய்-பரவிய, இருள்-இருளானது, உலகம்போர்ப்ப-உலகத்தைமூடிக்கொள்ள, பகல்செய்வான்-சூரியனானவன, கடலுள்-மேற்றிசைக்கடலுள், ஆழ்ந்தான்-அழுந்தினான் எ-று.

வெப்பத்தையுடைய சூரியனையும் அஞ்சச்செய்தலால், காமத்தீ அவனி லுமிக்கதென்பது கருத்து. [அஞ்சினன்போலெனக் குறித்தலால், தற்குறிப் பணியாம்.]

(க-து.) தேவர்களும் - அரசர்களும்-நாகவேந்தர்களும் - அடைந்தகாமாக் கினி தன்னைச்சுடுமென்று சூரியன் அஸ்தமனமாயினன் எ-ம். 22

விரிகதிர்மௌலிவிண்ணோர்மெய்யொளிபரத்தலானு
மரசிளங்குமரர்மார்பிலணிவெயிலுமிழ்தலானு
முரகர்தஞ்சுடிகையுச்சியொளிர்மணியிமைத்தலானும்
பரிதிமேற்கடலுளாழ்ந்தும்பாயிருள்பரந்ததின்றே.

[இதனால் இருள்பரவாமைக்குக் காரணஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) விரி-விரியப்பெற்ற, கதிர்-கிரணங்களுடைய, மௌலி-மகுடங் களைத்தரித்த, விண்ணோர்-தேவர்களின், மெய்யொளி-தேககாந்திகள், பரத்த லானும், அரசிளங்குமரர்மார்பில்-இராசகுமாரர்கள்மார்பிலிருக்கும், அணி-ஆப ரணங்கள், வெயில் ஒளியை, உமிழ்தலானும்-கொப்புளித்தலானும், உரகர்-நாக வரசர்களுடைய, சுடிகையுச்சி-முடியின்மேல், ஒளிர்-விளங்குகின்ற, மணி- இரத்தினங்கள், இமைத்தலானும்-பிரகாசித்தலானும், பரிதி-சூரியனானவன், மேற்கடலுளாழ்ந்தும்-மேற்கடலுளழுந்தியும், பாய்-பாய்கின்ற, இருள்-இரு ளானது, பரந்ததின்று-பரந்ததில்லை எ-று.

மெய்யொளிபரத்தல் - அணிவெயிலுமிழ்தல்-ஒளர்மணியிமைத்தல்-ஆகிய பிரகாசங்கள் சூரியன் பிரகாசித்தல்போலிருந்தனவென்பது கருத்து. [மெய் யணிமணிகளை இருள்பரவாமைக்குக் காரணமாகச் சொல்லப்பட்டமையால், கூட்டவணியாம்.]

(க-து.) தேவர்கள் சரீரகாந்தியாலும், அரசர்கள்மார்பினுபரணங்களா லும்,நாகவேந்தர்கள் சிரோரத்தினங்களாலும், சூரியன்மறைந்தும் இருள்தோ ற்றவில்லை எ-ம். 23

மையவாங்கரியகூந்தல்வாள்கிடந்தனையவுண்கட்
பையரவல்குற்செவ்வாய்ப்பனிமொழிவதுவைவேட்டு
வெய்யசெங்கதிரினோடும்வெண்மதியுறைதறன்று
லெப்துமிக்காலந்தன்னையிரவென்கோபகலென்கேனோ

[இதனால் இரவுபகல் தோன்றாமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மை-அஞ்சனமானது, அவாம்-விரும்புகின்ற, கரியகூந்தல்-கரு மையுள்ளகூந்தலையும், வாள்கிடந்தனைய-வாள்கிடந்ததையொத்த, உண்கண்- மையுண்டகண்களையும், பையரவல்குல்-அராப்படம்போன்றவல்குலையும்,செ வ்வாய்-சிவந்தவாயையும், பனிமொழி-குளிர்ச்சிபொருந்தியசொல்லையுமுடைய

தமயந்தியினது, வதுவைவேட்டு-விவேகத்தைவிரும்பி, வெய்ய-வெவ்விய, செங்கதிரினோடும்-சூரியனோடும், வெண்மதி-சந்திரன், உறைதறன்றல்-(அந்நகரத்தில்) தங்குகின்றபடியால், எய்தும்-பொருந்திய, இக்காலந்தன்னை-இக்காலத்தை இரவென்கோ - இரவென்றுசொல்லுவேனோ, பகலென்றுசொல்லுவேனோ (இன்னதென்று சொல்லேன்) எ-று.

(க-து.) தமயந்திகலியாணத்தை விரும்பிவந்த சூரியனுஞ் சந்திரனும்அந்நகரத்தில் வாசம்பண்ணலால், இரவென்று சொல்வேனோ பகலென்று சொல்வேனோ எ-ம். 24

தகைமலர்த்தெரியல்வேந்தர்தளர்ந்துமெய்பதைத்துவாடப்
புதையிருட்போர்வைமெய்யிற்பொலிவுறப்போர்த்துவெய்ய
கதழெரிச்செக்கர்ப்பேழ்வாய்திறந்துவெண்கதிர்குலாய
மதிவகிரெயிறுதோன்றவந்ததுமாலைக்கூற்றம்.

[இதனால் மாலைப்பொழுதின் வரவு சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) தகை-நெருங்கிய, மலர்த்தெரியல்-மலர்மாலையையணிந்த, வேந்தர்-அரசர்கள், தளர்ந்து-தளர்ச்சியடைந்து, மெய்பதைத்து-தேகம் பதைத்து, வாட-வாடும்படி, புதை-உலகத்தைமூடுகின்ற, இருட்போர்வை-இருளாகிய போர்வையை, மெயலில்-தனதுடம்பில், பொலிவுற-விளக்கமிக, போர்த்து போர்த்துக்கொண்டு, வெய்ய-கொடிய, கதழ்-வேகத்தையுடைய, எரி-நெருப்பையொத்த, செக்கர்-செவ்வானமாகிய, பேழ்வாய்திறந்து-பெரிய வாயைத்திறந்து, வெண்கதிர்-வெள்ளியகிரணங்கள், குலாய-விளங்கப்பெற்ற, மதி-சந்திரனாகிய, வகிர்-பிளப்பையுடைய, எயிறு-கோரப்பல்லானது, தோன்ற தோன்றும்படி, மாலை-மாலைப்பொழுதாகிய, கூற்றம்-இயமனானவன், வந்தது-வந்தான் எ-று.

மாலைப்பொழுதானது விரகிகளைக் கொல்லப்பட்டதாகலின் அதற்கேற்க, அதைக்கூற்றுவனாக உருவகஞ் செய்தார். ஆதலால்-அக்கூற்றுவனதான்கொல்வதேயன்றி, தன்போர்வையான்மறைத்தும்-வாயால்விழுங்கியும்-பல்லாற்கறித்தும்-கொல்லானென்பதாயிற்று. [இது சிறப்புடையுருவகவணி.]

(க-து.) அரசர்கள் வாடும்படி மாலைக்காலமாகிய இயமனானவன் இருட்போர்வை போர்த்து, செவ்வானமாகிய வாயைத்திறந்து, சந்திரனாகிய வக்கிரதந்தந் தோன்றும்படிவந்தான் எ-ம். 25

விரிகதிர்பரப்பிவானமீதெழுகுழவித்திங்க
ளெரிமணிப்பூண்செய்திண்டோளெழுபுவிவேந்தர்மேலும்
வரிசிலைகுழையவாங்கிமண்டமர்தொடங்குமாரன்
குரைகடனமுரசமெற்றுங்குணிலெனச்சிறந்ததன்றே.

[இதுமுதல் எழுபாட்டுகளால் வளர்பிறையின்றோற்றஞ் சொல்லப்படு கின்றது.

(இ-ள்.) விரிகதிர்-விரிந்தகிரணங்களை, பரப்பி-பரவச்செய்து, வானமீது-ஆகாயத்தில், எழு-எழுந்த, குழவித்திங்கள்-இளம்பிறை, எரி - விளங்குகின்ற, மணி-இரத்நங்கள்பதித்த, பூண்செய்-ஆபரணங்களையணிந்த, திண்டோள்-வலிமையுள்ளதோளையுடைய எழுபுவிவேந்தர் மேலும்-எழுதீவிலுள்ள அரசர்கள் மேலும், வரி-நெடிய, சிலை-வில்லை,குழையவாங்கி-வளையவளைத்து,மண்டு-நெருங்கிய, அமர்-போரை, தொடங்குமாரன்-ஆரம்பிக்குமன்மதனது, குரை-ஒலிக்கின்ற, கடன்முரசம்-கடலாகிய பேரிகையை, எற்றும்-அடிக்கின்ற,குணிலென-குறுந்தடிபோல், சிறந்தது-சிறந்திருந்தது எ-று.

அழகிற்சிறந்த தமயந்தியை விழைந்துவந்த அரசர்களனைவரும் அவ்விரவில் அளவற்ற காமவருத்தத்தையடைவதற்கு மன்மதன் காரணமாதலால், இதுகாறும் போலன்றி அதிகமுயற்சியோடு படையெடுத்து வருவதற்குக்குறியாக, அக்காலத்தில் ஒலிக்குங்கடலை முரசமாக்கி-அங்கணுண்டாகிய பிறையை அதை எற்றுங்குணிலாகக் கூறினரென்க.

(இ-ள்.) வானிலுதயமான இளம்பிறையானது மன்மதனது கடலாகிய முரசுக்குக்குறுந்தடி போலிருந்தது எ-ம். 26

ஏர்குடியிருந்தநங்கையிளமுலைப்போகம்வேட்ட
நீர்மலிகடலந்தானைநெடுநிலவேந்தர்தம்மேல்
வார்சிலைத்தடக்கைமாரன்மண்டமர்புரியத்தூண்டுங்
கூரிருள்வேழக்கோட்டினெழுந்ததுகுழவித்திங்கள்.

(இ-ள்.) குழவித்திங்கள்-இளம்பிறையானது, ஏர் - அழகுகளானவை, குடியிருந்த - ஒருங்குபடத்தங்கி யிருக்கப்பெற்ற, நங்கை-தமயந்தியினது, இளம்-இளமையாகிய, முலை-ஸ்தனங்களின், போகம்-அணைதலை, வேட்ட-விரும்பிய, நீர்மலி-நீர்மிகுந்த, கடல்-கடலாகிய, அம்-அழகிய, தானை-நுடையையுடைய, நெடுநிலம்-நெடியபூமியிலுள்ள, வேந்தர்தம்மேல்-அரசர்கள்மீது, வார்சிலை-நீண்டவில்லையேந்திய, தடக்கை - விசாலமாகிய கையையுடைய, மாரன்-மன்மதன், மண்டமர்புரிய-நெருங்கியயுத்தத்தைச் செய்ய, தூண்டும்-நடத்தப்பட்ட, கூரிருள்-மிகுந்தவிருளாகிய,வேழம்-யானையினது, கோட்டின்-கொம்புபோல, எழுந்தது-உதித்தது எ-று.

கீழ்த்திசைத் தோன்றிவரும் இருளை அக்காலத்தில் வருமன்மதனது யானையாகக்கூறி, மேற்றிசைத்தோன்றிய பிறையையும் அதற்குக்கொம்பாகச் சொல்லப்பட்டது. இதனால் இவ்விரண்டுங் காமனைப்போலும் விரகிகளுக்குக் காமத்தைவிளைத்து வருத்துமென்பது கருத்து. [இருளைவேழமெனலால்,உருவகவணியும்; கோட்டினெழுந்ததெனலால் தற்குறிப்பணியுமாம்.] இது முன்னுருவகத்தை அங்கமாகக் கொண்டது.

(க-து.) இளம்பிறையானது தமயந்தியைவிரும்பிய அரசர்கள் மேல் மதன்போர்செய்ய கடத்தப்பட்ட இருளாகிய யானையின் கோட்டைப்போலு மிருந்தது எ-ம். 27

கள்ளுயிர்த்தினவண்டார்க்குங்கமலம்வாய்முகிழ்ப்பச்செய்ய
வள்ளலங்கயத்துளாம்பலலர்த்தியகுழவித்திங்க
டெள்ளுசெங்கதிரோன்மாலைத்தெரிவைவெம்முலையிற் கோட்டு
வள்ளுகிர்க்குறியிற்றோன்றிப்பொலிவுறவயங்கிற்றன்றே. [ட

(இ-ள்.) கள்-தேனை, உயிர்த்து-தந்து, இனம்-கூட்டமாகிய, வண்டு-வண்டுகள், ஆர்க்கும்-ஒலிக்கின்ற, கமலம்-தாமரைமலர்கள், வாய் முகிழ்ப்ப-குவிய, செய்ய-சிவந்த, அள்ளல்-குழைச்சேற்றையுடைய, அம்-அழகிய, கயத்துள்-தடாகத்துள், ஆம்பல்-அல்லிகளை, அலர்த்திய-மலரச்செய்த, குழவித்திங்கள்-இளம்பிறையானது, தெள்ளு-தெளிந்த, செங்கதிரோன்-சிவந்தகதிரையுடையசூரியனுனவனை, மாலை-மாலைப்பொழுதாகி தெரிவை-மங்கையினுடைய வெம்முலையில்-விருப்பத்தைச்செய்யுங் கொங்கைகளில், கோட்டும்-ஊன்றிய வள்-கூரிய, உகிர்க் குறியின்-நகக்குறியைப்போல, தோன்றி-உண்டாய், பொலிவுற-அழகுபொருந்த, வயங்கிற்று-விளங்கிற்று எ-று.

சூரியனோடுகூடிப் பிரிந்துநின்ற மாலைப்பொழுதில் காணப்படுகின்ற பிறையினை அவன்செய்த நகக்குறியாகக் கூறினர், புணருமிடத்து நகக்குறியுண்டாதலால். "பற்குறிநகக்குறிகள்பாணிகொடுதட்ட,னற்கமிழ்துதுயத்தல்களி நன்பெறழவணைத்த, லற்குகரணங்களறியாரு மாளிதாகக், கற்கும்வகைநின்றன கதிர்த்தமணியோவாம்." இதனாலறிக. [மாலைப்பொழுதி லுண்டாகிய பறியினிச் சூரியனோடு கூடிப்பிரிந்த மாலைப்பெண் முலைக்குறியாகக் கூறித்தலால், தற்குறிப்பணியாம்.[

(க-து.) தாமரை மலர்கள்குவிய அல்லிமலர்களை மலரச்செய்த இளம்பிறையானது, சூரியனுனவன் மாலைக்காலமாகிய மங்கையின்கொங்கைகளில் அழுந்திய நகக்குறிபோலிருந்தது எ-ம். 28

சேட்டிளம்பரிதிவார்பினளனுக்குத்தெரியனோச்
சூட்டுவடெறிவையென்னத்துலங்குகீட்டிசைமாதன்பிற்
காட்டியநிருத்தக்கையிற்கதிர்நிலவுமுந்தண்ணென்
கோட்டிளங்குழவித்திங்கள்குடபுலத்தெழுந்ததன்றே.

(இ-ள்.) சேட்டிளம்-மிகுந்தவிளமையையுடைய, பரிதி - சூரியன்போன்ற, மார்பின்-மார்பினிடத்தில், நளனுக்கு-நளமகாராஜனுக்கு, நாளை-நாளைப்பொழுதில், தெரிவை - தமயந்தியானவள், தெரியல்சூட்டுவளென்ன - மாலையைத்தரிப்பாளென்று, துலங்கு-விளங்குகின்ற, கீட்டிசைமாது-கிழக்குத்திக்காகிய மங்கையானவள், அன்பின்-அன்பினாலே, காட்டிய - காட்டப்பட்ட, நிருத்தக் கையில்-அபிநயக்கைபோல், கதிர்-கதிர்களாகிய, நிலவுமிழும்-ஒளியைக்கொப்

புளிக்கின்ற, தண்ணென் - குளிர்ச்சிபொருந்திய, கோடு-வளைந்த, இளங்குழவித்திங்கள்-மிகுந்தவிளமைபொருந்தியபிறையானது, குடபுலத்து-மேற்குத்திசையில், எழுந்தது-உதயமாயிற்று எ-று.

"நான்கொடுமூன்றென்ப தாயிமுயிரின்பின்பு னவ்வருமேல், என்றநகாரமதாம்பதினேந்திஞே டெண்ணிரண்டாய்த், தோன்றமுடற்பின் றகரம்வரிலிரண்டும்மொருக்கால்,ஆன்றவைந்தாமுடலாமுன்பிலொற்றுக் கழிவுமுண்டே."
இவ்விதியால் ழகரமும் தகரமும்டகரமாயின. நாடகக்கணிகையர்தமது கருத்தினுள்ளதை அபினயத்தால் அபிமுகத்தில் காட்டுவயல்பாமென்க. [பிறையில் நிருத்தக்கையைக் குறித்தமையால், தற்குறிப்பணியாம்.]

(க-து.) நளனுக்கு நாளையதினம் தமயந்தி மாலைசூட்டுவாளென்று கீழ்த்திசைமாதானவள் காட்டப்பட்ட அபிநயத்தைப்போல் இளம்பிறை மேற்குத்திசையில் உதித்தது எ-ம். 29

கூன்பயின்குழவித்திங்கள்கொள்ளைவண்டிருந்துபாடக்
கான்பயின்மலரம்பேந்துங்கன்னலஞ்சிலைக்கைவேட
னூன்பயில்குருதிவேற்கணொண்ணுதன்மடவாருள்ள
மீன்கவர்தூண்டிலென்னவிசும்பிடைவிளங்கிற்றன்றே.

(இ-ள்.) கூன்பயில் - வளைவுபொருந்திய, குழவித்தங்கள்-இளம்பிறையானது, கொள்ளை - மிகுதியாக வண்டிருந்து - வண்டுகளிருந்து, பாட-பாடலைச்செய்ய, கான்பயில்-வாசம்பொருந்திய, மலரம்பேந்தும்-மலர்க்கணைகளையேந்திய, கன்னலஞ்சிலைக்கைவேடன்-மன்மதனது, ஊன்பயில்-தசைபொருந்திய, குருதி-உதிரந்தோய்ந்த, வேற்கண் - வேல்போன்றகண்களையும், ஒண்ணுதல்-ஒளிபொருந்திய நெற்றியையுமுடைய, மடவார்-மாதரது, உள்ளம்-மனமாகிய மீன்-மீனை, கவர்-கிரிகிப்பதற்குப் போடப்பட்ட, தூண்டிலென்ன-தூண்டிலைபோல், விசும்பிடை-ஆகாயத்தினிடத்து, விளங்கிற்று-பிரகாசித்தது எ-று.

மாமிசத்தை விரும்பிப்பற்றிய மீன்களைத்தூண்டில் இறக்கும்படிசெய்வதுபோல, இப்பிறையும் காமவிடாய்தீர்த் தன்னைப்பார்க்கின்ற காமுகரை வருத்துவதாதலின்; இவ்வாறு கூறினர். [பிறையைத் தூண்டின்முள்ளாகக் குறித்தமையால், தற்குறிப்பணியாம்.]

(க-து.) இளம்பிறை உதயமானது, மன்மதன் மாதர்கள்மனமாகிய மீனைக்கிரிகிக்கப்போடப்பட்ட தூண்டிலைப்போலிருந்தது எ-ம். 30

நீனிறத்தங்கண்வானைநீள்கடற்பரப்பிற்றாய
வானிலாக்கதிர்கள்வீசிவயின்வயின்விளங்குகின்ற
மீனெனுங்கதிர்கொண்முத்தவெண்மணியுபிர்த்துத்தோன்றுங்
கூன்முதுகிப்பிவென்னவெழுந்ததுகுழவித்திங்கள்.

(இ-ள்.) குழவித்திங்கள் - இளம்பிறையானது, நீனிறத்து-நீலநிறம்பொருந்திய, அங்கண்-அழகிய இடத்தையுடைய வானம்-ஆகாயமாகிய, நீள்-நீண்ட கடற்பரப்பில் - கடலினது பரப்பிலே, தூய-பரிசுத்தமாகிய, வால்-வெள்ளிய, நிலாக்கதிர்கள்-பிரகாசத்தையுடைய கிரணங்களை, வீசி-எறிந்து, வயின்வயின்-இடங்கள்தோறும், விளங்குகின்ற-பிரகாசிக்கின்ற, மீனெனும்-மீனென்கின்ற கதிர்கொள்-கிரணங்களைக்கொண்ட, முத்தவெண்மணி-வெள்ளியமுத்துக்களை உயிர்த்து-ஈன்று, தோன்றும்-விளங்கும், கூன்முதுகிப்பியென்ன-வளைந்தமுதுகையுடைய இப்பியைப்போல், எழுந்தது-எழுந்தது, எ-று.

[மீனெனுமுத்த மெனலால், உருவகவணியும்; கூன்முதுகிப்பியென்ன வெனலால், தற்குறிப்பணியுமாம்.]

(க-து.) நட்சத்திரங்களோடு உதயமான இளம்பிறையானது முத்துக்களையீன்ற இப்பிகளைப்போலிருந்தது எ-ம். 31

ஓங்குயர்விசும்புபூத்தவுடுப்புகர்முகத்ததாய
வாங்குவிற்றடைக்குமாரன்மலர்தலையுலகிற் றாண்டுந்
தூங்கிருட்களிநல்யானைதுரந்திடுந்தோட்டிபோலத்
தீங்கதிர்க்குழவித்திங்கள் சேணிடைத்திகழ்ந்ததன்றே.

(இ-ள்.) தீங்கதிர்-தித்திப்புப்பொருந்திய கிரணங்களையுடைய, குழவித்திங்கள்-இளம்பிறையானது: வாங்கு-வளைக்கப்பட்ட, வில்-கரும்புவில்லேந்திய பிடக்கை-விசாலம்பொருந்திய கையையுடைய, மாரன்-மன்மதனானவன், மலர்தலையுலகில்-பரந்தஇடத்தையுடைய வுலகத்தில், தூண்டும்-செலுத்துகின்ற, ஓங்குயர்-மிகவுமுயர்ந்த, விசும்பு-ஆகாயத்தில், பூத்த-உண்டாகிய, உடு-தாரகைகளாகிய, புகர்முகத்தாய்-புள்ளிபெற்ற முகத்தையுடையதாகிய, தூங்கு-தங்கிய இருள்-இருளாகிய களிநல்யானை-களிப்பையுடைய நல்லயானையை, துரத்திடும்-ஓட்டும், தோட்டிபோல்-அங்குசம்போல், சேணிடை-ஆகாயத்தினிடத்து, திகழ்ந்தது-பிரகாசித்தது எ-று.

[இதுவும் அவ்வணி.]

(க-து.) இளம்பிறைத்தோற்றமானது மன்மதன் செலுத்தும் இருளாகிய யானையையோட்டும் அங்குசம்போலிருந்தது எ-ம். 32

பிள்ளைமாமதியங்கான் றநிலவழற்பிழம்புபற்ற
வுள்ளநெக்குருகிமாழாந்துலம்பொருகரத்தின்மோடா
ளள்ளிலையடிவேலேந்துமரசிளங்குமரர்பூண்ட
தள்ளருங்காதலெம்மாற்சாற்றலாந்தகைமைத்தன்றே

[இதுமுதல் இரண்டுபாட்டுகளால் கூவிக்கூற்று சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) பிள்ளைமாமதியம்-இளம்பிறையானது, கான்ற-வீசிய, நிலவு-சந்திரிகையாகிய, அழற்பிழம்பு-அக்கினித்திரட்சியானது, பற்ற-பிடிக்க, (அந்

ஞல்) உள்ளம்-மனமானது, நெக்குருகி-மிகவுமுருகி, மாழாந்து-மயங்கி, உலம் பொரு-திரள்கல்லையொத்த, வைரத்திண்டோள்-வச்சிரம் போன்ற திண்ணிய தோளையுடைய; அள்ளிலை-தசையையள்ளிக் கொள்ளுகின்ற, இலையையுடைய, வடிவேலேந்தும்-வடித்தவேலையேந்துகின்ற, அரசிளங்குமரர் - இராசகுமாரர்கள், பூண்ட-அடைந்த, தள்ளருங்காதல்-தள்ளுதற்கரிய ஆசை, எம்மால்-எம்மால், சாற்றலாம்-சொல்லலாமாகிய, தகைமைத்தன்று - தகைமையுடையதன்று எ-று.

காமமானது எப்படிப்பட்டவர்களாலும் விலக்குதற்கரிதாகையால், தள்ளருங்காதலென்றார்.

(க-ரு.) இளம்பிறைக் கனலினால் அரசர்கள் மனமுருகியடைந்த காதலை எம்மாற் சொல்லக்கூடுமோ என்றார் புராணிகர் எ-ம். 33

ஏற்றுரிமுரசந்துஞ்சாவிதர்ப்பர்கோனினிதினீன்ற
போற்றொடிவதுவைவேட்டுக்கூரிருட்கங்குற்போதிற்
றூற்றிளம்பூகவேலித்தண்பணைநிடதங்காக்கு
மாற்றல்சானளனுக்குற்றவருந்துயருரைக்கலுற்றாம்.

(இ-ள்.) ஏற்றுரி-இடத்தின்றோலாற்செய்த, முரசம்-பேரிகையானது, துஞ்சா-உறங்காதவாயிலையுடைய, விதர்ப்பர்கோன்-வீமன், இனிதினீன்ற-இனிமையினாற்பெற்ற, கோற்றொடி-தமயந்தியினது, வதுவை வேட்டு-விவாகத்தைவிரும்பி, கூரிருள்-மிகுந்தவிருளையுடைய, கங்குற்போதில் - இராப்பொழுதில், தாறு-குலைகளையுடைய, இளம்பூகவேலி இளமை பொருந்திய கமுகவேலிசூழ்ந்த, தண்-குளிர்ச்சிபொருந்திய, பணை-வயல்களையுடைய, நிடதங்காக்கும்-நிடதேசத்தைப்புரக்கின்ற, ஆற்றல்சால்-பொறுமைமிக்க, நளனுக்கு-நளமகாராசனுக்கு, உற்ற-பொருந்திய, அருந்துயர் - பொறுத்தற்கரிய துயரை, உரைக்கலுற்றாம்-சொல்லத்தொடங்கினோம் எ-று.

பொறுமைமிக்க நளனும் பொறுத்தற்கரிய துயரென்றது, அதன் அருமையைக் குறிப்பித்து நின்றது.

(க-ரு.) தமயந்தியின் விவாகத்தை விரும்பி நளனுக்குப்பொருந்திய துன்பத்தைச் சொல்லத் தொடங்கினோம் எ-ம். 34

கலிவிருத்தம்.

பனிமைமங்கடலிற்படுமோரமிர்தோ
டினிதிற்றிருவோடுமெழுந்தனையென்
மனனுற்றவள்வாணுதல்போலுதியாற்
கனலத்தகுமோகலைவெண்மதியே.

[இத்துல் நளன்பிறையைவெறுத்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கலை-கலையையுடைய, வெண்மதியே-வெள்ளியசந்திரனே, பனி-குளிர்ச்சிபொருந்திய, மை-கரிய, கடலிற்படும்-கடலிற்றோன்றிய, ஆர்-நிறைந்த, அமிர்தோடு-அமிர்தத்துடன், இனிதின்-இனிமையுடைய, திருவோடும்-இலக்குமியுடன், எழுந்தனை-தோன்றினாய், என்மனனுற்றவள்-என் மனத்திலிருப்பவளாகிய தமயந்தியினது, வாள்-ஒளிபொருந்திய, நுதல்போலுதியால்-நெற்றிபோலிருக்கின்றாய, கனலத்தகுமோ-(நீ) என்னைச்சுடத்தகுமா எ-று.

நீதோன்றிய இடத்தின் குணத்தையும் உடன்பிறந்தோர் தன்மையையும் உணராவிடினும், தமயந்தியினது நிகரில்லாதநெற்றிக்கு நிகரானாய்; இப்பொழுது அதற்குரிய மகிழ்ச்சிசெய்வதைவிட்டு வெப்பஞ்செய்யின், அப்பெருமை உனக்குத்தகாதென்பது கருத்து.

(க-து.) கலைகளையுடைய சந்திரனே - அமிர்தத்தினோடும் இலக்குமியோடும் பிறந்தாய், தமயந்தி நெற்றிபோலிருக்கின்றாய், என்னைசுடத்தகுமா என்றான் நளன் எ-ம்.

கொந்தார்குவளைக் குளிர்மென்மலரிற்
பைந்தாதுதுதைந்து படிந்துநறுஞ்
சந்தாடவியூடுதவழ்ந்துவரு
மந்தாநிலமேயுயிர்வௌவுதியோ.

[இதனால் தென்றலைவெறுத்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கொந்தார்-திரளாகநிறையப்பெற்ற, குவளை-உற்பலத்தினது, குளிர்-குளிர்ச்சிபொருந்திய, மென்மலரில்-மெல்லியமலர்களிலிருக்கும், பைந்தாது பசியமகரந்தங்களில், துதைந்து-நெருங்கி, படிந்து-முழுகி, நறும்-நறிய, சந்தாடவியூடு-சந்தனக்காட்டினிடத்தில், தவழ்ந்துவரும-தவழ்ந்துவருகின்ற, மந்தாநிலமே-இளந்தென்றலே, (நீ) உயிர்-என்னுயிரை, வௌவுதியோ-அபகரிக்கின்றனையோ எ-று.

தென்றலுக்குக் குளிர்ச்சியும்-மணமும்-மென்மையும்-சிறந்தனவாயினும் பிரிந்தவரைவருத்துதலால் இவ்வாறு கூறினான், [இக்கருத்தைக் கொண்டமையால், கருத்துடை யடை காளியணியாம்.

(க-து.) தென்றற்காற்றே - என்னுயிரைக்கிரிகிக்கின்றாயோ என்றான் நளன எ-ம்.



அயல்வானிதுரந்தடல்வேள்பொரலாற்
செயலேதுமிலாதுதிகைத்தயர்வே
னுயிர்போல்பவளின்சொலுணர்த்திவரிக்
குயிலேயெனதாருயிர்கொல்லுதியோ.

[இதனாற் குயிலை வெறுத்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) அடல்-கொலைசெய்கின்ற, வேள்-மன்மதனுனவன், அயில்-கூர்மைபொருந்திய, வாளி-அம்புகளை, தூரந்து-செலுத்தி பொரலால்-பொருதலால், செயலேதுமிலாது-ஒருசெய்கையுமில்லாமல், திகைத்து-மயங்கி, அயர்வேன்-வருந்துவேனுகிய எனது, உயிர்போல்பவள்-உயிரையொப்பவளாகிய தமயந்தியினது, இன்சொல்-இனியமொழியை, உணர்த்தி-அறிவித்து, வரிக்குயிலே-இசையையுடையகுயிலே, எனது-என்னுடைய, ஆர்-நிறைந்த, உயிர்-உயிரை, கொல்லுதியோ-கொல்லுகின்றனையோ எ-று.

ஒருவரோடுபொருது இளைத்தவரை வேறொருவன் வெல்லவருவது தகாதென்பது கருத்து. இவ்விரண்டுபாட்டாலும் சுயம்வரம் வேனிற்காலத்திலென்பது பெற்றும்.

(க-து.) குயிலே - என்னுயிரைக் கொல்லுகின்றுயோ என்றுன் நளன் எ-ம். 37

விண்ணோர்விடுதூதுவிளம்புதலாற்
பெண்ணாமிர்தேபிழைசெய்தனனோ
வெண்ணாதுறுமிந்திரசாலமெனக்
கண்ணூடுபுகுந்துகரந்தனையே.

[இதனுல் உருவெளித்தோற்றத் தமயந்தியைக்குறித்துச் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) வண்ணோர்-தேவர்களால், விடு-விடுக்கப்பட்ட, தூது-தூதினை, விளம்புதலால்-சொல்லுதலால், பெண்ணாமிர்தே-தமயந்தியே, பிழைசெய்தனனோ-குற்றஞ்செய்தேனோ, எண்ணாது-நினைக்கப்படாத, (அனைத்தும்)உறும்-பொருந்துகின்ற, இந்திரசாலமென-இந்திரசாலவித்தைபோல், கண்ணூடு-என் கண்ணிடத்தில், புகுந்து-நுழைந்து, கரந்தனை-ஒளித்தாய் எ-று.

தூதாகவந்தவிடத்துயான்சொல்லியது குற்றமாகக்கொள்ளின் அதுயெனதன்று; தேவர்கள்செய்தது: ஆதலின்-நீயென் கண்ணெதிர்வந்து நில்லாது, மறைவதற்கு யானொருகுற்றமுஞ் செய்திலனென்பதாம்.

(க-து.) தமயந்தியை உருவெளித் தோற்றமாகக்கண்டு, தன்கண்ணில் இந்திரசாலமாக ஒளித்துக்கொண்டாய் என்றுன் நளன் எ-ம். 38

துஞ்சாதயர்வோடுயிர்சோர்தரவெந்
நஞ்சார்விழிவேலெறிநன்னுதலாம்
பஞ்சேரடியாயிழைபாலுறையு
நெஞ்சேயெனைநீயுநினைந்திலையே.

[இதனுல் தன்னெஞ்சைக்குறித்துச் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) துஞ்சாது-உறங்காமல், அயர்வோடு-துன்பத்தோடு, உயிர்-ஆவியானது, சோர்தர-தளர்ச்சியடைய, வெம் வெப்பம் பொருந்திய, நஞ்சார்-விட

நிறைந்த, விழிவேல்-கண்ணுகியவேலே, எறி-எறிகின்ற, நன்னுதலாம்-நல்ல புருவத்தையுடையவளாகிய, பஞ்சு-செம்பஞ்சுக்குழம்பணிந்த,எர்-அழகிய,அடி பாதங்களையுடைய, ஆயிழைபால்-தமயந்தியிடத்து, உறையும்-தங்குகின்ற,நெஞ்சே-என்மனமே, எனை-என்னை, நீயும், நினைந்திலே-நினைத்தாயில்லை எ-று.

இடுக்கண்வரும்போது தனக்கு உயிர்போலிருப்பவரும் உதவாரென்பது கருத்து.

(க-து.) தமயந்தியிடத்துத்தங்குகின்ற என்மனமே-நீயும் என்னை நினைக்கவில்லை என்ருன் நளன் எ-ம். 39

என்ருர்வமொடின்னபுலம்பிமணிக்
குன்ருர்புயன்மெய்த்துயர்கூர்தரலும்
பொன்ருழ்பிதிர்சிந்தியபொம்மன்முலைப்
பின்ருழ்குழலுற்றதுபேசிடுவாம்.

[இதனுல் கவிக்கூற்று சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) என்று-இப்படியென்று, ஆர்வமோடு-ஆசையோடு, இன்ன-இத்தன்மையவாக, புலம்பி-இரங்கி, மணி-அழகிய, குன்ருர்புயன்-நளமகாராசன், மெய்-உண்மையாகிய, துயர்கூர்தரலும்-அதிகதுன்பங்கொண்டவளவில், பொன்-பொன்னுனது, தாழ்-தாழும்படி, பிதிர்-தேமல், சிந்திய-சிதறிய,பொம்மல்-பொலிவுபெற்ற, முலை-முலைகளையும், பின்-பிற்பக்கத்தில், தாழ்-தாழ்கின்ற, குழல்-கூந்தலையுமுடையதமயந்தி, உற்றது-அடைந்ததுயரத்தை, பேசியவாம்-சொல்லுவாம் எ-று.

(க-து.) இவ்வாறு நளன்புலம்பித் துன்பப்படுமளவில் தமயந்திதுன்பத்தைச் சொல்லுவாம் என்ருர் புராணிகர் எ-ம். 40

கணைவேணிகர்காமருகாளைபுயத்
தணையாமலென்மார்பகலங்கவரா
விணைமால்வரையென்வளர்ந்தனிராற்
பணைமாமுலைகாள்பயனென்னைகொலாம்.

[இதனுல் தமயந்தி தன்கொங்கைகளைப்பார்த்துச் சொல்லியது சொல்லப்படுகின்றது]

(இ-ள்.) கணை-மலர்க்கணைகளையுடைய, வேணிகர்-மன்மதனையொத்த, காமர்-அழகிய, காளைபுயத்து-நளமகாராசனுடைய தோள்களில், அணையாமல்-அழுந்தாமல், என்-எனனுடைய, மார்பகலம்-மார்பினிடமெல்லாம், கவரா-கவர்ந்துகொண்டு, இணை-இரண்டாகிய, மால் பெரிய, வரையென்ன-பர்வதங்களென்றுசொல்லும்படி, வளர்ந்தனிர்-வளர்வுற்றீர்கள், பணை-பருத்த-மாமதத்தாகிய, முலைகாள்-ஸ்தனங்களே, பயன்-(உமக்குநமக்கும்) பயன்,என்னையாது எ-று.

பணைமாமுலைகாள்-எனவிளித்துப்பட, பயனென்னைகொல் - எனலால், மாலைபோல்வளர்ந்து பெரியமார்பகலங்கவர்ந்த நும்மைச்சுமந்தவெனக்குநன்மைசெய்ய நினைத்த நளன்மார்பகத்துப் புல்லாவிடினும், நீர்பிறந்ததற்காவது பயன்கருதியணைந்தீரில்லை; ஆதலால்-தனக்கும் பிறர்க்கும் பயன்படாத நும் போலும் வீணரில்லை என்பதாம்.

(க-து.) என்கனதனங்களே- நளன்புயங்களை யணையாவிட்டாலுங்களுக்குப் பயனென் என்றாள் எ-ம். 41

முனம்வானவர்தூதுமொழிந்திடுநாட்
புனைதாரவன்மார்பிடைபுல்லியுநீ
நினையாதுவிடுத்தனைநின்றுருகு
மனனேயினியென்கொல்வருந்துவதே.

[இதனால் மனதைக்குறித்துச் சொல்லியது சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) முனம் - முன்னே, வானவர் - தேவர்களுடைய, தூது-தூதை, மொழிந்திடுநாள்-சொல்லியநாளில், புனைதாரவன்-நளமகாராஜனுடைய, மார்பிடை-மார்ப்பினிடத்திலே, புல்லியும்-தழுவியும், நீநினையாது-நீ எவ்வளவுஞ் சிந்தியாமல், விடுத்தனை-அவனைவிட்டு, நின்று-திகைத்து நின்று, உருகும்,கரைகின்ற: மனனே-நெஞ்சமே, இனியென்கொல்-இப்போது என்னகாரணமாக வருந்துவது-வருத்தமடைவது எ-று.

சமயம்வந்தகாலத்திற் பெறவேண்டுவதைப் பெறாமல்விடுத்துப் பின்வருந்துவதிற் பயனில்லையாயினும், பிறர்நகைக்கப் படுவாயென்பது கருத்து.

(க-து.) தமயந்தி தன்மனதைக்குறித்து என்வருத்தமடைகிறாயென்றாள் எ-ம். 42

நண்ணார்தொழுவேலனளன்மார்பகலந்
தண்ணாரணையிற்றழுவுங்கனவி
லெண்ணாதுவிழித்துவிடுத்திடுமென்
கண்ணேயிதென்கொல்கலுழ்வதுவே.

[இதனால் கண்ணைக்குறித்துச்சொல்லியது சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) நண்ணார்-பகைவர், தொழு-துதிக்கின்ற, வேல்-வேலையேந்திய, நளன்-நளமகாராஜனுடைய, மார்பகலம்-மார்பினை, தண்ணார்-குளிர்ச்சிபொருந்திய, அணையில்-மெத்தையில், தழுவும்-தழுவுகின்ற, கனவில் - சொர்ப்பனத்தில், எண்ணாது-ஆலோசியாமல், விழித்து-விழித்துக்கொண்டு, விடுத்திடும்-விட்டுவிடுகின்ற, என்கண்ணே-என்கண்களே, இதென்கொல்-இதுஎன்னகாரணமாக, கலுழ்வது-கலங்குவது எ-று.

பிறராலன்றி நின்னாற்செய்யப்பட்ட குற்றத்துக்கு நீயேவருந்துவதுபேதைமையென்பது கருத்து.

(க-து.) என்கண்களே-நான்சொர்ப்பனத்தில் நளனைக்கூடும்போது நீங்கள் விழித்தழுவதென்ன என்றாள் எ-ம். 43

துதைநாண்மலர்வாளி துரந்து துரந்
தெதிர்வேளுயிர்கொல்லுதலெண்ணிலைநீள்
கதிர்வாணிலவாரழல்கான்றெழுவெண்
மதியேயெனைநீயும்வருத்துதியோ.

[இதனால் சந்திரனைவெறுத்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) துதை-நெருங்கிய, நாண்மலர்-புதியமலராகிய, வாளி-பாணங்களை, துரந்துதுரந்து-விடுத்து-விடுத்து, எதிர்-எதிர்க்கின்ற, வேள்-மன்மதனானவன், உயிர்கொல்லுதல்-உயிரைக்கொல்லுதலை, எண்ணிலை-நினைத்தாயில்லை, நீள்-நீண்ட, கதிர்-கிரணங்களினுடைய, வாள்-ஒள்ளிய, நிலவு-பிரகாசமாகிய, ஆரழல்-மிகுந்ததீயை, கான்று-வீசிக்கொண்டு, எழு-தோன்றுகின்ற, வெண்மதியே-வெள்ளியசந்திரனே, எனை-என்னை, நீயும்-நீயும், வருத்துதியோ-வருத்துகின்றனையோ, எ-று.

என்னுயிரை வருத்துவதற்கு மன்மதனொருவனே போதும்: அப்படியிருக்க-நீயும் அத்தொழிலின்முயல்வது அரைக்கப்பட்டதை அரைப்பதுபோற்பயனில்லையென்பது கருத்து.

(க-து.) சந்திரனே-மன்மதன் பாணத்தாலென்னைக்கொல்லுதலை நினைக்கவில்லை: நீயும்வருத்துகின்றாய் என்றாள் எ-ம். 44

வேளாண்மைசெலுத்தல்விலக்கிலையாய்
வாளாவுறைகின்றதுமன்னறமோ
தோளாண்மையின்மன்னர்தொழுஞ்சுடர்வேற்
காளாயெனதாருயிர்காவலனே

[இதனால் நளனைக்குறித்துச் சொல்லியது சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) தோளாண்மையின்-புயவலிமையினால, மன்னர்தொழும்-அரசர்களால்வணங்கப்பட்ட, சுடர்வேற்காளாய் - ஒளிபொருந்திய வேலைத்தரித்த காளையையொத்தவனே, எனது-என்னுடைய, ஆர்-நிறைந்த, உயிர்-உயிருக்கு காவலனே-அரசனாகிய நளமகாராஜனே, வேள் - மன்மதனானவன், ஆண்மை செலுத்தல் - (உனைவிழைந்த வென்னிடத்துப்) பராக்கிரமஞ்செலுத்துவதை, விலக்கிலையாய்-ஒழிக்காதவனாய், வாளாவுறைகின்றது-சும்மாவிருக்கின்றது, மன்னறமோ-அரசர்தருமமோ எ-று.

தன்தேயத்திலுள்ளவர் தீங்குசெய்யின் அதைவிலக்கிக்காப்பது அரசர்தருமமாகும்: அங்ஙனமாதலின் - நின்னையேயடைக்கலமாயுள்ள என்னிடத்து வேளானவன் தனது ஆண்மையைச்செலுத்தினால் அதை நீ விலக்கி அருள் செய்யாயாயின், நின்னறமிழுக்குற்றதுமன்றி நினைக்கும்பழிப்புண்டாகும் என்றதாம்.

(க-து.) நளமகாராசனே-மன்மதன்பாணஞ் செலுத்துதலை நீ விலக்கா திருக்கின்றது இராசதருமமோ என்றாள் எ-ம். 45

இடரோ தவிராதிரவோ விடியா
தடல்வேலவர் தாமருளோ புரியார்
குடவால்வளையே குருகே திரையே
கடலே கழியே யிதுவோ கடனே.

[இதுமுதல் மூன்றுபாட்டுகளால் இரங்குதல் செய்தற்றிணைக்குறிப்பொருளாதலால், அங்குள்ளபொருள்களைக் குறித்துச்சொல்லித் தமியளாய்ப்புலபல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) குடவால்வளையே - குடம்போன்றவெள்ளியசங்கே, குருகே-நாரையே, திரையே-அலையே, கடலே - சமுத்திரமே; கழியே - கழிநிலமே இடரோ-துன்பமோ, தவிராது-நீங்காது, இரவோ-இராத்திரியோ, விடியாது-விடியமாட்டாது, அடல்-கொலைசெய்கின்ற, வேலவர்தாம்-வேற்படையையுடைய நளமகாராசர், அருளோபுரியார் - கருணைசெய்யார் (ஆதலால்) இதுவோ-இப்படிவருந்துவதோ, கடன்-என்கடன் எ-று.

ஓ-இரக்கப்பொருளிலும், ஏ - எண்ணிலும்வந்தன. உவ்வுலகில் அநேக அரசர் அநேகமங்கையர் வருத்தத்தைநீக்கி அளித்தனரெனக்கேட்டதுண்டு. இவர் கொலைசெய்கின்ற வேலையுடையவராகையால், அங்ஙனஞ்செய்திலர் போலும். ஆதலின் என்னிடர் நீங்கிற்றில்லை. அதனோடுபோக்குதலின் இரவும் நெடுங்காலம்போல விடிந்ததில்லை. நீவிர் இங்ஙனமுற்றுப் பிரிந்துவருந்து பவர்க்கு ஒப்புரவுசெய்யுங் கடப்பாடுபெற்றுடையீராகலின், இவ்வரசர்க்குஞ் சொல்லுவீராக வென்றபடி. நீரால் எதிர்ப்புற்ற எரியைக்காக்கும் பாருட்டுப் போக்குவிடுவதுபோல், மிக்கதுன்ப முற்றவர்கள் பிறரோடு அதனை உரையாவிடின் ஆற்றாராதலின், இவளுந்தன்றுன்பத்தை இங்ஙனஞ் சொல்லினளென்க.

(க-து.) தமயந்தி கழிக்கரைப் புலம்பல் எ-ம். 46

கழலாவளையுங் கனலாமதியு
முழலாமனனும் பெறுநாளுளதோ
மழவேறனையான் மருவார்விரகத்
தழலாலுருகுந் தமியேனினியே.

(இ-ள்.) மழவேறனையான்-இளவேற்றையொத்தநளமகாராஜன், மருவார்-பொருந்தப்பெறாத, விரகத்தழலால் - விரகாக்கினியால், உருகும்-கரைகின்ற, தமியேன்-தனியேனாகியநான், இனி, கழலாவளையும் - கழலாதவளையல்களையும், கனலாமதியும்-சுடாதசந்திரனையும், உழலாமனனும்-சுழலாதமனத்தினையும், பெறுநாள் - பெற்றுக்கொள்ளுநாள், உளதோ-இண்டாகுமோ எ-று,

ஒரு ஆடவர்மாட்டு விருப்புவைத்த மடவார்க்கு அந்நிலைப்புமுற்றுவிடின் அன்ன நீர் முதலியவற்றின் விருப்பமில்லாமையால் தேகம்வாடும். அவ்வாட்டத்தாற் கைவளைமுதலியவுங் கழலும். மதியுங்குளிர்ச்சிசெய்து புணர்ச்சி நினைப்பை யுண்டாக்கி அதுகிடைக்கப் பெறுமையாற் சுடும். மனம் விரும்பியதை யடையப் பெறுமையாற் பலநெறிகளினுஞ் சென்று புகுந்து சுழன்றுழலும். ஆதலின்-நளனைப்பெறாத தமயந்தியுங், கழலாவளையுங் கனலாமதியு முழலா மனனும் பெறுநாளுளதோ வென்றாள். நளனைப்பெற்றநாளில், அவ்வாறு மென்பது கருத்து. ஓ-இரக்கப்பொருளில் வந்தது.

(க-து.) நான் கழலாத வளையல்களையும், சுடாத சந்திரனையும், கலங்கப்படாத நெஞ்சையும் பெறுநாளுண்டோ என்றாள் தமயந்தி எ-ம். 47

அள்ளிக்கொளலாமிருளூடடர்வேள்
கள்ளத்தெனதாருயிர்கவர்வான்
விள்ளற்கரிதாம்விரகந்தமியே
னுள்ளத்துறைவா யுணர்கிற்றிலையோ

(இ-ள்.) விள்ளற்கரிதாம் - சொல்லுதற்கரிதாகிய. விரகம் - விரகத்தையுடைய, தமியேன்-தமியேனாகிய என்னுடைய, உள்ளத்துறைவாய் - மனத்திலிருக்கின்றநளனே, (நீ) அள்ளிக்கொளலாம்(கையால்)அள்ளிக்கொள்ளலாம்படியிருந்த, இருளூடு-இருளினிடத்தில், அடர்வேள்-அடர்கின்ற மன்மதனானவன் கள்ளத்து-கரவினால், எனது-என்னுடைய, ஆர்-நிறைந்த, உயிர்-ஆவியை, கவர்வான் - அபகரிப்பான், உணர்கிற்றிலையோ - (அக்களவினை) யறிகின்றாயில்லையோ எ-று.

இருளிற் களவுசெய்பவர்போல, காமனும் என்னுயிரைக் கொள்ளையிட நினைத்திருக்கின்றனன். காமநோயால், இன்றளவில் உனதாவி தரிக்கப்பெறாது. அது உனது பொருளாதலால், அதற்கொரு தீங்குவராமற் காக்கக் கடவை. காவாவிடில், அதனால் பின்னர்வருந்துன்பம் உனதாம். என நேரிற் சொல்வதற்குப் பெறாத தமயந்தி தன்னுளத்திருக்கு நளனைவிளித்து, மடமையாலிவ்வாறு கூறினளென்க.

(க-து) என்னுளத்திருக்கின்ற நளனே-மன்மதன் என்னுயிரை அபகரிப்பான்: நீயறியாயோ என்றாள் தமயந்தி எ-ம். 48

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

என்றுவெந்துயருற்றிரு கணீர்வாரவிளமுலைத் துணையசப்பூர, மின்றிகழ்மருங்குற் செய்யவாய்ப்பேதை மெலிவொடுவருந்து மெல்லைவயினின், மன்றலங்கமல முகைமுறுக்கவிழ்த்தாவரிச்சிறைத்தும் பொட்டபரத் துன்றிருள்பருகும் விரிகதிர்ப்பரிதிச் சுடரவன் குணபுலத்தெழுந்தான்,

[இதனால் சூரியோதயஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) என்று-இப்படியென்று, வெந்துயருற்ற-வெவ்வியதுன்பத்தை யடைந்து, இருகணீர்வார - இரண்டுகண்களினின்றும் நீரொழுக, இளமுலைத் துணை-இளமைபொருந்திய இரண்டுஸ்தனங்களும், பசப்பூர-வேறுபட்ட நிறத்தையடைய, மின்-மின்னல்போல், திகழ்-பிரகாசிக்கின்ற, மருங்குல்-இடையினையும், செய்யவாய் - சிவந்தவாயினையுமுடைய பேதை - தமயந்தியானவள், மெலிவொடு-இளைப்போடு, வருந்தும்-வருத்தப்படுகின்ற, எல்லையினில்-காலத்தில், மன்றல்-வாசனைபொருந்திய, அம்-அழகிய, கமலமுகை-தாமரையரும்பினுடைய, முருக்கவிழ்த்து - முறுக்கவிழச்செய்து, வரி-இரேகைகள்பொருந்திய சிறை-சிறகையுடைய, தும்பி - வண்டுகள், பாட்டயர - பாட்டைப்பாட, துன்று-நெருங்கிய, இருள்மருகும்-இருளையுண்ணும், விரிகதிர்பரப்பி-விரிகின்றகிரணங்களைப் பரவச்செய்து, சுடரவன்-சூரியனானவன், குணபுலத்து-கிழக்குத்திசையில், எழுந்தான்-உதித்தான் எ-று.

இவ்வாறுவருத்தமுற்ற தமயந்தி பின்பு அவ்வருத்தங்களை யெல்லாநீங்கி மகிழ்வுறுதற்கு நிகழ்வதாகிய சுயம்வரச்சிறப்பைச் சொல்லுதற்குரிய நாளெய்தியதென்பார், பேதைவருந்து மெல்லையினிற் சுடர்வன் குணபுலத்தெழுந்தான் என்றார்.

(கக-ஆ.) தமயந்தி வருத்தம்படுங்காலத்தில் சூரியனுதயமாயினன் எ-ம்.

**தணிவருந்துயரிற் கண்படைபெறாது தளர்வொடுவருந்திவெய்துயிர்க்கு**, மணியெழுவனைய பொற்றடத்திணி தோண்மன்னவர்மனமகிழ்சிறப்பப், பணியரவல் குற்கதிர்முலைத் துவர்வாய்ப்பைந்தொடிவதுவையின்றென்று, மணிநகரணிகென்றரசர்கோன் பணியாலதிர்குரற்கடிமுரசறைந்தார்.

[இதனால் விவாகமுரசறைதல் சொல்லப்படுகின்றது]

(இ-ள்.) தணிவருந்துயரின் - ஆறுதற்கரிய துன்பத்தினால், கண்படைபெறாது-நித்திரைசெய்யாமல், தளர்வொடு-தளர்ச்சியுடன், வருந்தி-வருத்தப்பட்டு, வெய்துயிர்க்கும்-பெருமூச்சுவிடுகின்ற, மணியெழுவனைய-மணித்தூண்போன்ற, பொன்-அழகிய, தடம்-பருத்த, திணி-வலிமைபொருந்திய, தோள்-தோளையுடைய, மன்னவர் - அரசர்கள், மனமகிழ்ச்சிறப்ப-மனமகிழ்ச்சிமிக பணியரவல்குல் - அராப்படம்போன்றவல்குலையும், கதிர்முலை-காந்திபொருந்திய ஸ்தனங்களையும், துவர்வாய்-செவ்வாயையும், பைந்தொடி-பசியவளையலையுமுடைய தமயந்தினது, வதுவை-விவாகம், இன்றென்று-இன்றென்றுசொல்லி, அணி-அழகிய, நகரணிகென்று-நகரையலங்கரிக்கவென்று, அரசர்கோன் பணியால்-வீமராசனேவலினால், அதிர்குரல்-அதிர்கின்றவோசையையுடைய, கடி-பெருமைபெற்ற, முரசு-பேரிகையை, அறைந்தார்- (வள்ளுவர்) அடித்தார்கள் எ-று.

இராமுழுதும் நித்திரையின்றி வருந்திய அரசர் மனமகிழ்ச்சியுடைய வள்
ளுவர்முரசறைதல், பார்க்கவ புராணத்தில்-'தெள்ளியவேவலாளர் செப்பலு
மகிழ்ந்துபோற்றி, வள்ளுவனுண்டூசி வாலியவணிந்துவீர, வெள்ளியவேற்
றுப்போர்வை விசிமுரசெடுத்துவல்லே, கள்ளிவர்மாலைநாற்றிக் களிற்றினிட்
டேறிச்சொல்வான்" இந்தப்பாட்டுமுதல் "இனியன நுகர்ந்துபூசி யெழில்கொ
ளவணிந்து மென்றீங், கனியெனமொழிந்து ரின்பங் கனிதரவளவளாவிப்,புனி
தவிண்ணவர்க்கும்பூசை போற்றுக போற்றுகென்று, நனிபலபொருளுஞ்சொ
ல்லி நளிமுரசெருக்கினானே" என்னும் இந்தப்பாட்டீராகவந்த ஐந்துபாட்டா
லும் அறிக.

(க-து.) அரசர்கள் மனங்களிக்க வீமராசன்கட்டளையினாலே தமயந்திக்கு
விவாகமின்றைக்கென்று நகரை யலங்கரிக்கும்படிபேரிகையறைந்தார்கள்எ-ம்.

இமிழ்கடிமுரசங்கு கறங்குபேரோதை யெழினகர்மாந்தர் தஞ்
செவியி,லமிழ்தூத்தென்னத்தவழ்தலுமகிழ்வுற்றணிவிழவறாதகோ
மறுகிற், கமழ்நறுந்தாற்றுப்பாளைவாய்ங்கமுகுங்கன்னலுங்கதலியுநடு
வார், ருமிழ்கதிரெறிக்குமடிநெடுங் கொடிகளுயர்விசும் பகடுறநிறைப்
பார்.

[இதுமுதல்இரண்டுபாட்டுகளால் நகர் அலங்கரித்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) இமிழ்-இனிமையையுடைய, கடி-புதுமைபெற்ற, முரசம்-பேரி
கையானது, கறங்கு-ஒலிக்கும், பேரோதை-பேரொலியானது, எழினகர்-அழ
கியநகரத்திலிருக்கும், மாந்தர்தஞ்செவியின்-மனிதர்செவியில், அமிழ்தூத்
தென்ன-அமிர்தத்தை யுகுத்ததுபோல், தவழ்தலும்-தவழ்ந்தவளவில், மகிழ்
வுற்று,மகிழ்ச்சியடைந்து, அணி-அழகிய, விழவறாத-திருவிழாநீங்காத, கோ
மறுகில்-இராசவீதியில், கமழ்-பரிமளிக்கின்ற, நறு-நறிய, தாறு-குலைகளையு
டைய, பாளைவாய்-பாளைகள்வாய்ந்த, கமுகும்-கமுகமரமும், கன்னலும்-க
ருப்பங்கழியும், கதலியும்-வாழைமரமும் நடுவார்-நடுவார்கள், உமிழ்-கொப்பு
ளிக்கின்ற, கதிரெறிக்கும்-கிரணத்தை வீசுகின்ற, மணி இரத்தினங்கள்ப
தித்த, நெடுங்கொடிகள்-நெடியகொடிகளை, விசும்பகடுற-ஆகாயமுழுவதுநி
றைய நிறைப்பார்-வரிசையாகக்கட்டுவார்கள் எ-று.

அரசன்மகட்குச் சுயம்வரமென்றடித்த முரசோதையை அவரவருந் தம்
முடைய மகட்கு விவாகமென்ற அடித்த ஓசையைக்கேட்டதுபோல் மகிழ்ச்சி
யடைந்தன ரென்பது தோன்ற, செவியிலமிழ்தூத் தவழ்தலுமென்றார். எப்
பொழுதும் அலங்கரித்திருக்கின்ற வீதியென்பதுதோன்ற, அணி விழவறாத
கோமறுகி லென்றார். இப்பாட்டில் மாந்தரென்னும் எழுவாய் இதுமுதல்பன்
னிரண்டு பாட்டுவரையும் நடுவார் நிறைப்பார் முதலிய வென் வேறுபயனிலைக
ளைக் கொண்டு முடிந்தது.

(க-து.) மனிதர்கள் மங்கலமுரசஞ் சத்தங்கேட்ட ளவில் இராச வீதிக ளில் பாக்குமரங்களும் கரும்பும் வாழையும் நடுவார்கள். ஆகாயமளாவுங்கொடி களுங் கட்டுவார்கள் எ-ம். 51

சேணுயர்பரிதிதழும்புறநிவந்தசெழுமணித் தோரணநடுவார், வாணிலவொழுகுமணிவடம்புனைந்திலங்குபொற்றசும்புகணிரைப் பார், பாணிகர்வரிவண்டுளர்ந்துதேனுகரும் பனிமலர்த்தாமங்கணாற்றிடு வார், தூணுறைகழித்துவிரிகதிரெறிக்குஞ்சுடர்மணிச் செறிதுகடு டைப்பார்.

(இ-ள்.) சேணுயர்-மிகவுமுயர்ந்த, பரிதி-சூரியனுடைய. தழும்புற்-தழும் புபொருந்த, நிவந்த-உயர்ந்த, செழுமணி-செழுமையுள்ள மணிகள் பதித்த, தோரணம்-தோரணங்களை, நடுவார்-நடுவார்கள், வாள்-ஒளிபொருந்திய, நிலவு சந்திரிகை, ஒழுகும்-வீசுகின்ற, மணிவடம்முத்துமாலைகளை, புனைந்து-தரித்து, இலங்கு-பிரகாசிக்கின்ற, பொற்றசும்புகள்-பொற்குடங்களை, நிரைப்பார்-வைப் பார்கள், பாணிகர்-பண்ணையொத்த, வரி-பாட்டுகளையுடைய, வண்டு-வண்டு கள், உளர்ந்துதடவி, தேனுகரும-தேனுண்ணும்-பனிமலர்-குளிர்ச்சிபொருந் திய மலராற்றொடுத்த, தாமம்மாலைகளை, நாற்றிடுவார்-தொங்கக்கட்டுவார்கள், தூண்-தூண்களின், உறைகழித்து-உறையைநீக்கி, விரிகதிரெறிக்கும்-விரியுங் கிரணங்களைவீசுகின்ற, சுடர்-பிரகாசிக்கின்ற, மணி-இரதங்களில், செறி படிந் த, துகள்-புழுதியை துடைப்பார்-துடைப்பார்கள் எ-று.

பலகால் எறும்பூரக்கற்குழியுமென் றிருப்பதால், அனேகந்தோரணங்கள் அந்தகரைக்கடக்கும்வரையும் படுதலாற் பருதிதழும்புறவென்றார்.

(க-து.) சூரியன் தழும்படையத் தோரணநடுவார்கள். முத்துமாலைகளணிந்து பொற்குடங்கள் வைப்பார்கள். பூமாலைகள்கட்டுவார்கள். தூண்களினுறைகளைக்கழற்றித் தூசைத்துடைப்பார்கள் எ-ம். 52

மைந்தரோடூடியநலார்பரிந்தமணிவடக்குப்பைகளகற்றிச், சந் தமென்குழம்பானன்னிலமெழுகித்தண்முளைப்பாலிகையமைப்பார், இந் திரதனுவிறநிகழ்தரச்சாந்துமெரிமணிச்சுண்ணமுமிறைப்பார், நந்த லில்முளைக்கமணிசெய்பொற்றகளிநறுநெய்பெயதொளியுறவெடுப்பார்

(இ-ள்.) மைந்தரோடு - புருடருடன், ஊடி - பிணங்கி, அந்நலார் - அந் தமகளிர்கள், பரிந்த-நீக்கிய, மணிவடக்குப்பைகள்-முத்துமாலைகளின் குவி யல்களை, அகற்றி-நீக்கி, சந்தமென்குழம்பால்-சந்தனத்தினுடைய மெல்லி யகுழம்பினால், நன்னிலமெழுகி - நல்லபூமியைமெழுகி, தண்முளை-குளிர்ச்சி பொருந்திய முளைகளையுடைய, பாலிகை-பாலிகைகளை, அமைப்பார் - வை ப்பார்கள், இந்திரதனுவில்- இந்திரவில்லைப்போல், நிகழ்தர - பிரகாசிக்க, சாந்தும்-சந்தனத்தையும், எரி-காந்தியையுடைய, மணிச்சுண்ணமும்- (அதன் மேல்) இரத்னப்பொடிகளையும், இறைப்பார்-இறைப்பார்கள், நந்தலில்-கெடுத

லில்லாத, விளக்கம்-தீபங்களை, மணிசெய்பொற்றகளி - இரத்நங்களிழைத்த பொன்னகல்களில், நறுநெய்பெய்து-நல்லநெய்விட்டு,ஒளியுற-ஒளிபொருந்த, எடுப்பார்-ஏற்றுவார்கள் எ-று.

ஊடுதல் காமத்திற்கின்பமாதலின், மைந்தரோடூடி என்றார். இந்திரதனுவில்லெனப் பலநிறமுள்ளதை உவமானமாகக் கூறலால், இங்ஙனமணியென்றதற்கு வெவ்வேறுநிறமுள்ள மணியையும் † பொருளாகக் கொள்க.

(க-து.) புருஷர்களோடு பிணங்கிப் பெண்களெறிந்த மணிக்குப்பைகளை நீக்கிச் சந்தனக் குழம்பாலே நிலத்தைமெழுகி முளைப்பாலிகையை வைப்பார்கள். சந்தனக்குழம்பின்மேல் நவமணிப்பொடிகளை இறைப்பார்கள். நவமணிவிளக்கேற்றுவார்கள் எ-ம். 53

ஐயரிசிதறுமழைமதர்நெடுங் கணஞ்சனமெழுதுவார் சாந்தத்,
தொய்யில் வெம்முலையினிலவுகொப்புளிக்குந் தூமணிப்பிறைவடமணிவார், மையிருங்கூந்தல்வகிர்ந்துதேன்முரலு மட்டுவார்பூந்தொடைபுனைவார், நையுநுண்மருங்கிற்கதிரொளிபரப்புநகைமணிமேகலை புனைவார்.

[இதுமுதல் இரண்டுபாட்டுகளால் மாதர் தங்களை அலங்கரித்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) ஐயரிசிதறும்-அழகியசெவ்வரிபரந்த, மழை-குளிர்ச்சி பொருந்திய, மதர்-களிப்பையுடைய, நெடுங்கண்-நெடியகண்களில், அஞ்சனமெழுதுவார்-மையெழுதுவார்கள், சாந்தத்தொய்யில்-சந்தனக் கோலம் யெழுதப்பெற்ற, வெம்முலையின்-விருப்பத்தைச் செய்யுந்தனங்களில், நிலவு-சந்திரிகையை, கொப்புளிக்கும்-உமிழ்கின்ற, தூ-பரிசுத்தமாகிய, மணி-இரத்நங்களிழைத்த, பிறைவடம்-சந்திரஹாரத்தை, அணிவார்-அணிவார்கள், மை-கரிய, இரும்-பெரிய, கூந்தல்-அளபாரத்தை, வகிர்ந்து-கோதி, தேன்முரலும்-வண்டுகளொலிக்கின்ற, மட்டுவார்-தேனொழுகுகின்ற, பூந்தொடை-பூமாலைகளை, புனைவார்-சூடுவார்கள், நையும்-நைகின்ற, நுண்-நுண்ணிய, மருங்கில்-இடையில், கதிர்-கிரணங்களினது, ஒளிபரப்பும்-ஒளியைவிரிக்கின்ற, நகை-காந்தியையுடைய, மணி-மணிகளிழைத்த, மேகலை-மேகலாபரணத்தை, அணிவார்-அணிவார்கள் எ.று.

(க-து) அந்நகர்மாதர்கள் கண்களுக்கு மையிடுவார்கள். தனங்களில் சந்திரஹாரந்தரிப்பார்கள். கூந்தலில் மாலையணிவார்கள். இடையில் மேகலாபரணந்தரிப்பார்கள் எ-ம். 54

† அவை வச்சிரம்-வைடூரியம்-கோமேதகம்-புட்பராகம்-மரகதம்-மாணிக்கம்-நீலம்-பவளம்-கித்திலம்-என்பனவாம்.

சில்லரிச்சிலம்புபஞ்சிமேற்பனிக்குஞ்சீறடிகவின்செயப்புனைவார், ரெல்வளை திருத்தியாடமைபணைத்தோ ளெழில்பெறத் தொயில் வரைந்திடுவார், ரல்லியங்கமலமென்மலர்கவற்றுமடியினிலலத்தக மணிவார், வில்லுமிழொருகாழ்முத்தணியணிவார்விரைகமழ் தெரியல்கைபுனைவார்

(இ-ள்.) சில் - ஆரவாரிக்கின்ற, அரி - பருக்கைக்கல்லையுடைய, சிலம்பு - சிலம்புகளை, பஞ்சிமேல் - பஞ்சின் மேல் மிதிப்பினும், பனிக்கும்-வாடுகின்ற, சீறடி-சிறியபாதங்களில், கவின்செய-அழகுபொருந்த, புனைவார்-தரிப்பார்கள், எல்-பிரகாசத்தையுடைய, வளை-வளையல்களை, திருத்தி-அணிந்து, ஆடமை-வெற்றியமைந்த, பணைத்தோள்-பருத்ததோள்களில், எழில் பெற-அழகுபெறும்படி, தொயில்-சந்தனக்கோலத்தை, வரைந்திடுவார்-எழுதுவார்கள், அல்லி-அகவிதழையுடைய, அம்-அழகிய, கமலமென்மலர் - தாமரையினது மெல்லியமலரை, கவற்றும்-கவலைப்படுத்தும், அடியினில்-பாதங்களில், அலத்தகம்-செம்பஞ்சுக்குழம்பை, அணிவார் - பூசுவார்கள், வில்-ஒளியை, உமிழ்-கொப்புளிக்கின்ற, ஒரு-ஒப்பற்ற, காழ்-தேறிய, முத்தணி-முத்துமாலைகளை, அணிவார் - அணிவார்கள், விரைகமழ்-வாசனைகமழ்கின்ற, தெரியல்-மலர்மாலைகளை, கைபுனைவார்-அலங்கரிப்பார்கள் எ-று.

(க-து.) பாதங்களிற் சிலம்பணிவார்கள். கரத்தில் வளையல்களணிந்து, தோள்களிற் சந்தனக்குழம்பாற் சித்திரமெழுதுவார்கள். பாதங்களிற்செம்பஞ்சின்குழம்பு பூசுவார்கள்-முத்தாரமணிவார்கள். மலர்மாலைகளை யலங்கரிப்பார்கள் எ-ம். 55

கதிர்மதிதவழுமாடநீண்முகப்பிற் காழகிற்றீம்புகையிடுவார், முதுமறைவாணர்க்கின்ன முதடுவார்மொய்கதிர் வெயில்கரந்தொழிய, மதிநிலவொழுகுநித்திலப்பந்தர்மாணுறவயின்வயினிரைப்பார், சதிமுறை தவறாத்தண்ணுமைகறங்கக்கூத்தியர்தனித்தனிநடிப்பார்.

[இதுமுதல் ஆறுபாட்டுகளால் அந்நகரிலுள்ளவர் செய்யும் பலவிதச் செய்கைகளுஞ் சொல்லப்படுகின்றன.]

(இ-ள்.) கதிர்-கிரணங்களையுடைய, மதிதவழும் - சந்திரன்றவழ்கின்ற, மாடம்-உப்பரிகையினுடைய, நீண்முகப்பில்-நீண்டமுகப்பினில், காழ்-வைரம்பொருந்திய, அகிற்றீம்புகை-அகிலினதினியபுகையை, இடுவார்-இடுவார்கள், முதுமறைவாணர்க்கு-பிராமணர்களுக்கு, இன்னமுதடுவார்-இனிய அமுது சமைப்பார்கள், மொய்-மொய்க்கப்பெற்ற, கதிர்வெயில்-சூரியனது வெப்பமானது, கரந்தொழிய-ஒளித்துநீங்க, மதிநிலவொழுகும்-சந்திரப்பிரகாசம் வீசுகின்ற, நித்திலப்பந்தர்-முத்துப்பந்தல்கள், மாணுற - பெருமை பொருந்த, வயின்வயின்-இடங்கடோறும், நிரைப்பார் - செய்வார்கள், சதிமுறை-தாள

வொத்தின் முறைப்படி- தவறுாதப்பாடல். தண்ணுமை-மத்தளம், கறங்க-ஒலிக்க, கூத்தியர்-நாடகக்கணிகையர், தனித்தனி-வேறுவேருக, நடிப்பார்-கூத்தாடுவார்கள் எ-று.

மறைவாணர்க் கின்னமுதுவோரெனப் பொதுப்படக்கூறினும், உரிமையால் அந்நகரத்திலுள்ள அந்தணரெனக் கொள்க. தண்ணுமைகறங்க வென்றுரேனும், அவ்வவ் நாட்டியங்கட்குரிய உறுப்புகள் பலவுங்கொள்க. தனித்தனி நடிப்பாரென்றதினல், பலவிடங்களினும் பலவிதக்கூத்தும் ஆடுகின்றுரென்பது பெற்றும்.†

† அக்கூத்தாவது, சாந்தி-விநோதம்-என இருவகைத்து. சாந்தியாவது, சொக்கம் - மெய்க்கூத்து - அவிநயம் - நாடகம் - எனநான்கு. அவற்றுள் சொக்கமாவது, சுத்தநிருத்தம்; அது நூறுரெட்டுக்கரணமுடைத்து. மெய்க்கூத்தாவது, தேசி-வடுகு - சிங்களம் - இவை அகச்சுவையாகிய முக்குணம் பற்றி எடுத்தலின் அகமார்க்கமெனப்படும். அவிநயமாவது, கதை தழுவாது பாட்டுக்களின் பொருளைத்தோனறக் கைகாட்டிவல்லபஞ்செய்யுங் கூத்து.

(க-து.) மாடங்களில் அதிற்புகையூட்டுவார்கள். பிராமணர்களுக் கமுது சமைப்பார்கள். முத்துப்பந்தலிடுவார்கள். நாடகக்கணிகையர் நடனமாடுவார்கள் எ-ம்.

56

எழிறிகழ்கன்னிக்கமுக மென்மிடற்றி னிசையெழீஇயினிது
பாட்டயர்வார், செழுமலர்க்காந்தண்முகிழ் விரல்சேப்பத்திவவியாழின்னரம்புளர்வார், முழுநெறிக்குமுதமுகைநெரித்தெனவாய் முகிழ்த்தருங்குரவைநள்புரிவார், தொழுமலர்வளைக்கைகொட்டிவேனெடுங்கட்கோதைபர்குரவையாட்டயர்வார்.

(இ-ள்.) எழில்-அழகானது, திகழ்-பிரகாசிக்கின்ற கன்னி-இளமைபொருந்திய, கமுகமென்மிடற்றில்-கமுகைபொத்த மெல்லியகண்டத்தில், இசையெழிஇ-இசையையெழுப்பி, இனிது-இனிமையாக, பாட்டயர்வார்-பாட்டைப்பாடுவார்கள், செழு-வளம்பொருந்திய, மலர்-மலரையுடைய, காந்தண்முகிழ் விரல்-காந்தளரும்பைபொத்தவிரல்கள், சேப்ப-சிவக்க, திவவு-வலிக்கட்டையுடைய, யாழ்-வீணையினுடைய, இன்னரமத-இனியநரம்பை,உளர்வார்-தடவுவார்கள், முழுநெறி-முழுநெறிப்பையுடைய, குமுதமுகை - செவ்வல்லியம்

நாடகமாவது, கதைதழுவிவருங்கூத்து. இனிவிநோதமாவது, குரவை-கலிநடம்-குடக்கூத்து கரணம் - நோக்கு-தோற்பாவை-என ஆறு. குரவை-கைகோத்தாடுவது, கலிநடம்-கழாய்க்கூதது குடக்கூத்து-மாயனுடல். கரணம்-படிந்தவர்-நோக்கு-பாரமும் நுண்மையும் ஆயபுமுதலாயின. தோற்பாவை-தோற்பாவைசெய்தாட்டுவது. இன்னும் வசைக்கூத்தோடு எழென்பாருமுளர். இவ்வைமும் இழிகுலத்தோராடற்குரியன. இவற்றின் விற்பழுத்தும் இங்ஙனம் விரிக்கிற் பெருகுமாதலிற் சுருக்கிக் கூறினும்.

பை,நெரித்தன-நெரித்ததுபோல, வாய்முகிழ்த்து-வாயைக்குவித்துக்கொண்டு, அரும்-அரிய,குரவைகள்புரிவார்-குரவைப்பாடலைப் பாடுவார்கள், கொழுமலர்-செழுமையுள்ளதாமரைமலர்போன்ற, வளைக்கைகொட்டி - வளையலையணிந்த கைகளைக்கொட்டி, வேலெனநெடுங்கண் - வேல்போன்ற நெடியகண்களையுடைய, கோதையர்-மாதர்கள், குரவையாட்டயர்வார்-குரவைக்கூத்தாடுவார்கள் எ-று.

குரவையாவது-காமமும் வென்றியும் பொருளாகக்கொண்ட பாடலைப்பாடிக்கொண்டு, எழுவரேனும் ஒன்பதின்மரேனும்மாதர்கைப்பிணைத்தாடுவதால்.

(க-து.) பெண்கள்பாடுவார்கள். வீணைவாசிப்பார்கள்-குரவைப்பாடல்பாடுவார்கள். கைகளைக்கொட்டிக்குரவைக்கூத்தாடுவார்கள் எ-ம். 57

வெண்மதிக்கதிர் நூற்றனைய வான்கவரிநெற்றிவெங்கலினவாம் புரவி, பண்ணுறுத்திடுவார்குருதிதோய்கோட்டுப்படுமதக்கலுழிவெஞ்சினத்த, வண்ணல்மால்யானைநவினுறப்ப ருமித்தணிவிழாமறுகிடைக்கொணர்வார், மண்ணமைகொஞ்சிக்கூந்தன்மான்றடந் தேர் வானவரூர்தியிற்றருவார்.

(இ-ள்.) வெண்மதி - வெளியசந்திரனுடைய, கதிர்-கிரணங்களை, நூற்றனைய - நூற்றதையொத்த, வான்-மேலாகிய, கவரி-சாமரையணிந்த, நெற்றி-நெற்றியையுடைய, வெம்-வெய்ய, கலினம்-கடிவாளம்பூண்ட, வாம்-தாவுகின்ற, புரவி குதிரைகளுக்கு, பண்ணுறுத்திடுவார்-கல்லணைசேர்ப்பார்கள், குருதிதோய்-உதிரந்தோய்ந்தக், கோட்டு-கொம்பையுடைய, படு-உண்டாகின்ற, மதக்கலுழி-மதப்பெருக்கையும், வெஞ்சினத்த-வெவ்வியகோபத்தையும்,அண்ணல்-பெருமையினையும், மால்-மயக்கத்தினையுமுடைய, யானை-யானைகளை,நவினுற-அழகுபொருந்த, பருமித்து-அலங்கரித்து, அணி-அழகிய, விழா-திருவிழாவையுடைய, மறுகிடை-வீதியிலே, கொணர்வார்-கொண்டுவருவார்கள்,மண்ணமை-ஒப்பனையமைந்த, கொஞ்சி-மேன்மொட்டையும், கூந்தன்மான்-புறமயிர்பொருந்திய குதிரைகளையுமுடைய, தடந்தேர்-விசாலம்பொருந்தியதேர்களை, வானவரூர்தியில்-தேவர்விமானங்கள்போல், தருவார்-கொண்டுவருவார்கள் எ-று.

(க-து.) குதிரைகளுக்குக் கல்லணையிடுவார்கள். யானைகளை அலங்கரித்து வீதியிற்கொண்டுவருவார்கள். தேர்களை யலங்கரித்துக்கொண்டு வருவார்கள் எ-ம். 58

இருங்கடற்றோன்றுமழகதிரேய்ந்குமெரிமணிச்சிவிகைபின்வருவார், சுரும்புவீழ்ந்தரற்றமும்மதம்பொழியுஞ்சூழிமால்யானையிற்புகுவார், திருந்துமொண்சுழிபகூந்தன்மான்மேறிற் செட்டினம்பரிதியிற் செல்வார், பொருந்தமண்டோயாதகல்விசும்பகவும்பொங்குளைப்புரவியிற்போவார்.

(இ-ள்.) இருங்கடற்றோன்றும்-பெரியகடலினுதிக்கின்ற, மழகதிரேய்க்கும்-இளஞ்சூரியனை யொக்கும், எரிமணி-பிரகாசிக்கின்ற அரத்நங்கள்பதித்த, சிவிகையின்-தண்டிகையில், வருவார்-வருவார்கள், சுரும்பு-வண்டுகள், வீழ்ந்து-விரும்பி அரற்ற-ஒலிக்க, மும்மதம்பொழியும்-மும்மதங்களையும் பொழிகின்ற, சூழி-முகபடாத்தையுடைய, மால்-பெரிய, யானையிற்புகுவார்-யானையின்மேல் வருவார்கள், திருந்தும்-திருந்தப்பெற்ற, ஒள்-விளங்குகின்ற, சுழிய †சுழிகளையுடைய, கூந்தன்மான்-புறமயிரினையுடைய குதிரைகட்டிய, தேரில்-இரதத்தில், சேட்டிளம்பரிதியில்-மிகுந்த இளமையுடையசூரியனைப்போல், செல்வார்-செல்வார்கள், பொருந்த-பொருந்தும்படி, மண்-பூமியிலே, தோயாது-தோயாமல், அகல்விசும்பு-அகன்றஆகாயத்தில், அகவும்-ஆடுகின்ற, பொங்கு-மிகுந்த, உளை-புறமயிரினையுடைய, புரவியில் - குதிரையின்மேல், போவார்-போவார்கள் எ-று.

(க-து.) சிலர் அரத்நச்சிவிகைகளில் வருவார்கள். சிலர்யானைகளில் வருவார்கள்- சிலர்தேர்களிற் போவார்கள். சிலர்குதிரைகள்மேற்போவார்கள் எ-ம்.

நளிர்மதிதவழுமலையவெற்புயிர்த்தநறுங்குறடுரிஞ்சுபூந்தேய்வை
தளர்கொடிமருங்குலலமரப்பணைத்ததாளமென்முலைமுகட்டணிவார்,
அளியினமோச்சிவள்ளவாய்த்தேறலமிர்தெனநுகர்ந்துளங்களிப்பார்,
துளிமதுப்பிலிற்றிக்காவதங்கமழுந்தூமலர்ச்சிகழிகைபுனைவார்.

(இ-ள்.) நளிர்-குளிர்ச்சிபொருந்திய, மதிதவழும் - சந்திரன்றவழ்கின்ற, மலையவெற்பு-பொதியமலை, உயிர்த்த-பெற்ற, நறுங்குறடு - நறியசந்தனக்கட்டைகளால், உரிஞ்சு-தேய்த்த. பூந்தேய்வை - அழகியகுழம்பினை, தளர்-தளரப்பெற்ற, கொடி-வல்லிபோன்ற, மருங்குல் - இடையானது, அலமர-சுழற்சியடைய, பணைத்த - பருத்த, தாளம் - முத்துவடமணிந்த, மென்முலைமுகட்டு-மெல்லியமுலைகளின்மேல், அணிவார்-பூசுவார்கள், அளியினமோச்சி-வண்டுக்கூட்டங்களையோட்டி, வள்ளவாய்த்தேறல்-கிண்ணத்திலுருக்குந்தேனை, அமிர்தெனநுகர்ந்து-அமிர்தம்போலுண்டு, உளங்களிப்பர்-மனமகிழ்வார்கள், துளி-

† திருந்துமொண் சுழிகளானவை-கழுத்தினடுவிலேனும், கணைக்காலிலேனும், மேனுதடு-முன்னங்கால்-கனனம் - முழங்கால்-ஆகியஇவைகளிலேனும், இரட்டைச்சுழிகள் இருக்கின் ஆகாதனவாம். இவைகளின்றிக்கழுத்தில் வலஞ்சுழித்திருப்பது, தேவமணியாம். முகம்-தலை-மூக்கு-மார்பு-இன்னான்கிடத்திலும் இரண்டிரண்டுசுழிகளும், நடுநெற்றி-பிற்பக்கம்-இவைகளில் ஒவ்வொருசுழியு மிருக்கில், நல்லனவாம். சிரீவற்சம்-என்னுங்குதிரைக்கு, மார்பிலைந்து சுழி இருக்கும். நெற்றியில் இருசுழியேனு முச்சுழியேனு மிருக்கினும், நான்கு சுழி வலம்புரியாயிருக்கினும், இரண்டுசுழி முன்னங்காலடியிலிருக்கினும், நல்லனவாம். இவற்றின் விகற்பமெல்லாம் இங்ஙனம்பெருகுமாதலிற் சுருக்கியுரைத்தாம்.

துளிகளையுடைய, மதுப்பிலிற்றி-தேனையொழுக்கி, காவதம்-காததூரமளவும், கமழும்-மணக்கும், தூ-பரிசுத்தமாகிய, மலர் - மலராற்றொடுக்கப்பெற்ற, சிகழிகை-மாலைகளை, புனைவார்-தரிப்பார்கள் எ-று.

(க-து.) சிலபெண்கள் சந்தனங்களைக் கனதனங்களிற்பூசுவார்கள் சில பெண்கள் தேனுண்டுகளிப்பார்கள். சிலபெண்கள் மாலைகளைத் தரிப்பார்கள் எ-ம். 60

நிழலொடுகறுவிப்பாகெறிந்தூன்பெய்நிணத்தொடுபழகுகூன்பிறைக்கோட்டழிகவுட்கடாத்தநறுநண்மால்யானைபகற்றுமினெயிற்புறத்தென்பார், மழைமதர்நோக்கிமன்றல்செய்காலைவல்லவர்கன்னலிற்றெரிவார், விழைவொடுமகிழ்வுற்றளவளாய்ப்புகுந்தோர் வியப்புறவிருந்தெதிர்கொள்வார்.

(இ-ள்.) நிழலொடு-தங்களிழலோடு; கறுவி-கோபித்து, பாகெறிந்து-பாகனைவீசி, ஊன்பெய்-தசையைப்பெய்கின்ற, நிணத்தொடு-நிணத்தோடு, பழகு-பழகாநின்ற, கூன்பிறைக்கோட்டு - வளைவுபொருந்திய பிறைபோலுங்கொம்பினையும், அழி - அழிக்கிற, கவுள்-கதுப்பினிலொழுகுகின்ற, கடாத்த-மதத்தினையுமுடைய, நறுநண்-அஞ்சாத, மால்யானை-பெரியயானையை,எயிற்புறத்து-மதிற்புறத்தில், அகற்றுமினென்பார்-நீக்குங்களென்பார்கள், மழைமதர்நோக்கி-தமயந்தியினது, மன்றல்செய்காலை-விவாகஞ்செய்யும்பொழுதை, வல்லவர் (கணிதநூலில்) வல்லமையுடையவர்கள், கன்னலில் - நாழிகைவட்டிலால், தெரிவார் - தெரிந்துகொள்வார்கள், விழைவொடு-விருப்பொடு, மகிழ்வுற்று-மகிழ்ச்சியையடைந்து, அளவளாய்-கலந்து - புகுந்தோர் - அடைந்தவர்களை, வியப்புற-அதிசயிக்க, விருந்து-விருந்தாக, எதிர்கொள்வார் - எதிர்கொள்வார் எ-று.

மகிழ்ச்சி-விருப்பினது காரியமாம். நிணம்-கொழுப்பு

(க-து.) யானைகளைக் கோட்டையின்புறத் தோட்டென்பார்கள். கணிதநூலில்வல்லவர்கள் தமயந்தி முகூர்த்தகாலத்தளவை நாழிகைவட்டிலாலறிவார்கள். வந்தோரை விருந்துக்கழைப்பார்கள் எ-ம்.

விரைகமழ்முல்லைமுகைநிகரடிசில் வெள்ளியங்கிரியெனக்குவிப்பார், கருணையுங்கன்னற்கட்டியுந்தேமாங்கனிகளும்வயின்வயினிரைப்பார், திரைபொருகடலினறுநெயும்பாலுந் தெருத்தொறும்பெருக்கெடுத்தோட, வெரிபசும்பொன்னங்கலம்பலபரப்பி யிரவலர்க்கின்னமுதளிப்பார்.

---

† நாழிகைவட்டிலாவது-ஆழமுள்ள ஒருபாத்திரத்திலே நீரை நிறைத்து அதிற்பிரமாணப்படிசெய்து அடியிற் றுளையிட்டிருக்கும் வெண்கலவட்டிலை விடுக்கில், அத்துளைவழியே நீர் உள்ளேநிரம்பி அமிழ்வது ஒருநாழிகையெனக்கொண்டு காலத்தையளவிடுதற்குரிய கருவியெனக்கொள்க.

[இதனால் அன்னந்தருதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) விரை-வாசம், கமழ் - மணக்கின்ற, முல்லைமுகைநிகர்-முல்லை அரும்பையொத்த, அடிசில் - சோற்றை, வெள்ளியங்கிரியென - வெள்ளிமலை போல், குவிப்பார் - குவிப்பார்கள், கருணையும்-பொரிக்கறியும், கன்னற்கட்டியும்-சருக்கரைக்கட்டியும, தேமாங்கனிகளும்-தித்திப்புமாம்பழங்களும், வயின் வயின்-இடங்கள்தோறும், நிரைப்பார்-ஒழுங்குபடவைப்பார்கள், திரைபொரு-அலைமோதுகின்ற, கடலின்-கடல்போல, நறுநெயும்-நறியநெய்யும், பாலும்-பாலும், தெருத்தொறும் - தெருக்கடோறும், பெருக்கெடுத்தோட-அதிகரித்தோட, எரி-பிரகாசிக்கின்ற, பசும்பொன்கலம் - பசியபொற்களை, பல-அனேகமாக, பரப்பி-வைத்து, இரவலர்க்கு - யாசகர்க்கு இன்னமுது-இனியசுவையுள்ள அமுதை, அளிப்பார்-கொடுப்பார்கள் எ-று.

அமுதுக்கினிமையாவது-தகுதியாகக்கலந்துகூட்டிய † அறுசுவைகளாம் அவைசெயற்கையால்பலவகைப்படும். "நெய்விரவன்னஞ் சுத்தவெண் சொன்றி நிகழ்தல்யோதனம்பாற்சோ, றைவளர்மிளகின் வல்சியென்கடுகின் மலைதண்ணிவெங்கப்பொம்மல், செய்வளரெள்ளுப் போனகங்கட்டிச் செழும்பதமாதி மூரல்களும்" என்பதனாலறிக.

(க-து.) சாதங்களை வெள்ளிமலைபோற் குவிப்பார்கள். பொரிக்கறிகளையும் வெல்லக்கட்டிகளையு மாங்கனிகளையும் இடமெங்கு நிரைப்பார்கள், தெருக்களில் நெய்யும்பாலும் பெருக்கெடுத்தோடப் பொற்கலங்களில் யாசகருக்கமுதளிப்பார்கள் எ-ம். 62

வெள்ளியங்கிரியில்விஞ்சையர்தொகுவார்விண்ணவரெண்ணிலர்புகுவா, ரள்ளிலைநெடுவேலரசர்வந்திறுப்பாரந்தணரளப்பிலர்திரிவா, ரொள்ளொளிவிரிக்கும் பருமணிச் செஞ்சூட்டுரர் வெள்ளிடையறச் செறிவார், பள்ளநீர்க்கடல்சூழ்பெருந்தீவினுறையுநர் பரிவினிற் றெருகுவார்.

[இதனால் தேவர் மனிதர் நாகர்செய்கை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) வெள்ளியங்கிரியில்-கைலாசத்தி லிருக்கின்ற, விஞ்சையர்-வித்தியாதரர்கள், தொகுவார்-கூடுவார்கள், விண்ணவர்-தேவர்கள், எண்ணிலர்-அளவில்லாதவர், புகுவார்-நுழைவார்கள், அள்ளிலை-(மாமிசத்தை) அள்ளிக்கொள்கின்ற இலையையுடைய, நெடுவேல்-நெடிய வேலையேந்திய, அரசர்-அரசர்கள், வந்திறுப்பார்-வந்து தங்குவார்கள், அந்தணர்-பிராமணர்கள், அளப்பிலர்-அளவற்றவர்கள், திரிவார்-உலாவுவார்கள், ஒள்ளொளி-மிகுந்தவொளியை, விரிக்

---

† அவை-தித்திப்பு-புளிப்பு-உவர்ப்பு-கசப்பு - துவர்ப்பு-கார்ப்பு-எனஆறு. இதற்கு "நாவாற்கருங்குணஞ்சுவையதுவே-இனித்தல் புளித்தல் கூர்த்தல் கார்த்தல்-கைத்த றுவர்த்தலென் றறுவகைத்தாகி - நிலநீர்க்கண்ணது நிலையுங்காலே" என்பதுவிதி.

கும்-விரிக்கின்ற, பருமணி-பரியமணியினையுடைய, செஞ்சுட்டு-சிவந்தசுட்டினையுடைய, உரகர்-நாகர்கள், வெள்ளிடையற-(எங்கும்) வெளியிடமில்லாமல், செறிவார்-நெருங்குவார்கள், பள்ளம்-ஆழம்பொருந்திய, நீர் - நீரையுடைய, சடல்சூழ் - கடலாற்சூழப்பெற்ற, எழுபெருந்தீவில்-சத்ததீவில், உறையுநர்-வசிப்பவர்கள், பரிவினில்-அன்பினால், தொகுவார்-கூடுவார்கள் எ-று.

(க-து.) வித்தியாதரர்கள் கூடுவார்கள் அளவிலாததேவர்கள்வருவார்கள். இராசாக்கள் தங்குவார்கள். அளவிலாப்பிராமணர்கள் திரிவார்கள். நாகவர்க்கத்தர்கள் நெருங்குவார்கள். சத்ததீவாரும் கூடுவார்கள் எ-ம். 63

பொன்னவிர்திதலைப் பொம்மல்வெம்முலைபார் புனைமணிமாடக முறுக்கி, யின்னரம்புளரும்பாடல் கேட்டுருகி†யேழிசைமகரயாழ் பண்ணிக், கின்னரமிதுனம்பாடலுக்குடைந்து கீழ்ப்படு மிளிவரனோக்கி, மின்னகுசுடர்வேல்விஞ்சையர் மகளிர்வியப்பொடுதலைபணித்திடுவார்.

[இதனால் மாதரிசைப்பாட்டின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) பொன்-பொன்போல், அவிர்-பிரகாசிக்கின்ற, திதலை-தேமல் பரந்த, பொம்மல்-பொலிவினையுடைய, வெம் - விருப்பத்தைச் செய்கின்ற, முலையார்-ஸ்தனங்களையுடையமாதர்கள், புனைமணி-அரத்நங்கள் பதித்த, மாடகம்-முறுக்காணிகளை, முறுக்கி-திருகி, இன்னரம்பு-இனியநரம்பை, உளரும்-தடவுகின்ற, பாடல்கேட்டு-பாடலைக்கேட்டு, உருகி-மனங்கரைந்து, ஏழிசை-ஏழிசைகளையுடைய, மகரயாழ்-மகரயாழை, பண்ணி-செய்து, கின்னரமிதுனம்-கின்னரமிதுனங்கள், பாடலுக்குடைந்து அப்பாட்டுக்குத் தோற்று, கீழ்ப்படும்-தாழ்வுபடுகின்ற, இளிவரல்-இழிவை, நோக்கி-பார்த்து, மின்னகு-

† ஏழிசையாவன, குரல்-துத்தம்-கைக்கிளை-உழை-இளி-விளரிதாரம்-என்பனவாம். இவைபிறக்குமிடம், கண்டம்-நா-அண்ணம் - தலை-நெற்றி - மார்பு-மூக்கு-என ஏழு. இவையே ஏழ்சுரமெனவும், வீணையிலேழ்நரம் பெனவுஞ் சொல்லுவர். இவற்றினிசையுவமை, மயில்-இடபம்-ஆடு - கொக்கு-குயில்-குதிரை-யானை-என ஏழு. அதிதேவதைகள், விசுவாமித்திரன்-சமதக்கினி-சந்திரன்-சூரியன்-கௌதமன்-காசிபன்-ஈசன்-என ஏழுவர்.

யாழாவது, பேரியாழ்-மகரயாழ்-செங்கோட்டியாழ்-சகோடயாழ் - என நான்கு. இவற்றுள் பேரியாழிற்குநரம்பு-இருபத்தொன்று.மகரயாழிற்குநரம்பு-பத்தொன்பது. சகோடயாழிற்குநரம்பு-பதினறு- செங்கோட்டியாழிற்கு நரம்பு-எழு. அவற்றிற்கு உறுப்புகளாவன, தண்டு-பத்தர்-நரம்பு - முறுக்காணி-கொழுவாணி-முதலியனவாம். அவற்றிற்குக் கலைத்தொழில்கள், பண்ணல்-பரிவட்டணை ஆராய்தல்-தைவரல் - செலவு - விளையாட்டு-கையூழ் - குறும்போக்கு-என எட்டாம். இவற்றின்போக்கை இன்னும் விரிக்கிற்பெருகுமாதலின் விடுத்தாமென்க.

ஒளியைவீசுகின்ற, சுடர்வேல்-காந்தி பொருந்திய வேலையேந்திய, விஞ்சையர் மகளிர்-விஞ்சையர் மாதர்கள், வியப்பொடு-ஆச்சரியத்தோடு, தலை-தலையை, பணித்திடுவார்-சாய்ப்பார்கள் எ-று.

கின்னரமிதுனம் முலையார்பாடல் கேட்டுருகியாழ்பண்ணி உடைந்துகீழ்ப் படுமிளிவரனேக்கி எனக்கூட்டுக. பாடுகினைக்கப்பட்ட பண்ணுக்கு இணை-கிளை-பகை-நட்பானநரம்புகள்பெறுந்தன்மை மாத்திரை யறிந்து கட்டுதல்-ஆகிய பண்ணலென்னுங் கலைத்தொழிலைச் செய்தலின், யாழ்பண்ணி யென்றார், "பருந்துமதனிழலும் பாட்டுமெழாலுந், திருந்துதார்ச்சீவசற்கே சேர்ந் தனவென்றெண்ணி, விருந்தாகயாழ்பண்ணி வீணைதான்றோற்பா, ளிருந்தா ளிளமயில்போ லேந்திழைவேற் கண்ணாள்" என்றார் பிறரும். கின்னரமிதுன மென்பது ஒரு தேவசாதி; அது "முன்னரசிங்கமதாகியவுணன் முக்கியத்தை முடிப்பான் மூவுலகின், மன்னரஞ்சுமதுசூதனன்வாயிற் குழலினேசை செவி யைப்பற்றிவாங்க, நன்னரம்புடைய தும்புருவோடு நாரதனுந்தந்தம் வீணை மறந்து, கின்னரமிதுனங்களுந் தந்தங் கின்னரந்தொடுகிலோமென்றனரே" இதனாலறிக. இசைக்குத்தோற்று நாணமடைதலால், தலைபணித்திடுவாரென் றார். விஞ்சையரும் பாடலில்வல்லவரேனும், கண்டுநகமாதருக்கு அம்மாத ரைக் கூறினர். ஆடவரிசையினுமாதரிசைவிசேடமெனக் கூறுதலுமொன்று. அன்றி விஞ்சையரு மகளிருமெனக்கொள்ளினும் அமையும்.

(க-து.) கனதனங்களையுடைய பெண்கள் வீணைவாசிக்கும் பாடலைக் கேட்டுருகி, வித்தியாதரமாதர்கள் தலைவணங்குவார்கள் எ-ம். 64

முகிறவழ்குடுமிமாடநீள்கொடிகண் மொய்ம்மணிக் கதிர்பரப்பு தலா, னகர்வயிற்றுவர் வாயரிமதர்மழைக்க ணன்னுதல் வதுவை வேட்டடைந்த, வகலிருவிசும்பிற்பாயிருள்பருகுமருக்கர்பன்னிருவ ருந்தமது, பகலிடைப்பறந்துதிரியுமின்மினியிற்பட்டொளிமழுங்கி திரிவர்.

[இதனால் கொடிகளின் சிறப்புச் சொல்லப்படுகின்றது]

(இ-ள்.) முகில்-மேகங்கள், தவழ்-தவழ்கின்ற, குடுமி-சிகரத்தையுடைய-மாடம்-உப்பரிகைகளின், நீள் கொடிகள்-நீண்டகொடிகள், மொய்ம்மணி, நெருங்கிய இரத்நங்களினது, கதிர்பரப்புதலால்-கதிர்களை விரித்தலால், நகர் வயின்-அந்நகரத்தில், துவர்வாய்-செவ்வாயையும், அரி-செவ்வரிபரந்த, மதர் களிப்பையுடைய, மழை-குளிர்ச்சிபொருந்திய, கண்-கண்களையுமுடைய, நன் னுதல்-தமயந்தியினது, வதுவை - விவாகத்தை, வேட்டடைந்த-விரும்பிவந்த, அகல்-அகன்ற, இருள்-பெரிய, விசும்பில்-ஆகாயத்தில், பாய்-பரவிய, இருள் பருகும்-இருளையுண்ணும், † அருக்கர்பன்னிருவரும்-சூரியர்கள் பன்னிரண்டு

† அருக்கர்பன்னிருவராவார், தாத்துரு-சுக்கிரன்-அரியமன்-மித்திரன்-வருணன்-அஞ்சுமான்-இரணியன்-திவேற்சுவரன்-பூடன்-சுவித்திரு-துவட்டன்-எனக்கொள்க.

பேரும், தமது-தம்முடைய, பகலிடை-பகற்பொழுதில், பறந்துதிரியும் - பற ந்துதிரிகின்ற,மின்மினியில்-மின்மினிப்பூச்சிகள்போல்,படரொளி-படர்கின்ற காந்தியை மழுங்கினர்-ஒழிந்தவராகி, திரிவார்-திரிவார்கள் எ-று.

[அருக்கர் மின்மினியிற் றிரிவாரெனலால், உவமையணியாம்.]

(க - து) மாடங்களிற்கட்டியகொடிகளி னிரத்நங்கள் அதிகபிரகாசங் களை விரித்தலால், தமயந்தி விவாகத்திற்குவந்த பன்னிருசூரியர்களுமின்மினி போலொளிமழுங்கித் திரிவார்கள் எ - ம். 65

விண்ணகத்தமரரளப்பிலரென்கோ விஞ்சையரளப்பிலரென்கோ,மண் ணகத்தரசரளப்பிலரென்கோ வனிதையரளப்பிலரென்கோ, பண்ண மைகளிறுகூந்தன்மான்றடந்தேர்பதாதிமற்றளப்பிலவென்கோ, வெ ண்ணிமற்றுரைக்கினித்துணையென் றெம்மனோர்க்கியம்புமாறரிதே.

[இதனால் கவிற்கூற்று சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) விண்ணகத்தமரர்-விண்ணுலகத்திலிருந்துவந்த தேவர்கள் அள ப்பிலரென்கோ-அளவிலரென்றுசொல்லுவேனோ, விஞ்சையர்-வித்தியாதரர் கள், அலப்பிலரென்றுசொல்வேனோ, மண்ணகத்தரசர் - மண்ணுலகத்திலிரு ந்துவந்த அரசர்கள், அலப்பிலரென்கோ-அளவிலரென்றுசொல்வேனோ, வனி தையர்-மங்கையர்கள், அளப்பிலரென்கோ-அளவிலரென்றுசொல்லுவேனோ, பண்ணமை-ஒப்பனையமைந்த, களிறு-யானைகள், கூந்தன்மான்-புறமயிரினையு டையகுதிரைகள், தடந்தேர்-விலாசம்பொருந்தியதேர்கள், பதாதி-சேனைகள் (ஆகிய இவைகள்,) அளப்பிலவென்கோ-அளவில்லையென்று சொல்லுவேனோ எண்ணி-சிந்தித்து, உரைக்கின்-சொன்னல், இத்துணையென்ன-இவ்வளவெ ன்று, எம்மனோர்க்கு-எம்போலியோர்க்கு, இயம்புமாறு சொல்லுமாறு, அரிது- அரிதாகும், எ-று. மற்று-அசைகள்.

ஏழைமையுடையவரும் விவாகத்திற்குச் செல்லும்போது அனேகருடன் செல்வது வழக்கமாதலின் கிடைக்கற்கரிய பொருளாகிய தமயந்தியை விரும் பிவந்த செல்வங்களில் ஒருகுறைவுமின்றிய தேவர்கள்-விஞ்சையர்-நாகர்-அர சர்-முதலிய தலைவர்களையே இத்துணையெனக் குறிக்கக்கூடாதெனின், அவர் களில் ஒவ்வொருவருக்கே அனேகபரிவாரமிருக்குமாதலின் அப்படி அனேக ருக்கிருத்தலால் அவற்றையுமளவுபடுத்தல் மற்றைப்புலவர்க்கு மரிதென்பார் எம்மனோர்க்கியம்புமாறரிதென்றார்.

(க - து.) தேவர்கள் அளவில்லை, வித்தியாதரர்கள் அளவில்லை, அரசர் கள் அளவில்லை, மாதர்கள் அளவில்லை, நால்வகைச்சேனைகளும் அளவில்லை, இவ்வளவென்று சொல்லல் எனக்கரிதென்றார் புராணிகர் எ-ம். 66

எரிகதிர்ப்பசும்பொன் முகடுவேய்ந்தோங்கியேழிருகாவதமகன் ற, நிரைமணிகுயிற்றிமணவினைக்கமைத்தநித்திலவிதானமண்டபத்தி

ந்,புரிமுறுக்கவிழ வண்டுபாண்முரன்றுபூந்துகள்குடைந்துதேனுகரு ம், விரைகமழ்நறுந்தார் துயல்வருதடந் தோள்விதர்ப்பர்கோனினிது வந்தடைந்தான்.

[இதனால் வீமன்சுயம்வரமண்டபத்திற்குவருதல்சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) எரி-ஒளிவிடுகின்ற, கதிர்-கிரணங்களையுடைய, பசும்பொன்-பசியபொன்னால், முகடுவேய்ந்து-சிகரங்கூட்டி, ஓங்கி-உயர்ந்து, எழிருகாவதம்-பதினாலுகாதவழி, அகன்ற பறந்த, நிரை-ஒருக்காக, மணிகுயிற்றி-அரத்நங்கள்பதித்து, மணவினைக்கமைத்த-விவாகக்கிரியைக்குச்செய்த, நித்திலவிதானம்-முத்தினாற்செய்த மேற்கட்டியையுடைய, மண்டபத்தில்-மண்டபத்தின்கண், புரிமுறுக்கவிழ-கட்டினமுறுக்குவிரிய, வண்டு - வண்டுகள், பாண்முரன்று-இராகங்களை இசைத்து, பூந்துகள்குடைந்து - மகரந்தங்களைக்குடைந்து, தேனுகரும் - தேனையுண்ணும், விரைகமழ் - வாசனைகமழ்கின்ற, நறுந்தார்-நறியமலர்மாலையானது, துயல்வரு-அசைகின்ற, தடந்தோள்-பருத்ததோள்களையுடைய, விதர்ப்பர்கோன்-வீமராசன், இனிதுவந்து-இனிதானமகிழ்ச்சிகொண்டு அடைந்தான்-வந்தனன் எ-று.

இனிதுவத்தல்-மிகமகிழ்தல், இச்சுயம்வரத்திற்குத் தலைவன் வீமராசனாதலால், இதைக்குறித்துவந்த தேவர்-விஞ்சையர்-நாகர்அரசர்-முதலியவர்களுக்கு மரியாதை செய்யும்பொருட்டு மனமகிழ்ச்சியுடன் விதிப்படி செய்துஅலங்கரித்திருக்கும் விவாகமண்டபத்திற் சத் தான் முன்னே வந்தனனென்க.

(க-து.) செம்பொற்சிகரம் பொருத்தி அரத்நங்கள்பதித்து முத்துமேற்கட்டி கட்டிப் பதினான்குகாதவழி விஸ்தாரம்போடுவித்த பந்தலாகிய கல்யாணமண்டபத்துள் வீமசேனமகாராசன் வந்துசேர்ந்தான் எ-ம். 67

குழவிவெண்டிங்கண்மணி வடங்கிடந்தகுங்குமக்குலவரைத்தடந்தோண், மழகளிறனையவிதர்ப்பர்கோன்பணியால்வானகத்தமரர்தங்குலவு, மொழுகொளிமணிச்சூட்டுரகருஞ்சேடியுறைதருவிஞ்சையர்கணமு, மெழுகடல்வரைப்பின்மன்னருந் தேன்வேட்டிமைத்தெழுசுரும்பின்வந்தடைந்தார்.

[இதனால் திரிலோகத்தரசரும் வருதல் சொல்லப்படுகின்றது]

(இ-ள்.) குழவி-இளமையதாகிய, வெண்டிங்கள் - வெள்ளியதிங்கள்போன்ற, மணிவடம்-சந்திரகாரம், கிடந்த-இருந்த, குங்குமம்-குங்குமமணிந்த,குலவரை-குலாசலம்போன்ற, தடந்தோள்-பருத்ததோளையுடைய, மழகளிறனைய இளங்களிற்றையொத்த, விதர்ப்பர்கோன்பணியால் - வீமராசனேவலினால், வானகத்தமரர்தங்குழுவும்-விண்ணுலகத்தேவர்கள் கூட்டமும், ஒழுகொளி-ஒளிவீசுகின்ற, மணிச்சூட்டு-உச்சிமணியையுடைய, உரகரும்-நாகவேந்தரும், சேடியுறைதரு-விஞ்சையருலகத்திலிருக்கும், விஞ்சையர்கணமும் - வித்தியா

தார்கூட்டமும், எழுகடல்வரைப்பின்-சத்ததீவிலுள்ள, மன்னரும்-அரசரும், தேன்வேட்டு-தேனைவிரும்பி, இரைத்து-சத்தித்து, எழு - எழுகின்ற, சுரும்பின்-வண்டுகள்போல, வந்தடைந்தார்-வந்துசேர்ந்தார்கள் எ-று.

தேனைவிட வண்டிற்கு இனிமைசெய்துயிர்காப்பது வேறொருபொருளில்லாமையால், தேன்வேட்டிரைத்தெழு சுரும்பினென்றார். உவமிக்கப்படும் பொருட்கும் இவ்வுரைகொள்க. விதர்ப்பர்கோன்பணியால் அடைந்தாரெனக் கூட்டுக. சேடி - விஞ்சையருலகம். "சேணியுஞ் சேடியும் விஞ்சையர் சேர்விடம்." இதனாலறிக. அமரர்குழாம், உரகரும், விஞ்சையர்கணமும், மன்னரும், என்னுமெழுவாய்கள்; அடைந்தார் என்னும் வினைமுற்றுப் பயனிலை கொண்டன. [சுரும்பின் வந்தடைந்தரெனலால், உவமையணியாம்.]

(க-து.) வீமராசன் கட்டளையினால் தேவர்கூட்டமும், நகர்கூட்டமும், வித்தியாதரர்கூட்டமும், அரசர்கூட்டமும் வந்துசேர்ந்தன எ-ம். 68

கொய்துணர்த்தருவினறுநிழலமர்ந்தகுரைகழல்விண்ணவர்க்கரசுஞ், செய்யகட்கயவாயெருமையேறுகைக்குந்தென்றிசைக்கடவுளுங்கனலும், வெய்யவான்சிகையசெந்தழற்கிறையும்விரிதிரைக்கனைகடல்வேந்து நெய்துடைத்தொளிருமள்ளிலைநெடுவேலிடர்கோனுருவொடுமடைந்தார்.

[இதனால் இந்திரன்முதலிய நால்வரும் வருதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கொய்ய-பறிக்கின்ற, துணர்-பூங்கொத்துகளையுடைய, தருவின்-ஐந்தருவினுடைய, நறுநிழல்-நறியநிழலின்கண்ணே, அமர்ந்த-தங்கிய, குரை-ஒலிக்கின்ற, கழல்-வீரக்கழலையணிந்த, விண்ணவர்க்கரசும்-இந்திரனும், செய்யகண்-சிவந்தகண்களையும், கயவாய்-பெரியவாயையுமுடைய, எருமையேறு-எருமைக்கடாவை, உகைக்கும்-செலுத்துகின்ற, தென்றிசைக்கடவுளும்-இயமனும், கனலும்-சுடுகின்ற, வெய்ய-வெவ்விய, வான்-மேலாகிய, சிகைய-கொழுந்தையுடைய, செந்தழற்கிறையும்-அக்கினிபகவானும், விரிதிரை-விரிகின்ற-அலைகளையும், கனை-ஒளியையுமுடைய, கடல்வேந்தும்-சமுத்திராசனாகிய வருணனும், நெய்துடைத்த-உதிரத்தைத்துடைத்து, ஒளிரும்-விளங்குகின்ற, அள்ளிலை- மாமிசத்தோடுதயவள்ளுகின்ற இலையையுடைய, நெடுவேல்-நெடியவேலையுடைய, இடர்கோனுருவோடும்-(தாங்கொண்ட) நளனதுவேடத்துடன், அடைந்தார்-வந்தார்கள் எ-று.

உருவங்கொண் டடைந்தாரெனப் பாடங்கொள்ளின்முன்னே "அன்னவனுருவந்தாங்கி யணிநகர்மேயினர்" என்றிருப்பதால் கூறியது கூறலென்னுங் குற்றமாதலின்; உருவொடுமடைந்தாரெனப் பாடங்கொண்டு முன்கொண்ட உருவோடும் இப்பொழுதடைந்தாரெனப் பொருள்கொள்ளப்பட்டது. நெய்-நிணமென்னிலுமமையும்.

(க-து.) இந்திரனும்-இயமனும்-அக்கினிதேவனும்-வருணனும்-நளனுருக்கொண்டு வந்தார்கள் எ-ம். 69

மோட்டிளங்கயவாய் நெறிமருப்பெருமைமுலைவழியொழுகியதீம்பால்; கேட்டிளங்குருகின் பார்ப்பின் மருந்துஞ்செழுவயனிடதர்கோன்மருமான், பாட்டிளஞ்சுரும்பர்பேட்டொடுமுரன்றுபருமுகைவிரிக்குநாண்முல்லைச், சூட்டணிந்தப்பொற்சுடர்முடிகவித்துத்தொடுகழனரலவீக்கினான்.

[இதுமுதல் ஐந்துபாட்டுகளால் நளன் சுயம்வரமண்டபத்திற்குப் புறப்படுஞ்சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மோடு-உயர்வும், இள-இளமையும்பொருந்திய, கயவாய் பெரியவாயையும், நெறிமருப்பு-நெறித்தகொம்புகளையுமுடைய, எருமை-எருமைகளின், முலைவழி-முலைவழியாக, ஒழுகிய-வந்த, தீம்பால்-தித்திப்புப்பாலை-கேட்டிளம்-மிகுந்த இளமைபொருந்திய, குருகின்-நாரைகளினுடைய, பார்ப்பினம்-குஞ்சுக்கூட்டங்கள், அருந்தும்-உண்ணுகின்ற, செழுவயல்-செழுமைபொருந்திய வயல்கள்சூழ்ந்த, நிடதர்கோன்மருமான் நிடததேயத்தையாளுகின்ற நளமகாராசன், பாட்டு-பாட்டுகளை, இளஞ்சுரும்பர்-இளவண்டுகள், பேட்டோடும் பெட்டைகளுடன், முரன்று-பாடி, பருமுகை-பரிய அரும்புகளை, விரிக்கும்-மலர்த்துகின்ற, நாள் புதிய, முல்லைச்சூட்டணிந்து - முல்லைமாலையையணிந்து, அம்-அழகிய, பொன்-பொன்னாற்செய்த, சுடர்முடி-கிரணங்களையுடைய மகுடத்தை. கவித்து-கவித்துக்கொண்டு, தொடு-தொடுக்கின்ற, கழல்-வீரக்கழலை. நரல-ஒலிக்க, வீக்கினன்-கட்டினன் எ-று.

புல்லுகளைவயிறாரமேய்ந்து நீருண்டு உடையவராற் காக்கப்படுதலால், முலைவழி தீம்பாலொழுகிய வெருமையென்றார். பால்பரவிய வயலெனக்கொள்க. மருமான்வழித்தோன்றல்; அது "மருமான் பிறங்கடையும் பல்வழித்தோன்றல்" இதனாலறிக. நிடததேயத்தரசன் வழியிற்றோன்றியநளனெனக்கொள்க.

(க-து.) நளமகாராசன் மணிமுடிசூட்டி வீரகண்டாமணி காலிற்றரித்தான் எ-ம். 70

கூற்றினுவென்னக்குருதிகொப்புளிக்குங்குற்றுடைவாண்மருங்கசைத்துப், பாற்றினஞ்சுழலநிணப்புலால்கமழும்பரிவெரிபரிதிவேலேந்தி, நூற்றிதழ்க்கமலமுனைமுழுக்கவிழநெறில்பரிதேரிளங்கதிரோன், றோற்றினவென்னவிழுமிழ்கொடிஞ்சிச்சுடர்மணித்தேர்மிசைப்பொலிந்தான்.

(இ-ள்.) கூற்றினுவென்ன-இயமனுடைய நாவைப்போல், குருதிகொப்புளிக்கும்-உதிரத்தையுமிழ்கின்ற, குற்றுடைவாள்-குறியசுரிகையைய, மருங்கசைத்து-பக்கத்திற்சொருகிபாற்றினம்-பருந்துக்கூட்டங்கள், சுழல-வட்டமிட,

நிணப்புலால்-உதிரநாற்றம், கமழும்-நாறுகின்ற, பாய் பரவுப் பற்ற, ஒளி-காந்தியையுடைய, பரிதி-சூரியன்போன்ற, வேலேந்தி-வேற்படையைத்தாங்கி, நூற்றிதழ்-நூறிதழ்களையுடைய, கமலமுகை-தாமரையரும்புகள், முருக்கவிழ-கட்டவிழ, தொழில்-வேகத்தையுடைய,பரி-குதிரைகட்டிய,தேர் தேரையுடைய, இளங்கதிரோன்-பாயசூரியன், தோற்றினனென்ன-உதயமானானென்றுசொல்ல, நிழலுமிழ்-நிழலைக்கொப்புளிக்கின்ற, கொடிஞ்சி-தேன்மொட்டையுடைய, சுடர்-கிரணங்களையுடைய, மணி-இரத்திநங்கள்பதித்த, தேர்மிசை-தேரின்மேல், (நளமகாராசன்) பொலிந்தான்-தோன்றினான் எ-று.

யமன் நாவினால் அனேகரைக் கொல்லும்படி சொல்லுதலால், அக்கொலைத்தொழிலா லுண்டாகிய உதிரத்திற்கு அவனது நாவானது காரணமாதல் பற்றி, அதுபோல-குருதிகொப்புளிக்கும் உடைவாளென்றார். நாவைப்போற் சிவந்து அடிபாகந் முனைகூரியதெனினும் அமையும். அன்றிக் குருதிகொப்புளித்தலை உடைவாளுக்கு விசேடணமாக்கி நாவென்னக் குற்றுடைவாளெனக் கூட்டின். அத்துணைச்சிறப்பின்றும் உணவளிப்பவரை உண்பவரெப்போதுஞ் சூழ்வாராதலால், அதுபோல் தமக்கு விருந்துசெய்யும் வேற்படையைப் பருந்துகள் நீங்காமையால்; பாற்றினஞ்சுழல நிணப்புலால்கமழும் வேலென்றார் சூரியனைக்கண்டு தாமரைமலர்தல்போல், நளனைக்கண்டு மாதர்முகமலர்ச்சிபெறுதல் கொள்க. நளன் தேரிற்பொலிதலாலி (தேரிளங்கதிரோன்றோற்றினனென்ன) வெனசூரியனை அவனுக்கு உவமையாக்கினார். [இது உவமையணி.]

(க-து.) நளமகாராஜன் குற்றுடைவாள் பக்கத்திற்சொருகி வேலாயுதந்தாங்கிச சூரியனைப்போலத் தேரிலேறினான் எ-ம். 71

இன்னகைத்துவர்வா யிளமுலைமகளிரெரிமணிப்படியகமேந்தப், பொன்னவிதிதலைப் பொம்மல்வெம்முலையார் பொழிகதிர்ச் சாமரையிரட்ட, மின்னெனதுடங்கு மருங்குலார்மருங்கின் வெள்ளிலையுதவினர்செல்லத், தென்வரைச்சார்ந்த நானமென்றேறுந் திசைதிசைக்காவதங்கமழ.

(இ-ள்.) இன்னகை - இனியநகையையும் துவர்வாய்-செவ்வாயையும், இளமுலை - இளமைபொருந்திய ஸ்தனங்களுமுடைய, மகளிர்-மாதர்கள், எரிமணி-ஒளிவிளங்குகின்ற மணிகளிழைத்த, படியகமேந்த - (தம்பலப்) படிக்கமேந்திவர, பொன்னவிர் - பொன்போலும்விளங்குகின்ற, திதலை - தேமலையுடைய, பொம்மல்-பொலிவுபெற்ற, வெம்முலையார் - விருப்பத்தைத்தருகின்ற முலைகளையுடையமாதர்கள், பொழிகதிர் - கிரணங்களைவீசுகின்ற, சாமரையிரட்ட-சாமரைவீசிவர, மின்னென - மின்னல்போல், நுடங்கும்-அசைகின்ற, மருங்குலர்-இடையையுடையமாதர், மருங்கின்-அருகிலிருந்து, வெள்ளடை-தாம்பூலத்தை, உதவினர்செல்ல - கொடுத்துக்கொண்டுவர; தென்வரைச்சார்ந்

தும்-பொதியமலையிற்பிறந்த சந்தனக்கட்டையாற் சேர்க்கப்பட்ட சந்தனமும், நானமென்சேறம் - கஸ்தூரியினதுமெல்லியகுழம்பும், திசைதிசை-எட்டுதிக்குகளிலும், காவதம்-காததூரமளவும், கமழ-பரிமளிக்க எ-று.

நகை-பல்: புன்சிரிப்பெனினுமொக்கும். துவர்-பவளமுமாம்-மகளிர்-முலையார்-மருங்குலார்-எனப்பன்மையாகக் கூறினமையால், நளன்சக்கிரவர்த்தியாதலாலும் செல்வமிகுதியாலும் ஒருதொழிலைப் பலசெய்தனரென்க. "ஒருமொழியொழிதனினங்கொளற்குரித்தே" என்பதனால் வெள்ளிலையெனவே, துவர்க்காய்-சுண்ணம்-வாசந்தரு பண்டமுதலியவுங் கொள்க: அவை "தகரந்தக்கோலங் கோட்டஞ்சாதிக்கா, யிலவங்கமேலங் கச்சோலமாஞ்சில், பகரும்வாசந்த பண்டப்பெயரே" இதனாலறிக. இப்பாட்டுமுதல் மூன்றுபாட்டுங்குளகமாம், நளனென்னுந்தோற்ற யெழுவாய் மூன்றும்பாட்டிற் புகுந்தானென்னும் வினைமுற்றுப் பயனிலைகொண்டு முடிந்தது.

(க-து) அந்நளமகாராஜன் கனதனங்களையுடைய சிலபெண்கள் நவமணிகளிழைத்த தம்பலப்படிகங்களேந்தவும், சிலபெண்கள் சாமரைகள் வீசவும், சிலபெண்கள் பஞ்சவாசங்கள்பொருந்திய பாக்குவெற்றிலைகள் மடித்துக்கொடுக்கவும், சந்தனங் கஸ்தூரி திக்கெங்கும்பரிமளிக்கவும் எ-ம். 72

குளிர்மதிபொருவ நிலவுகொப்புளிக்குங் கொற்றவெண்கவிகை மேனிழற்ற, வளியினம்புடைக்குந் தழைசெவிபருஉத் தாளசுவா விருபுடை நெருங்க, முளரிமென்மலர்த்தா டொழப்புகுமரசர்முடியொடு முடிபொருதுகுத்த, வொளிகிளர்பசும்பொற்றுகள்பரந்தவனி யும்பர்தம்பதியினிற்சிறப்ப.

(இ-ள்.) குளிர்மதிபொருவ-குளிர்ச்சிபொருந்தியசந்திரனையொப்ப, நிலவுகொப்புளிக்கும் - பிரகாசத்தையுமிழ்கின்ற, கொற்றவெண்கவிகை - வெண்கொற்றக்குடை, மேல்-மேலே, நிழற்ற - நிழலைச்செய்ய, அளியினம் - வண்டினங்களை, புடைக்கும்-ஓட்டுகின்ற, தழைசெவி-தழைந்தகாதுகளையும், பருஉத்தாள்-பருத்தகால்களையுமுடைய, அரசுவா - உத்தமயானைகள். இருபுடைநெருங்க-இரண்டுபக்கத்திலுநெருங்கிவர, முளரிமென்மலர்த்தாள் - தாமரையின் மெல்லியமலர்போன்ற பாதங்களை, தொழப்புகும - வணங்குதற்குவருகின்ற, அரசர்-அரசர்களுடைய, முடியொடு முடிபொருது மகுடங்களோடு மகுடங்கள் தாக்கி, உகுத்த - உதிர்த்த, ஒளிகிளர் - ஒளிவிளங்குகின்ற, பசும்பொன்-பசியபொன்னாலாகிய, துகள்பரந்து-தூளிகள்பரவி, அவனி-பூமியானது, உம்பர்தம்பதியில்-பொன்னகர்போல், சிறப்ப-சிறப்பையுடைய எ-று.

அரவான்றது - எழுறப்புநிலந்தோய்ந்து வெள்ளிய நகத்தாய், காலாலும்-கையாலும் - வாலாலும்-கோட்டாலும் - பகையைக் கொல்லவல்லதாய், எழுமுழமுயர்ந்து ஒன்பதுமுழநீண்டு பதின்மூன்று முழஞ் சுற்றள

வுடையதாய், தீயுமிழ்சிறுகணுஞ் செம்புகருமுடைத்தால், முன்புயர்ந்து பின் பணிந்திருப்பதாம். †

(க-து.) வெண்குடைபிடிக்கவும்-யானைகளிருமருங்கு நெருங்கவும்-அரசர்கள் வணங்கவும் எ-ம். 73

உரப்புநீர்தரங்கங் கடலுடைந்தென்ன வொலிகெழுபல்லியந்துவைப்ப, மருவலர்க்கடந்த வொளிறுவாள்விசயமாகதரினிதினெனத் தெடுப்பத், திருகுவெஞ்சினத்தவரிசிலையுழவர்சேட்டிளம்புலியெனச் சூழ, வெரிபசும்பொன்செய் மாடநீண்மறுகினிந்திரகுமரனிற்புகுந் தான்.

(இ-ள்.) உரவு-ஒலியையுடைய, நீர்-நீர்நிறைந்த, தரங்கம்-அலைவீசுகின்ற கடலுடைந்தென்ன-சமுத்திரமுடைந்ததுபோல், ஒலிகெழு-சத்தமிகுந்த, பல்லியந்துவைப்ப-நானாவிதவாத்தியங்களைமுழக்க, மருவலர்-சத்துருக்களை, கடந்த-வென்ற, ஒளிறு-பிரகாசிக்கின்ற, வாள்வாட்பாடையினது, விசயம்-(வீரமுதலிய) வெற்றியை, மாகதர் - வந்தியர்கள், இனிதின்-இனிமையினால், எத்தெடுப்பு-துதிசெய்ய, திருகு-மாறுபடுகின்ற, வெஞ்சினத்த--வெவ்வியகோபத்தையுடைய, வரிசிலை-நெடியவில்லேந்திய, உழவர்-காலாள்கள், சேட்டிளம்புலியெனா-மிகுந்த இளமைபொருந்திய புலிப்போத்துப்போல, சூழ-சூழ்ந்துவர எரி-ஒளிவிடுகின்ற, பசும்பொன்செய்-பசியபொன்னாற்செய்த, மாடம்-உப்பரிகைகளையுடைய, நீண்மறுகில் - நெடியவீதியில், இந்திரகுமாரன்போல், (நளமகாராஜன்) புகுந்தான்-போயினான் எ-று.

கடலுடைதலின் மிக்க வொலியின்றாதலால், அதைப் பல்லியத்துக் குவமையாக்கினர். பகைவரைக்கடத்தலின் மிக்க வென்றியின்றென்பதற்கு, மருவலர்க்கடந்த வாள்விசய மெனப்பட்டது. வீரத்தோடுபாய்தல்பற்றிச் சிலையுழவர்க்குப் புலி உவமையாயின. இந்திரகுமாரன்-இந்திரனாகிய குமரனும். அரசாக்ஷி-செல்வம்-போகம்-முதலியவற்றிற் குறைவில்லாமையால், இந்திரகுமரனையுவமிக்கப்பட்டது. [இது உவமையணி.]

(க-து-) பலவாத்தியங்கள் முழங்கவும், புகழ்வோர்துதி செய்யவும், சுத்தவீரர்கள் சூழவும், இராசவீதியில் இந்திரனைப்போல் நளமகாராஜன் வந்தான் எ-ம். 74

---

† அது - "காலொருநான்குந் துதிக்கையுங் கோயமும், வாலுமுப்போடேழு மாநிலந்தோய்ந்து. பாலுஞ்சங்கும் போலக்காலுகிர், மாலினுநான் வொருதனிக்கையினும், வாலினுமருப்பினுங் கோறல்வல்லதாய்ப், பதின்மூன்றுமுழச்சுற்றுடையதாகி. யெழுமுழமுயர்ந்தோன் பதுமுழநீண்டு, தீயுமிழ்சிறுகணுஞ் செம்புகருமுடைத்தாய், முன்புயர்ந்து பின்பணிந்ததாயினவ்யானை, அரசுவாவென்ன வறையவும்படுமே." இதனாலறிக.

அலங்குளைப்புரவித்தேர்மிசைப்பொலிந்த வரசிளங்குமரனை நோக்கி, நலங்குடியிருந்தநாகிளவேய்த்தோணங்கையர்பலரும்வந்தீண்டி, விலங்கிவில்லுமிழு மொருபெருஞ்சேடி விஞ்சையர் குமரனே வென்பார்,பொலங்குழைமடவாருளம்புகுந்துருக்கும் பூங்கணைக்குமரனே வென்பார்.

[இதுமுதல் பதினொருபாட்டுகளால் சுயம்வரமண்டபத்திற்குச் செல்கின்ற நளனைக்கண்ட மங்கையர்கள், தாங்கள்கொண்ட விரகத்தால் வேறுவேறு கக்கூறுதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) அலங்கு-அசைகின்ற, உளை-புறமயிரினையுடைய, புரவிகுதிரை கட்டிய, தேர்மிசை-தேரின்மேல், பொலிந்த-விளங்கிய, அரசிளங்குமரனை-நளமகாராசனை,நோக்கி-பார்த்து, நலங்குடியிருந்த-நன்மைதங்கிய, நாகிளவேய்த்தோள்-மிகுந்த இளமையுள்ள மூங்கிலையொத்த தோள்களையுடைய, நங்கையர்பலரும்-மாதர்களனைவரும், வந்தீண்டி-வந்துசேர்ந்து, விலங்கி-தனித்தனியாக, வில்லுமிழும்-ஒளியைவீசுகின்ற, ஒரு-ஒப்பற்ற, பெரும்-பெரிய, சேடி-விஞ்சையருலகத்திலிருக்கின்ற, விஞ்சையர்குமரனேவென்பார் - விஞ்சையர் குமரனேவென்பார்கள், பொலங்குழை-பொற்குழைகளையணிந்த செவிகளையுடைய, மடவார்-மங்கையர்களுடைய, உளம்புகுந்து-உள்ளத்தினுழைந்து, உருக்கும்-(அதைக்) கரைக்கின்ற, பூங்கணைக்குமரனேவென்பார் - மலரம்புகளையுடைய மன்மதனே வெனபார்கள எ-று.

பெண்களுக்குவேண்டு நற்குணமனைத்து மெப்பொழுது நீங்காதிருத்தலால், நலங்குடியிருந்தவென்றார். நங்கையர்பலரும் இவன்செல்லுதல் ஆரவாரத்தாற் றெரிந்தனரெனக் கொள்க. விஞ்சையர்குமரன் - விஞ்சையர்க்கரசன் மடவாருளத்தை யுருக்குதலால், பூங்கணைக்குமரனேவென்றார். விலங்கியென்பதற்கு, இருளைவிலக்கியெனவிகாரமாக்கினுமமையும். "பெயர்வினையும்மைசொற் பிரிப்பெனவொழியிசை-யெதிர்மறையிசையெனுஞ்சொல்லொழிபொன்பதுங் குறிப்புந்தத்தமெச்சங்கொள்ளும." இவ்விதியால் என்பார் என்றது, என்றுசொல்லுவார் என்னுஞ்சொல்லெச்சஞ் சொல்லொடுமுடிந்தது. [இது ஐயவணி-]

(க-து.) மாதர்கள்பலருந் தேர்மேல்வரும் நளனைப்பார்த்து, வித்தியாதரனே என்பார்கள். மன்மதனே என்பார்கள் எ-ம். 75

வண்டுழாயலங்க லுயல்வருதடந்தோண மணிநிறவண்ணனே யென்பார், தெண்டிரைக்கடல்வாய்ச் சூர்முதறடிந்த சினவுவேற்குமரனேயென்பார், விண்டலத்தியங்கு மந்திரமறந்துவீழ்ந்தியவிறக்கனேயென்பார், கொண்டையந்தடங்கண் பெற்றபேறின்றேயிடைத்தனம்யாமெனக்களிப்பார்.

(இ-ள்.) வண்டுழாயலங்கல்-வளம்பெற்றதுளபமாலை, துயல்வரு-அசைகின்ற, தடந்தோள்-பருத்ததோள்களையுடைய, மணிநிறவண்ணனேயென்பார் நீலரத்ந நிறத்தையொத்த நிறத்தையுடைய நாரணனேயென்பார்கள், தெண்டிரைக்கடல்வாய்-தெளிந்த அலைமோதுகின்ற கடலிடத்தே, சூர்முதறடிந்த-சூரபதுமனாகிய முதல்வனைக்கொன்ற, சினவுவேல்-கோபஞ்செய்கின்ற வேற்படையையுடைய, குமரனேயென்பார்-குமாரக்கடவுளோ வென்பார்கள், விண்டலத்தியங்கும்-ஆகாயத்திற்சஞ்சரித்தற்குரிய, மந்திரம்-மந்திரத்தை, மறந்து-மறந்துவிட்டு, வீழ்ந்து-பூமியில்வீழ்ந்து, இயல்-பொருந்திய, இயக்கனேயென்பார்-இயக்கனேயென்பார்கள், கெண்டையந்தடங்கண் - சேலையொத்தழகிய விசாலமபொருந்தியகண்களை, பெற்றபேறு-பெற்றுக்கொண்டபேற்றை, இன்றே-இப்பொழுதே, யாம்-நாம், கிடைத்தனமென-பெற்றனமென்று, கிளப்பார்-சொல்வார்கள் எ-று.

இங்ஙனஞ்சொல்லிய தேவர்களழகையொத்த அழகும்-அவர்கள் செய்கையையொத்த செய்கையும்-நளனுக்கிருத்தலால், மாதர்கள் இவ்வாறுகூறினார். கண்களுக்குப்பேறுவது-அழகுள்ள ஒருபொருளைக் காண்டலாம். [இதுவும் அவ்வணி.]

(க-து.) விஷ்ணுவோ, சுப்பிரமணியனோ, இயக்கனோ, கண்கள்பெற்ற தற்சக் காட்சிப்பேற்றைப் பெற்றோம் என்பார்கள் எ-ம். 76

ஈர்க்கிடைபுகாமலடிபரந்தோங்குமேரிளவனமுலைதுவர்வாய்த்,
தாங்கணங்கனையார் நாணமுமடனுஞ்சங்கமுஞ்கலையுமுண்ணிறையும்,
போக்கினர் புலம்பிக்கண்கவர்வனப்பிற்புரவலன் றடம்புயம்புல்லும்,
மேக்கரவதனாலுளம்விட்டகலுமின்னுயிர்தாங்கினர்மெலிவார்

(இ-ள்.) ஈர்க்கிடைபுகாமல்-இடையிலீர்க்குநுழைதற்கிடமில்லாமல், அடிபரந்தோங்கும்-அடிபரந்தோங்கிய, ஏரிளவனமுலை-அழகும் இளமையும் சந்தனக்கோலமும் பொருந்திய ஸ்தனங்களையும், துவர்வாய்-செவ்வாயையுமுடைய தாக்கணங்கனையார்-இலக்குமியையொத்த மடவார்கள்.நாணமும்-நாணத்தையும், மடனும்-மடமையையும், சங்கமும்-வளையையும், கலையும்-ஆடையையும், உண்ணிறையும்-உள்ளேயிருக்கின்ற கற்பையும், போக்கினர்-ஒழித்தவராகி, புலம்பி-இரங்கி, கண்-கண்களின்பார்வையை, கவர்-தன்னிடத்தேயிழுத்துக்கொள்கின்ற, வனப்பின்-அழகையுடைய, புரவலன்-நளமகாராசனுடைய, தடம்-பருத்த, புயம்-தோள்களை, புல்லும்-தழுவவேண்டுமென்னும், எக்கறவதனால்-எக்கத்தினால், உள்ளம்விட்டகலும்-உள்ளத்தைவிட்டுநீங்கும், இன்னுயிர்-இனியவுயிரை, தாங்கினர்-சுமந்தவராகி, மெலிவார்-மெலிவார்கள் எ-று.

"பிராணனுடலகத்தியங்குங்காற்றலை - தொன்றேசெயற்கையிற் பலபெயர்பெறுமே" இவ்விதியால் செயற்கையாற் பலபெயர்பெறும். அகத்தைவிட்டு நீங்கும் உயிரைத்தாங்கி வருந்தியிருந்தனரென்க.

(க-து.) இலக்குமிக்கொப்பான பெண்கள் நாணம்-மடம்-வளைகள்-ஆடை-கற்பு-இவையிழந்தவர்களாய், நளனைக்கூடும் ஆசையா லுயிர்வைத் திருந்தார்கள் எ-ம். 77

பாட்டளிது தைந்துபருமுகையவிழ்க்கும்பைந் துணர்த்தெரியல்
சூழ்கூந்தற்சூட்டுடையுச்சிநாகமங்கையர்தந் துணைமுலைபசப்பவந்தெ
ய்தி, வாட்டிறற்குரிசில்செயிரறவிளங்குவனப்பெலாம் வந்தியருரைப்
பக், கேட்டகண்கண்டுகளிப்புறநோக்கிக்கிடைத்ததெந்தவமெனாக்கி
ளப்பார்.

(இ-ள்.) பாட்டளி-இசையைப் பாடுகின்ற வண்டுகள், துதைந்து-நெருங்கி, பருமுகை-பரிய அரும்புகளை, அவிழ்க்கும்-விரிகின்ற, பைந்துணர்-பசிய பூங்கொத்துகளாற் செய்த, தெரியல்சூழ்-மாலைசுற்றிய, கூந்தல்-அளகபாரத்தையும், சூட்டுடையுச்சி-உச்சிக்கொண்டையையுமுடைய, நாகமங்கையர்-நாகலோகத்துமாதர், தம்-தம்முடைய, துணைமுலை-இரண்டு ஸ்தனங்களும், பசப்ப-வேறுபட்ட நிறத்தையடைய, வந்தெய்தி-வந்துசேர்ந்து, வாட்டிறற்குரிசில்-நளமகாராசனது, செயிற-குற்றமில்லாமல்,விளங்கும்-பிரகாசிக்கின்ற, வனப்பெலாம்-அழகனைத்தையும், வந்தியருரைப்ப-புகழ்வோர்கள் சொல்ல, கேட்ட-கேள்வியுற்ற, கண்-கண்களானவை, கண்டு-பார்த்து, களிப்புற-களிப்பையடைய,நோக்கக்கிடைத்தது,எந்தவமென-எப்பொழுதுசெய்ததவமென்று கிளப்பார்-சொல்லுவார்கள் எ-று.

நாகமங்கையர் கண்ணே செவியாகக் கொண்டமையால்,இருவகையின்பமும் ஒருகாலத்து ஒன்றானலடைந்தாராதலின் வியந்து அவ்வாறு கூறினரென்க. அவர்க்குக் கண்ணேசெவியென்பது "பணியேகட்செவி பாம்பெனப்படுமே" அன்றியும் "பரிசமுருககாண்டல் பகர்கேள்வியோர்பான், மருவுமணிப்பூணினன் வந்தான்" இவைற்றாலறிக.

(க-து.) நளனுடைய அழகைப்புகழ்வோராற் கேள்விப்பட்டகண்களாகிய செவிகளே-இன்று நீங்கள் நளனைக்காணப்பெற்றதுஎக்காலஞ்செய்த தவமோ என்றார்கள் நாகமங்கையர்கள் எ-ம். 78

அமைத்தடமென்றோ ளறம்பையர்திதலை யணிந்தபொற்றடமு
லைப்பாரஞ், சுமக்கலாதொல்கி நுழைமருங்கொசியத் துகிழ்கொடிம
றுகின்வந்தெய்திச் சமர்த்தலைபுண்டோ ராருயிர்பருகிந்தாமவேற்கு
ரிசிலைநோக்கி, யிமைப்பிலநாட்டம் பெற்றபேறின்றேயெய்தினமென
மகிழ்ந்திசைப்பார்.

(இ-ள்.) அமை-மூங்கிலையொத்த, தடம்-பருத்த, மென்றோளரம்பையர்-மெல்லியதோள்களையுடைய அரமங்கையர்கள், திதலையணிந்த-தேமலையணிந்த, பொன்-அழகிய, தடம்-பருத்த, முலைப்பாரம்-முலைகளினுடையபசுமையை, சுமக்கலாது - பொறுக்கமாட்டாமல், ஒல்கி - துவண்டு, நுழை-நுட்பமாகிய

மருங்கு-இடையானது, ஒசிய - வருந்த, துகிற்கொடி - வஸ்திரக் கொடிகளை யுடைய, மறுகின்-வீதியிலே, வந்தெய்தி-வந்துசேர்ந்து, சமர்த்தலே-யுத்தகளத் தில், உடன்றோர்-பொருதவர்களுடைய, ஆர்-நிறைந்த, உயிர்-ஆவியை, பருகும்-உண்கின்ற, தாமம்-வெற்றிமாலை தரித்த, வேல்-வேற்படையையுடைய, குரிசிலை-நளமஹாராசனை, நோக்கி-பார்த்து, இமைப்பிலாநாட்டம்-இமையா விழிகளை, பெற்றபேறு-அடைந்தபேற்றை இன்றே-இப்பொழுதே, எய்தின மென-அடைந்தனமென்று, மகிழ்ந்து-மகிழ்ச்சியடைந்து, இசைப்பார்-சொல் லுவார்கள் எ-று.

முலைப்பாரஞ் சுமக்கக்கூடாதிருந்தும் நுண்ணிய இடைவருந்த அரம் பையரெய்தியது தாம் எப்பொழுதுஞ் சேவிப்பட்டும் அறியாத அழகு இவ னிடத்திருத்தலாலென்க. இந்திரன் முதலிய தேவரிடத்துமில்லாத இவனி டத்துள்ள அழகைக்கண்டு, இமையாவிழிகள் பெற்றபேற்றை யடைந்தன மென்றாரென்க.

(க-து.) அரம்பையர்கள் நளனைப்பார்த்து, இமையாக்கண்கள் பெற்றதற் குப்பேறு இன்றேபெற்றோம் என்பார் எ-ம். 79

கலைவலானெஞ்சிற் காதன்மீதூர்ந்துகடிமணங்குறித்துவண்புகு தப், புலவுநாறழல்வேல்விதர்ப்பர்கோன்மடந்தைபுரிந்தவமெனப்பு கல்வா, ரிலைகுலரம்பைப்பூணரசிளங்குமரரெண்ணிலர் விரும்பிமேவி டினுஞ், சிலைவலாற்கன்றிச்செழுமலர்த்தெரியல் சேயிழைபுனையுமோ வென்பார்.

(இ-ள்.) கலைவலான்-நளமஹாராசனானவன், நெஞ்சில் - மனத்தில், காதல்-ஆசை, மீதூர்ந்து-அதிகரித்து, கடிமணங்குறித்து - விவாகத்தைக் குறித்து, இவண-இந்நகரில், புகுத-வருதற்கு, புலவுநாறு-புலானாற்ற நாறுகின்ற, அழல்வேல்-தீயையொத்த வேற்படையையுடைய, விதர்ப்பர்கோன் - வீம ராசன்பெற்ற, மடந்தை-தமயந்தியானவள், புரிந்த-செய்தது, எத்தவமென- என்னதவமென்று, புகல்வார்-சொல்லுவார்கள், இலை தலாம் - இலைவிளங்கு கிற, பைம்பூண்-பசிய ஆபரணங்களையுடைய, அரசிளங்குமரர் - இராசகுமாரர் கள், எண்ணிலர்-அளவற்றபேர், விரும்பி-இச்சித்து, மேவிடினும்-வந்தாலும், சிலைவலாற்கன்றி - இவ்வரசனுக்கல்லாமல், செழுமலர்த்தெரியல் - செழுமை பொருந்திய மலர்மாலையை, சேயிழை-தமயந்தியானவள், புனையுமோவென் பார்-தரிப்பாளோவென்பார்கள் எ-று.

விதர்ப்பர்கோன் மடந்தை புரிந்த தெத்தவமெனலால், இப்படிப்பட்ட அழகுள்ளபுருடனை மாலையிடத்தாமும் அத்தவஞ்செய்யலாமென்பது கருத்து. இந்நளன்தனும் மற்ற அரசர்களுக்கில்லாமையால், தமயந்தி மாலைசூட்ட மாட்டாளென்றார்.

(க-து.) நளன்வருதற்குத் தமயந்தி என்னதவஞ் செய்தாளோ என்பார்கள். தமயந்தி நளனுக்கன்றி மற்றை யரசர்களுக்கு மாலைபிடுவாளோ என்பார்கள் எ-ம். 80

திரைக்கட லுடுத்த மாநிலநிழலுற்றந் திங்களங் கவிகைமன்னரு, மருக்கமழ்தருவி னிழல்வீற்றிருக்கும்வானவர்தொகுதியும்வருகென், ரமத்தமுண்டொளிரு மள்ளிலைநெடுவேலரசர்கோனழைத்த துகுழைக்குங், கருப்புவில்லொழித்தகாமனேயனையான் கவினலங் காட்டுதற்கென்பார்.

(இ-ள்.) திரை - அலைமோதுகின்ற, கடல் - கடலை, உடுத்த - ஆடையாகத்தரித்த, மா-பெரிய, நிலம்-பூமிக்கு, நிழற்றும் - நிழலைச் செய்கின்ற, திங்களங்கவிகை மன்னரும்-சந்திர வட்டக் குடையையுடைய அரசர்களும், மருக்கமழ்-வாசங்கமழ்கின்ற, தருவினிழல்-ஐந்தருவினிழலில், வீற்றிருக்கும்-அரசிருக்கின்ற, வானவர் தொகுதியும்-தேவர்கூட்டமும், வருகென்று-வரக்கடவீரென்று, அமரத்தமுண்டு- இரத்தைப்புசித்து ஒளிரும்-விளங்குகின்ற.அள்ளிலை-மாமிசத்தை அள்ளிக்கொள்கின்ற. இலையையுடைய, நெடுவேல்-நெடிய வேற்படையையுடைய, அரசர்கோன்-வீமராசன், அழைத்தது - அழைப்பித்தது, குழைக்கும்-வளைக்கப்பெற்ற கருப்புவில்லொழித்த - கருப்புவில்லை நீக்கிய, காமனேயனையான்-மன்மதனையொத்த நளனுடைய, கவினலம்-அழகினலத்தை, காட்டுதற்கென்பார்-காண்பித்தற்கென்று சொல்லுவார்கள் எ-று.

சுயவரமென்று குறித்து மூவுலகத்தினரையு மழைப்பித்து நளனழகைக் காட்டுவதால் அதிலே அவனுக்கு அவசியமென்னெனில், அப்படிப்பட்டவன் தன்மருகனாதல் பற்றிப்போலும்.

(க-து.) வீமன் அரசரையுந் தேவரையும் அழைப்பித்தது நளனழகைக் காட்டவென்பார்கள் எ-ம். 81

மண்ணளவன்றிம் மன்னவன்றிணிதோள் மணிவரைப்பணைப் பெனமகிழ்வார், கண்ணளவன்றுகாவலனகலங்காண்பதற்கெனமனங் கலுழ்வார், பண்ணளவன்றேயமிர்தினிற்றெனிற்பாகினிற்பழுத்தவந் தீஞ்சொல், பெண்ணளவன்றேபாணவாவுறுமிப்பேழ்குழிலென்றுபே துறுவார்.

(இ-ள்.) மண்ணளவன்று-பூமியைமாத்திரம் ஆளும் அளவுடையதன்றாகும், இம்மன்னவன்-இவ்வரசனுடைய, திணிதோள் - வலிமை பொருந்திய தோளாகிய, மணி-அழகிய,வரைப்பணைப்பென-மலையினுடையபருமனென்று, மகிழ்வார்-மகிழ்ச்சியடைவார்கள், கண்ணளவன்று - கண்களாலெட்டும் அளவன்றாகும், காவலன்-அரசனுடைய, அகலம்-மார்பு, காண்பதற்கென-பார்ப்பதற்கென்று, மனம்-மனமானது, கலுழ்வார்-கலங்குவார்கள். பண்ணளவன்று-

† பண்களினுடைய அளவன்றாகும், அமிர்தினில்-அமிர்தம்போலும்,தேனில்-தேன்போலும், பாகினில்-பாகுபோலும், பழுத்த (சுவை) முதிர்ந்த, அம்-அழகிய, தீஞ்சொல்-மதுரம்பொருந்திய சொல்லென்பார்கள். பெண்ணலவன்று-பெண்கள்மாத்திரமயங்கும் அளவினதன்றாகும், ஆணவாவுறும்-ஆண்மக்களும் விரும்பும், இப்பேரெழிலென்று-இப்பெரிய அழகென்று, பேதுறுவார்-அறிவு மயங்குவார்கள், எ-று.

திரிலோகத்தையுந்தாங்கி ஆளத்தக்கபுயவலியை இவனுக்கிருத்தலால், தோளுக்குத்திணியென்னும் அடைகொடுக்கப்பெற்றது. இவன்மார்பு பார்த்தற்கெட்டாமற் கண்ணளவினும் பரந்திருந்ததென்க. இவன்மொழி பண்ணினுமிக்கிருத்தலால், அமிர்தினிற் றேனிற் பாகினிற் பழுத்தவந்தீஞ்சொலென்றார். ஆணவாவுதல்-யாமும் பெண்பிறப்பெடுத் திருந்தோமானால் இப்படிப்பட்ட அழகுள்ள புருடனைச் சேரலாமென்று விருப்புதலாம்.

(க-து.) நளனது தோளையுமார்பையுங்கண்டு மயங்குவார்கள் எ-ம். 82

கணையங்கடல்வாய் மடைதிறந்தொழுகுங் கண்களுங்கதிர்மதி
முகமு, முருகுகொப்புளிக் குஞ்செழுமலர்த்தொடைதாழ் முழவுறழ்
திணிதடந்தோளும், பருகுவபோலநோக்குபு நோற்ற படைநெடுங்
கண்கள்போன்முலைகாள், அருவரையகல மின்புறத்திளைப்ப வருந்தவம்
புரிந்திலீரென்பார்.

(இ-ள்.) கருணையங்கடல்வாய் - அருளாகிய அழகிய கடலிலுள்ள, மடைதிறந்தொழுகும்-மடைதிறந்து வருகின்ற, கண்களும்-நேத்திரங்களையும், கதிர் முகமும்-கிரணங்களையுடைய சந்திரன்போன்ற முகத்தையும், முருகுகொப்புளிக்கும்-தேனையுமிழ்கின்ற, செழுமலர்த் தொடைதாழ்-செழுமையுள்ள மலர் மாலை தாழ்கின்ற, முழவுறழ்-மத்தளத்தை யொத்த, திணி-வலிமைபொருந்திய, தடந்தோளும்-பருத்த புயங்களையும், பருகுவபோல-உண்பனபோல, நோக்குவான்-பார்க்கும்படி, நோற்ற-தவஞ்செய்த, படை - வாட்படையை யொத்த, நெடுங்கண்கள்போல-நெடியகண்களைப் போல, முலைகாள்-ஸ்தனங்களே, அருவரை-அரியமலையையொத்த, அகலம்- (இந்நளன்)மார்பை, இன்புற-இன்பமிக, திளைப்ப-அழுந்தத்தழுவுதற்கு, அருந்தவம் - செய்தற்கரிய தவத்தை, புரிந்திலீர் செய்தீரில்லை, என்பார்-என்பார்கள் எ-று.

இதனால் தவஞ்செய்தவர் வேண்டியவை யடைவரென்பது கருத்து. அது "வேண்டியவேண்டியாங் கெய்தலாற்செய்தவ, மீண்டு முயலப்படும்." இதனாற் காண்க.

(க-து.) நளனுடைய கண்களையும்-முகத்தையும் - தோள்களையும்-பார்க்கத் தவம்பண்ணிய கண்களைப்போல, கனதனங்களே-அவன்மார்பைத் தழுவத் தவம்பண்ணிலீர் என்பார்கள் எ-ம். 83

† பண்ணென்பது, பாலை-குறிஞ்சி-மருதம்-செவ்வழி-என நான்குவகைப்படும்.

பணிமுடிக்கிடந்த பார்பொது நீக்கிப் பரித்திடுமரசிளங் குமரன், மணியெழு வனையமல்லலந் திணிதோள் வனம்பெலாங் கண்டுகண்டு வப்ப, இணர்விரிபசுந்தார் நயல்வரத்தொடுத்தவெரிமணிக்கொடிஞ்சியந்தேர்கொண், டணிகெழுமறுகின் மெல்லெனச்செல்லென்றலங்குளைப்புரவியைத்தொழுவார்.

(இ-ள்.) பணிமுடிக்கிடந்த - ஆதிசேடன்றலைமேலிருந்த, பார்-பூமியை, பொதுநீக்கி-பலவரசர்க்கும் பொதுமையாயிருப்பதை நீக்கி, பரித்திடும்- (முழுவதுந்தானொருவனே) சுமக்கின்ற, அரசிளங்குமரன்-நளனுடைய, மணியெழுவனைய-மணிததூணையொத்த, மல்லல்-வளம்பொருந்திய, அம்-அழகிய, திணிதோள்-வலிமைபெற்ற தோள்களினுடைய, வனபபெலாம்-அழகனைத்தையும் கண்டுகண்டு-நோக்கிநோக்கி, உவப்ப-மகிழ்ச்சியடைய, இணர்விரி-பூங்கொத்துகள்விரிந்த, பசுந்தார்-பசியமலர்மாலை, நயல்வர-அசைய, தொடுத்த-கட்டப்பெற்ற, எரிமணி - ஒளியையுடைய மணிகள் பதித்த, கொடிஞ்சியந் தேர் கொண்டு-மேன்மொட்டையுடைய தேரைக்கொண்டு, அணிகெழுமறுகின்-அழகுபொருந்தியவீதியில், மெல்லெனச்செல்லென்று-மெள்ளப் போகென்று, அலங்கு-அசைகின்ற, உளை - புறமயிர்களையுடைய, புரவியை - குதிரையை தொழுவார்-வணங்குவார்கள் எ-று.

கிடையாதுகிடைத்த நளமகாராஜனுடைய அழகைப்பார்த்த மங்கையர் இன்னுஞ் சிறிதுபொழுது பார்த்தற்கு இடையூறாகத் தேரை விரைவிற்கொண்டுபோதலாலே, தம்மாற் றொழப்படுதற் குரியதல்லாதாகிய விலங்கினபிறப்பையுடைய குதிரையையும் வணங்கினார்களென்க. இதனால் ஒருவருக்குத்தன் னன்பு தெரிவித்தற்கு வணக்கம்போல மற்றொன்றில்லை யென்பது கருத்து.

(க-து.) நளனழகைக்கண்டு மகிழத் தேரிற்கட்டிய குதிரைகளை மெல்லச் செல்லென்று தொழுவார்கள் எ-ம். 84

வேலெனமிளிர்ந்து குமிழ்மிசைமறிந்து வேனிலாற்கரசியலளித்துச், சேலெனப்பிறழ்ந்து குழையெதிர்நடந்து செவ்வரி பரந்துமை தோய்ந்து, காலனிற்சினவிக் கொலைத்தொழில்புரியுங்கருந்தடங்கண்ணினார்தமது, மாலுறவிடுத்தமனத்தினுங்கடிதேர் வாவுமான்றேரொடுத்தொடர்வாய்.

(இ-ள்.) வேலென-வேற்படைபோல், மிளிர்ந்து-விளங்கி, குமிழ்மிசை-குமிழம்பூவினையொத்த மூக்கின்மேற்பக்கத்தில், மறிந்து-தடைபட்டு, வேனிலாற்கு-மன்மதனுக்கு, அரசியலளித்து-அரசாட்சியைக்கொடுத்து, சேலென-கெண்டைபோல், பிறழ்ந்து-ஒளிசெய்து, குழை-குழையெனப்படுகின்றகாதணிக்கு, எதிர்-முன்பாக, நடந்து-சென்று, செவ்வரி-சிவந்தரேகைகள், பரந்து-பரவப்பெற்று, மை-அஞ்சனத்திலே, தோய்ந்து-அமிழ்ந்து, காலனில்-யமன்போல், சினவி-கோபித்து, கொலைத்தொழில்-கொல்லும்தொழிலை, புரியும்-

செய்சின்ற, கருத்தடங்கண்ணினர் - கரியவிசாலம்பொருந்திய கண்களையுடைய மாதர்கள், தமது-தம்முடைய, மாலுற-மயக்கம்பொருந்த,விடுத்த-அனுப்பப்பட்ட, மனதினும்-மனத்தைக்காட்டிலும், கடிதோ-கடுமையுடையதோ, வாவும்-தாவுகின்ற, மான்-குதிரைகட்டிய, தேரென - தேரென்று, தொடர்வார்-அத்தேரின்பின் செல்லுவார்கள், எ-று.

வேனிலாற் கரசியலளித்தலாவது-இவள் கடைக்கண் பார்வைகளானவை திரிலோகத்தரசரையும் விரகங்கொண்டு வருந்தச்செய்து மன்மதனுடைய தொழிலை விர்த்தியாக்குதலாம். மனோவேகத்தினுங் குதிரைவேகஞ் சிறிதாதலால், கண்ணினர் தமது மனத்தினுங்கடிதோ வாவுமான்றேரென்றார்.["அதுவோ பொருள்குணஞ் சாதிதொழிலெனப்-புலனும்" இவ்விதியாலிது, தொழிற்றன்மை யணியாம்.]

(க-து.) பெண்கள்விடுத்த மனவேகத்தைப்பார்க்கிலுந் தேர் அதிகவேகமுடையதென்று தொடருவார்கள் எ-ம். 85

கண்டுகண்டுருகி யினையராய்மனனுங் கருந்தடங்கண்களுங் களிக்கும், வண்டிமிர்கூந்தல் வனிதையர்வருந்த மணிநெடுவீதிவாய கன்று கொண்டல்கண்படுக்கும் வரையினின்றிழியுங் கோளரியேறென நிவந்த,விண்டோடுகொடிஞ்சித்தேரினின்றிழிந் தமேவரும்வேந்தவை புகுந்தான்.

[இதனால் நளன் அரசவைபுகுதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) இனையராய்-இத்தன்மையுடையவராய், கண்டுகண்டு-பார்த்து பார்த்து, மனனும்-மனமும், கருந்தடங்கண்களும்-கரிய பெரியகண்களும்,களிக்கும்-களிக்கின்ற, வண்டு-வண்டுகள், இமிர்-ஒலிக்கின்ற, கூந்தல்-அளகத்தையுமுடைய, வனிதையர்-மங்கையர்கள, உருகி-கரைந்து, வருந்த-துன்பமுற, மணி-அழகிய, நெடுவீதிவாய் - நெடியதெருவின்கணின்றும், அகன்று-நீங்கி, கொண்டல்-மேகங்கள், கண்படுக்கும்-நித்திரைசெய்கின்ற, வரையினின்றிழியும்-மலையினின்று மிறங்குகின்ற, கோளரியேறென-சிங்கவேற்றைப்போல், நிவந்த-உயர்ந்த, விண்டோடு-ஆகாயத்தையளாவிய, கொடிஞ்சி-யேண்மொட்டையுடைய, தேரினின்றிழிந்து-இரதத்தினின்றுமிறங்கி, மேவரும-(ஒப்பனை) பொருந்திய, வேந்தவை-அரசவையில், புகுந்தான்-(நளனென்பவன்) புகுந்தனன் எ-று.

கோள்-வலிமை. வேந்தவை-வேந்தவையெனச் சந்தவின்பநோக்கிவிகாரமாயிற்று. [வரையினின்றிழியுங் கோளரியேறென வென்றமையால், உவமையணியாம்.]

(க-து.) மாதர்கள்வருந்த நளன்தேரைவிட்டிறங்கி இராசசபையிற் புகுந்தான் எ-ம். 86

அருசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

தெரியல்சூழ் குவதிண்டோட் சிலைவலானினிதினெய்த
வரசவையிருந்தசெல்வி யரசிளங்குமரரெல்லாங்
குரைகடன்முகட்டிற்றோன்றுங் குளிர்மதிகாண்டலோடும்
விரிகதிர்மழுங்குவானின் மீனினமென்னலானார்.

[இதுமுதல் இரண்டுபாட்டுகளால் சபையிலிருந்த அரசர்களுடைய தன்மை சொல்லப்படுகின்றது.

(இ-ள்.) தெரியல்சூழ்- மாலைகள்சூழ்ந்த, குலவு-திரட்சிபொருந்திய, திண் வலிமைபெற்ற, தோள்-புயத்தையுடைய, சிலைவலான்-நளமகாராசன், இனி தின-இனிமையால், எய்த-அடைய, அரசவையிருந்த-(அப்பொழுது) இராச சபையிலிருந்த, செல்வி-அழகிய, அரசிளங்குமரரெல்லாம்-இராசகுமாரர்களனைவரும், குரை-ஒலியையுடைய, கடன்முகட்டிற்றோன்றும்-கடலுச்சியிலுதிக்கின்ற, குளிர்மதி-குளிர்ச்சிபொருந்திய சந்திரனை, காண்டலோடும் - கண்டவளவில், விரிகதிர்மழுங்கும்-விரிந்தகிரணங்களினொளிகெடப்பெற்ற, வானில் ஆகாயத்திலிருக்கின்ற, மீனினமென்னலானார்-உடுக்கணமென்று சொல்லும் படியாயினர்கள் எ-று.

கதிர்மழுங்கினும் உடுக்கணத்திற்குச் சந்திரனிடத்து வெறுப்பின்றி வருப்புமிகுதல்போல், அழகிற்குறைந்த அரசர்களுக்கு நளனிடத்து விருப்பமிகுதல்கொள்க. உடுக்கணத்திற்குச் சந்திரனிடத்து மகிழ்ச்சியுண்டாதல், அவன் உடுபதியாதலாலும் சிலைவற்றிற்குத் துணைவனாதலாலு மென்க. வடிவினன் மாத்திரமன்றி விற்போர்முதலியவற்றினு மிக்கவனென்பது தோன்ற, குலவுத்திண்டோட் சிலைவலான் என்றார்.

(க-து.) நளன்முன்னிருந்த அரசர்களெல்லாம் சந்திரன்முன்னிருந்த நட்சத்திரங்கள்போ லானார்கள் எ-ம். 87

குருமணியிமைக்கும்பைம்பொற் கோடுயர்குடுமிக்குன்றம்
பொருவுமண்டபத்தினூடு பூண்சுடர்தவழப்புக்க
செருமலிதானைவேந்தன் றிருமுகந்திங்களாக
வரசர்வாண்முகங்களெல்லா மம்புயம்போன்றவன்றே.

(இ-ள்.) குரு - நிறம்பொருந்திய, மணி-இரத்நங்கள், இமைக்கும்-பிரகாசிக்கின்ற, பைம்பொன் - பசியபொன்னாற்செய்த, கோடுயர் - உச்சியுயர்ந்த, குடுமி-சிகரங்களையுடைய, குன்றம்பொருவும்-மலையையொத்த, மண்டபத்தினூடு-விவாகமண்டபத்தில், பூண்-ஆபரணங்களின், சுடர்தவழ - ஒளிவிளங்க, புக்க-புகுந்த, செருமலிதானைவேந்தன் - நளமகாராஜனுடைய, திருமுகம்-திருமுகமானது, திங்களாக-சந்திரனாக, அரசர் - அரசர்களுடைய, வாள்-ஒளிபொ

ருந்திய, முகங்களெல்லாம்-முகங்களனைத்தும், அம்புயம்போன்ற-தாமரைமல ரையொத்தன எ-று. அன்று-ஏ-அசைகள்.

திங்களைக்கண்டவளவிலே தாமரைமலர்கள் குவிதல்போல, நளனைக்கண் டவளவில் அரசர்முகங்கள் வாடினவென்க. இதனால்அரசர்களழகினும் இவன் அழகு மேற்பட்டிருந்ததென்பது கருத்து. [திங்களென்னும் உருவகம் அம்பு யம்போன்ற வென்னும் உவமையோடு கலத்தலாற்; கலவையணியாம்.]

(க - து.) நளன்முகம் சந்திரனாகவும் - அரசர்கள்முகம் தாமரைபளாகவு மிருந்தன எ - ம். 88

கடிமலர்ப்பகழியேந்துங் காமனுநாணும்பொற்பி
னடல்கெழுபரிதிவைவேலையனையினிதினோக்கித்
தொடுகழலமரர்யாருந் துயரொடுமழுக்காறெய்தி
வடிவினிற்சிறந்தானேனு மானிடனலனேயென்றார்.

[இதனால் தேவர்கள் பொறாமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கடி-வாசனைபொருந்திய, மலர்ப்பகழியேந்தும் - பூங்கணைகளை யேத்திய; காமனும்-மன்மதனும், நாணும்-நாணத்தக்க, பொற்பின்-அழகையு டைய, அடல்கெழு-வெற்றியிருந்த, பரிதி-சூரியன்போன்ற, வைவேல்-கூரிய வேலையுடைய, ஐயனை-நளமகாராஜனை, இனிதின் - இனிமையினால், நோக்கி- பார்த்து. தொடுகழல்-கட்டப்பட்ட வீரக்கழலையுடைய, அமரர்யாரும்-தேவர்க ளனைவரும், துயரொடும்-துன்பத்துடன், அழுக்காறெய்தி - பொறாமைகொ ண்டு, வடிவினில்-உருவத்தில், சிறந்தானேனும்-இந்நளன் சிறந்திருந்தானே னும், மானிடனலனேயென்றார்-மனிதப்பிறப்பையுடையவ னல்லனேயென் றார்கள் எ-று.

அழகிற்சிறந்த நளனைத் தேவர்கள் மற்றொன்றினுங் குறைவுபடுத்தக் கூ டாமல், (வடிவினிற்சிறந்தானேனு மானிடனலனே) என்று பிறப்பிற்குறைவு சொல்லுதலால், அப்பொறாமை வார்த்தை அவனுக்குக்கல்வி-செல்வம்-வீரம்- தீரம்-போகம்-அரசு-வெற்றி-நற்குணம்-நற்செய்கை-முதலியவற்றொன்றினும் ஒருகுறைவுமில்லையென்பதனைப் புலப்படுத்தி நின்றது. அவர்களுக்கு நாம் மானிடரும் புண்ணியப்பேற்றார் பெறுவதாகிய தெய்வப்பிறப்பினால் உயர்ந்தி ருக்கின்றோமென்பது கருத்து. "பெயர் வினை யிடையுரி நான்கடியானும், பிறக்கும்வினையெனப்பேசுவார் புலவர்,!" இவ்விதியால் அழுக்காறெய்தி என் றது. பெயரடியாகப்பிறந்தவினை.

(க-து.) தேவர்கள்-நளன் அழகில் மிகுந்தாலுந் தேவனல்ல, மனிதன் தானென்றார்கள் எ-ம். 89

ஒழியரெழுதவொண்ணு வுலம்பொருவயிரத்திண்டோள்
வூரவுமான்றடந்தேரண்ணல் வுனப்பினேநோராகித்

தேவரில்வையங்காக்கு மரசரிற்செவ்விவாய்ந்த
காவலர்திருந்தநோக்கார் கடைக்கணானோக்கினரால்.

இதனால் நளனைக்கண்ட தேவர்முதலானவர் நாணஞ் சொல்லப்படுகிறது.]

(இ-ள்.) ஓவியர்-சித்திரக்காரராலும், எழுதவொண்ணா-எழுதக்கூடாத, உலம்பொரு-திரள்கல்லையொத்த, வைரம்-வச்சிரம்போன்ற, திண்டோள்-வலிமைபெற்றதோளையும், வாவும்-தாவுகின்ற, மான்-குதிரை கட்டிய, தடம்-பருத்த, தேர்-தேரையுமுடைய, அண்ணல்-நளமகாராசனது, வனப்பினை-அழகைநேராராகி-ஒவ்வாதவர்களாய், தேவரில்-தேவர்க்குள்ளேயும், வையங்காக்கும்-பூமியைப்புரக்கின்ற, அரசரில்-அரசருக்குள்ளேயும், செவ்விவாய்ந்த - அழகுபொருந்திய, காவலர்-அரசர்கள். திருந்த-நேராக, நோக்கார்-பாராராகி, கடைக்கணால்-கடைக்கண்ணினால், நோக்கினர்-பார்த்தார்கள் எ-று.

அழகிற்சிறந்தவனை அதுகுறைந்தவன் நேராகப்பார்த்தால், நம்மழகிடத்தில் இவன் மிக்கவிருப்புள்ளவனாய் நோக்குகின்றனனென்று எண்ணங்கொள்வானென்னு நாணத்தால்; கடைக்கண்ணாற் பார்த்தல் உலகிற்சுபாவமென்க.

(க-து.) தேவர்களும் அரசர்களும் நளன் அழகுக்கொவ்வாதவர்களாகி, அவனழகை நேராகப்பாராது கடைக்கண்ணாற் பார்த்தார்கள் எ-ம்.

விரிகதிரெறிக்கும்பைம்பூண் விதர்ப்பர்கோனினிதினிட்ட
வரியினஞ்சுமந்தபைம்பொ னணிமணித்தவிசின்மீது
குருதிகொப்புளிக்கும்வைவேற் குமரனிலிருந்தான்வெய்ய
செருமலிகடலந்தானைத் தீயுமிழ்வேலினானே.

[இதனால் நளனிருத்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) விரிகதிர் - விரியப்பற்ற கிரணங்களை, எறிக்கும் - வீசுகின்ற, பைம்பூண்-பசும்பொன்னாற்செய்த ஆபரணங்களையணிந்த, விதர்ப்பர்கோன்-வீமராசனால், இனிதினிட்ட-இனிமையினாலிடப்பட்ட, அரியனம-சிங்கக்கூட்டங்கள், சுமந்த-தாங்கிய, பைம்பொன்-பசியபொன்னாற்செய்த, அணி-அழகிய மணித்தவிசின்மீது-இரத்நாசனத்தின்மேல், வெய்ய-வெவ்வியசெருமலி-போர்மலிந்த, கடலந்தானை - சேனாசமுத்திரத்தையும், தீயுமிழ் - தீயையுமிழ்கின்ற வேலினான் - வேற்படையையுமுடைய நளமகாராஜன், குருதி - உதிரத்தை, கொப்புளிக்கும்-உமிழ்கின்ற, வைவேல்-கூறியவேலையுடைய, குமரனில்-குமாரக்கடவுள்போல், இருந்தான்-இருந்தனன் எ-று. ஏகாரம்-ஈற்றிசைக்கண் வந்தது.

விதர்ப்பர்கோனிட்ட மணித்தவிசிலிருந்தனனெனக் கூட்டுக. தேவராதியர் விவாகமண்டபத்தில் வந்ததும் வீமனவர்கட்கு மரியாதைசெய்ததும் பொ

துப்படச்சொல்லி, நளமகாராஜனுக்கு மாத்திரம் வேறுபிரித்துச்சொல்லியது, அவனுக்கு அவ்வளவு சிறப்பிருத்தலானும் தமயந்திமாலையிடவிரும்பி இருந்தவானுமென்க.

(க-து.) நளன் நவமணியிழைத்த சிங்காதனத்தின்மேல் சுப்பிரமணியன் போல வீற்றிருந்தான் எ-ம். 91

கொங்கவிழுருவப்பைந்தார்க் குமரனையினிதுநோக்கி
யிங்கிவன்வனப்புக்கொவ்வா திழிவரலெய்திடாம
லைங்கணைக்கிழவன்வெய்ய வழற்கணாலருவமாக்குந்
திங்கணங்கண்ணிமுக்கட் டேவினைவியக்குமன்றே.

[இதனால் மன்மதன்வியத்தல் சொல்லப்படுகின்றது]

(இ-ள்.) கொங்கு - வாசனை, அவிழ்-விரிக்கின்ற, உருவம் - உருவத்தையுடைய, பைந்தார்-பசியமாலையையணிந்த, குமரனை-நளனை, இனிது-இனிமையால், நோக்கி - பார்த்து, இங்கு - இவ்விடத்தில், இவன் - இவ்வரசனுடைய, வனப்புக்கு - அழகிற்கு. ஒவ்வாது-நிகராது, இழிவரல்-இழிதகவை, எய்திடாமல்-அடையாமல், ஐங்கணைக்கிழவன் - மன்மதனானவன், வெய்ய-வெவ்விய, அழற்கணால் - தீவிழியால், அருவமாக்கும் (தன்னை) அருவமாக்கிய, திங்கள் கண்ணி-மூன்றும்பிறையை ந்தரித்த, முக்கட்டேவினை-பரமசிவனை, வியக்கும்-அதிசயிப்பான் எ-று. அன்று-ஏ அசைகள்,

ஐங்கணைக்கிழவன் முக்கட்டேவினை வியத்தலாவது; நாம் எல்லார்க்கும் அழகில் உவமிக்கப்பட்டிருந்தோம்: இதுபொழுது நம்மை யவ்வழகால்வென்ற நளனால் இவ்வரசர்முன்னே அவமானப்படாமல் ஈசன் அருவமாக்கியது நமக்கு நன்மையாயிற்றென்று நினைந்துமகிழ்தலாம். [அருவமாக்கிய குற்றத்தைக் குணமாக்கிக்கொள்ளுதலால், இலேசவணியாம்.]

(க-து.) மன்மதன் நளன்அழகுக்குமுன் அவமானப்படாமல் சிவன்தன்னை அரூபமாக்கினதற்காக மகிழ்ச்சியடைந்தான் எ-ம். 92

ஏழ்நிலவரைப்பில்வானிற் பாதலத்தினிதுவைகும்
பாழியந்தடந்தோள்வேந்தர் பலரும்வந்தமர்ந்தவாற்றாற்
கேழ்கிளர்மணிசெயமாடங் கிளர்வெயிலெறிக்குஞ்செய்ய
வாழியந்தடங்கைமாய றகடுபோன்றிருந்ததம்மா.

[இதனால் விவாகமண்டபத்திற்கு உவமை சொல்லப்படுகின்றது]

(இ-ள்.) ஏழ்நிலவரைப்பில் † சத்ததீவுகளிலும், வானில்-தேவருலகத்தி

† சத்ததீவுகளாவன, நாவலந்தீவு-சாகத்தீவு-குசைத்தீவு-கிரவுஞ்சத்தீவு-சான்மலித்தீவு-கோமேதத்தீவு-புட்கரணத்தீவு-என்பனவாம். இவ்வெழுவகைப்பொருள்களு மவ்வத்தீவின் மிக்கனவாகையால் இவற்றாற்பெயர்பெற்றன.

லும், பாதலத்து-நாகருலகத்திலும், இனிதுறைகும்- இனிமையோடு தங்கிய, பாழி-அகலமாகிய, அம்-அழகிய, தடம்-பருத்த, தோள்-தோளையுடைய, வேந்தர்பலரும்-அரசரனைவரும், வந்தமர்ந்தமாற்றால்-வந்துதங்கியபடியால், கேழ்கிளர்-ஒளிமிகுந்த, மணிசெய் - அரத்நங்கள்பதித்த, மாடம் - விவாகமண்டபமானது, கிளர்-பிரகாசிக்கின்ற, வெயிலெறிக்கும் - வெயிலைவீசப்பெற்ற, செய்ய-சிவந்த, ஆழி-சக்கரமேந்திய, அம்-அழகிய, தடக்கை-விசாலம்பொருந்திய கையையுடைய, மாயன்-திருமாலினது, அகடுபோன்று-வயிற்றைப்பொத்து இருந்தது-இருந்தது எ-று.

["பண்புந்தொழிலும் பயனும் பொருளும்-வடிவுஞ்சுவையுமளவும்பலவு-மொப்புமைதோன்ற செப்புவதுமெய்" இவ்விதியால் இது பொருளுவமையணியாம்.]

(க - து.) விவாகமண்டபமானது பிரளயகாலத்தில் சராசரங்களடங்கிய திருமால் வயிற்றைப்போலிருந்தது எ-ம். 93

மாங்குயிர்க்குதலைச்செவ்வாய் வனமுலைபோகம்வேண்டித்
தேங்கமழ்தருவிழீழற்றேவருநிடதங்காக்கு
மோங்கெழுவனையதோளானுருவுகொண்டடைந்தாரென்னி
லாங்கவன்வனப்புநம்மா லறையலாந்தகைமைத்தன்றே.

[இதனால் நளனழகு சொல்லப்படுகின்றது]

(இ-ள்.) மாங்குயில்-மாமரத்திலிருக்கும் குயிற்சொல்லையொத்த, குதலை-மழலைச்சொல்லையும், செவ்வாய்-செவ்வாயையுமுடைய தமயந்தியினது, வனமுலை - அழகியஸ்தனங்களினுடைய, போகம்வேண்டி - போகத்தை விரும்பி, தேங்கமழ்-வாசனைகமழ்கின்ற, தருவினிழல்-தெய்வத்தருவினிழலிலிருக்கும், தேவரும்-இந்திரன்முதலிய தேவர்களும், நிடதங்காக்கும் - நிடததேயத்தை யாளுகின்ற, ஓங்கெழுவனையதோளான் - உயர்ந்த எழுகுத்தூணையொத்த தோளையுடைய நளமகாராஜனது, உருவு கொண்டு-வடிவைக்கொண்டு, அடைந்தாரென்னில்-வந்தாரேயானால், ஆங்கவன்-அவ்வரசனுடைய, வனப்பு-அழகு,நம்மால்-நம்மால், அறையலாம்-சொல்லலாம், தகைமைத்தன்று எ-று. ஏ-அசை.

(க-து.) தேவர்களே நளனழகைக்கொண்டமையால் நளனழகைச்சொல்ல எம்மாலாகுமோவென்றார் புராணிகர் எ-ம். 94

வடுநெடுங்கண்ணிகொம்மை வருமுலைத்திலைப்படுவேண்டித்
தொடுகழ லரசர்வெள்ளந் தொக்கொருங்கிருந்ததோற்ற
முடல்சினைத்திகிரிமாய னுந்தியங்கமலம்பூத்த
கடவுடன்படைப்பின்வீக்கங் காட்டுதல்போன்றதன்றே.

[இதனால்விவாகத்திற்குவந்த அரசர்கூட்டத்திற்கு உவமை சொல்லப்படுகின்றது.

(இ-ள்.) வடு-மாவடுவையொத்த, நெடுங்கண்ணி-நெடியகண்ணையுடைய தமயந்தியினது, கொம்மை-இளமையுடைய, வரு-வளரப்பெற்ற, முலை-ஸ்தனங்களில், திளைப்ப-அணைய, வேண்டிவிரும்பி, தொடு-கட்டப்பட்ட, கழல்-வீரக்கழலையுடைய, அரசர்வெள்ளம்-அரசர்கூட்டங்கள், தொக்கு-கூடி, ஒருங்கிருந்ததோற்றம் - ஒருங்குசேரவிருந்ததோற்றமானது, உடல்-பொருகின்ற, சினம்-கோபத்தையுடைய, திகிரி - சக்கரப்படையையேந்திய, மாயன்-நாரணனுடைய, உந்தியங்கமலம்பூத்த-நாபிக்கமலமான ஏதந்த, கடவுள்-பிரமதேவன், தன்படைப்பின்வீக்கம்-தனது சிருட்டியினுடைய விரிவை, காட்டுதல்-காண்பித்தால் (அதை) போன்றது-ஒத்திருந்தது எ-று.

"சொல்லாற்றெரிவினை பொருளாற்றெரிவினை-என்றிருதிறனே தம்பிறபொது" இவ்விதியால் கமலம்பூத்த கடவுள் பொருளாற்றெறிவினை.

[இங்ஙனங் கூடிய அரசவையில் பிரமன் படைப்பின் வீக்கங்காட்டுதல் போன்றதெனக் குறித்தலால் தற்குறிப்பணியாம்.]

(க-து.) திரிலோகத்திலுள்ள பிரமசிருட்டியி லடங்கிய அனைவரும் வந்திருந்தார்கள். அதனால் பிரமசிருட்டிபோலிருந்தது எ-ம். 65

தனியுருத்தாங்கியீசன் றழல்விழிப்பட்டேமென்று
பனிமலர்ப்பகழிமாரன் பலவுருவெடுத்தல்போலக்
கனிபடுகிளவியாடன் கதிரிளமுலையிற்றோய்வான்
குனிசிலைத்தடக்கைவேந்த ரொருவழிக்குழுமினாரே.

[இதனால் அரசர் ஒருங்குசேரக்கூடுதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) பனி-குளிர்ச்சிபொருந்திய, மலர்ப்பகழி - பூங்கணைகளையுடைய, மாரன்-மன்மதனானவன், தனியுருத்தாங்கி-ஒருவடிவங்கொண்டு, ஈசன்-பரமசிவனுடைய, தழல்விழி - நெருப்புக்கண்ணால், பட்டோமென்று-இறந்தோமென்று, பலவுருவெடுத்தல்போல - பலவடிவங்கொண்டதுபோல, கனிபடுகிளவியாடன் - தமயந்தியினது, கதிர் - காந்தியுடைய, முலையில் - இளமைபொருந்திய ஸ்தனத்தில், தோய்வான்-கலக்கும்பொருட்டு, குனிசிலை-வளைந்த வில்லையேந்திய, தடக்கை விசாலம்பொருந்திய, கையையுடைய, வேந்தர் அரசரானவர்கள், ஒருவழி-ஓரிடத்தில், குழுமினார்-கூடினார்கள் எ-று. ஏகாரம்-ஈற்றசைக்கண்வந்தது.

[இதுவும் அவ்வணி.]

(க-து.) அரசர்கள் மன்மதனை நிகர்த்திருந்தார்கள் எ-ம். 66

வேணிலாவுபார்த்தவெற்றிக் கபிலையும்வெருட்டிநீண்ட
மானினமருளநோக்கின் மடவரல்வதுவைகாண்பான்
பானிறவன்னமூர்ந்த பழமறைக்கிழவனோடு
நீனிறச்செங்கண்மாய னிவிசும்படைந்தான்மன்னோ.

[இதனால் பிரமவிஷ்ணுக்களின்வரவு சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) வேனிலான்-மன்மதனானவன், உயர்த்த-பிடித்த, வெற்றி-வெற்றி பொருந்திய, கயலையும்-கொடியாகியமீனையும், வெருட்டி - அச்சமுறுத்தி, நீண்ட-நீண்ட, மானினம்-மான்கூட்டங்கள், மருளும்-மயங்குகின்ற, நோக்கின்-பார்வையையுடைய, மடவரல்-தமயந்தியினது, வதுவை-விவாகத்தை, காண்பான்-காணும்பொருட்டு, பால்-வெள்ளிய, நிறம்-வண்ணத்தையுடைய, அன்னமூர்ந்த - அன்னப்பறவையைச் செலுத்திய, பழமறைக்கிழவனோடும்-பிரமதேவனோடும், நீனிற-கரியவண்ணத்தையும், செங்கண்-செய்யகண்ணையுமுடைய, மாயன் - நாராயணனானவன், நெடுவிசும்பு-நெடியஆகாயத்தின்கண், அடைந்தான் வந்தான் எ-று.

தமயந்தியினுடைய கடைக்கண்பார்வையைக் குறித்துச் திரிலோகத்தரசரும் வந்திருக்கிறபடியால், அவள்பார்வைக்கு அவ்வள சிறப்புச் சொல்லினார்.

(க-து.) பிரமனும் - விஷ்ணுவும் - தமயந்தி கலியாணத்திற்கு வந்தார்கள் எ-ம். 97

அவ்வழிநிணம்வாய்ப்பில்கி யழலுமிழ்ந்தரத்தந்தோயு
நெய்வழிபரிதிவைவேல் விதர்ப்பர்கோனீலவுண்கட்
செல்வழியனையதீஞ்சொற் றெரிவையர்தம்மைநோக்கி
மைவழிகரியகூந்தன் மங்கையைக்கொணர்மினென்றான்.

[இதனால் வீமன்செய்கை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) அவ்வழி-அப்பொழுது, நிணம்-நிணத்தை, வாய்ப்பில்கி-வாயாற்கொப்பளித்து, அழலுமிழ்ந்து-நெருப்பைக்கக்கி, அரத்தந்தோயும்-உதிரம்படிகின்ற, நெய்வழி-நெய்யொழுகுகின்ற, பரிதி-சூரியனையொத்த, வைவேல்-கூரியவேலையுடைய, விதர்ப்பர்கோன்-வீமராசனானவன்- நீலம்-கருங்குவளை மலர்போன்ற, உண்கண்-மையுண்டகண்களையுடைய, செல்வழிவனைய-செல்வழிப்பண்ணையொத்த, தீஞ்சொல்-மதுரம்பொருந்திய சொல்லையுடைய, தெரிவையர்தம்மைநோக்கி-மாதரைப்பார்த்து, மைவழி-மயிர்ச்சாந்தொழுகிய, கரியகூந்தல்-கரிய குழலையுடைய மங்கையை - தமயந்தியை, கொணர்மினென்றான்- அழைத்துக்கொண்டு வாருங்களென்றான் எ-று.

நிணம்-கொழுப்பு. நெய்-எண்ணெய். இப்பொழுது நற்பொழுதாயிருக்கின்றபடியால் கன்னியை யழைத்துக்கொண்டுவரச் சொன்னார்களென்று மங்களவார்த்தை சொல்லச் செல்கின்றவராதலால், அத்தன்மைதோன்ற (தீஞ் சாற்றெரிவையர்) என்ற மாத்திரத்தொழியாது, (செவ்வழியனைய) என வடைகொடுத்துங் கூறினர்.

(க-து.) வீமராசன் தமயந்தியை கொண்டுவரும்படிப் பெண்களுக்குக் கட்டளையிட்டான் எ-ம். 98

உரையது கேட்டலோடு மோடரித் தடங்கணல்லா
ரெரிபரந் திமைக்கும்பைம்பூ ணின்னரிச்சிலம்பொடேங்கப்
புரிகுழன் மாலைசோரப் பூசல்வண்டார்த்துப்போக
விரைவினேகிப்பைம்பொன் விளங்கிழைகோயில்புக்கார்.

[இதனால் மாதர்சென்றமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) உரையது-அச்சொல்லை, கேட்டலோடும்-கேட்டவளவில், ஓடரி-செவ்வரிபரந்த, தடங்கணல்லார்-விசாலம்பொருந்திய கண்ணையுடையமாதர்கள், எரிபரந்து-ஒளிபரவி, இமைக்கும்-விளங்குகின்ற, பைம்பூண்-பசியஆபரணங்கள், இன்னரிச்சிலம்பொடு-இனியகிண்கிணியையுடைய பாதசரத்தோடு, ஏங்க-ஒலிக்க, புரி-கட்டுப்பட்ட, குழல்-கூந்தலிலிருக்கின்ற, மாலைசோர-மலர்மாலைசோர்வையடைய, பூசல்-மிகுந்தவொலியையுடைய, வண்டு-வண்டுகள், ஆர்த்து-ஒலித்து, பொங்க-எழும்ப, விரைவு கொண்டவராகி, ஏகி-போய், பைம்பொன்-பசியபொன்னாற்செய்த, விளங்கிழை-ஒளிசெய்கின்ற ஆபரணத்தையுடையதமயந்தியினது, கோயில்-கன்னிமாடத்தில், புக்கார்-புகுந்தார்கள் எ-று.

நல்லார் உரைகேட்டவளவில் பூணுஞ்சிலம்புமேங்க மாலைசோர வண்டார்த்துப்பொங்க விரைந்தேகிக்கோயில்புக்காரெனக் கூட்டிமுடிக்க. [விரைந்துசெல்வோர் தன்மை கூறப்பட்டமையால், தன்மை நவிற்சியணியாம்.]

(க-து.) மாதர்கள் தமயந்தி மாளிகையிற் சென்றார்கள் எ-ம். 99

வாங்குவிற்றடக்கைவேந்தன் வதுவைமண்டபத்தின்வல்லே
கோங்கிளமுலையினாளைக்கொணர்கவென் றுரைத்தானென்னத்
தீங்கதிர்க்குழவித்திங்கள் சிறைகிடந்தனையநெற்றிப்
பூங்கொடிதன்னையீன்ற பொற்றொடிக்குரைத்தாரன்றே.

[இதனால் அம்மாதர்கள் வீமன் மனைவிக்குச் சொல்லியது சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) வாங்கு-வளைக்கப்பெற்ற, வில்-வில்லையுடைய, தடக்கை-விசாலம்பொருந்திய கையையுடைய, வேந்தன்-வீமராசனானவன், வதுவை மண்டபத்தின்-விவாகமண்டபத்தில், வல்லே-விரைவிலே, கோங்கிளமுலையினாளை-தமயந்தியை, கொணர்கவென்று - அழைத்துக் கொண்டு வாருங்களென்று, உரைத்தானென்ன-சொன்னானென்று, தீங்கதிர்-மதுரம் பொருந்திய கிரணங்களுடைய, குழவித்திங்கள்-இளம்பிறையானது, சிறைகிடந்தனைய-சிறையிருந்ததையொத்த, நெற்றி-நெற்றியையுடைய, பூங்கொடிதன்னையீன்ற-தமயந்தியைப்பெற்ற, பொற்றொடிக்கு-நற்றாயாகிய சாருகாசினிக்கு, உரைத்தார் சொல்லினார் எ-று.

தோற்றவனை வென்றவன் சிறையிடுத லியற்கையாதலால், நெற்றியால் வெல்லப்பட்டபிறையை-தீங்கதிர்க் குழவித்திங்கள் சிறைகிடந்தனைய நெற்றி

என்றார். வீமன் மனைவிக்குப்பெயர் சாருகாசினியென்பது "வீரவேன் மன்ன வன் விழையுங்கற்பினாண், மூரறேன்றவகை முறுவல்செய்தலால், சாரு காசினியெனச் சாற்றுநாமத்தா, ளோருமா நலமெலாந் திரண்டவுள்ளத்தாள்" இதனாலறிக.

(க-து.) மாதர்கள் வீமன்மனைவியாகிய சாருகாசினியினிடத்துவீமன்சொன் னதைச் சொன்னார்கள் எ-ம். 100

களிமகிழ்வெய்தியாங்கட் கனைத்துவண்டிமிருப்பைந்தார்த்
துளிமதுக்கோதைதன்னைத் துவரினும்விரையினானு
மொளியணிகழீஇயதொப்ப வுவப்பொடுந்திமிர்ந்துபொங்குந்
தெளிதிரைசுருட்டுங்கங்கைத் தீம்புனலாட்டினாரே.

[இதனால் தமயந்திக்கு நீராட்டல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) களிமகிழ்வெய்தி - மிகுந்தமகிழ்ச்சியையடைந்து, ஆங்கண்-அவ்விடத்தில், கனைத்து-ஆரவாரித்து, வண்டிமிரும்-வண்டுகளொலிக்கின்ற, பைந்தார்-பசியமலர்மாலையையணிந்த, துளிமது-தேன்துளிக்கின்ற, கோதை தன்னை - கூந்தலையுடைய தமயந்தியை, துவரினும் - பத்துத்துவரா லும், விரையினானும்-இருவகை வாசனைத் திரவியத்தாலும், ஒளி - ஒளியை யுடைய, மணிகழிஇயதொப்ப-மணியை யொப்பமிட்டதை யொப்ப, உவப் பொடும்-மகிழ்ச்சியுடன், திமிர்ந்து-பூசி, பொங்கும் - பொங்குகின்ற, தெளி திரை-தெளிந்த அலைகளை, சுருட்டும் - மடங்குகின்ற, கங்கை - கங்காநதியி லிருந்துகொண்டுவந்த, தீம்புனல்-இனியநீரைக்கொண்டு, ஆட்டினார்-(மாதர் கள்) முழுகப்படுத்தினார்கள் எ-று. ஏ அசை.

துவரினும் விரையினானும் எனவே, பத்துத்துவரும்-ஓமாலிகை முப்பத் திரண்டோடு பஞ்சவாசமும் † கொள்க. மணப்பெண்களுக்கு இவ்விரண்டு வகைத் திரவியங்களையும் வெவ்வேறு சேர்த்தரைத்துப் பூசி முழுக்காட்டல்

† அவை வருமாறு; "புழுகுசட்டங்கோட்டமா ரியக்கோட்ட நாகப்பூ முத்தக்காசுசயிலேகம்விலாமிச்சம், பழுதில்ருவேரிமலை யிருவேரி மாஞ்சில்-பச்சிலைகச்சோலமதி மதுரந்தக் கோலம், வழைமலர்நன்னாரி தீம் பூவெண் ணெய்கண்டில்-வருளப்பூத் தாவரிசி யேலஞ்சாதிக்காய், தழைசரள மிலவங்க-காகணமஞ்சட்டி-சண்பகமொட்ட ரத்தைநரும் பிசின்றகரங் குக்குல், கூறிய வோமாலிகையெண் ணன்கொடுகத்தூரி-குங்குமங்கற் பூரமகில் சந்தனமை விரையும், வீறியபான்மரநான்கு திரிபலைமாநாவன் - மிக்ககருங்காலி யெனுந் துவர்பத்து கல்லோர், தேறுவெள்ளிலோத்திரப்பூம் பொருக்கரைத்த சாந் துஞ்-சேர்த்துகறு கெய்பூசித் திமிர்த்தருவிபோல, வூறிய மாமதக்களிற்றுப் பிடரின்வருகங்கை-யுவந்தாட்டித் திருமேனியொற்றுடைபுரிந்தார்." மரநான் காவன, ஆல்-அரசு-அத்தி-இத்தி-என்பனவாம். கடுக்காய். நெல்லிக்காய்-தான் றிக்காய்-இவையே திரிபலையென்ப.

விவாகநூலிற் சொல்லு நியதியாம். அது "நங்கையின் களிற்றினுச்சிக் கதிர் மணிக்குடத்திற்றந்த, மங்கலவாசநன்னீர் மணிநிறங்கழீப்பதொப்ப, நங்கையை நயப்பவெல்லா விரையொடுதுவருஞ் சேர்த்தி, யங்கரவல்குலாளை யாட்டினு ரம்பையன்னார்" இதனாலறிக. [மணிகழீஇய தொப்பவெனலால், உவமையணி யாம்.]

(க-து.) தமயந்திக்கு நீராட்டினார்கள் எ-ம். 101

புரிகுழல்புலரவாசப் பூம்புகையூட்டிவிண்டு
முருகுயிர்த்தினவண்டார்க்கு முல்லையஞ்சூட்டுவேய்ந்து
வருமுலைமுகட்டிற்றெய்வ மலயச்செஞ்சாந்துபூசி
யெரிமணிக்கலாபம்வீக்கி யிழைபலதிருத்தினாரே.

[இதுமுதல் மூன்றுபாட்டுகளால் அலங்கரித்தல் சொலலப்படுகின்றது.]

(இ-ள்.) புரி-கட்டப்பட்ட, குழல்-கூந்தலானது, புலர-ஈரம்வாட, வாசப் பூம்புகை-வாசப்புகையை, ஊட்டி-ஊட்டுவித்து, விண்டு-விரிந்து, முருகுயிர்த்து-தேனைத்தந்து, இனவண்டு - வண்டுக்கூட்டங்கள், ஆர்க்கும் - ஒலிக்கப் பெற்ற, முல்லையஞ்சூட்டு-முல்லைமாலையை, வேய்ந்து-சூடி, வருமுலை முகட் டில்-வளர்கின்ற ஸ்தனங்களினுச்சியில், தெய்வ-தெய்வத்தன்மையுள்ள, மலயம்-பொதியமலையிற்றோன்றிய, செஞ்சாந்து-செந்நிறமுள்ளசந்தனக்குழம்பை, பூசி-தடவி, எரிமணி-ஒளியையுடைய மணிகளணிந்த, கலாபம்-கலாபத்தை, வீக்கி-தரித்து, இழைபல-இன்னும் அனேக ஆபரணங்களை, திருத்தினார்-அணிந்தார்கள், எ-று. ஏகாரம்-ஈற்றசை.

கலாபம்-பதினாறுகோவையுள்ள மணி. இழைதிருத்தலாவது, உரியவிடங் களில் தக்கவாறணிதல். ஆபரணங்களும்-அனேகம், அணிபவரும்-அனேகர், என்பதுதோன்ற-இழைபலதிருத்தினார்.

(க-து.) தமயந்திகூந்தலுக்குஅகிற்புகையூட்டி. மாலைசூட்டி, கொங்கைக ளிற் சந்தனம்பூசி, மேகலாபரணங்கட்டிப் பலவாபரணங்களைத் தரித்தார் கள் எ-ம். 102

வேற்றுருக்கொண்டுமாதின் விளங்குவாண்முகத்திற்சேர்ந்த
கூற்றினைத்தடங்கணென்ன வஞ்சனங்குலவத்தீட்டிக்
கீற்றிளந்திங்களன்ற கிளரொளிநுதலையென்று
தேற்றுவார்போலச்செய்ய திலகமுமெழுதினாரே.

(இ-ள்.) வேற்றுருக்கொண்டு-வேற்றுவடிவங்கொண்டு, மாதின்-தமயந்தி யினது, விளங்கு-பிரகாசிக்கின்ற, வாள்-வொளிபொருந்திய, முகத்திற்சேர்ந்த-முகத்திலடைந்த, கூற்றினை-யமனை, தடங்கணென்ன-விசாலம்பொருந்திய கண்களென்று, அஞ்சனம்-மையை, குலவத்தீட்டி-விளங்கவெழுதி, கீற்ற-கீற்றாகிய, இளந்திங்களன்று-இளம்பிறையன்று, கிளரொளி-மிகுந்த ஒளி

யையுடைய, நுதலேயென்று-நெற்றியேயென்று, தேற்றுவார்போல-தெளிவிப்பாரைப்போல, செய்ய-சிவந்ததிலகமும்-திலகப்பொட்டும், எழுதினர்-எழுதினர்கள் எ-று. எ-இரண்டில், முன்னையதேற்றம். பின்னையது ஈற்றசை.

கூற்றவன் விழிவடிவங்கொண்டு இவள் முகத்திருப்பது எற்றுக்கெனின், தன்வடிவோடு மிருந்துகொண்டு உலகத்தார் நாடோறு நிந்திக்கத் தானொருவனே கொலைப்பழியைச் சுமத்தல்பற்றிப் போலும். இங்ஙனஞ்சொல்லுதலால் யமன்போலும் விழிகள் ஆடவரைக் கொல்லுகின்றனவென்பது கருத்து இளந்திங்களன்று நுதலேயென்று தேற்றுவார்போலென்றதனல், நுதலே இளந்திங்களென்றிருந்தாற் பழியுண்டாமென்னெனின்-அதனை விரகிகள் நிந்தித்தலுண்டு: அந்நிந்தை இதற்சேறுமென்று கருதி அடையாளமாகத் திலகமுமெழுதினரெனக்கொள்க. [கூற்றினைத் தடங்கணென்னும்-திங்களன்று நுதலேயென்னும்-ஒழிப்பணிகள், தேற்றுவார்போலவென்றதற்குறிப்போடு கலந்து வருதலால்; கலவையணியாம்.]

(க-து.) தமயந்திகண்ணிற்கு மையும் நெற்றிக்குத் திலகமும் இட்டார்கள் எ-ம். 103

வணங்கிடையிறுவதோராவனமுலைகவர்ந்துகொண்ட
சுணங்கணியாகமுற்றுஞ்சுந்தரச்சுண்ணமாட்டிக்
கணங்குழைமுகத்துச்செவ்வாய்க்கன்னன்மென்றனையதீஞ்சொ
லணங்கினுக்கணிசெய்வார்போலணியினுக்கழகுசெய்தார்.

(இ-ள்.) வணங்கு-வளைந்து, இடை-இடையானது, இறுவது-ஒடிவதை, ஓரா-எண்ணாது, வனமுலை-அழகிய முலைகளானவை, கவர்ந்து கொண்ட-கிரகித்துக்கொண்ட, சுணங்கு-தேமலையுடைய, அணி-அழகிய, ஆகமுற்றும்-மார்புமுழுவதும், சுந்தரச்சுண்ணமாட்டி-அழகியபொற்றூளைத்தூவி, கணங்குழைமுகத்து-கூட்டமாகிய (மணிகள் பதித்த) குழையையணிந்த முகத்தையும், செவ்வாய் - செவ்வாயையும், கன்னன்மென்றனைய - கரும்பை மென்றதையொத்த, தீஞ்சொல்-மதுரவார்த்தையையுமுடைய, அணங்கினுக்கு - தமயந்திக்கு, அணிசெய்வார்போல்-அழகுசெய்பவர்போல், அணியினுக்கு-ஆபரணங்களுக்கு, அழகுசெய்தார்-அழகைச்செய்தார்கள் எ-று.

ஆபரணங்கள் தமயந்தியின் அவயவங்களிலே தரிக்கப்பெற்றுச் சிறப்புப் பெறுதலால், அணியினுக் கழகு செய்தாரென்றார்.

(க-து.) தமயந்தி அவயவங்களுக்கு ஆபரண மணிந்தார்கள். அணியாவிடினும் அவளியற்கையழகே போதும் எ-ம். 104

அயினிநீர்விளக்கமேந்திமையயிலிசிதறிமுத்தந்
துயல்வருமுலையினார்தந்தொலகுலத்தெய்வம்போற்றி
முயலனுமுழுவெண்டிங்கண்முகத்துவெண்முத்தமூரன்
மயிலியற்றிருவனாளைவலஞ்செய்தகாப்புமிட்டார்,

[இதனால் உபசரித்தல் சொல்லப்படுகின்றது]

(இ-ள்.) அயினீர் விளக்கம்-ஆலாத்தியை, ஏந்தி-எதிரேயேந்தி, ஐயவி-ஆலநீரை, சிதறி-வீசி, முத்தந்துயல்வரும்-முத்துவடமசைகின்ற, முலையினார்-ஸ்தனங்களுடைய மாதர்கள், தம்-தம்முடைய, தொல்குலத்தெய்வம் போற்றி தொன்றுதொட்டு வணங்குகின்ற தெய்வத்தைத்துதித்து, முயல்று-முயற்கறைநீங்கிய, முழுவெண்டிங்கள்-வெள்ளிய பூரணசந்திரனை யொத்த, முகத்து-முகத்திடத்தில், வெண்முத்தமுரல் - வெள்ளியமுத்தையொத்த பற்களையும், மயிலியல்-மயில்போன்ற சாயலையுமுடைய, திருவனை-தமந்தியை, வலஞ்செய்து-வலமாகச்சுற்றி, காப்புமிட்டார்-திருநீறுந்தரித்தார்கள் எ-று.

அயினிநீர் விளக்கமென்பது - மஞ்சணீர்க்கலத்திலே செஞ்சோற்றுத் திரளைவைத்து, அதன்மேலேற்றும் விளக்காம். ஐயவிசிதறியென்பது-வெண் கடுகிறைத்தல்: அது அலகைநீங்கும்பொருட்டுச் செய்வது: கடுகிற்குக்கடிப் பகையென்னும் பெயர் வந்தது இதனாலெனக்கொள்க. கடி-அலகை. இனி இரட்டுறமொழிதலென்னு முத்தியால் வெண்மை-செம்மை - கருமை-பொன்மை-பசுமை-என்னு மைவகைவண்ணமுள்ள சோற்றை வெவ்வேறு ஐந்துருண்டை செய்து பலியிடுவதெனினுமமையும். காப்புமிட்டாரென்னும் எச்சவும்மை, இன்னும் செய்யவேண்டியவைகளைச் செய்தாரென்பதைக் காட்டி நின்றது.

(க-து.) மாதர்கள் தமயந்திக்கு ஆலஞ்சுற்றித் திருநீற்றுக் காப்பணிந்தார்கள் என்க.

பந்தொடுகழங்கும்பொன்னம்பாவையுங்கிளியும்யாழுஞ்
சிந்துரத்திலகநெற்றித்தெரிவையருடன்கொண்டேக
விந்திரகுமரனன்னனெழின்மணியகலம்பூட்டக்
கொந்தவிழலங்கன்மாலைகொண்டனர்மருங்குசெல்ல.

[இதுமுதல் நான்குபாட்டுகளால் தமயந்திசுயம்வரமண்டபத்திற்குப்புறப்படல் சொல்லப்படுகின்றது

(இ-ள்.) பந்தொடு-பந்தையும், கழங்கும்-அம்மனையையும், பொன்னம்பாவையும்-சொர்ணபதுமைகளையும், கிளியும்-கிளிப்பிள்ளைகளையும், யாழும்-யாழையும், சிந்துரத்திலகநெற்றி - சிந்துரப்பொட்டணிந்த நெற்றியையுடைய, தெரிவையர் - மங்கையர்கள், உடன்கொண்டேக - உடன்கொண்டுசெல்ல, இந்திரகுமரனன்னன் - நளமகாராசனுடைய, எழில் - அழகிய, மணி-இரத்நாபரணம்பூண்ட, அகலம்-மார்பினிடத்தில், பூட்ட-தரிக்க, கொந்தவிழ்-கொத்துவிரிகின்ற, அலங்கன்மாலை-மலர்மாலையை, கொண்டனர்-(ஏந்திக்) கொண்டவர்கள், மருங்குசெல்ல-அருகேவர எ-று.

தமயந்தி அரசமாதாதலால், தனது செல்வமிகுதிக்கேற்ப இதுவரையும் பொழுதுபோக்கற்குச் சகாயமாயிருந்த பந்துமுதலிய வற்றையும் ஏவன்மாதர் உடன்கொண்டு சென்றனரென்க. தாமொரு கருமத்தின் பொருட்டுச்

செல்லுபவர் இவைபோல்வனவற்றை உடன்கொண்டு சென்றதுண்டோ வெனின்? உண்டு. அது "நைக்கடாக்குரங்குகோழி சிவல்கவுதாரிபற்றிப், பக்க முன்போதுவார்கள் பயின்மொழி பயிற்றிச்செல்ல, மிக்கபூம்பிடகைகொள்வார் விரையடைப் பையோர்சூழ, மைக்கருங கண்ணினார்கண் மறுகநீண்மறுகுல்வந்தார்" இதனாலறிக இவள் நளனுக்கே மாலைசூட்டவேண்டுமென்றிருக்குந் துணிவாலும், இச்செய்யுள் பின்பு செய்யப்பட்டமையாலும், மாலையை இந்திரகுமாரனன்றானெழின்மணியகலஞ்சூட்ட வென்றார். ஒடு-எண்ணொடு. இதுமுதல் வருவன நான்குங் குளகம்.

(க-து.) பெண்கள்பந்தையும் - அம்மனையையும்-பொற்பதுமைகளையும்-கிளிகளையும்-வீணைகளையும்-மலர் மாலைகளையுங்கொண்டு பக்கலில்வர எ-ம்.

விரியிருள்சீக்குங்கற்றைவெண்ணிறக்கவரிவீச
வெரிமணியடைப்பைதாங்கியின்னகைமகளிர்போத
வரிசிலைதூணியொள்வாள்கேடகம்வளைக்கைபற்றிப்
புரிநரம்பிரங்குதீஞ்சொற்பொன்னனார்முன்னரேக.

(இ-ள்.) விரியிருள்-விரிந்தவிருளை, சீக்கும்-ஓட்டுகின்ற, கற்றை-மயிர்த்தொகுதியாகிய, வெண்ணிறக்கவரி-வெண்ணிறத்தையுடையசாமரைகளை, வீச (மாதர்களிருபாலும்) வீசிவர, எரி-ஒளிவிடுகின்ற, மணி-மணிகள்பதித்த, அடைப்பைதாங்கி-அடைப்பையைச்சுமந்து, இன்னகை- இனியநகையையுடைய, மகளிர்-மாதர்கள், போத-செல்ல, வரிசிலை-நெடியவில்லையும் தூணி-அம்புக்கூட்டையும், ஒள்வாள்-ஒளியையுடைய வாளையும், கேடகம்-கேடகத்தையும், வளைக்கை-வளையலையணிந்த கையில், பற்றி-எந்திக்கொண்டு, புரிநரம்பு-(யாழிற்கட்டிய) நரம்புகள், இரங்கு-வருந்தும்படியாகிய, தீஞ்சொல்-மதுரவார்த்தையையுடைய, பொன்னனார்-மங்கையர்கள், முன்னரேக-முன்னே செல்ல எ-று.

மற்றைத் தொழிற்கேற்பக் கவரிவீசுதற்கும் மாதரென்னுஞ்சொல் வருவிக்கப்பட்டது. அடைப்பை-தாம்பூலதிரவியங்கள் வைக்கும் ஓர்பாத்திரவிசேடமாம். விற்படைமுதலியவற்றை மாதரேந்திவந்தன ரெனலால், அலங்காரப் பொருட்டன்றி ஒருவரெதிர்ப்பில் வெற்றிகொள்வாரோவெனின்? துர்க்கை காளி முதலியவரும் அசுரரைக்கொன்று வெற்றிபெற்றன ரென்றும், கைகேசி முதலிய அரசமாதரும் விசயங்கொண்டன ரென்றுஞ் சரித்திரமிருத்தலால், இவருங்கொள்வ ரென்க.

(க-து.) சிலபெண்கள் சாமரைவீசவும், சிலபெண்கள் அடைப்பையேந்திவரவும், சிலபெண்கள் வில்லையும்-அம்புக்கூட்டையும்-கேடகத்தையும்-கையிற்றாங்கிமுன்செல்லவும் எ-ம். 107

தொல்குலமரபிற்றோன்றிச் சூழ்புகழொறிபிற்காத்துங்
கல்வியின்றுறைநைபோய விருத்தர்கஞ்சுகத்தின்மெய்யர்

வில்லுமிழ்மணியிற்செய்த வேத்திரக்கரத்தர்வேந்திர்
நில்லுமினின்மினென்று நீக்கினர்தொடர்ந்துசெல்ல.

(இ-ள்.) தொல்குலமரபிற்றேன்றி-தொன்றுதொட்டுவருகின்ற நல்லமரபிற்பிறந்து, சூழ்புலம்-ஒன்றைப்பற்றுகின்ற புலனைந்தையும், நெறியிற்காத்து-புறம்போகவொட்டாமலடக்கி, கல்வியின்றுறை-கல்வியின்வழியில், கைபோய-வல்லவராகிய, விருத்தர்-விருத்தரும், கஞ்சுகத்தின்மெய்யர்-கவசம்பூண்டதேகத்தையுடையவரும், வில்லுமிழ்-ஒளியைக் கொப்புளிக்கின்ற, மணியிற்செய்த-மணியினாற்செய்த, வேத்திரக்கரத்தர் - பிரம்பைக்கையிலுடையவரும் (ஆகிய சேவகர்கள்.) வேந்திர்-அரசர்களே, நில்லுமினின்மினென்று-நில்லுங்கள்நில்லுங்களென்று, நீக்கினர்-அவரைவிலக்கினராகி, தொடர்ந்துசெல்ல-தொடர்ந்துடன்செல்ல எ-று.

தமயந்தி பெண்பாலாகையால், அதற்கேற்ப அவளருகேநின்று உபசரிக்க மாதரையும்; பின்பு அம்மாதரைச் சூழ்ந்துவர நற்குண நற்செய்கையுள்ளவிருத்தராகிய சேவகரையுங் கூறினரென்க.

(க-து.) கல்வியில்வல்ல நற்குலவிருந்தச்சேவகர்கள் அரசர்களைநில்லுங்களென்று பிரம்பால் விலக்கி உடன் செல்ல ம் எ-ம். 108

பாயிருண்மேயும்பைம்பொ னிலத்திடைப்பராரைச்சாந்தத்
தேய்வையின்மெழுகிநுண்டூ சுடுத்துமேற்றேங்கொள்வாசத்
தாய்மலரணிச்சப்போது பரப்பியவணிகொள்வீதி
வேயுறழ்பசியதோளி மெல்லடிபெயர்த்திட்டாளே.

(இ-ள்.) பாயிருள்-பரவியவிருளை, மேயும்-மேய்கின்ற, பைம்பொன்னிலத்திடை-பசியபொன்படுத்த பூமியிலே, பராரை-பசிய அடியையுடைய, சாந்தம்-சந்தனமரத்திற்கொண்ட கட்டையாற்சேர்த்த, தேய்வையின்-குழம்பினால் மெழுகி-மெழுகி,-நுண்டூசு-மெல்லியவஸ்திரத்தை, உடுத்து-பரப்பி, மேல்-மேலே, தேங்கொள்-தேனைக்கொண்ட, வாசத்து-வாசனையோடுகூடிய, ஆய்-ஆய்ந்தெடுக்கப்பட்ட, மலர்-விரிந்த, அணிச்சப்போது-அனிச்சமலரை, பரப்பிய-பரப்பியிருக்கின்ற, அணிகொள்-அழகைக்கொண்ட வீதி-வீதியிலே, வேயுறழ்-மூங்கிலையொத்த, பசியதோளி - பசியதோள்களையுடைய தமயந்தியானவள்-மெல்லடி-மெல்லியபாதத்தை, பெயர்த்திட்டாள் - தூக்கிவைத்து நடந்தாள், எ-று. ஏ-ஈற்றசைக்கண்வந்தது.

பொன் நான்கில் மாற்றுயர்ந்த சாம்பூனதப் பொன்னென்பதற்கு, பாயிருண்மேயும் பைம்பொன் என்றார். மெல்லியபாதமாகையால், பொன்னிலத்திடைசாந்தத்தேய்வையான் மெழுகிநுண்டூசுடுத்து அனிச்சப்போதுபரப்பிய வீதியென்றார். "இதுவிதி யிதுமறை யெனப்படா சிலபேர்" இவ்விதிபால் தோளிமெல்லடியெனப் பெயரடுக்கியும் வினையடுக்கியும் வருதல் வரம்பில்லை.

பந்தொடு என்னும் பாட்டில் பசியதோளியென்னு மெழுவாய், இப்பாட்டில் பெயர்த்திட்டாளென்னும் பயனிலையைக்கொண்டு முடிந்தது.

(க-து.) சந்தனத்தால் மெழுகி மெல்லியசீலை விரித்து மலர்பரப்பியவீதி தமயந்தி நடந்தாள்

109
கலத்தொடுபழகுஞ்செம்பொற்கதிர்முலைக்களிநல்யானை
யுலப்பருமதத்தகாணி லுயிர்குடித்தன்றிநில்லா
நிலத்தலைகாக்கும்வேந்திர்நீங்குகநீங்குகென்று
வலத்தகமூட்டுஞ்செம்பொனடிச்சிலம்பரற்றச்சென்றாள்.

(இதனால் சிலம்பொலியின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கலத்தொடு-ஆபரணத்தோடு, பழகும்-பழகுகின்ற, செம்பொன்-செம்பொற்பிரகாசம்பொருந்திய, கதிர்-கிரணமிகுந்த, முலை-ஸ்தனங்களாகிய, களிப்பையுடைய, நல்யானை-நல்லயானைகளானவை, உலப்பரும்-கெடுதற்கரிய மதத்த-மதத்தையுடையன, காணில் - நும்மைக்கண்டால், உயிர்குடித்தன்றி - உயிரைக்குடித்தா லல்லாமல், நில்லா-நிற்றலைப்பெறமாட்டா, (ஆதலால்) நிலத்தலை-பூமியனிடத்து, காக்கும்-புரக்கின்ற, வேந்திர் - அரசர்காள், நீங்குகநீங்குகென்று-நீங்கக்கடவீர் நீங்கக்கடவீரென்று, அலத்தகமூட்டும் - செம்பஞ்சுக்குழம்பூட்டிய, செம்பொன் - சிவந்தபொன்னாற்செய்த, அடி - பாதத்திலிருக்கின்ற, சிலம்பு-சிலம்புகள், அரற்ற-சத்திக்க, சென்றாள்-போனாள் எ-று.

தம்மைமேற்கொண்ட பாதங்கள் மற்ற அவயவங்களைச் சுமந்து காத்தல் போல் பூமியைச்சுமந்து காக்கும் அரசராகையால், அவ்வியைபுபற்றி அவரிற வாதபடி ஒருதீங்குவருமுன்னர்த் தெரிவிப்பவர்போல், நிலத்தலைகாக்கும்வேந்திர் முலைக்களிநல்யானை யுலப்பருமதத்த காணி லுயிர்குடித்தன்றி நில்லா நீங்குக நீங்குகென்று அடிச்சிலம்பரற்ற வென்றார். நீங்குக நீங்குகவென்றது, "வந்தது வந்தது கூற்று" எனபதுபோல் விரைவுபற்றிவந்த அடுக்கு. முலைகளுக்கு யானையை உவமைசொல்லுதல் கடாஅக்களிற்றின்மேற் கடபடாமாதர், படாஅ முலைமேற் றுகில்" என்பதனாலறிக: [சிலம்பொலித்தலில் நீக்குதற்குரியோர் சொல்லைக் குறித்தலால், தற்குறிப்பணியாம்.]

(க-து-) அரசர்களே-தமயந்தி முலைகளாகிய யானைகள் கண்டால் உங்களைக்கொல்லும் நீங்கிப்போங்களென்று சொல்லுவதுபோலச் சிலம்பிசத்திக்கச் சென்றாள் எ-ம்.

110
வரிவளைக்குலமுழம்வள்வார்மங்கலமுரசுங்கன்னற்
பொருசிலைமதனன்வின்னாண்புடைப்பொடும்பொங்கியார்ப்ப
விரிதிரைப்பரவைவீன்றவிளங்கிழையனையநங்கை
திருமணியிமைக்குஞ்செம்பொன்மண்டபஞ்சென்றுசேர்ந்தாள்

[இதனால் தமயந்தி சயம்வரமண்டபஞ் சேர்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) வரி-இரேகைகளையுடைய, வளைக்குலமும் - சங்குக்கூட்டமும், வள்வார் - இறுக்கியவரையுடைய, மங்கலமுறுஞ்சும்-விவாகபேரிகையும், கன்னற்பொருசிலை-பெருகின்ற கருப்புவில்லையேந்திய, மதன்-மன்மதனுடைய, வின்ஞாண்புடைப்பொடும் - வில்லினது குணத்தொனியோடும், பொங்கி-மிகுந்து, ஆர்ப்ப-சத்திக்க, விரி - விரிந்த, திரை - அலைகளையுடைய, பரவையீன்ற-பாற்கடல்பெற்ற, விளங்கிழையனைய-திருமாதையொத்த, நங்கை - தமயந்தி, திருமணி-உயர்ந்த இரத்நங்கள்பதித்து, இமைக்குப் - பிரகாசிக்கின்ற, செம்பொன்மண்டபம்-சிவந்தபொன்னாற்செய்த மண்டபத்தில், சென்று - போய், சேர்ந்தாள்-சேர்ந்தனள் எ-று.

தமயந்திமேல் விருப்புற்று விவாகஞ்செய்துகொள்ளவந்திருக்கின்றஅநேக அரசரும் இப்பொழுது அவளைக்கண்ட சமயமாகையால், காலம்பார்த்திருந்த மன்மதன் ஏககாலத்தில் இடைவிடாமல் அவர்மேல் பூங்கணை யெய்தல்பற்றி, சங்கபேரிகையொலி வின்ஞாண்புடைப்பொடும் பொங்கியார்ப்பவென்றார்.

(க-து.) தமயந்தி சுயம்வரமண்டபத்திற் சென்றாள் எ-ம். 111

இழைசுடரெறித்தலானுமிருவிசும்புறையும்வானோர்
பொழிமலர்மிடைதலானும்பூசல்வண்டிவர்தலானு
முழைபொருதடங்கட்பேதையுருவினைத்தெரியக்காணார்
விழைவொடுநோக்கும்வேந்தர்விழிநெருக்குற்றமாதோ.

[இதனால் தமயந்தியைக்கண்ட அரசர்செய்கை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) இழை-ஆபரணங்கள், சுடர்-வொளியை, எறிதலானும்-வீசுதலானும், இருவிசும்பு-பெரியசுவர்க்கத்தில், உறையும்-வசிக்கப்பெற்ற, வானோர்-தேவர்கள், பொழி-பொழிகின்ற, மலர்-பூக்கள், மிடைதலானும்-நெருங்குதலானும், பூசல்-பூசலையுடைய, வண்டு-வண்டுகள், இவர்தலானும் - மொய்ப்பதனாலும், உழைபொரு - மானையொத்த, தடங்கட்பேதை - விசாலம்பொருந்திய கண்களையுடைய தமயந்தியினது, உருவினை - வடிவை, தெரியக்காணார்-தெரியும்படிபாராராகி, விழைவொடு - விருப்போடு, நோக்கும்-பார்க்கின்ற, வேந்தர்-அரசருடைய, விழி - விழிகளானவை, நெருக்குற்ற - நெருக்கமடைந்தன.

இழைசுடரெறித்தல் முதலிய காரணங்கள் மூன்றும் பொதுப்படக் கூறினும், இழைசுடரெறித்தலாற் பார்த்தற்குக் கண்கூசி விழிநெருக்குற்றவென்றும்; மலர்மிடைதலானும்-வண்டிவர்தலானும்-உருவினைத் தெரியக்காணாரென்றும் கொள்க. உருவினைத் தெரியக்காணாராயினும், வெறுப்பின்றிவிழைவினால் அனேகர் நோக்குதலால், அவர்விழிகள் நெருக்கமுற்றனவெனினும் அமையும். உழைபொரு தடங்கணென்றதனால், மான்பார்வையைமாதர்கண்பார்வைக்கு உவமைசொல்லுதலன்றி, மானையே அவர்கண்ணிற்கு உவமைசொல்லுதலன்றி, மானையே அவர்கண்ணிற்கு உவமைசொல்லுதலுமுண்டு. அது-

"கற்றைவார்குழ லாச்சியர் கயல்விழிமுகத்தின், பெற்றி யொப்புறப் பெருங்குருத் தூச்சிமேற்றுவி, யொற்றைமானுடைக் கலைமதி யதனிழலுறங்கு, மற்றைமானையும் பற்றுவான் கதிர்க்கையால் வருடும்" இதனாலறிக.

(க - து.) ஆபரணங்க ளொளிகளாலும், மலர்களாலும், வண்டுகளாலும், தமயந்தி வடிவைக்காணாதவர்களாய் அரசர்கள்கண்கள் நெருக்குற்றன எ-ம்.

அறற்கருங்கூந்தற்பே தையணிக ளிற்கரியசோதி
யெறிக்குநன்மணியிற்றோற்றமெறிதிரைக்கடலின்மொய்த்த
விறற்கதிர்வடிவேல்வேந்தர்விழைவொடுநோக்குங்கண்கள்
பறிப்பரியனவாய்மெய்யிற்பதிந்தனபோலுமாதோ.

[இதனால்தமயந்தி ஆபரணங்களில் நீலரத்நத்தின் விளக்கஞ் சொல்லப்படுகின்றது]

(இ-ள்.) அறல்-கருமணலையொத்த, கருங்கூந்தல்-கரியகுழலையுடைய, பேதை - தமயந்தியினது, அணிகளில்-ஆபரணங்களுக்குள்ளே, கரியசோதி நீலவொளியை, எறிக்கும்-வீசுகின்ற, நன்மணியின்றோற்றம் - நல்லநீல ரத்நத்தின் காட்சியானவை, எறிதிரை-அலையெறிகின்ற, கடலின்-கடல் போல், மொய்த்த-நெருங்கப்பெற்ற, விறல்-பெருமைபொருந்திய, கதிர்-கிரணங்களையுடைய, வடிவேல்-வடித்தவேலையுடைய, வேந்தர்-அரசர்கள், விழைவொடு-விருப்பத்தோடு, நோக்கும்-பார்க்கும், கண்கள்-கண்களானவை; பறிப்பரியனவாய்-வாங்குதற்கரியவாகி, மெய்யில்-தேகத்திலே, பதிந்தனபோலும்-அழுந்தினபோலுமிருந்தன எ-று. மாது-ஓ-அசைகள்

அணிகளிலே நவமணிகளும் அழுந்தியிருக்க நீலமணித் தோற்றத்தைச சொல்லியது, தமயந்தியைப் பார்க்கும் அரசர் கண்களை உவமையாக்குதற்கென்க. [தமயந்தியி னணிகளிற்பதித்த நீலமணிகளில் அரசர் பார்வையைக் குறித்தலால், தற்குறிப்பணியாம்.]

(க-து.) தமயந்தியணிந்த நீல அரத்னங்களின் காட்சிகளானவை அரசர்கள் கண்களைப்போலு மிருந்தன எ-ம். 113

வஞ்சமொன்றின்றிவெறலரிதெனவதுவைநாட்டி
விஞ்சையின்புணர்ப்பாற்கூற்றைவிளங்கிழைவடிவமாக்கி
யெஞ்சலினுலகமன்னர்யாரையுமொருங்குகொல்வான்
செஞ்சுடர்வயவாள்வேந்தன்றீவினையிழைத்ததென்பார்.

[இதுமுதல் ஐந்துபாட்டுகளால் அரசர் கூறுதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) வஞ்சமொன்றின்றி-வஞ்சனையொன்றில்லாமல், வெறலரிதென-நம்மால் வெல்லப்படுத லரிதென்றெண்ணி, வதுவைநாட்டி-சுபம்வர மென்று நாட்டி, விஞ்சையின் புணர்ப்பால் - மந்திரவித்தையினுடைய சம்பந்தத்தால்;

கூற்றை-யமனை, விளங்கிழை வடிவமாக்கி - தமயந்தியினுருவமாகச் செய்து, எஞ்சலில்-குறைவில்லாத, உலகமன்னர் யாரையும் - திரிலோகத்திலுமுள்ள அரசரனைவரையும், ஒருங்குகொல்வான்-ஒருசேரக் கொல்லும்படி, செஞ்சுடர்-செய்யகிரணத்தையுடைய, வயவாள் - வெற்றிபொருந்திய வாட்படையை யுடைய, வேந்தன்-வீமனென்பவன், இழைத்தது-செய்தது, தீவினையென்பார்-தீவினையாகுமென்பார்கள் எ-று.

வீமன் வஞ்சகஞ்செய்து கொல்லநினைத்தது யாதன்பொருட்டெனில், தனக்கு வலிமைமிக்கிருப்பினும் படையெடுத்து நம்மைத் தனித்தனி வெல்வதற்கு நெடுங்காலஞ் செல்லுமென்றும். அங்ஙனஞ் செல்லினுந் தன்னின் மிக்கவரு மிருப்பாரென்னுங் கருத்தால் வெற்றியாகுமோ ஆகாதோ வென்றுங் கருதியென்க.

(க-து.) வீமன் இயமனைப் பெண்ணாக்கி அரசர்களைக் கொல்லநினைத்தது தீவினையென்பார்கள் எ-ம். 114

தொண்டைவாய்முத்தமூரற்றுடியிடையறன்மென்கூந்த
லொண்டொடிவனப்புவாய்ந்தவுருவுநங்கண்களாரக்
கண்டுழிவியந்துநெஞ்சங்களிப்புறவொற்றர்கூறப்
பண்டுநாங்கேட்டவாற்றிற்பதின்மடங்காயிற்றென்பார்.

(இ-ள்.) தொண்டைவாய்-கொவ்வைக்கனிபோன்ற வாயையும், முத்தமூரல்-முத்தையொத்த பல்லையும், துடியிடை-உடுக்கையையொத்த இடையையும், அறன்மென்கூந்தல்-கருமணலையொத்த மெல்லிய கூந்தலையுமுடைய, ஒண்டொடி-தமயந்தியினது, வனப்புவாய்ந்த-அழகுபொருந்திய, உருவு-வடிவை, நம்-நம்முடைய, கண்களார-கண்கள்திருத்திபெற, கண்டுழி-கண்டவிடத்தில், வியந்து-அதிசயித்து, நெஞ்சம்-மனமானது, களிப்புற-களிப்பையடைய, ஒற்றர்கூற-ஒற்றர்சொல்ல, பண்டு-முன்னே, நாம்-நாம், கேட்டவாற்றில்-கேட்டவகையில், பதின்மடங்கு-பத்துமடங்கு, ஆயிற்றென்பார்-மேலாயினதென்பார்கள் எ-று.

வியந்து பதின்மடங்காயிற்றென்பார் என்க. தமயந்திக்குத் தம்மோடொற்றர்கூறிய வழகினும் இப்பொழுது பதின்மடங்கதிகரித்திருக்கக்காண்டலால், அரசர்க்கு மோகமும் அவ்வளவாயிற்றென்பது கருத்து.

(க-து.) அரசர்கள் தமயந்தியழகை வியந்தார்கள் எ-ம். 115

வள்ளுறைகழித்தவொள்வாண்மாறிவைத்தனையவுண்க
ணள்ளிக்கொண்டுயிரைப்பின்னையருந்திடாதொழிவினன்றே
தெள்ளமிர்தனையதீஞ்சொற்சேயிழையுத்தரீகத்
துள்ளுறைநொடியகூற்றமுயிர்குடித்திடுவதென்பார்.

(இ-ள்.) வள்-கூர்மைபொருந்திய, உறைகழித்த-உறையினின்று நீக்கிய, ஒள்வாள்-ஒளிபொருந்தியவாளை, மாறிவைத்தனைய - மாறிவைத்தால் (அதை யொத்த,) உண்கண்-மையுண்டகண்களானவை, உயிரை-ஆவியை, அள்ளிக் கொண்டு-கையிலள்ளிக்கொண்டு, இன்னே-இப்பொழுதே, அருந்திடாது-உண்ணாமல், ஒழியினன்றோ-நீங்கினாலன்றோ, தெள்ளமிர்தனைய - தெளிவு பொருந்திய அமிர்தத்தையொத்த, தீஞ்சொல்-மதுரம் பொருந்திய சொல்லை யுடைய, சேயிழை-தமயந்தியினது, உத்தரீகத்துள்ளுறை-மேற் போர்வைக் குள்ளே யிருக்கும், கொடியகூற்றம், மூலைகளாகிய கொடியகூற்றம், உயிர்-ஆவியை, குடித்திடுவதென்பார்-பருகுவதென்பார்கள் எ-று.

அள்ளிக்கொண்டு உயிரையருந்துதல் பற்றி, கண்களுக்கு வாளை உவமை யாக்கினர். கொல்பவன் மறைந்துவருவனென்பது தோன்ற, ஸ்தனங்களை உத்தரீகத்துள்ளுறை கொடியகூற்றமென்றார். தமயந்திகண்களுக்கே உயிர் தப்பாதென்பது கருத்து.

(க-து.) அரசர்கள்-தமயந்திகண்களாகிய வாள்கள் உயிரைக் கொல்லு மென்பார்கள் எ-ம். 116

முருந்துறழினியமூரன்முகிழ்முலைப்பசியவேய்த்தோட
கருந்தடங்கண்ணிசெவ்வாய்க்கமழ்திரையமிழ்தமாந்த
வருந்தவம்புரிந்தோர்மண்ணிலரசரோவமரரேயோ
தெரிந்திலமென்னமாழ்கித்தெருமரலெய்திநிற்பார்.

(இ-ள்.) முருந்து-மயிலிறகினடியை, உறழ்-ஒத்த, இனிய இனிமையை யுடைய, மூரல்-பற்களையும், முகிழ்-அரும்பையொத்த, முலை-ஸ்தனங்களை யும், பசியவேய் - பசியமூங்கிலையொத்த, தோள் - தோள்களையும், கருந் தடங்கண்ணி-கரிய பெரிய கண்களையுமுடைய தமயந்தியினது, செவ்வாய்-சிவந்தவாயாகிய, கமழ்-வாசிக்கின்ற, திரை-பாற்கடலிற்றோன்றிய, அமிழ் தம்-அமிர்தத்தை, மாந்த - புசிப்பதற்கு, அருந்தவம் புரிந்தோர் - அரிய தவத்தைச் செய்தவர், மண்ணில்-பூமியிலிருக்கின்ற, அரசரோ - அரசருக் குள் ளொருவரோ, அமரரேயோ - தேவர்க்கு ளொருவரோ, தெரிந்திலமெ ன்ன-(யாம்) அறிந்திலமென்று, மாழ்கி-மயங்கி, தெருமரலெய்தி - சுழற்சியை யடைந்து, நிற்பார்-நிற்பார்கள் எ-று.

ஒருவராயினும் அருந்தவம் புரிந்தோராகையால் அவ்வுயர்வுபற்றி அவ ரைப் பன்மைவிகுதியாற் கூறினர். தவம்புரிந்தவர் இன்னாரென்று தெரிந்தால் மற்றையவர் மாலைதரிக்கும்போது இங்ஙனமிருந்து அவமானப்படாமல் தம் மிடங்களிற் சேரலாமென்பது கருத்து. அதுமுன்னே தெரியாமையான், மாழ் கித் தெருமரலெய்தி நிற்பார் என்றார்.

(க-து.) தமயந்தியை அனுபவிக்கத்தவஞ்செய்தவர்கள் தேவர்களோ-அர சர்களோ-என்பார்கள் எ-ம். 117

அளியசிறடிகணோவவனிச்சமேலொதுங்கச்செய்த
விளைமதுத்துளிக்குந்தண்டார்வேந்தனேகொடியனென்பார்
வளர்முலைப்பாரங்கண்டும்வண்டிமிர்தெரியல்சூட்டித்
தளரிடைக்கிடுக்கண்செய்ததாயரேகொடியரென்பார்.

(இ-ள்.) அளிய - அளிதலையுடையவாகிய, சிறடிகள் - சிறியபாதங்கள், நோவ-நோவையடைய, அனிச்சமேல்-அனிச்சமலரின்மேல், ஒதுங்கச்செய்த-நடக்கச்செய்த, விளை-விளைகின்ற, மதுத்துளிக்கும்-தேன்றுளிக்கின்ற, தண்-குளிர்ச்சிபொருந்திய, தார்-மாலையையுடைய, வேந்தனே - வீமராசனே-கொடியனென்பார்-கொடியவனென்பார்கள், வளர்-வளரப்பெற்ற, முலை-ஸ்தனங்களினுடைய, பாரம்கண்டும் - சுமையைக்கண்டும், வண்டு-வண்டுகள், இமிர்-ஒலிக்கப்பெற்ற, தெரியல்சூட்டி-மாலையைச்சூட்டி, தளர்-தளரப்பெற்ற, இடைக்கு-மருங்குலுக்கு, இடுக்கண்செய்த-வருத்தத்தைச்செய்த, தாயரே-தாய்மார்களே, கொடியரென்பார்-கொடியரென்பார்கள் எ-று.

அனிச்சமலர் மென்மையாயிருப்பினும் மாதரடிக்கு வருத்தஞ்செய்யுமென்பது பற்றி, அனிச்சமே லொதுங்கச்செய்த வேந்தனேகொடியன் என்றார். அது-"அனிச்சமும் அன்னத்தின் றூவியுமாதரடிக்கு நெருஞ்சிப்பழம்" இதனு லுணர்க. தந்தைக்குப் பெண்கள் வருத்தந் தெரியாவிடினுந் தாயருக்குந் தெரியாதென்பார், முலைப்பாரங் கண்டுந் தெரியல்சூட்டித் தளரிடைக்கிடுக்கண் செய்த தாயரேகொடியர் என்றார். தாயரெனப் பன்மையாகக்கூறுதலால், பாராட்டுந்தாய் - ஊட்டுந்தாய்-முலைத்தாய் - கைத்தாய்-செவிலித்தாய்-என்னு மைவரையுங் கொள்க.

(க-து.) தமயந்தியை நடக்கச்செய்த வீமனே கொடியனென்பார்கள். முலைப்பாரத்தின் மேல் மாலைசூட்டிய தாய்மார்களே கொடியரென்பார்கள் எ-ம். 118

ஏமுறுமன்னர்யாருமினையனகூறப்பைம்பொன்
வாமமேகலைகளார்ப்பமணிச்சிலம்பொலிப்பச்செய்ய
காமர்வாண்முகையசெவ்விக்காந்தளஞ்செங்கைகூப்பித்
தாமவேற்றடங்கணல்லாடாதையைத்தொழுதுநின்றாள்.

[இதனால் தமயந்திசெய்கை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்) ஏமுறும் - இன்பமடைகின்ற, மன்னர்யாரும்-அரசனைவரும், இனைய-இப்படிப்பட்டவார்த்தைகளை, கூற-சொல்ல, பைம்பொன்-பசியபொன்னாற்செய்த, வாமம்-அழகுபொருந்திய, மேகலைகள்-மேகலாபரணங்கள்,ஆர்ப்ப-சத்திக்க, மணி-நவமணிகளிழைக்கப்பெற்ற, சிலம்பு-பாதசாலங்கள், ஒலிப்ப-ஒலிக்க, சிவந்த, காமர்-அழகுபொருந்திய, வாள்-ஒளியையுடைய, முகைய அரும்பையுடையனவாகிய, செவ்வி-செவ்வியையுடைய, காந்தளஞ்செங்கை கூப்பி - காந்தண்மலரைபொத்த சிவந்த கைகளைக்குவித்து, தாமம்-வெற்றி

மாலையைத்தரித்த, வேல்-வேலையொத்த, தடங்கண்-விசாலம்பொருந்திய கண்களையுடைய, நல்லாள்-தமயந்தியானவள், தந்தையை-தந்தையை, தொழுது நின்றாள்-வணக்கஞ்செய்து நின்றாள் எ-று.

ஏமம்-என்பது, எம்-எனக் கடைகுறைந்து நின்றது. மன்னரெனப்பொதுப்படக் கூறலால், திரிலோகத்தரசரையும் கொள்க-வீமனுடைய ஆணைப்படி நடக்கவேண்டியவைக ளாகையால் அக்குறிப்புத்தோன்ற, அவனைத் தமயந்திவணங்கின ளென்க.

(ஈ-து.) தமயந்தி தன்பிதாவாகிய வீமனை வணங்கினாள் எ-ம். 119

சேவடிதொழுதுநின்றதெரிவையைமகிழ்ந்துநோக்கி
மூவுலகாளும்வேந்தரொருவழித்திரண்டுமொய்த்தார்
யாவரேயிவரையெண்ணியினியரென்றுரைப்பாரென்னப்
பூவைபோன்மேனியானைநினைந்தனன்புலவுவேலான்.

[இதனால் வீமராஜன்செய்கை சொல்லப் படுகின்றது.]

(இ-ள்.) சேவடி-தன்னுடைய சிவந்தபாதங்களை, தொழுதுநின்ற-வணங்கின்ற, தெரிவையை-தமயந்தியை, மகிழ்ந்து-மகிழ்ந்து, நோக்கி-பார்த்து, மூவுலகாளும்வேந்தர்-திரிலோகத்திலுமுள்ள அரசர்களும், ஒரு வழி-ஓரிடத்திலே, திரண்டு-கூடி, மொய்த்தார்-நெருங்கினார்கள், யாவர்-எவர்கள், இவரை-இவ்வரசரை. எண்ணி-நினைத்து, இனியரென்று-இந்தன்மையரென்று, உரைப்பாரென்ன-சொல்லுவாரென்று, பூவைபோன்மேனியானை-காயாமலரையொத்த வண்ணத்தையுடைய நாரணனை, புலவுவேலான்-வீமராசன், நினைந்தனன்-நினைந்தான், எ-று. எ-வினை.

திரிலோகத்தரசரு நெருங்கி யிருக்கின்றபடியால், இவர் இன்னாரென்று தெரிந்து சொல்லுதற்குத் தேவரா லன்றி மனிதரா லாகாதென்பதைக் கருதி; வீமன் திருமாலை நினைந்தனனென்க. வீமன் தெரிவையைநோக்கி நினைந்தனனெனக்கூட்டுக.

(கூ-து.) வீமராசன் விஷ்ணுவை நினைந்தான் எ-ம். 120

மன்னவனினைவையோர்ந்துவண்டுழாயலங்கன்மார்பன்
றன்னடிதொழுதுநின்றசதுர்முகத்தேவைநோக்கி
கன்னலிற்கனிந்ததீஞ்சொற்கலைமகளன்றியாரே
யின்னரென்றிவரையெண்ணியெங்கிழைக்கிசைக்குநீரார்.

[இதனால் திருமாலினது செய்கை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மன்னவன் - வீமராசனுடைய, நினைவையோர்ந்து - நினைப்பையறிந்து, வண்டுழாயலங்கல் - வளம்பொருந்திய துளபமாலையையணிந்த

மார்பன்-மார்பினையுடைய நாரணனானவன், தன்னடி - தனது பாதங்களை, தொழுதுநின்ற-வணங்கிநின்ற, சதுர்முகத் தேவைநோக்கி - பிரமதேவனைப்பார்த்து, கன்னலில்-கரும்பைக்காட்டிலும், கனிந்த-சுவைமுதிர்ந்த, தீஞ்சொல்-மதுரவார்த்தையையுடைய, கலைமகளன்றி-நாமகளல்லாமல், இன்னரென்ற-இத்தேயத்தினரென்று, இவரை-இவ்வரசரை, எண்ணி - நினைத்து, ஏந்திழைக்கு-தமயந்திக்கு. இசைக்கும்-சொல்லுகின்ற, நீரார் - தன்மையையுடையவர், யார்-யாவர். எ-று. ஏகாரம்-வினா.

மற்றையர்க்கு இவர் இன்னரென்றுதெரியினுஞ்சொல்லுதலரிதாதலால், கலைமகளன்றி யாரே யின்னரென்றிவரையெண்ணி யேந்திழைக்கிசைக்குநீரார் என்றார். சொல்லிற்குக் கன்னலிற்கனிந்த வென்னும் அடைகொடுத்ததும் அதுபற்றியாம். "நின்றுகாட்டுலு நிமித்தமின்னு-மைந்தாம்வேற்றுமையாகிவருமே" இவ்விதியால் காட்டிலும் எனறது ஐந்தாம்வேற்றுமை யுருபாம்

(க-து.) விஷ்ணு வீமராசன் நினைவையறிந்து பிரமனைப்பார்த்து, சரஸ்வதியே தமயந்திக்கு அரசர்களை இன்னாரின்னாரென்று சொல்ல வல்லவள் என்றார் எ-ம். 121

என்றலுமலரின்மேலோனிளநிலாவெறிக்குமேனி
மன்றலங்கரியகூந்தல்வாணிவாண்முகத்தைநோக்கிச்
சென்றுநீயரசர்வெள்ளத்திரளினைவிதர்ப்பனீன்ற
பொன்றிகழ்முலையினாளுக் குரையெனப்புவியிற்போந்தாள்.

[இதனால் பிரமன் நாமகளை ஏவல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) என்றலும் - இப்படியென்று சொன்னவளவில், மலரின்மேலோன்-பிரமதேவனானவன், இளநிலா-இளமைபொருந்திய நிலவினொளியை, எறிக்கும்-வீசுகின்ற, மேனி-திருமேனியையுடைய, மன்றல் வாசனைபொருந்திய, அம்-அழகிய, கரியகூந்தல்-கறுத்தகூந்தலையுடைய, வாணி-நாமகளுடைய, வாள்-ஒளிபொருந்திய, முகத்தைநோக்கி-முகத்தைப்பார்த்து, நீசென்று-நீபோய், அரசர்வெள்ளத்திரளினை-இராசகூட்டத்திரட்சியை, விதர்ப்பனீன்ற-வீமன்பெற்ற, பொன்றிகழ்-பொன்போன்றதேகம்விளங்கிய, முலையினாளுக்கு-தமயந்திக்கு, இரையென-சொல்லென்றுசொல்ல, புவியில்-பூமியிலே, போந்தாள்-வந்தாள் எ-று.

மனிதப்பிறப்பிற்ற வீமனனுந் தமயந்தியேனும் அருந்தவப்புரிந்து தம்மை வேண்டாதிருப்ப, நாரணனேவலாற் பிரமன் நாமகளைவிடுப்ப, அவள்விரைந்து சேரலால்; தந்தை வார்த்தையை மைந்தன் கடவாமையும், கணவன் மொழியைத் துணைவி இகவாமையும் பெறப்பட்டன. உரையென-அவள் புவியிற்போந்தாள்: எனக்கொள்க.

(க-து.) பிரமன் சரஸ்வதியை நோக்கித் தமயந்திக்கு அரசர்கள்பேரை அறிவியென்று சொல்ல அவள்வந்தாள் எ-ம். 122

போந்தவள்வண்டுமூசாப்பொன்னரிமாலையோடும்
வார்ந்ததேமாலைதாழ்ந்தவதுவைமண்டபத்தின்மேவி
யேந்தெழிலெருத்தங்கோட்டிநாணொடுமிறைஞ்சிநின்ற
கூந்தலம்பிடிக்கும்வேந்தர்குலமுறைகிளக்கலுற்றாள்.

[இதனால் நாமகள் செய்கை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) போந்தவள்-அப்படிவந்த நாமகள், வண்டுமூசா-வண்டுகளால் மொய்க்கப்படாத, பொன்னரிமாமாலையோடும்-பொன்னரிமாலையுடனே, வார்ந்த-நீண்ட, தேம்-வாசனைபொருந்திய, மாலைதாழ்ந்த-மலர்மாலைகள் தாழப்பெற்ற, வதுவைமண்டபத்தின்-விவாகமண்டபத்தில், மேவி-பொருந்தி, ஏந்து-தாங்கிய, எழில்-அழகுபொருந்திய, எருத்தங்கோட்டி-தலையைவணங்கிக்கொண்டு. நாணொடும்-நாணத்தோடும், இறைஞ்சிநின்ற-தொழுதுநின்ற, கூந்தலம்பிடிக்கு-தமயந்திக்கு, வேந்தர்குலமுறை-அரசர்மரபினை, கிளக்கலுற்றாள்-சொல்லத்தொடங்கினாள் எ-று.

எருத்தங்கோட்டலும் நாணுறலும் மாதர்க்குச் சுபாவமாயினும், நாமகள் திரிமூர்த்திகளில் ஒருமூர்த்தியினுடைய தேவியாதலால்; அவளிடத்திலே இறைஞ்சியெனத் தமயந்திவணக்கமுஞ் சொல்லப்பட்டது. கூந்தலம்பிடிஎன்பது-அதுபோன்ற நடையை யுடையவளெனத் தமயந்திக்காதலால், உவமை ஆகுபெயர்.

(க-து.) சரஸ்வதியானவள் தமயந்திக்கு அரசர்கள் குலமுறை சொல்லத் தொடங்கினாள் எ-ம். 123

சேயரிசிந்திநீண்டசெழுங்கடைமழைக்கட்செவ்வாய்
மாயிருஞாலம்விற்கும்வருமுலைத்தெரிவைகேட்டி
யாயிரங்கதிர்கள்வீசியங்கண்மாஞாலம்போர்த்த
பாயிருள்பருகுஞ்செங்கேழ்ப்பரிதியிவ்விருந்ததேவ.

[இதுமுதல் ஆறுபாட்டுகளால் நாமகள் தமயந்தித் தேவர்களைத் தனித்தனி குறிப்பித்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) சேயரி-செவ்வரிகள், சிந்தி-சிதறப்பெற்று, நீண்ட-நெடுகிய, செழுங்கடை-செழுமைபெற்ற கடையையுடைய, மழை-குளிர்ச்சிபொருந்திய, கண்-கண்ணையும், செவ்வாய்-சிவந்தவாயையும், மா-மகத்தாகிய, இரு-பெரிய, ஞாலம்-பூமியை, விற்கும்-விலைசெய்யும், வருமுலை-வளர்கின்ற ஸ்தனங்களையுமுடைய, தெரிவை-தமயந்தியே, கேட்டி-நீகேட்பாயாக, ஆயிரங்கதிர்கள் வீசி-ஆயிரங்கிரணங்களைவீசி, அங்கண்-அழகிய இடத்தையுடைய, மா-மகத்தாகிய, ஞாலம்-பூமியை, போர்த்த-மூடிய, பாயிருள்-பரவியவிருளை, பருகும்-குடிக்கின்ற, செங்கேழ்-செந்நிறத்தையுடைய, பரிதி-சூரியன், இவ்விருந்ததேவு இருத்தலையுற்ற இந்தத்தேவன் எ-று. ஏகாரம்-ஈற்றசை.

பூமியைவிற்றால் தமயந்திமுலைக்கு விலையாகுமென்பார், ஞாலம்விற்கும் வருமுலை என்றார். பூமியைவிடப்பெரிதும் வலிதும் பொறுமையுள்ளதும் வளமுள்ளதும் வேறொன்றில்லை யென்பதற்கு, மாயிரு என்னும்அடைகள்கொடுக்கப்பட்டன. அது-"தரிவரும் பெருமையுந்திண்மையும் பொறையும்-பருவமுயற்சி யளவிற்பயத்தலு-மருவியநன்னில மாண்பாகும்மே" இதனாலறிக. பூமியைமூடிய இருளையோட்டிக் கண்களுக்குத் தெரியத்தக்க நிலநீர்முதலிய வெல்லாப்பொருள்களையுநாடோறுங் காட்டுகின்ற நன்றிதோன்ற, சூரியனை-ஆயிரங்கதிர்கள்வீசி யங்கண்மா ஞாலம்போர்த்த பாயிருள்பருகுஞ்செங்கேழ்ப் பரிதி என்றார்.

(க-து.) தமயந்தியே-இவன் சூரியதேவன் என்றாள் எ-ம். 124

பண்ணமையினியதீஞ்சொறபடாமுலைப்பாவைகேண்மோ
கண்வழூக்குறுதண்சோதிக்கலைநிலவெறிப்பவல்லான்
மண்ணியமணியிற்செய்தவான்றவிசிருந்ததேவன்
விண்ணவர்க்கமிர்தமீந்தவெண்கதிர்க்கடவுளாமல்.

(இ-ள்.) பண்-இசை, அமை - பொருந்திய, இனிய-இனியவாகிய, தீஞ் சொல்-மதுரவார்த்தையையுடைய, படா-சாயாத, முலை-ஸ்தனங்களையுடைய, பாவை-தமயந்தியே, கேள்-கேட்பாயாக, கண்-கண்கள், வழுக்குறு-கூசுகின்ற, தண்-குளிர்ச்சிபொருந்திய, சோதி - பிரகாசத்தையுடைய, கலை-சோடசகலைகளும், நிலவெறிப்ப - ஒளிவீச, வல்லான் - வல்லவனால், மண்ணிய - ஒப்பனையமைந்த, மணியிற்செய்த-இரத்நங்களாற் செய்யப்பட்ட, வான்-பெரிய, தவிசு-ஆசனத்தில், இருந்ததேவன்-இருத்தலைபுற்ற தேவனானவன், விண்ணவர்க்கு-தேவர்களுக்கு அமிர்தமீந்த - அமிர்தத்தைகொடுத்த, வெண்கதிர்க்கடவுளாம், சந்திரனாகும், எ-று. மோவென்பது-முன்னிலைக்கண்ணும், ஆலென்பது-இதற்கின்கண்ணும வந்த அசைகள்.

வல்லான்செய்த தவிசில் கலைநிலவெறிப்பவிருந்ததேவனெனக்கூட்டுக. சந்திரனுடைய கலைகளை அமரபக்ஷத்துப் பிரதமைமுதலாகத் தொடங்கிப் பதினைந்து திதியிலும் அக்கினிமுதலாயினோருண்பர். பூர்வபக்ஷத்திலும் அப்படியே கலைகள்வளரும். தேவர்களுண்ணும்படி தன்னுடைய கலைகளைச் சந்திரன் தருதலால், விண்ணவர்க்கமுதமீந்த வெண்கதிர்கடவுள் என்றார்.

(க-து.) இவன் சந்திரனென்றாள் எ-ம். 125

ஊர்சுணங்கணிந்துவிம்மியொழுகொளியாரஞ்சூடி
யேர்கனிந்தொழுகும்பொம்மலிள்முலையணங்குகேட்டி
தார்புனைமௌலிவேய்ந்துதணப்பிலாதிருந்ததேவர்
மாரனில்வனப்புவாய்ந்தமருத்துவத்தலைவர்தாமே.

(இ-ள்.) ஊர்-பரவுகின்ற, சுணங்கணிந்து-தேமலையணிந்து, விம்மி-பருத்து, ஒழுகொளி-ஒளியைவீசுகின்ற, ஆரம் - முத்துவடத்தை, சூடி-தரித்துக்கொண்டு, எர்-அழகானது, கனிந்து-முதிர்ந்து, ஒழுகும்-ஒழுகுகின்ற, பொம்மல்-பொலிவுபெற்ற, இளமுலை - இளமைபொருந்திய ஸ்தனங்களையுடைய, அணங்கு-தமயந்தியே,கேட்டி-கேட்பாயாக,தார்-மலர்மாலையை, புனை-தரித்த, மௌலிவேய்ந்து-கிரீடத்தையணிந்து, தணப்பிலாது-இணைபிரியாது, இருந்த தேவர்-(இங்) கிருத்தலையுற்ற தேவர்கள், மாரனில் - மன்மதனைக்காட்டிலும், வனப்புவாய்ந்த-அழகுபெற்ற, மருத்துவத்தலைவர் - அசுவினிதேவர்கள் எ-று. தாம்-ஏ-அசை.

எப்பொழுது மிருவரும் இணைபிரியாதிருந்தலால், தணப்பிலாதிருந்த வென்றும்; அழகின்மிக்கோராதலால், மாரனில்வனப்புவாய்ந்த வென்றும்; தேவர்களிங்கு வியாதிதீர்ப்பவர்களிற் றலைமையுடையவராகையால், மருத்துவத்தலைவரென்றுஞ்சொல்லினர். தேவர்கட்கும் வியாதியுண்டோவெனில்-உண்டு; அது-"வலாரிதோள்வாதநோயன் வண்மதிகயநோயாளன், சுலாவுறு வெப்புநோயிற் றொடக்குண்டான் றக்கனென்பா, னுலாவுறுகாலிலாத முடவனேயுரங்கொண்மந்தன், சலோதரநோய்க்குட்பட்டான் றண்புனற்கரையன் மாதோ" இதனாலறிக.

(க-து.) இவர்கள் அசுவனிதேவர்கள் என்றாள் எ-ம். 126

வண்ணமேகலையாய்மற்றுன் வருமுலைப்போகம்வேண்டி
யெண்ணிலராகியிப்பா லினிதுவீற் றிருந்தோரெல்லாம்
புண்ணவர்ப்பாற் பைம்பொன் வியன்றவிசிருந்ததேவர்
பண்ணமைதிவவினல்யாழ்பயின்றகாந்தருவவேந்தர்.

(இ-ள்.) வண்ணமேகலையாய்-அழகு பொருந்திய மேகலாபரணத்தையணிந்த தமயந்தியே, உன்-உன்னுடைய, வரு - வளரப்பெற்ற, முலை-ஸ்தனங்களுடைய, போகம்வேண்டி-போகத்தைவிரும்பி,எண்ணிலராகி-அளவற்றவராகி, இப்பால்-இப்புறத்தில், இனிது - இனிமையோடு, வீற்றிருந்தோரெல்லாம்-வீறுடனிருத்தலையுற்றவர்களெல்லாரும்,விண்ணவர்-தேவர்கள்,அப்பால்-அவர்க்கப்புறத்தில்; பைம்பொன்-பசியபொன்னாற்செய்த, வியன்-மேலாகிய, தவிசிருந்ததேவர்-ஆசனத்திலிருக்கப்பெற்ற தேவர்கள், பண்ணமை-இசையமைந்த, திவவின்-வலிக்கட்டினையுடைய, நல்யாழ்-நல்லயாழை, பயின்ற - வாசிக்கின்ற காந்தருவவேந்தர்-கந்தருவவரசர்கள் எ-று. மற்று-அசைநிலை.

தேவர்களை இன்னாரின்னாரென்று வெவ்வேறுகூறத்தொடங்கிற் காலநீட்டிக்குமென்பதுபற்றி, எண்ணிலராகியிப்பா லினிதுவீற்றிருந்தோரெல்லாம் வண்ணவர் என்பொதுப்படக் கூறப்பட்டது. யாழினதிலக்கணமுன்பெழுதப்பட்டது அங்ஙனங் காண்க.

(க-து.) இவர்கள் காந்தருவமரசர்கள் என்றாள் எ-ம். 127

குழைமுகங்கிழிக்கும்வேற்கட்கொம்மைவெம்முலைசாய்கேட்டி
மழவிடையென்னவாங்கண்மணித்தவிசிருந்ததேவ
ரிழுமெனவருவிச்சாரலினமணிவரன்றித்தூங்கும்
விழைவிறுவெள்ளிவெற்பின்விஞ்சையர்க்கிறைவர்தாமே

(இ-ள்.) குழைமுகம்-காதணியினுடையமுகத்தை, கிழிக்கும-கிழிக்கின்ற, வேற்கண்-வேல்போன்றகண்களையும், கொம்மை- இளமையையுடைய, வெம்முலைபாய்-விருப்பைச்செய்கின்ற ஸ்தனங்களையுமுடைய தமயந்தியே, கேட்டி-கேட்பாயாக, மழவிடையென்ன - இளவேற்றைப்போல், ஆங்கண்-அவ்விடத்தில், மணித்தவிசு-இரத்நாசனத்திலே, இருந்ததேவர்-இருத்தலையுற்றதேவர்கள், இழுமென-இழுமென்னுமோசையோடு, அருவியானது, சாரல்-மலைப்பக்கத்தினின்றும், இனமணி-கூட்டமாகிய, மணிகளை, வரன்றி - வாரிக்கொண்டு, தூங்கும்-ஒழுகுகின்ற, விழைவுறு-விருப்பமடைகின்ற,வெள்ளிவிற்பின்-கைலாசமலையிலிருக்கின்ற, விஞ்சையர்க்கிறைவர்-வித்தியாதரருக்கரசர் எ-று. தாம்-ஏ-என்பன இரண்டும் அசைகள்.

இழுமென அருவிதூங்குமென்பது, இழுமென்றல் வினைவினொலிக்குறியாம். "இழுமென விழிதருமருவி, பழமுதிர்சோலை மலைகிழவோனே" எனப் பிறரும் இவ்வாறு கூறுதல் காண்க. ஐம்முகத்தோடுங் கூடிய சதாசிவமூர்த்தி இருத்தலால் அங்கிருப்பின் நமக்கழிவில்லையென்று யாவருந் தவஞ்செய்தடைதற்கு விரும்புதாதலின், கைலாசமலையை-விழைவுறு வெள்ளி வெற்பென்றார்.

(க-து.) இவர்கள்வித்தியாதரருக்கரசர்கள் என்றாள் எ-ம். 128

முயற்கறையொழிந்தசெவ்விமுழுமதியதனினாளு
மயக்கியுள்ளுயிரையுண்ணும்வாள்கிடந்தனையகண்ணாய்
பயக்கருஞ்சிறப்பிற்றேவர்பரவவீண்டிருந்தகாளை
யியக்கர்தம்பெருமானீன்றவெழில்புனைகுமரரேறே.

(இ-ள்.) முயற்கறை-முயலினதுகறுப்பு, ஒழிந்த-நீங்கிய, செவ்வி-அழகு பொருந்திய, முழுமதியதனில்-பூரணசந்திரனையொத்த முகத்தில், நாளும்-நாடோறும், மயக்கி-மயங்கச்செய்து,உள்ளுயிரை-உள்ளேயிருக்கின்றஆவியை, உண்ணும்-உண்கின்ற, வாள்கிடந்தனைய-வாளிருந்ததை யொத்த, கண்ணாய்-கண்ணையுடையதமயந்தியே, பயக்கரும்-தோன்றுதற்கரிய, சிறப்பில்-சிறப்பினால், தேவர்பரவ-தேவர்கள் வணங்கும்படி, ஈண்டிருந்த - இவ்விடத்திலிருத்தலைப்பெற்ற, காளை-அரசன், இயக்கர்தம் பெருமானீன்ற - குபேரனாற்றரப்பட்ட, எழில்புனை-அழகுபொருந்திய, குமரரேறு-நளகூபரின் எ-று. ஏ-அசை.

திரவியமுடைவனை யாவருஞ் சூழ்ந்திருத்தலியல்பாதலின், நளகூபரன் குபேரன் மகனாதல்பற்றித் தேவர் பரவவீண்டிருந்தகாளை எனப்பட்டது.

குபேரன் இயக்கர்வேந்தனென்பது- 'இயக்கர்வேந்தன்-அளகையாளி" இத னலறிக.

(க-து.) இவன் நளகூபரன் என்றாள் எ-ம். 129

காதளவோடிமீண்டிகடைசிவந்தாவியுண்ணு
மாதர்மென்னோக்கினாயிம்மணித்தவிசிருந்தவேந்தல்
பூதரவில்லினாணாய்ப்புனிதனுக்கணியுமாகிப்
பாதலத்தின்பந்துய்க்கும்பஃறலைப்பாந்தள்வேந்தே.

[இதனால் நாமகள தமயந்திக்கு நாகவேந்தனைக்காட்டுதல் சொல்லப்படு கின்றது.

(இ-ள்.) காதளவோடி-காதுவரையுமோடி, மீண்டு-திரும்பி, கடைசி வந்து-கடைக்கண்சிவந்து, ஆவியுண்ணும்-உயிரையுண்கின்ற, மாதா-அழகிய, மென்னோக்கினாய்-மெல்லியபார்வையையுடைய தமயந்தியே, இம்மணித்த விசிருந்த-இந்தரத்நாசனத்திலிருந்தலைப்பெற்ற, எந்தல்-அரசனானவன், புனி தனுக்கு-பரமசிவனுக்கு, பூதரவில்லில்-மேருவில்லில், நாணாய்-நாரியாகியும், அணியுமாகி-ஆபரணமாகியும், பாதலத்து-நாகருலகத்திருந்து, இன்பந்துய்க் கும்-சுகத்தையனுபவிக்கின்ற, பஃறலை-பலதலையையுடைய, பாந்தள்வேந்து- சர்ப்பராசன் எ-று. ஏ-ஈற்றசை.

பரமசிவன் திரிபுரத்தை அழிக்கத்தொடங்கியபோது மேருவைவில்லாக் கிக்கொண்டு அதற்கேற்பச் சர்ப்பராஜனை நாணாக்கியபடியால், பூதரவில்லி னாணாய் என்றும்; சர்ப்பங்களனைத்துஞ் சிவபூசைசெய்து எங்களை ஆபரண மாக்கிக்கொள்ளல்வேண்டுமென வரங்கேட்ப அவ்வாறு அச்சிவன் கொடுத்த லால் புனிதனுக்கணியுமாகி என்றுஞ் சொல்லினர். இவை சிவபுராணத்திற் காண்க.

(க-து.) இவன் ஆதிசேடன் என்றாள் எ-ம். 130

இழைபரந்திமைக்குமல்குலின்னகைப்பவளச்செவ்வாய்
மழைமதர் நெடுங்கணல்லாய் மலர்க்கணைவேனில்வேளுந்
தொழுதகுவனப்புவாய்ந்துதோன்றுமித்தோன்றல்வெய்ய
பொழிமதக்களிறல்யானைப்புட்கரத்தீவில்வேந்தே.

[இதுமுதல் ஐந்துபாட்டுகளால் நாமகள் தமயந்திக்கு ஐந்தீவிலு மிருந்து வந்த அரசரைத் தனித்தனி தெரிவித்தல் சொல்லப்படுகின்றது.

(இ-ள்.) இழை-ஆபரணங்களால், பரந்து-பரவப்பெற்று, இமைக்கும்- பிரகாசிக்கின்ற, அல்குல்-அல்குலையும், இன்னகை-இனிநகையுள்ள, பவளச் செவ்வாய்-பவளம்போன்ற செவ்வாயையும், மழை-குளிர்ச்சி பொருந்திய, மதர்-களிப்பையுடைய, நெடுங்கண்-நெடியகண்களையுமுடைய, நல்லாய் தழ

யந்தியே, மலர்க்கணை-பூங்கணைகளையுடைய, வேனில்வேளும் - மன்மதனும், தொழுதகு - வணங்கத்தக்க, வனப்புவாய்ந்து - அழகுபெற்று, தோன்றும்-தோன்றுகின்ற, இத்தோன்றல்-இவ்வரசன், வெய்ய-வெவ்விய, பொழிமதம்-மும்மதம்பொழிகின்ற, களிநல்யானை களிப்புமிகுந்த நல்லயானைகளையுடைய, புட்கரத்தீவில்-புட்கரமென்னுந் தீவிலிருக்கின்ற, வேந்து-அரசன் எ-று.

தேவர்களையும் நாகவேந்தனையுஞ் சொல்லி உடனேநாவலந்தீவரசரைக் கூறாது மற்றைத் தீவரசரைச்சொல்லிய தென்பொருட்டெனில், இவர்கள் சோகம்-நரை-திரை-மூப்பு - முதலியவைகளின்றிப் பதினாயிரம் வயதுள்ளவராய்த் தேவரோடு ஒருபுடையொத் திருந்தலினென்க. அவர்களுக்கு அக்குணங்கள் உண்டென்பது-"சாகமுத லிருமூன்றிற் றங்கினர்கடமக் கெல்லாஞ், சோகமிலையென்றளுந் துய்த்திருப்பர்சுகமவர்த, மாகமதினரைதிரையுமில்லையயுதாயுள்வளர், மோகமிலை கலியுகத்துங் கிம்புருடர் முறைபெறுவர்" அதனாலறிக. [இதில் அரசன் செல்வச்சிறப்பைச் சொல்லுதலால், வீறுகோளணியாம்.] இச்செய்யுள் முதலாவருஞ் செய்யுள்தோறும் இவ்வணி யமைந்திருத்தல் காண்க.

(க-து.) இவன் புட்கரன் என்றாள் எ-ம். 131

ஆற்றல்சான்மன்னராவியருந்துவான்கரந்துவெய்ய
கூற்றிருந்தனையவுண்கட்கோல்வளையினிதுகேட்டி
வேற்படைத்தானைசூழவியன்றவிசிருந்தகாளை
பாற்கடலுடுத்தசாகத்தீவுறைபரிதிவேலான்.

(இ-ள்.) ஆற்றல்சால்-வலிமைமிக்க, மன்னராவி-அரசர்களுயிரை, அருந்துவான்-உண்ணும்படி, கரந்து - மறைந்து, வெய்ய-வெவ்விய, கூற்றிருந்தனைய-யமனிருந்ததையொத்த, உண்கண்-மையுண்டகண்களையுடைய, கோல்வளை-தமயந்தியே, இனிதுகேட்டி-இனிமையோடு கேட்பாயாக, வேற்படை-வேற்படையேந்திய, தானை-சேனைகள், சூழ-தன்னைச்சுற்றும்படி, வியன்-அழகிய, தவிசிருந்த-ஆசனத்தி லிருக்கப்பெற்ற, காளை-அரசனானவன், பாற்கடலுடுத்த-பாற்கடலையுடுத்த, சாகத்தீவுறை-சாகமென்னுந்தீவிலிருக்கின்ற, பரிதிவேலான்-சூரியன்போன்ற வேற்படையையுடைய அரசன் எ-று.

கடல்களேழினும் உயர்ச்சிபெற்ற கடலாதலாலும், அக்கடலிற் சிந்தாமணியாற்செய்த மண்டபத்தில் உமாதேவி யோகநித்திரை கொண்டிருத்தலாலும், நாரணக்கடவுள் ஆலிலைமேல் அறிதுயில்கொண் டிருத்தலாலும், தேவர்களால் அமிர்தங் கடைந்தெடுக்கப் படுதலாலும், இலக்குமிமுதலிய அழகின்மிக்க மங்கையரும் கவுத்துவமணி பஞ்சதருக்கள் ஐராவதமுதலியவும் பிறத்தலாலும், அச்சிறப்பு விளங்க மற்றைத் தீவுகட்கு மவ்வக்கடலைக் கூறாதுஇத் தீவிற்குமாத்திரம் (பாற்கடலுடுத்த சாகத்தீவு) என்று சிறப்பிக்கப்பட்டது. அதனால் அத்தீவைப் புரக்கும் அரசன் பெருமையுங் கூறியதாயிற்று. அதில்

உமாதேவியார் யோகநித்திரை கொள்ளுகின்றாரென்பதை-"ஆரமிர்தின் கடல் வேலிசெழுந்தரு வாய்மணி பம்பிய தீவூடே, பாரகடம்படர் கானிலரும்கொடை பாய்மணிமண்டப வீடேடே கோரசிவன்பரமேசனுமஞ்சமொர்கூர்பரியங்க மெனுமேலே, சீரடரும்பர ஞானமுறுங்களி தேவரருந்துவர் பூமாதே." இதனாலறிக.

(க-து.) இவன் சாகத்தீவரசன் என்றாள் எ-ம். 132

தளரிடைமெலியவீங்கிச்சந்தனத்தேய்வைகொட்டி
வளரிளமுலையாயிங்கண்வைகியமணிசெய்பூணு
னிளவெயிற்பரிதிமான்றேரிடறுபொற்குடுமியோங்கிக்
கிளரொளிவிரிக்குமாடக்கிரவுஞ்சத்தீவின்வேந்தன்.

(இ-ள்.) தளரிடை-தளர்கின்ற இடையானது, மெலிய-வாட, வீங்கி, பருத்து, சந்தனத்தேவை-சந்தனக்குழம்பினை, கொட்டி-அப்பி, வளர்-வளரப்பெற்ற, இளமுலையாய்-இளமைபொருந்திய ஸ்தனங்களையுடைய தமயந்தியே, இங்கண்-இவ்விடத்தில், வைகிய-தங்கிய, மணிசெய்பூணான்-இரத்நாபரணங்களையுடைய அரசன், இளவெயில் - இளவெய்யிலையுடைய, பரிதிமான்றேர்-சூரியனுடைய குதிரைகட்டிய தேரானது, இடறு-இடறுகின்ற, பொற்குடுமி-பொன்னாற்செய்த சிகரமானது, ஓங்கி-உயர்ந்து, கிளர்-மிகுந்த, ஒளிவிரிக்கும்-காந்தியைப்பரப்புகின்ற, மாடம் - உப்பரிகைகளையுடைய, கிரவுஞ்சத்தீவின்-கிரவுஞ்சமென்னுந் தீவையாளுகின்ற, வேந்தன்-அரசன் எ-று.

இங்கன மென்பது இங்ஙனெனக் கடைகுறைந்தது. சூரியனிரதத்திற் கட்டிய குதிரைகள் ஒளியைநோக்கிக் கண்கூசி ஓதுங்கிநடக்கப் பெருமையால் பரிதிமான்றே ரிடறுபோர்குடுமியோங்கிக் கிளரொளிவிரிக்குமாடம் எனப்பட்டது.

(க-து.) இவன் கிரவுஞ்சத்தீவரசனென்றாள் எ-ம். 133

புரிவடஞ்சுமந்துவீங்கும்புணர்முலையீங்குவைகுந்
திருகுவெஞ்சீற்றத்துப்பிற்றிண்களியானையன்னான்
விரைமதுவுயிர்க்குங்கைதைவேலிவாய்மணியும்பொன்னும்
வருதிரைசுருட்டுங்கானல்வான்குசைத்தீவில்வேந்தன்

(இ-ள்.) புரிவடம்-முத்துவடங்களை, சுமந்து-பொறுத்து, வீங்கும்-பருத்த புணர்முலை-நெருங்கிய ஸ்தனங்களையுள்ள தமயந்தியே, ஈங்குவைகும்-இங்கேயிருக்கின்ற, திருகு-மாறுபடுகின்ற, வெம்-வெவ்விய, சீற்றத்துப்பின்-மிகுந்த கோபத்தையும், திண்-வலிமையையுமுடைய, களியானையன்னான்-களிப்புமிக்க யானையையொத்தஅரசனானவன், விரை-வாசனைபொருந்திய, மதுவுயிர்க்கும்-தேனைத்தருகின்ற, கைதைவேலிவாய் - தாழைவேலியிடத்தில், மணியும்-நவமணிகளையும், பொன்னும்-பொன்னையும், வருதிரை-வருகின்றஅலைகள், சுரு

ட்டும்-மடக்கிவீசுகின்ற கானல்-கடற்கரைச்சோலைகளையுடைய, வான்-மேலா கிய, குசைத்தீவில்-குசையென்னுந்தீவிலிருக்கின்ற, வேந்தன் அரசன் எ-று.

எப்போதாயினுந் தன்னைப்பகைத்தவர்மேற் கோபம்வைத்தால், அனேக நாள்கழிகினும் மறவாது அவரைக்கொல்லுதலும், வலிமைபெறலும், களிப்பு மிகுதலும், யானைக்குள்ள குணமாதல் இவ்வரசனுக்கும் உண்டென்பது தோ ன்ற; திருகுவெஞ் சீற்றத்துப்பிற் றிணைகளியானையன்னான் என்றார்.

(க-து.) இவன் குசைத்தீவரசன் என்றாள் எ-ம். 134

தெண்டிரைப்பரவையீன்றதெள்ளமிர்தூறல்போலும்
பண்டருமினியதீஞ்சொற்படாமுலைப்பாவைகேண்மோ
விண்டலப்பரிதிபோலவிளங்குமிக்குரிசில்வாசத்
தண்டலையுடுத்தகானற்சான்மலித்தீவில்வேந்தன்.

(இ-ள்.) தெண்டிரை-தெளிந்தஅலைகளையுடைய, பரவையீன்ற-கடலானது ஈன்ற, தெள்-தெளிந்த, அமிர்தூறல்போலும்-அமிர்தத்தின்தூறல்போலும், பண் டரும்-இசையைத்தருகின்ற, தீஞ்சொல் - மதுரம்பொருந்தியசொல்லையும், ப டாமுலை-சாயாத ஸ்தனங்களையுமுடைய, பாவை-பதுமைபோன்றவளே, கேள்-கேட்பா யாக, விண்டலப்பரிதிபோல-ஆகாயத்திலிருக்கின்ற சூரியன்போல, விளங்கும் -பிரகாசிக்கின்ற, இக்குரிசில்-இவ்வரசனானவன், வாசத்தண்டலையுடுத்த-வாச மிக்க மலர்களையுடைய சோலைகளையுடுத்த, கானல்-நெய்தனிலத்தையுடைய, சான்மலித்தீவில்-சான்மலித்தீவிலிருக்கின்ற, வேந்தன்-அரசன் எ-று.

பாற்கடலிற்பிறந்த அமிர்தத்தின் மாதுரியம் இவள் சொல்லினு லதியலா மென்பதற்கு, பாவையீன்ற தெள்ளமிர் தூறல்போலு மினியதீஞ்சொல்லெனப் பட்டது. பண்டருமினியதீஞ்சொல் என்பதில், "அறுவகைத்தொகையு மறை யுங்காலை, யொன்றே தொகுதலும் பலவேதொகுதலு, மாறுவகையுமடங்கத் தொகுதலு, முருபேதொகுதலும் பொருளேதொகுதலு, முருபும்பொருளு மொருங்கேதொகுதலு, முருபும்பொருளு மொருங்குபல தொகுதலும், பொரு ளுமுருபும் பொருளுந்தொகுதலு, முதலிடைகடையென மூன்றினுந் தொகு தலுங், கடையிடையிரண்டினுங் காணத்தொகுதலு, மாதியாய்ப்பலவு மறைந் தனர்புலவர்" இவ்விதியால் பின்னங்குழல் தொக்கது. சூரியன் இருட்பகையை யோட்டுதல்போல் இவன் தன்பகையை யோட்டியவ னென்பது தோன்ற, விண்டலப்பரிதிபோல விளங்குமிக்குரிசில் என்றார். அன்றிப் பரிதிபோல் வி ளங்கிய ஒளியை யுடையவனெனினு மமையும்.

(க - து.) இவன் சான்மலித்தீவரசன் என்றாள் எ-ம். 135

தேவர்கண்முதலாமற்றைத்தீவினில்வனப்புவாய்ந்த
காவலரினையரென்றுவுரைத்துமைக்கரியகூந்தற்
பூவையந்தீஞ்சொல்வாட்கட்பொம்மல்வெம்முலையினுட்கு
நாவலந்தீவின்வேந்தர்யாரையுநவிலலுற்றாள்.

[இதனால் நாமகள் தமயந்திக்கு இனி கூறத்தொடங்கினமை சொல்லப் படுகின்றது.]

(இ-ள்.) தேவர்கண்முதலா - தேவர்களாதியாகிய, மற்றைத்தீவினில்-மற்றைத்தீவுகளில், வனப்புவாய்ந்த - அழகு பற்ற, காவலர் - அரசர்கள், இனையரென்று-இத்தன்மையரென்று, உரைத்து-சொல்லி, மை-மைபோலும், கரியகூந்தல்- கருத்தகுழலையும், பூவையந்தீஞ்சொல்-பூவைப்புள்ளினிசையை யொத்த தித்தித்தவார்த்தையையும், வாட்கண் வாள்போன்ற, கண்களையும், பொம்மல் - பொலிவுபெற்ற, வெம்முலையினுட்கு - விருப்பத்தைச்செய்கின்ற ஸ்தனங்களையுமுள்ள தமயந்திக்கு, நாவலந்தீவின்வேந்தர்-நாவலந்தீவிலிருக்கின்ற அரசர்கள், யாரையும்-எவர்களையும், நவிலலுற்றாள்-சொல்லத்தொடங்கினாள் எ-று.

தீவுகளேழனுள் இதுகாறுஞ்சொல்லிய தீவுகளைந்தும் இனிசொல்லப் போகிற தீவொன்றுமாக ஆறுதீவுகளைச் சொல்லி ஒன்றனைக் கூறாதொழிந்தது, அந்தத்தீவையாளு மரசன்வந்திலன்போலும். இனி நாவலந்தீவிலிருக்கின்ற பலதேயத்தரசரையுஞ் சொல்லப்படுதல்காண்க. நாவலந்தீவென்றுஇத் தீவிற்குப் பெயரானது "நறவனையகனியுதிரு நன்னாவலெந்நாளு, முறுதியுறவுயிர்க்கெல்லாந் தென்றிசையிலோங்குதலாற், பெறுநவகண்டமும் பெரிய நாவலந்தீ வெனும் பெயரை, மறுவறுமக் கனித்தீநீர் மலையதனை வலம்வருமே" இதனாற்காண்க.

(க-து.) நாவலந்தீ வரசர்களைச் சொல்லத்தொடங்கினாள் எ-ம். 136

கொள்ளை வண்டிமிருங்கூந்தற்கோதையிவ்விருந்தவேந்தல்
வள்ளவாய்க்கமலவாவிவாளையம்பகடுதாவிக்
கள்ளுலாம்பசியதாற்றுக்கமுகிளம்பாளைகீறு
மள்ளலம்பழனஞ்சூழ்ந்தவவந்திநாடாளும்வேந்தே.

[இதுமுதல் இருபத்தைந்து பாட்டுகளால் நாமகள் தமயந்திக்கு நாவலந்தீவரசர்களைத் தனித்தனிகூறுதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கொள்ளை-கூட்டமாகிய, வண்டு-வண்டுகள், இமிரும்-சத்திக்கின்ற, கூந்தல்-அளகத்தையுடைய, கோதை-தமயந்தியே, இவ்விருந்தவேந்தல்-இங்கிருந்த விவ்வரசன், வள்ளவாய்-கிண்ணம்போன்ற வாயையுடைய, கமலவாவி-தாமரைத்தடாகத்தினின்றும், வாளையம்பகடு-ஆண்வாளைகள், தாவி-பாய்ந்து, கள்ளுலாம்-தேனொழுகுகின்ற, பசிய-பசுமைபொருந்திய, தாறு-குலைகளுள்ள கமுகிளம்பாளை-கமுகமரத்தி னிளம்பாளைகளை, கீறும்-கிழிக்கும்படியிருக்கின்ற, அள்ளல்-சேற்றினது, அம்-அழகிய, பழனஞ்சூழ்ந்த-களிகள்சூழ்ந்த அவந்திநாடு-அவந்திதேயத்தை, ஆளும-ஆளுகின்ற,வேந்து-அரசன் எ-று.

கொள்ளையிடும் வண்டெனப் பொருள்கொண்டு, அதற்கேற்பத் தேனையென்னுஞ் செயப்பொருள் வருவித்துக்கொள்ளினும் அமையும். அள்ளலம்

பழனமென்னுந்தொடர்மொழியிலிருக்கும் அம்மென்பது, விரித்தல் விகார மாய்நின்றது. அது "வலித்தன் மெலித்த னீட்டல் குறுக்கல், விரித்த றொகுத்தலும் வருஞ்செய்யுள் வேண்டுழி" என்னுஞ் சூத்திரத்தால் அந்நூலார் விரித்தல் விகாரத்திற்குக் காட்டிய "தண்ணந்துறைவர் தக்கிலரே" என்னும் உதாரணத்தாலறிக. இன்னு மிந்நூலிற் பலவிடந்தோறும் அழகெனப்பொருள்கொண்டிருக்கும் இதுபோல்வனவற்றையும், இவ்வாறு விகாரமென்று கொள்ளினும் இழுக்காவென்க.

(க-து.). இவன் அவந்திநாட்டரசன் என்றாள் எ-ம். 137

நன்னலங்கனிந்தகோதாயீங்குறைநாமவேலான்
பொன்னவிரோடைநெற்றிப்பொழிமதங்களிறுமாய்க்குஞ்
செந்நெலங்குலையிற்றாங்குந்தீங்கொடைநறவுகாலுங்
கன்னலங்கழனிசூழ்ந்தகௌடநாட்டரசரேறே.

(இ-ள்) நன்னலம்-மிகுந்தநலமானது. கனிந்த-முதிர்ந்த, கோதாய்-தமயந்தியே, ஈங்குறை-இங்கேயிருக்கின்ற, நாமம்-அச்சத்தைத்தருகின்ற, வேலான்-வேலாயுதத்தையுடையஅரசன், பொன்-பொன்னாற்செய்து, அவிர்-பிரகாசிக்கின்ற, ஓடை-முகபடாத்தையணிந்த, நெற்றி-நெற்றியையும், பொழிமதம் பொழிகின்றமதத்தையுமுடைய, களிறு-யானையை, மாய்க்கும் மறைக்கின்ற,செந்நெல்-செஞ்சாலிகளுள்ளனவும்,அங்குலையில்-அழகியகுலைகள்போல, தாங்கும்-தங்குகின்ற, தீம்-தித்திப்புடைய, தொடை-தேன்கூண்டானது,நறவு தேனை, காலும்-துளிக்கின்ற, கன்னல்-கரும்புள்ளனவுமாகிய, அங்கழனி-அழகியகழனிகளால், சூழ்ந்த-சூழப்பட்ட, கௌடநாடு-கௌடதேயத்தை யாளுகின்ற, அரசர்-மன்னர்க்கு, ஏறு-ஆண்சிங்கத்தையொத்த வரசன் எ-று.

களிறுமாய்க்குஞ் செந்நெலென்றும், தேன்கூட்டையுடைய கன்னலென்றுஞ் சொல்லுதல், கவிகளின்வழக்கம். அது "மீன்கணினளவும் வெற்றிடக்கனின்மையாற்றேன்கணக்கரும்பியல்காடுஞ்செந்நெலின், வான்புகழ்களிறுமாய் கழனியாக்கமு, மூங்கண்ணர்க்குப்பரி தொல்லென சும்மைத்தே." இதனாலறிக.

(க-து.) இவன் கௌடநாட்டரசன்என்றாள் எ-ம். 138

கஞ்சநாண்மலரைவென்றுகடைகுழைபெறிந்துமீண்ட
நஞ்சனக்கொடியவாட்கணங்கையிவ்விருந்தமீளி
வெஞ்சமங்காத்தலன்றியுணியெனவிளங்கச்செய்த
விஞ்சிசூழ்மதுரைமூதூரெதுகுலமன்னரேறே.

(இ-ள்.) கஞ்சம்-தாமரையினுடைய, நாண்மலரை-புதியமலரை,வென்று-வெற்றிகொண்டு, கடைகுழை-காதணியினுடையகடையை, எறிந்து - வீசி, மீண்ட-திரும்பிய, நஞ்சென-விடம்போல, கொடிய-கொடியவாகிய, வாட்கண்-வாள்போன்ற கண்ணையுடைய, நங்கை - தமயந்தியே, இவ்விருந்தமீளி

இருத்தலைப்பெற்ற இவ்வரசன், வெம்-வெம்பப்பொருந்திய, சமம்-யுத்தத்திலே, காத்தலன்றி-காப்பதற்கல்லாமல், அணியெண-அலங்காரமாக விளங்கச்செய்த-பிரகாசிக்கும்படிசெய்த, இஞ்சிசூழ்-மதில்சூழ்ந்த, மதுரைமூதூர் - மதுராபுரியாளுகின்ற, எதுகுலமன்னர்-எதுகுலவரசர்க்கு, எறு-ஆண்சிங்கத்தைபொத்தவன் எ-று.

பெரியோர்களாற் சிறந்தெடுத்துச்சொல்லப்பட்ட அயோத்தி-மதுரை மாயை- காசி-காஞ்சி-அவந்திகை-துவாரகை-என்னு மேழுநகரங்களில் ஒரு நகரமாதலாலும் யதுவேந்தன் முதலிய அனேக அரசர்புரக்கும்படி இராஜதானியா யிருந்ததனாலும், மதுரைக்கு மூதூரென அடைகொடுக்கப்பட்டது.

(க-து.) இவன் மதுராபுரியரசன் என்குள் எ-ம். 139

அமிழ்தினைமுனிந்துசாரலருவிதாழ்மலையமீன்ற
தமிழினுமினியதீஞ்சொற்றையலீண்டிருந்தகோமா
னிமிழ்திரைகொழித்தமுத்தமேழைநின்முறுவல்காட்டுங்
கமழலந்துறைசூழ்தெண்ணீர்க்கங்கைநாடாளும்வேந்தன்.

(இ-ள்.) அமிழ்தினை-அமிர்தத்தை, முனிந்து-கோபித்து, சாரல்-பக்கங்களிலே, அருவிதாள்-அருவியான தாழ்கின்ற, மலையம்-பொதிய மலையிலிருக்கும் அகத்தியமுனிவனால், ஈன்ற-தரப்பட்ட, தமிழினும்-தமிழைக்காட்டிலும், இனிய - இனிமையுள்ள, தீஞ்சொல் - மதுரம்பொருந்திய சொல்லையுடைய, தையல்-தமயந்தியே, ஈண்டிருந்த - இவ்விடத்திருந்த, கோமான் - அரசனானவன், இமிழ்-பிரகாசிக்கின்ற, திரை - அலைகளானவை, கொழித்த-ஒதுக்கிய, முத்தம்-முத்துக்கள், எழை-தமயந்தியே, நின்முறுவல் - உன்னுடையபல்வரிசையை, காட்டும்-காண்பிக்கக்கும், கமழ்-பரிமளிக்கின்ற, அலம்-அமைவினையுடைய, துறைசூழ் - துறைகள்சூழ்ந்த, தெண்-தெளிவுபொருந்திய, நீர்-நீரையுடைய, கங்கைநாடாளும் வேந்தன்-கங்கைநாடாளும் அரசன் எ-று.

மலையமென்பது அதிலிருக்கும் அகத்தியமுனிக்காதலால், ஆகுபெயர். பரமசிவன் வடமொழிக்கிலக்கணம் பாணினிக்குச சொல்லியதுபோல், தமிழ்மொழிக்கிலக்கணம் அகத்தியமுனிக்குச் சொல்லி உலகத்திலே பரவச்செய்தபடியால், மலையமீன்ற தமிழெனப்பட்டது. அது-"விடையுகைத்தவன் பாணினிக் கிலக்கணமேனாள், வடமொழிக்குரைத் தாங்கியன்மலையுமாமுனிக்குத், திடமுறுத்தியம் மொழிக்கெதிராக்கிய தென்சொன், மடமகட்கரங்கென்பது வழுதினா டன்றே" இதனாலறிக.

(க-து) இவன் கங்கைநாட்டரசன் என்குள் எ-ம். 140

வனைமலர்க்குழங்கன்மாலைவணைரிருங்கூந்தற்செவ்வா
யினவளைமடந்தையிப்பாலெரிமணித்தவிற்சிறேன்று
நனைவிரியலங்கன்மார்பனுள்விழவறுதவீதிக்
கனைகுரன்முரசந்துஞ்சாக்காம்பிலிக்காவல்வேந்தன்.

(இ-ள்.) வனைமலர்-மலராற்றொடுத்த, குழங்கன்மாலை-அழகியமாலையை யணிந்த, வணர்-வளைந்த, இரும்-பெரிய, கூந்தல்-குழலையும், செவ்வாய்-செவ் வாயையும், இனவளை - கூட்டமாகிய வளையலையுமுடைய, மடந்தை-தமயந் தியே, இப்பால்-இப்புறத்து, எரி-ஒளிவிடுகின்ற, மணித்தவிசில்-இரத்நாசனத் தில், தோன்றும்-தோன்றுகின்ற, நனைவிரி-அரும்புகள்விரிந்த, அலங்கல்-மாலை யையணிந்த, மார்பன்-மார்பையுடையவன், நாள்-நாடோறும், விழவறாத-திரு விழாநீங்காத வீதியிலே, கனை-சத்திக்கின்ற, குரல்-குரலையுடைய, முரசம்- பேரிகையானது, துஞ்சா-ஒய்வில்லாத, காம்பிலிக் காவல்வேந்தன்-காம்பிலு தேயத்தை யாளுகின்ற அரசன் எ-று.

எந்நாளுந் தெய்வங்களுக்குச் சிறப்புமிக்க திருவிழாவெடுப்பது தோன்ற, நாள்விழவறாத வீதியென்றும்; எந்தவாத்தியங்களினு முரசஞ் சிறந்தமையால், கனைகுரன்முரசந் துஞ்சாவென்றும்; சொல்லினர். முரசம்வாத்தியப்பொதுவு மாகும்.

(க - து.) இவன் காம்பிலிதேசாதிபதி என்றாள் எ-ம். 141

நுழைநொசிமருங்குறேம்பநுண்ணெழின்மாமைவாய்ந்த
விழைவளர்முலையினாய்மற்றிங்கினிதிருந்ததோன்றன்
மழலைவண்டுழலத்தூங்குமழைமதப்புழைக்கைநால்வாய்க்
கழைகளிகளிநல்யானைக்கலிங்கநாடாளுமன்னன்.

(இ-ள்.) நுழைநொசி-மிகுந்த நுட்பத்தையுடைய, மருங்குல் - இடையா னது, தேம்ப-வாட, நுண்-நுட்பம்பொருந்திய, எழில்-அழகானது, மாமை வாய்ந்த-பிரகாசம்பொருந்திய, இழை-ஆபரணத்தையணிந்த,வளர்முலையினாய்- வளரப்பெற்ற முலையினையுடைய தமயந்தியே, இங்கு-இவ்விடத்தில், இனிது- இனிதாக, இருந்த-இருக்கப்பெற்ற, தோன்றல்-அரசனானவன், மழலை-இனி மைபொருந்திய வோசையுள்ள, வண்டு-வண்டுகள், உழல-உழலும்படி, தூங் கும்-தங்கிய, மழைமதம்-மலைபோன்ற மதத்தையும், புழைக்கை-துவாரம் பொ ருந்திய துதிக்கையையும், நால்வாய்-தொங்குகின்ற வாயையுமுடைய, கழை களி-கரும்பை முறிக்கின்ற, களிநல் யானை-களிப்புப்பொருந்திய நல்லயானை களையுடைய, கலிங்கநாடாளுமன்னன்-கலிங்கநாட்டை யாளுகின்ற அர சன் எ-று.

யானையின் மதநீரையுண்ண வண்டுழலுதலால், வண்டுழலத்தூங்கு மழை மதமென்றார். அம்மதநீரை வண்டுண்ணுதல்-"நல்லமதந்தா னெண்கவுளின்பா னன்றுண்ணச், செல்லுசுரும்பே வெங்கரியின்றாழ் செவியூடே, மெல்ல நட ந்தே போகெனமெல்ல விளம்பென்று, சொல்லிமறங்கூர் வேலகண்ணார் துயர்கின்றார்." என்பதனலறிக.

(க-து.) இவன் கலிங்கதேசாதிபதி என்றாள எ-ம். 142

உளங்கனிந் துருகப்பைந்தார்க்காமனுமுவக்குஞ்சாய
றுளங்கொளிமுத்தமூரற்றோகையீங்கிருந் ததோன்றல்
விளங்கிழைநினது கண்போல்வேரியங்குவளைபூத்த
வளங்கெழுமருதவேலிவாரணவாசிமன்னன்.

(இ-ள்.) உளம்-மனமானது, கனிந்துருக-இளகியுருகும்படி, பைந்தார் பசியமாலையை யணிந்த, காமனும-மன்மதனும், உவக்கும் - விரும்புகின்ற, சாயல்-சாயலையும், துளங்கு-அசைகின்ற, ஒளி-ஒளியையுடைய, முத்தமூரல், முத்தையொத்த பற்களையுமுடைய, தோகை-தமயந்தியே, ஈங்கு-இங்கே, இருந்த-இருத்தலைப்பெறற, தோன்றல்-அரசனானவன், விளங்கிழை விளங்குகின்ற வாபரணத்தையுடையாய், நினது-உன்னுடைய, கண்போல்-கண்ணைப் போல், வேரியங்குவளை-தேனையுடைய அழகிய குவளைமலர்கள், பூத்த-பூத்திருக்கின்ற, வளங்கெழு-வளம்பொருந்திய, மருதவேலி-மருதநிலத்தையுடைய-வாரணவாசிமன்னன்-காசிதேயத்தரசன் எ-று.

வாரணசி என்பது வாரணவாசியென மருவிற்று. சாயலால் தோகை போன்றவளெனக்கொள்க. [மாதர்கண்களுக்கு உவமிக்கப்படுங் குவளைமலர்களை இத்தமயந்தி கண்களுக்கு உவமேயமாகக் கூறுதலால், எதிர்நிலையணியாம்.]

(க-து.) இவன் காசிதேசாதிபதி என்றாள், எ-ம். 143

குவட்டிளமுலையிணைப்நின் குழைமுகத்திங்கணோக்கி
யுவட்டெடுத்துவகைவெள்ள மோங்கவீங்கிருந்ததோன்றல்
கவட்டடிக்கயவாய்மேதிகன் றுள்ளிப்பொழிந்ததீம்பா
றெவிட்டவுண்டன்னந்துஞ்சுஞ் செழும்புனற்சிந்துவேந்தே.

(இ-ள்.) குவடு-மலைபோன்ற, இளமுலை-இளமைபொருந்திய ஸ்தனங்களையுமுடைய தமயந்தியே, நின்-உன்னுடைய, குழை-குண்டலத்தையணிந்த, முகத்திங்கணோக்கி-முகமாகிய சந்திரனைப் பார்த்து, உவட்டெடுத்து - பெருக்கெடுத்து, உவகை-மகிழ்ச்சியென்னும், வெள்ளம்-கடலானது, ஓங்க - மிகுந்தொலிக்க, ஈங்கிருந்த-இங்கிருத்தலையுற்ற, தோன்றல்-அரசனானவன், கவட்டடி-பிளப்பாகிய குளம்பையும், கயவாய்-பெரியவாயையுமுடைய, மேதி-எருமை, கன்றுள்ளி-தன் கன்றை நினைத்து, பொழிந்த-சொரிந்த, தீம்பால் - தித்திப்புப்பாலை, தெவிட்ட உண்டு-நிறையவுண்டு, அன்னந்துஞ்சும்-அன்னப்பறவை துயிலுகின்ற, செழும்புனல்-செழுமையுள்ள நீரையுடைய, சிந்துவேந்து-சிந்துதேயத்தையாளுகின்ற அரசன், எ-று. ஏகாரம் ஈற்றசை.

சந்திரனைப் பார்த்தால் கடல் அதிகரித்தொலித்த லியல்பாதலால், குழைமுகத்திங்கணோக்கி யுவட்டெடுத்துவகை வெள்ளமோங்க வீங்கிருந்த தோன்றல் எனப்பட்டது. "மதியெழக் கடன்முழங்குதல்போல்" என்றார் பிறரும். நீரிலே எருமை தன்கன்றை நினைத்துப் பொழிந்தபாலை அன்னம்உண்ணுதல்,

"பாலுநீரும் பாற்படப்பிரித்த லன்னத்தியல்பென வறிந்தனர் கொளலே" இதனாலறிக.

(க-து.) இவன் சிந்துதேசாதிபதி என்றாள் எ-ம். 144

பகட்டிளமுலையாயீங்குப்படுதிரைப்பரவைவேலை
முகட்டெழுப்பரிதியேய்ப்பவீங்குறைமுழவுத்தோளான்
பொருட்டுமென்கமலவாவிப்பூம்புனலுழக்கிக்கொண்ட
லகட்டினில்வாளைதாவுமகன்பணைக்குருகரேறே

(இ-ள்.) பகடு-யானைமத்தகம்போன்ற, இளமுலையாய்-இளமைபொருந்திய முலையையுடையதமயந்தியே, ஈங்கு-இவ்விடத்தில், படுதிரை-அலைகளையுடைய, பரவை-பரந்த, வேலைமுகட்டெழு - கடலுச்சியிற்றோன்றிய, பரிதியேய்ப்ப-சூரியனையொப்ப, ஈங்குறை-இங்கிருக்கின்ற, முழவுத்தோளான்-மத்தளம்போன்றதோளையுடையவன், பொருட்டு-கொட்டையையுடைய, மென்கமல, மெல்லியதாமரை மலரையுடைய, வாவி-தடாகத்திலுள்ள, பூம்புனலுழக்கி-அழகுபொருந்திய நீரைக்கலக்கி, கொண்டலகட்டினில்-மேகங்களுடைய வயிற்றினிடத்தில், வாளைதாவும்-வாளைமீன்கள்தாவுகின்ற, அகன்பணை-அகன்றவயலையுடைய, குருகரேறு-குருகதேயத்தாருக்குச் சிங்கவேற்றையொத்த அரசன் எ-று.

முன்பாட்டிலும் இப்பாட்டிலும், குவடு-கவடு-பகடு-முகடு-அகடு-என்னும் அடியெதுகையாய்வந்த உயிர்த்தொடர்மொழிக் குற்றிய லுகரங்கள் டமரவொற்றிரட்டித்தல், "ஈரெழுத்துமொழியு முயிர்த்தொடர் மொழியும்-வேற்றுமையாயி னொற்றிடையின்மிகத்-தோற்றம் வேண்டும் வல்லெழுத் து மிகுதி" இச்சூத்திரத்தாலறிக. கொண்டலகட்டினில் வாளைதாவுமென்றல், "வெள்ளத் தடங்க ணெடுவாளை வெலிக்கமுகின் மிடறொடியத், துள்ளிமுகிலைக் கிழித்து மழைத் துளியோடிறங்கும்" என்பதனாற் காண்க.

(க-து.) இவன் குருகதேசபதிபதி என்றாள் எ-ம். 145

வேலெனப்பிறழ்ந்துகூற்றைவெல்குவன்வருகவென்று
வோலைவிட்டுலவுங்கண்ணாயீங்குறையுலங்கொடோளான்
சூலுளைந்தலறிப்பைந்தேன்றுளிக்குமென்கமலப்போதின்
வால்வளைமுத்தமீனும்வளவயன்மச்சர்கோவே.

(இ-ள்.) வேலெனப்பிறழ்ந்து-வேற்படைபோ லொளியைச்செய்து,கூற்றை-யமனை, வெல்குவன்-வெற்றிகொள்ளுவேன், வருகவென்று-நீவரக்கடவாயென்று, ஓலைவிட்டு-அந்தயமனுக்கு ஓலையெழுதிவிட்டு, உலவும்-உலாவுகின்ற, கண்ணாய்-கண்களையுடைய தமயந்தியே, ஈங்குறை-இங்கேயிருக்கின்ற, உலங்கொள் - திரள்கல்லின் வலியைக்கொண்ட, தோளான்-புயத்தையுடையவன், சூலுளைந்து-கருப்பவாதைப்பட்டு, அலறி-ஒலித்து, பைந்தேன்-பசியதேனை,

தளிக்கும் - தெறிக்கின்ற, மென்கமலப்போதின் - மெல்லியதாமரைமலரில், வால்-வெண்மைபொருந்திய, வளை-சங்கங்கள், முத்தமீனும்-முத்துக்களைப்பெறுகின்ற, வளம்-வளம்பொருந்திய, வயல்-கழனிகள்சூழ்ந்த, மச்சரேறு-மச்சதேயத்தாருக் கரசன் எ-று.

நீதிப்படி போர்செய்து வெல்லக்கருதுமரசர்கள், உன்னைப்போரில்வெல்லும்படி எத்தனித்துவந்தேன்: நீயும் வருகவென்று ஓலையேனுந் தூதேனும்விடுத்துத் தெரியப்படுத்தல் முறையாதலின்; கூற்றை வெல்குவன்வருகவென்னு வோலைவிட்டுலவுங் கண்ணாய் என்றார். இதனால் கண்களானவை காமுகர்க்குச் செய்யுங் கொடுமை கூறியதாயிற்று.

(க-து.) இவன் மச்சதேசாதிபதி என்றாள் எ-ம். 146

குடங்கையினெடியவாட்கட்கொம்பனாயீங்குபைம்பொன்
மடங்கலாசனத்தின்மேயமணியெழுவனையதோளான்
முடங்குவெண்டோட்டுக்கைதைமுருகுயிர்த்திரங்குந்தெண்ணீ
டங்கடற்புலவுபோக்குந்தண்டுறைமகதநாடன். [ர்த்

(இ-ள்.) குடங்கையின்-உள்ளங்கைபோல், நெடியவாட்கண்-நீண்டவாள்போலுங் கண்களையுடைய, கொம்பனாய்-தமயந்தியே, ஈங்கு-இங்கே, பைம்பொன்-பசும்பொன்னாற்செய்த, மடங்கலாசனத்தில்-சிங்காதனத்தில், மேய-பொருந்திய, மணியெழுவனைய-அழகிய எழுத்தூணையொத்த, தோளான்-புயங்களையுடையவன், முடங்கு-வளைவினையுடைய, வெண்டோட்டு-வெண்மை பொருந்திய விதழையுடைய, கைதை-தாழைகளானவை, முருகுயிர்த்து-வாசனையைவீசி, இரங்கும்-சத்திக்கின்ற, தெண்ணீர்-தெளிந்தநீரையுடைய, தடம்-விசாலம்பொருந்திய, கடற்புலவு-கடலினதுபுலானாற்றத்தை, போக்கும்-நீக்குகின்ற, தண்டுறை-குளிர்ச்சிபொருந்திய துறையையுடைய, மகதநாடன்-மகததேயத்தரசன் எ-று.

வீரத்தன்மையும் புயவலிமையுந் தோன்ற ஆசனமென்றொழியாது,மடங்கலாசன மென்றும்; தோளானென்றொழியாது, மணியெழுவனைய தோளானென்றும்; சொல்லினார். முருகுயிர்த்துக் கடற்புலவுபோக்கு மென்றமையால் நெய்தற் கருப்பொருளாகிய தாழை அங்கே அதிகரித்திருக்கின்ற தென்பது கருத்து.

(க-து.) இவன் மகதநாட்டரசன் என்றாள் எ-ம். 147

கழையெனத்திரண்டமென்றோட்காமருகுவளையுண்கட்
பொழிகதிர்முத்தவாரற்பூங்கொடியீங்குவைகு
மழிகவுட்கடாத்தசீற்றத்தண்ணலங்களிறுபோல்வான்
முழையகடுரிஞ்சுமாடமலிகுருநாடர்கோவே.

(இ-ள்.) கழையென-மூங்கில்போல், திரண்ட-திரண்டிருக்கின்ற, மென்றோள்-மெல்லிய தோள்களையும், காமர்-அழகுபொருந்திய, குவளை யுண்கண்-நீலோற்பலத்தழகையுண்ட கண்களையும், பொழிகதிர்-கிரணங்களைப் பொழிகின்ற, முத்தமூரல்-முத்தங்களையொத்த பற்களையுமுடைய, பூங்கொடி-தமயந்தியே, ஈங்குவைகும்-இங்கேதங்கிய, அழி-ஒழுகின்ற, கவுட்கடாத்த-மதமொழுகுகின்ற கன்னத்தையும், சீற்றத்து-கோபத்தையுமுடைய, அண்ணல்-பெரிய, களிறுபோல்வான்-யானையையொத்த அரசனானவன், மழையகடு-மேகத்தின்வயிற்றை, உரிஞ்சு-தேய்க்கின்ற, மாடமலி-உப்பரிகைகள் நெருங்கிய, குருநாட்டுக்கோ-குருநாட்டுக் கதிபதி எ-று.

கழை என்பது கரும்பெனினும் ஒக்கும். குருவென்னும் அரசனாற் புரக்கப்படுதலால், குருநாடாயிற்று. குருக்ஷேத்திரமென்றுங் கூறுவர். குருக்ஷேத்திரம் புண்ணியபூமியாம். அது பாரதத்திற் காண்க. அன்றியும்- "தீர்த்தமார்சிவகாசிதிகழ்குருக், கேத்திரம்பிர யாகைகிளரலர், பூத்தபுட்கர மாதி புனிதர்க, ளார்த்தகங்கை யலைகடலாதியும்" இதனானுமறிக.

(க-து.) இவன் குருநாட்டரசன் என்றாள் எ-ம். 148

வடுநெடுங்கண்ணியீங்குவைகியமடங்கலன்னான்
குடநிகர்செருத்தற்செங்கட்குவிமுலையெருமைதெண்ணீர்த்
தடவயலுழக்கவாளை தாவிமுப்புடைக்காய்த்தெங்கின்
படுபழமுதிர்க்குஞ்சூழற்பல்லவதேயவேந்தே.

(இ-ள்.) வடு-மாவடுபோன்ற, நெடுங்கண்ணி - நெடியகண்களையுடைய தமயந்தியே, ஈங்கு-இங்கே, வைகிய-தங்கப்பெற்ற, மடங்கலன்னான்-சிங்கவேற்றையொத்தவன், குடநிகர்-குடத்தையொத்த, செருத்தல் - மடியையும், செங்கண்-சிவந்தகண்களையும், குவிமுலை-குவிந்தமுலையையுமுடைய, எருமை-எருமையானது, தெண்ணீர்-தெளிந்தநீரையுடைய, தடவயல்-விசாலம்பொருந்திய கழனிகளை, உழக்க-கலக்க, வாளை-அதனாலெழும்பிய வாளைகள், தாவி-பாய்ந்து, முப்புடைக்காய்-மூன்றுபக்கமுள்ள காயையுடைய, தெங்கின்-தென்னமரத்தில், படு-உண்டாகிய, பழம்-பழங்களை, உதிர்க்கும்-உதிர்க்கின்ற, சூழல்-இடத்தையுடைய, பல்லவதேயவேந்து-பல்லவதேயத்தை யாளுகின்ற அரசன், எ-று. ஏகாரம் ஈற்றசைக்கண் வந்தது.

எருமை தெண்ணீர்த் தடவயலுழக்க, அதனாலெழுந்த வாளைதாவித்தெங்கின்பழ முதிர்க்கும் பல்லவதேயம் எனக் கூட்டுக. இதனால் அந்நாடு நீர்வளமிக்குச் செழித்திருக்கின்றதென்பது கருத்து.

(க-து.) இவன் பல்லவதேயத்தரசன் என்றாள் எ-ம். 149

பிள்ளைமானனைக்கியீங்குவைகியபிறங்கற்றோளா
னள்ளிலைக்கமலப்போதிலரசிளவன்னங்காண

வள்ளுறைபிலிற்றுந்தண்கார்வரவெதிர்மயில்களாடக்
கிள்ளைபாட்டயருஞ்சோலைக்கேகயநாட்டுவேந்தன்.

(இ-ள்.) பிள்ளைமான்-இளமான் பார்வையையொத்த, நோக்கி-பார்வை யுடைய தமயந்தியே, ஈங்கு-இங்கே,வைகிய-தங்கப்பெற்ற,பிறங்கல்-மலையை யொத்த, தோளான்-தோளையுடையவன், அள்ளிலை-நெருங்கிய இலையை யுடைய, கமலப்போதின்-தாமரைமலரிலிருக்கிற, அரசிளவன்னங்காண-இளமைபொருந்திய அரசவன்னம் பார்க்கும்படி, வள்-வளம் பொருந்திய, உறை-துளியை, பிலிற்றும்-துளிக்கின்ற, தண்-குளிர்ச்சி பொருந்திய, கார்-மேகங்களினுடைய-வரவெதிர்-வரவினையெதிர்ந்த-மயில்களாட-மயில்கள் கூத்தாட, கிள்ளை-கிளிப்பிள்ளைகள், பாட்டயரும்-பாட்டைப்பாடும்,சோலை-சோலைகள் சூழ்ந்த, கேகயநாட்டுவேந்தன்-கேகயநாட்டரசன் எ-று.

அரசவன்னமாவது-மூக்குங்கால்களுஞ் சிவந்து உடம்பு விளர்த்திருப்பது. கார்கண்டு மயிலாடுதல், "என்னையூர்ந்தருள் சுடர்வடியிலையவேற் பெருமான், றன்னைநன்மரு கெனப்படைத் தவன்றனை தூர்தி, யன்னதாமெனுங் கேண்மையா வளிமுகிற்குலத்தைக், கன்னிமாமயில் காண்டொறுங் களிசிறந்தகவும்" இத்தொடக்கத்தைக் காண்க. கிள்ளைபாட்டயரு மென்றலால், "கிள்ளைபாடுவகேட்பனபூவைகள்" என்றார்பிறரும்.

(க-து.) இவன் கேகயநாட்டரசன் என்றாள் எ-ம். 150

கொல்லுலைவேற்கணல்லாயீங்குறைகுலவுத்தோளான்
முல்லையம்புறவிற்சேதாமுலைவழியொழுகுதீம்பா
லல்லியங்கமலவள்ளத்தரசிளவன்னமாந்து
மல்லலம்பழனஞ்சூழ்ந்தமத்திரதேயவேந்தன்.

(இ-ள்.) கொல்லுலை-கொல்லனுலையிற்காய்ந்த,வேற்கண்-வேல்போன்ற கண்களையுடைய, நல்லாய்-தமயந்தியே, ஈங்குறை-இங்கேயிருக்கின்ற,குலவு-திரட்சிபொருந்திய, தோளான்-தோள்களையுடையவன், முல்லையம்புறவில்-முல்லைகளையுடைய அந்நிலத்தில், சேதா-செவ்விய பசுக்களினுடைய, முலைவழி-முலையின்வழியே, ஒழுகுதீம்பால்-ஒழுகிய தித்திப்புப்பாலை, அல்லியங்கமலவள்ளத்து-அகவிதழையுடைய தாமரைமலராகிய கிண்ணத்தில், அரசிளவன்னம்-இளமைபொருந்திய அரசவன்னங்கள், மாந்தும்-உண்ணுகின்ற,மல்லல்-வளம்பொருந்திய, பழனஞ்சூழ்ந்த-வயல்களாற் சுற்றப்பட்ட, மத்திரதேயவேந்தன்-மத்திரதேயத்தையாளுகின்ற வரசன் எ-று.

முல்லையம்புறவிலிருக்கும் சேதாவின்பாலைக் கமலவள்ளத்தன்னமாந்தும் பழனஞ்சூழ்ந்த தேயமெனவால், முல்லை நிலத்திற்கு மருதநிலத்திற்குந் திணை மயக்கங்கூறியவா றாயிற்று.

(க-து.) இவன் மத்திரதேயத்தரசன் என்றாள் எ-ம். 151

தாளதாமரையின்மேயதாக்கணங்கனையாயீங்குக்
கோளரியென்னவைகுங்குருதிகொப்புளிக்கும்வேலான்
பாளைவாய்க்கமுகிற்றாவிப்பலவின்முட்புறக்காய்சிந்த
வாளையம்பகடுதாவும்வங்கநாடாளும்வேந்தே.

(இ-ள்.) தாள-நாளத்தையுடைய, தாமரையின்-தாமரைமலரிலே, மேய-இருக்கின்ற, தாக்கணங்கனையாய்-இலக்குமியையொத்த தமயந்தியே, ஈங்கு-இங்கு, கோளரியென்ன-சிங்கவேற்றைப்போல், வைகும்-தங்கிய, குருதி-உதிரத்தை, கொப்புளிக்கும்-கொழிக்கின்ற, வேலான் - வேற்படையையுடையவன், பாளைவாய்-பாளைகள்வாய்ந்த, கமுகிற்றாவி-கமுகமரத்தின்மேற்றாவி, பலவின் பலாமரத்திற்காய்ந்த, முட்புறக்காய்-முள்ளைப்புறத்திலேயுடையகாய் காய்கள், சிந்த-சிதற, வாளையம்பகடுதாவும்-ஆண்வாளைகள்தாவுகின்ற, வங்கநாடாளும்வேந்து-வங்கதேயத்தை யாளுகின்றஅரசன் எ-று. ஏகாரம்-ஈற்றசைக்கண்வந்தது.

அரி என்பதற்குத் திருமாலெனப் பொருள்கொள்ளினுமமையும். அரசமங்கையர்க்கு இலக்குமியைச்சொல்லுதலும் அரசனுக்குத்திருமாலைச்சொல்லுதலும் அழகிற்குமாத்திரமன்றி, பொருள்-போகம்-காப்பு-பெருமை-முதலியவற்றிற்குங் கொள்க. கமுகினும் பலாபெரிதாதலால், கமுகிற்றாவிப் பலவின் முட்புறக்காய்சிந்த வாளையம்பகடு தாவுமென்றார். கோள்-சிங்கத்திற்குக் கொலையும், திருமாலுக்கு வலிமையுங்கொள்க.

(க-து.) இவன் வங்கதேயத்தரசன் என்றாள் எ-ம். 152

காம்புறழ்பசியமென்றோட்கதிர்முலைத்துவர்வாய்த்தீஞ்சொற்
பாம்படுமல்குலீங்குவைகியபரிதிவேலான்
றேம்பொதிகமலமேயவால்வளைதிங்களென்று
வாம்பல்வாய்மலரும்வாவியங்கநாடாளுமவேந்தே.

(இ-ள்.) காம்புறழ்-மூங்கிலையொத்த, பசிய-பசியவாகிய, மென்றோள்-மெல்லியதோள்களையும், கதிர்முலை-பிரகாசம்பொருந்தியமுலையையும், துவர்வாய்-சிவந்தவாயையும், தீஞ்சொல்-மதுரம்பொருந்தியசொல்லையும், பாம்படும்-பாம்பினையடுகின்ற, அல்குல்-அல்குலையுமுடைய-தமயந்தியே, ஈங்குவைகிய - இங்கேதங்கிய, பரிதிவேலான்-சூரியன்போன்ற வேலையுடையவன், தேம்-தேனானது, பொதி-நிறைந்த, கமலமேய-தாமரைமலரிலிருக்கின்ற, வால்வளை-வெண்சங்குகளை, திங்களென்று-சந்திரனென்று, ஆம்பல்-அல்லிமுகைகள், வாய்மலரும-விரியும், வாவி-தடாகத்தையுடைய, அங்கநாடாளும்-அங்கதேயத்தையாளுகின்ற, வேந்து-அரசன் எ-று. ஏகாரம்-ஈற்றசைக்கண் வந்தது.

வளை-திங்கள்போல ஒளிவீசுதலால், ஆம்பல்வாய் மலருமென்றார். "எவ்வியார்மூரிளநிலாக்கண்டுகெருங், காவிமுகையவிழுங்காஞ்சியே" என்றார் பிறரும். உமாதேவி இமயமலைக்கு மகளாய்வந்திருந்தபோது பரமசிவன் சனகன்

முதலிய நால்வர்க்கும் தக்ஷிணாமூர்த்தியாயிருந்து அனுக்கிரகம்பண்ணிக் கொண்டிருந்தார். அப்போது அக்கவுரியை மணங்கும்படி செய்யவேண்டித் தம்மேன் மலரம்புகளைத் தொடுத்த மன்மதனை அக்கடவுள் நெற்றிக்கண்ணைத் திறந் தெரித்தபோது அவனெலும்புவிழுந்த இடமாதலால், அதற்கு அங்க தேயமென்னும் பெயராயிற்று. [வால்வளை திங்களென்று வாம்பல்வாய் மலருமென- ஆம்பன்மலருக்குச் சங்கினிடத்தில் சந்திரனென்னு மயக்கஞ் சொல்லப்பட்டமையால், மயக்கவணியாம்.]

(க-து.) இவன் அங்கதேயத்தரசன் என்றாள்-எ-ம். 153

சிதரரிநெடுங்கணல்லாயீங்குறைதிணிபொற்றோளான்
கதிர்படுகழனியூடுகளைத்திளவண்டுந்தேனும்
புதிதுணக்கமலப்போதுபுரிமுறுக்கவிழ்ந்துமாறா
மதுமடைதிறந்துபாயும்வளங்கொள்பாஞ்சாலவேந்தே.

(இ-ள்.) சிதர்-பரவுகின்ற, அரி-செவ்வரிபரந்த, நெடுங்கணல்லாய்-நெடியகண்களையுடைய தமயந்தியே, ஈங்குறை-இங்கேயிருக்கின்ற, திணிவலிமைபொருந்திய, பொற்றோளான்-அழகியதோளையுடையவன், கதிர்படு-கதிர்களானிறையப்பெற்ற, கழனியூடு-வயல்களிலே, களைத்து-ஆரவாரித்து, இனம் கூட்டமாகிய, வண்டும்-வண்டுகளும், தேனும்-தேனவண்டுகளும், புதிதுணபுதிதாகவுண்ண, கமலப்போது-தாமரைமலர்கள், புரி-கட்டுப்பட்ட, முறுக்கவிழ்ந்து-முறுக்குடைந்து, மாறா-நீங்காத, மது-தேனானது, மடைதிறந்துமடையைத்திறந்து, பாயும்-பாய்கின்ற, வளங்கொள்-வளத்தைக்கொண்ட, பாஞ்சாலவேந்து-பாஞ்சாலதேயத்தரசன் எ-று. ஏகாரம் ஈற்றசைக்கண் வந்தது.

கழனியிடத்திலேயிருக்குந் தாமரைமலர்கள் வண்டினங்களுக்கு நாடோறும் புதிதாகவுண்ணும்படி தேனைத்தருமெனலால், அவ்வாறு அந்நாட்டிலுள்ளவரனைவரும் விருந்தினர்க்கு உபசரிக்கின்றன ரென்பது கருதது.

(க-து.) இவன் பாஞ்சாலதேயத்தரசன் என்றாள் எ-ம். 154

இழைபுரைமருங்குலின்னேயிறமிறமென்னவீங்கி
யழகுவீற்றிருந்தபொம்மலணிமுலையாங்குவைகுங்
கொழுதிவண்டிமிருந்தாரான்கோணிலைதிரிந்தனான்று
மழைவளஞ்சுரக்குஞ்செல்வமலிந்தகாந்தாரவேந்தே.

(இ-ள்.) இழைபுரை-நூலிழையையொத்த, மருங்குல்-இடையானது, இன்னே-இப்பொழுதே, இறமிறமென்ன-ஒடியுமொடியுமென்ன, வீங்கி-பருத்து, அழகுவீற்றிருந்த, அழகானது அரசிருந்த, பொம்மல்-பொலிவுபெற்ற, அணி-ஆபரணங்களையணிந்த, முலை-ஸ்தனங்களையுடைய தமயந்தியே, ஆங்குவைகும்-அங்கேதங்கிய, கொழுதி மூக்கினாலுழுது, வண்டு-வண்டுகள், இமிரும்-ஒலிக்கின்ற, தாரான்-மாலையையுடையவன், கோள்-நவக்கிரகங்கள், நிலை

திரிந்தளுன்றும்-மாறயகாலத்தும், மழைவளஞ்சுரக்கும்-மழைவளங்களுண்டாகின்ற, செல்வமலிந்த-செல்வமிகுந்த, காந்தாரவேந்து - காந்தாரதேயத்தரசன் எ-று.

கோணிலை திரிதலாவது-கோள்கள் நடக்கவேண்டியமுறைதப்பி மாறி நடத்தல். அப்படிநடந்தால் அந்தத்தேயத்தில் மழைபெய்யமாட்டாதென்க. அது "காய்சினவெய்யோன் சேயோன் முன்செலக் கதிர்கால் வெள்ளித் தேசின் பின்புசென்று நடக்குமிச் செயலான் முன்னீர்த், தூசினை வுலகிற்பன்னீராண்டுவான் சுருங்குமென்று, பேசின நூல்கண்மாரி பெய்விப்போற்சென்று கேண்மின்" இதனாலறிக.

(க-து.) இவன் காந்தாரதேயத்தரசன் என்றாள் எ-ம். 155

அள்ளிலைவடிவேற்கண்ணாயீங்குறையலங்கற்றோளான்
முள்ளரைமுளரிமேய்ந்துமுழுநெறிக்குவளைமென்று
வள்ளைவாய்குதட்டிமேதிவழைநறுநீழற்றுஞ்சும்
வெள்ளநீர்ப்பழனஞ்சூழ்ந்தமிதிலைநாடாளும்வேந்தே.

(இ-ள்.) அள்ளிலை-மாமிசத்தை யள்ளிக்கொள்கின்ற இலையையுடைய, வடிவேல்-கூறியவேல்போன்ற, கண்ணாய்-கண்களையுடைய தமயந்தியே, ஈங்குறை-இங்கேயிருக்கின்ற, அலங்கற்றோளான்-மாலையையணிந்த தோள்களையுடையவன், முள்ளரை-முள்ளுகள்நிறைந்த தாளையுடைய, முளரிமேய்ந்து-தாமரைப்பூவைமேய்ந்து; முழுநெறி-முழுநெறிப்பையுடைய, குவளைமென்று-குவளைமலரைமென்று, வள்ளை-வள்ளையிலையை, வாய்குதட்டி-மென்று, மேதி-எருமைகளானவை, வழை-புன்னைமரத்தினுடைய, நறுநீழல்-நறியநிழலிலே, துஞ்சும்-உறங்குகின்ற, வெள்ளநீர்-அதிகநீரையுடைய, பழனஞ்சூழ்ந்த-கழனிகளாற்சூழப்பட்ட, மிதிலைநாடாளும்-மிதிலைதேயத்தையாளுகின்ற, வேந்து-அரசன் எ-று. ஏகாரம் ஈற்றசைக்கண் வந்தது.

மேய்ந்து-மென்று-வாய்குதட்டி-என்னும்வினையெச்சவடுக்குகள், துஞ்சுமென்னும் பெயரெச்சவினையையும், அது பழனமென்னும் பெயரையுங் கொண்டுமுடிந்தன.

(க-து.) இவன் மிதிலைநாட்டு மன்னன் என்றாள், எ-ம். 156

வெதிர்புரைபசியமென்றோள்வேல்கிடந்தனையகண்ணா
யதிர்கழலரசர்போற்றவீங்குறையரியேறன்னான
கதிர்வெயிற்கற்றைகான்றுகாசுகண்டுபடுக்குமாட
மதியகடுரிஞ்சவோங்குமாளவதேயவேந்தே.

(இ-ள்.) வெதிர்புரை-மூங்கிலையொத்த, பசிய-பசியவாகிய, மென்றோள்-மெல்லியபுயங்களையுடைய, வேல்கிடந்தனைய-வேற்படையிருந்ததை யொத்த, கண்ணாய்-கண்ணையுடைய தமயந்தியே, அதிர்-அதிர்ச்சியையுடைய, கழலர

ஆர்-வீரக்கழலையணிந்த அரசர்கள், போற்ற-வணங்க, ஈங்குறை-இங்கேயிருக்கின்ற, அரியேறன்ஞன்-சிங்கவேற்றையொத்தவன், கதிர்-கதிராகிய, வெயிற்றறை-வெயிற்றொருகுதியை, சான்று-வீசி, காசு-இரத்தினங்கள், கண்படுக்கும்-பதித்திருக்கிற, மாடம்-உப்பரிகைகள், மதி-சந்திரனுடைய, அகடு-வயிற்றை, உரிஞ்ச-தேய்க்க, ஓங்கும்-உயர்ந்திருக்கின்ற,மாளவதேயவேந்து-மாளவதேயத்தரசன் எ-று.

அனேகமன்னர் இவன்கீழ் அரசுசெய்து கொண்டிருத்தல் தோன்ற,அதிர்கழலரசர்போற்ற வென்றும், அவர்களினுமிகுந்த வல்லமையுடையவனென்பது தோன்ற, அரியேறன்னனென்றுஞ் சொல்லினர்.

(க-து-) இவன் மாளவதேயத்துமன்னன் என்றாள் எ-ம். 157

வடுவகிர்நெடுங்கணல்லாய்மடங்கலாசனத்தின்வைகுந்
தொடுகடலுயிர்த்தமுத்தந்துயல்வருதடந்தோள்வீரன்
கடிமுறுக்கவிழ்ந்தசெவ்விக்கமலமென்பொகுட்டிலேறிக்
குடவளைமுத்தமீனுங்கோசலத்தரசரேறே.

(இ-ள்.) வடுவகிர்-மாவடுவின்பிளப்பையொத்த, நெடுங்கண்-நெடியகண்களையுடைய, நல்லாய்-தமயந்தியே, மடங்கலாசனத்தின் - சிங்காதனத்திலே, வைகும்-தங்கிய, தொடுகடல்-சகரராற்றோண்டப்பட்ட கடலானது, உயிர்த்த-பெற்ற, முத்தம்-முத்துவடங்களானவை, துயல்வரு-அசைகின்ற, தடம்-பருத்த, தோள்-பயத்தையுடைய, வீரன்-அசசனானவன்,கடி-வாசனைபொருந்திய, முறுக்கவிழ்த்த - முறுக்குடைந்த, செவ்வி-அழகு பொருந்திய, கமலமென்பொகுட்டில்-தாமரைமலரினுடைய மெல்லிய கொட்டைகளின் மேல், ஏறி-ஏறிக்கொண்டு, குடவளை-குடம்போன்ற சங்கானது, முத்தமீனும்-முத்துக்களைப்பெறுகின்ற, கோசலத்து-கோசலதேயத்தை யாளுகின்ற, அரசரேறு-அரசரிற் சிஙகவேற்றையொத்தவரசன் எ-று. ஏகாரம்-ஈற்றசைக்கண் வந்தது.

அணிகள் அனேகமிருக்க இவ்வரசன் முத்துவடமணிந்ததைக்குறிக்கின், தனக்கு இயற்கையிற் செல்வ மிகுந்திருப்பினும் உடுத்திரளும் படிகமும் போன்று உருட்சியும் கனமுமுள்ளனவும், பார்வைக்கின்பந்தருவனவும்,குற்றமில்லனவுமாகிய முத்துக்களையணிந்தால் வறுமையுள்ளனவும் போய்ச் செல்வமுண்டாகுமென்னும் விதிபற்றிபோலும். தனது நாட்டில் வச்சிரம் உற்பத்தியாயினும் அதில் இவ்வளவு விரும்பின்மை காண்க.

(க-து.) இவன் கோசலநாட்டரசன் என்றாள் எ-ம். 158

மாழைமென்னோக்கியீங்குவைகியமானவேலான்
றாழைமுப்புடைக்காய்வீழ்ந்துதாற்றிளங்கமுகுசெற்று
வீழ்குலைவருக்கைபோழ்ந்துவெம்புலியடியபைங்காய்க்
கோழரைபரம்பைசாய்க்குங்குடகநாடாளும்வேந்தே.'

(இ-ள்.) மாஸ்ழ்-மார்பிஞ்சுபோன்ற, மென்னோக்கி-மெல்லியபார்வையை யுடைய தமயந்தியே, ஈங்கு-இங்கே, வைகிய-தங்கிய,மான-பெரிய,வேலான்-வேற்படையையுடையவன்: தாழை-தெங்கினுடைய, முப்புடைக்காய்-மூன்று பக்கங்களையுடைய காயானது, வீழ்ந்து-விழுந்து, தாறு - குலைகளையுடைய, இளங்கமுகு-இளமைபொருந்திய கமுகமரத்தை, செற்று-ஒடித்து, வீழ்சுளை-வீழப்பட்டசுளையையுடைய, வருக்கை போழ்ந்து-பலாவைப்பிளந்து,வெம்புலியடிய-வெப்பம்பொருந்திய புலியினதடியையொத்த, பைங்காய்-பசிய காயை யுடைய, கொழுமை-கொழுமை ள்ள அடியையுடைய, அரம்பை-வாழையை, சாய்க்கும் - சாயச்செய்யும், குடகநாடு-குடகதேயத்தை, ஆளும் - ஆளுகின்ற, வேந்து-அரசன் எ-று:

மரங்களைக்கூறினும் அவ்வவற்றின் கனிகளையெனக்கொள்ளுதல் சிறப்பென்க. தென்னம்பழம்வீழ்தலால், இவ்வாறுருகுமோவெனின், ஆகும். அது "காய்மாண்டதெங்கின் பழம்வீழக் கமுகினெற்றிப், பூமாண்டதீந்தேன் றொடைகீறிவருக்கைபோழ்ந்து, தேமாங்கனிசிதறி வாழைப்பழங்கள் சிந்து, மேமாங்கதமென்றிசையாற்றிசை போயதுண்டே" இதனாலறிக.

(க-து.) இவன் குடகநாட்டரசன் என்றாள் எ-ம். 159

ஏந்திளமுலையாயிப்பாலினிதுறைகுமரனன்னான்
றேந்துணருழ்த்தபோதுந்தெரிவையரிழைத்தசிற்றிற்
காந்தெரிமணியும்பொன்னுங்காழகிற்றுணியும்வாரிப்
பூந்திரைசுருட்டுந்தெண்ணீர்ப்பொன்னிநாடாளும்வேந்தே.

(இ-ள்.) ஏந்து-தாங்குகின்ற, இளமுலையாய் - இளமை பொருந்திய முலைகளையுடைய தமயந்தியே, இப்பால்-இப்புறத்தில், இனிதுறை - இனிமையுடனுறைகின்ற, குமரனன்னான்-குமாரக்கடவுளை யொத்தவன், தேந்துணர்-வாசனைபொருந்திய மகரந்தங்களை, ஊழ்த்த-உதிர்த்த, போதும்-மலரையும், தெரிவையர்-சிறுபெண்கள், இழைத்த-செய்த, சிற்றில்-சிறுவீட்டினது, காந்தெரி-ஒளிமிகுந்த,மணியும்-மணிகளையும், பொன்னும்-பொன்னையும்,காழ் வைரம்பொருந்திய, அகிற்றுணியும்-அகிற்றுண்டுகளையும், வாரி-வாரிக்கொண்டு, பூம-அழகுபொருந்திய, திரைசுருட்டும்-அலைகளைமடக்குகின்ற, தெண்ணீர்-தெளிவுபொருந்திய நீரையுடைய, பொன்னிநாடு-காவிரிசூழ்ந்தசோணாட்டை, ஆளும்வேந்து-ஆளும்அரசன் எ-று.

வான்வறப்பினுங் காலந்தப்பாது வரும் காவேரிநதிசூழ்ந்த அந்நாட்டுக்கு ஒரு குறைவில்லையென்பது தோன்ற, போதும் மணியும் பொன்னும் அகிற்றுணியும்வாரிப் பூந்திரைசுருட்டுந்தெண்ணீர்ப் பொன்னிநாடென்றார். அதனால் அந்நாட்டையாளும் அரசன்பெருமை விளங்குகின்றது.

(க-து.) இவன் சோழநாட்டரசன் என்றாள் எ-ம். 160

மோட்டிளமுலையாய் பைம்பொன்மொய்ம்மணித் தவிசிருப்பண்
சேட்டிளம்பரிதிபோல்வீங்குறை திணிபொற்றோளான்
பாட்டளிபேட்டினோடும்பருமுகைவிழ்த்துத்தேறற்
கூட்டுணுங்கமலவாவிகொற்கையம்பதிக்குவேந்தே.

(இ-ள்.) மோடு-உயர்ச்சிபெற்ற, இளமுலையாய்-இளமைபொருந்திய ஸ்தனங்களையுடைய தமயந்தியே, பைம்பொன்-பசியபொன்னாற்செய்த, மொய்ம்மணி - மணிகள்பொருந்திய, தவிசிருப்பண் - ஆசனத்தின் மத்தியத்திலே, சேட்டிளம்பரிதிபோல-மிகுந்தஇளமைபொருந்திய சூரியன்போல், வீங்குறை இங்கேயிருக்கின்ற, திணி-வலிமைபெற்ற, பொற்றோளான் - அழகுபொருந்திய தோளையுடையவன், பாட்டளி-பாட்டையுடையவண்டுகள், பேட்டினோடும்-பெட்டைகளுடன், பருமுகைவிழ்த்து-பரியஅரும்புகளை விரித்து,தேறல் தேனை, கூட்டுணும்-கொள்ளைகொள்ளும், கமலவாவி-தாமரைத்தடாகத்தையுடைய, கொற்கையம்பதிக்குவேந்து-சேரமான், எ-று ஏகாரம்-அசைநிலை.

பாட்டளிபேட்டினோடுந் தேறல் கூட்டுணுமெனலால், உலகத்தில் தனியேயுண்பதினும் தமக்கினியதுணைவியுட னிருந்துண்ணல் யாவர்க்கு மின்பமென்பதாயிற்று.

(க-து.) இவன் கொற்கைநாட்டரசன் என்றாள் எ-ம். 161

என்னமற்றினையவாறேயெரிமணிமாடஞ்சேர்ந்த
மன்னவர்குலமும்பேரும்வரன்முறைவழாதுகூறி
மின்னகுபரிதிவைவேனளனுருக்கொண்டுமேய
வன்னவர்தமையுமற்றைநளனையுமறையலுற்றாள்.

[இதனால் இனி நாமகள் தமயந்திக்கு இந்திரன்முதலிய நால்வரையும்நளனையுங் காட்டத்தொடங்கினமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) என்ன-இப்படியென்று, இனையவாறு-இத்தன்மைப்படி, எரிமணி-ஒளிவீசுகின்றமணிகள்பதித்த, மாடஞ்சேர்ந்த-உப்பரிகைகள் சேர்ந்த, மன்னவர்-அரசர்களுடைய, குலமும்-மரபும், பேரும்-நாமமும்வரன்முறை-குலமுறைமையில், வழாது-வழுவாமல், கூறி-சொல்லி, மின்னகு-ஒளியையுடைய, பரிதி சூரியனையொத்த,வைவேல்-கூரிய வலையுடைய, நளனுருக்கொண்டுமேய-நளனுருவங்கொண்டிருக்கின்ற, அன்னவர்தமையும்-இந்திரன்முதலிய அந்நால்வரையும், நளனையும் - நளமகாராசனையும், அறையலுற்றாள்-சொல்லத்தொடங்கினாள், எ-று. மற்று-அசை.

வடநூலிற்சொல்லியபடி வெவ்வேறுசொல்லில் இந்நூல்விரியுமென்பதுபற்றி, (இத்தன்மையையுடைய நாட்டரசனென்று சொல்லியபடி) குலமும் பேருஞ் சொன்னாளென்பதற்கு, இனையவாறு மன்னவர்குலமும் பேரும்வரன்முறைவழாது கூறி என "மாட்டெறிந்தொழுகல்" என்னு முத்தியாற்சுருக்கிக் கூறினார்.

(க-து.) தேவர்களையும் நளனையும் சொல்லத்தொடங்கினள் எ-ம். 162

கலைவளர்திங்களென்னக்கடிகமழ்கமலம்வாட்டுந்
திலகவாண்முகத்தாயீங்குவைகியசினவேற்காளை
வலனுடைவைரவாளான்கற்பகமலிந்ததோளான்
பலபகைவரைமுன்செற்றுபகட்டெழின்மார்பினனே.

[இதுமுதல் . நான்குபாட்டுகளால் நாமகள் தமயந்திக்கு நளனுருக்கொண்டுவந்த இந்திரன்முதலிய நால்வரையும் நளனோடு சிலேடையாக்கித் தனித்தனி கூறுதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கலைவளர்-கலைகள்வளரப்பெற்ற, திங்களென்ன-சந்திரன்போல் கடிகமழ்-வாசனைகமழ்கின்ற, கமலம்வாட்டும் - தாமரைமலரைவாடச்செய்கின்ற, திலகவாண்முகத்தாய் - திலகப்பொட்டிட்ட ஒளிபொருந்தியமுகத்தையுடைய தமயந்தியே, ஈங்குவைகிய-இங்கேதங்கிய, சினவேற்காளை - கோபம்பொருந்திய வேற்படையையுடைய அரசன், வலனுடைவைரவாளான்-வலனைக்கொன்ற வச்சிரப்படையையுடையவன், [வெற்றிபொருந்தியகூறியவாளையுடையவன்] கற்பகமலிந்ததோளான் - கற்பகமலர் மாலை நெருங்கப்பெற்ற தோளையுடையவன்] [மலையைப்பிளக்கும்படி வலிமைமிகுந்த தோளையுடையவன்] பலபகைவரைமுன்செற்ற-பலவாகிய பகைகொண்ட மலைகளை முன்சிறகறுத்துச்சயங்கொண்ட, [பலசத்துருக்களை முன்செயித்த] பகட்டெழின்மார்பினன்-பெருமைபொருந்திய அழகிய மார்பையுடையஇந்திரன் [நளன்]எ-று.

தமயந்தி மாலைசூட்டாது வந்தால் மேற்சொன்ன அரசர் முகமலர்கள் வாடுதல்பற்றி, திங்களென்னக் கமலம்வாட்டுந் திலகவாண்முகத்தாய்என்றார். இறந்தால் தன்னுடம்புநவமணியாகும்படிவரம்பெற்றிருந்தவலாசுரனைக்கொன்றபடியால்,வலனுடையவயிரவாளான்என்றும்; பறந்து உலகத்தையழித்துக்கொண்டிருந்த மலைகளின்சிறகை யறுத்தபடியால், பலபகைவரைமுன்செற்ற என்றும்; இந்திரனுக்கு அடைகள் கொடுக்கப்பட்டன. இப்பாட்டிற் பின்னிரண்டடியும் இந்திரனுக்கும் நளனுக்கும் சிலேடையாதல்காண்க.

(க-து.) இவன் இந்திரன் என்றாள் எ-ம். 163

நகைமதிமுகத்தாயீங்குவைகியநாமவேலான்
புகலரும்வெகுளியுள்ளத்தொருவினன்பொங்கியார்த்த
பகைபிருட்பிழம்புசிக்கும்பலசுடருமிழும்வாளான்
றகைமைசால்புலவரேத்துந்தாலமேழுடையகோவே.

(இ-ள்.) நகை - ஒளியையுடைய, மதிமுகத்தாய் - சந்திரன்போன்ற முகத்தையுடைய தமயந்தியே, ஈங்குவைகிய - இங்கேதங்கிய, நாமவேலான்- அச்சத்தைத்தரும் வேற்படையையுடையவன், புகலரும் - சொல்லுதற்கரிய, வெகுளியுள்ளத்து-கோபமுள்ளமனத்தையுடைய, ஒருவினன் - ஆட்டுக்கடா

வாகனத்தையுடையவன், [புகலரும்-புகுதற்கரிய, வெகுளி - சினத்தை, உள்ளத்து-மனத்தின்கண், ஒருவினன்-நீக்கினன்] பொங்கி - பொலிந்து,-ஆர்த்த-ஒலித்த, பகை-பகையாகிய, இருட்பிழப்பு-இருட்பிழப்பை, சீக்கும்-ஒட்டுகின்ற, பல-பலவாகிய், சுடருமிழும்-ஒளியையுமிழ்கின்ற, வாளான்-சுவாலையையுடையவன், [பொங்கியார்த்த - மிகுந்தகர்ச்சித்த, பகையிருள்-இருளையொத்தபகைவரது, பிழம்பு-கூட்டத்தை, சீக்கும்-நெடுக்கின்ற, வாளான்-வாட்படையையுடையவன்] தகைமைசால்-அழகுமிகுந்த, புலவரேத்தும்-தேவரால் துதிக்கப்பட்ட, தாலமேழுடையகே, எழுநாவுடையதீக்கடவுள், [தகைமைசால், பெருமைமிகுந்த, புலவரேத்தும்-வித்துவான்களால் துதிக்கப்பட்ட, தாலமேழுடையகோ-சத்ததீவையுடைய நளன்] எ-று.

ஒரு-என்பது, ஆடு. வெறிவிலக்கல்-"ஒருத்திக்கொருவன் பகையோ" என்றார் பிறரும். தேவர்புசிக்கின்ற அவிற்பாகங்கள் அக்கினிமுகமாகப் பெற வேண்டுதலாலும், இதனால் தேவர்கள்வாழ்க்கைக்கு அக்கினிகாரணமாதலாலும். வேதத்தில் தேவர்களுக்கு அக்கினியை முகமாகச்சொல்லுதலாலும், தமக்குப் புசிப்புத்தருபவனை உண்பவர் புகழ்வது இயல்பாதல்பற்றி; அக்கினியைப் புலவரேத்துந் தாலமேழுடையாகோ என்றார் புலவரென்பது-பலபொருளொருசொல்லாய்த் தேவரையும் உணர்த்தலால், அவ்வேத்துதல் - அக்கினிக்குத் தேவரெனவும், நளனுக்குக் கற்றவரெனவுங்கொள்க. இப்பாட்டிற் பின் மூன்றடியும் அக்கினிக்கும் நளனுக்கும் சிலேடையாதல் காண்க.

(க-து.) இவன் அக்கினி தேவன் என்றாள் எ-ம். 164

அஞ்சனமெழுதலாற்றாதம்மவேவென்றுநையும்
வஞ்சிநுண்ணிடையாயீங்குவைகியநாமவேலா
னெஞ்சலிறருமன்றெண்ணீயுருங்கடலுலகமெல்லாஞ்
செஞ்சவேயோசைபோயதீதறுசெங்கோல்வேந்தே.

(இ-ள்.) அஞ்சனம்-மையை, எழுதல்-எழுதுதலை, ஆற்றாது-சகியாது - ஓவேன்று-ஓவென்று, நையும்-நைவையடைகின்ற, வஞ்சிநுண்ணிடையாய்-வஞ்சிக்கொடிபோல் நுட்பமாகிய இடையையுடையதமயந்தியே,ஈங்குவைகிய-இங்கேதங்கிய, நாமவேலான்-அச்சத்தைத்தருகின்ற வேற்படையையுடையவன், எஞ்சலில்-குறைவில்லாத, தருமன் - தருமனென்னும்பெயரையுடையவன், [தருமத்தையுடையவன்] தெண்ணீர்-தெளிவுபொருந்திய நீரையுடைய,இருங்கடலுலகமெல்லாம்-பெரியகடல்சூழ்ந்தஉலகமுழுவதும், செஞ்சவே-செவ்வையாக, ஓசைபோய-புகழ்பரவப்பெற்ற, தீதறு-குற்றமற்ற, செங்கோல்வேந்து-செவ்விய காலதண்டத்தையுடையயமன்[செங்கோல்செலுத்தும் நளன்]எ-று.

கண்ணுக்கு மையெழுதினல் அந்தமையையளவுகனமும் பொறுக்கமாட்டாது நைகுமிடையெனக்கொள்க. அம்மவோ-அரக்கக்குறிப்பு. "அனிச்சப்பூக் கோதைசூட்டி னம்மனை யோவென்றஞ்சிப், பனிக்குநுண் ணுசும்பிற்பா

வை'' என்றார் பிறரும். உயிர்கள் செய்த தீவினைக்குத் தகவொறுத்தலால்-யமனையும், அறமுப்பத்திரண்டுஞ் செய்தலால்-நளனையும், தருமனென்றார். இப்பாட்டிற் பின்னிரண்டடியும் யமனுக்கும் நளனுக்கும் சிலேடையாதல்காண்க.

(க-து.) இவன் இயமன் என்றாள் எ-ம். 165

பாற்றிரையமிர்தமூறும்படரொளிபவளச்செவ்வாய்க்
கோற்றொடிமடந்தையீங்குவைகியதிரள்வுத்தோளான்
மாற்றருஞ்சிறப்பின்மிக்கவளங்கெழுபுவனவேந்த
னாற்றிசைப்பரப்புஞ்சூழ்போநலங்கெழுநேமிவேந்தே.

(இ-ள்.) பாற்றிரை-பாற்களிற்பிறந்த, அமிர்தமூறும்-அமிர்தமூறுகின்ற, படர்-படரப்பெற்ற, ஒளி - ஒளியையுடைய, பவளசெவ்வாய்-பவளம்போன்ற செவ்வாயையும், கோற்றொடி-அழகியவளையலையுமுடைய, மடந்தை-தமயந்தியே, ஈங்குவைகிய-இங்கேதங்கிய, குவவுத்தோளான்-திரட்சிபொருந்திய தோளையுடையவன், மாற்றரும்-ஒருவராலு நீக்குதற்கரிய, சிறப்பினுலமிக்க சிறப்பினுல்மிகுந்த, வளங்கெழு-வளம்பொருந்திய, புவனவேந்தன்-நீருக்கரசன், [பூமிக்கரசன்] நாற்றிசைப்பரப்பும்-நான்குதிரைகளின்பரப்பினும், சூழ்போம்-சூழ்ந்துபோகின்ற, நலங்கெழு-நன்மைபொருந்திய, நேமிவேந்து-கடலரசனுனவருணன், [சக்கிரவர்த்தியாகியநளமகாராசன்] எ-று.

புவனமென்பது-நீருக்கும் பூமிக்கும், நேமியென்பது-கடலுக்கும் சக்கரத்துக்கும், பலபொருளொருசொல்லாதலும், காண்க. இப்பாட்டிற் பின்னிரண்டடியும் வருணனுக்கும் நளனுக்கும் சிலேடையாதல் காண்க.

(க-து.) இவன் வருணனென்றாள் எ-ம். 166

போதரிநெடுங்கநல்லாய்பொருசிலைவேனிலானிற்
கோதையர்மனமுங்கண்ணுங் கூட்டுணுங்குவவித்தோளான்
றாதவிழ்கமலப்போதுமலர்ந்தபூந்தடங்கடோறு
மாதர்மென்முகங்கள்காட்டும்வளங்கெழுநிடதவேந்தே.

[இதனால் நாமகள் தமயந்திக்கு தன்னிச்சையின்வழி நின்ற நளனைத்தெரிவித்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) போதரி-அரிபரந்த, நெடுங்கண்-நெடியகண்களையுடைய, நல்லாய்-தமயந்தியே, பொருசிலை-பொருகின்றவில்லையுடைய, வேனிலானில்-மன்மதன்போல், கோதையர்மங்கையர்களுடைய, மனமும்-நெஞ்சையும், கண்ணும் விழிகளையும், கூட்டுணும்-கொள்ளையிடுகின்ற, குவவுத்தோளான்-திரட்சிபொருந்திய தோளையுடையவன், தாதவிழ-மகரந்தப்பொடியுதிர்கின்ற,கமலப்போது-தாமரைமலர்கள், மலர்ந்த-விரிந்த, பூந்தடங்கடோறும்-பொலிவுபொருந்திய தடாகங்கள்தோறும், மாதர்-மடவார்களுடைய, மென்முகங்கள்காட்

ழும்-மெல்லியமுழங்களைக் காண்பிக்கின்ற, வளங்கெழு - வளம்பொருந்திய, நிடதவேந்து-நிடததேயத்தையாளும் நளமஹாராசன் எ-று. ஏ அசை.

கோதையர் மனமுங் கண்ணுங் கொள்ளைகொண்டுண்ணுந் தோளான் எனினும் அமையும் இப்பாட்டில் தோளான்-எழுவாய், நிடதவேந்து-பயனிலை. இப்படத்தில் "சேயரிசிந்தி" என்னும் பாட்டுமுதல் இப்பாட்டுவரையும் முதற்கண் இத்தன்மையனென்று பொதுப்படச் சுட்டியதை எழுவாயாகவும், இந்நாடனென்பதைப் பயனிலையாகவுங் கொள்க.

(க-து.) நளமகாராசன் இவனே என்றாள் எ-ம். 167

என்றியலணங்குகூறவினையரிலன்னங்கூறு
மன்றலந்தெரியற்றிண்டோண்மன்னவன்யார்கொலென்றுப்
பொன்றிகழ்திதலைபூத்தபுணர்முலைப்பாவைபோல்வா
ளொன்றியவையத்தோடுமுள்ளநெக்குருகிநின்றாள்

[இதுமுதல் மூன்றுபாட்டுகளால் தமயந்திசெய்கை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்) என்று-இப்படியென்று, இயலணங்கு - நாமகளானவள், கூற சொல்லியவளவில், இனையரில்-இத்தன்மையை யுடைய அரசர்களில், அன்னங்கூறும்-அன்னப்பறவை முன்புசொல்லிய, மன்றல்-வாசனைபொருந்திய, தெரியல்-மாலையையணிந்த, திண்டோள்-திண்மைபொருந்திய தோள்களையுடைய, மன்னவன்-நளமகாராசன், யார்கொலென்று-எவனென்று, பொன்-பொன்போல், திகழ்-விளங்குகின்ற, திதலைபூத்த-தேமல்பரவிய, புணர்முலை-நெருங்கிய முலைகளையுடைய, பாவைபோல்வாள்-பாவைபோல்பவளாகிய தமயந்தியானவள், ஒன்றியவையத்தோடும்-பொருந்திய சந்தேகத்துடனே, உள்ளம்-மனமானது, நெக்குருகிநின்றாள்-மிகவுங் கரைந்துநின்றாள் எ-று.

இந்திரன்முதலிய நால்வரும் நளவேடங்கொண்டிருத்தலாலும், அவர் அவாறிருத்தலைக் கேள்விப்பட்டமையாலும், நாமகள் அந்நால்வரையுஞ்சொன்ன செய்யுளுக்கு அத்தேவரையன்றி நளனென்றும் பொருள் படுதலாலும், நளனைச் சொல்லிய செய்யுளுக்கு வேறுபொருள் படாது நிடதவேந்தென்று வெளிப்பட்டிருப்பினும் இதற்கும் உளதோவென்றும், நம்மை விரும்பியிருந்த தேவர் நிலைமாறி மாயஞ்செய்யினுஞ் செய்வரென்னு மெண்ணமுள்ள தமயந்திக்கு ஒருவர்போலிருக்கு மிவ்வைவருள் நளன் எவனென்று சந்தேகத்துக்கிடமுண்டாய் வருத்தந் தோன்றியதென்க [இது பொதுமையணி.]

(கஅ-து.) தமயந்தி மனமுருகி நின்றாள் எ-ம். 198

எள்ளுறவேணுயோரையிரட்டுறமொழிதலானும்
வள்ளன்மார்புணிந்ததாரிலவண்டுவீழ்ந்தாற்றலானு
முள்ளுறப்பிணித்தவன்பினூழ்வினைத்தொடர்பினானு
நள்ளிருள்பருகும்பைம்பூணளனையேநளனென்றோர்ந்தாள்,

(இ-ள்.) என்னுற-சந்தேகம் பொருந்த, ஏனையோரை-மற்றையோரை, இரட்டுறமொழிதலானும்-இரண்டுபொருள்படச் சொல்லுதலானும், வள்ளன் மார்பணிந்ததாரில்-நளன்மார்பிலணிந்த மாலையில்,வண்டுவீழ்ந்தாற்றலானும-வண்டுகள்வீழ்ந்தொலித்தலானும, உள்ளுறப்பிணித்த-உள்ளே பொருந்தக்கட்டிய, அன்பின் - அன்பினாலுண்டாகிய, ஊழ்வினைத் தொடர்பினானும் - ஊழ்வினையினுடைய சம்பந்தத்தினாலும், நள்ளிருள்-மிகுந்த இருளை, பருகும்-உண்கின்ற, பைம்பூண்-பசியபொன்னாற்செய்த ஆபரணங்களையுடைய, நளனையே-நளனென்னு மரசனையே, நளனென்று - நளமகாராசனென்று, ஓர்ந்தாள்-அறிந்தாள் எ-று.

தேவர்களணிவது கற்பகந்தந்த பொற்பூமாலையாதலால் அதில் வண்டு வீழாமைபற்றி, வள்ளன்மார்பணிந்ததாரில் வண்டுவீழ்ந்தாற்றலானும் என்றும்; "ஊழிற்பெருவலி யாவுளமற்றொன்று, சூழினுந் தான்முந்துறும்" என்பதுபற்றி, ஊழ்வினைத் தொடர்பினாலும் என்றும்; சொல்லினர். [பொதுமை யுற்றிருந்த நளனை ஏதுவினால் சிறப்பித்தறிதலால், சிறப்பணியாம்.]

(க - து) நளனையே நளனென்றறிந்தாள் எ-ம். 169

மாதர்மென்னோக்கிநாணிமதிமுகஞ்சிறிதுகோட்டிக்
காதன்மீதூரவுள்ளங்களிமகிழ்தூங்கநின்ற
கோதையர்மணிசெய்செம்பொற்கோடிகத்தினிதினேந்துந்
தாதுலாமலங்கன்மாலைதளிரியல்கரத்திற்கொண்டாள்.

(இ-ள்.) மாதர்-அழகுபொருந்திய, மென்னோக்கி-மெல்லியபார்வையையுடைய தமயந்தியானவள், நாணி-நாணமுற்று; மதிமுகம்-மதிபோன்றமுகத்தை, சிறிதுகோட்டி-கொஞ்சம்வணங்கிக்கொண்டு,காதல்-ஆசையானது,மீதூர அதிகரிக்க, உள்ளம்-மனமானது, களிமகிழ்தூங்க-களிப்புமிகுந்த மகிழ்ச்சி தங்க, நின்ற-அருகேநின்ற, கோதையர்-தோழிகள், மணிசெய் - நவமணிகள் பதித்த, செம்பொற்கோடிகத்து-செம்பொன்னாற்செய்த தட்டில், இனிதினேந்தும்-இனிமையிற்றாங்குகின்ற, தாதுலாம்-மகரந்தமுலாவுகின்ற, அலங்கன் மாலை-மலர்மாலையை, தளிரியல்-தளிரினது சாயலையுடைய, கரத்திற் கொண்டாள்-கையிலெடுத்துக் கொண்டாள் எ-று.

கணவனென்னுந் துணிபுடையவளாதலால், நாணிமுகஞ்சிறிதுகோட்டி என்றார். அப்பொழுது தமயந்தியுவகை என்னாற் சொல்லிமுடியாதென்பார், (களிமகிழ்தூங்கநின்ற கோதையர்) எனப் பூந்தட்டேந்திய தோழிகளுவகை மாத்திரங்கூறினார்.

(க-து.) தமயந்தி மாலையைக்கையிலெடுத்தாள் எ-ம். 170

இன்னரிச்சிலம்புசெம்பொற்கிண்கிணியார்ப்பவேகி
முன்னவர்கணமுங்கண்ணும்வண்டெனத்தொடர்ந்துவீழக்

கொன்னுனை வைரவெள்வாணிடதர்கோன்குவவுத்தோண்மேற்
பொன்னரிமாலைசூட்டிப்பூங்கழல்வணங்கினின்றாள்.

[இதனால் தமயந்தி நளனுக்கு மாலைசூட்டல்சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) இன்-இனியவோசையைத் தருகின்ற, அரி - பருக்கைகளை யுடைய, சிலம்பு-சிலம்புகளும், செம்பொன்-சிவந்தபொன்னாற் செய்த கிண்கிணி - சதங்கைகளும், ஆர்ப்ப - ஒலிக்குமபடி, ஏகி - போய், மன்னவர்-அரசர்களுடைய, மனமும்-நெஞ்சும், கண்ணும் - கண்களும், வண்டென-வண்டுகள் போல், தொடர்ந்துவீழ-தொடர்பு கொண்டுவீழ, கொல்-கொல்லுகின்ற, நுனை - முனையையுடைய, வைர வெள்வாள் - கூர்மை பொருந்திய ஒளிவீசுகின்ற வாட்படையை யேந்திய, நிடதர்கோன் - நளமகாராசனுடைய, குவவு-திரட்சி பொருந்திய, தோண்மேல் - புயங்களின்மேல், பொன்னரிமாலைசூட்டி-பொன்னரிமாலையை யணிந்து. பூங்கழல் - அழகுபொருந்திய அவன்பாதங்களைவணங்கிநின்றாள்-பணிந்து நின்றனள்எ-று.

இப்பொழுது பார்த்தாலன்றி இதுதப்பில் தமயந்தி நமக்குப்பார்க்கவுங் கிடையாளென்று நினைப்பு அவள் தமக்கு மாலைசூட்டிலமொன்னும் பொறாமையினு மேற்பட்டிருத்தலால், மன்னவர் மனமுங் கண்ணும் வண்டெனத் தொடர்ந்துவீழ என்றும்; மாதர்க்குக் கணவரைத்தொருதலின்மிக்கத்தின்மையால், பூங்கழல் வணங்கிநின்றாள் என்றும்; சொல்லினார். பொன்னரிமாலை-என்பது, பொன்னை யரிந்துசெய்யு மொருமாலையிருப்பினு முன்பாட்டில் தாதுலாமலங்கன்மாலை) எனலால்; இங்கு அழகுபொருந்திர வண்டுகள் சூழ்ந்த மாலையெனப் பொருள்கொள்க.

(க-து.) தமயந்தி நளனதுதோளில் மாலையணிந்து அவனது திருவடியை வணங்கினின்றாள் எ-ம். 171

வடிமலர்நெடுங்கட்செவ்வாய்மடவரலினிதுசூட்டுந்
தொடையல்பொற்கிரியில்வீழுஞ்சுடர்மணியருவியேய்ப்ப
விடுகதிர்வலயத்திண்டோண்மன்னவன் விழைவிகூர்ந்து
பிடிதழீஇயுவகைபூத்தபெய்மதகளிறுபோன்றான்.

[இதனால் அப்போது நளனுக்கிருந்த மகிழ்ச்சி சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) வடி-தேனையுடைய, மலர்-குவளைமலர்போன்ற, நெடுங்கண்-நெடியகண்களையும், செவ்வாய்-செவ்வாயையுமுடைய், மடவரல்-தமயந்தியானவள், இனிதுசூட்டும்-இனிமையோடுசூட்டிய, தொடையல்-மாலையானது, பொற்கிரியில்-பெருமலையில், வீழும்-ஒழுகுகின்ற, சுடர்-ஒளியையுடைய, மணி-இரத்னங்களோடும் வருகின்ற, அருவியேய்ப்ப-அருவியையொப்ப, விடுகதிர்-கிரணங்களைவீசுகின்ற, வலயம்-கேயூரமணிந்த, திண்-வலிமைபொருந்திய, தோள்-தோளையுடைய, மன்னவன்-நளமகாராசன், விழைவு

கூர்ந்து-ஆசைமிகுந்து, புடிதனீஇ-பெட்டையானையைத்தழுவி, உவகைபூத்த-மகிழ்ச்சியுண்டாகிய, பெய்மதக்களிறு-மதம்பொழிகின்ற யானையை, போன்றுள்-ஒத்தான் எறு.

"கேளாதேற்றல் கேட்டேயேற்ற-லேலாதேற்ற லீவோனேற்ற-லுயர்ந்தோனேற்ற விழிந்தோனேற்ற-லொப்போனேற்ற லுணர்வின் றேற்றல் - விருப்பாயேற்றல் வெறுப்பாயேற்ற-லாதியாய்பலவுமறைந்தனர்கொள்வோன்' இவ்விதியால் நளன் மாலையை விருப்பாயேற்றுன்னென்க. பிடி-பெட்டையானை களிறு-ஆண்யானை. நளன் பிடியைத்தழுவி யுவகைபூத்த களிறுபோன்றுன் எனலால், அவ்வாறு தமயந்திகளிற்றைத்தழுவியுவகைபூத்த பிடிபோன்றுளெனக் கொள்க. [இது உவமையணி.]

(க-து.) நளன் மகிழ்ச்சி யடைந்தான் எ-ம். 172

பூணுலாக்கிடந்தவல்குற்பொற்பெலாங்களிகொள்வண்டின்
பாணுலாக்கிடந்ததாரான்பருகுவான்போலநோக்க
நாணமீதூரப்பைம்பொன்னலத்தபூங்கொடியினொல்கி
வாணகையுயிர்த்தசெவ்விமதிமுகங்கோட்டிநின்றுள்.

[இதனுல் அப்போது தமயந்திக்கிருந்த நாணஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) பூணுலாக்கிடந்த-ஆபரணங்க ளசைந்துகிடந்த, அல்குல்-அல்குலையுடைய தமயந்தியினது, பொற்பெலாம்-அழகனைத்தையும், களிகொள் களிப்பைக்கொண்ட, வண்டின்-வண்டுகளுடைய, பாணுலாக்கிடந்த - அசையுலாவிக்கிடந்த, தாரான்-மலையையணிந்த நளனெனவன், பருகுவான்போல-கண்ணுலுண்பவன்போல நோக்க-பார்க்க, (அதனுல்) நாணமீதூர-நாணமதிகரிக்க. பைம்பொன்-பசியபொன்னுலாகிய, நலத்த-நன்மையையுடைய, பூங்கொடியின்-பூங்கொடிபோல், ஒல்கி-துவண்டு, வான்-ஒளிபொருந்திய, நகையுயிர்த்த-புன்னகையைத்தந்த, செவ்வி-அழகுபொருந்திய, மதிமுகம்-சந்திரன்போன்ற முகத்தை, கோட்டிநின்றுள்-வணங்கிக்கொண்டு நின்றனள் எ-று.

தமயந்திமாலைசூட்டியபடியால்நமக்குஎப்படியுந்துணைவியாயினள்: இனி நாம் அந்தரங்கத்தில் அவளழகைப் பார்ப்பமென்றில்லாமல் பொற்பெலாம் பருவான்போல நோக்க என்றமையால், அவளழகிடதிருந்த அவாவானது அப்பொழுது அவன் விவேகத்தினு மேற்பட்டிருந்ததுபோலும், அவளுக்கும் அப்படி இருப்பினும் பெண்பாலாகையால் வெளிப்படுத்தா ளென்பது தோன்ற, நாணமீதூரம் பூங்கொடியினொல்கி நகையுயிர்த்தசெவ்வி மதிமுகங் கோட்டிநின்றுள் என்றுஞ் சொல்லினர்.

(க-து.) நளன் தமயந்தியைப் பார்க்கத் தமயந்தி தலைவணங்கினுள் எ-ம்.

அலைகடலுயிர்த்தபொன்னம்பாவையையலங்குசோதி
நிலவுமிழ்பளிக்குமாடநிவதிகைதொணர்ந்துநீந்தாச்

சிலதியருயிரையன்னதோழியர்செவிலித்தாயர்
விலைவரம்பறியலாகாமென்றுகிலெழினிவீழ்ந்தார்.

[இதனால் அப்போது அங்கிருந்த சிலதியாதியர் செயகை சொல்லப் படுகின்றது.]

(இ-ள்.) அலைகடல்-பாற்சமுத்திரமானது, உயிர்த்த-பெற்ற, பொன்னம் பாவையை-இலக்குமியை யொத்த தமயந்தியை, அலங்கு-அசைகின்ற, சோதிநிலவுமிழ்-மிகுந்தவொளியைக் கொப்புளிக்கின்ற, பளிக்குமாடவேதிகை-பளிங்கினாற்செய்த உப்பரிகையிலிருக்கு மேடையில், கொணர்ந்து-அழைத்துக் கொண்டுவந்து வைத்து, நீங்கா-நீங்காத, சிலதியர்-ஏவல்செய் தோழிகளும், உயிரையன்னதோழியர்-உயிரையொத்த தோழிகளும், செவிலித்தாயர்-வளர்த்த தாய்மாரும், விலைவரப்பறியலாகா-விலையளவறியக்கூடாத, மென்றுகில்-மெல்லியசீலையாற்செய்த, எழினி-திரையை, வீழ்த்தார்-விடுத்தார்கள் எ-று.

சிலதியராதியர்-எழுவாய். "ஏவுதலியற்று தலிவையின்வேருத - லென வினைமுதன் மூவகையாமென்ப" இவ்விதியால் வீழ்த்தினர்-தன்வினை. அரசலைத் தனித்தனிகண்டு வந்ததிற் பொழுதுநீட்டித்தலால் இளைப்புறுமென்று தமயந்தியைப் பளிங்குவேதிகையிற் சேர்த்தி, பிறர் இவளையும் இவள் பிறரையும் நோக்காமைபொருட்டுச் சிலதியராதியர் திரைவீழ்த்தனரென்க.

(க-து.) தாய்மார்களுந் தாதிமார்களுந் தமயந்தியை உப்பரிகையின்மேலழைத்துக்கொண்டுபோய் வைத்துத் திரைபோட்டார்கள் எ-ம். 174

தாவருஞ்சீற்றத்துப்பிற்றறுகண்மால்யானையன்ன
மேவலர்க்கடந்தவொள்வாள்வேந்தர்கோன்முழவுதோண்மேன்
மாவகிர்நெடுங்கண்சூட்டுமாலையேமாலையாகக்
காவலர்முகங்களெல்லாங்கமலமொத்திருந்தமாதோ.

[இதனால் அப்போது அங்கிருந்த அரசர்கள் தன்மை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) தாவரும்-தாவுதற்கரிய, சீற்றத்துப்பின்-மிகுந்தகோபத்தையும், தறுகண்-அஞ்சாமையுமுடைய, மால்-பெருமைபொருந்திய, யானையன்ன-யானையையொத்த, மேவலர்-சத்துருக்களை, கடந்த-வென்ற, ஒள்-ஒளிபொருந்திய, வாள்-வாட்படையையுடைய, வேந்தர்கோன்-நளமகாராசனுடைய,முழவு மத்தளத்தையொத்த, தோண்மேல் - புயங்களின்மீது, மாவகிர்-மாவடுவின் பிளப்பையொத்த, நெடுங்கண்-நெடியகண்களையுடைய தமயந்தியானவள்,சூட்டும்-தரித்த, மாலையே-பூமாலையே, மாலையாக-மாலைப்பொழுதாக, காவலர்-அரசருடைய, முகங்களெல்லாம்-முகங்களனைத்தும், கமலம்-தாமரைமலரை, ஒத்திருந்த-ஒத்திருந்தன எ-று. மாது-ஓ-அசைகள்.



7 நளன் தமயந்திபால் தேவர்களுக்காசத் தூதுபோய்பேசுதல் 274-வது-பக்கம்.

நெடுங்கண்-என்பது, பண்புத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகை. தமயந்தி நளனுக்கு மாலைதரித்தவளவில் மற்றைய அரசர்முகங்கள் குவிதல்பற்றி, அவள்சூட்டிய மாலையை மாலைப்பொழுதாகவும் அவர்முகங்களை அம்மாலைப்பொழுதிற்குவியுந் தாமரைமலராகவுஞ் சொல்லினர். [முகங்கள் கமலமொத்திருந்த வென்னும் உவமை-மாலையே மாலையாக வென்னும் உருவகம் அடியாகவருதலால், கலவையணியாம்.]

(க-து.) நளன் தோளிலணிந்த மாலையே மாலைக்காலமாக அரசர்கள்முகங்கள் தாமரைகளாக இருந்தன எ-ம். 175

சுயம்வரப்படலம்

முற்றுப்பெற்றது.

---

# போர்புரிபடலம்.



இப்படலத்தால் சுயம்வரத்திற்குவந்த அரசர் தமயந்தி நளனை விரும்பி மாலைசூட்டுதலால் தாம் அவனைக் கைப்பற்றும் பொருட்டு அவனை வெல்லவெண்ணிச்செய்யும் யுத்தஞ் சொல்லப்படுகின்றது.

(அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.)

அழகினைச்சுமந்தபேறுபெற்றனளணங்கின்றென்று
வொழுகொளியாரமார்பருவர்க்கடன்மெலியவார்ப்பப்
பொழிகதிர்வைரவொள்வாட்புரவலன்புழுங்கிநெஞ்சம்
விழியழல்கதுவநோக்கிவேந்தரைவிளித்துச்சொல்வான்.

[இதனால் அரசர்கள் மகிழ்ச்சியும் இந்திரன்பொறாமையுஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) அழகினை-சௌந்தரியத்தை, சுமந்தபேறு-தாங்கியபேற்றினை, அணங்கு-தமயந்தியானவள், இன்றுபெற்றனளென்று - இன்றுதான்பெற்றாளென்று, ஒழுகொளி-ஒளிவிளங்குகின்ற, ஆரம் - மணிவடமணிந்த, மார்பர்-மார்பையுடைய அரசர்களனைவரும், உவர்க்கடல்-பாவகாலத்துக்கடலானது, மெலிய-ஒலியிற்குறையும்படி, ஆர்ப்ப-ஒலிக்க, (அதுகண்டு) பொழிகதிர்-கிரணங்களைவீசுகின்ற, வைரவொள்வாள்-ஒளிபொருந்திய வச்சிரவாளையுடைய, புரவலன்-இந்திரனானவன், நெஞ்சம்புழுங்கி-மனம்வெந்து, விழி-கண்களில்,

அழல்கதுவ-நெருப்புப்பற்ற, நோக்கி-பார்த்து, வேந்தரை-அரசரை, விளித்து அழைத்து, சொல்வான்-இவ்வாறுசொல்வான் எ-று.

நளனுக்கு மாலைசூட்டுதலால் தமயந்தியழகிற்கு அவனன்றி நாம் தகுதியுடையோ மல்லவென்று மற்றையரசர் நினைத்தமைதோன்ற, அழகினைச்சுமந்தபேறு பெற்றனளணங்கின்றென்றும்; அதிலவ்வரசர்களுக்கு மகிழ்ச்சியன்றிப் பொறாமையின்மைதோன்ற, ஆரமார்ப ருவர்க்கடன்மெலியவார்ப்பவென்றும்; இந்திரன் தூதுகள்விடுத்தும் நளவேடங்கொண்டும் தம்மிலொருவர்க்கும் அவளிசையாமையூால் வந்த அவமானம்பற்றிப் பொறாமையும் வெகுளியுங் கொண்டமைதோன்ற, புழுங்கிநெஞ்சம் விழியழல்கதுவவென்றும்; அதனால் அவ்வரசர்க்கும் பொறாமையுண்டாகினமைதோன்ற, வேந்தரைவிளித்துச் சொலவானென்றும், சொல்லினர். "வெள்ளிலை வேற்கணாளைச் சேவகன்விழைந்துவென்று, ஞெள்ளியனென்றுமாந்த ருவர்க்கடன்மெலியவார்ப்பக், கள்வரார்புலியைவேறு காணியகாவன்மன்ன, னுளாகம் புழுங்கிமாதோ வுரைத்தன்மன்னர்க்கெல்லாம்" எனப்பிறரும் இவ்வாறுகூறுதல்காண்க. பர்வகாலத்தில்நிறைமதிகண்டால் கடல்மிக்கொலித்தலறிக.

(க-து.) இந்திரன்பொறாமைகொண் டரசரைப் பார்த்துச் சொல்வான் எ-ம். 1

> விரிகதிர்ப்பரிதிமுன்னர்வெண்மதிமழுங்குமல்லாற்
> பரிதியுமதியந்தோன்றிற்படரொளிமழுங்கலுண்டோ
> வரசர்காணீவிர்வெய்யோனருங்குலத்துதித்துந்திங்கண்
> மரபின்மன்னவற்குநுங்கண்மாணெழின்மழுங்கினீரால்.

[இதுமுதல் நான்கு பாட்டுகளால் இந்திரன் கலகமூட்டுதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) விரிகதிர்-விரிந்தகிரணங்களையுடைய, பரிதிமுன்னர் - சூரியன்முன்னே, வெண்மதி-வெண்மைபொருந்திய சந்திரன். மழுங்குமல்லால்-மழுங்கிப்போகுமல்லாமல், பரிதியும்-சூரியனும், மதியந்தோன்றில் - சந்திரனுதித்தால், படர்-விரிகின்ற, ஒளிமழுங்கலுண்டோ-ஒளி கெடுதலுண்டோ, (இல்லை-இவ்வாறிருக்க) அரசர்கள்-அரசர்களே, நீவிர்-நீவிர்கள், வெய்யோன் சூரியனுடைய, அருங்குலத்துதித்தும்-கிடைத்தற்கரிய மரபினிற் பிறந்தும், திங்கண்மரபின்மன்னவற்கு-சந்திரவம்சத்திற் பிறந்த அரசனுக்கு, நுங்கள்-உங்களுடைய, மாண-பெருமைபொருந்திய, எழில்-அழகு, மழுங்கினீர்-மழுங்கிப்போனீர்கள் எ-று.

சந்திரவம்சத்திற்பிறந்தவன்-நளன். உலகத்தில் யாவருக்குங் குலத்தை இழிவுபடுத்தலிலுண்டாகும் வேற்றுமை மற்றொன்றி லுண்டாகா தென்பது பற்றி, அரசரை நோக்கி இவ்வாறு சொல்லினனென்க.

(க-து.) அரசர்களே-நீங்கள் சூரியகுலத்திற்பிறந்துஞ் சந்திர குலத்து நளனழகுக்குத் தோற்றீர்களென்றான் இந்திரன் எ-ம். 2

உரிமையிற்புணர்ந்தமாதரூடவுமறுத்திம்மாதின்
வரிமுலைப்போகம்வேண்டிமணவினைத்துணிந்துவந்தீர்
குருதிவேல்சுமந்துவாளாவீங்கியகுவவுத்தோளீர்
திருநகர்க்கினிநீர்போய்நுந்தெரிவையர்க்கென்சொல்வீரே.

(இ-ள்.) உரிமையில்-கிழமையினால், புணர்ந்த-கூடிய, மாதர் - மங்கையர்கள், ஊடவும்-பிணக்கங்கொள்ளவும், மறுத்து-அதைநீக்கி, இம்மாதின்-இந்த மங்கையின், வரி-சந்தனக்கோலத்தையுடைய, முலைப்போகம் வேண்டி-ஸ்தனத்தினுடைய போகத்தைவிரும்பி, மணவினை-விவாகத் தொழிலை, துணிந்துவந்தீர்-நிச்சயித்துக்கொண்டு வந்தீர்கள், குருதி-உதிரந்தோய்ந்த, வேல்சுமந்து-வேற்படையைச்சுமந்து, வாளா-வீணாக, வீங்கிய-பருத்த, குவவுத்தோளீர்-திரட்சிபொருந்திய தோள்களையுடைய அரசரே, திருநகர்க்கு-உங்களுடைய நகரத்திற்கு, இனி-இப்பொழுது, நீர்போய்-நீர்சென்று, நுந்தெரிவையர்க்கு-உம்முடைய மனைவிகளுக்கு, என் சொல்வீர்-யாதுசொல்வீர்கள் எ-று.

வேறொருமாதரைத் தமது கணவனினைத்தது தெரியினும் பொறாத மங்கையர் தமயந்தியின் விவாகத்தைக் குறித்துவந்த அரசரோடு மிகவும் பிணங்கி இருப்பாரெனபது தோன்ற, மாதரூடவுமென்றும்; நீர்விரும்பிவந்த தமயந்தியைக்,கொண்டுபோன நளனை வெல்லும் வல்லமை உமக்கில்லை யென்பது தோன்ற, குருதிவேல்சுமந்துவாளா வீங்கியகுவவுத்தோளீ ரென்றும்; இங்ஙனமான நீர் உம்முடைய மனைவியர் பிணக்கையுந் தணிக்கமாட்டீ ரென்பது தோன்ற, நுந்தெரிவையர்க்கென்சொல்வீரென்றும்; சொல்லினான்.

(க-து) அரசர்களே-உங்கள் மனைவிகளுக் கென்னசொல்வீர்களென்றான் இந்திரன் எ-ம். 3

சூழிருஞ்சடைகடாங்கிச்சுடர்முடி துறந்துகான்போய்
வீழ்சருகருந்திநீவிர்மெய்த்தவம்புரிதல்வேண்டுந்
தாழிருங்கூந்தலாளைநிடதர்கோன்றழீஇயபோதே
யாழிசூழுலகமெல்லாமவனடிபடுக்குமன்றே.

(இ-ள்.) சுடர்முடி-கிரணங்களையுடைய கிரீடங்களை, துறந்து-விடுத்து, சூழ்-சுற்றுகின்ற, இரும்-பெரிய, சடைகடாங்கி - சடைகளைச்சுமந்து, கான்போய்-வனத்திற்சென்று, வீழ்-அங்கேயுதிர்கின்ற, சருகருந்தி-சருகைப் புசித்து, நீவிர்-(அரசர்களே) நீர், மெய்த்தவம்-உண்மையாகிய தவத்தை, புரிதல் வேண்டும் - செய்தல்வேண்டும், (அஃதேதெனனில்) தாழ்-தாழ்ந்த, இரும்-பெரிய, கூந்தலாளை-அளகபாரத்தையுடைய தமயந்தியை, நிடதர்கோன்-நளன், தழீஇயபோதே-தழுவியபோதே, ஆழிசூழ்-கடலாற் சூழப்பட்ட, உலகமெல்லாம்-பூவுலகமனைத்தும், அவன்-அவ்வரசனுடைய, அடிபடுக்கும்-அடிபணிந்துகிடக்கும் எ-று.

உம்முடைய குலத்திற்கும் உமக்கும் இப்பொழுதுவந்தகுற்றம் போரில் வென்று நீக்கல்வேண்டும்: அங்ஙனமின்மையால் இச்செய்கையா லன்றித் தீராதென்பான், மெய்த்தவம்புரிதல் வேண்டுமென்றும்; தமயந்தி இலக்கண முழுவது மமைந்த உருவுடையவளாதலால் அவளை மணந்தவன் பூமண்டல முழுதும் ஆள்வனென்பதுதோன்ற, ஆழிசூழுலகமெல்லா மவனடிபடுக்கு மென்றும்; சொல்லினன். "வடதிசைக்குன் றமன்ன வான்குலமாசுசெய்தீர், விடேதிர்ப்பரிதிமுன்னர் மின்மினிவிளக்கமொத்தீர், வடுவுரை யென்றுமாயும் வாளமரஞ்சினீரேல், முடிதுறந்தளியீர்போகி முனிவனம் புகுமினென்றான்" அன்றியும் "திருமகளிவளைச்சேர்ந்தான் றெண்டிரையாடைவேலி, யிருநில மடக்குஞ்செம்பொ னேமிக்குமிறைவனுகுஞ், செருநிலத்திவளைவென்றீர் திரு விலுக்குரியீரென்றான், கருமனநசுவெஞ்சொற் கட்டியங்காரனன்றே" இவ் வாறு பிறருங்கூறுதல் காண்க.

(க-து.) அரசர்களே-தமயந்தியை நளன் தழுவியபோதே நீங்கள் மணி முடி நீக்கிச் சடைமுடிதாங்கிக் காட்டிற்போய் தவசுபண்ணவேண்டு மென்றான் இந்திரன் எ-ம். 4

கண்டவர்மனமுங்கண்ணுங்கவர்ந்திடவனப்புவாய்ந்த
வொண்டொடிமாலைவேய்ந்தோற்குரியளென்றெண்ணவேண்டாந்
திண்டிறனிடதர்கோமான்செருவினிலிரியல்போக
மண்டமர்கடந்தவொள்வேன்மன்னவற்குரியளென்றான்.

(இ-ள்.) கண்டவர்-தன்னைப்பார்த்தவர்களுடைய, மனமும் - மனத்தை யும், கண்ணும்-கண்களையும், கவர்ந்திட-வாரிக்கொள்ளும்படி, வனப்புவாய்ந்த- அழகுபெற்ற, ஒண்டொடி-தமயந்தியானவள், மாலைவேய்ந்தோர்க்கு- மாலை சூட்டினவனுக்கு, உரியளென்று - உரிமையுடையவளென்று, எண்ண வேண் டாம்-நினைக்கவேண்டாம், திண்டிறல் - மிகுந்தவலிமையையுடைய, நிடதர் கோமான்-நிடததேயத்தரசன், செருவினில்-போரில், இரியல்போக - ஓடிப் போக, மண்டு-நெருங்கிய, அமர்-யுத்தத்திலே, கடந்த செயித்த,ஒள்வேல்-ஒளி பொருந்திய வேலையுடைய, மன்னவர்க்கு-அரசக்கு, உரியளென்றான்-உரிமை யுடையவளாவாளென்றான் எ-று.

நளனைப் போர்செய்துவெல்லினும் அரசர்பலராதலால் இவளெவனுக்கு உரியவளாதலென்னுஞ்சந்தேகமுண்டாகாமைப்பொருட்டு, இந்திரனவன்- நிடதர்கோமான் செருவினிலிரியல்போக மண்டமர்கடந்த வொள்வேன் மன் னவர்க்குரிய ளென்றான் என்க.

(க-து.) அரசர்களே-தமயந்தி மாலைதரித்தவனுக்குச் சொந்தமென்றுஎண் ணவேண்டாம். நளனை வெல்லுகின்றவர்களுக் கவள் சொந்தமென்றான் இந்திரன் எ-ம்.

என்றலுங்கடவுட்டிங்களிருங்குலமிழித்துக்கூற
நன்றுநன்றென்னநக்குநாமவேல்வழுதிசீறி
யுன்றலைதுணிப்பனென்றுவொளிறுவாளுறையினீக்கிக்
குன்றெறிவைரவொள்வாட்குரிசின்மேற்கனன்றுசென்றான்.

[இதனால் அக்கலகவார்த்தைகேட்டபாண்டியன் வெகுளல் சொல்லப்படு கின்றது.]

(இ-ள்.) என்றலும்-இப்படியென்று இந்திரன்சொன்னவளவில், கடவுள்-தெய்வத்தன்மையுள்ள, திங்களிருங்குலம்-பெருமைபொருந்திய சந்திர வம்சத்தை, இழித்துக்கூறல்-இழிவுபடுத்திச்செல்லல், நன்றுநன்றென்ன-நல்லதுநல்லதென்று, நக்கு-நகைத்து, நாமவேல்-அச்சத்தைத்தருகின்ற வேற்படையையுடைய, வழுதி-பாண்டியராசன், சீறி-அதட்டி, உன்றலை-இப்படிச் சொல்லிய உனதுசிரத்தினை, துணிப்பனென்று - தறித்துவிடுவேனென்று, ஒளிறு-பிரகாசிக்கின்ற, வாள்-வாளை, உறையினீக்கி-உறையினின்றுநீக்கி, குன்றெறி-மலைகளின்சிறைகளை யறுத்த, வைரவொள்வாள்-ஒளியையுடைய வச்சிரவாளையேந்திய, குரிசின்மேல்-இந்திரன்மேல், கனன்று - கோபித்து, சென்றான்-போனான் எ-று.

குன்றெறன்பது அதன் சிறகினுக்காதல்-ஆகுபெயர். உமையவள் - பரம சிவன்-குமரவேள்-இம்மூவரும் விரும்பிவந்தது அரசுசெய்திருந்த குலமாதலாலும் சந்திரனைச் சிவன் முடிமேற்கொண்டிருத்தலாலும், அந்தவம்சத்தை-கடவுட்டிங்க ளிருங்குலமென்றார். அதனால் அக்குலத்திற்றோன்றிய பாண்டியனுக்கு அதை இழிவுபடுத்திய இந்திரன்மேல் வெகுளியுண்டாயிற்றென்க.

(க-து.) பாண்டியன் வாளுருவி இந்திரன்மேற் போர்க்குச்சென்றான் எ-ம். 6

வெகுளலையணங்கிற்காகநளனுருக்கொண்டுமேய
வகல்விசும்பளிக்கும்வேந்தனிவனெனவமரர்கூறத்
துகளெழமௌலிபண்டுதோற்றவன்றன்னோடென்கொ
லிகலெனப்புகையுமொள்வாளுறைசெறித்தேகினானே.

[இதனால் தேவர்களால் பாண்டியன் வெகுளியகன்றமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) வெகுளலை-கோபியாதே, அணங்கிற்காக-தமயந்திக்காக, நளனுருக்கொண்டுமேய-நளன்வடிவங்கொண்டுவந்த, அகல்விசும்பு-அகன்ற தெய்வலோகத்தை, அளிக்கும்வேந்தன்-காக்குமிந்திரன், இவனென-இவனென்று, அமரர்கூற - தேவர்கள்சொல்ல, (அதுகேட்டு) துகளெழ - தூளியெழும்ப, மௌலி-கிரீடம், பண்டு-முன்னே, தோற்றவன்றன்னோடு - தோற்றுப் போனவனோடு, என்கொலிகலென-என்னபோரென்று, புகையும்-புகைகின்ற, ஒள்

வாள்-ஒளிபொருந்திய வாட்படையை, உறைசெறித்து-உறையிலிட்டு, எகி ஞன்-போனுன் எ-று.

மதுரையில் உக்கிரபாண்டியன் அரசுசெய்திருந்த நாளில் தன்னுட்டிலி ருக்கும் பொதியமலையின்கண் மேய்ந்திருந்த மேகங்களைப் பிடித்துத்தளைசெய் தானுக. அதுகேட்டு அப்பாண்டியனேெ டெதிர்த்து யுத்தஞ்செய்து இந்திரன் மகுடபங்கப்பட்டுத் தோற்ருேடியபடியால், தோல்வியடைந்தவரோ டெதிர்த் தல் தருமமன்றென்பதுபற்றி இவன் அவ்விந்திரனென்று கேட்ட வரசன் துகளெழுமௌலிபண்டு தோற்றவன்றன்னேடென்கொ லிகலெனப்புகையும் வொள்வா ளுறைசெறித் தேகினுன் என்ருர்.

(க-து.) தேவர்கள் இந்திரனென்று சொல்லப்பாண்டியன்முற்காலத்திற், ருேற்றவனேடு போர்க்குச் செல்லலாகாதென்று திரும்பினுன் எ-ம். 7

கூற்றெனக்கனலியென்னக்குலவரை திரிக்குமூருக்
காற்றெனவுருமேறென்னக்கதிர்முடியரசரெல்லா
மாற்றருஞ்சீற்றத்தோடுமடங்கலந்தவிசினின்றும்
பாற்றினஞ்சுழலும்வைவாட்படையொடுநிலத்திற்பாய்ந்தார்.

[இதுமுதல் மூன்றுபாட்டுகளால் அரசர்செய்கைசொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கூற்றென-யமன்போலவும், கனலியென்ன-அக்கினிபோலவும் குலவரை-சத்தகுலகிரிகளையும், திரிக்கும்-சுழற்றுகின்ற, ஊழிக்காற்றென-முடிவுகாலக்காற்றுபோலவும், உருமேறென்ன - இடியேற்றைப்போலவும், கதிர்முடி-கிரணங்களையுடைய கிரீடமணிந்த, அரசரெல்லாம்-அரசரனைவரும் மாற்றரும்-நீக்குதற்கரிய, சீற்றத்தோடும் - கோபத்துடன், மடங்கலந்தவிசி னின்றும்-சிங்காதனத்திலிருந்தும், பாற்றினம்-பருந்துகூட்டங்கள், சுழலும்-வட்டமிடுகின்ற, வை-கூர்மைபொருந்திய, வாட்படையொடும்-வாளாயுதத்து டன், நிலத்தில்-பூமியிலே, பாய்ந்தார்-குதித்தார்கள் எ-று.

உயிர்போக்கலால்-யமனையும், நீறுசெய்தலால்-அக்கினியையும், வேகத் தோடு தள்ளுதலால்-காற்றையும், கர்ச்சித்து நடுக்கஞ்செய்தலால்-இடியேற் றையும், பெரும்பான்மைபற்றி அரசர்க்கு உவமையாக்கினுர்.

(க-து.) அரசர்களெல்லாருங் கோபத்துடன் சிங்காதனம்விட்டு வாட் படையோடு நிலத்திற் குதித்தார்கள் எ-ம். 8

கொய்யுளைக்கலினப்பாய்மாகொடிஞ்சியந்தேரிற்பூட்டி
மையன்மாமதத்தயானைபருமித்துமறலியேனுஞ்
செய்யகண்புதைக்குஞ்சீற்றத்திறல்கெழுவயவர்சூழ
மொய்கழலரசரெல்லாமுருகுலாந்தும்பைவேந்தார்

(இ-ள்.) கொய்யுளை-கொய்துகட்டிய புறமயிரினையுடைய, கலினம்-கடி வாளம்பூண்ட, பாய்தாவுகின்ற, மா-குதிரைகளை, கொடிஞ்சியந்தேரில்-மேன்

மொட்டையுடைய இரதங்களில், பூட்டி-பூட்டுதல்செய்து, மையல்-மயக்கம் பொருந்திய, மா-பெரிய, மதத்த-மும்மதத்தையுமுடைய, யானை-யானைகளை பருமித்து-அலங்கரித்து, மறலியேனும்-கூற்றுவனாயினும், செய்பகண்புதைக்கும்-சிவந்தகண்களை மூடிக்கொள்ளத்தக்க, சீற்றம்-கோபத்தையுடைய, திறல் கெழு-வலிமைபொருந்திய, வயவர்சூழ-காலாள்கள் தம்மைச்சூழ்ந்துவரும்படி, மொய்-நெருங்கிய, கழல்-வீரக்கழலையணிந்த, அரசரெல்லாம்-அரசரனைவரும், முருகுலாம் - தேனொழுகுகின்ற, தும்பை - தும்பைமாலையை, வேய்ந்தார்-தரித்தார்கள் எ-று.

தும்பை வேய்தலாவது-"செங்களத்து மறங்கருதிப் பைந்தும்பை தலைமலைந்தன்று, கார்கருதிநின்றதிருங் களைவிழுப்பணையான், சோர்குருதி சூழா நிலனைப்பப்- பார்கருதித், துப்புடைத்தும்பை மலைந்தான்றுகளறுசீர், வெப்புடைத்தானையெம் வேந்து" என்பதனாலறிக.

(க-து.) அரசர்கள் யாவருந் தும்பைமாலை தரித்தார்கள், எ-ம். 9

கொடுங்குணில்பொருதவெற்றிப்போர்ப்பறைகுளிரவெம்போர்க்
கடுந்திறல்வயவர்வின்ஞண்புடைப்பொலிகடலினார்ப்பச்
சுடுங்கனல்குளிரவெய்தாச்சுடர்விழிபொறிகள்சிந்த
மடங்கலேறனையவேந்தர்வாளமரழுவத்துற்றார்.

(இ-ள்.) கொடுங்குணில்-வளைந்தகுறுந்தடியால்,பொருத-அடிக்கப்பெற்ற, வெற்றி-சயத்தைத்தருகின்ற,போர்ப்பறை-யுத்தமுரசு, குளிர-ஒலிக்க, வெம் போர்-வெவ்வியபோர்செய்கின்ற, கடுந்திறல் - மிகுந்தசௌரியத்தையுடைய-வயவர்-படைவீரர்கள், வில்-வில்லைவளைத்துச்செய்யும், நாண்புடைப்பொலி, குணத்தொனிகள், கடலினார்ப்ப-கடல்போலொலிக்க, சுடுங்கனல்-சுடுகின்ற நெருப்பும், குளிர-குளிரும்படி, வெய்தா-வெப்பமாக,சுடர்விழி-சிவந்தகணகள் பொறிகள்-நெருப்புப்பொறிகளை, சிந்த-சிதற, மடங்கலேறனைய-சிங்கவேற்றையொத்த, வேந்தர்-அரசர்கள், வாளமர்-வாட்போர்செய்கின்ற, அழுவம்-யுத்தகளத்தில், உற்றார்-அடைந்தார்கள், எ-று.

அனேக ரிறக்கும்படிச் செய்யும் போரைக்குறித்துப் பறையை யடிக்கின்ற தாதலால், குணிலென்னது கொடுங்குணிலென்றார். "வில்லும்வேலுங் கழலுங்கண்ணியுந் தாருமாமுந் தேருமாவு, மன்பெறுமரபினேனோர்க்குரிய-இவ்விதியால் அரசர்க்குரிய வில்லாதிபடைகள் சேனைகளுக் குறியதாம். விழிகள்சிந்தும் பொறிகளுக்குச் சுடுங்கனலை ஒப்புச்சொன்னால் நெருப்புக்கு நீரை ஒப்புச்சொல்லுதல்போ லிருத்தலால், சுடுங்கனல் குளிரவெய்தாச்சுடர்விழி பொறிகள்சிந்த வென்றார். குளிர் - ஆர்ப்ப-சிந்த - என்னும் பெயரெச்சங்கள் வேந்தரென்னும் பெயரைக்கொண்டு முடிந்தது.

(க-து.) அரசர்கள் போர்க்களத்தில் வந்தார்கள்-எ-ம். 10

மன்னவர்தருக்கும்வெம்போர்வைரவாள்சுமந்ததிண்டோட்
பொன்னகர்க்கிறைவன்சூழ்ந்தபுணர்ப்புநாங்காண்டுமென்று
வொன்னலரகலமூழ்கியூன்சுவைத்துதிரமாந்து
மின்னகுபரிதியொள்வேல்வேந்தர்கோன்சிறிதுநக்கான்.

[இதனால் நளனது செருக்குச் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மன்னவர்-அரசர்களுடைய, தருக்கும்-கர்வமும், வெம்போர்-வெவ்விய போர்செய்கின்ற, வைரவாள் சுமந்த-வச்சிராயுதத்தைச்சுமந்த, திண்டோள்-வலிமைபொருந்திய தோள்களையுடைய, பொன்னகர்க்கிறைவன்-இந்திரனானவன், சூழ்ந்த-எண்ணிய, புணர்ப்பும்- சம்பந்தமும், நாங்காண்டுமென்று-நாங்காண்பேமென்று, ஒன்னலர்-சத்துருக்களுடைய, அகலமூழ்கி-மார்பினிடத்திலே குளித்து, ஊன்சுவைத்து-மாமிசத்தைமென்று, உதிரமாந்தும்-புண்ணீரைக்குடிக்கின்ற, மின்னகு-ஒளிவிடுகின்ற, பரிதி-சூரியன்போன்ற, ஒள்வேல்-ஒளிபொருந்திய வேற்படையையுடைய, வேந்தர்கோன்-நளமகாராசன், சிறிது-கொஞ்சம், நக்கான்-சிரித்தான், எ-று.

இங்கே நளன்சிரித்தது வீரச்சிரிப்பாம். அது பரமசிவன்சிரித்துத் திரிபுரத்தை யெரித்தலா லறிக. "ஒன்னலரைச் செற்றன வொக்குஞ் சிறுநகை செய்வன" என்றார் பிறரும்.

(க-து.) அரசர்கள் செருக்கையும் இந்திரன் பெருக்கையு மறிவோமென்று நளன் சிரித்தான்-எ-ம். 11

சிலைகுழைத்தரசர்நின்றசீற்றமுநிணம்வாய்ப்பில்கிக்
கொலைபழுத்தொழுகும்வேலான்குவவுத்தோட்பணைப்புநோக்கி
யிலைமுகப்பூணினாண்மற்றெனக்கொலாய்விளைவிமென்று
முலைமுகட்டலங்கல்வேற்கண்முத்துகவெருவிநின்றாள்.

[இதனால் தமயந்தி வருந்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) சிலைகுழைத்த-வில்லைவளைத்த, அரசர்நின்ற - அரசர்நிற்கப்பெற்ற, சீற்றமும்-கோபமும், நிணம்-கொழுப்பை, வாய்ப்பில்கி-வாயிற்சிதறி, கொலைபழுத்து-கொல்லுதல்மிகுந்து, ஒழுகும்-ஒழுகுகின்ற, வேலான்-வேற்படையையுடைய நளனது, குவவுத்தோள்-திரட்சிபொருந்திய தோள்களினுடைய, பணைப்பும்-பூரிப்பும், நோக்கி-பார்த்து, இலைமுகப்பூணினாள்-தமயந்தியானவள், என்கொலாய் விளையுமென்று-யாதாய் முடியுமோவென்று, முலைமுகட்டு-ஸ்தனங்களினுடைய வுச்சியில், வேற்கண-வேல்போன்ற கண்களினின்றும், முத்துக-முத்துப்போல் நீர்துளிக்க, வெருவி-பயந்து, நின்றாள்-நின்றனள், எ-று. மற்று-அசைநிலை.

அரசனுக்கு இத்தனைபேர் பகையாதற்கு நான் காரணமானேன் என்று வருந்தினளாதலால், கண்முத்துக வெருவிநின்றாள் என்றார்.

(க-து.) தமயந்தி நளனது புயங்களைப் பார்த்து இப்போ ரெப்படிமுடியு மோவென் றஞ்சியழுதாள்-எ-ம். 12

செழுங்கடைமழைக்கணல்லாய் திண்சிலைகுழைத்து,வெம்போர்க்
கெழுந்தவிவ்வரசர்மார்பத் திழிபெருங்குருதிமாந்தப்
புழுங்குவெம்பகழிமாரி பொருந்தமர்முருக்கியாடி
யுழுந்துருள்பொழுதின் மீள்வ லுள்ளநீகவலலென்றான்.

[இதனால் நளன் தமயந்தியைத் தேற்றல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) செழுங்கடை-செழுமையுள்ள கடையையுடைய, மழைக்கணல்லாய்-குளிர்ச்சிபொருந்திய கண்களையுடைய தமயந்தியே, திண்சிலை - வலிமையையுடைய வில்லை, குழைத்து - வளைத்து, வெம்போர்க்கு - வெவ்வியயுத்தத்திற்கு, எழுந்த-புறப்பட்ட, இவ்வரசர் மார்பத்து-இவ்வரசர் மார்பினிடத்திலே, இழி-இழிகின்ற, பெருங்குருதி-அதிக உதிரத்தை, மாந்த-உண்ணும்படி, புழுங்கு-வெம்புகின்ற, வெம்பகழிமாரி-வெவ்விய பாணமழையை, பொழிந்து-சொரிந்து, அமர்-யுத்தத்திலே, முருக்கி கொன்று, ஆடி-விளையாடி, உழுந்துருள் பொழுதின்-ஒரு உழுந்துருளுகின்ற காலத்திலே,மீள்வல்-திரும்புவேன், நீ-நீயானவள், உள்ளம்-மனத்தினிடத்து, கவலல்-கவலைப்படவேண்டாம், என்றான்-என்று சொன்னான், எ-று.

தமயந்தி ஆற்றாமையையும் கவலைப்படுதலையு நோக்கி விரைவுதோன்ற உழுந்துருள்போழ்தின் மீள்வலென்றான். [உழுந்துருள்போழ்திலென வழக்கச் சொல்லைத் தழுவிச் சொல்லுதலால், உலகவழக்க நவிற்சியணியாம்.]

(க-து.) நளன் தமயந்திக்கு அஞ்சாதேயென்று சொன்னான்-எ-ம்.

விளைசமர்க்கெழுந்துநின்றவீமனையினிதினோக்கிக்
களிமதக்களிறுந்தேருங்களப்படுத்திகலினேற்ற
வுளைவயப்புரவித்தானையொன்னலர்ச்செகுப்பனீபோய்
நளிகடற்றானைசூழநங்கையைக்காத்தியென்றான்.

[இதனால் நளனுக்கு உதவியின்றிய பராக்கிரமஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) விளை-உண்டாகின்ற, சமர்க்கு-போர்செய்தற்கு, எழுந்துநின்ற-புறப்பட்டுநின்ற, வீமனை வீமராசனை, இனிதின்-இனிமையினால், நோக்கி-பார்த்து,களி-களிப்பையுடைய, மதக்களிறும்-மதயானையையும்,தேரும்-தேரையும், களப்படுத்து-யுத்தகளத்திலழித்து, இகலின்-பகையினால், எற்ற-எதிர்த்த, உளை-புறமயிரினையுடைய, வயப்புரவி-வலிமைபெற்றகுதிரைகளையும், தானை-சேனையையுமுடைய, ஒன்னலர்-சத்துருக்களை, செகுப்பல் - கொல்லுவேன், நீபோய்-நீசென்று, நளி-குளிர்ச்சிபொருந்திய, கடல்-கடல்போன்ற, தானையோடு-சேனையுடனே, நங்கையை-தமயந்தியை, காத்தியென்றான் - காப்பாயென்றான், எ-று.

தமயந்தி நமக்கு மாலையிட்டபின்பு அவளைவிரும்பி நம்மோடெதிர்க்கு மரசர் நாம் போர்செய்யும்போது அவளைக் கரந்து வௌவவரினும்வருவரென் பது பற்றியும், தன்பொருட்டுவந்த பேரை மற்றொருவர்பால் விடில்தனக்கிழு வென்பது பற்றியும், அவட்குத் தந்தையாகிய வீமனை அவளைக் காக்கும்படி வைத்தனனென்க.

(க-து.) நளன் வீமனைக்குறித்துத் தமயந்தியைக் காத்திரும் சத்துருவைச செயித்து வருவேன் என்றான்-எ-ம். 14

உடல்சினவுருமேறென்னவயவரைபொருங்குநோக்கிக்
கொடியணிகொடிஞ்சித்திண்டேர் கொய்யுளைக்கலினப்பாய்மா
கடன்மடைதிறந்தெனக்கடமூற்றிருந்துபாயும்
படுமதக்களிநல்யானை பண்ணுறுத்திடுமினென்றான்.

[இதனால் நளன் போர்முயற்சி செய்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) உடல்-பொருகின்ற, சினம்-கோபத்தையுடைய, உருமேறென்ன-இடியேற்றையொத்த, வயவரை-சேவகரை, ஒருங்கு நோக்கி-ஒரேதரம் பார்த்து, கொடியணி-கொடிகளையணிந்த, கொடிஞ்சி-மேன் மொட்டையுடைய, திண்-வலிமைபொருந்திய, தேர்-தேரையும், கொய்யுளை-கொய்துகட்டிய புறமயிரினையுடைய, கலினம்-கடிவாளம்பூண்ட, பாய்மா-குதிரைகளையும், கடல்-கடலானது, மடைதிறந்தென்ன-மடைதிறந்ததென்று சொல்லும்படி, கடம்-சுவடுபட, ஊற்றிருந்துபாயும்- ஊற்றிருந்து பாய்கின்ற, படுமதம் - மதம்படுகின்ற, களிநல்யானை-களிப்பையுடைய நல்லயானைகளையும், பண்ணுறுத்திடுமினென்றான்-அலங்கரியுங்களென்றான், எ-று.

தனித்தனி உத்தரவுபண்ணாற் காலநீட்டிக்குமென்பதுபற்றி விரைந்து கூறினமை தோன்ற, வயவரை யொருங்கு நோக்கித் தேர்-பாய்மா - யானை-பண்ணுறுத்திடுமினென்றான் என்க.

(க-து-) நளன் வீரரைநோக்கித் தேர்-குதிரை-யானை-இவைகளை யலங்கரிக்கச்சொன்னான்-எ-ம். 15

நீங்கருகவசமார்த்து நேரலர்மௌலிதேய்க்கும்
பூங்கழனரலவீக்கிப் போரெனிற்பொருப்புமஞ்ச
வீங்கியகுவவுத்தோளில் வெங்கணைப்புட்டிறுங்கி
வாங்குவிற்றடக்கையேந்தி மறலிகண்புதைப்பநின்றான்.

[இதனால் நளன் போர்க்கோலங்கொள்ளுதல் சொல்லப்படுகின்றது].

(இ-ள்.) நீங்கருங்-பிரிதற்கரிய, கவசமார்த்து-கவசங்கட்டி, நேரலர்-சத்துருக்களுடைய, மௌலி-முடியை, தேய்க்கும்-தேய்க்கின்ற, பூங்கழல்-வீரக்கழலை, நரல-ஒலிக்கும்படி, வீக்கி-கட்டி, போரெனில்-யுத்தமென்றால், பொரு

ப்புமஞ்ச-மலையுமஞ்சும்படி, வீங்கிய-பருத்த, குவவுத்தோளில்-திரட்சிபொருந்திய புயத்தின்கண், வெங்கணை-வெவ்விய பாணங்களையுடைய, புட்டிருங்கி-அம்புக்கூட்டைத்தாங்கி, வாங்கு-வளைக்கப்பட்ட, வில்-வில்லை, தடக்கையேந்தி-விசாலம்பொருந்தியகையிலேந்தி, மறலி-யமனும், கண்புதைப்ப-கண்களை மூடிக்கொள்ளும்படி, நின்றான்-நின்றனன், எ-று.

சத்துருக்கள் பணிந்து கிடத்தலால், சேரலர் மௌலிதேய்க்கும் பூங்கழலென்றார். மறலி என்பதில, உயர்வு சிறப்பும்மை தொக்குநின்றது.

(க-து.) நளன் கவசங்கட்டி, வீரக்கழலணிந்து, அம்புக்கூட்டைத் தாங்கி வில்லேந்தி நின்றான் எ-ம். 16

பொருசமர்தொடங்கிநின்ற புரவலர்மடவார்செய்ய
வரிநெடுங்கண்ணுந்தோளும் வலந்துடித்தின்னல்காட்டக்
குருமணிகுயிற்றுஞ்செம்பொற் கோடியர்கொடிஞ்சித்தேரி
னருவரையிவருஞ்சீற்ற மடங்கலேறென்னவார்ந்தான்.

[இதனால் நளன் தேரேறுதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) பொரு-பொருகின்ற, சமர்-யுத்தத்தை, தொடங்கிநின்ற-ஆரம்பித்துநின்ற, புரவலர் - அரசர்களுடைய, மடவார் - மாதரது, செய்ய சிவந்த, வரி-அரிபரந்த, நெடுங்கண்ணும்-நெடியகண்களும், தோளும் - தோள்களும், வலந்துடித்து-வலப்பக்கந்துடித்து, இன்னல்காட்ட - துன்பக்குறிகாட்ட, குருமணி-நிறம்பொருந்திய மணியால், குயிற்றும்-பதிக்கபபட்ட, செம்பொன்-சிவந்தபொன்னாற்செய்த, கோடியர்-சிகரத்தினாலுயர்ந்த, கோடிஞ்சித்தேரின்-மேன்மமாட்டையுடைய தேரின்மேல், அருவரை-அரியமலையின்மேல், இவரும்-ஏறுகின்ற, சீற்றம் - கோபத்தையுடைய, மடங்கலேறென்ன-ஆண்சிங்கமபோல, ஆர்ந்தான்-ஏறினன், எ-று.

மாதர்க்குத் துன்பம் வருமானால் வலத்தோள்களும் வலக்கண்களும் துடிக்குமென்பது துடிநூலிற் காண்க.

(க-து.) நளன் தேரேறினன்-எ-ம். 17

ஊன்பயில்வடிவேலேந்தி யுடன்றுவெம்போரிலேற்ற
தேன்பயிதெரியல்வேந்தர் நடுக்குறத்திசையினின்ற
கூன்பிறைக்கோட்டுநால்வாய்க் குஞ்சரம்வெருவியோட
வான்பொதிரெறியத்தெய்வ வலம்புரிமுழக்கியிட்டான்.

[இதனால் நளன் சங்கத்தொனி செய்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) ஊன்பயில்-மாமிசந்தங்கிய, வடிவேலேந்தி - கூரியவேற்படையைத்தாங்கி, உடன்று-கோபித்து, வெம்போரில்-வெவ்விய யுத்தத்தில், ஏற்ற-எதிர்த்த, தேன்பயில்-தேன்றங்குகின்ற. தெரியல்-மாலையையுடைய, வேந்தர்-

அரசர்கள், நடுக்குற-நடுக்கமடைய, திசையினின்ற-எட்டுத்திசையினு நின்ற, கூன்-வளைவுபொருந்திய, பிறைக்கோட்டு-பிறையையொத்த கொம்பினையும், நால்வாய்-தொங்குகின்ற வாயினையுமுடைய, குஞ்சரம்-யானைகள், வெருவியோட-பயந்தோடும்படி, வான்-ஆகாயம், பொதிரெறிய-நடுக்கமடைய, தெய்வ வலம்புரி-தெய்வச்சங்கம், முழக்கியிட்டான்-தொனி செய்தான், எ-று.

சங்கத்தொனி செய்தற்கு "சங்குகுறித்துச் சமர் தொடர்தறலனே" என்பது விதி. சங்கத்தொனியினால் தான் எது எது எப்படி ஆதல் வேண்டுமென்று நினைக்கின்றானோ? அது அது அப்படியாகத்தொனித்தலால், தெய்வவலம்புரியென்றார்.

(க-து.) நளன் சங்கத்தொனி செய்தான்-எ-ம். 18

கொன்னவில்பரிதிவைவாட் கூற்றியிறாண்ணுங்கூற்றின்
மின்னகுவரிவிலேந்தும் விடலையைநோக்கியேற்ற
மன்னவரளவன்றின்னோன் மணிவரைத்திணிதோள்வீக்க
மென்னினைந்தென்செய்தோமென் றிந்திரனடுங்கலுற்றான்.

[இதனால் இந்திரனடுக்கஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கொல்-கொலைத்தொழிலை, நவில்-சொல்லப்பட்ட, பரிதி - சூரியன்போன்ற, வைவாள்-கூர்மைபொருந்திய வாட்படையையும், கூற்றுயிர்-இயமனுயிரை, உண்ணும்-உண்ணப்பட்ட, கூற்றின்-ஒருஇயமன்போல், மின்னகு-ஒளியை வீசுகின்ற, வரிவிலேந்தும்-நெடியவில்லையேந்திய, விடலையை-நளமஹாராசனை, நோக்கி-பார்த்து, ஏற்ற-எதிர்த்த, மன்னவர்-அரசர்களது, அளவன்று-அளவையுடையதன்று, இன்னோன்-இவ்வரசனுடைய, மணிவரை-அழகுபொருந்திய மலைபோன்ற, திணி - வலிமைபெற்ற, தோள்-புயங்களினுடைய, வீக்கம்-பாரிப்பு,(ஆதலினால்) என்னினைந்து-யாதை நினைந்து, என்செய்தோமென்று-யாதுசெய்தோமென்று, இந்திரன்-இந்திரனானவன், நடுங்கலுற்றான்-நடுங்கினான், எ-று.

நாம் பொறாமையால் மூட்டிவிட்ட சண்டையிற் கொலைப்பழிவந்து, அதிலும் நமக்கு அவமானமே வருவதற்கு ஐயமில்லை யென்று இந்திரனடுக்குற்றானென்க.

(க-து.) நளனை இந்திரன் கண்டு நடுங்கினான்-எ-ம். 19

கார்த்திரண்முழக்கமென்னக் கனைகுரன்முரசமார்த்த
தூர்த்தனகடல்களேழுந் துரகதக்குரத்தின்றூளி
போர்த்தனவிசும்புபைம்பொற் கொடியொடுகுடையுமோங்கி
யார்த்தனவுலகைபொங்கித் துணங்கையிட்டலகையீட்டம்,

[இதுமுதல் இரண்டுபாட்டுகளால் சேனைகளின்ஆரவாரஞ் சொல்லப்படுகின்றது.

(இ-ள்.) கார்த்திரள்-மேகங்களினுடைய, முழக்கமென்ன-சத்தம்போல் கனை-முழங்குகின்ற, குரல்-குரலையுடைய, முரசம்-பேரிகைகள், ஆர்த்த-ஒலித்தன, கடல்களேழும்-எழுசமுத்திரங்களையும், துரகதம்-குதிரைகளுனுடைய, குரத்தின்றூளி-குளம்பினின்று மெழுகின்றபுழுதிகள, தூர்த்தன-தூர்த்துவிட்டன, விசும்பு - ஆகாயத்தை, பைம்பொற்கொடியொடு - பசியபொற்கொடிகளோடு, குடையும்-குடைகளும, ஓங்கி-உயர்ந்து, போர்த்தன-மூடிக்கொண்டன, அலகையீட்டம் - பேய்கூட்டங்கள், உவகைபொங்கி - மகிழ்சசிமிகுந்து, துணங்கையிட்டு-கூத்தாடி, ஆர்த்தன-சத்தித்தன, எ-று-

துணங்கை-இருகை முடக்கிப் பழுப்புடையொத்தியாடல், கார்த்திரண் முழக்கமென்ன முரசமார்த்த கூறனலால், அனேக முரசங்களென்றும்; குரத்தின்றூளி கடல்களேழுந் தூர்த்தனவெனலால், அனேகங் குதிரைகளென்றும்; விசும்பைப் போர்த்தனவெனலால், அனேகங் குடைகள் கொடிகளென்றும்; துணங்கையிட்டார்த்தன வெனலால், மாமிச முண்ணவந்த பேய்களனேகமென்றும் பெறப்பட்டது.

(க-து.) முரசங்கள் சத்தித்தன. குதிரைப்புழுதிகள் கடலைத்தூர்த்தன. குடைகள் கொடிகள் ஆகாயத்தைமூடின. பேய்கள்சத்தித்தன-எ-ம். 20

கூற்றெனவுரறியார்த்துக் கொல்சினவரியேறென்ன
வேற்றவர்வெருவநெய்த்தோ ரிடையறுதொழுதுங்கோட்டுச்
சீற்றமும்மதத்தினூழித் தீயையுமவிக்கும்வேகங்
காற்றுழற்களிறுதூண்டிக் கட்கனல்துகவச்செல்வார்.

(இ-ள்.) கூற்றென-இயமனைப்போல், உரறி-அரவாரித்து, கொல்-கொல்கின்ற, சினம்-கோபத்தையுடைய, அரியேறென்ன - சிங்கவேற்றைப்போல், ஆர்த்து-கர்ச்சித்து, எற்றவர்-எதிர்த்தவர்கள், வெருவ-அஞ்ச, நெய்த்தோர்-உதிரமானது, இடையறுதொழுகும்-நீங்காதொழுகப்பெற்ற, கோட்டு-கொம்பையும், சீற்ற-கோபத்தையுமுடைய. மும்மதத்தின்-மும்மதங்களால், ஊழித்தீயையும்-வடவாமுகாக்கினியையும், அவிக்கும்-அவிக்கப்பட்ட, வேகக்காற்றுறழ் - சண்டமாருதத்தையொத்த. களிறுதூண்டி-யானையைச்செலுத்தி, கண்-விழிகளில். கனல்கதுவ-நெருப்புப்பற்ற. செல்வார்-செல்வார்கள் எ-று.

வீரரைத் தன்கோட்டாற்குத்திக் கொல்லுதலால், யானைக் கொம்பை-நெய்த்தோரிடையறுதொழுகுங்கோடு எனப்பட்டது. "வேலான் முகத்த களிறு" என்றார் பிறரும்.

(க-து.) வீரர்கள் கோபத்துடனே போனார்கள்-எ-ம். 21

ஒள்ளழல்கண்ணிற்கால வுயிர்ப்பலியுண்ணுங்கூற்றின்
வுள்ளுறைவடிவானேந்தி வாய்மடித்தெயிறுதின்று

கள்ளவிழ்தும்பைசூடிக் கழுதுகைகொட்டியார்ப்ப
வள்ளிலை வைரப்பைம்பூ ணரசரோடரசரேற்றார்.

[இதுமுதல் பத்துபாட்டுகளால் இருதிறச்சேனைகளும் பொருதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) ஒள்-பிரகாசம் பொருந்திய, அழல்-நெருப்பு, கண்ணில் - கண்களினின்றும், கால-கொப்புளிக்க, உயிர்ப்பலி-உயிராகிய உணவை,உண்ணும்-உண்ணுகின்ற, கூற்றின்-இயமன்போல, வள்ளுறை-நெருங்கிய வுறையையுடைய, வடிவாளேந்தி-கூறியவாளை யேந்திக்கொண்டு, வாய்மடித்து உதட்டை மடித்துக்கொண்டு, எயிறுதின்று-பல்லைக்கடித்து, கள்ளவிழ்-தேனொழுகுகின்ற, தும்பைசூடி-தும்பைமாலையைத்தரித்து, (இதுகண்டு) கழுது-பேய்கள், கைகொட்டி-கைகளைக்கொட்டி, ஆர்ப்ப-கர்ச்சிக்கும்படி, அள்ளிலை-அள்ளிக்கொள்ளும் இலைபோன்ற, வைரப்பைம்பூண்-பசியபொன்னிற்பதித்த வச்சிராபரணத்தையுடைய, அரசரோடு-அரசருடன், அரசர்-அரசர்கள், ஏற்றார்-எதித்தார்கள், எ-று.

அனேகரைச் சேதித்து உயிரை யுண்ணுதலால், வாட்படைக்கு யமன் உவமை சொல்லப்பட்டது. வாய்மடித்தலும் பற்கடித்தலும் சினக்குறிப்பை வெளிப்படுத்தி நின்றன. அதிரப் பொருதற்குவந்த குறிப்புத்தோன்ற, கள்ளவிழ்தும்பை சூடி என்றார். நெடுங்காலம் போரில்லாமையால் உணவுகள் கிடையாதிருந்த வருத்தம் இப்பொழுது கெடுமென்னும் உவகை மிகுதியால், கழுதுகைகொட்டியார்ப்ப வென்றார். போரில்லாமை இந்திரப் படலத்தில் 'ஆங்கவண்மேல்' என்னும் பாட்டாலறிக. [இது தன்மை நவிற்சியணி.]

(க-து.) அரசர்களோடு அரசர்களெதித்தார்கள்-எ-ம். 22

மண்ணிடைத்திரிவபோல மாதிரங்கடப்பதாவி
விண்ணிடைப்பறப்பவேழ மருப்பிடைமிதித்துமீள்வ
கண்ணிமைபொருந்திற்காணக் கடுப்பினகலினப்பாய்மா
வெண்ணிலவயவர்தூண்டி யெதிரெதிர்மலைந்துநிற்பார்.

(இ-ள்.) மண்ணிடை-பூமியின்கண்ணே, திரிவபோல-திரிவன போல, மாதிரம்-திசைகளை, கடப்ப-தாண்டுவன, தாவி-பாய்ந்து, விண்ணிடை-ஆகாயத்திலே, பறப்ப-பறப்பன, வேழமருப்பிடை-யானைக்கொம்பின்கண், மிதித்து-மிதித்து, மீள்வ-திரும்புவன, கண்-கண்கள், இமைபொருந்தில் - இமைகோட்டுமானால், காணக்கடுப்பின - காணக்கூடாத வேகத்தையுடையன, கலினப்பாய்மா-இத்தன்மையுள்ள கடிவாளம்பூண்ட தாவுகின்ற குதிரைகள், எண்ணில-அளவற்றவைகளை, வயவர்தூண்டி - காலாள்கள்செலுத்தி, எதிரெதிர்-நேர்நேராக, மலைந்து-போர்செய்து, நிற்பார்-நிற்பார்கள், எ-று.

கடப்ப-பறப்ப-மீள்வ-என்னுங் கப்பினவாகிய பாய்மாவெனக் கூட்டுக. "எதிர்மறைப் பெயரெச்சத் திசைவலியியல்பு. மீறுகெடுங்கான் மிகுதலு மாகும்," இவ்விதியால் காணுக்கபெப்பினவென்பது எதிர்மறைப் பெயரெச்ச மீறுகெட் டொற்றுமிக்கது. வேழமருப்பு-இங்கே வெள்ளையானைக் கொம் பெனக்கொள்க. [இதுவும் அவ்வணி.]

(க-து.) வீரர்கள் குதிரையேறிப் போர்செய்தார்கள்-எ-ம். 23

சூழ்சுடர்வயிரவாளா லிந்திரன் றுமிக்குமுன்னம்
பாழியங்குடுமிக்குன்றஞ் சிறகொடுபறப்பவென்னக்
கேழ்கிளர்பரிதியேய்க்குங் கிளர்மணிக்கொடிஞ்சிமான்றே
ராழியோடாழிதாக்க வருஞ்சமர்தொடங்கிநிற்பார்.

(இ-ள்.) சூழ்சுடர்-ஒளிசூழ்கின்ற, வைரவாளால்-வச்சிராயுதத்தால், இந் திரன் றுமிக்குமுன்னம்-இந்திரனறுப்பதற்கு முன்னே, பாழி-அகன்ற, குமி-சிகரங்களையுடைய, குன்றம்-மலைகளானவை, சிறகொடு-இறகுடனே, பறப்ப வென்ன-பறப்பனபோல, கேழ்கிளர்-செந்நிறமிகுந்த, பரிதியேய்க்கும் - சூரி யனையொத்த, கிளர்மணி-ஒளிவிளங்கு மணிகள்பதித்த, கொடிஞ்சி-மேன் மொட்டையுடைய, மான்றேர்-குதிரைகட்டியதேர்கள், ஆழியோடாழிதாக்க-உருளைகளோ டுருள்கள்முட்ட, அருஞ்சமர்-அரியயுத்தத்தை, தொடங்கி-ஆரம் பித்து, நிற்பார்-நிற்பார்கள், எ-று.

ஒவ்வொருதேர் ஒவ்வொருமலைபோல் திரிதலால், அவைகட்குச் சிறகு டைய மலையுவமை சொல்லப்பட்டன. அனேகந் தேராதலால் நெருக்கம்பற்றி, ஆழியோடாழிதாக்க வென்றார். அரசரோடரச ரெதிர்த்தால் ஆழியோடாழி தாக்கினவென்க.

(க-து.) வீரர்கள் தேரேறிப் போர்செய்து நிற்பார்கள்-எ-ம். 24

மோட்டிளமுலைநள்பாய்ந்த மருமத்தின்மூரியானைக்
கோட்டிணையுழக்கவெம்போர்க் கோளரியென்னச்சீறித்
தோட்டுணைகொட்டியார்த்துச் சுடர்நெடுங்குருதிவாளாற்
பூட்டியவோடைநெற்றி மத்தகம்போழ்ந்திட்டாரே.

(இ-ள்.) மோடு-உயர்ச்சிபொருந்திய, இளமுலை-இளமைபொருந்திய ஸ்த னங்கள், பாய்ந்த-பாயப்பெற்ற, மருமத்தின்-மார்பின்கண், மூரி-வலிமையை யுடைய, யானைக்கோட்டிணை-யானையி னிரண்டுகொம்புகளும், உழக்க-குத்திக் கலக்க, வெம்போர்-வெவ்விய போர்-செய்கின்ற, கோளரியென்ன - சிங்க வேற்றைப்போல், சீறி-கோபித்து, தோட்டுணை - இரண்டு தோள்களையும், கொட்டி-தட்டி, ஆர்த்து-கர்ச்சித்து, சுடர்-ஒளியையுடைய, நெடும் - நெடிய, குருதி-உதிரந்தோயந்த, வாளால்-வாட்படையால், ஓடைபூட்டிய-முக பட்ட

த்தையணிந்த, நெற்றி-நெற்றியையுடைய, மத்தகம்-தலையை, போழ்ந்திட்டார்-பிளந்தார்கள், எ-று.

தமது மார்பிற்குத்திய யானைக்குச் சிங்கம் வைரியாதலால், அரசரைகோளரியென்னச் சீறி என்றார். அரசர் சீறி ஆர்த்து வாளால் மத்தகம் போழ்ந்திடா ரென்க,

(க-து.) அரசர்கள் யானைகளோடு போர்செய்தார்கள் எ-ம். 25

கொலைத்தடங்கண்ணினல்லார்குறங்கின்மேற்குறங்குசேர்த்தி
முலைத்தடத்தொழுங்கப்புல்லிக்கண்டுயின்முழவுத்தோளா
ரலைத்துமிழ்குருதிபொங்கவற்றுவீழ்புழைக்கையேற்றி
மலைக்கடாக்களிறுபுல்லிமண்ணிடைத்துஞ்சுகின்றார்.

(இ-ள்.) கொலை-கொலைசெய்கின்ற, தடம்-விசாலம்பொருந்திய, கண்ணின்-கண்களையுடைய, நல்லார்-மாதர்களுடைய, குறங்கின்மேல்-துடைகளின்மேல், குறங்குசேர்த்தி-துடைகளைச் சேர்த்துக்கொண்டு, முலைத்தடம்-ஸ்தனங்களை, ஒழுங்கப்புல்லி-அழுந்தத் தழுவிக்கொண்டு,கண்டுயில்-நித்திரை செய்கின்ற, முழவு மத்தளம்போன்ற, தோளார்-தோளையுடைய அரசர்கள், அலைத்துமிழ்-அலைத்துமிழ்கின்ற, குருதிபொங்க-உதிரமொழுக, அற்றுவீழ்-அற்றுவிழுந்த, புழைக்கை-துதிக்கையின்மேல், ஏற்றி-துடையை ஏற்றிக்கொண்டு, மலையையொத்த, கடாக்களிறு-மதயானையை, புல்லி-தழுவிக்கொண்டு, மண்ணிடை-பூமியிலே, துஞ்சுகின்றார்-நித்திரைசெய்கின்றார்கள் எ-று.

மாதர்துடைக்குத் துதிக்கையும்-முலைக்கு யானையும்-உவமையாதல்பற்றி, அரசர் இறந்தும் முன்னர் மாதரோடு துயிலுதல்போன் றிருந்தனரென்க.

(க-து.) அரசர்கள் போர்களத்தில் வீழ்ந்தார்கள் எ-ம். 26

கூற்றொடுங்கொம்மைகொட்டிக்குனிக்குவாளுழவர்வேகக்
காற்றிற்பெண்ணையீன்றகருங்கனியுகுவதேபோல்
வேற்றிறல்வயவர்சென்னிவீழ்த்துவெங்கரிகணூறிச்
சீற்றவெம்மடங்கலேற்றிற்செருக்களத்துழக்கியிட்டார்

(இ-ள்.) கூற்றொடும்-இயமனுடனே, கொம்மைகொட்டி - கைதட்டிக்கொண்டு, குனிக்கும்-கூத்தாடுகின்ற, வாளுழவர்-வாள்வீரர்கள், வேகக்காற்றினில்-சண்டமாருதத்தில், பெண்ணையீன்ற-பனைமரந்தந்த, கருங்கனி-கரியபழம், உகுவதேபோல்-உதிர்வதுபோல், வெற்றிறல்-வேற்படையிற்றிறலையுடைய, வயவர்-படைவீரர்கள்,சென்னி-தலைகளை, வீழ்த்து-தள்ளி,வெங்கரிகள்-வெவ்வியானைகளை, நூறி-கொன்று, சீற்றம், கோபத்தையுடைய, வெம்மடங்கலேற்றில்-வெவ்விய சிங்கவேற்றைப்போல, செருக்களது-யுத்தகளத்தில், உழக்கியிட்டார்-கலக்கினார்கள் எ-று.

கொல்லுதலின் அவனோடொப்பாதலால் அவ்வுரிமைபற்றி, கூற்றெனுங் கொம்மைகொட்டி என்றார். கொம்மைகொட்டலாவது - அகங்கைவிரித்துக் கொட்டுதலாம். மயிருள்ள தலையாதலால் வயவர்சென்னிக்குப் பனையின்கருங் கனி உவமை சொல்லப்பட்டது. [மடங்கலேற்றி லுழக்கியிட்டாரெனலால், உவமையணியாம்.]

(க-து.) வீரர்கள் வீரர்களையும்யானைகளையுங்கொன்றார்கள் எ-ம்.

வயவரோரிருவர் தம்மில் வாளமர் விளைத்தலோடு
முயிர்துறந்தவர்க்குமாலைபுனைதுமென் றும்பர்போந்த
கயமலர்க்கண்ணி காணக் காளையர் மாய்ந்து மண்ணிற்
புயலுறழ்கூந்தற் காக வானினும் போர்செய்கின்றார்

(இ-ள்.) வயவர்-படைவீரர்கள், ஓரிருவர்-இரண்டுபேர், தம்மில்-தமக்குளே, வாளமர்-வாட்போரை, விளைத்தலோடும்-செய்தவளவில், உயிர்துறந்தவர்க்கு-இவருளாவி நீங்கினவனுக்கு, மாலைபுனைதுமென்று - மாலைதரிப்போமென்று, உம்பர்போந்த-சுவர்க்கத்தினின்றும்வந்த, கயமலர்-தடாகத்திற்பூத்த மலரையொத்த, கண்ணி-கண்ணையுடைய அரம்பையானவள், காண-காணும்படி, காளையர்-வீரர்கள, மாய்ந்து-ஒருசேர ஒருசேரஇறந்து, மண்ணில் - பூமியில், புயலுறழ்-மேகத்தையொத்த, கூந்தற்காக-கூந்தலையுடைய பெண்ணிற்காக-வானினும் ஆகாயத்தின்கண்ணும், போர்-யுத்தத்தை, செய்கின்றார்-செய்கின்றார்கள் எ-று.

வானினுமென்பதில் உம்மை-இறந்தது தழீஇய வெச்சவும்மையாம்-மண்ணில் புயலுறழ் கூந்தல்-தமயந்தியும், வானில் புயலுறழ் கூந்தல்-அரம்பையு மெனக்கொள்க. இம்மையில் ஒருபெண்ணைப் பலர்விரும்பிப் போர்செய்வது போல், மறுமையிலும் ஓரரம்பையை விரும்பியவர் பலராதலால் பொருதன ரென்க. எங்கணும் ஒருத்தியைப் பலர் விரும்பிற் போரே விளையுமென்பது கருத்து. [மாய்ந்தும் போர்செய்கின்றார்களெனலால், தொல்லுருப் பேறணி யாம்.]

(க-து.) வீரர்களிரு போர்செய்கின்றார்கள் எ-ம். 28

குருதிகொப்புளிக்கும்வேலான் குங்குமவளறுமூழ்கு
மருமத்தில்வாளிமூழ்கமயங்கினன்றெளிதலோடும்
விரைமொய்த்தகூந்தருழவிண்ணினின்றார்வத்தோடு
முருவத்தார்புனையவந்தவொண்டொடிமங்கிகின்றாள்.

(இ-ள்.) குருதி-உதிரத்தை, கொப்புளிக்கும் - உமிழகின்ற, வேலான்-வேற்படையையுடைய வாசனனவன், குஙகுமவளறு-குங்குமச்சேற்றில், மூழ்கும்-முழுகப்பெற்ற, மருமத்தில்-மார்பினிடத்தில், வாளிமூழ்க-பாணங்கள்புதைய, மயங்கினன்-மயக்கங்கொண்டவனாகி, தெளிதலோடும்-தெளிந்தவள

வில், விரைமொயத்த-வாசனையையுடைய, கூந்தரூழ-குழலானது அவிழ, விண்ணினின் று-ஆகாயத்தினின்றும், ஆர்வத்தோடும்-ஆசையுடன், உருவத் தார்-அழகியமாலையை, புனையவந்த-தரிக்கவந்த, ஒண்டொடி-அரமங்கையான வள், மயங்கிநின்றனள்-மயங்கிநின்றனள் எ-று.

கூந்தலவிழ வெனலால்-நினைப்பின்றி விரைந்துவந்தன ளென்க. இவன் உயிர் மனிததேகத்தைவிட்டு நீங்குமுன் மாலைசூட்டத் தெய்வமங்கைவந்துகாத் திருப்பாளானால், விண்ணின்பம் பெறுதற்குப் போரின்மிக்க தில்லையென்பது கருத்து.

(க-து.) நளன் பாணங்கள்பட்டு மயங்கினவனாகத் தெளிந்துநிற்க. மாலை தரிக்கவந்த அரம்பையானவள் மயங்கி நின்றாள் எ-ம். 29

கான்படுமுருவப்பைந்தார்விதர்ப்பர்கோன்கன்னிவேற்க
ணூன்படாதுலையக்குத்தியுள்ளுயிர்பருகலாற்றேங்
வான்படாமின்னினோச்சும்வாளினான்மாய்துமென்னாத்
தேன்படுதெரியல்வேந்தர்செருமலைந்தாவிநீத்தார்.

(இ-ள்.) கான்படும்-வாசனையுண்டாகிய, உருவம் - அழகிய, பைந்தார்-பசியமாலையையுடைய, விதர்ப்பர்கோன்-வீமராசன், கன்னி-தமயந்தியினது, வேற்கண்-வேல்போன்ற கண்களானவை, ஊன்படாது - மாமிசம்படாமல், உலைய-வருந்தும்படி, குத்தி-குத்தி, உள்ளுயிர்-உள்ளாவியை, பருகல்-உண்பதை, ஆற்றேம்-பொறுக்கமாட்டேம், வான்படா-மேகத்திற்றோன்றாத, மின்னின்-மின்போல், ஓச்சும்-எறிகின்ற, வாளினால் - வாட்படையால், மாய்துமென்னா-மாய்வேமென்று, தேன்படு-தேனுண்டாகின்ற, தெரியல் - மலர்மாலையயணிந்த, வேந்தர்-அரசர்கள், செருமலைந்து - போர்புரிந்து, ஆவி-உயிரை, நீத்தார்-நீக்கினார் எ-று.

மாதர்விழி வாளினுங் கொடியதென்பது, வெய்யகூற் றுருத்தெறி வேல் விலக்கினு, மெய்துமூழ் வினைத்தொட ரெண்ணி மாற்றினுங், தையலார்முழு மதி முகத்திற் றங்கிய, மையகட் காலவேன் மாற்றலாகுமே." இதனாலறிக.

(க-து.) அரசர்கள் தமயந்தி கட்படைக்கஞ்சி வாட்படையா லிறந்தார்கள் எ-ம். 30

முழவுறழ்திணிதோள்வீரர்முழுமெயுமிரும்புண்மேய
விழிபெருங்குருதியாடியிளங்கதிர்ப்பரிதியேய்ப்ப
விழிகவுட்கடாத்தகால்வாயரசுவாவெருத்திற்றோன்றிப்
பொழிகணைமாரிசிந்தியகவிருவிசும்புபோர்த்தார்.

(இ-ள்.) முழவுறழ்-மத்தளமொத்த, திணி-வலிய, தோள்-புயத்தையுடைய, வீரர்-படைவீரர், முழுமெயும்-தேகமுழுதும், இரும்-பெரிய, புண்மேய-புண்

ணிற்பொருந்திய, இழி-ஒழுகுகின்ற, பெருங்குருதியாடி-பெரிய உதிரத்தில் மூழ்கி, இளங்கதிர்-இளங்கிரணத்தையுடைய,பரிதியேய்ப்ப-சூரியனையொப்ப, கால்-கடிவினிடத்திலே, அழி-வீழுகின்ற, கடாத்த-மதத்தையும், நால்வாய்-தொங்குகின்ற வாயையுமுடைய, அரசுவா-அரசயானையின், எருத்தில்-பிடரியின்மேல், தோன்றி-ஏறி, பொழி-பொழிகின்ற, கணைமாரி - பாணவருஷங்களை, சிந்தி-சிதறி, அகல்-அகன்ற, இரு-பெரிய,விசும்பு-ஆகாயத்தை, போர்த்தார்-மறைத்தார்கள் எ-று.

அரசுவாவிற் கிலக்கணம்-சுயம்வரப்படலத்தில் 'குளிர்மதி' என்னும் பாட்டுரையிற் காண்க.

(க-து.) படைவீரர் யானைமேலேறிக் கணைமழையா லாகாயத்தை மூடினார்கள் எ-ம். 31

அருமருந்தனையாள்சூட்டுமலங்கலந்தோளினானைப்
பொருதிரைப்புணரிசூழ்ந்தபுவியினிலரசரெல்லா
நிரையுளையரிமானேற்றைநிழல்சுளிதறுகட்சீற்ற
வரைபுரைகளிநல்யானைவளைந்தெனவளைந்துகொண்டார்.

[இதுமுதல் மூன்றுபாட்டுகளால் அரசர் நளனைச்சூழ்ந்தெதிர்த்தல்சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) அருமருந்தனையால்-அரிய தேவாமிர்தத்தையொத்த தமயந்தியானவள், சூட்டும்-தரித்த, அலங்கலந் தோளினானை-மாலைவிளங்கும் புயத்தையுடைய நளனை, பொருதிரை-மோதுகின்ற அலைகளையுடைய, புணரிசூழ்ந்த-கடலாற் சூழப்பட்ட, புவியினில்-பூவுலகத்து,அரசரெல்லாம்-அரசரனைவரும், நிரை-வரிசைபெற்ற,உளை-புறமயிரையுடைய,அரிமானேற்றை-சிங்கவேற்றை, நிழல்சுளி-நிழலைக்கோபிக்கின்ற, தறுகண் - அஞ்சாமையையும், சீற்றம்-கோபத்தையுமுடைய நல்லயானைகள், வளைந்தென-மளைந்தனபோல்,வளைந்து கொண்டார்-சூழ்ந்துகொண்டார்கள் எ-று.

இத்தனை அரசரெதிர்த்தும் நளனுக்கு இணையாகமாட்டா ரென்பது தோன்ற, அரிமானேற்றைக் களிநல்யானை வளைந்தென வளைந்துகொண்டார் என்றார். [இது உவமையணி.]

(க-து.) அரசர்கள் நளனைச் சூழ்ந்துகொண்டார்கள் எ-ம். 32

நொறில்பரித்தடந்தேருந்திநோன்சிலைகுழையவாங்கி
பொறியழற்பகழிதூவிப்பொங்குளைப்புரவிமான்றேர்
தெறுகதக்களிநல்யானைசினவுவாள்வயவரீட்டங்
குறைபடநூழிலாட்டிக்கூற்றெனவரசரார்த்தார்.

(இ-ள்.) நொறில்-விரைவினையுடைய, பரி-குதிரைகட்டிய, தடம்-விசாலம்பொருந்திய, தேருந்தி-தேரைச் செலுத்தி, நோன்சிலை-பெரிய வில்லை,

குழையவாங்கி-வளைய வளைத்து, பொறியழல்-அக்கினிப் பொறியையுடைய, பகழிதூவி-பாணங்களைவீசி, பொங்குளை-மிகுந்த புறமயிரினையிடைய, புரவி-குதிரைகளும், மான்றேர்-குதிரைகட்டிய தேர்களும், தெறுகதக்களிநல்யானை-மிகுந்தகோபத்தையுங் களிப்பையுமுடைய யானைகளும், சினவுவாள் வயவரீட்டம்-கோபிக்கின்ற வாட்படையையுடைய படைவீரர் கூட்டமும், குறைபட-குறையும்படி, நூலிலாட்டி-நூழிலாட்டுச்செய்து, கூற்றெனா-இயமன்போல், அரசர்-மன்னர்கள், ஆர்த்தார்-கர்ச்சித்தார்கள் எ-று.

தேருந்தி-சிலைவாங்கி-பகழிதூவி - நூழிலாட்டி - ஆர்த்தர் அரசரெனக் கொள்க. நூலிலாட்டாவது-தன் மெய்புதைந்த படைபறித்து மாற்றுரையிருத்தல். அது-"களங்கழுமிய படையிரிய, வுளங்கழித்த வேல்பேரித்தோச்சின்று. மொய்யகத்துவேந்தர் முரணினியென்னுங்கொல், கையகத்துக்கொண்டான் கழல்விடலை-வெய்ய, விடுசுடர்சீந்திவிரையகலம் போழ்ந்த, படுசுடரெலிகம் பறித்து." அன்றியும் "கைவேல்களிற் றொடு போக்கி வருபவன், மெய்வேல் பறியாநகும்." இவற்றாலறிக.

(க-து.) அரசர்கள் சத்தித்தார்கள் எ-ம். 33

தெண்டிரைப்பரவையேழுஞ்சேறுபட்டொழியத்தெண்ணீர்
மொண்டுகொண்டெழுந்தோர்குன்றின் மூகிற்குழாஞ்சொரிவ
தேய்ப்பப், புண்டலைவடி வேன்மன்னர்பொறியழற்பகழிமாரி
மண்டமர்கடந்ததிண்டோண்மன்னன்மேற்பொழிந்திட்டாரே.

(இ-ள்.) தெண்டிரை - தெளிவுபொருந்திய வலைகளையுடைய, பரவையேழும்-கடல்களேழும், சேறுபட்டொழிய - சேறுபட்டு நீங்க, தெண்ணீர் மொண்டுகொண்டு-தெண்ணீரை மொண்டுகொண்டு, ஓர்குன்றில்-ஒருமலையில் முகிற்குழாம்-மேகக்கூட்டங்கள், சொரிவதேய்ப்ப-பொழிவதையொப்ப, புண்டலை-ஊனைத்தலையிலுடைய, வடிவேன்மன்னர்-கூரியவேற்படையையுடைய வரசர்கள், பொறியலல்-நெருப்புப்பொறி பறக்கின்ற, பகழிமாரி-பாணமழையை, மண்டு-நெருங்கிய, அமர்கடந்த-யுத்தத்திற்செயித்த, திண்டோள்-வலிமைபொருந்திய புயத்தையுடைய, மன்னன்மேல்-நளமகாராசன்மேல், பொழிந்திட்டார்-சொரிந்தார்கள் எ-று.

பரவையேழுஞ் சேறுபட்டொழியத் தெண்ணீர்மொண்டுகொண் டென்னலால், அரசர்கள் வைப்பாகத்திருந்த பாணங்களையும் நளன்மேற்பொழிந்தனரென்ப தாயிற்று.

(க-து.) அரசர்கள் நளன்மேற் பாணமெய்தார்கள் எ-ம். 34

தொளைக்கைநொண்டொரியுண்ணக்குழாங்கொடுகவந்தமாட
வொள்ளழற்றுறுநகட்கூற்றமுயிருண்டுதெவிட்டிசிறப்ப

வெள்ளவெங்குருதிபோர்ப்பவியன்பணைநிடதங்காக்கும்
வள்ளறன்புருவத்தோடும்வரிசிலைகுனிந்ததன்றே.

[இதுமுதல் இரண்டு பாட்டுகளால் அவ்வரசரை நளனெதிர்த்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கொள்ளைகொண்டு-கொள்ளையாக வாரிக்கொண்டு, ஓரியுண்ண-ஓரிகளுண்ண-குழாங்கொடு-கூட்டங்கொண்டு, கவந்தமாட - உடற்குறைகள் கூத்தாட, ஒள்ளழல்-ஒளியையுடைய நெருப்புப்பொறி பறக்கின்ற, தறுகண்-அஞ்சாமையையுடைய, கூற்றம் - இயமனானவன், உயிருண்டு-உயிரையுண்டு, தெவிட்டிநிற்ப-உமிழ்ந்துநிற்க, வெள்ளவெங்குருதி-வெப்பம்பொருந்திய உதிர வெள்ளமானது, போர்ப்ப - மூடிக்கொள்ள, வியன் - பெரிய, பணை-வயலையுடைய, நிடதங்காக்கும்-நிடதநாட்டைப்புரக்கின்ற, வள்ளறன்-நளனுடைய, புருவத்தோடு-புருவத்துடன், வரிசிலை-அவனது நெடியவில்லானது, குனிந்தது-வளைந்தது, எ-று. அன்று-ஏ-இவ்விரண்டும் அசைநிலைகள்.

ஓரியுண்ண-கவந்தமாட-கூற்றமுயிருண்டு தெவிட்டிநிற்ப - குருதிபோர்ப்ப-வள்ளல்சிலை குனிந்ததெனக் கூட்டுக. [புருவத்தோடும் சிலைவளைந்ததெனலால், உடனிகழ்ச்சி யணியாம்.]

(க-து.) நளன் வில்லைவளைத்தான் எ-ம். 35

கூன்பிறைக்கோட்டுவல்விற்குழைத்ததுங்குழைத்துத்தெவ்வ
ரூன்சுவைத்துண்ணும்வாளிவிடுத்ததுமொன்னலார்தங்
கான்படுதெரியன்மார்பம்போழ்ந்ததுந்தெரியக்காணார்
வான்படுபிணக்குன்றேங்கிவயின்வயின்விளங்கக்கண்டார்.

(இ-ள்.) கூன்-வளைவுபொருந்திய, பிறை-பிறையையொத்த, கோட்டுவல்வில்-கொம்பினாலாகிய வலியவில்லை, குழைத்ததும்-வளைத்ததையும், குழைத்து-வளைத்து, தெவ்வர்-பகைவருடைய, ஊன்சுவைத்து-மாமிசத்தைமென்று, உண்ணும்-உண்ணுகின்ற, வாளிவிடுத்ததும்-பாணங்கள் விட்டதையும், ஒன்னலார்தம்-சத்துருக்களுடைய, கான்படு-மணமுண்டாகிய, தெரியல்-மலர்மாலையையணிந்த, மார்பம்-மார்பை, போழ்ந்ததும்-பிளந்ததையும், தெரியக்காணார்-ஒருவருந் தெரியக்கண்டிலர், (யாதுகண்டனரெனில்) வான்படு-ஆகாயமளாவிய, பிணக்குன்றேங்கி-பிணமலைகளுயர்ந்து, வயின்வயின்-இடங்கடோறும், விளங்க-விளங்குதலை, கண்டார்-பார்த்தார்கள் எ-று.

புகையினால் நெருப்புண்டென்றறிதல்போல, பிணக்குன்றினால் நளன் பொருதனனென் றறிந்தன ரென்க. [பிணக்குன்றேங்கி வயின்வயின் விளங்கக்கண்டாரென்னும் காரியத்தினால் காரணமாகிய நளனது வில்லாண்மை தோன்றுதலால், புனைவிலிப்புகழ்ச்சியணியாம்.]

(க-து.) நளன்செய்கையைக் காணார்கள்: பிணக்குவியலைக்கண்டார்கள் எ-ம். 36

பொருசமத்துடன்றவீரர்பொன்றிட நின்றவேந்தர்
வெருவலுற்றிரியுமாறும்வேந்தர்கோன்வலியுநோக்கி
யெரிமணிப்பொன்செயோடையிளங்களிப்பகடுசூழக்
கரைபொருகடலந்தானைக்கலிங்கர்கோனமரிலேற்றான்.

[இதுமுதல் மூன்றுபாட்டுகளால் கலிங்கநாட்டரசனெதிர்த்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) பொருசமத்து - பொருகின்றபோரில், உடன்றவீரர் - கோபித்தெதிர்த்தவீரர்கள், பொன்றிட-இறந்துவிட, நின்றவேந்தர்-நின்றமற்றையரசர்கள், வெருவலுற்று-பயந்து, இரியுமாறும்-ஓடுந்தன்மையும், வேந்தர்கோன்-நளமகாராசனுடைய, வலியும்-வலிமையினையும், நோக்கி-பார்த்து, எரிமணி-ஒளியையுடைய மணிகள்பதித்த, பொன்செயோடை-பொன்னாற்செய்தமுகபடாத்தையுடைய, இளங்களிப்பகடுசூழ-இளமைபொருந்திய களிப்பையுடைய யானைகள்சூழ்ந்துவர, கரைபொரு - கரையோடுமோதுகின்ற, கடலந்தானை-சேனாசமுத்திரத்தையுடைய, கலிங்கர்கோன்-கலிங்கதேயத்தரசன், அமரில்-யுத்தத்தில், ஏற்றான்-எதிர்த்தான் எ-று.

எதிர்த்தவர்களிறத்தலையும் மற்றவேந்தரோடுதலையும் நளன் வலிமையையுங் கண்ட கலிங்கதேயத்தரசன் அவனோடேற்றனனென்க. சேனையிற் குறைவிலனென்பதுதோன்ற, கடலந்தானைக் கலிங்கர்கோனென்றார்.

(க-து.) கலிங்கதேயத்தரசன் நளனுடனெதிர்த்தான் எ-ம். 37

கந்தடுதறுகட்சீற்றக்கடாம்பொழிகளிநல்யானை
மந்தரகிரியாற்றானை வாரிதியுழக்கிவானத்
திந்திரகுமரனென்னவிகல்புரிநிடதர்கோமே
னுந்துமான்றேரின்மேலுமொருகணைதெரிந்துவிட்டான்.

(இ-ள்.) கந்தடு-கட்டுத்தறியை முறிக்கின்ற, தறுகண்-அஞ்சாமையையுடைய, சீற்ற-கோபத்தையுடைய, கடாம்பொழி-மதம்பொழிகின்ற, களிநல் யானை-களிப்பையுடைய நல்லயானையாகிய, மந்தரகிரியால்-மந்தரமலையினால், தானைவாரிதி-சேனாசமுத்திரத்தை உழக்கி-கலக்கி, வானத்து-விண்ணுலகத்து, இந்திரகுமரனென்ன-இந்திர குமரனைப்போல், இகல்புரி-போர்செய்கின்ற, நிடதர்கோமான்-நளமகாராசன், உந்து - செலுத்துகின்ற, மான்றேரின்மேலும்-குதிரைகட்டிய தேரின்மேலும், ஒருகணை-ஒரு பாணத்தை தெரிந்து-பார்த்து, விட்டான்-விடுத்தனன் எ-று.

இவன்விடும் பாணங்களுக்கும் வலிமைக்கும் தனது கோலொன்றே நிகரென்பவன்போல், ஒருபாணம் விடுத்தனனென்க.உம்மை-சிறப்பு.]யானையை

மந்தாகிரியாகவும் தானையை வாரிதியாகவும் உருவகப்படுத்திச் சொல்லுத லால், உருவகவணியாம்.]

(க-து.) நளனது தேர்மேல் கலிங்கராசன் கணைதொடுத்தான் எ-ம்.

பைம்மலைத்தநன்றவல்குற்பாவையர்க்கனங்கனன்ன
தெம்மலைச்சிவேற்காளைசிலைவளைத்தொருதோருகோலுந்தக்
கைம்மலைக்கோட்டில்வீழ்ந்தகலிங்கர்கோனமரர்மாதர்
வெம்முலைக்கோட்டில்வீழ்ந்துவிண்ணிடைவிளங்கினானே.

(இ-ள்.) பைம்மலைத்து-பாம்பின்படத்துடன் பொருது, அன்ற-விரிந்த, அல்குல்-அல்குலையுடைய, பாவையர்க்கு-மாதர்க்கு, அனங்கனன்ன-மன்மத னையொத்த, தெவ்-சத்துருக்களை, மலை-பொருகின்ற, சினவேற்காளை கோபம் பொருந்திய வேலையுடைய நளனானவன், சிலைவளைத்து-வில்லைவளைத்து, ஒரு கோலுந்த-ஒருபாணஞ்செலுத்த, கைம்மலைக்கோட்டில் - யானைக்கொம்பின் மேல், வீழ்ந்த-விழுந்த, கலிங்கர்கோன்-கலிங்கதேயத்தரசனானவன், அமரர் மாதர்-அரம்பையருடைய, வெம்-விருப்பஞ்செய்கின்ற, முலைக்கோட்டில் வீழ்ந்து-முலையாகிய யானைக்கொம்பின்மேல் விழுந்து, விண்ணிடை-தெய்வ லோகத்தில், விளங்கினான்-பிரகாசித்தான் எ-று.

கலிங்கதேயத்தரசன் அனேகபாணங்களைப் பிரயோகித்தும்அதனால் நள னிறவாமல் இவன்விட்ட ஒருபாணத்தால், அப்பலவும் இவ்வொன்றை நிக ராமை விளக்கிநின்றது. நளனுடைய பாணத்தா லறுபட்டுயானையின் கொம் பில் வீழ்ந்தவளவிலேதானே, அரம்பையருடைய ஸ்தனத்தைப் புல்லி அத னால் சிறப்புற்று நின்றனனென்க. அவன் மனிதவுடல் கைம்மலைக்கோட்டில் வீழ்ந்தென்றும், அவன் தெய்வவுடல் வெம்முலைக்கோட்டில் வீழ்ந்ததென்றுங் கொள்க. விரைவுபற்றி அக்கோட்டில் வீழ்ந்தனனென்றார்.

(க-து.) நளன் கணையால் கலிங்கராச னிறந்தான் எ-ம். 39

களத்திடைகளிங்கர்கோமான்கவிழ்தலுங்கடைக்கண்சேப்ப
வுளத்திடைவெகுளிபொங்கவூழிவெங்காலினோடி
வளைத்தனன்சேனையோடும்வார்சிலைவணங்கிலேம்போர்
விளைத்தனன்கூற்றுமஞ்சவெந்திரன்மாதர்கோவே.

[இதுமுதல் மூன்றுபாட்டுகளால் மகத்தேயத்தரச னெதிர்த்தல் சொல் லப்படுகின்றது.]

(இ-ள்.) களத்திடை-யுத்தகளத்திலே, கலிங்கர்கோமான்-கலிங்கதேயத்த ரசன், கவிழ்தலும்-இறந்தவளவில், கடைக்கண்சேப்ப-கடைக்கண்கள்சிவக்க, உளத்திடை-மனத்தில், வெகுளிபொங்க-கோபமிக, ஊழிவெங்காலின்-யுகமு டிவிலுண்டாகிய வெவ்விய - காற்றைப்போல, ஓடி - ஓடி, வளைத்த

னன் - வளைத்தனனாகி, சேனையோடும் - சேனையுடனே, வார் - நெடிய, சிலைவணங்கி - வில்லைவளைத்து, கூற்றுமஞ்ச - இயமனுமஞ்சும்படி, வெந்திறல் - வெவ்வியதிறலையுடைய, மகதர்கோ-மகதநேயத்தரசன், வெம்போர்-வெவ்வியபோரை, விளைந்தனன்-செய்தனன் எ-று.

மகதர்கோமானவன் கடைக்கண்சேப்ப வெகுளிபொங்க ஒடிவளைத்தனனெனக் கூட்டுக.

(க-து.) மகதர்தேயத்தரசன் நளனுடனெதிர்த்தான் எ-ம். 40

முரிதிரைப்பரவைவேலை முகட்டெழுந்தகல்வான்மேய
விரிகதிர்மதியந்தீண்டும் வெள்ளெயிற்றரவமென்னக்
குருதிகொப்புளிக்கும்வேலான் கொற்றவெண்குடையின்மீது
வரிசிலைகுழைத்துவெய்ய வடிக்கணையொன்றுவிட்டான்.

(இ-ள்.) முரி-வளைந்த-திரை-அலைபொருந்திய, பரவை-பரப்பையுடைய, வேலைமுகட்டெழுந்து-கடலினதுச்சியிலுதித்து, அகல்வான் மேய - அகன்ற ஆகாயத்தின்கணுள்ள, விரிகதிர்மதியம்-விரிகின்ற கிரணங்களையுடைய சந்திரனை, தீண்டும்-தொடுகின்ற, வெள்ளெயிற்றரவமென்ன - வெள்ளிய பல்லையுடைய சர்ப்பம்போல், குருதிகொப்புளிக்கும் - உதிரத்தை யுமிழ்கின்ற, வேலான்-வேற்படைதாங்கிய நளனானவன், கொற்றம்-சயத்தைத் தருகின்ற, வெண்குடையின்மீது - தவளசத்திரத்தின்மேல், வரிசிலைகுழைத்து - நெடிய வில்லைவளைத்து, வெய்ய-கொடிய, வடிக்கணையொன்று-கூரியகணையொன்றை விட்டான்-விடுத்தனன் எ-று.

மதியந்தீண்டும் வெள்ளெயிற்றரவ மென்னல் "கண்டதுமன்னுமொருநாளவர்மன்னுந், திங்களைப்பாம்பு கொண் டற்று." இதனாலறுக. [வெண்குடைக்கு மதியையும் பாணத்திற்குச் சர்ப்பத்தையும் ஒப்புச்சொல்லுதலால், உவமையணியாம்.]

(க-து.) நளன் மகதநேயத்தரசன்மேல் கணைதொடுத்தான் எ-ம். 41

சுரும்பிமிர்தும்பைவேய்ந்த சுடர்முடிமகதர்கோமான்
விரும்பலர்செருக்கும்வேலான் விற்பழுத்துமிழும்வெய்ய
சரம்படவற்றுவீழ்ந்த தன்னுடற்குறைநின்றாட
வரம்பையரோடுநோக்கி யணிமணிமுறுவல் பூத்தான்.

(இ-ள்.) சுரும்பு-வண்டுகள், இமிர்-ஒலிக்கின்ற, தும்பைவேய்ந்த-தும்பைமாலைதரித்துவந்த, சுடர்முடி-கிரணங்கள் வீசுகின்ற கிரீடத்தையுடைய, மகதர் கோமான்-மகதநேயத்தரசனானவன், விரும்பலர்-சத்துருக்களை, செருக்கும்-கொல்லுகின்ற, வேலான்-வேற்படையையுடைய நளனது, விற்பழுத்து வில்லானது பழுத்து, உமிழும்-உமிழ்கின்ற, வெய்யசரம்பட-வெவ்விய பாணங்

கள்பட, (அவைகளால்) அற்றுவீழ்ந்த-துணிந்துவீழ்ந்த, தன்-தன்னுடைய, உடற்குறை-கவந்தமானது, நின்று-நின்று, ஆட-கூத்தாட, அரம்பையரோடு, தெய்வமாதரோடு, நோக்கி-பார்த்து, அணி-அழகிய, மணி-முத்தையொத்த நகைதோன்ற, முறுவல்பூத்தான் நகைத்தனன் எ-று.

மகதத்தேயத்தரசன் தெய்வவுருப் பெற்றமையால், அதிற் குறைந்த மனித வுருவையிகழ்ந்து நகைத்தனனென்க. தன்னுடற்குறைநின்றாடநோக்கி என்றலால் தறிபட்டவுடலாடி நிலத்தில் விழுமுன்னமே தெய்வவுருப் பெற்றனனென்னும் விரைவுதோன்றியது. நாணமுற்றவர் உடன் சிரித்திடுவதென்பது இயல்பாதலால், தனக்கு மாலைசூட்டிய அரம்பையரோடு நோக்கி யணிமணி முறுவல்பூத்தான் எனறார்.

(கு-து.) நளன் கணைபட்டு மகததேயத்தரச னிறந்தான் எ-ம். 42

அமைப்பருந்தறுகட்சீற்றத்தாளரியேறுபோல்வான்
சமர்த்தலையிகலினேற்ற தரியலர்சென்னிவீழத்
துமித்திடுங்குருதிவொள்வாள் சுடரெழவிதிர்ப்பநோக்கி
யிமைத்தலும்வளவர்கோனை வெருவனீயேகுகென்றான்.

[இதனால் சோழனெதிர்த்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) அமைப்பரும்-அமைத்தற்கரிய, தறுகண்-அஞ்சாமையையும், சீற்றத்து-கோபத்தையும், ஆள்-ஆளுகின்ற, அரியேறுபோல்வான்-சிங்கவேற்றையொத்தநளனானவன், சமர்த்தலை-யுத்தகளத்தில், இகலினேற்ற - பகையினாலெதிர்த்த, தரியலர்-சத்துருக்களுடைய, சென்னிவீழ-தலைகள்விழும்படி, துமித்திடும்-தரித்திடுகின்ற, குருதி - உதிரத்தையுடைய. ஒள்வாள்-ஒள்ளியவாட்படையை, சுடரெழ-ஒளிதுளும்ப, விதிர்ப்ப-அசைக்க, நோக்கி-அதுகண்டு, இமைத்தலும்-இமைக்கோட்டு மளவில், வளவர்கோனை-சோழனை, வெருவல்-அஞ்சாதே, நீ-நீ, ஏகுகென்றான்-போவென்றான் எ-று.

நம்மோடு பொருதற்கு அஞ்சினனாதலால் இவனோடு பொருவது தருமமன்றென்று அவ்வாறு சொன்னானென்க. அது தோல்வியென்பது-"விழித்த கண்வேல்கொண்டெறிய வழித்திமைப்பி, னொட்டன்றோவன்கணவர்க்கு," இதனாலறிக.

(கு-து.) நளனது வாளசைவைக்கண்டு சோழன் பயந்து இமைக்கொட்டலா லதைக்கண்டநளன் சோழனை அஞ்சாதே போவென்றான் எ-ம். 43

கொய்யுளைப்புரவிதூண்டிக் கொடுமரங்குழையவாங்கி
வெய்யவெம்பகழிமாரி விண்ணகம்புதைப்பத்தூவி
யையுன்மெய்க்கவசமீது மைங்கணைசிதறியார்த்தான்
மையறுசிறப்பின்மிக்க வஞ்சியம்பதிக்குவேந்தே.

[இதுமுதல் இரண்டுபாட்டுகளால் சேரமானெதிர்த்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மையறு-குற்றமற்ற, சிறப்பின்மிக்க-சிறப்பினாலுயர்ந்த, வஞ்சியம் பதிக்கு-வஞ்சியென்னுநகரத்திற்கு, வேந்து-அரசனாகியசேரமான், கொய்யுளை கொய்துகட்டிய புறமயிரினையுடைய, புரவி-குதிரையை, தூண்டி-செலுத்தி, கொடுமரம்-வில்லை, குழையவாங்கி-வளையவளைத்து, வெய்ய-கொடிய, வெம் பகழிமாரி-வெவ்வியபாணமழைகளை, விண்ணகம்-ஆகாயமுழுவதும், புதைப்ப-மூடும்படி, தூவி-இறைத்து, ஐயன் - நளனுடைய, மெய்க்கவசமீது-சீராவின் மேலும், ஐங்கணை தூவி-ஐந்துபாணம்விட்டு, ஆர்த்தான்-கர்ச்சித்தான் எ-று.

நளன்மேல் ஐங்கணை தூவினனெனலால், (பகழிமாரிவிண்ணகம்புதைப்பத்தூவி) என்பதைச் சேனைகண்மேலெனக்கொள்க.

(க-து.) சேரமானானவன் நளனது மெய்கவசத்தின்மே லைங்கணைவிடுத்தான் எ-ம். 44

சில்லியந்தடந்தேருந்தித் திண்சிலைகுழையவாங்கிக்
கொல்லியவெழுந்தகூற்றிற் கொடியவெம்பகழிதூவி
மல்லடுதோளுமார்பும் வழிபெருங்குருதியோடும்
வில்லவன்வெருவியோட வெஞ்சமமுடற்றினானே.

(இ-ள்.) சில்லி-உருளையையுடைய, தடம்-விசாலம்பொருந்திய, தேருந்தி தேரைச்செலுத்தி, திண்-வலிமைபொருந்திய, சிலை-வில்லை, குழையவாங்கி-வளையவளைத்து, கொல்லியவெழுந்த - கொல்லவெழுந்த, கூற்றில் - இயமன் போல், கொடிய-கொடியவாகிய, வெம்பகழி - வெவ்வியபாணங்களை, தூவி-விட்டு, மல்லடு-மற்போர்செய்கின்ற, தோளும்-புயங்களிலும், மார்பும்-மார்பிலும், வழி-வழிகின்ற, பெருங்குருதியோடும் - அதிக உதிரத்தோடும், வில்லவன்-சேரமான், வெருவியோட-அஞ்சியோடும்படி, வெஞ்சமம்-வெவ்வியபோரை, உடற்றினான்-செய்தான் எ-று.

வில்லவனாயினும் நளன்வில்லுக்குத் தோற்றோடினமை தோன்ற, சேரமானுக்குப் பலபேரிருக்க வில்லவன் என்றார். வில்லவன் - விற்கொடியையுடையவன்.

(க-து.) சேரமான் பயந்தோட நளன்போர்செய்தான் எ-ம். 45

நிறங்கிளர்வயிரப்பைம்பூ ணிடதர்கோன்றொடுத்தகோலிற்
கரங்கெனத்திரியும்வெய்ய கலினமான்றடந்தேர்வீழ
மறங்கிளர்பரிதிவேலு மானமுந்துறந்துநாணாற்
புறங்கொடுத்திரியல்போனான் புட்கரத்தீவில்வேந்தன்.

[இதனால் புட்கரத்தீவரச னெதிர்த்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) புட்கரத்தீவில்வேந்தன்-புட்கரத்தீவையாளு மரசனானவன், திற நகிளர்-ஒளிவிளங்குகின்ற, வைரப்பைம்பூண்-வச்சிராபரணத்தையுடைய, நிட தர்கோன்-நளமஹாராசன், தொடுத்த-பிரயோகஞ்செய்த, கோலில்-பாணத் தால், கறங்கெனத்திரியும்-காற்றாடிபோற்றிரிகின்ற-வெய்ய-வெவ்விய,கலின மான்-கடிவாளம்பூண்டகுதிரைகட்டிய, தடம்-விசாலம்பொருந்திய, தேர்வீழ-இரதம்வீழ, மறங்கிளர்-மறமிகுந்த, பரிதிவேலும்-சூரியனையொத்த வேற்படை யையும், மானமும்-அபிமானத்தையும், துறந்து-விட்டு, நாணல்-நாணத்தால், புளங்கொடுத்து-முதுகுகாட்டி, இரியல்போனான்-ஓடிப்போனான் எ-று.

மானமும் ஓராபரணம்போல் அணிபவனாதலின், புரக்ரத்தீவில்வேந்தை வேலுமானமுந் துறந்துபோனான் என்றார்.

(க-து.) புட்கரன் நளனுடனெதிர்த்து வெங்கொடுத்தோடினான் எ-ம். 46

கலிவிருத்தம்.

பாகடுவெந்திறற் பருமயானைமேல்
வேகவெங்கலினமா வெள்ளஞ்சூழ்வரச்
சாகத்தீவுக்கிறை சமரினார்ப்பொடு
தோகையர்கண்ணெனப் பகழிதூவினான்.

[இதுமுதல் நான்குபாட்டுகளால் சாகத்தீவரச னெதிர்த்தல் சொல்லப் படுகின்றது.]

(இ-ள்.) பாகு-பாகனை, அடு-கொல்லுகின்ற, வெந்திறல்-வெவ்வியதிறலை யுடைய, பருமயானைமேல்-ஒப்பனைசெய்தயானையின்மேல், வேக-வேகத்தை யுடைய, வெங்கலினமாவெள்ளம்-வெவ்விய கடிவாளம் பூண்டகுதிரைக் கூட் டங்கள், சூழ்வர-தன்னைச்சூழ்ந்துவரும்படி, சாகத்தீவுக்கிறை-சாகத்தீவுக்கரச னவன், சமரினார்ப்பொடும்-யுத்தத்திலாரவாரத்துடன், தோகையர் கண் ணென-மாதர்விழிகள்போல், பகழி-பாணங்களை, தூவினான்-சிந்தினான் எ-று.

மாதர்கண்கள் பாணங்களினுங் கொடியனவாதலால், தோகையர்கண் ணெனப் பகழிதூவினான் என்றார். பாகு-என்னும் பண்புப்பெயர், பண்பிக் காயிற்று. [இது உவமேயமாகிய கண்களை உவமானமாகிய பாணங்களுக்கு ஒப் புமைசொல்லலால், எதிர்மறையணியாம்.]

(க-து.) சாகத்தீவரசன் பாணந்தொடுத்தான் எ-ம். 47

துணங்கையிட்டலகைக ளுள்ளியார்த்தெழ
வணங்கெயிற்றரவென வழலும்வாளிகள்
வணங்குவிற்கால்வளைத் தெய்துமாற்றினா
னிணங்கமழ்குருதிவே னிடதர்வேந்தனே.

(இ-ள்.) துணங்கையிட்டு-கையைக்கொட்டி, அலகைகள் - பேய்கள், துள்ளி-குதித்து, ஆர்த்து-ஒலித்து, எழ-எழும்ப, அணங்கு-வருத்தத்தைச்செய்கின்ற, எயிற்று-பல்லையுடைய, அரவென-சர்ப்பம்போல், அழலும்-சுடுகின்ற, வாளிகள்-பாணங்களை, வணங்கு-வளைகின்ற, வில்-வில்லை,கால்வளைத்து-காலினால்வளைத்து, எய்து-பிரயோகஞ்செய்து, மாற்றினன்-நீக்கினன், நிணங்கமழ் - கொழுப்புநாறுகின்ற, குருதிவேல்-உதிரந்தோய்ந்த வேற்படையையுடைய, நிடதர்வேந்தன்-நளமகாராசன், எ-று. ஏகாரம்-ஈற்றசைக்கண் வந்தது.

இப்போரில் நமக்கு நல்லவுணவு கிடைக்குமென்று அதிகமகிழ்ச்சியால் பேய்கள் கர்ச்சித்தலால், துணங்கையிட்டலகைக. ளெள்ளியார்த்தெழவென்றார். அரவைப் பாணத்திற்கும் எயிற்றை அதன்முனைக்கும் உவமையாகக்கொள்க.

(க-து.) சாகத்தீவரசன் பாணங்களை நளன் விலக்கினன் எ-ம். 48

பாற்றினந்தொடர்வது பகைவரூன்சுவைத்
தூற்றிருந்திடையறா துதிரங்கால்வது
கூற்றொடுந்தோழமை கொள்வதாயதோர்
மாற்றருங்கொடியவேன் மன்னன்வாங்கினன்.

(இ-ள்.)பாற்றினந்தொடர்வது-பருந்துக்கூட்டங்கள்தொடர்வதும்,பகைவர்-சத்துருக்களுடைய, ஊன்-மாமிசத்தை, சுவைத்து-மென்று, ஊற்றிருந்து-ஊற்றுகவிருந்து, இடையறாது-ஒழியாமல், உதிரங்கால் வது-உதிரங்கக்குவதும், கூற்றொடும்-இயமனுடன், தோழமைகொள்வதாயது-சிநேகங்கொள்வதாகியதுமாகிய, ஓர்-ஒரு, மாற்றரும்-தடுப்பதற்கரிய, கொடியவேல்-கொடிய வேற்படையை, மன்னன்-நளனானவன், வாங்கினன் - கைக்கொண்டான் எ-று.

ஒருவர்மேல் விட்டால் அதன்கொடுமை சொல்லவேண்டுவதில்லையென்பது தோன்ற, சுபாவத்தில் இம்மூக்குணங்களையுமுடைய வேலென்றார்.

(க-து.) நளன் வேலாயுதத்தைக்கைக்கொண்டான் எ-ம். 49

அயிலெடுத்தெறிதலு மடர்க்குமொன்னலார்
வயிறெறிதவழ்ந்தது வயிரவாட்படை
செயிறரவேந்திய சாகத்தீவிறை
யுயிர்துறந்தந்தக னுலகம்புக்கதே.

(இ-ள்.) அயிலெடுத்தெறிதலும்-வேற்படையையெடுத்து வீசியவளவில், அடர்க்கும்-பொருகின்ற, ஒன்னலார்-பகைவருடைய, வயிறு-வயிறானது,எரி-நெருப்பினால், தவழ்ந்தது-தவழ்ந்திடப்பட்டது, வைரவாட்படை - வச்சிரவாளை, செயிறற-குற்றமற, ஏந்திய-தாங்கப்பெற்ற, சாகத்தீவிறை-சாகத்தீவுக்கரசனுடைய, உயிர்-உயிரானது, துறந்து-அவ்வளவிட்டு, அந்தகனுலகம்-இயமலோகத்தில், புக்கது-புகுந்தது எ-று.

வயிரெரி தவழ்தலால் அடர்க்குமென்னலென்றது, சாகத்தீவரசனேடு வந்து எதிர்த்தவரையெனக்கொள்க. நிராயுதனுகி இறந்திலனென்பது தோன்ற, வயிரவாட்படை செயிரறவேந்திய சாகத்தீவிறை என்றார். இவன் ஆயுதபாணியனுயினும் புறங்கொடுத்திட்டவரிலொருவனென்பது தோன்ற, அவன்-உயிர் துறந்தந்தகனுலகம்புக்கது என்றார். அது - "போரினில் நீதியாப் புறங்கொடுத்திட்டவன்-சாரும்யமபுரிதவறுதவிலவே" இதனுலறிக.

(க-து.) சாகத்தீவரசனுயிர் யமலோகஞ்சென்றது எ-ம். 50

தூம்புடைக்கரமலை யெருத்திற்றோன்றுபு
காம்பிலிக்கரசன்வில்வாங்கிக்காய்கணை
தேம்பொதிசெழுமலர் தெரியன்மார்பினன்
வாம்பரித்தேர்மிசை மழையிற்றூவினன்.

[இதுமுதல் எழுபாட்டுகளால் காம்பிலிதேயத்தரசனெதிர்த்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) தூம்புடை-துவாரத்தையுடைய, கரமலை-கையையுடைய மலைபோன்றயானையினது, எருத்தில்-பிடரியின்மேல், தோன்றுபு-தோன்றி, காம்பிலிக்கரசன்-காம்பிலிநாட்டுக்கரசனுனவன், வில்வாங்கி-வில்லைவளைத்து, காய்-கொல்லாநின்ற, கணை-பாணங்களை, தேம்-வாசனை, பொதி-நெருங்கிய, செழுமலர் - செழுமையுள்ளமலராற்றொடுத்த, தெரியல்-மாலையையணிந்த, மார்பினன்-நளனது, வாம்-தாவுகின்ற, பரி-குதிரைகட்டிய, தேர்மிசை - தேரின்மேல், மழையில்-மேகம்போல், தூவினன்-பிரயோகித்தான் எ-று.

துதிக்கையொன்றுதவிர மற்றையுடல்மலைபோலிருத்தலால், யானையைக் கரமலை என்றார்.

(க-து.) காம்பிலிதேயத்தரசன் நளனது தேர்மேற் கணைகொடுத்தான்.

சிலையுயிர்த்துயிர்ப்பலி கவருந்திண்கணை
கொலைவடிவேலினன் றுரப்பக்குஞ்சர
மலையெனக்கவிழ்தலு மடங்கலேறெனப்
புலவுவாளொடுமவன் புவியிற்பாய்ந்தனன்.

(இ-ள்.) சிலையுயிர்த்து - வில்லால்விடப்பட்டு, உயிர்ப்பலிகவரும் - உயிராகிய வுணவையுண்கின்ற, திண்கணை-வலிமைபெற்ற பாணங்களை, கொலை. வடிவேலினன் - நளனுனவன், துரப்ப - செலுத்த, குஞ்சரம் - (எதிர்வந்தவன்) யானையானது, மலையெனக்கவிழ்தலும் - மலைபோற்கவிழ்ந்து வீழ்ந்தவளவில், மடங்கலேறென - சிங்கவேற்றைப்போல், புலவு - புலானுற்றத்தையுடைய, வாளொடும் - வாட்படையுடன், அவன் - அவ்வரசனுனவன், புவியில் - பூமியிலே, பாய்ந்தனன் - குதித்தான், எ - று.

தன்னை விட்டுத் தன்தேரின்மேற் பாணம் விடுத்தலால், நளனும் அவ்வரசனேறிவந்த யானைமேற் பாணம்விடுத்து அதைக் கொன்றனனென்க. [மலையெனவெனலால், உவமையணியாம்.]

(க-து.) நளன்பாணம் விடுக்கயானை விழவும் - காம்பிலிதேயத்தரசன் நிலத்திற் குதித்தான் - எ - ம். 52

வார்மயிர்க்கேடகம் பற்றிவாள்விதிர்த்
தூர்சினக்களிற்றணி யுழக்கியொய்யெனப்
போர்முகத்துரறிவெம் புலியின்போத்தெனச்
சாரிகைதிரிந்தனன் றறுகணாளனே.

(இ-ள்.) வார் - நெடிய, மயிர்க்கேடகம் - மயிரையுடையதோற் கேடகத்தை, பற்றி - பிடித்து, வாள்விதிர்த்து - வாளையசைத்து, ஊர் - நடக்கின்ற, சினம் - கோபத்தையுடைய, களிற்றணி - யானைவகுப்பை, உழக்கி - கலக்கி, ஒய்யென - விரைவில், போர்முகத்து - யுத்தமுகத்தில், உரறி - கர்ச்சித்து, வெம்புலியின்போத்தென - வெய்யபுலிப்போத்துப்போல், சாரிகைதிரிந்தனன் - வட்டமாகத் திரிந்தான், தறுகணாளன் - அஞ்சத்தக்கவைகட்கு அஞ்சாத காம்பிலிதேயத்தரசனானவன், எ - று.

பாணங்கள் தைப்பினும் அழிவில்லாதிருத்தற்கு மயிருள்ள தோலினாற் செய்வதுபற்றி, மயிர்க்கேடகமென்றார். ஒரு குற்றஞ்செய்வதற்குப் பலகுற்றஞ் செய்பவர்போல, தானேறிவந்த ஒரு யானையைக்கொன்ற நளனது களிற்றணியுழக்கிச் சாரிகைதிரிந்தனனென்றார். [புலியின்போத்தெனவெனலால், உவமையணியாம்.]

(க-து.) காம்பிலிதேயத்தரசன் கேடகம்பற்றி வாளையசைத்து வட்டமிட்டு உலாவினான் - எ - ம். 53

பாரினின்றவனமர் புரியப்பாய்பரித்
தேரினின்றடுகணைச் செருவிளைத்திட
லாருடைவயவர்போர்த் தருமமன்றெனக்
கூர்நுதிவாளுரீஇக் குப்புற்றனரோ.

(இ-ள்.) பாரினின்று - பூமியிலிருந்து, அவனமர்புரிய - அவ்வரசன் போர்புரிய, பாய் - தாவுகின்ற, பரித்தேரினின்று - குதிரைகட்டியதேரிலிருந்து, அடுகணை - கொல்லாநின்ற பாணங்களைக்கொண்டு, செருவிளைத்திடல் - யுத்தஞ்செய்தல், தாருடை - வெற்றிமாலையையணிந்த, வயவர் - படவீரருடைய, போர்த்தருமமன்றென - யுத்தத்தினுடையதருமமன்றென்று, கூர் - கூறிய, நுதி - நுனியையுடைய, வாளுரீஇ - வாளையுருவிக்கொண்டு, குப்புற்றான் - குதித்தான், எ - று. அரோவென்பது - அசை.

நளன் அறநிலைப்போர் செய்பவனுதலால், தன்னோடெதிர்த்த காம்பிலி தேயத்தரசனானவன் பூமியிலிருத்தல்பற்றித் தானும்பூமியிற் குதித்தனனென்னூர். அதற்கு " தார்முடிமன்னர் சமனுப்படைகொடு - போர்முடிபேற்றற் பொருந்துறமறனே" இது விதியாதல் காண்க.

(க-து.) நளன் வாளையெடுத்துத் தேரைவிட்டிறங்கினுன் - எ - ம். 54

மன்பெருங்கேடகந் திரித்துவானிடை
மின்பிறழ்ந்தென்னவாள் விதிர்த்துநோக்கின
ரென்புநெக்குள்ளுடைந் திரியவேற்றனர்
வென்பிறரறிகிலாத் திறல்கொள்வீரரே.

(இ-ள்) மன்-நிலைபெற்ற, பெருங்கேடகம்-பெரியபரிசையை, திரித்து-சுழற்றி, வானிடை-ஆகாயத்தின்கண், மின்பிறழ்ந்தென்ன-மின்னலசைந்தாற்போல், வாள்விதிர்த்து-வாட்படையை யசைத்து, நோக்கினர்-பார்த்தவர்களுடைய, என்பு-எலும்புகள், நெக்கு-நெக்குவிட்டு, உள்-உள்ளே, உடைந்திரிய-உடைந்துபோகும்படி,வெந்-தம்முதுகை,பிறர்-பிறர்களால். அறிகிலா-அறியப்படாத, திறல்கொள்-வலிமையைக்கொண்ட, வீரர்-அரசர்கள், ஏற்றனர்-எதிர்ந்தனர், எ - று.

வெந்-என்பதில் நகரவொற்றுப் பகரத்தோடு மயங்காமையின், வழக்கப்படி எதுகைநோக்கி னகரவொற்றெழுதப்பட்டதாம். வென்பிறரறிகிலா வென்பதினுல், ஒரிடத்திலும் இவ்விருவருந் தோற்றவரல்லரென்பதுகருத்து. [இது உவமையணி]

(க-து.) அரசர்களெதிர்த்தார்கள் - எ - ம். 55

தெறுஞ்சினந்தலைக்கொளீஇச் செங்கண்டீயுகப்
பிறங்குபொற்கேடகம் பிறழவெற்றியு
மறங்கிளர்வைரவாள் வாளிற்றுக்கியுங்
கறங்கெனத்திரிந்தனர் காளைவீரரே.

(இ-ள்.) தெறும்-அழிக்கின்ற, சினம்-கோபமானது, தலைக்கொளீஇ-அதிகரித்து, செங்கண்-சிவந்தகண்களினின்றும், தீயுக-நெருப்புதிர, பிறங்கு-உயர்ந்த, பொற்கேடகம் - அழகியகேடகத்தை, பிறழ-நீங்கும்படி, எற்றியும்-எறிந்தும், மறங்கிளர் - கொலைத்தொழில்மிகுந்த, வைரவாள் - வச்சிரவாளை, வாளிற்றுக்கியும்-வாளினுலெறிந்தும், கறங்கென-காற்றாடிபோல், காளைவீரர் அரசர்கள், திரிந்தனர்- திரிந்தார்கள், எ - று.

இவ்விரண்டுபாட்டால் ஒருவருக்கொருவ ருயர்வுதாழ்வு சொல்லாமையால், வாட்போரில் இவ்விருவரு மொத்தனரென்பதாம.

(க-து.) அரசர்கள் வாளினுற்போர்செய்தார்கள் - எ - ம். 56

கோட்புலிப்போத்தென நிடதர்கோமகன்
ஞாட்பினுட்காம்பிலிக் கிறைவனுமற
வாட்படையெறிந்துயிர் வவ்வினனவன்
சேட்புலத்தரம்பையர் தெரியல்சூடினன்.

(இ-ள்.) கோள்-கொலைசெய்கின்ற, புலிப்போத்தென-ஆண்புலிபோல், நிடதர்கோமகன்-நளனானவன், ஞாட்பினுள்-யுத்தத்தின்கண், காம்பிலிக்கிறைவன்-காம்பிலிநாட்டுக்கரசனுடைய, நாமற-நாமமறும்படி, வாட்படை-வாளாயுதத்தால், எறிந்து-வீசி, உயிர்-ஆவியை, வவ்வினன்-கொண்டான், அவன் - அவ்வரசன், சேட்புலதது-விண்ணுலகத்தின்கண், அரம்பையர்-தெய்வமங்கையரால், தெரியல்-மாலை, சூடினன்-சூடப்பட்டான், எ-று.

தோல்வியின்றி வாட்போரில் எதிர்த்திறந்தவனாதலால், காம்பிலிதேயத்தரசனுக்கு அரம்பையர்மாலைசூட்டினர் என்றார். என்றால் 'வெற்றிபெற்றிறந்தோன் வீரசொற்கம்புகும்'' என்பது விதியாதலால்,சுவர்க்கஞ் சேர்ந்தானென்பது கருத்து,

(க-து.) நளன் காம்பிலிதேயத்து வேந்தனைக்கொன்றான்-எ-ம். 57

அழைகழல்வேந்தர்மே லலங்கல் வேலினு
னெறுழ்வலிக்களிற்றிடைத் தாவுமெண்ணிலா
நொறில்பரிதேர்மிசைப் பாயுநோன்கெழு
சிறையொடுந்திரிவதோர் சீயமென்னவே.

[இது முதல் இரண்டுபாட்டுகளால் நளனது வெற்றிச்செய்கை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) அலங்கல் - வெற்றிமாலைதரித்த, வேலினன்-வேற்படையையுடைய நளனானவன், நோன்கெழு - பெருமைபொருந்திய, சிறையொடுந்திரிவது-சிறகினுடன் திரிவதாகிய, ஓர்-ஒரு, சீயமென்ன-சிங்கம்போல், அழை-ஒலிக்கின்ற, கழல்-வீரக்கழலையணிந்த, வேந்தர்மேல்-அரசர்கள்மேலும், எறுழ்வலி-மிகுந்தவலிமையையுடைய, களிற்றிடை-யானையின்மேலும், தாவும்-தாவுவான், எண்ணிலா-அளவில்லாத, நொறில்-ஒலியையுடைய, பரி-குதிரைமேலும், தேர்மிசை-தேரின்மேலும், பாயும்-பாய்வான், எ-று.

நளன்செய்தபோரைத் தனித்தனி சொல்லின்முடியாதென்பார். "தொகுத்துச்சுட்டல்'' என்னு முத்தியால், வேந்தர்மேல் களிற்றிடை பரியிடை தேரிடை இவ்வாறெதிர்த்து வென்றன னென்றார்.

(க-து.) நளன் அரசர்கள்மேலும்-யானைகள்மேலும்-குதிரைகள்மேலும்-தேர்களின்மேலும் பாய்வான் எ-ம். 58

இன்னணங்கொடுஞ்சமர் முருக்கியேற்றிகன்
மன்னவர்புறக்கொடை கண்டுமாலைதாழ்
கொன்னவில்குருதிவேற் குவவுத்தோளினன்
சென்னிவான்றடவுபொற் றேரினேறினன்.

(இ-ள்.) இன்னணம்-இந்தப்பிரகாரம், கொடுஞ்சமர்-கொடியயுத்தத்தில், முருக்கி-கொன்று, ஏற்று-எதிர்த்து, இகல்-பகைக்கின்ற, மன்னவர் - அரசர்கள், புறக்கொடைகண்டு - முதுகுகொடுத்தோடச்செய்து, மாலைதாழ்-மாலைதாழ்கின்ற, கொன்னவில்-கொல்லுதலைச்சொல்லுகின்ற, குருதி-உதிரந்தோய்ந்த, வேல்-வேற்படையையுடைய, குவவுத்தோளினன்-திரட்சிபொருந்திய தோள்களையுடையநளனென்பவன், சென்னி-தலைபினால், வான்-ஆகாயத்தை, தடவு-தடவுகின்ற, பொற் றேரின்-அழகியதேரின்மேல், ஏறினன்-ஏறினன், எ-று.

கொல்லுதலைத் தெரிந்தவர் வாயினாற்சொல்லாது செல்கையாற் சொல்லுதல்போல், வேற்படை கொலைசெய்தலால், சொல்லுதலில்-கொன்னவில் குருதிவேல் என்றார்.

(க-து.) நளன்வெற்றிகொண்டு தேர்மேலேறினன்-எ-ம். 59

கோச்சகக்கலிப்பா.

புலத்தலுமடனல்லார் புலவிதீர்தரச்சூட்டு
மலத்தகமலர்க்குஞ்சி யழிகுருதிப்புனலலைப்ப
மலைத்தடந்திணிதோளார் வடிக்கணைமெய்ற்போர்ப்பக்
கொலைத்தலைமுண்மாப்போற் கொடுஞ்சமத்திற்கிடந்தனரே,

[இதுமுதல் ஆறுபாட்டுகளால் படுகளச சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மடநல்லார்-மாதர்கள், புலத்தலும்-ஊடியவளவில், புலவி-அவ்வூடல், தீர்தர-நீங்கும்படி, சூட்டும்-அணிவிக்கும், அலத்தகம் - அவர்பாதங்களினூட்டப்பெற்றசெம்பஞ்சுபடிந்த, மலர்-பூவையணிந்த, குஞ்சி-குடுமியை, அழி-அழிகின்ற. குருதிப்புனல்-உதிரநீரானது, அலைப்ப-அலைக்க, மலை-மலைபோல், தடம்-பருத்த, திணி-வலிமைபொருந்திய, தோளார்-தோளையுடையவரசர்கள், வடிக்கணை-கூரியபாணங்கள், மெயிற்போர்ப்ப - தேகத்திலேமூட, கொலைத் தலை-கொல்லுகின்றதலையையுடைய, முண்மாப்போல்-முள்ளம்பன்றிபோல், கொடுஞ்சமயத்தில்-கொடியயுத்தகளத்தில், கிடந்தனர்-கிடந்தனர், எ-று.

மாதர்புலவியில் ஆடவரைத்தாமுதைத்தலும் அவரைஆடவர்பணிதலுமாகியஇரண்டுமுண்டு. அது-“தலைவியுயர்வுககிழவோன் பணிவு, நினையுங்காலைப் புலவியுளுரிய” இதனாலறிக. அச்செயல்அப்போது அவர்க்குண்டாகும்வேட்கைக்கீடாய்நிற்குமென்க. தேகங்களில்அம்புகள்தைத்திருத்தல் முள்ளம்பன்றி முட்களைச்சிலிர்த்தல்போன் றிருத்தலால், அதற்கதை யுவமையாக்கினர்.

(க-து.) அரசர்கள் மெய்யிற்பட்டகணையோடு முள்ளம்பன்றிபோற்போர்க்களத்திற்கிடந்தார்கள்-எ-ம். ௬௦

இகன்மிகுதிறல்வேந்த ரேதியாற்களப்படுத்த
புகர்முகக்கடாயானை பொழிகுருதிச்செழுஞ்சேற்றிற்
றிகிரியகொடிஞ்சிநெடுந் தேருழக்கத்துகளெழுந்தவ்
வகலிருவிசும்பு போர்த் தந்திவான்போன்றதுவே.

(இ-ள்.) இகன்மிகு - பகைமைமிகுந்த, திறல் - வலிமைபொருந்திய, வேந்தர்-அரசர்கள், ஏதியால் - வாட்படையால், களப்படுத்த - யுத்தகளத்திற் கொன்ற, புகர்முகக்கடாயானை-புள்ளிபெற்றமுகத்தையு மதத்தையுமுடைய யானைகள், பொழி-ஊற்றிய, குருதிச் செழுஞ்சேற்றில்-செழுமைபொருந்திய உதிர்ச்சேற்றில், திகிரிய-உருளைகளையுடையனவும், கொடிஞ்சி-மேன்மொட்டையுடையனவுமாகிய, நெடுந்தேர்-நெடியதேர்கள், உழக்க-கலக்க, துகள்-தூளிகள், எழுந்து-எழும்பி, அவ்வகலிருவிசும்பு-அந்தஅகலமுள்ளபெரிய ஆகாயத்தை, போர்த்து-மூடிக்கொண்டு, அந்திவான்-செவ்வானத்தை, போன்றது-ஒத்தது, எ-று.

குருதிச்சேறாயினும் அனேகமுறை தேருளைகளோடுதலாற்புழுதியாயிற்றென்க. அப்புழுதிமூடுதலால் ஆகாயம் செவ்வானம்போன்றதென்றார். [இது உவமையணி.]

(க-து.) போர்க்களம் உதிரத்தாற் செவ்வானத்தை யொத்திருந்தது.

ஒளிகிளர்மணியோடை சிதைந் தொழியவுடன்றபோர்க்
களிசினமால்யானைக் கதிர்மருப்புமிழ்ந்ததீ
முளிதடஞ்சினைமேயு முருங்கெரியெனப்பற்றி
விளிதருவயவருடல் வெந்தொழியப்பறந்ததே.

(இ-ள்.) ஒளிகிளர்-பிரகாசமிகுந்த, மணியோடை-அழகியமுகபடமானது, சிதைந்து-கெட்டு, ஒழிய-நீங்க, உடன்ற-வெகுண்ட, போர்-யுத்தத்தில், களி-செருக்கையும், சினம்-கோபத்தையுமுடைய, மால்-பெரிய, யானை-யானைகளுடைய, கதிர்-பிரகாசம்பொருந்திய, மருப்பு-தந்தங்கள், உமிழ்ந்த-சொரிந்த, தீ-நெருப்பானது, முளி-காய்ந்த, தடம்-பருத்த, சினை-சினைகளை, மேயும்-தகிக்கின்ற, முருங்கெரியென- அழியுந்தீயைப்போல, பற்றி-பற்றிக்கொண்டு, விளிதரு-இறந்த, வயவருடல் - படைவீரருடையதேகங்கள், வெந்தொழிய-வெந்துபோகும்படி, பரந்தது-பரவியது, எ-று.

*[அவர்களுடலைத்தகனஞ்செய்தற்குவேறுதீ வேண்டுவதின்றாயிற்றென்க.]

(க-து.) யுத்தகளத்தில் யானைக்கொம்பிற்பிறந்த தீயானது அரசர்களுடல் வெந்தெரியும்படிபரவியது - எ - ம். 62

பரிதிவடிவாள்பிடித்துப் பல்லினலிதழதுக்கித்
திருகுசினந்தலைக்கொளீஇச் செங்கண்கடீயுமிழக்
குருதிபாயடுகளத்திற் குற்றுயிரிற்கிடந்தார்க்கண்
டருகணையக்கொடுங்கூற்று மஞ்சிநின்றலறுமால்.

(இ-ள்.) பரிதி - சூரியன்போன்ற, வடி-கூரிய, வாள்-வாட்படையை, பிடித்து - கையிற்பற்றி, பல்லினல் - பற்களினல், இதழதுக்கி - உதட்டைக் கடித்து, திருகு-மாறுபட்ட, சினம் - கோபம், தலைக்கொளீஇ - அதிகரித்து, செங்கண்கள்-சிவந்தகண்களானவை, தீயுமிழ - நெருப்பைச்சொரிய, குருதி பாய்-உதிரம்பரவிய, அடுகளத்தில்-கொலைக்களத்தில், குற்றுயிரில்-குற்றுயிரு டன், கிடந்தார்க்கண்டு-கிடந்தவர்களைக்கண்டு, அருகணைய-அவர்களருகேவரு வதற்கு, கொடுங்கூற்றும்-கொடியயமனும், அஞ்சிநின்று - அச்சமுற்றுநின்று, அலறும்-அலறுவான், எ-று. ஆல்-அசைநிலை.

குற்றுயிரிற் கிடக்கும்போது யமன் அவரைப்பற்றுதற்கு அலறுவானெ னில், போரிலெதிர்க்கும்போது அவரைக்கண்டவர் அஞ்சுதல்சொல்லவேண்டு வதில்லையாயிற்று. " கனத்திரண்மடியக்காணிலச்சம்மே" இவ்விதியால்- இறந்தவரைக்காண்டலே அச்சம்: இறவாதுவீரக்குறியுற்றவனைக்காணில்யார் தானஞ்சார்கள்.

(க-து.) வாளைக்கையிற்பிடித்துப் பல்லாலிதழைக்கடித்துக் கோபங் கொண்டு கண்ணிலேநெருப்புப்பொறிபறக்கக் குற்றுயிரோடு போர்க்களத்தி லிருக்கும் வீரரைக்கண்டு யமனவரருகிற்போகப் பயப்படுவான் -எ-ம். 63

சிலைபொருதிணிதடந்தோட் டேர்வேந்தர்செருமலைந்து
கொலைபுரியடுகளத்திற் குடர்பின்னிக்கிடந்ததனைப்
புலவுநாறுடற்றசைவேட் டுண்ணவரும்புள்ளினங்கள்
வலைவளைந்ததெனவெண்ணி வானினிடைச்சுழலுமால்.

(இ-ள்.) சிலைபொரு-மலையையொத்த, திணி-வலிமைபொருந்திய, தடந் தோள் - பருத்ததோள்களையுடைய, தேர்வேந்தர் - தேரையுடையவரசர்கள், செருமலைந்து-போர்செய்து, கொலைபுரி-கொலைசெய்த, அடுகளத்தில்-யுத்த களத்தில், குடர்-குடர்கள், பின்னிக்கிடந்ததனை-ஒன்றோடொன்றுபின்னிக் கிடந்ததை, புலவுநாறு-புலானாற்றநாறுகின்ற, உடற்றசை-தேகத்தின்மாமி சத்தை, வேட்டு-விரும்பி, உண்ணவரும் - உண்பதற்குவந்த, புள்ளினங்கள்- பறவைக்கூட்டங்களானவை, வலைவளைந்ததென-வலையானதுவளைந்ததென்று, எண்ணி-நினைந்து, வானினிடை-ஆகாயத்தின்கண், சுழலும்-வட்டமிடும், எ-று ஆல்-அசை.

தசைவேட்கையினும் உயிரின்வேட்கை பெரிதாதலாலும், தசையை விட்டுநீங்கற்கு மனமெழாமையாலும், வானின்கணுள்ள புள்ளினங்கட்கு அச் செயல் கூறினர்.

(க-து.) ஊனுண்ணவந்தபறவைகள் குடல்கள் பின்னிக்கிடக்கின்றன வற்றைவலையென்றெண்ணி ஆகாயத்தில் வட்டமிடும் - எ - ம். 64

சீற்றமிகுங்களியானைத் திறல்கெழுபோர்வயவேந்தர்
காற்றாளக்குடைதுணிந்து களத்தினிடைக்கிடப்பனக
ளேற்றெருமையுகைத்தடரு மிருணிறத்தவெரிகுஞ்சிக்
கூற்றமுயிர்ப்பலியேற்குங் கொள்கலம்போன்றிருந்தனவே.

(இ-ள்.) சீற்றமிகும்-கோபமிகுந்த, களியானை-செருக்கையுடைய யானைகள்போல், திறல்கெழு - வலிமைமிக்க, போர் - போர்செய்த, வயவேந்தர்-வெற்றிமிகுந்தவீரர்களுடைய, கால்-கால்பொருந்திய, தாளக்குடை-முத்துக்குடைகளானவை, துணிந்து - துண்டுபட்டு, களத்தினிடை - யுத்தகளத்தின் கண், கிடப்பனகள் - இருப்பனவாகி, ஏற்றெருமை - எருமைப்போத்தை, உகைத்து-செலுத்தி, அடரும்-நெருங்குகின்ற, இருணிறத்த-இருளையொத்த நிறத்தையுடைய, எரிகுஞ்சி-எரிபோன்றசிகையையுள்ள, கூற்றம்-இயமனுனவன், உயிர்ப்பலியேற்கும் - உயிர்ப்பிச்சையேற்கின்ற, கொள்கலம்போன்று-பாத்திரத்தையொத்து, இருந்தன-இருந்தன, எ-று. ஏகாரம்-ஈற்றசை.

கள்-இங்கே இசைநிறைத்தற்பொருட்டு விகுதிமேல்விகுதியாய் வந்தது, [காம்புதுணிந்து கிடந்தகுடையைப் பலியேற்கும்பாத்திரமாகக் குறித்தலால், தற்குறிப்பணியாம்.]

(க-து.) அரசர்கள் குடைகளானவை யமனுயிர்ப்பிச்சையேற்கும் பாத்திரங்கள்போலிருந்தன எ-ம். 65

## கலிவிருத்தம்

இன்னகளத்தினி ரிந்தவரல்லாற்
றுன்னினராவி துறத்தலும்வெங்கூற்
றன்னவன்வாளம ராற்றலுநோக்காப்
பொன்னகரத்திறை புந்தியினோர்ந்தான்.

[இதுமுதல் இரண்டுபாட்டுகளால் இந்திரனெண்ணுதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) இன்னகளத்தில்-இப்படிப்பட்ட யுத்தகளத்தில், இரிந்தவரல்லால்-ஓடிப்போனவரல்லாமல், துன்னினர்-எதிர்த்தவர்கள், ஆவிதுறத்தலும்-உயிர்விடுதலையும், வெங்கூற்றன்னவன்-வெவ்விய யமனையொத்த நளனுனவன், வாளமர்-வாட்போரை, ஆற்றலும்-செய்தலையும், நோக்கா - பார்த்து, பொன்னகரத்திறை-இந்திரனுனவன், புந்தியின்-தன்புத்தியில், ஓர்ந்தான்-சிந்தித்தான், எ-று.

(க-து.) ஓடினவர்பிழைத்தலையும், எதிர்த்தவரிறத்தலையும், நளன்வாளின் வல்லமையையும் இந்திரன்கண்டு ஆலோசித்தான்-எ-ம். 66



8 தமயந்தி சுயம்வரம் 343-வது பக்கம்.

மன்றன்மலர்த்தொடை மன்னனையெய்தி
வென்றிகொள்போரை விலக்கிலமாயிற்
றுன்றுதிரைக்கடல் சூழுலகெல்லா
மின்றுமுடித்திடு மென்னநினைந்தே.

(இ-ள்.) மன்றல்-வாசனைபொருந்திய, மலர்த்தொடை - மலர்மாலையை யணிந்த, மன்னனை-நளனை, எய்தி-அடைந்து, வெற்றிகொள் - வெற்றியைக் கொண்ட, போரை-யுத்தத்தை, விலக்கிலமாயின்-விலக்காமற்போவோமாகில், துன்று-நெருங்கிய, திரை-அலையையுடைய, கடல்சூழ்-கடலாற் சூழப்பட்ட, உலகெல்லாம் - பூவுலகத்திலுள்ளயாவரையும், இன்று - இன்று, முடித்திடு மென்ன - கொல்லுவானென்று. நினைந்து - (இந்திரன் முதலியநால்வரும்) கருதி, எ-று.

இச்செய்யுளு மேற்செய்யுளுங்குளகமாகலின், இதில் நினைந்தென்னும் வினையெச்சம்மேற்செய்யுளில் மேவியவென்னும் பெயரெச்ச வினைகொண் டது. இந்திரனுக்கு இரக்கமன்றியும் போரைத்தான் மூட்டினவனாகையால், அந்நினைப்பவனுக்குண்டாயதென்க.

(க-து.) இந்திரன் முதலியநால்வரும் நளனிடத்துச்சென்று போரை விலக்காவிடுவோமாகில் உலகத்தை இன்றேகொன்றிடுவானென்று-எ-ம். 67

மழகளிறன்னவன் மாணுருநீங்கி
விழைவொடுதம்முரு மேவியவிண்ணோ
ரழகுறுகாளைய ரவ்வுருவிட்டோர்
கிழவுருவெய்திய கேண்மையரொத்தார்.

[இதனால் இந்திரன்முதலிய நால்வருந் தம்முருக்கொளல் சொல்லப்படு கின்றது.]

(இ-ள்.) மழகளிறன்னவன்-இளங்களிற்றையொத்த நளனது, மாண்- பெருமைபொருந்திய, உரு-வடிவத்தை, நீங்கி-விட்டுநீங்கி, விழைவொடு-விருப் போடு, தம்முருமேவிய-தங்கள்வடிவைப் பொருந்திய, விண்ணோர்-தேவர்கள், அழகுறு-அழகின்மிக்க, காளையர்-காளைபருவத்தையுடையவர், அவ்வுருவிட்டு, அக்காளைவடிவத்தைவிட்டு, ஓர்கிழவுருவெய்திய -ஒருகிழவடிவத்தை யடைந்த கேண்மையர்-தன்மையராதலை, ஒத்தார்-ஒத்தனர், எ-று.

(க-து.) நளன் வடிவத்தைவிட்டுநீங்கித் தங்கள் வடிவாகியதேவர்கள்நள னழகுக்கு முன்னே வாலிபர் விருத்தரானாற் போலானார்கள்-எ-ம். 68

முன்னுருமேவிய மொய்கழல்விண்ணோர்
முன்னனையெய்துபுவாய்மையினானு

துன்னலரைத்தெறுதோள்வலியானு
நின்னைநிலத்திடை நேர்பவர்யாரே.

[இதுமுதல் இரண்டுபாட்டுகளால் நளன்போரைவிலக்குதல் சொல்லப் படுகின்றது.

(இ-ள்.) முன்னுருமேவிய-பழையவடிவினைப்பெற்ற, மொய்-நெருங்கிய, கழல்-வீரக்கழலையணிந்த, விண்ணோர்-தேவர்கள், மன்னனையெய்துபு-நளனை யடுத்து, வாய்மையினானும்-சத்தியத்தினாலும், துன்னலரை - சத்துருக்களை, தெறு-கொல்லுகின்ற, தோள்வலியானும்-புசபலத்தினாலும், நின்னை-உன்னை நேர்பவர்-ஒப்பவர், நிலத்திடை-பூமியில், யார்-எவர் (ஒருவருமில்லை), எ-று, ஏகாரம்-ஈற்றசைக்கண்வந்தது.

யாவரும் புகழ்ச்சியில் வயப்படுதல்போல் மற்றொன்றினும் வயப்படா ரென்பது தெரிந்துதேவர்கள், நளனைநோக்கி அவ்வாறு கூறினாரென்க. [உவ மேயமாகியநளனை உவமானமாகக்கூறி அவனுக்கு மற்றவரசரோடொப்பானமை கூறலால், எதிர்நிலையணியாம.

(க-து.) தேவர்கள் நளனை உண்மையினாலும், வலுமையினாலும், உனக்கு நிகரானவரிவ்வுலகத்தி லில்லையென்றார்கள்-எ-ம். 69

துன்றுகளத்தெதிர் துன்னலர்யாரும்
பொன்றமுருக்கியபோர்த்தொழினீங்கி
வென்றிகொள்வேலவமின்னனையாடன்
மன்றன்முடித்தனை வாழியவென்றார்.

(இ-ள்.) வெற்றிகொள்-வெற்றியைக்கொண்ட, வேலவ - வேற்படையை யுடைய நளனே, துன்று-நெருங்கிய, களத்தெதிர் - யுத்தகளத்திலெதிர்த்த, துன்னலர்யாரும்-சத்துருக்களெல்லாம், பொன்ற-இறக்கும்படி; முருக்கிய-கொன்ற, போர்த்தொழினீங்கி - போர்த்தொழிலைவிட்டு, மின்னனையாடன்-மின்னலையொத்ததமயந்தியினது, மன்றல்-விவாகத்தை, முடித்தனை-செய்து கொண்டவனாகி, வாழியவென்றார் - (நீ) வாழக்கடவை யென்றார்கள், எ-று.

தமயந்தியுடன் நெடுங்கால மிருப்பாயாகவென்பார், வாழியவென்றனர்.

(க-து.) தேவர்கள் போரைவிட்டு விவாகமுடித்துக் கொண்டு தமயந்தி யோடு நீடூழிவாழ்கவென்று நளனைவாழ்த்தினார்கள்-எ-ம். 70

விண்ணவரின்னணம் வேண்டினர்கூறப்
புண்ணுறுவெவ்வ புலால்கமழ்வைவேல
மண்ணலமர்த்தொழி லாற்றிலனாகிப்
பண்ணுறுதேரி னிழிந்துபணிந்தான்.

[இதனால் இந்திரன்முதலியநால்வரையும் நளன்வணங்குதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) விண்ணவர்-தேவர்கள், இன்னணம்-இந்தப்பிரகாரம், வேண்டினர்-வேண்டினவராகி, கூற-சொல்ல, புண்ணுறு-மாமிசந்தங்கிய, வெய்ய-வெவ்விய, புலால்-புலானாற்றம், கமழ்-கமழ்கின்ற, வைவேல்-கூரியவேற்படையையுடைய, அண்ணல்-நளனானவன், அமர்தொழில்-யுத்தத்தை, ஆற்றிலனாகி செய்யாதவனாகி, பண்ணமை-அலங்கரிப்பமைந்த, தேரினிழிந்து-தேரினின்றுமிறங்கி, பணிந்தான்-(அந்நால்வரையும்) வணங்கினன், எ-று.

நளன் போர்த்தொழிலில் முடுகினனாயினும் தனதுபேரறைதோன்ற அவரைவணங்கினனென்க.

(க-து.) தேவர்களிப்படிவேண்ட நளன்போர்செய்யாதவனாய்த்தேரைவிட்டிறங்கி அவர்களைப்பணிந்தான் 71

கருணையினெய்திய காளையைநோக்கி
யருமகமெவ்வுழி யாற்றினுமாங்க
ணுருவொடுவந்தவியுண்குவமென்று
மருவருநல்வரம் வாசவனீந்தான்.

[இதுமுதல் ஐந்துபாட்டுகளால் தேவர்கள் வரங்கொடுத்தல்சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) வாசவன்-இந்திரனானவன், கருணையின்-அருளினால், எய்திய-அடைந்த, காளையை-நளனை, நோக்கி-பார்த்து, அருமகம்-அரியயாகத்தை, எவ்வுழி-எவ்விடத்தில், ஆற்றினும்-நீசெய்தபோதிலும், ஆங்கண்-அவ்விடத்தில், உருவொடு-உருவுடனே, வந்து-அடைந்து, அவி- அவிர்ப்பாகத்தை, உண்குவமென்று-யாமுண்பேமென்று, மருவரும்-அடைதற்கரிய, நல்வரம்-நல்லவரத்தை, ஈந்தான்-கொடுத்தனன், எ-று.

உருவுடனே தேவர்கள்வந்துயாகத்தில்அவிர்ப்பாகங்கொள்வது அருமையென்பது தோன்ற, மருவருநல்வரமென்றார்.

(க-து) இந்திரன் நளனைப்பார்த்து நீயாகஞ்செய்தால் யாம்வந்து அவிர்ப்பாகமுண்பேமென்று வரங்கொடுத்தான்-எ-ம். 72

மிடல்கெழுமேழகமேற்கொளுமேலோ
னுடைதிரைவேலையினின்னமுதொப்ப
மடிதலில்வெங்கனலின்றியும்வாளா
வடிசிலந்தொழில்விஞ்சையளித்தான்.

(இ-ள்:) மிடல்கெழு-வலிமைபொருந்திய, மேழகமேற்கொளும்-ஆட்டுக்கடாவின் மேலேறும், மேலோன் - அக்கினிதேவனானவன், உடைதி

வேலையின் - உடைகின்ற அலைகளையுடையகடலிற்பிறந்த, இன்னமுதொப்ப-இனியஅமிர்தத்தையொப்ப, மடிதலின்-கெடாத, வெங்கனலின்றியும்-வெவ்வியதீயில்லாமலும், வாளா-சும்மா, அடிசில்-உணவை, அடுந்தொழில்-சமைக்குந்தொழிலாகிய, விஞ்சை - வித்தையை, அளித்தான் - வரமாகக்கொடுத்தான் எ-று.

அக்கினிதேவன் இவ்வரங்கொடுத்தலால் உலகத்தில் இப்பொழுதும் நளபாகம்போலென்று உவமைசொல்லும்படி விளங்கிற்றென்க.

(கு-து.) அக்கினிபகவான் நளனுக்குத் தீயில்லாமற்சமையல்செய்யும்வித்தையைக்கற்பித்தான் எ-ம். 73

அல்லலுழந்தருரெய்தினுநெஞ்சி
னல்லறமெய்தவுநண்ணியஞாட்பில்
வெல்படைவேண்டுவவெய்தவும்வென்றிக்
கொல்சினவெம்பகடூர்திகொடுத்தான்.

(இ-ள்.) வென்றி-வெற்றியையும், கொல்சினம்-கொல்லாநின்ற கோபத்தையுமுடைய, வெம்பகடூர்தி-வெவ்வியஎருமைக்கடாவாகனத்தையுடையஇயமனானவன், அல்லலுழந்து-வருத்தப்பட்டு, அருரெய்தினும் - துன்பமடையினும், நெஞ்சில்-மனத்தின்கண், நல்லறமெய்தவும்-நல்லதருமமடையவும், நண்ணிய-பொருந்திய, ஞாட்பில்-யுத்தத்தில், வெல்படை-வெல்லத்தக்க ஆயுதங்கள், வேண்டுவ-வேண்டுவனவற்றை, எய்தவும் - அடையவும், கொடுத்தான்-நளனுக்கு வரங்கொடுத்தான் எ-று.

காரணம் காரியத்துள்ளதென்பது பிரசித்தப்படும்படி யமன் தருமனென்னும் பெயர்க்கேற்ப, நளன் அல்லற்படும்போதும்நல்லறமெய்தவும்; கொலைத்தொழிற்கேற்ப, யுத்தஞ்செய்யும்போதும் வெல்படைகளெய்தவும்; வரமாகக் கொடுத்தனனென்றார்.

(கு-து.) யமன் நளனுக்குச் சத்துருக்களைவெல்லு மாயுதங்களைக்கொடுத்தான் - எ - ம். 74

தார்புலராது தயங்கவும்வேண்டி
னார்கலிவற்றவமைக்கவுமல்லா
னீரறுபாலையி னெஞ்சினினைப்பின்
வார்புனலெய்தவும் வருணனளித்தான்.

(இ-ள்.) வருணன்-வருணனானவன், தார்-மாலைகள், புலராது-வாடாமல், தயங்கவும்-விளங்கவும், வேண்டின் - வேண்டுமானால், ஆர்கலி - சமுத்திரமானது, வற்றவமைக்கவும்-வற்றும்படிசெய்யவும், அல்லால்-அவையன்றியும், நீரறுபாலையின் - நீரில்லாத பாலைநிலத்தில், நெஞ்சினினைப்பின்-நெஞ்சிலே நினைத்தால், வார்-நெடிய, புனலெய்தவும்-நீருண்டாகவும், அளித்தான்-நளனுக்குவரங்கொடுத்தான், எ-று.

இதனால் மழையில்லாது விடினும் இவன் தேயத்திற்கு நீராற்குறை வில்லையாம்.

(க-து.) வருணராசன் நளனுக்கு மாலைவாடாதிருக்கவும், கடல்வற்றச் செய்யவும், நீரில்லா விடத்தில் நீருண்டாகச் செய்யவும் வரங்கொடுத்தான்.

ஆண்டகைக்கின்ன வளித்தருவைக்கு
மாண்டகுகற்பை வருத்துவமென்னாத்
தீண்டினராவி சிதைந்திடுமாறும்
வேண்டுருவெய்தவும் விண்ணவரீந்தார்.

(இ-ள்.) விண்ணவர்-இந்திரன்முதலிய தேவர்கள், ஆண்டகைக்கு-நள னுக்கு, இன்னவளித்து-இவ்வரங்களைக்கொடுத்து, அரிவைக்கும் - தமயந்திக் கும், மாண்டகு-மாட்சிமைபொருந்திய, கற்பை-கற்பினை, வருத்துவமென்னா- வருத்துவோமென்று, தீண்டினர்-தொட்டவர்களுடைய, ஆவி-உயிர், சிதைந் திடுமாறும்-கெடுமாறும், வேண்டுருவெய்தவும்-வேண்டிய வடிவங்களையெடுக்க வும், ஈந்தார்-வரங்கொடுத்தனர் எ-று.

அரிவைக்குமென்பதில் உம்மை-எச்ச உம்மையெனக்கொள்க, தாங்கள் பலமுயற்சிசெய்தும் சம்மதியாமல் மனிதனாகிய நளன்மேல்வைத்த கருத்தின் படி சாதித்தவளாதலால், அச்செயலில் மிக்கமகிழ்வுடையவரா யவ்வரந் தந் தனரென்க.

(க-து.) இந்திரன் முதலிய தேவர்கள் நளனுக்குந் தமயந்திக்கும் வேண் டிய உருவம்பெறவும், தமயந்தி கற்பழியத்தீண்டினவர் உயிர்விடவும் வரங் கொடுத்தார்கள் எ-ம். 76

கண்ணகன்ஞால மளித்தகழற்கா
லண்ணலையேந்தி யருந்ததிமானும்
பெண்ணமுதத்தை வியந்துபெருஞ்சீர்
விண்ணவர்தம்பதி மேவினரன்றே.

[இதனால் தேவர்கள் மகிழ்வோடு தத்தம் பதியடைதல் சொல்லப்படுகின் றது.]

(இ-ள்.) கண்ணகல்-இடமகன்ற, ஞாலம்-பூமியை, அளித்த-இரக்ஷித்த- கழற்கால், வீரக்கழலையணிந்த காலையுடைய, அண்ணலை-நளனை, ஏத்தி-துதி த்து, அருந்ததிமானும்-அருந்ததியையொத்த, பெண்ணமுதத்தை-தமயந்தியை, வியந்து-அதிசயித்து, பெருஞ்சீர்-மிகுந்தசிறப்பையுடைய, விண்ணவர்-தேவர் கள், தம்பதி-தம்முடையநகரங்களை, மேவினர்-அடைந்தனர், எ-று. அன்று- ஏ-அசைகள்.

குற்றமில்லாததன்மே லெதிர்க்கவந்த மற்றையரசரைவிடுத்தலால், ஞால மளித்த அண்ணலென்றார். அருந்ததிமானுமென்பது-பெரும்பாலுங் கற்புக்

கெனக்கொள்க. பெண்ணமுதத்தை வியந்தென்பது-தமயந்தி நற்குண நற்செய்கையை என்க.

(க-து.) இந்திரன் முதலிய தேவர்கள் நளனைப்புகழ்ந்தும், தமயந்தியைக் கண்டதிசயித்தும், சுவர்க்கத்திற்குப் போனார்கள் எ-ம். 77

அங்கண்வானத் தமரருமாழியிற்
பொங்குதானை யரசரும்போயபின்
சிங்கவேறனை யான்றிகழ்மாமணி
தங்குபைம்பொ னிருக்கையிற்சார்ந்தனன்.

[இதனால் நளன் ஆதனத்தமைந்தமை சொல்லப்படுகின்றது]

(இ-ள்.) அங்கண் - அழகியவிடத்தையுடைய, வானத்து - தெய்வலோகத்திலிருந்துவந்த, அமரரும் - தேவரும், ஆழியில் - சமுத்திரம்போல் பொங்கு - மிகுந்த, தானை - சேனையையுடைய, அரசரும் - அரசர்களும், போயபின்-போனபின்பு, திகழ்-பிரகாசிக்கின்ற, மாமணி - மாணிக்கமணிகளிழைத்து, தங்கு-தங்கிய, பைம்பொன் - பசியபொன்னாற்செய்த, இருக்கையில்-ஓரிடத்தில், சிங்கவேறனையான் - சிங்கவேற்றையொத்த, நளனானவன், சார்ந்தனன்-சேர்ந்தனன், எ-று.

(க-து.) தேவர்களும் அரசர்களும் போனபின்பு நளன் நவமணிபீடத்திலிருந்தனன் எ-ம். 78

போர்புரிபடலம் முற்றிற்று.

# மணம்புரிபடலம்.



இப்படலத்தால் நளமகாராசன் தமயந்தியை விவாகஞ்செய்தல் சொல்லப்படுகின்றது.

கலிவிருத்தம்.

சாந்தமூழ்கு தடமுலைக்கோதையர்
காந்துபைம்பொற் கவரியிரட்டுற
வாய்ந்தசெவ்வி மணவினைமாடத்தின்
வேந்தர்சூழ்வர வீமன்வந்தெய்தினன்.

[இத்னால் வீமராஜன் செய்கை சொல்லப்படுகின்றது.]



௭ நளன் தன்னை யெதிர்த்த அரசரோடு போர்செய்து வெல்லுதல் 151-வது பக்கம்.

(இ-ள்.) சாந்தம்-சந்தனக்குழம்பினால், மூழ்கு-முழுகப்பெற்ற, தடமுலை பருத்தமுலையையுடைய கோதையர்-மாதர்கள், காந்து-பிரகாசிக்கின்ற, பைம் பொன் - பசியபொற்காம்பையுடைய, கவரி-சாமரைகளை, இரட்டுற - வீச, வாய்ந்த-பொருந்திய, செவ்வி-அழகிய, மணவினை-விவாகஞ்செய்யும், மாடத் தின்-உப்பரிகையில், வேந்தர்-அரசர்களனைவரும், சூழ்வர-சூழ்ந்துவராநிற்க, வீமன்-வீமராசன், வந்தெய்தினன்-வந்துசேர்ந்தான், எ-று.

பார்த்தவர்களுடையகண்களைக் கவர்ந்துகொள்ளும்படி கைபோயவரால் அணிசெய்தமாடமென்பதற்கு, வாய்ந்தசெவ்வி மணவினைமாடமெனப்பட்டது விவாகஞ்செய்வித்தற்குப் பிரதானமானவனாகையால், முன்னேவீமன்வரவு கூறினார்.

(க-து.) வீமராசன் விவாகமண்டபத்துக்குவந்தான் - எ - ம். 1

ஆற்றுவேள்வி யருந்தவர்சூழ்வரப்
போற்றுநான்மறைக் கோதமன்போர்கெழு
வேற்றடங்கண் விளங்கிழைமன்றலுக்
கேற்றயாவையுங் கொண்டுடனெய்தினன்.

[இதனால் கௌதமமுனிவன் செய்கை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கேள்வி-யாகங்களை, ஆற்று-செய்கின்ற, அருந்தவர், முனிவர் கள், சூழ்வர-சூழ்ந்துவர, நான்மறை-நாலுவேதங்களையும், போற்று-போற்று கின்ற, கோதமன்-கௌதமமுனிவன், போர்கெழு-போரின்மிக்க, வேற்றடங் கண்-வேல்போன்றவிசாலம்பொருந்திய கண்களையுடைய, விளங்கிழை-தம யந்தியினது, மன்றலுக்கு-விவாகத்துக்கு, ஏற்றயாவையும்-ஏற்றதிரவியமனைத் தையும், கொண்டு-வருவித்துக்கொண்டு, உடன்-அதனுடனே, எய்தினன்-வந் தான், எ-று.

கௌதமமுனி விவாகபத்ததிப்படி அக்கிரியைக்கு வேண்டிய மாவிலை- சமித்து-தருப்பை-முதலியவும் வரவழைத்துக்கொண்டு வந்தனனென்பதற்கு மன்றலுக் கேற்றயாவையுங் கொண்டுடனெய்தினன் என்றார்.

(க-து.) கௌதமரிஷி விவாகத்திற்கு வேண்டியவைகளைக் கொண்டுவந் தான் - எ-ம். 2

வேரியந்தொடை வீமனும்வேந்தருந்
தேருநான்மறைச் செல்வருமன்றலுக்
கோரையெய்தியதென்றுமையொற்றரா
லாரமார்பற் கறியவுணர்த்தினர்.

[இதனால் நளராஜனுக்கறிவித்தமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) வேரியந்தொடை - தேனொழுகுமலர்மாலையணிந்த, வீமனும்-வீமராசனும், வேந்தரும்-அரசர்களும், தேருநான்மறைச்செல்வரும்-நாலுவேதங்களையுமறிந்தபிராமணர்களும், மன்றலுக்கு-விவாகத்திற்கு, ஓரையெய்தியதென்று-முகூர்த்தகாலம்வந்ததென்று, உழை-அருகிலிருந்த, ஒற்றரால்-ஒற்றுவரால், ஆரமார்பற்கு-நளமஹாராசனுக்கு, அறிய-தெரியும்படி, உணர்த்தினர்-தெரிவித்தார்கள், எ-று.

விவாகக்கிரியைக்கு முன்பு நடக்கவேண்டிய சடங்குகளனைத்தையு முடிக்கவேண்டி, நளமகாராஜனைத் தூண்டுநினைப்பினோர் அவ்வாறுசெய்தன ரென்க.

(க-து.) வீமராசன் முதலானோர்முகூர்த்தலக்கினம் வந்ததென்று வேவுகாரராலே நளனுக்கறிவித்தார்கள். - எ-ம். 3

ஒற்றர்கூற வொளிர்முடி வேந்தனைக்
கற்றைவார்சடைக் காசிபனாதியோர்
சாற்றைநான்மறை நூல்வழித் தூமணிப்
பொற்றசும்பினிற் பூம்புனலாட்டினர்.

[இதனால் நளன்ஸ்நானஞ்செய்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) ஒற்றர்கூற-ஒற்றுவர்சொல்ல, (அவ்வளவில்) ஒளிர்முடி-விளங்குகின்ற மகுடத்தையுடைய, வேந்தனை-நளராசனை, கற்றை-மயிர்த்தொகுதியாகிய, வார்சடை - நெடியசடையையுடைய, காசிபனாதியோர்-காசிபன்முதலியமுனிவர்கள், சொற்றநான்மறைநூல்வழி-வேதநூலிற்சொல்லியவழிப்படி தூ - பரிசுத்தமாகிய, மணி - நவமணிகள்பதித்த, பொற்றசும்பினில்-பொற்றகுடத்திற்கொணர்ந்த, பூம்புனல்-பொலிவையுடையதீர்த்தங்களினால், ஆட்டினர்-ஸ்நானஞ்செய்வித்தார்கள், எ-று.

பூம்புனலெனலால், கங்கையாதிய தீர்த்தமெனக்கொள்க. நூல்வழிப்பூம் புனலாட்டினரெனலால், முப்பத்திரண்டு வகையுள்ள ஓமலிகையையும்-துவர்பத்தையும்-விரைஐந்தையும்-பூசிமுழுக்காட்டினரென்க. இதன்விரிவை சுயம்வரப்படலத்தில் "களிமகிழ்வெய்தி" என்னும்பாட்டுரையிற்காண்க.

(க-து.) காசிபர் முதலான முனிவர்கள்கொண்டுவந்தபுண்ணியதீர்த்தத்தினாலே நளனை ஸ்நானஞ் செய்வித்தார்கள் எ-ம். 4

புனிற்றிளம்பிறைக் கண்ணியன் பூங்கழன்
மனத்தினெண்ணி வழிபட்டுமாமறை
யனைத்தும்வல்ல வறநெறியந்தணர்
தினைத்துயாவையு கிரோடுநல்கினன்.

[இதனால் நளன் சிவபூசையினை முடித்துத் தானம்வழங்குதல் சொல்லப் படுகின்றது.]

(இ-ள்.) புனிற்றிளம்-மிகுந்தவிளமைபொருந்திய, பிறைக்கண்ணியன்-பாலசந்திரனாகியமாலையணிந்த பரமசிவனுடைய, பூநகழல்-அழகியபாதங்களை மனத்திணைணண்-இதயத்திலேதியானித்து, வழிபட்டு-பூசித்து, மாமறையினைத்தும்வல்ல-வேதமுழுதுந்தெரிந்த, அறநெறி - தருமமார்க்கத்தினின்ற, அந்தணர்-பிராமணர்கள், நினைத்தாவையும்-நினைத்தவையனைத்தையும், நீரொடு-நீருடனே, நல்கினன்-கொடுத்தனன் எ-று.

புனிற்றிளம் பிறைக்கண்ணியன் - வழிபடு கடவுளெனக்கொள்க. வழிபடல்-பூசித்தல். குறிப்பறிந்தீபவனாதலால், நினைத்தயாவையுமென்றார்.

(க-து.) நளன் பிராமணர்கள் நினைத்தயாவையுந் தானமாகக்கொடுத்தான் எ-ம். 5

அழகுவாய்ப்ப வினைபவரண்ணலைத்
தொழுதுநல்லருள் பூண்டுசுடர்விரி
மழவுநன்கதிர் மால்வரைச்சேர்ந்தெனச்
செழுமணிப்பொற் றிகழ்சூட்டினார்.

[இதுமுதல் ஆறுபாட்டுகளால் நளனுக்கு அலங்கரித்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) அழகுவாய்ப்ப-அழகுபொருந்த, வினைபவர்-ஆபரணந்தரிப்பவர்கள், அண்ணலைத்தொழுது-நளனைவணங்கி, நல்லருள்பூண்டு-அவனுடைய கிருபைபெற்று, சுடர்விரி-கிரணம்விரிகின்ற, மழவுநன்கதிர்-இளஞ்சூரியனானவன், மால்வரைசேர்ந்தென்-உதயகிரியில்வந்ததுபோல், செழுமணி-செழுமையுள்ளமணிகள்பதித்து, பொன் பொன்னாற்செய்து, திகழ் - பிரகாசிக்கின்ற, முடி-கிரீடத்தை, சூட்டினார்-தரித்தார்கள் எ-று.

அணிதலில் வல்லவரென்பதுதோன்ற, அழகுவாய்ப்பவினைபவரென்றும் நளனருள்பெற்றனென்பதற்கு, நல்லருள்பூண்டென்றும்; அரசர்க்குப்பிரதானமாகையால், முடிசூட்டியென்றுஞ்சொல்லினார். [கதிர்வரை சேர்ந்தெனவெனலால், உவமையணியாம்.]

(க-து.) நளனுக்கு முடிதரித்தார்கள் எ-ம். 6

புயங்களென்னும் பொலங்கிரிமீதுவான்
றயங்குசோதிக் கதிர்கடவிழ்ந்தெனக்
கயங்கொள்வள்ளைக் கவின்கவர்காதினில்
மயங்குழைபைம்பொன் மணிக்குழைசேர்த்தினர்.

(இ-ள்.) புயங்களென்னும்-தோள்களென்கிற, பொலங்கிரிமீது-மேருமலையின்மேல், வான்-ஆகாயத்தில், தயங்குகின்ற, சோதி-ஒளியையுடைய, கதிர்கள்-சூரியர்கள், தவழ்தென-தவழ்ந்தனபோல், கயங்கொள்-தடாகங்கொண்ட, வள்ளை-வள்ளையிலையினுடைய, கவின்-அழகை, கவர்-கொண்ட, காதனில்-செவிகளில், வயங்கு-பிரகாசிக்கின்ற, பைம்பொன் - பசியபொன்னாற்செய்த, மணிக்குழை-இரத்நகுண்டலங்களை, சேர்த்தினர் தரித்தார்கள் எ-று.

[நளன் புயங்களென்னும் பொலங்கிரியெனலால், உருவகவணியும்; கதிர்கள்தவழ்ந்தென மணிக்குழையெனலால், உவமையணியும்; வள்ளைக்கவின்கவர் காதெனலால், காட்சியணியும்; இம்மூன்றுங்கலந்துவருதலால்; கலவையணியுமாம்.]

(க-து.) நளன்செவியில் குண்டலமணிந்தார்கள் எ-ம். 7

வண்ணமேகலை யார்மனங்கூட்டினக்
கண்ணகன்று கவின்செயுமார்பிடை
யண்ணண்மால்வரை தாழுமருவிபோற்
றெண்ணிலாமணி யார்வடஞ்சேர்த்தினர்.

(இ-ள்.) வண்ணமேகலையார் - அழகியமேகலையைத்தரித்தமங்கையர்களுடைய, மனம்-நெஞ்சை, கூட்டுண-கொள்ளைகொள்ள, கண்ணகன்று-இடமகன்று, கவின்செயும்-அழகைச்செய்யும், மார்பிடை - மார்பின்கண்ணே, அண்ணல்-பெரிய, மால்வரை-மேருமலையில், தாழுமருவிபோல்-தாழ்ந்தொழுகுமருவிநீரைப்போல், தெள்-தெளிந்த, நிலா-ஒளியையுடைய, மணியார்வடம்-முத்துவடங்களை, சேர்த்தினர்-தரித்தார்கள் எ-று.

மாதர்க்குத் தழுவுதற்குரிய ஆடவர்மார்பிடத்தில் மிகுந்த மகிழ்ச்சியென்பது தோன்ற, மேகலையார் மனங்கூட்டுணு மார்பெனப்பட்டது. [மார்பிடைவரைதாழுமருவிபோல் வடஞ்சேர்த்தினரெனலால், உவமையணியாம்.]

(க-து.) நளன்மார்பில் முத்துமாலையை யணிந்தார்கள் எ-ம். 8

பூமலர்ச்செழுங் கற்பகபுல்லிய
காமர்வல்லி யெனக்கவின்செய்திடத்
தூமணிச்சுடர் தூங்குபொலந்தொடி
தேமலர்த்தொடை திண்புயஞ்சேர்த்தினர்.

(இ-ள்.) பூமலர்-பொலிவுபொருந்தியமலர்களையுடைய, செழும் - செழுமையுள்ள, கற்பகம்புல்லிய-கற்பகத்தைத்தழுவிய, காமர்வல்லியென-காமர்வல்லியென்னுங்கொடிபோல, கவின்செய்திட-அழகைச்செய்ய, தூ-பரிசுத்தமாகிய, மணிச்சுடர்-நவமணியின்கிரணங்கள், தூங்கு-தங்கிய, பொலந்தொடி-தோள்வளையை, தேமலர்த்தொடை - வாசனைபொருந்தியமலர்மாலையையணிந்த, திண்புயம்-திண்ணியதோள்களில், சேர்த்தினர்-தரித்தார்கள் எ-று.

[கற்பகம்புல்லிய காமவல்லிபோல் பொலந்தொடியைத்திண்புயஞ்சேர்த்திரைனலால், உவமையணியாம்.]

(க-து.) நளன்தோள்களில் வாகுவலயந் தரித்தார்கள் 9

துளங்குதெண்டிரை சூழ்கடல்வையக
மளந்துகோடற் கருவிலைப்பூந்துகில்
விளங்குபொன்னங் கிரியினைவெண்முகில்
வளைந்ததென்ன மருங்கினிற்சாத்தினர்.

(இ-ள்.) துளங்கு-அசைகின்ற, தெண்டிரைசூழ்கடல்-தெளிந்த அலைகளையுடையகடலாற் சூழப்பட்ட, வையகம்-பூமியை, அளந்துகோடற்கு-அளவிட்டுக் கொள்வதற்கு, அருவிலை-அரியவிலையையுடைய, பூந்துகில் - அழகிய ஆடையை, விளங்கு-பிரகாசிக்கின்ற, பொன்னங்கிரியினை - மேருமலையை, வெண்முகில்-வெள்ளைமேகமானது, வளைந்ததென்ன-சூழ்ந்தது போல், மருங்கினில்-அரையின்கண், சாத்தினர்-தரித்தார்கள் எ-று.

[பொன்னங்கிரியினை வெண்முகில் வளைந்ததென்னப் பூந்துகில் மருங்கினிற் சேர்த்தினரெனலால், உவமையணியாம்.]

(க-து.) நளனிடையி லாடைதரித்தார்கள் எ-ம். 10

பாந்தளேந்திய பார்பொதுநீக்கிய
வேந்தல்சேவடிப் போதினெழில்பெற
வேந்தர்பொன்முடி தேய்த்துவிளங்கிய
காந்துபைம்பொற் கழல்வீக்கினர்.

(இ-ள்.) பாந்தள்-ஆதிசேடனால், ஏந்திய-சுமக்கப்பட்ட, பார் - பூமியை, பொதுநீக்கிய-யாவருக்கும் பொதுவாதலைநீக்கிய, ஏந்தல்-நளனது, சேவடிப் போதின்-சிவந்தபாதமலர்களில், எழில்பெற-அழகுபெறும்படி, வேந்தர் - அரசர்களுடைய, பொன்முடி-சுவர்ணகிரீடங்களால், தேய்த்து - தேய்க்கப்பட்டு, விளங்கிய-பிரகாசித்த, காந்து-சொலிக்கின்ற, பைம்பொன்-பசும் பொன்னாற் செய்த, கழல்-ஒலிக்கும் வீரக்கழலை, வீக்கினர் - (வலத்தாளிற்) கட்டினார்கள் எ-று.

பூமி அரசர்க்கெல்லாம் பொதுவாயிருப்பதை நீக்கித் தனதாக்கியருளுகையால், பார்பொதுநீக்கிய வேந்தலென்றார். அது-"பொதுநீக்கரசனுலகொருங்குடையோன்" இதனாலறிக. வீரத்தன்மைதோன்ற, கழல் வீக்கினரெனப்பட்டது. "வெற்றிகொள்வேந்தர் விருதுவீரக்கழல்-வலத்தாளொன்றில் வயங்குமெனக. இவ்விதியால் வலத்தாள் வருவிக்கப்பட்டது.

(க-து.) நளன்வலப்பாதத்தில் வீரக்கழலணிந்தார்கள் எ-ம். 11

இன்னபேரணியாவுமெழில்செயத்
துன்னியெங்கு முழவைந்துவைத்திடப்
பொன்னஞ்சூழிப் புகர்முகவெற்பின்மேன்
மன்னர்மன்னன் மகிழ்ச்சியோடேகினான்.

[இதுமுதல் மூன்றுபாட்டுகளால் நளன்விவாக மண்டபத்திற்கு வந்தமை சொல்லப்படுகின்றது,]

(இ-ள்.) இன்ன-இப்படிப்பட்ட, பேரணியாவும்-பெரியவிலையுள்ள ஆபரணங்களனைத்தும், எழில்செய-அழகினைச்செய்ய, எங்கும் - எவ்விடத்தும், துன்னி-நெருங்கி, முழவம்-பேரிகைகள், துவைத்திட-ஒலிசெய்ய, பொன்-பொன்னாற்செய்த, அம்-அழகிய, சூழி-முகபடாத்தையுடைய,புகர்முகம்-புள்ளிபெற்றமுகத்தையுடைய, வெற்பின்மேல்-யானையின்மேல், மன்னர்மன்னன்-நளனானவன், மகிழ்ச்சியொடு-மகிழ்ச்சியுடன், ஏகினான்-சென்றான் எ-று.

அரசன் புறப்படல் யாவர்க்குந் தெரிவித்தல்போல், எங்கு முழவந்துவைத்திடவென்றும்; சக்கரவர்த்தியென்பது தோன்ற, மன்னர் மன்னனென்றுஞ் சொல்லினார்.

(க-து.) நளன் யானையேறிச் சென்றான் எ-ம். 12

நேமிசூழ்ந்த நெடுநிலமன்னவர்
தாமவெண்குடை தாங்கினர்பின்வர
வாமமேகலை மங்கையரங்கையிற்
காமர்செம்பொற் கவரியிரட்டவே.

(இ-ள்.) நேமிசூழ்ந்த-சமுத்திரஞ்சூழ்ந்த, நெடுநிலமன்னவர்-நெடிய பூவுலகத்தரசர், தாமம்-மாலையணிந்த, வெண்குடை-வெண்கொற்றக் குடையை, தாங்கினர்-சுமந்தவராகி, பின்வர-பின்னேவரவும் - வாமம்-அழகிய, மேகலை-மேகளாபரணத்தையுடைய, மங்கையர்-மாதர்கள், அங்கையில்-அழகியகையினால், காமர்-அழகிய, செம்பொன்-சிவந்தபொற்காம்பையுடைய,கவரி-சாமரைகள், இரட்ட-வீசிவரவும் எ-று.

குடைதாங்குதல் அருமையாதலால், அதற்கேற்ப அரசரையும்; கவரியிரட்டல் எளிதாதலால், அதற்கேற்பமங்கையரையுஞ் சொல்லினார். இதுவும் வருஞ்செய்யுளுங்குளகம்.

(க-து.) வேந்தர் குடைபிடிக்கவும் மாதர் சாமரைவீசவும் எ-ம். 13

தண்ணந்தாமரைத் தாக்கணங்கன்னவர்
கண்ணுநெஞ்சு முவந்துகளிப்புற
வெண்ணில்வேதிய ராசியியம்பிட
வண்ணமாமணி மண்டபத்தெய்தினான்.

(இ-ள்.) தண்ணந்தாமரை - குளிர்ச்சிபொருந்திய தாமரைமலரிலிருக்கின்ற, தாக்கணங்கன்னவர்-இலக்குமியை யொத்தமங்கையர், கண்ணுநெஞ்சும்-கண்ணுமனமும், மகிழ்ந்து-மகிழ்ச்சியடைந்து, களிப்புற - களிப்புமிக, எண்ணில்வேதியர்-அளவற்றபிராமணர்கள், ஆசியம்பிட்-ஆசீர்வதிக்க, வண்ணமாமணி-அழகியமாணிக்கமணிகள்பதித்த, மண்டபத்து-மண்டபத்தில், எய்தினன்-வந்துசேர்ந்தான் எ-று.

நினைக்குநெஞ்சு களித்தற்கு நோக்குங்கண் காரணமாதலால், கண்ணுநெஞ்சு முவந்து களித்திடவென்றும்; மண்டபத்தெய்துஞ்சமயமாதலின்,எண்ணில்வேதிய ராசியம்பிட வென்றுஞ் சொல்லினர்.

(க-து.) மாதர்கள் மகிழ மறையவர்வாழ்த்த நளன் விவாகமண்டபத்தில் வந்தான் எ-ம். 14

வேனிலைங்கணை வேள்புறங்காத்திடப்
பானலங்கட் பனிமதிவாணுதற்
றேனவாங்குழற் றேமொழியைக்கொடு
மானினோக்கின் மடந்தையரெய்தினர்.

[இதுமுதல் இரண்டுபொட்டுகளால் தமயந்தியைவிவாகமண்டபத்திற்கொணர்ந்தமை சொல்லப்படுகின்றது]

(இ-ள்.) வேனில்-வசந்தகாலத்திற்குரிய, ஐங்கணைவேள் - பஞ்சபாணங்களையுடையமன்மதனானவன், புறங்காத்திட-புறங்காத்துவர, பானலங்கண்-நீலோற்பலம்போன்றகண்களையும், பனிமொழி-குளிர்ச்சிபொருந்திய சொல்லையும், வாணுதல்-ஒளியொருந்தியநெற்றியையும்,தேனவாம்-வண்டுகள்விரும்புகின்ற, குழல்-கூந்தலையுமுடைய, தேமொழியைக்கொடு-தமயந்தியையழைத்துக்கொண்டு, மானினோக்கின்-மான்பார்வையையொத்தபார்வையையுடைய மடந்தையர்-மாதர்கள், எய்தினர்-அடைந்தார் எ-று.

நளனை வெல்லும்படி வந்தவளாதலால், அதுபற்றி-வேள்புறங்காத்திட வென்றார்.

(க-து.) மாதர்கள் தமயந்தியை யழைத்துக்கொண்டு வந்தார்கள் எ-ம். 15

கள்ளறுமலர் நாற்றியெண்காவத
முள்ளகன்ற வொளிர்மணிமாடத்தின்
பிள்ளைமானிகர் நோக்கிபைப்பெய்கழல்
வள்ளலோடு மணத்தவிசேற்றினர்.

(இ-ள்.) கள்ளறு-தேனறாத, மலர்நாற்றி-மலர்மாலைதூக்கி, எண்காவதம் எண்காததூரம், உள்ளகன்ற-உள்ளேவிரிந்த, ஒளிர்பிரகாசம் பொருந்திய, மணிமாடத்தின்-மணிகள்பதித்தஉப்பரிகையில், பிள்ளைமாணிகர்-இளமான்பார்வை

போன்ற, நோக்கியை-பார்வையையுடைய தமயந்தியை, பெய்கழல்-வீரக்கழலையணிந்த, வள்ளலோடு-நளனுடன், மணத்தவிசு-கல்யாணமேடையில், ஏற்றினர்-ஏற்றினர்கள் எ-று.

இடமுழுவதும் அலங்கரித்தமைதோன்ற, கள்ளருமலர்நாற்றிரெண்காவதமென்றார்.

(க-து.) தமயந்தியை நளனோடு கல்யாணமேடையி லெற்றினர்கள் எ-ம்.

உதகநல்குநல் லோரையிஃதென
விதியினுடிக் கணிதர்விளம்பலும்
பதலையார்த்தெழப் பாவையைநல்கிய
மதுமலர்த்தொடை மன்னெழுந்தனரோ.

[இதுமுதல் நான்குபாட்டுகளால் மணவினைச்சிறப்புக்கள் சொல்லப்படுகின்றன.]

(இ-ள்.) உதகநல்கும்-தாரைவார்க்கின்ற, நல்லோரை-நல்லமுகூர்த்தம், இஃதென-இதுவென்று, விதியினுடி-சோதிடவிதிப்படிபார்த்து, கணிதர்-கணிதநூலோர், விளம்பலும்-சொன்னவளவில், பதலை-வாத்தியங்கள், ஆர்த்தெழ-மிகவொலிக்க, பாவையைநல்கிய-தமயந்தியைப் பெற்ற, மதுமலர்த்தொடை-தேனெருமலர்மாலையையணிந்த, மன்-வீமன்-எழுந்தான்-எழுந்தனன் எ-று.

தாரைவார்க்கின்ற காலமாதலால், பதலையார்த்தெழப் பாவையைநல்கிய மன்னெழுந்தானென்றார்.

(க-து.) சோதிடர் முகூர்த்தலக்கின மீதுவென்றுசொல்ல வீமனெழுந்தான் எ-ம். 17

கமலமீதுசெங் காந்தளலர்ந்தெனக்
குமரனங்கையிற் கோல்வளைசெங்கைவைத்
திமயமாதுமிறைவனும்போலவாழ்ந்
தமைதிரென்ன வரும்புனனல்கினன்.

(இ-ள்.) கமலமீது-தாமரைமலரின்மேல், செங்காந்தளலர்ந்தென-சிவந்த காந்தண்மலர்பூத்ததுபோல், குமரனங்கையில் - நளனது அழகியகைமேல், கோல்வளை-தமயந்தியினது, செங்கைவைத்து-சிவந்தகையைவைத்து, இமயமாதும்-பார்வதியும், இறைவனும்போலவாழ்ந்து-பரமசிவனும்போல்வாழ்ந்து, அமைதிரென்ன-பொருந்தியிருமென்று, அரும்புனல்-அரியநீரை, நல்கினன்-வார்த்தான் எ-று.

[கமலமலரையும் காந்தண்மலரையும்-நளன்தமயந்தியென்னும் இருவர் கரங்களுக்கு, இமயமாதையும்-இறையையும்-அவ்விருவர்க்கும் இணைசொல்லுதலால், உவமையணியாம்.]

(க-து.) வீமன் நளன்கையில் தமயந்தியைவைத்து வாழ்ந்திருக்கவென்று தாரைவார்த்தான் எ-ம். 18

சாந்தமூழ்கு தடம்புயனாரழற்
கேய்ந்தயாவு மினிதுமுடித்தபி
னாய்ந்தநான்மறை யின்வழியாயிழை
காந்தண்மெல்விரற் கைபிடித்தானரோ.

(இ-ள்.) சாந்தமூழ்கு-சந்தனக்குழம்பால்மூழ்கப்பெற்ற, தடம்புயன்-பருத்தபுயங்களையுடையநளனானவன், ஆர்-பொருந்திய, அழற்கேய்ந்தயாவும்-அக்கினிகாரியத்துக்குப் பொருந்தியவனைத்தையும், இனிதுமுடித்தபின் - இனிமையோடுசெய்துமுடிந்தபின்பு, ஆய்ந்த-ஆய்ந்திருக்கின்ற, நான்மறையின்வழி-வேதமார்க்கப்படி, ஆயிழை-தமயந்தியினது, காந்தண்மெல்விரல் - காந்தளரும்புபோன்றமெல்லியவிரல்களை, கை - தன்கையால், பற்றினான் - பிடித்தான் எ-று.

விவாககோலந்தோன்ற, சாந்தமூழ்கு தடம்புயனென்றும்; அரசர்க்குப் பாணிக்கிரகணமே சிறப்பென்பதுதோன்ற, நான்மறையின்வழியாயிழைகாந்தண்மெல்விரல் கைபிடித்தென்றுஞ் சொல்லினர்.

(கது.) நளன் தமயந்தியைப் பிடித்தான் எ-ம். 19

பொங்குசெந்தழல் சூழ்வதுபூம்பொரி
செங்கையாரச் சொரிந்துதிருமகள்
பஙகயப்பதம் பைம்பொனினம்மிவைத்
தங்கண்வானத் தருந்ததிகாட்டினான்.

(இ-ள்.) பொங்கு-மிகுந்த, செந்தழல்-அக்கினியை, சூழ்வது-வலம்வந்து, பூம்பொரி-அழகியபொரியை, செங்கையார-சிவந்த கைநிறைய, சொரிந்து-அத்தீயிலிட்டு, திருமகள்-தமயந்தியினது, பங்கயப்பதம் - தாமரை மலர்போன்ற பாதத்தை, பைம்பொனின்-பசியபொன்னாற் செய்த, அம்மிவைத்து-அம்மியின்மேற்றூக்கிவைத்து, அங்கண்வானத்து-அழகிய விடத்தையுடைய ஆகாயத்திலிருக்கின்ற, அருந்ததி-அருந்திநக்ஷத்திரத்தை, காட்டினான்-காண்பித்தான் எ-று.

இப்படிச் செய்தற்குவிதி விவாகபத்ததியிற்காண்க.

(க-து.) அக்கினிவலம்வந்து பொரியிறைத்துத் தமயந்திபாதத்தை யம்மியில்வைத்து அருந்ததியைக்காட்டினனெ-ம். 20

ஏனையுள்ளன யாவுமுடித்தபின்
மானினைக்கியோர் வல்லியினெல்லிப்போய்த்

தானையங்கடற் றாதைபொற்றாளினிற்
றேனவாங்குழற் றேமலர்சூட்டினாள்.

[இதுமுதல் நான்குபாட்டுகளால் தம்பதிகள்பெரியோரைவணங்குதலும், அவர்களவரையாசீர்வதித்தலும் சொல்லப்படுகின்றன.

(இ-ள்.) ஏனையுள்ளன-மற்றக்காரியங்கள், யாவும்-எல்லாம், முடித்த பின்-முடித்தபின்பு, மானினேக்கி-தமயந்தியானவள், ஓர்வல்லியின்-ஒருகொடி போல், ஒல்கிப்போய்-அசைந்துபோய், தானையங்கடல்-சேனு சமுத்திரத்தை யுடைய, தாதை-தகப்பனாகியவீமனது, பொற்றாளினில் - பொற்பாதங்களில், தேனவாம்-வண்டுகளால் விரும்பப்படுகின்ற, குழல்-கூந்தலாகிய, தேமலர்-வாசனைபொருந்திய மலரை, சூட்டினாள்-தரித்தாள் எ-று.

விவாகமுடிவில் தந்தையைவணங்கி மங்கலவாழ்த்துப் பெறுதல் மகளிர்க்கு இயல்பாதலின், மானினேக்கி தாதைபொற்றாளினில் குழற்றேமலர் சூட்டினாளென்றார்.

(க-து.) தமயந்தி தன்பிதாவின்காலில் விழுந்தாள் எ-ம். 21

சென்னிதாழ்த்து வணங்கியதேமொழி
மின்னனாளை யுவந்துவிதர்ப்பர்கோன்
பொன்னந்தாமரைப் பூவையுமாலும்போன்
மன்னர்கோனொடும் வாழ்கெனவாழ்த்தினான்.

(இ-ள்.) சென்னி-தலையை, தாழ்த்து-தாழச்செய்து, வணங்கிய-பணிந்த, தேமொழி-தேன்போன்ற சொல்லையுடைய, மின்னனாளை-தமயந்தியை, உவந்து-மகிழ்ந்து, விதர்ப்பர்கோன்-வீமனானவன், பொன்னந் தாமரைப் பூவையும்-இலக்குமியையும், மாலும்போல்-திருமாலையும் போல், மன்னர்கோனொடும்-நளனோடும், வாழ்கென-வாழக்கடவையென்று, வாழ்த்தினான் - வாழ்த்தினான் எ-று.

இங்கேகாப்பதுகருதி மாலையும், செல்வமிகுதிகருதி திருமகளையும், நளனுக்குந்தமயந்திக்கும் உவமைகூறலாயிற்று. அவ்விருவரையும்போல் நெடுங்காலம் வாழ்கவெனவாழ்த்தினனெனினும் அமையும்.

(க-து.) வீமன்தமயந்தியை நளனோடுவாழ்கவென்று வாழ்த்தினான் எ-ம்.

முருகுவாய்மடுத் துண்டளிமூசுபூந்
தெரியன்மார்பினன் றேசிகர்தாடொழு
துருகுமன்பி னுவந்துவிதர்ப்பர்கோன்
வரைகொண்மார்ப மகிழ்வுறப்புல்லினான்.

(இ-ள்.) முருகு-தேனை, வாய்மடுத்து-உண்டு, அளி-வண்டுகள், மூசு-மொய்க்கப்பெற்ற, பூந்தெரியன்மார்பினன்-மலர்மாலையையணிந்த மார்பை

யுடைய நளனானவன், தேசிகர்-ஆசிரியரது, தாடொழுது-பாதத்தை வணங்கி, உருகும்-கரைகின்ற, அன்பின்-பத்தியினால், உவந்து-மகிழ்ந்து, விதர்ப்பர் கோன்-வீமராசனுடைய, வரைகொண்மார்பம்-மலையினழகைக் கொண்டமார் பினை, மகிழ்வுற-மகிழ்ச்சியடைய, புல்லினன்-தழுவினன் எ-று.

தேசிகராதலின்-தாடொழுதென்றும்,தான்சக்கிரவர்த்தியாதலின்-விதர்ப் பர்கோன் வரைகொண்மார்ப மகிழ்வுறப் புல்லினனென்றுஞ் சொல்லினர்.

(க-து.) நளன்குருவை வணங்கி வீமனைத் தழுவினன் எ-ம். 23

கோதினான்மறைக் கோதமனாதியா
மாதவத்து முனிவருமன்னருங்
காதல்வேலை கரையழிந்தோங்கிட
வாதரத்தொடு மாசியியம்பினர்.

(இ-ள்.) கோதில்-குற்றமற்ற, நான்மறை - நாலுவேதங்களையுடைய, கோதமனாதியாம்-கௌதமமுனி முதலாகிய, மாதவத்து - பெரியதவததைச் செய்யும், முனிவரும்-தபோதனரும், மன்னரும்-அரசரும், காதல்-ஆசையா கிய, வேலை-கடலானது, கரையழிந்து-கரைகெட்டு, ஓங்கிட-உயர, ஆதரத் தோடும்-அன்புடனே, ஆசியியம்பினர்-ஆசீர்வதித்தார்கள் எ-று.

தவமாதியவற்றில் றலைமையுடைமைபற்றி, கோதமனாதியா முனிவரென் றார். "ஆசையோடுரைத்த லாசியென்றுரைக்க" இவ்விதியால் விவாக முடி வில் ஆசிகூறல் பெரியோர்கடனெனக.

(க-து.) முனிவரும் அரசரும் நளனைவாழ்த்தினார்கள் எ-ம். 24

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

இன்னவைநிகழ்ந்தபின்ன ரிறைவனுமணங்களாளும்
பொன்னரிமாலைநாற்றிப் பூம்புகைகமழவூட்டிப்
பன்னருஞ்சிறப்புவாய்ந்துபனியிருவிசும்புபாரின்
மன்னியதனையகோல மணவறையெய்தினரே.

[இதுமுதல் இரண்டுபாட்டால் மணவறையடைதல் சொல்லப்படுகின் றது.]

(இ-ள்.) இன்னவை-இத்தன்மையானவை, நிகழ்ந்தபின்னர் - நடந்த பின்பு, இறைவனும்-நளனும், அணங்களாளும்-தமயந்தியும், பொன்னரிமாலை-பொன்னரி மாலைகளை, நாற்றி - தொங்கக்கட்டி, பூம்புகை - அழகிய புகையை, கமழ - பரிமளிக்கும்படி, ஊட்டி - ஊட்டுவித்து, பன்னரும்-சொல்லுதற்கரிய, சிறப்பு-சிறப்புவாய்ந்து-சிறப்புப்பொருந்தி, பனி-குளிர்ச்சி பொருந்திம, இரு-பெரிய, விசும்பு-பொன்னுலகம், பாரில் - பூமியின்கண், மன்னிய-பொருந்தியிருந்ததையொத்த, கோலம்-அழகிய, மணவறை-படுக்கை யறையை, எய்தினர்-அடைந்தார்கள். எ-று.

பூவுலகில் அவ்வள வழகுள்ளவிட மொன்றுமில்லாமையால், விசும்புபாரின் மன்னியதனையகோல மணவறை யென்றார்.

(க-து.) நளனும் தமயந்தியும் பள்ளியறையில் சேர்ந்தார்கள் எ-ம்.

பாயிருட்பிழம்புசீத்துப் பகற்கதிருமிழும்வெய்ய
காயெரிமணியிற்செய்த கவின்றிகழ்மஞ்சமீது
தூயமென்பஞ்சியன்னத் தூவியூறினியசெய்யு
மாய்மயிர்முதலமூவைந் தடுக்கியவமளிசேர்த்தார்.

(இ-ள்.) பாய்-பாயாநின்ற, இருட்பிழம்பு - இருளினது திரட்சியை, சீத்து-போக்கி, பகற்கதிர் - சூரியகிரணங்களை, உமிழும் - கொப்புளிக்கின்ற, வெய்ய-வெவ்விய, காய்-சுடுகின்ற, எரி-அக்கினிபோன்ற, மணியிற்செய்த மணிகளாற்செய்யப்பெற்ற, கவின்றிகழ் - அழகுவிளங்குகின்ற, மஞ்சமீது-கட்டிலின்மீது, தூய-சுத்தமாகிய, மென்-மெல்லிய, பஞ்சி-பஞ்சியினாலும், அன்னத்தூவி-அன்னப்புள்ளினிறகாலும், ஊறு-பரிசம், இனிய-இனியவாக செய்யும் - செய்கின்ற, ஆய் - ஆயாநின்ற, மயிர்முதல் - மயிர்முதலியவாக, மூவைந்து-மூவைந்தாக, அடுக்கிய - ஒன்றின்மேலொன்றுசேர்த்த, அமளி-மெத்தையின்மேல், சேர்ந்தார்கள், எ-று.

இருட்பிழம்பென்பது "குழைசேறனவாக்கூடிருஅபிறம்பே" இதனலறிக. பஞ்சியெனப் பொதுப்படக்கூறினமையால், செம்பஞ்சு வெண்பஞ்சு இரண்டுங்கொள்க. "சிறுபூளைசெம்பஞ்சு வெண்பஞ்சு சேண, முறுதூவிசையையோடைந்து" என்றார்பிறரும். மூவைந்தென்றமையால், ஐந்துவகையொன்றாகச்செய்த மூன்றுமெத்தையெனக்கொள்க. அம்மூன்றும் - ஒன்றுபோக நுகர்தற்கும், இரண்டு இருவருந்தனித்தனி நித்திரை செய்தற்குமாம்.

(க-து.) பதினைந்து பஞ்சணையடுக்கிய கட்டிலின்மேற் சேர்ந்தார்கள்.

போயிறுமருங்குலென்னப் புணர்முலைசுமக்கலாற்றாச்
சேயிழைபஞ்சியார்ந்த சீறடிக்கமலம்போதின்
மீயுயர்விசும்பூத்த மின்னுருக்கொண்டதன்ன
வாயிரங்கோடிமாத ரயினிநீர்சுழற்றிப்போனார்.

[இதுமுதல் இரண்டுபாட்டுகளால் மாதர்கள் கண்ணூறுகழித்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மருங்குல்-இடையானது, போயிறுமென்ன-இற்றுப்போய்விடுமென்னும்படி, புணர்முலை - நெருங்கியமுலைகள், சுமக்கலாற்றா-சுமக்கமாட்டாத, சேயிழை-தம்யந்தியினுடைய, பஞ்சிமார்ந்த-செம்பஞ்சுநிறைந்த, சீறடி சிறியஅடிகளாகிய, கமலப்போதின் - தாமரைமலரின்மேல், மீயுயர்-மேலாகவுயர்ந்த, விசும்பூத்த-மேகத்திலுண்டாகிய, மின்-துன்னம், உருக்கொண்ட

தன்ன-பெண்வடிவுகொண்ட தென்னும்படியுள்ள ஆயிரங்கோடிமாதர்-ஆயிரங்கோடிமங்கையர்கள், அயினிநீர் - சோறிடப்பட்டமஞ்சள்நீரை, சுழற்றி-சுழற்றுதல்செய்து, போனார்-போயினார்கள்.

அனேக மாதரென்பதற்கு ஆயிரங்கோடி மாதரென்றார். அயினிநீரென்பதற்கு முன் எழுதினோம்.

(க-து.) ஆயிரங்கோடி பெண்களாலாலஞ்சுழற்றிப் போனார்கள். எ-ம்.

அருப்புமென்முலையாரைஞ் ஞூற் றைம்பதிறெண்மர்பைம்பொற்
பொருப்புறழ்தோளினற்கும் பொருகயற்கண்ணினாட்கு
முருக்கிளர்மணியிற்செய்த வொளிகிளர்பசும்பொற்றட்டிற்
கருப்புரத்தீபமேந்திக் கண்ணெச்சில்கழித்திட்டாரே.

(இ-ள்.) அருப்பு-தாமரையரும்பையொத்த, மென்முலையார்-மெல்லிய முலைகளையுடையமங்கையர்கள், ஐஞ்ஞூற்றைம்பதிற்றெண்மர்-ஐஞ்ஞூற்றைம்பத்தெட்டென்னுந் தேரையையுடையவர்கள், பைம்பொன்-பசியபொன்மயமாகிய, பொருப்புறழ-மேருமலையையொத்த, தோளினற்கும்-புயங்களையுடைய நளனுக்கும், பொருகயற்கண்ணினாட்கும்-கயற்கண்டையையொத்த கண்களையுடைய தமயந்திக்கும், உருக்கிளர்-உருவிளங்குகின்ற, மணியிற்செய்த-நவமணிகளிற்செய்த, ஒளிகிளர் - ஒளிவிளங்குகின்ற, பசும்பொற்றட்டில்-பசிய பொன்னினாற்செய்ததட்டினில் கருப்புரத்தீபமேந்தி-கருப்பூரதீபத்தையேந்தி கண்ணெச்சில்-திருஷ்டிதோஷத்தை, கழித்திட்டார்-போக்கினார்கள், எ-று.

அரும்பென்பது எதுகைநோக்கி அருப்பென விகாரமாயிற்று. கண்ணெச்சில்-கண்ணால்வந்ததோஷம்.

(க-து.) ஐந்நூற்றைம்பத்தெட்டுப் பெண்கள் நளனுக்கும் தமயந்திக்குங் கருப்பூரதீபத்தால் திருஷ்டிகழித்தார்கள் எ-ம். 28

வாசனைகமழுஞ்சுண்ணம் வண்டிமிர்குழங்கன்மாலை
யோசனைநாறுஞ்சாந்த மொண்கருப்பூரம்பைங்காய்
காசறுசெப்பினுய்ந்த கமழ்சுவையமிழ்தினோடுந்
தூசுலாம்பருமவல்குற் றோகையரேந்தினாரே.

[இதுமுதல் விரண்டுபாட்டுகளால் மாதர்கள் போகப்பொருளமைத்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) வாசனை-பரிமளமானது, கமழும்-மணக்கின்ற, சுண்ணம்-பொடிகளையும், வண்டிமிர்-வண்டுகளொலிக்கின்ற, குழங்கன்மாலை - அழகியமாலைகளையும், யோசனை-யோசனைதூரம், நாறும்-கமழ்கின்ற, சாந்தம்-சந்தனத்தையும், ஒண்-ஒள்ளிய, கர்ப்பூரம்-பச்சைக்கருப்பூரத்தையும், பைங்காய்-துவர்க்காயையும், காசறு-குற்றமற்ற, செப்பில்-வட்டில்களில், ஆய்ந்த-ஆய்ந்தெடுத்த

கமழ்-பரிமளிக்கின்ற, சுவை-சுவையையுடைய, அமிழ்த்தினோடும்-அமிர்தத்துடனே, தூசுலாம்-ஆடைமேலசைகின்ற, பருமம் பருத்த, அல்குல்-நிதம்பத்தையுடைய, தோகையர்-மங்கையர்கள், எந்தினார்-தாங்கினார், எ-று.

[சுண்ண முதலியவும் போகத்துக்கு வேண்டிய பொருள்களெனக் கொள்க.]

(க-து.) பெண்கள் வாசனைப்பொடி, மாலை, சந்தனம், கருப்பூரம், பாக்கு, அமிழ்து, இவைகளையே யேந்தினார்கள் எ-ம். 29

பண்ணமைதிவவினல்யாழ் பருமணியடைப்பைநோக்கிற்
கண்வழுக்குறுசெஞ்சோதிக் கதிர்மணிக்கால்செய்வட்டம்
வெண்ணிறக்கவரிசெம்பொற் படியகமினையவெல்லா
மண்ணியமணிசெய்பைம்பூண் மடந்தையர்மருங்குவைத்தார்.

(இ-ள்.) பண்ணமை-இசையமைந்த, திவவின்-கட்டுகளையுடைய, நல்யாழ்-நல்லயாழும், பருமணி-பரியமணிகள்கோத்த, அடைப்பை-தாம்பூலப்பையையும், நோக்கில்-பார்த்தால், கண்வழுக்குறு-கண்கள் கூசுகின்ற, செஞ்சோதி-சிவந்தகாந்தியையுடைய, கதிர்மணி-கிரணங்களையுடைய மணிகள் பதித்த, கால்செய்வட்டம்-சாந்தாற்றியும், வெண்ணிற - வெள்ளி நிறத்தையுடைய, கவரி-சாமரையும், செம்பொன்-சிவந்தபொன்னாற் செய்த, படியகம்-தம்பலப்படிக்கமும், இனையவெல்லாம்-ஆகியவிவை முதலியவனைத்தையும் மண்ணிய-கழுவிய, மணிசெய்-மணிகள்பதித்த, பைம்பூண்-பசியவாபரணங்களையுடைய, மடந்தையா-மாதர்கள், மருங்கு-அருகே, வைத்தார்-வைத்தனர் எ-று.

யாழ்முதலியனவும் போகத்திற்கு வேண்டியனவாதலால், மாதர்மருங்கு வைத்தனரென்றார்.

(க-து.) மாதர்கள் யாழ், அடப்பை, ஆலவட்டம், சாமரை, பொற்படிகம், இவற்றைப் பக்கலில் வைத்தார்கள் எ-ம். 30

பாம்பினைப்படத்தைமானும் பங்கயப்பருமவல்குற்
காம்புறழ்பசியமென்றோட் காரிகைவிழைவுநாணு
மேம்படலோடினிதுநோக்கி யின்னுயிர்த்தோழிமார்கள்
பூம்புகைதவழ்ந்தாலன்ன பொருமுகவெழினிவீழ்த்தார்.

[இதனால் தோழிகள் செய்கை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) பாம்பின்-சர்ப்பத்தினது, படத்தை-படத்தினை, மானும்-ஒத்த, பங்கயம்-தாமரைமலரையொத்த, பருமம்-பருமத்தையுடைய, அல்குல் - அல்குலையும், காம்புறழ்-மூங்கிலையொத்த, பசிய-பசுமையாகிய, மென்றோள்-மெல்லியதோளையுமுடைய, காரிகை-தமயந்தியினுடைய, விழைவும் - விருப்பத்தையும், நாணும்-நாணத்தையும், ஏம்படலோடு-அதமலர்ச்சியுடன், இனிதுநோக்கி-

இனிமையினுேபொர்த்து, இன்னுயிர்-இனியவுயிரையொத்த, தோழிமார்கள்-தோழிகள், பூம்புகை - அழகியபுகையானது, தவழ்ந்தாலன்ன - தவழ்ந்ததை யொத்த, பொருமுகவெழினி-பொருமுகவெழினியென்னுந்திரையை, விடுத்தார்-விடுத்தார்கள் எ-று.

பாம்பினைப் படத்தை என்பதில்-ஐ சாரியையாகக்கொண்டு பாம்பினது படமெனக்கொள்க. அன்றி உருபுமயக்க மெனினும் அமையும். பங்கயத்தை மாதரல்குற் குவமைசொல்லுதல். "திருமுகங்கமல மினைவிழிகமலஞ்செய்ய வாய்கமல நித்திலந்தாழ, உருபூலக் கமலந் துணைக்கரங்கமலம் வலம்புரியுந்தி பொற்கமலம், பெருகியவல்குன் மணித்தடங்கமலம், பெருகியவல்குன் மணித்தடங்கமலம் பிடிநடைத்தாள்களுங்கமல, முருவவட்கவ்வர முதலினன்றேயுயர்ந்தது பூவினுட்கமலம்." இதனுலறிக. பொருமுகவெழினி என்பது, அரங்கத்திலிடு திரையெனக்கொள்க. அது - "வழுவில் கேள்வி நன்னூலுணர்ந்தோரெழினிதானேமூன்றெனமொழிப. அவைதாம், ஒருமுக வெழினியும் பொருமுக வெழினியுங்-கரந்துவா லெழினியு மெனமூவகையே." இவை இராஜதானியிலும்-அரங்கிலும்-கோலமறைத்துவரு மிடத்தும் - இடுபவையாம். இது சிந்தாமணியுரையிற்காண்க. [இது உவமையணி]

(க-து.) தோழிமார்கள் திரையை விடுத்தார்கள் என்பதாம். 31

வரிமுலையோடுந்தோன்றி வளர்தொறும்வளர்ந்துவிங்கிப்
பெருகுநாண்சுமக்கலாற்றுப் பெய்ம்மலர்க்கொம்புபோல்வா
டிருமுகஞ்சிறிதுகோட்டிக் கயிற்புறமதனிற்றேங்கொள்
விரிமலர்க்கூந்தறாழ மின்னென நுடங்கிநின்றாள்.

[இதுமுதல் இருபத்தைந்து பாட்டுகளால் நளனுக்குந் தமயந்திக்குநடந்த சம்போகச் சிறப்புகள் சொல்லப் படுகின்றன.]

(இ-ள்.) வரிமுலையோடுந் தோன்றி-சந்தனக்கோலத்தை யுடைய முலைகளுண்டானபோ துண்டாகி, வளர்தொறும்-அவைகள் வளருந்தோறும், வளர்ந்த-தானும் வளர்ந்து, வீங்கி-பருத்து, பெருகுநாண்-பெருகிய நாணை, சுமக்கலாற்று-சுமக்கமாட்டாத, பெய்-பெயகின்ற, மலர்-மலரையுடைய, கொம்புபோல்வாள்-கொம்பை யொத்த தமயந்தியானவள், திருமுகம்-திருமுகத்தை, சிறிதுகோட்டி-கொஞ்சம் வணங்கி, கயிற்புறமதனில்-பிடரியின்மேல், தேங்கொள்-வாசனைகொண்ட, விரிமலர்க்கூந்தல்-விரிகின்ற மலரையணிந்தகுழலானது, தாழ-சோரமின்னென-மின்னல்போல், நுடங்கி - துவண்டு, நின்றனள் எ-று.

ஸ்தனங்களோடு தோன்றிவளர்வ தாதலால், வரிமுலையோடுந் தோன்றி வளர்தொறும் வளர்ந்துவீங்கிப் பெருகு நாண் என்றார். தான்விழைந்தபொருள் கைகூடியபின் நாணமிருத்தற் கேதுவுண்டோவெனின் "மூன்றுறவுண

ரினுமவன்றனை யுற்ற-பின்னரல்லது ஊவிதோன்றாது." இவ்விதியால் உண்டெனக.

(க-து.) தமயந்தி நாணிநின்றாள் எ-ம். 32

கூற்றுறழ்தடங்கணுவி கொள்ளைகொண்டுண்ணவேவி
மாற்றமொன்றுரையாதிங்ஙன் மதிமுகங்கோட்டிநின்றீர்
சேற்றிதழ்க்கமலப்போதிற் றிருந்திழையனையீர்காத
லாற்றுமாறெவன்கொலாசைக் கடற்படுமளியன்றனே.

(இ-ள்.) கூற்றுறழ்-இயமனையொத்த, தடங்கண்-விசாலம் பொருந்திய கண்ணை, ஆவி-என்னுயிரை, கொள்ளைகொண் டுண்ண - கொள்ளையிட்டருந்த, ஏவி-அனுப்பி, மாற்றமொன்றுரையாது - ஒருபேச்சும்பேசாமல், இங்ஙன்-இவ்விடத்தில், மதிமுகம்-சந்திரன்போன்ற முகத்தை, கோட்டிநின்றீர்-வளைத்துநின்றீர், சேறு - சேற்றிலிருக்கின்ற, இதழ்க்கமலப்போதில் - இதழையுடைய தாமரைமலரிலிருக்கின்ற, திருந்திழையனையீர்-இலக்குமியை யொத்தவரே: ஆசைக்கடற்படும்-ஆசைக்கடலில் மூழ்கிய, அளியன்-எளியேன்-ஆசையை, ஆற்றுமாறு--சகிக்குமாறு-எவன்கொல்-எப்படி எ-று.

மாதர் வலிந்தணைதலின் மிக்கசுகமென்றுகருதி, நளன் இவ்வாறு கூறினன்.

(க-து.) தமயந்தியே-பேசாது முகங்கோணிநிற்கின்றாய்: ஆசைக்கடலில் வீழ்ந்த வெளியேனை விரகஞ் சகிக்கும்வழி யாது என்றான் எ-ம். 33

வாட்டடங்கருங்கட்கூற்றை மலர்க்கையான்மறைத்தீராவி
கோட்டுமண்கொண்டுவீங்குங் குவிமுலைக்களிநல்யானை
யாட்டுசாந்தகலம்போழா தளியனேன்றடந்தோட்கந்திற்
பூட்டிடிலன்றேமுன்னம் புரிந்ததுமளியதாமே.

(இ-ள்.) வாள் - வாள்போன்ற, தடம்-விசாலம்பொருந்திய, கருங்கட்கூற்றை-கரியகண்ணாகிய இயமனை, மலர்க்கையால்-மலர்போன்றகையினால், மறைத்தீர்-மூடிக்கொண்டீர், ஆவி-உயிராகிய, கோட்டுமண் - கரைமண்ணை, கொண்டு-கொண்டு, வீங்கும்-பருத்த, குவிமுலை-குவிந்தமுலையாகிய, களிநல் யானை-களிப்பையுடைய யானையை, ஆட்டுசாந்து - சந்தனம்பூசிய, அகலம்-மார்பினிடத்தில், போழாது - பிளவாது, அளியனேன்-என்னுடைய, தடந்தோள்-பருத்ததோளாகிய, கந்தில்-தறியில், பூட்டிடிலன்றே-பூட்டினாலன்றே முன்னம்புரிந்ததும்-முன்செய்ததும், அளியதாம-அன்பாகும், எ-று.

அந்தயானை கோட்டால் கரைமண் கொள்வதுபோல, முலையாகிய யானை உயிரைக் கொள்ளுமெனக. ஆவி-தடாகமுமாம். இது நாணக் கண் புதைத்தலாம்.

(க-து.) தமயந்தியே-உன்முலைகளாகிய யானைகளை என்னுடைய தோள்களாகிய கட்டுத்தறிகளில் கட்டினலல்லவோ அன்பாகும் எ-ம். 34

சுற்றநல்கூரவாழுந் தோமுறுசிறியர்போல
விற்றிடைமெலியச்செம்மாந் தெழுமுலைப்பாரம்பார்த்துங்
கற்றையங்குழலில்வீழ்ந்து மதுநுகர்களிவண்டீரின்
றற்றதுநுமக்குமேலோ ரளியெனவளித்தபேரே.

(இ-ள்.) சுற்றம்-சுற்றத்தார், நல்கூர-வறுமையடைய, வாழும்-வாழ்கின்ற தோமுறு - குற்றத்தையுடைய, சிறியர்போல-சிறியவர்களைப்போல, இற்று-ஒடிந்து, இடை-இடையானது, மெலிய - வாட, செம்மாந்து - அகமலர்ச்சியடைந்து, எழுகின்ற, முலைப்பாரம்-முலையினுடையபளுவை, பார்த்தும்-கண்டும், கற்றையங்குழலில்-மயிர்த் தொகுதியாகிய கூந்தலில், வீழ்ந்து-விழுந்து, மதுநுகர்-கள்ளையுண்கின்ற, களி-களிப்பையுடைய, வண்டீர் - வண்டுகளே, நுமக்கு-உமக்கு, மேலோர்-பெரியவர்கள், அளியென-அளியென்று, அளித்த பேர்-கொடுத்தநாமமானது, இன்று-இன்று, அற்றது-அற்றுவிட்டது, எ-று.

சுற்றமென்பதற்கு "கொள்ளலிற்கொடுத்தலிற் கூடியோர் சுற்றம்" இதுவிதியாக, அச்சுற்றம் நல்கூரவாழுஞ் சிறியோர்போலவென்று வண்டுக்கு முலையைக் குறிபபித்தவாறு காண்க. இது வண்டோச்சி மருங்கணைதல். அஃதாவது-ஒன்றும், அவள் பேசாமையால் வண்டை யோட்டி மருங்கு செல்லுதலாம். இடையொடியும்படி எழுகின்ற முலைப்பாரம் பார்த்தும் கற்றையங், குழலில் வீழ்தலால், நுமக்கு மேலோர் அளியென அளித்தபேர் இன்றற்றதென்றார். அளியென்பது இங்கே, வண்டும்-அன்புமாம்.

(க-து.) வண்டுகளே-தமயந்தி முலைப்பாரத்தைப் பார்த்தும், கூந்தலில் வீழ்ந்து மிதிக்கின்றீர்கள். இடையொடிந்து பழிவரும். உங்களுக்குஅளியென்னும்பே ரின்றெ யற்றது எ-ம். 35

பகைக்கடல்சுவற்றும்வைவேற் பகட்டெழின்மார்பினன்ற
னகத்திடைபெருகியோங்கு மாசையங்கடலையின்னே
முகைத்தெழுமுல்லைமாலை முருகுலாங்கோதைநாணுற்
றகைத்திடலரிதென்றெண்ணித் தன்னுளேமகிழ்ச்சிகூர்ந்தாள்.

(இ-ள்.) பகைக்கடல்-பகையாகியகடலை, சுவற்றும்-சுவறச் செய்கின்ற, வைவேல்-கூரியவேலையுடைய, பகட்டெழின்-பகட்டுகின்ற அழகையுடைய, மார்பினன்றன்-மார்பையுடைய நளனது, அகத்திடை-மனத்தின் கண், பெருகியோங்கும்-அதிகரித்துயர்கின்ற, ஆசையங்கடலை-ஆசையாகியசமுத்திரத்தை, இன்னே-இப்பொழுதே, முகைத்து-அரும்பி, எழும்-எழுகின்ற, முல்லைமாலை-முல்லைமாலையினுடைய, முருகு-வாசனையானது, உலாம் - உலாவுகின்ற, கோதை-கூந்தலையுடைய தமயந்தியானவள்,நாணுள்-தனதுநாணினால்,தகைத்

திடல்-தடுத்திடுவது, அரிதென்றெண்ணி-அருமை யென்று நினைத்து, தன்னுள்ளே-தன்மனத்தினுள்ளே, மகிழ்ச்சி - மகிழ்ச்சியை, கூர்ந்தாள் - மிகுந்தாள் எ-று

அரசனது காமம்தன்னையேவிரும்பி அனேகநாளாய்க் கைகூடுதலற்றுக் கிடந்தமையால், அப்படிப்பட்ட காமத்திற்கு நாண்கூடாதென்றவாறாயிற்று.

(க-து.) நளன் காமத்தை தனதுநாணாற் றடுப்பதரிதென்று தன்னுள்ளே மகிழ்ச்சியடைந்தாள் எ-ம். 36

கழிமடநாணமச்சம் பயிர்ப்பெனுங்காவல்வேலை
யழிதரவாசைவெள்ள மகத்திடையடங்காதாகி
வழிவதேபோலவின்பம் வடிவெடுத்தனையநங்கை
பொழிகதிர்நிலவுநாணப் புன்னகைகோட்டினாளே.

(இ-ள்.) கழி-மிகுந்த, மடம்-மடமும், நாணம்-நாணமும், அச்சம்-பயமும், பயிர்ப்பெனும்-அருவருப்புமென்று சொல்லுகிற, காவல் - காவலையுடைய, வேலை-சமுத்திரமானது, அழிதர-அழியும்படி, ஆசை வெள்ளம்-ஆசையாகிய வெள்ளமானது, அகத்திடை-மனத்தின்கண், அடங்காதாகி - அடங்காததாய், வழிவதேபோல்-வழிகிறதேபோல், இன்பம்-இன்பமானது, வடிவெடுத்தனைய-ஒருவடிவு கொண்டதையொத்த, நங்கை-தமயந்தியானவள், பொழிகதிர்-கிரணத்தைப்பொழிகின்ற, நிலவுநாண-சந்திரிகையுநாணும்படி, புன்னகை-புன்சிரிப்பு, கோட்டினாள்-செய்தாள் எ-று.

மடமாதிய காவலை உறுதிப்படுத்துங் காலமன்றாகையால், அதைத்தானீக்கினமைதோன்றப் புன்னகை செய்தன ளென்க.

(க-து.) தமயந்தி மடம்-நாணம்-அச்சம்-பயிர்ப்பு-இந்நாற்குணமுங் கெட நகைத்தாள் எ-ம். 37

குருமணிவலயமின்னுங் குங்குமக்குவவுத்திண்டோண்
முருகுலாந்தாமமார்பன் முறுவலின்குறிப்புநோக்கித்
திருநலங்கனியநின்ற செழுங்கடைமழைக்கட்போதை
வருமுலைஞெமுங்கப்புல்லி மலரணைமேயினானே.

(இ-ள்.) குரு-நிறம்பொருந்திய, மணி-மணிகள்பதித்த, வலயம்-கேயூரங்கள், மின்னும்-மின்னுகின்ற, குங்குமம்-குங்குமமணிந்த,குவவு-திரட்சிபொருந்திய, திண்-வலிமையையுடைய, தோள்-புயத்தையும், முருகுலாம்-வாசனைவீசுகின்ற, தாமம் - மாலையணிந்த, மார்பன் - மார்பினையுமுடையநளனானவன், முறுவலின்-புனசிரிப்பின், குறிப்புநோக்கி-குறிப்பினைப்பார்த்து, திரு-சிறப்பான, நலம்-சுகமானது, கனியநின்ற - முதிரும்படியிருந்த, செழுங்கடை-செழியகடைபொருந்திய, மழைக்கண்-குளிர்ச்சிபொருந்திய கண்ணையுடைய,

பேதை-தமயந்தியின், வருமுலை-வளர்கின்றமுலையை, நெருங்கப்புல்லி-அழுந்தத்தழுவி, மலரணை-மலர்மெத்தையில், மேயினன்-பொருந்தினன், எ-று.

முறுவலியின் குறிப்பு-கலவிக்குறிப்பு. அது- "நாட்டமிரண்டு மறிவுடன் படுதற்குக்-கூட்டியுரைக்குங் குறிப்புரையாகும்" இதனாலறிக. இதுவேவாயிலாக-நளன்வருமுலை நெருங்கப்புல்லி மலரணைமேயின னெனவே, தமயந்தியைத் தழுவிக்கொண்டே அணையிற் சேர்ந்தானென்க.

(க-து.) நளன் தமயந்தினது நகைக்குறிப்பையறிந்து தழுவினன் எ-ம்.

ஆம்பலம்போதுமானு மணிதிகழ்பவளவாயிற்
றேம்பொதிந்தமுதமூறுஞ் செந்துவர்த்தேறன்மாந்திப்
பாம்படுமலகுலாடன் பணமுலைமணிக்கண்சேப்ப
வேம்பலுற்றினிதுபுல்லி யிளநலம்பருகினனே.

(இ-ள்.) ஆம்பலம்போதுமானும்-அல்லிமலரையொத்த, அணி - அழகு, திகழ்-பிரகாசிக்கின்ற, பவளவாயில்-பவளம்போன்றவாயில், தேம்-வாசனை, பொதிந்த-தங்கி, அமுதமூறும்-அமிர்தமூறுகின்ற, செந்துவர் - செம்பவளம் போன்ற அதரத்தினுடைய, தேறல்-தேனை-மாந்தி-உண்டு, பாம்படும் - பாம்பின்படத்தையாடுகின்ற,அல்குலாடன்-அல்குலையுடையதமயந்தியினது,பணை பருத்த, முலை-முலைகளின், மணிக்கண்-கரியகண்களாயவை, சேப்ப-சிவக்க, எம்பலுற்ற-இன்பத்தையடைந்து, இனிதுபுல்லி-இனிதாகத்தழுவி, இளநலம் இளநலத்தை, பருகினன்-அனுபவித்தான் எ-று.

இளநலம் பருகுதல் - அல்குற்பானமும் அதரபானமுமாம். அன்றியும்- இளமைப்பருவத்திற் குரிய காமசுகத்தில் ஆந்தரப்புணர்ச்சி யெனினுமாம்.

(க-து.) தமயந்தியினது இதழ்சுவைத்துக் கனதனமழுந்தத் தழுவினன் எ-ம். 39

கத்திகைக்கருமென்கூந்தல் கயிற்புறத்தவிழ்ந்துவீழ
முத்தரிச்சிலம்புபைம்பொற் கிண்கிணிமுரன்றுபாடத்
தத்தரிநெடுங்கண்சேப்பத் தடமுலைதாங்கலாற்று
தெய்த்துநுண்மருங்குறேம்ப வேந்தலோடாடினளே.

(இ-ள்.) கத்திகை-மலர்மாலையை யணிந்த, கருமென்கூந்தல்-கரியமெல்லிய கூந்தலானது, கயிற்புறத்து-பிடரியினிடத்து, அவிழ்ந்துவீழ-அவிழ்ந்து வீழவும், முத்து முத்துக்களாகிய, அரி-மாலையுடைய, சிலம்பு-சிலம்புகளும், பைம்பொன்-பசியபொன்னாற்செய்த, கிண்கிணி - சதங்கைகளும் - முரன்று- ஒலித்து, பாட-பாடவும், தத்து-நெருங்குகின்ற, அரி-செவ்வரிபரந்த, நெடுங்கண்-நெடியகண்களானவை, சேப்ப-சிவக்கவும், தடமுலை-பருத்தமுலைகளை, தாங்கலாற்றுத-சுமக்கமாட்டாது, எய்த்து-இளைத்து, நுண்மருங்குல்-நுண்

ணிடையானது, தேகம்-வருந்தவும், ஏந்தலோடு-நளனோடு, ஆடினள்-புணர்ந்தாள், எ-று.

ஒருதலைக் காமமாய் முடியாது தானும் அவ்வாறு நளனுட னூடினளென்க. [இது உபரிசுரதம் என்னுந் தலைவிப்புணர்ச்சியின் றன்மை கூறப்படுதலால், தன்மைநவிற்சி யணியாம்.]

(க-து.) தமயந்தி கூந்தலவிழ, பாதரஞ்சதிக்க, கண்கள்சிவக்க, இடைதுவளநளனோடு சேர்ந்தாள் எ-ம். 40

களிக்கயல்பொருதுநீண்டு கதுப்பிணையளக்கும்வேற்கட்
டுளிப்புயன்மின்னினன்னாட் டொண்டைவாயமுதமாந்தித்
தளிர்த்தெழுமுவகைபொங்கத் தண்ணறுஞ்சாந்தமார்ப
னளப்பருங்களிகொள்காமக் கடலகத்தழுந்தினனே.

(இ-ள்.) களி-களிப்பையுடைய, கயல் - கயற்கெண்டையை, பொருது-போர்செய்து, நீண்டு-நெடுகி, கதுப்பிணையளக்கும்-கூந்தலினை யளக்காநின்ற, வேற்கண்-வேல்போன்ற கண்ணையுடைய, துளி-துளிபொருந்திய, புயல்-மேகத்திற்றோன்றிய, மின்னினன்னாள்-மின்னலையொத்த தமயந்தியினது, தொண்டைவாய்-கொவ்வைக்கனி யொத்த வாயிலுண்டாகிய, அமிர்தமாந்தி-அமிர்தத்தையுண்டு, தளிர்த்து-தளிர்த்து, எழும்-எழுகின்ற, உவகை-மகிழ்ச்சியானது, பொங்க-மிக, தண்-குளிர்ச்சி பொருந்திய, நறும்-நல்ல, சாந்தமார்பன்-சந்தனத்தை யணிந்த மார்பினையுடைய நளனானவன், அளப்பரும் - அளத்தற்கரிய, களிகாள்-களிப்பைக்கொண்ட, காமக்கடலகத்து-காமசமுத்திரத்தில், அழுந்தினன்-மூழ்கினன் எ-று.

காமக் கடலகத்தழுந்தல்-புணர்ச்சி முடிவில் அவசத்தினால் மூலபிடைத்துயிறலை யென்க.

(க-து.) நளன் விரகவெள்ளத்தி லழுந்தினன் எ-ம். 41

அலங்கலங்குன்றமன்னான் மணிவரையகலமூழ்கி
நலங்கெழுகலவைச்சாந்து நாணமுமழிதலோடு
மிளங்கொளிவயிரப்பைம்பூ ணிளமுலைவடுக்கொண்டேங்கி
பொலங்கொடிநாணிமீனும் பொய்த்துயில்கூர்ந்தாளன்றே.

(இ-ள்.) அலங்கல் - மாலையணிந்த, அம் - அழகிய, குன்றமன்னான் - மாலையையொத்தநளமஹாராசனது, மணி - அழகிய, வரை - மலைபோன்ற, அகலமூழ்கி - மார்பினிடத்திலேமூழ்கி, நலங்கெழு - நன்மைபொருந்திய, கலவைச்சாந்தும்-கூட்டுவர்க்கஞ்சேர்ந்த சந்தனக்குழம்பும், நாணமும் - கஸ்தூரியும், அழிதலோடும்-அழிந்தவளவில், இலங்கொளி-மிகுந்தவொளியையுடைய, வயிரப்பைம்பூண்-வச்சிராபரணத்தையுடைய, இளமுலை-இளமைபொருந்திய ஸ்தனத்தினிடத்திலே, வடுக்கொண்டேங்கி - வடுவைக்கண்டிரங்கி, பொலங்

கொடி-பொற்கொடிபோன்ற தமயந்தியானவள், நாணினோடும் - நாணத்துடனே, பொய்த்துயில் கூர்ந்தாள்-பொய்ந்நித்திரையைச் செய்தாள் எ-று' அன்று-ஏ-அசைகள்.

முலையின்மேல் கணவன்செய்த வடுவாதலால் தோழிகள்கண்டால் என் சொல்வார்களோவென வெண்ணி, வடுக்கண்டேங்கி என்றார்.

(க-து.) தமயந்தி தன்னுடைய கனதனங்களிலே நளனகக் குறிகண்டு வெட்கங்கொண்டு பொய்நித்திரை செய்தாள் எ-ம். 42

புலவியிற் றுயின்றாடண்டின் முனிந்திடும்பூவையென்று
மலரணைப்புறத்துத்தானுந் துயிறல்போற்கிடப்பவாய்ந்த
கலவியின்வேட்கை தூண்டக் கனவினில்வெருவினாள்போன்
முலைமுகடழுந்தவேந்தன் முழவுத்தோள்புல்லினாளே.

(இ-ள்.) புலவியின்-பிணக்கினால், துயின்றாள்-நித்திரைசெய்தாள், தீண்டின்-தொட்டால், முனிந்திடும்-கோபஞ்செய்வாள், பூவையென்று - தமயந்தியென்று, மலரணைப்புறத்து-மலரணையினிடத்தில், தானுந்துயிறல் போல்-தானுநித்திரைசெய்தல்போல், கிடப்ப-இருக்க, வாய்ந்த-பொருந்திய, கலவியின்-புணர்ச்சியினுடைய, வேட்கை-ஆசையானது, தூண்ட-தூண்டுதல்செய்ய, கனவினில்-கனவினிடத்திலே, வெருவினாள்போல்-பயந்தவள் போல், முலைமுகடு-முலையினுச்சி, அழுந்த-அழுந்தும்படி, வேந்தன் - நளமகாராசனுடைய, முழவுத்தோள்-மத்தளம்போன்ற தோளை, புல்லினாள்-தழுவினாள் எ-று.

மாதர் தமக்குவேட்கை மிகுந்திருப்பினும் புணர்ச்சியின் முந்துவதில்லையென்பது தோன்ற, கனவினில் வெருவினாள்போலென்றார்.

(க-து.) தமயந்தி கனவிற்பயந்தாள்போல நளன் புயங்களிலே கனதனங்களழுந்தப்புணர்ந்தாள் எ-ம். 43

புல்லலுமகிழ்ச்சிகூரப் புணர்முலைகுழையமோந்து
மெல்லிதழமுதமாந்தி மேகலைநெகிழ்த்தலோடு
நல்லெழில்கனிந்தகோதை நகையுளத்தடக்கலாற்றாண்
முல்லைமென்முகையுநாண வரும்பியமுறுவல்பூத்தாள்.

(இ-ள்.) புல்லலும்-தழுவிக்கொண்டவளவில், மகிழ்ச்சி - சந்தோஷமானது, கூர-அதிகரிக்க, புணர்-நெருங்கிய, முலை-ஸ்தனங்கள், குழையமோந்து-குழையும்படியுச்சியின்மோந்து, மெல்-மிருதுவாகிய, இதழ்-அதரத்தினுடைய, அமுதமாந்தி - அமிர்தத்தையுண்டு, மேகலை-மேகலாபரணத்தை, நெகிழ்த்தலோடும்-அவிழ்த்தவளவில், நல்-நல்ல, எழில்-அழகானது, கனிந்த-முதிர்ந்த, கோதை தமயந்தியானவள், நகை-மகிழ்ச்சியை, உளத்து-மனத்தின்கண், அடக்கலாற்றாள்-அடக்காதவளாய், முல்லை-முல்லையினுடைய,மெல்-மிருதுவாகிய-

முலையும்-அரும்புகளும், நாண-நாணும்படி, அரும்பு-உண்டாகாநின்ற, இள, இளமையாகிய, முறுவல்பூத்தாள்-தந்தங்கள் தோன்றநகைத்தாள் எ-று.

தான் கனவில்புயர்ந்தவள்போல் தழுவியது நளன் உள்ளபடியென்று நினைத்தானென்று நகையுளத்தடக்கலாற்றாலாய் முறுவல்பூத்தா ளென்றார்.

(க-து.) தமயந்திபுணர்ந்தவளவில் நளன் கனதனங்களையோர்ந்து அதரபானம் பண்ணி மேகலாபரணத்தை யவிழ்த்தவளவில் நகைத்தாள் எ-ம். 44

புருவவிற்கோலியுள்ளம் போழ்ந்துகட் கணைகளோட
வுருவத்தாருடையவொற்றை வலம்புரியொலிப்பவிம்மி
வரிமுலைக்களிநல்யானை மருமம்பாய்ந்துழக்கமன்றல்
விரிமலர்க்கோதைகாம வெஞ்சமம்விளைத்திட்டாளே.

(இ-ள்.) புருவம்-புருவமாகிய, வில்-தனுவை, கோலி-வளைத்து, உள்ளம்-மனத்தை, போழ்ந்து-பிளந்து, கண்-கண்களாகிய, கணைகள்-பாணங்கள், ஓட-ஓடவும், உருவ-வடிவம்பொருந்திய, தாருடைய-மாலையையுடைய, ஒற்றை வலம்புரி-ஒற்றைச்சங்கமாகிய மிடறு, ஒலிப்ப-சத்திக்க, விம்மி-பூரித்து, வரி-சந்தனக்கோலம்வனைந்த, முலை-ஸ்தனங்களாகிய,களி-களிப்பையுடைய, நல்-நல்ல, யானை-யானையானது, மருமம் பாய்ந்து-மார்பினிடத்திற் பாய்ந்து, உழக்க-கலக்க, மன்றல்-வாசனையை, விரி-விரியச்செய்கின்ற, மலர்-மலராற்றொடுத்த, கோதை-மாலையையணிந்த தமயந்தியானவள், காமம்-காமமாகிய,வெஞ்சமம்-வெவ்வியயுத்தத்தை, விளைத்திட்டால்-செய்தாள் எ-று.

தமயந்தியும் புருவவில்முதலிய சாதனங்களைக்கொண்டு நளனோடு காமப்போர் விளைத்தனளென்க.

(க-து.) தமயந்தி புருவவில்வளைத்து, கண்ணென்னு மம்பையெய்து, கண்டமாகிய வலம்புரிச்சங்கு சத்திக்க, முலைகளாகியயானைகள்நளன் மார்பிற் பாய்ந்துகலக்கக் காமப்போர்செய்தாள் எ-ம். 45

திருநுதர்பொடித்தவேர்விற் றேங்கமழ்திலகந்தேயப்
புரிமுறுக்கவிழ்ந்துதாழ்ந்த பொலங்குழைதிருவில்வீச
மருமலர்க்கூந்தல்சோர வசமழிந்துருகிவேந்த
னெரிமணியாரமார்பி னின்றுயில்பொருந்தினாளே.

(இ-ள்.) திரு-அழகிய, நுதல்-நெற்றியின்கண், பொடித்த, உண்டாகிய, வேர்வின்-வேர்வையினாலே, தேம்-வாசனை, கமழ்-வீசுகின்ற, திலகம்-சிந்தூரப்பொட்டு, தேய-அழியவும், புரி-புரிந்த, முறுக்கு-முறுக்குகள், அவிழ்ந்து-நீங்கி, தாழ்ந்த-தொங்கிய காதினிடத்து, பொலம்-பொன்னினாற்செய்த,குழை-குண்டலங்கள், திரு-அழகிய, வில்-பிரகாசத்தை, வீச-வீசவும், மருமலர்-வாசனை பொருந்திய மலர்களையணிந்த, கூந்தல்-அளகபாரமானது, சோர-சரியவும்,

வசமழிந்து-பரவசப்பட்டு, உருகி-மனமுருகி, வேந்தன்-நளமகாராசனுடைய, எரி-பிரகாசிக்கின்ற, மணி-மணிகள்பதித்த, ஆரமார்பின்-பதக்கமணிந்த மார்பினிடத்தில், இன்றுயில-இனிதாகிய நித்திரையை, பொருந்தினாள் - கொண்டனள் எ-று.

இங்ஙனம் காமப்போர் விளைத்த தமயந்தி பரவசப்பட்டு நளன் மார்பில் நித்திரை செய்தனளென்க.

(க-து) தமயந்தி நெற்றிவேர்வையாற் றிலதமழியவும், குண்டலம் பிரகாசிக்கவும், கூந்தலவிழவும், மெய்சோர்ந்து மனமுருகிநளன்மார்பினிடத்திரைசெய்தாள எ-ம். 46

கலவியின்மயக்கந்தீர்ந்த கனிபடுகிளவியாட
னலர்முலையாகந்தைவந் தணிவடமணிந்துவாங்குஞ்
சிலைநுதற்றிலகந்தீட்டித் தேங்கமழ்கூந்தல்கைசெய்
திலைமலர்க்கோதைசூட்டி யிழைபலதிருத்தினானே.

(இ-ள்.) கலவியின்-புணர்ச்சியிற் றோன்றிய, மயக்கம்-மயக்கமானது, தீர்ந்த-நீங்கிய, கனிபடு-பழம்போற் சுவைபொருந்திய, கிளவியாடன்-சொற்களையுடைய தமயந்தியினது, அலர்-பரந்த, முலை-ஸ்தனங்களையுடைய ஆகம்-மார்பை-தைவந்து-தடவி, அணி-அழகிய, வடம்-மணிவடங்களை, அணிந்து - தரித்து, வாங்கும்-வளைகின்ற, சிலை-விற்போன்ற, நுதல்-நெற்றியினிடத்து, திலகந்தீட்டி-சிந்துரப் பொட்டிட்டு, தேங்கமழ்-வாசனை வீசுகின்ற, கூந்தல்-கூந்தலை, கைசெய்து-ஒழுங்குசெய்து, இலை-மருமுதலிய விலைகளோடு, மலர்க்கோதை-மலர்மாலையை, சூட்டி-தரித்து, இழைபல-பலவாபரணங்களை, திருத்தினான் -திருந்தச்செய்தான் எ-று.

கணவர் மாதர்க்குக் கலவியிலிவ்வாறு கூந்தன்முதலியவைதிருத்த லியற்கை யாதல் காண்க.

(க-து.) நளன் தமயந்தியைத்தடவிக்கொடுத்து, மணிவடஞ்சூடடி, திலதமிட்டு, கூந்தலைமுடித்து, ஆபரணஞ் சூட்டினான் எ-ம். 47

தெளியுமின்னமிழ்தமன்ன தேம்படுகிளவியாட
னொளிகிளர்முகத்துலாய வோடரித்தடங்கண்போலக்
களியிளஞ்சுரும்பகாணீர் கண்டனவுளவோசொல்லீர்
முளரிநாண்மலரிற்பூத்த முழுநெறிகுவளைப்போதே.

(இ-ள்.) தெளியும்-தெளிந்த, இன்-இனிதாகிய, அமிழ்தமன்ன-அமிர்தம்போன்ற, தேம்படு-மதுரம்பொருந்திய, கிளவியாடன்-சொற்களையுடைய தமயந்தியினது, ஒளி-காந்தியானது, கிளர்-விளங்குகின்ற-முகத்துலாய-முகத்தினிடத் துலாவுகின்ற, ஓடு-காதளவு மோடாநின்ற, அரி - செவ்வரிபரந்த, தடம்-விசாலம்பொருந்திய, கண்போல-கண்கள்போல, களி-களிப்பையுடைய

இளம்-இளமையாகிய, சுரும்புகாள்-வண்டுகளே, நீர்-நீங்கள், கண்டனை-பார்த்தவை, உளவோ-உண்டோ, சொல்லீர்-சொல்லுங்கள், முளரி-தாமரையாகிய, நாள்-அன்றலர்ந்த, மலரின்-மலரின்மேல், பூத்த-உண்டாகிய, முழுநெறி-முழுநெறிப்பை யுடைய, குவளைப்போது-நீலோற்பலங்களை எ-று.

(க-து.) நளன் வண்டுகளே-தமயந்தி கண்போலத் தாமரையிற் பூத்த நீலோற்பலத்தை நீங்கள் கண்டதுண்டோ சொல்லுங்களென்றான் எ-ம். 48

தாமரைப்பொகுட்டின்மேய தாக்கணங்கனையாய்நெஞ்ச
மேமுறவரினுநின்னை யிம்மையிற்பிரியேனென்ன
வாமமேகலையினளு மறுமையிற்பிரிவையென்றுக்
காமருகுவளைப்போலுங் கண்பனியுகுப்பநின்றாள்.

(இ-ள்.) தாமரைப் பொகுட்டில்-தாமரைக் கொட்டையின்மேல், மேய-பொருந்திய, தாக்கணங்கனையாய்-இலக்குமியை யொத்தவளே, நெஞ்சம்-மனமானது, ஏமம்-வருத்தம், உறவரினும்-பொருந்தவந்தாலும், நின்னை-உன்னை, இம்மையில்-இப்பிறப்பில், பிரியேனென்ன-பிரியேனென்றுசொல்ல, வாமம-அழகிய, மேகலையினளும்-மேகலையையணிந்ததமயந்தியும், மறுமையில்-வருபிறப்பில், பிரிவையெனனு-நீ பிரிவையேயென்று, காமரு-அழகிய, குவளைப்போலும்-நீலோற்பலம்போன்ற, கண்-கண்களினின்றும், பனியுகுப்ப-நீர்துளிக்க, நின்றாள்-வருந்திநின்றாள், எ-று.

“நிலைமொழி மறையே வருமொழி மறையே-இருமொழி மறையேயென மூவகைமறை-இவ்விதியால் பிரியேன் என்றது நிலைமொழி யெதிர்மறை.” இவளெந்த சனனத்திலும் பிரியாமலிருத்தல் வேண்டுமென்னு நினைப்புடையவ ளாதலால், இவ்வாறு கூறினாள் என்க.

(க-து.) நளனிப்பிறப்பிற் பிரியேனென்று சொல்லத் தமயந்தி மறுபிறப்பிற் பிரிவையென் றழுதாள் எ-ம். 49

பெய்தொடிகலுழ்வதென்கொல் பிழைத்திலேனருளாயென்னி
லுய்குவன்கொல்லோவின்னே யுள்ளுயிர்துறப்பலென்று
வெய்துயிர்த்தனிச்சப்போதின் மிதிப்பினும்பனிததுவாடுந்
தெய்வமென்கமலப்போது சென்னிமேற்சூடினானே.

(இ-ள்:) பெய்தொடி-தமயந்தியே, கலுழ்வது-நீகலங்குவது, என்கொல்-என்னகாரணம், பிழைத்திலேன்-நானொருகுற்றமுஞ் செய்கிலேன், அருளாயென்னில்-கிருபை செய்யாவிட்டால், உய்குவன் கொல்லோ-பிழைப்பேனோ, இன்னே-இப்பொழுதே, உள்ளுயிர்-உள்ளே யிருக்கின்றவுயிரை, துறப்பலென்று-விடுவேனென்று, வெய்துயிர்த்து-பெருமூச்சுவிட்டு, அனிச்சப்போதில்-அனிச்சப் புட்பத்தில், மிதிப்பினும்-நடந்தாலும், பனித்து-கொப்புளித்து, வா

டும்-வாடாநின்ற, தெய்வம்-தெய்வத்தன்மை பொருந்திய, மெல்-மிருதுவாகிய கமலப்போது-பாதமாகிய தாமரைப்பூவை, சென்னிமேல்-சிரத்தின்மீது, சூடினன்-தரித்துக்கொண்டான் எ-று.

யாவரும் வணக்கத்தின் வசப்படுவதுபோல் மற்றொன்றில் வசப்படாரெ ன்பதுபற்றி, நளனிவ்வாறுசெய்தானெனக.

(க-து.) நளன் தமயந்தியை நீயழுவதென்ன, நானொருகுற்றமுஞ்செய்யவில்லை, கிருபைசெயாவிடி லுயிரைவிடுவேனென்று அவளடியை முடியில் வைத்துக் கொண்டான் எ-ம். 50

குழுமியபறவையாவுங் கூட்டுணப்பொதுவினல்கும்
பழுமரமனையதிண்டோட் பகட்டெழிற்றாமமார்ப
வுழுவலன்போடுநின்னை யொருமையிற்புணர்வதன்றி
யெழுமையுந்தொடருமாதர் சீறடியிறைஞ்சுகென்றூ.

(இ-ள்.) குழுமிய - கூடிய, பறவையாவும் - பறவைக்கூட்டங்களனைத்தும், கூட்டுண - கொள்ளைகொள்ள, பொதுவினல்கும் - பொதுவாகத்தரும் பழுமரமனைய - ஆலமரத்தையொத்த, திண்டோள் - வலிமைபொருந்திய தோளையும், பகட்டெழில் - பகட்டுகின்ற அழகையுடைய, தாமம் - மாலையணிந்த, மார்ப-மார்பினையுமுடையநளமகாராசனே, உழுவலன்போடு-இடையறாதவன்புடனே, நின்னை-உன்னை, ஒருமையில்-இப்பிறப்பில், புணர்வதன்றி கூடுவதல்லாமல், எழுமையும்-எழுபிறபபிலும், தொடரும் - தொடர்ந்துவருகின்ற, மாதர்-மங்கையருடைய, சீறடி-சிறியபாதத்தில், இறைஞ்சுகென்று-வணங்குவாயென்றுசொலலி, எ-று.

யாவர்க்கும் உபகாரஞ்செய்வோனென்பது தோன்ற, பழுமரமனையதிண்டோள் என்றார். இதுவும வருஞ்செய்யுளுங குளகம்.

(க-து.) தமயந்தியானவள் மாலையணிந்தமார்பா-அன்புடனே உம்மை இப்பிறப்பிற் புணர்வதல்லாம லெழுபிறப்பிலும் புணருமாதர்களினடியை வணஙகென்றுசொல்லி எ-ம். 51

கிளிபொருகிளவியாள்பொற் கிண்கிணிசிலம்போடார்ப்பத்
தளிநறுப்பிலிற்றுமென்பூந் தடம்புயத்துதைத்தலோடுங்
களிசெயப்பொடித்தரோமங் கண்டகத்துறுத்திலங்கோ
அளியசீறடிகளென்றல்லலுற்றழுங்கினூனே.

(இ-ள்.) கிளிபொரு-கிளியையொத்த, கிளவியாள் - வசனத்தையுடைய தமயந்தியாளவள், பொன-பொன்னினாற்செய்த, கிண்கிணி-சிறுசதங்கைகள், சிலம்போடு-சிலம்புடனே, ஆர்ப்ப-சத்திக்க, தளி-துளிதுளியாகிய நறு-தேனை, பிலிற்றும்-துளிக்கின்ற, மென்-மிருதுவாகிய, பூம்-புட்பமாலையணிந்த, தடம்-விசாலம்பொருந்திய, புயத்து-புசத்தினிடத்தில், உதைத்தலோடும்-உதைத்த

மாத்திரத்தில், களிசெய-மகிழ்ச்சியைச்செய்ய, பொடித்த-புளகித்த, ரோமம்-மயிர்கள், கண்டகத்து-முட்கள்போல், உறுத்தில்-உறுத்துமாகில், அந்தோ-ஐயோ, அளிய-மிருதுவாகிய, சீறடிகள்-சிறியபாதங்கள், நோமென்று-வருந்துமேயென்று, அல்லலுற்று-துன்பமுற்று, அழுங்கினன்-வருந்தினன், எ-று.

அக்குற்றத்தைத் தமயந்தி பொறுத்தமைதோன்ற, தடம்புயத் துதைத்தென்றும்; அதிலும் அவளுக்கோராச்சரியமான அருமைதோன்ற, அளியசீறடிகளுமென்றல்லலுற் றழுங்கினன், என்றுஞ் சொல்லினர்.

(க-து.) நளன்றோள்களிற் காலாலுதைத்தவளவில், அந்நளன் சிற்றடி நோவுமென்றழுதான. எ-ம். 52

உடைதிரைப்பரவைஞாலத் துயர்ந்தவர்தொழும்புபூண்ட
வடியவரிழைத்ததீமை யருளொடும்பொறுப்பதல்லால்
கொடியவர்போலச்சீறி யாருயிர்குறைப்பர்கொல்லோ
மடலவிழ்கமலப்போதில் வாள்கிடந்தனையகண்ணாய்.

(இ-ள்.) உடை-கரையையுடைக்கின்ற, திரை-அலைகளையுடைய, பரவை-சமுத்திரஞ்சூழ்ந்த, ஞாலத்து-பூமியினிடத்தில்; உயர்ந்தவர்-பெரியோர்கள்-தொழும்புபூண்ட தொண்டுபட்ட, அடியவர் - வேலைக்காரர்கள், இழைத்த, செய்த, தீமை-குற்றத்தை-அருளொடும்-கிருபையுடனே, பொறுப்பதல்லாமல் பொறுத்துக்கொள்வதேயல்லாமல், கொடியவர்போல-தீயர்வபோல, சீறி-கோபித்து, ஆருயிர்-பொருந்தியசீவனை, குறைப்பர்கொல்லோ - சேதிப்பார்களோ, மடலவிழ்-இதழ்கள்விரிந்த, கமலப்போதில்-தாமரைமலரில், வாள் கிடந்தனைய - இரண்டுவாள்களிருந்ததையொத்த, கண்ணாய்-கண்களையுடைய தமயந்தியே, எ-று.

கலவிவேளையில் மாதர்க்கிதஞ்செய்வதே முக்கியம். மற்றவேளையில் ஒருவர்க்கொருவர்செய்யு மரிமாதை அம்மனம் வேண்டுமென்றுதல்ால், நளன் அடியவரிழைத்ததீமை யருளொடும் பொறுப்பதல்லாற் கொடியவர்போலச் சீறியாருயிர்குறைப்பர்கொல்லோ வென்றான்.

(க-து.) தமயந்தியே-பெரியோர் அடியவர்செய்த குற்றத்தைப் பொறுப்பதல்லாம லுயிர்ச்சேதம் செய்வாரோ வென்றான் எ-ம். 53

அள்ளிலைமணிப்பூண்கோதை யருலெனப்பணிதலோடுங்
கள்ளுலாநறியகூந்தல் கலவியினுரைத்தயாவுங்
கிள்ளைகண்மிழற்றுமாறு கேட்டிலநிலவுகாலு
முள்ளெயிறிலங்கச்செவ்வி முகிழ்நகைகோட்டினாளே.

(இ-ள்.) அள்-நெருங்கிய, இலை-அரசிலைபோன்ற, மணிப்பூண்-இரத்நாபரணமணிந்த, கோதை-தமயந்தியே, அருளென-கிருபைசெய்யென்று; பணித

லோடும்-வணங்கினமாத்திரத்தில், கள்-தேனானது, உலாம் - பெருகுகின்ற, நறியகூந்தல்-வாசனைபொருந்தியகூந்தலையுடைய தமயந்தியானவள், கலவியில் புணர்ச்சியில், உரைத்தயாவும்-சொல்லியதெல்லாம், கிள்ளைகள்-கிளிப்பிள்ளைகள், மிழற்றுமாறு-சொல்லும்விதத்தை, கேட்டு - காதிற்கேட்டு, இளநிலவு-இளஞ்சந்திரிகையை, காலும்-கக்குகின்ற, முள்-முருந்துபோன்ற, எயிலி-தந்தங்கள், இலங்க-பிரகாசிக்க, செவ்வி-அழகு, முகிழ்-அரும்புகின்ற, நகை-புன்சிரிப்பை, கோட்டினாள்-செய்தாள், எ-று.

தாமிருவருங் கலவியிற்பேசின வற்றைக்கிளிப்பிள்ளைகள் வெளிப்படுத்தலால், தமயந்தி அங்ஙனம் நாணிநகைத்தனளென்க.

(க-து.) நளன் தமயந்தியே கிருபைசெய்யெனவணங்கினவுடனே, தமயந்தி புணர்ச்சியிற் சொன்னசொற்களைக் கிளிகள்சொல்லக்கேட்டு நகைத்தாள் எ-ம். 54

இன்னமிழ்துயிர்த்தசெவ்வியிளநிலாவுருவுவாய்ந்த
நன்னலங்கனிந்தகோதை நகைமுகவாயில்பெற்றுப்
பொன்னவிர்சுணங்குபூத்த புணர்முலைக்கோடுபுல்லிக்
கன்னவிறோளான்காமக் கடலகத்தழுந்தினானே.

(இ-ள்.) இன்னமிழ்து-இனியவமிர்தத்தை, உயிர்த்த-ஈன்ற, செவ்வி-அழகுபொருந்திய, இளநிலா - இளமைபொருந்தியநிலவையொத்த, உருவுவாய்ந்த-வடிவம்பொருந்திய, நன்னலம்-நல்லநலமானது, கனிந்த-முதிர்ந்த, கோதை-தமயந்தியினது, நகைமுகம்-புன்சிரிப்பையுடையமுகமாகிய, வாயில் பெற்று-தூதுபெற்று, பொன்னவிர் - பொன்னைப்போலும் பிரகாசிக்கின்ற, சுணங்கு-தேமலானது, பூத்த-உண்டாகிய. புணர்-நெருங்கிய, முலை-ஸ்தனமாகிய, கோடு-கொம்பினை, புல்லி-தழுவி, கல்-மலைபோலும், நவில்-சொல்லாநின்ற, தோளான் - தோளையுடையநளமகாராசன, காமக்கடலகத்து-காமமாகியசமுத்திரத்தினிடத்தில், அழுந்தினான்-முழுகினான், எ-று.

தமயந்தியினுடைய நகைமுகத்தை நளன் தன்வேண்டுகோளுக்கு வாயிலாகப்பெற்று காமக்கடலகத் தழுந்தினானெனக்கூட்டுக.

(க-து.) நளன் தமயந்தியைப்புணர்ந்து காமக்கடலிலே மூழ்கினான் எ-ம்.

எறிதிரைசுருட்டுமுந்நீ ரினியதெள்ளமிழ்தினோடும்
பொறையுயிர்த்துலகில்வந்த பொலன்கொடியனையநங்கை
கறைகெழுகுருதிவைவேற் கண்வலைப்பட்டுவெம்போர்த்
திறல்கெழுசிங்கவேறு சிமிழ்ப்புண்டுகிடந்ததன்றே.

(இ-ள்.) எறி-வீசாநின்ற, திரை-அலைகளை, சுருட்டும்-மடக்குகின்ற, முந்நீர்-கடலானது, இனிய-இனிதாகிய, தெள்-தெளிந்த, அமிழ்தினோடும்-அமிர்தத்தினோடும், பொறையுயிர்த்து-பெறப்பெற்று, உலகில்வந்த-உலகத்திற்றோ

ன்றிய, பொலங்கொடியனைய-பொற்கொடியையொத்த, நங்கை - தமயந்தியி னது, கரைகெழு-உதிரந்தோய்ந்த, குருதிவைவேல் - சிவந்தகூரியவேல்போ ன்ற, கண்வலைப்பட்டு-கண்ணின்வலியிலகப்பட்டு, வெம்போர்-வெவ்வியயுத்த த்தில், திறல்கெழு-வலிமைமிக்க, சிங்கவேறு-நளனாகியஆண்சிங்கமானது, சிமி ழ்ப்புண்டு-கட்டுப்பட்டு, கிடந்தது-இருந்தது, எ-று. அன்று-ஏ-அசைகள்,

திறல்கெழு சிங்கவேறு சிமிழ்ப்புண்டு கிடந்தன்றென்பதுபோல, வேட்டு வன்புட் சிமிழ்த்தென்றார் பிறரும்.

(க-து.) தமயந்தி கண்களாகிய வலைகளில் நளனாகியசிங்கம் கட்டுப்பட்டி ருந்தது எ-ம். 56

மல்லலந்தோளினானு மழைமதர்நெடுங்கணாளும்
புல்லுவிட்டொழியிலாவி பொன்றிடுமென்னவெண்ணி
யல்லுநண்பகலும்விள்ளா தணிநலம்பருகியாங்கு
செல்வுழிநிகழ்ந்தவெல்லாஞ் செப்புவான்றொடங்குகின்றேன்.

[இதனால் கவிக்கூற்று சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மல்லல்-வலிபொருந்திய, அம்-அழகிய, தோளினானும்-தோளை யுடையநளனும், மழை-குளிர்ச்சிபொருந்திய, மதர்-களிப்பையுடைய, நெடுங் கணாளும்-நெடியகண்களையுடையதமயந்தியும், புல்லுவிட்டு-ஒருவர்க்கொருவர் தழுவுதலைவிட்டு, ஒழியில்-நீங்கில், ஆவி-உயிரானது, பொன்றிடுமென்ன-இற க்குமென்று, எண்ணி-நினைத்து, அல்லும்-இராப்பொழுதிலும், நண்பகலும்-பக ற்பொழுதிலும், விள்ளாது-நீங்காமல், அணி-அழகினது, நலம்பருகி-நலத்தை யுண்டு, ஆங்கு-அவ்விடத்தில், செல்வுழி-செல்லுமிடத்தில், நிகழ்ந்தவெல்லாம் நடந்தனவனைத்தும், செப்புவான்-சொல்லும்படி, தொடங்குகின்றேன்-ஆரம் பிக்கிறேன் எ-று.

(க-து.) நளனுந்தமயந்தியு மனுபவிடத்துநடந்தவையெல்லாஞ் சொல்லத் தொடங்குகின்றேன் என்றார் நூலாசிரியர் எ-ம். 57

திருந்துயிலாரமார்பன் சேயரிக்கண்ணியோடு
மருத்தியினுவந்துபைம்பொ ன்னணிநகர்க்கேகவெண்ணி
விருப்பொடுவிதர்ப்பர்கோனுங் குணர்த்தலும்விதர்ப்பன்காதற்
புரிக்குழன்மடந்தையோடும் வதுவைமண்டபத்திற்புக்கான்.

[இதனால் வீமன்செய்கை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) திருத்துயில்-இலக்குமிதங்குகின்ற, ஆரமார்பன் - பதக்கத்தை யணிந்தமார்பினையுடைய நளமகாராசன், சேயரிக்கண்ணியோடும் - தமயந்தி யோடும், அருத்தியின்-ஆசையினால், உவந்து-மகிழ்ந்து, பைம்பொன்-பசிய பொன்மயமாகிய, அணிநகர்க்கு-அழகிய மாவிந்தமாநகர்க்கு, ஏகவெண்ணி-

போகும்படிநினைத்து, விருப்பொடு-ஆசையுடன், விதர்ப்பர்கோனுக்கு-வீமராசனுக்கு, உணர்த்தலும்-அறிவித்தலும், விதர்ப்பன்-வீமராசனானவன், காதல்-ஆசையையுடைய, புரிக்குழல்-கட்டுப்பட்டகூந்தலையுடைய, மடந்தையோடும்-துணைவியுடன், வதுவைமண்டபத்தில்-விவாகமண்டபத்தில், புக்கான்-புகுந்தான் எ-று.

(க-து.) நளன் தமயந்தியுடனே தன்னூர்க்குப்போகவெண்ணி வீமனுக்கறிவிக்க, வீமன் தன்மனைவியுடன் கலியாணமண்டபத்துக்கு வந்தான். 58

பொழிகதிர்மணியிற்செய்த புதவுடைக்கடிகொள்வாயில்
குழைமுகம்பொருதவேற்கட் கோதையர்விரைவினோடி
விழைவொடுவிதர்ப்பர்கோமான் போந்தமைவிளம்பலோடும்
மழவிடையனையான்போந்து மாமனைத்தழுவினானே.

[இதனால் நளன்செய்கை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) பொழிகதிர்-கதிர்களைவீசுகின்ற. மணியிற்செய்த-இரத்நங்களாற்செய்த, புதவுடை-கதவையுடைய, கடிகொள்-காவல்கொண்ட-வாயில்-வாசற்படியில், குழைமுகம்-காதின்முகத்தை, பொருத-மோதிய, வேற்கண் - வேல்போன்றகண்களையுடைய, கோதையர் - மாதர்கள். விரைவினோடி-விரைந்துபோய், விழைவோடும்-விருப்பத்தோடும், விதர்ப்பர்கோமான்-வீமராசன், போந்தமை-வந்ததன்மையை, விளம்பலோடும்-சொன்னவளவில், மழவிடையனையான்-இளவேற்றையொத்த நளமகாராசன், போந்து-வந்து, மாமனை-மாமனை, தழுவினான்-தழுவிக்கொண்டான் எ-று.

(க-து.) வீமன்வந்ததைப பெண்கள்சொல்ல நளன் வீமனைத் தழுவினான் எ-ம். 59

மழையுறழ்தடக்கைவேந்தன் மனைப்பெருங்கிழமைபூண்ட
தொழுதகுகற்பினாளைச் சுடர்மணிக்கொம்பினொல்கி
யெழில்குவிந்தனையநங்கை யிறைஞ்சலுமெடுத்துமோந்து
விழைவொடுகுறங்கில்வைத்து மெய்யுறத்தழுவிக்கொண்டாள்.

[இதனால் வீமனுடைய மனைவிசெய்கை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மழையுறழ்-மேகத்தையொத்த, தடக்கை-விசாலம்பொருந்திய கையையுடைய, வேந்தன்-வீமராசன், மனை-வீட்டுக்கு, பெருங்கிழமைபூண்ட-பெரியவுரிமையைக்கொண்ட, தொழுதகு-வணங்கத்தக்க, கற்பினாளை-கற்பையுடையதாருகாசனியை, சுடர்-காந்தியையுடைய, மணிக்கொம்பின்-இரத்நக்கொம்புபோல், ஒல்கி-வளைந்து, எழில்குவிந்தனைய-அழகெல்லாமொன்றாய்க்குவிந்ததையொத்த, நங்கை-தமயந்தியானவள், இறைஞ்சலும்-வணங்கலும், எடுத்து-எடுத்து, மோந்து-மோந்து, விழைவொடு ஆசையோடு, குறங்கில் வைத்து-துடையின் மேல்வைத்துக்கொண்டு, மெய்யுற-மெய்யிலேபொருந்த, தழுவினாள்-தழுவிக்கொண்டாள், எ-று.

(க-து.) தமயந்தி தன்தாயை வணங்கினவுடன் தாயாகிய தாருகாசனி மகளையெடுத்து முத்தமிட்டுத் தொடையில்வைத்துத் தழுவிக் கொண்டாள். எ-ம். 60

அன்னைதாடொழுதுபின்ன ரலத்தகக்குழம்புதோய்ந்த
பொன்னிதழ்கமலஞ்சேப்பப் புணர்முலைதாங்கலாகா
மின்னுறழ்மருங்குதேம்ப மெல்லெனவொதுங்கிப்போந்து
தன்னுடைத்தாதைபைம்பொற் றளிணைவணங்கினளே.

[இதனால் தமயந்தி செய்கைசொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) அன்னை-தாயினது, தாடொழுது-பாதத்தைவணங்கி, பின்னர்-பின்பு, அலத்தகக்குழம்புதோய்ந்த - செம்பஞ்சுக் குழம்புபடிந்த, பொன்-பொன்னையொத்த, இதழ்-இதழ்களையுடைய, கமலம் பாததாமரைகள், சேப்ப சிவக்க, புணர்-நெருங்கிய, முலை-ஸ்தனங்களை, தாங்கலாகா-தாங்கமாட்டாத, மின்னுறழ்-மின்னலையொத்த மருங்கு-இடையானது, தேம்ப-வருந்த, மெல்லென-மிருதுவாக, ஒதுங்கி-நடந்து, போந்து-வந்து, தன்-தனது, தாதை-வீமராசனுடைய, பைம்-பசிய, பொன்-பொன்னையொத்த, தாளிணை - உபய பாதங்களை, வணங்கினள்-இறைஞ்சினள், எ-று.

(க-து.) தமயந்தி தன்பிதாவாகிய வீமனைவணங்கினள் எ-ம். 61

வணங்கிநுண்மருங்குநோவ வல்லியினொல்கிநின்ற
சுணங்கிளமுலையஞ்சாயற் சுடர்க்கொடிதனையும்வேந்தர்
நிணங்கமழ்குருதிவைவே னளனையுநோக்கிநேரா
ருணங்கியமுன்றில்வேந்த னுவகையங்கடலுளாழ்ந்தான்.

[இதனால் வீமன்மகிழ்ச்சி சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) வணங்கி-தொழுது, நுண்-நுட்பமாகிய, மருங்கு-இடையானது, நோவ-வருந்த, வல்லியின்-கொடிபோல, ஒல்கி-அசைந்து, நின்ற-எதிர்நின்ற, சுணங்கு-தேமல்பூத்த, இள-இளமையாகிய, முலை-ஸ்தனத்தையும், அம்-அழகிய, சாயல்-தோற்றத்தையுமுடைய, சுடர்க்கொடிதனையும் - மின்னற்கொடி போன்றதமயந்தியையும், வேந்தர் - சத்துருக்களாகிய அரசர்களது, நிணம்-மாமிசம், கமழ்-நாறுகின்ற, குருதி-உதிரந்தோய்ந்த, வைவேல் - கூரியவேலையுடைய, நளனையும்-நளமகாராசனையும், நோக்கி-பார்த்து, நேரார்-பகைவீர், உணங்கிய-வாடியிருக்கின்ற, முன்றில்-முற்றத்தையுடைய, வேந்தன்-வீமராசன், உவகையங்கடலுள் - சந்தோஷமாகியகடலினிடத்தில், ஆழ்ந்தான்-முழுகினன் எ-று.

(க-து.) வீமராசன் மகளையுமருமகனையும்பார்த்து மகிழ்ந்தான் எ-ம். 62

பண்ணமைகலினமான்றே ராயிரமிரட்டிபாய்மா
வுண்ணலங்களிநல்யானை யாயிரத்தறுபத்தொன்பான்

கண்ணகன்விசும்புபூத்த கற்பகத்தருவினோடு
மண்ணிழிந்தனையபேரூ ரைம்பதும்வழங்கினானே.

[இது முதல் மூன்றுபாட்டுகளால் ஸ்ரீதனச்சிறப்புகள் சொல்லப்படுகின்றன.]

(இ-ள்.) பண்ணமை-சேணமமைந்த, கலினம் - கடிவாளத்தையுடைய, மான்-குதிரைகட்டிய, தேராயிரம்-ஆயிரந்தேர்களும் இரட்டிபாய்மா-இரண்டாயிரங்குதிரைகளும், அண்ணல்-பெருமையினையும், அம்-அழகினையும், களி-செருக்கினையுமுடைய, நல்-நல்ல, யானையாயிரத்தறுபத் தொன்பான்-ஆயிரத்தறுபத்தொன்பது யானைகளும், கண்ணகன்-இடமகன்ற, விசும்பு-தெய்வலோகம்,பூத்த-மலர்ந்த, கற்பத்தருவினோடும்-கற்பகவிருட்சங்களுடனே,மண்-பூமியினிடத்து, இழிந்தனைய-வந்ததை யொத்த, பேரூரைம்பதும் - ஐம்பது பெரிய கிராமங்களையும், வழங்கினான்-கொடுத்தான், எ-று. ஏ-அசை.

(க-து.) வீமராசன் மகளுக்குத் தேர்-௲-குதிரை-உ௲-யானை-௲௲௬௯-ஊர-௫0-கொடுத்தான் எ-ம். 63

பொருதிரைப்புணரியீன்ற பொலன்கொடியனையசெவ்வி
யரிவையரிருபத்தையா யிரவர்நல்லரங்கிலாடும்
வரிமுலைபவளச்செவ்வாய் வனிதையரெழுநூற்றெண்ம
ரிருபதுகோடிசெம்பொ னினிதினில்வழங்கினானே.

(இ-ள்.) பொரு-மோதுகின்ற, திரை-அலைகளையுடைய, புணரி-திருப்பாற்கடலானது, ஈன்ற-பெற்ற, பொலன்கொடி-இலக்குமியை, அனைய-ஒத்த செவ்வி-அழகையுடைய, அரிவைய ரிருபத்தையாயிரவர்-இருபத்தையாயிரந் தோழிகளும், நல் - நல்ல, அரங்கில் - சபையில், ஆடும் - ஆடாநின்ற, வரும் வளர்ந்து வருகின்ற, முலை - ஸ்தனங்களையும், பவளம் ாவளத்தையொத்த, செவ்வாய்-சிவந்த வாயினையுமுடைய, வனிதையரெழுநூற்றெண்மர்-எழுநூற்றெட்டு நாட்டியப்பெண்களும், இருபதுகோடி செம்பொன் - இருபதுகோடி செம்பொன்னையும், இனிதினில்-இன்பமாக, வழங்கினான்-கொடுத்தான் எ-று.

(க-து.) வீமராசன் தோழிகள-உ௫௲-நாட்டியப்பெண்கள் - 708-பொன்-20-கோடி கொடுத்தான் எ-ம். 64

பொழிகதிர்மணிசெய்கட்டில் புனைமலர்பாயல்பைம்பொ
னிழைபயில்வண்ணப்பேழை யினியசாந்தாற்றியோடு
கிழறவழ்மணிக்கண்ணாடி நித்திலமுகடுவேய்ந்த
வொழுகொளிக்கவரியின்ன வுலப்பிலநல்கினானே.

(இ-ள்.) பொழிகதிர் - கிரணங்களைப்பொழிகின்ற, மணிசெய் - இரத்நங்களாற்செய்த, கட்டில் - கட்டிலும், புனைமலர்ப்பாயல்-புட்ப் சயனமும், பைம்பொன் - பசியபொன்னாற்செய்த, இழைபயில் - ஆபரணங்களைக்

கின்ற. வண்ணப்பேழை-அழகிய பெட்டிகளும், இனிய - இனிமையை யுடைய, சாந்தாற்றியோடு-கால்செய் வட்டத்துடன், நிழறவழ் - ஒளிதவழ் கின்ற, மணிக்கண்ணாடி-இரத்நத்தால் விளிம்புசெய்த கண்ணாடிகளும், நித்தி லம்-முத்துக்களால், முகடுவேய்ந்த-முகடுசெய்யப்பட்ட, ஒழுகொளி-மிகுந்த வொளியையுடைய, கவரி-சாமரைகளும், இன்ன-ஆகியவிவைகளை, உலப்பில்-அளவற்றவைகள், நல்கினான்-கொடுத்தான், எ-று. ஏ-அசை.

(க-து.) வீமராசன் கட்டில்கள்-புட்பசயனங்கள்-பெட்டிகள்-ஆலவட்டங் கள்-கண்ணாடிகள்-சாமரைகள்-இவை முதலிய பலவுங்கொடுத்தான் எ-ம். 65

அல்லியங்கமலநீங்கி யரசரிற்புகுந்துவாழும்
மெல்லியம்பிரியலாற்று விழைவொடுபலகாற்புல்லி
மல்லலந்தெரியல்வீமன் மனைவியர்பலருமாழ்கி
யெல்லையிற்றுயரினோடுந் தனித்தனியிரங்கினாரே.

[இதனால் தமயந்தியின் பிரிவினுக்குத் தாயராற்றாமை சொல்லப்படுகின் றது.]

(இ-ள்) அல்லி-அகவிதழையுடைய, அம்-அழகிய, கமலம்-தாமரைமலரை, நீங்கி-விட்டு, அரசரில்-இராசமனையில், புகுந்து-சேர்ந்து, வாழும்-வாழ்கின்ற, மெல்லியல்-இலக்குமியாகிய தமயந்தியை, பிரியலாற்று-பிரியமாட்டாத, விழை வொடு-ஆசையுடனே, பலகால்-பலதரம், புல்லி-அணைத்துக்கொண்டு, மல் லல்-வளம்பொருந்திய, அம்-அழகிய, தெரியல்-மாலையணிந்த, வீமன்-வீமராச னுடைய, மனைவியர் பலரும்-தேவிமார் பலரும், மாழ்கி-மயங்கி, எல்லையில் அளவில்லாத, துயரினோடும்-துன்பத்தோடும், தனித்தனி - தனித்தனியாக, இரங்கினார்-அழுதார்கள் எ-று. ஏ-அசை.

(க-து.) வீமன் மனைவிகள் பலரும் தமயந்தி பிரிவைச் சகியாம லாசை யோடு அழுதார்கள் எ-ம். 66

பெருந்துயருழந்துவாடும் பிணையனார்தம்மைநோக்கி
விரிந்தபூந்துளவினான்பின் விரைமலர்க்கோதையேக
வருந்திமுன்னுயிர்த்ததெண்ணீர் மறிகடல்வருந்திற்றேயென்
றருந்தவர்க்கிறைவனான கோதமனாற்றினானே

[இதனால் அதுகண்ட கௌதமர் செய்கை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) பெருந்துயருழந்து-மிகுந்த துன்பத்திலலைந்து, வாடும்-வருந்து கின்ற, பிணையனார்தம்மை-மானையொத்த மங்கையரை, நோக்கி-பார்த்து, விரி ந்த-மலர்ந்த, பூம்-புட்பத்தையுடைய, துளவினான்பின் - துளபமாலையை யுடைய மகாவிஷ்ணுவின் பின்னே, விரை-வாசனைபொருந்திய, மலர்-தாமரை மலரில் வாசமாயிருக்கின்ற, கோதை-இலக்குமியானவள், ஏக-போக, வருந்தி-

வருத்தப்பட்டு, முன்னுயிர்த்த-முன்னேபெற்ற, தெண்ணீர்-தெளிந்த நீரை யுடைய, மறி-புரளாநின்ற, கடல்-சமுத்திரமானது, வருந்திற்றோ வென்று-வருத்தமுற்றதோவென்று, அருந்தவர்க்கு-அரியதவத்தையுடையவர்க்கு,இறைவனை-அரசனை, கோதமன்-கௌதமன், ஆற்றினன்-தேற்றினன் எ-று.

(க-து.) கௌதமர் வீமன் மனைவிகளைத் தேற்றினர் எ-ம். 67

அன்னையரம்மெலோதித் தோழியையருளினோக்கி
யுன்னினுமிவன்மேற்காத லுளமெனவுரைக்கிலேமா
லென்னினுமின்றுதொட்டு மின்னுயிர்த்தோழியல்லை
மின்னனாட்கன்னைநீயே வேண்டுவபுரிதியென்றார்.

[இதனால் தாயர் உடன்செல்லு முயிர்த்தோழிக்குக் கூறினமை சொல்லப்படுகின்றது]

(இ-ள்.) அன்னையர்-தாய்மார்கள், அம்-அழகிய, மெல் - மிருதுவாகிய, ஓதி-கூந்தலையுடைய, தோழியை-உயிர்ப்பாங்கியை, அருளின்-கிருபையினால், நோக்கி-பார்த்து, உன்னினும்-உன்னைப் பார்க்கிலும், இவண்மேல்-இந்தத் தமயந்தியின் மீது, காதல்-ஆசை, உளமெனு-உள்ளோமென, உரைக்கிலேம்-சொல்லுகின்றிலேம், என்னினும்-ஆனாலும், இன்றுதொட்டும்-இன்று முதலாகவும், இன்-இனிதாகிய, உயிர்த்தோழியல்லை-உயிர்ப்பாங்கியல்லை, மின்னனாட்கு-மின்னலையொத்த தமயந்திக்கு, அன்னைநீயே-நீயேதாய், வேண்டு-வேண்டியவைகளை, புரிதியென்றார்-செய்யென்று சொன்னார்கள் எ-று.

(க-து.) தாய்மார்க ளனைவருந் தமயந்தியின் றோழியைப்பார்த்து, இன்று தொடங்கித் தமயந்திக்குத் தோழி நீயல்ல-நீயேதாய். இவளுக்கு வேண்டுமவற்றைச் செய்யென்றார்கள் எ-ம். 68

மணம்புரி படலம். முற்றிற்று.

---

# மீட்சிப்படலம்.



இப்படலத்தால் நளமகாராசன் தமயந்தியோடுந் தனதுநகரத்திற்குப்போகுதல்சொல்லப்படுகின்றது.

அருசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

மற்றினைவநிகழும்வேலைமகிழ்வொடுமாமன்றன்பால்
வெற்றிகொள்குருதிவைவேல்வேந்தர்கோன் விடைகொண்டே
யற்றமில்கேள்விசான்றவமச்சரையினிதிநோக்கி [கி
யிற்றைநாளெழுச்சியென்னவியம்பிழ்முரசறைகவென்றான்.

இதுமுதல் எழுபாட்டுகளால் நளனெழுச்சி சொல்லப்படுகின்றது.

(இ-ள்.) மற்றினை-பின்புயிக்காரியங்கள், நிகழும்வேலை - நடக்கும்பொழுது, மகிழ்வொடு-சந்தோஷத்துடனே, மாமன்றன்பால்-வீமராசனிடத்தில், வெற்றிகொள்-சயத்தைக்கொண்ட, குருதி-இரத்தந்தோய்ந்த, வை - கூர்மைபொருந்திய, வேல்-வேலையுடைய, வேந்தர்கோன்-நளமகாராசன், விடைகொண்டேகி-உத்தரவுபெறறுக்கொண்டுபோய், அற்றமில்-சோர்வில்லாத,கேள்வி-கல்விகள், சான்ற-பொருந்திய, அமசசரை-மந்திரிகளை, இனிதிநோக்கி-இன்பமாகப்பார்த்து, இற்றைநாள்-இன்றையத்தினம், எழுசசியென்ன - புறப்படுதலென்று, இயம்பு-சத்தியாநின்ற, முரசு-பேரிகையை, அறைகவென்றான் - அடியுங்களென்றுசொன்னான் எ-று.

(க-து.) நளன்வீமனிடத்து விடைபெற்றுக்கொண்டு மந்திரிகளைப்பார்த்து இன்றுபுறப்படுதலென்று முரசறையசசொன்னான் எ-ம். 1

(கலிவிருத்தம்)

அண்ணலங்குருதிவேலரசனேவலிற்
கண்ணகன்முரசெழுகடலினார்த்தெழ
வெண்ணிடவிடமிலையென்னநேமிசூழ்
மண்ணகவரைப்பெலாமலிந்ததானையே.

(இ-ள்.) அண்ணல்-பெருமைபொருந்திய, அம்-அழகிய, குருதி-இரத்தந்தோய்ந்த, வேல்-வேலாயுதமேந்திய, அரசன்-நளமகாராசனுடைய, ஏவலில்-உத்தரவினால், கண்ணகன்-இடமகன்ற, முரசு-பேரிகையானது, எழுகடலின்-ஏழ்கடலின்ஒலியைப்போல், ஆர்த்தெழ-மிகுந்தொலிக்க, எண் - எள்ளை, இட-இடுதற்கு, இடமிலையென்ன-இடமில்லையென்று சொல்ல, நேமிசூழ்-சமுத்தி



10 நளனுக்கு இந்திரனுகிய நால்வர் வரந்தரல் 486-வது பக்கம்.

ரஞ்சூழ்ந்த, மண்ணகம்-பூமியினுடைய, வரைப்பெலாம்-எல்லையெல்லாம், மலிந்த-நிறைந்தன, தானையே-சேனைகள் எ-று.

(க-து.) நளனேவலால் முரசறையச் சேனைகள்நிறைந்தன எ-ம். 2

நிலவுவெண்கவிகைமேனிழற்றத்தண்மதிக்
கலைநிலாக்குவிந்தனகவரிகால்செய
மலர்தலையுலகெலாம்புரக்குமன்னவன்
சிலையுலாந்தமனியத்தேரிலேறினான்.

(இ-ள்.) நிலவு-பிரகாசியாநின்ற, வெண்கவிகை-வெண்கொற்றக்கொடையை, மேல்-மேலே, நிழற்ற-பிடிக்க, தண்-குளிர்ச்சிபொருந்திய, மதி-சந்திரனுடைய, கலை-சோடசகலைகளின், நிலா-பிரகாசம், குவிந்தன-குவிந்ததோற்றம்போல், கவரி-சாமரைகள், கால்செய-காற்றைச்செய்ய, மலர்தலையுலகெலாம்-பரந்தவிடத்தையுடையஉலகமுழுதும், புரக்கும்-இரட்சிக்காநின்ற, மன்னவன் அரசன், சிலை-மலைபோல், உலாம்-உலாவுகின்ற, தமனியம்-பொன்னாலாகிய, தேரில்-இரதத்தின்மீதில், ஏறினான்-ஏறிக்கொண்டான் எ-று.

(க-து.) நளன தேரிலேறினான் எ-ம்- 3

கலிகெழுமுரசுகண்கறங்குமோதையாற்
பொலன்முகடுடைந்துமேற்போயிற்றில்லையே
லலர்தலைவிசும்பினிலடங்கலாவதே
நிலமிசையெழுந்துமேனிமிர்ந்ததூளியே.

(இ-ள்.) கலிகெழு-சத்தம்பொருந்திய, முரசுகண்-பேரிகையின்கண்ணானது, கறங்கும்-ஒலிக்கும், ஓதையால்-சத்தத்தினால், பொலன்-அழகுபொருந்திய, முகடு-அண்டமுகடானது, உடைந்து-உடைபட்டு, மேற்போயிற்றில்லையேல் - மேலண்டங்களிற்போகாமற்போனால், அலர்தலை - பரந்தவிடத்தையுடைய, விசும்பினில்-ஆகாயத்தில், அடங்கலாவதே - அடங்குவதாவதா, நிலமிசை-பூமியின்மீது, எழுந்து-எழும்பி, மேல்-மேலே, நிமிர்ந்த-உயர்ந்த, தூளி-புழுதிகள் எ-று.

(க-து.) புழுதிகள் பேரிகைச்சத்தத்தா லண்டமுடைந்து அப்பாற்போகாவிடிற் பூமிகொள்ளுமா எ-ம். 4

இருங்கடற்றானையி னெழுந்தநுண்டுகள்
பொருங்களிறுமிழ்மதம் பொழிந்ததில்லையேற்
கருங்கடலளறெழப் பருகிக்கார்க்குல
மொருங்குவான்பொழியினு மொழிக்கவொண்ணுமே.

(இ-ள்.) இரும்-பெருமைபொருந்திய, கடற்றானையின்-சேனாசமுத்திரத்தில், எழுந்த-எழும்பிய, நுண்டுகள்-நுண்ணிய பொடிகள், பொரும்-சண்டை

செய்யாநின்ற, களிறு-யானைகள், உமிழ்-கக்காநின்ற, மதம்-மும்மதத்தையும், பொழிந்திலவேல்-பொழியாமற்போனால், கரும்-கறுத்த, கடல்-சமுத்திர சலத்தை, அளறெழ-சேறுபட, பருகி-குடித்து, காக்குலம்-மேகக்கூட்டங்கள், ஒருங்கு-ஒருமுகமாய், வான்-ஆகாயத்தினின்று, பொழியினும் - சொரிந்தாலும், ஒலிக்கவொண்ணுமே-போகக்கூடுமோ எ-று.

(க-து.) யானைகள் மதம் பொழியாவிடில் மேகங்கள் கடலைமுற்றுங்குடித்துப் பொழியினும் புழுதிகளை ஒழிக்கக்கூடுமோ எ-ம். 5

சுடர்விடுபருமணிச்சூட்டராவின்மே
னெடுநிலந்துளங்குறநின்றவாற்றினாற்
படரிருவிசும்பினிற்பாய்ந்தவல்லது
புடவிமேன்மிதித்திலபுரவிவெள்ளமே.

(இ-ள்.) சுடர்-பிரகாசத்தை, விடு-வீசாநின்ற, பருமணி-பருத்த இரத்தினங்கள்பொருந்திய, சூட்டு-சூடிகையையுடைய, அராவின்மேல்-ஆதிசேஷன்மீது, நெடுநிலம்-நெடியபூமி, துளக்குற-அசைவுற, நின்றவாற்றினால் - இருந்தபடியால், படர்-விரிந்த, இரு-பெருமைபொருந்திய, விசும்பினில்-ஆகாயத்தில், பாய்ந்தவல்லது-தாவிச்சென்றன வல்லாமல், புடவிமேல்-பூமியின்மீது, மிதித்தில-நடக்கவில்லை, புரவிவெள்ளம்-குதிரைக்கூட்டங்கள், எ-று. ஏ-அசை.

(க-து.) குதிரைக்கூட்டங்கள் ஆகாயமார்க்கமாகப்போயின எ-ம். 6

புதையிருள்சீத்தொளிபொழியுஞ்செங்கதி
ருதயமால்வரையெழவொளியிழத்தலான்
மதிபலவாய்வெயின்மறைத்தல்போலுமாற்
கதிர்நிலமுத்தவெண்கவிகையீட்டமே.

(இ-ள்.) புதை-நிறைந்த, இருள்-இருளை, சீத்து-கெடுத்து, ஒளி-பிரகாசத்தை, பொழியும்-சொரியாநின்ற, செங்கதிர்-சூரியன், உதயமால்வரையெழ-உயர்ந்த உதயகிரியிலுதிக்க, ஒளியிழத்தலால்-பிரகாசத்தை நீங்குதலால், மதி-சந்திரனானவன், பலவாய்-அநேகரூபமாய், வெயில் - சூரியனை, மறைத்தல் போலும்-மறைத்தலையொக்கும், கதிர்நிலா-நிலவுபோற்கிரணத்தை வீசுகின்ற, முத்தம்-முத்தினாற்செய்த, வெண் - வெளுமைபொருந்திய, கவிகையீட்டம்-குடையின் கூட்டங்கள், எ-று. ஆல்-ஏ-அசைகள்.

(க-து.) குடைக்கூட்டங்கள் அநேகசந்திரனையொத்திருந்தன. எ-ம். 7

மழலையங்கிள்ளையும்வளர்த்தபூவையுங்
குழலுமெய்யுருகடங்கணார்கொண்டுசூழ்வர
விழைவளர்முலையினாளிளநிலாக்கதிர்
பொழிமணிச்சிவிகையிற்போயினாளரோ,

[இதுமுதல் நான்குபாட்டுகளால் தமயந்தியினெழுச்சி சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மழலை-மழலைச் சொல்லையுடைய, அம்-அழகிய, கிள்ளையும்-கிளிகளும், வளர்த்த-தாம்வளர்த்த, பூவையும்-நாகணவாய்ப்புள்ளும், குழை-குண்டலமணிந்த காதுடனே, பொரு-போர்செய்யாநின்ற, தடம்-விசாலமாகிய, கணூர்-கண்களையுடைய தாதியர்கள், கொண்டு - கையிற்கொண்டு, சூழ்வர-சூழ்ந்துவர, இழை-ஆபரணங்களையணிந்த, வளர்-வளர்ந்து வராநின்ற, முலையினள்-ஸ்தனங்களையுடைய தமயந்தி, இளநிலா-இளஞ்சந்திரன்போல, கதிர்-கிரணங்களை, பொழி-சொரியாநின்ற, மணிச்சிவிகையில்-அரத்நப்பல்லக்கின் மீது, போயினள்-போனாள், எ-று. அரோ-அசை.

(க-து.) தமயந்தி பெண்கள் சூழ்ந்துவர அரத்னச் சிவிகையின்மேற் போயினாள். எ-ம். 8

கதிர்மணியடைப்பையுங்கால்செய்வட்டமுந்
ததைமயிர்க்கவரியுந்தாங்கிமெல்லென
வதிர்குரற்கிண்கிணிசிலம்பொடார்ப்பெழ
மதரிநெடுங்கணார்மருங்குபோயினார்.

(இ-ள்.) கதிர்-கிரணங்களையுடைய, மணி-இரத்நத்தினாற்செய்த, அடைப்பையும்-தாம்பூலப் பையையும், கால்செயவட்டமும்-விசிறிகளையும், ததை-நெருங்கிய, மயிர்-மயிரையுடைய, கவரியும்-சாமரைகளும், தாங்கி-சுமந்து, மெல்லென-மெதுவாக, அதிர்-அதிர்ந்த-குரல்-சத்தத்தையுடைய, கிண்கிணி-கிண்கிணிகளும், சிலம்பு-சிலம்புகளுடனே, ஆர்ப்பெழ-ஆரவாரிக்க, மதர்-மதர்த்த அரி-செவ்வரிபரந்த, நெடுங்கணார்-நீண்டகண்களையுடைய மாதர்கள், மருங்கு-பக்கத்தில், போயினார்-போனார்கள், எ-று.

(க-து.) பெண்கள் அடைப்பை-ஆலவட்டம்-சாமரை-இவைகளைத் தாங்கிப் பின் சென்றார்கள் எ-ம். 9

சாந்தணிந்தோங்கியதடங்கொள்வெம்முலை
யேந்திழைத்தோழியரெண்ணின்மங்கையர்
பூந்தருநீழலிற்பொன்னனாரெனக்
கூந்தலம்பிடிமிசைக்குழாங்கொடேகினார்.

(இ-ள்.) சாந்து-சந்தனத்தை, அணிந்து-தரிக்கப்பெற்று, ஓங்கிய-உயர்ந்த தடங்கொள்-விசாலத்தைக்கொண்ட, வெம்-விருப்பத்தைத் தரும், முலை-ஸ்தனத்தினிடத்தில, ஏந்திழை-ஆபரணங்களைத் தாங்கிய, தோழியர்-பாங்கியர்களும், எண்ணில் - எண்ணிக்கையில்லாத, மங்கையர் - பெண்களும், பூவினையுடைய, தரு-கற்பகவிருட்சத்தினது, நீழலில் - நிழலில்வாசம் பண்ணுகிற, பொன்னனாரென-இலக்குமியையொத்த அரம்பைமாதர்கள்போல, கூந்தல் புறமயிரினையுடைய, அம்-அழகிய, பிடிமிசை - பெட்டை யானையின்மேல், குழாங்கொடு-கூட்டங்கொண்டு, ஏகினார்-போனார்கள், எ-று.

(க-து.) தோழிமார்களும் பெண்களும் யானைமேலேறிப்போனார்கள் எ-ம்.

கான்பயின் மரைமலர்ச்செல்விகாமுறு
மான்பயினோக்கியர்மகரயாழிடைத்
தேன்பயிறெள்விளிபாடத்தேரையிற்
கூன்களுஞ்சிந்தொடுகுறளுஞ்சென்றவே.

(இ-ள்.) கான்-வாசனை, பயில்-பொருந்திய, மரைமலர்-தாமரைமலரில் வாசமென்னுகிற, செல்வி-இலக்குமியானவள், காமுறும் - இச்சியாநின்ற, மான்-மான்கள், பயில்-கற்காநின்ற, நோக்கியர்-பார்வையையுடைய மாதர்கள் மகரயாழிடை-மகரவீணையினிடத்தில், தேன்பயில்-தேனபோல்மதுரம்பொருந்திய, தெள்விளிபாட-தெள்விளியென்னும் இராகத்தைப்பாட, தேரையின்-தேரைபோல், கூன்களும்-கூனரும். சிந்தோடு-அவயவ மற்றவருடன்,குறளும் குள்ளரும், சென்றவே-போயினர் எ-று.

கூன்-சிந்து-குறள்-என்பன உயர்திணைப் பொருளவேனும், சொல்ல லஃறிணையாதலிற் சென்றவென்றார்.

(க-து.) பெணகள் மகரயாழ்பாடக் கூனரும், அவயவ வீனரும், குள்ளரும் போனார்கள் எ-ம். 11

கொடிகளுங்குடைகளுங்குழுமப்பல்லியங்
கடலுடைந்தாலெனக்கறங்கியார்த்தெழ
வடிகெழுகுருதிவேன்மன்னர்சூழ்வர
நிடதநாடடைந்தனனேமிவேந்தனே.

[இதுமுதல் நான்குபாட்டுகளால் நளன் தமயந்தியோடு நிடதநாட்டாரெதிர்கொள்ளச் சென்று தனது மாவிந்த நகரத்துள்ள அரண்மனையை யடைந்தமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கொடிகளும்-துவசங்களும், குடைகளும்-கவிகைகளும், குழும-சுற்றிவர-பல்லியம்,-நானாவிதவாத்தியங்கள், கடலுடைந்தாலென - சமுத்திரமுடைந்து வருதல்போல, கறங்கியார்த்தெழ-குமுறியாரவாரிக்க, வடிகெழு-வடித்தல் பொருந்திய, குருதி-இரத்தம் தோய்ந்த, வேல்-வேலாயுதத்தை, யுடைய, மன்னர்-அரசர்கள், சூழ்வர-சூழ்ந்துவர, நிடதநா டடைந்தனன்-நிடததேயத்தைச் சேர்ந்தான், நேமி-உலகத்தையுடைய, வேந்தன் - நளமகாராசன் எ-று.

(க-து.) நளன் அரசர்கள் புடைசூழ்ந்துவர நிடதநாட்டைச் சேர்ந்தான் எ-ம். 12

அருமறைமுனிவருமமைச்சர்வெள்ளமுங்
குரைகடற்றானைநிங்குரவர்கூட்டமு

முரசொலியதிர்குரன்முகிலினார்த்தெழ
விருநிலக்கிழவனையெதிர்கொண்டாரரோ.

(இ-ள்.) அரும்-அரிதாகிய, மறை-வேதத்தையுடைய, முனிவரும்-வேதியரும், அமைச்சர் வெள்ளமும்-மந்திரிகளின் கூட்டமும், குரை-சத்தியாநின்ற, கடற்றானையும்-சேனாசமுத்திரமும், குரவரீட்டமும்-பெரியோர்கள் கூட்டமும் முரசொலி-பேரிகையின்சத்தமானது, அதிர்குரல்-அதிர்கின்ற குரலையுடைய, முகிலின்-மேகம்போல, ஆர்த்தெழ-ஆரவாரிக்க, இரு-பெரிய, நிலக்கிழவனை-பூமிக்குரிய நளமகாராசனை, எதிர்கொண்டார்கள் எ-று. அரோ-அசை.

(க-து.) முனிவர்களும், மந்திரிகளும், சேனைகளும், பெரியோர்களும், நளனுக்கெதிர்வந்தார்கள எ-ம். 13

அகழியங்கடல்புடையணிந்துநீனிற
முகிறவழ்மூதெயின்முற்றியின்னகிற்
புகைகமழெரிமணிப்பொன்செய்மாடத்தி
னகைநிலாமதிதவழ்நகரமெய்தினான்.

(இ-ள்) அகழி-கிடங்காகிய, அம்-அழகிய: கடல்-சமுத்திரத்தை, புடையணிந்து-பக்கத்தில் தரித்து, நீனிற-நீல நிறம்பொருந்திய, முகிறவழ்-மேகந்தவழாநின்ற, மூதெயில்-பழமையாகிய மதில், முற்றி-சூழ்ந்து. இன்னகில்-இனிய அகிலினது, புகை-புகையானது, கமழ்-பரிமளியாநின்ற, எரி-பிரகாசம் பொருந்திய, மணி-இரத்நத்திலும், பொன்செய்-பொன்னாலும்செய்த, மாடத்தின் உப்பரிகையின் மீது, நகை-பிரகாசியாநின்ற, நிலா சந்திரிகையையுடைய, மதிதவழ்-சந்திரன் தவழாநின்ற, நகரம்-மாவிந்தநகரத்தை, எய்தினான்-சேர்ந்தான் எ-று.

(க-து.) நளன் மாவிந்தநகரத்தைச் சேர்ந்தான் எ-ம். 14

பொருவருங்கங்கைநீர்நிறைத்துப்பூசுர
ரெரிமணிப்பொற்றசும்பேந்திமுன்வர
விரைகமழ்செழுந்தொடைவீமன்மாதொடுந்
திருவளர்கோயிலிற்செல்வனெய்தினான்.

(இ-ள்:) பொருவரும்-ஒப்பில்லாத, கங்கைநீர்-கங்காசலத்தை, நிறைந்து பூரித்த, பூசுரர்-வேதியர்கள், எரிமணி-பிரகாசம்பொருந்திய இரத்நமழுத்திய, பொற்றசும்பு-பொன்னாற்செய்தபூரணகும்பத்தை, ஏந்தி-தாங்கி, முன்வர-எதிர்வர, விரை-வாசனை, கமழ்-பரிமளியாநின்ற, செழும்-செழுமையாகிய, தொடை-மாலையையணிந்த, வீமன்மாதொடும்-தமயந்தியினுடனே, திருவளர்-இலக்குமிவாசம்பண்ணுகின்ற, கோயிலில்-அரண்மனையில், செல்வன்-நளமகாராசன், எய்தினான்-சேர்ந்தான் எ-று.

(க-து.) பிராமணர்கள் கங்கையைப் பொற்குடத்திற்கொண் டெதிர்வர, நளமகாராசன் தமயந்தியுடனே அரண்மனையிற் சேர்ந்தான் எ-ம். 15

மீட்சிப்படலம் முற்றிற்று.

---

## கலிதோன்றுபடலம்



இப்படலத்தால் தமயந்தியின் விவாகத்தைக்கருதிவந்த கலி அவளை நளன் விவாகஞ்செய்தானென்னும் பொறாமையால் அவனை வருத்துதற்கு அவனது நகரத்திற்றோன்றிக் காலம் பார்த்திருத்தல் சொல்லப்படுகின்றது.

கலி விருத்தம்.

ஈங்கிவனின்னணமிருப்பவானிடைப்
பூங்கழல்விண்ணவர்போகுமேல்வையிற்
றீங்குறுபடுபழிதீதுசூழ்வர
வாங்கவர்முன்கலியடைந்ததோதுவாம்.

[இதனால் கலிக்கூற்று சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) ஈங்கு-மாவிந்தமாநகரத்தில், இவன்-இந்தநளமகாராசன், இன்னணம்-இவ்வாறு தமயந்தியோடு மகிழ்ந்து இருப்ப-இருக்க, வானிடை-ஆகாயத்தினிடத்தில், பூ-அழகிய, கழல்-வீரகண்டாமணியையணிந்த, விண்ணவர்-தேவர்கள், போகுமேல்வையில்-போகுஞ் சமயத்தில், தீங்குறு-குற்றம்பொருந்திய, படுபழி-படுபெழியும், தீது-பொல்லாங்கும, சூழ்வர-சுற்றிக் கொண்டுவர, அவர்முன் - அந்தத்தேவர்களுக்கெதிரில், கலி - கலிபுருஷனானவன், அடைந்தது-வந்ததை, ஓதுவாம்-சொல்லுகிறோம் எ-று. ஆங்கு-அசை.

(க-து.) நளன் மாவிந்தமாநகரிலிருக்கத் தேவர்கள் போகும்போது அவர்கள் முன் சனிபகவான் வந்ததைச் சொல்லுவோம் எ-ம். 1

வந்தவெங்கொடுங்கலிதன்னைவான்பட
ரிந்திரன்யாண்டுநீயேகின்றாயெனச்
சந்தணிமுலைத்தமயந்திமன்றல்கேட்
டந்தமில்வேட்கையாலடைந்துளேனென்றான்.



11 நளனுக்கு தமயந்திக்கும் திருமணம்492-வது பக்கம்.

[இதனால் தமயந்தி சுயம்வரத்தினின்று நீங்கிச் சுவர்க்கலோகம்நோக்கிச் செல்லுந் தேவர்கட்கு எதிர்ப்பட்ட சனிபகவானை இந்திரன்வினவலும்,அதற்கவனுத்தரமுஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) வந்த-எதிரில் வந்த, வெம்-வெவ்விய, கொடும் - கொடுமையையுடைய, கலிதன்னை-கலிபுருஷனை, வான்-தெய்வலோகத்தை நோக்கி, படர்-போகின்ற, இந்திரன்-தேவேந்திரன், யாண்டு-எவ்விடத்துக்கு, நீ-நீ, ஏகின்ரு யென-போகின்ரு யென்று கேட்க, சந்தணி-சந்தனத்தை யணிந்த, முலை-ஸ்தனங்களையுடைய, தமயந்தி-தமயந்தியினது, மன்றல்-கலியாணத்தை, கேட்டு-கேள்விப்பட்டு, அந்தமில்-முடிவில்லாத, வேட்கையால்-ஆசையினால், அடைந்துளேனென்றான்-வந்தேனென்றான் எ-று.

(க-து.) இந்திரன் சனிபகவானை எங்கே போகின்ருயெனக் கேட்க, அச்சனிபகவான தமயந்திவிவாகத்திற்குப் போகின்றேனென்றான் எ-ம். 2

என்றலுமமரர்கோன்முறுவலெய்தியம்
மன்றலுக்கோதனிவந்ததீங்கெனு
வென்றிவேனிடதர்கோன்றனக்குமென்றொடை
துன்றிருங்கூந்தலாள்சூட்டினுளென்றான்.

[இதனால இந்திரனவனுக்கறிவித்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) என்றலும்-இப்படி யென்று சொன்னவளவில், அமரர்கோன்-தேவேந்திரன். முறுவலெய்தி-சிரித்து, அம்மன்றலுக்கோ-அந்தக் கலியாணத்திற்கா, தனி-தனியாய், வந்ததீங்கெனு-இவ்விடத்தில் வந்ததென்று,வென்றி-வெற்றிபொருந்திய, வேல்-வேலையுடைய, நிடதர்கோன்றனக்கு-நளமகாராசனுக்கு, மென்றொடை-மிருதுவாகிய மாலையை, துன்று-நெருங்கிய, இரும்-பெருமை பொருந்திய, கூந்தலாள்-கூந்தலையுடைய தமயந்தி, சூடடினுளென்றான்-அணிந்தாளென்று சொன்னான் எ-று.

(க-து.) இந்திரன்தமயந்தி நளனுக்கு மாலையிட்டாள் என்றான் எ-ம். 3

விண்ணவரனைவரும்வெள்கப்பூந்தொடை
மண்ணகத்தரசனுக்கணியுமாணிழை
யெண்ணமுங்கெடுத்தவட்பிரிப்பனீண்டெனுக்
கண்ணழற்கதுவவெங்கலியுங்கூறினான்.

[இதனால் அதற்குச் சனிபகவான்வெகுண்டுரைத்தல் சொல்லப்படுகின்றது.[

(இ-ள்.) விண்ணவரனைவரும-தேவர்கள்யாவரும், வெள்க-வெட்கப்பட, பூந்தொடை-புட்பமாலையை, மண்ணகத்தரசனுக்கு-பூலோகத்தரசனுக்கு,அணியும்-தரித்த, மாணிழை-மாட்சிமைபொருந்திய வாபரணங்களையுடைய பெண்

ணின்று, எண்ணமும்கெடுத்து-நினைப்பையுங்கெடச் செய்து, அவள்-அவளை, பிரிப்பன்-பிரித்துவிடுவேன்; ஈண்டென்று-இவ்விடத்தென்று, கண்ணழல்கதுவ-கண்ணில்நெருப்புப்பொறி பறக்க, வெங்கலியும்-வெவ்விய கலிபுருஷனும், கூறினன்-சொன்னான் எ-று.

(க-து.) தேவர்கள்வெட்க நளனுக்கு மாலைதரித்த தமயந்தியை பிரிப்பேனென்று சனிபகவான் சொன்னான் எ-ம். 4

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அருந்ததிக்கற்பினல்லாளரசிளங்குமரன்றன்னைப்
பிரிந்திடவியற்றிப்பின்னர்பெறுவதுதீமையன்றோ
விரிந்தநூற்கேள்வியென்னும்பிறர்மனைவிழையவுள்ளம்
பொருந்தியதெவன்கொல்கல்லாப்புல்லரிற்புகழின்மிக்கோய்.

[இதனால் அவனை இந்திரன் தகாதசெயலெனக்கூறி மறுத்தமை சொல்லப்படுகின்றது.

(இ-ள்.) அருந்ததி - அருந்ததியை யொத்த, கற்பின்-பதிவிரதத்தையுடைய, நல்லாள்-தமயந்தி; அரசிளங்குமரன்றன்னை - இளமை பொருந்திய ராசகுமாரனை நளமகாராசனை, பிரிந்திடவியற்றி-நீங்கும்படிசெய்து, பின்னர்-பின்பு, பெறுவது-அந்தமாதைப்பெற்றுக்கொள்வது, தீமையன்றோ-குற்றமல்லவோ, விரிந்த-பரந்த, நூற்கேள்வி-நூல்விசாரணை, என்னும்-யாதுபயனைத்தரும்; பிறர்மனைவிழைய-பிறர்மனைவியைவிரும்ப, உள்ளம்பொருந்திய தெவன்-மனஞ்சம்மதித்ததுஎன்னகாரணம், கல்லா-படியாத, புல்லரில்-மூடரைப்போல், புகழின்மிக்கோய்-கீர்த்தியின்மிக்கவனே எ-று. கொல்-அசை

(க-து.) இந்திரன் நளனைவிட்டுத் தமயந்தியைப்பிரித் தவளைப்பெறுவது குற்றமல்லவா: பிறன்மனைவியை யிச்சிப்பதென்ன என்றான் எ-ம். 5

இனையனவமரர்கூறவிருகையும்புடைத்துநக்குப்
புனைமலர்க்கோதைநல்லார்புணர்முலைகுழையப்புல்லி
வினைதுகினெகிழ்க்குமின்பவாழ்வினையன்றிமற்றோர்
நினைவருமின்பமுண்டேனிகழ்த்துதிர்நீவிரென்றான்.

[இதனால் சனிபகவான் அதனை ஏற்காதுரைத்தமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) இனையன-இப்படிப்பட்டவைகளை, அமரர்கூற-தேவர்கள் சொல்ல, இருகையும்-இரண்டுகைகளையும், புடைத்து-கொட்டி, நக்கு-சிறித்து, புனைமலர்க்கோதைநல்லார்-மலரால்அலங்கரிக்கப்பெற்றகூந்தலை யுடையமாதரது, புணர்முலை-நெருங்கியமுலைகளை, குழையப்புல்லி-குழையும்படிதழுவி, வினை-கட்டியிருக்கின்ற, துகில்-ஆடையை, நெகிழ்க்கும்-அவிழ்கின்ற, இன்ப

வாழ்வினையன்றி - காமவின்பவாழ்வினையல்லாது, மற்றோர்-வேறுமொரு, நினைவருமின்பமுண்டேல் - நிலைத்ததற்கரியவின்பமுண்டாகில், நீத்துயிர்-சொல்லுங்கள், நீவிரென்றான்-நீங்களென்றுசொன்னான் எ-று.

(க-து.) தேவர்களிவ்வாறுசொல்லச் சனிபகவான் பெண்களின்பத்தைப் பார்க்கிலும் வேறின்பமுண்டானாற் சொல்லுங்களென்றான் எ-ம். 6

மறைநெறிபிறழக்கூறுமிவனொடும்வாய்மைகூறி
லறநெறிதிறம்புமென்னாவமரரும்விசும்பிற்போனார்
தெறுதொழிற்கலியுங்காமஞ்சிதைந்துமீதூரவேத
நெறிமுறைவழுவல்செல்லாநிடதநாடதனிற்சென்றான்.

[இதனால் அவன்சொல்லைக்கேட்டல்சகியாததேவர்கள்செயலு மவன்செயலுஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மறைநெறி-வேதவழி, பிறழ-மாறுபட, கூறும்-சொல்லும், இவனொடும்-இக்கலியினோடும், வாய்மைகூறில்-உண்மைபேசில், அறநெறி - தருமவழி, திறம்புமென்னா-கெடுமென்று, அமரரும்-தேவர்களும், விசும்பிற்போனார் சொர்க்கத்தைச்சேர்ந்தார்கள், தெறு-கொல்லாநின்ற, தொழில்-செய்கையையுடைய, கலியும்-கலிபுருஷனும், காமம்-விரகமானது, சிதைந்து-வரம்புகடந்து, மீதூர-அதிகரிக்க, வேதநெறிமுறை-வேதவழியின்முறையானது, வழுவல்செல்லா-மாறுபடாத, நிடதநாடதனில்-நிடததேயத்தில், சென்றான்-போனான் எ-று.

(க-து.) தேவர்களிவனுடன்பேசிற் றருமங் கெடுமென்று சுவர்க்கத்திற்குப்போனார்கள். சனிபகவான் நிடதநாட்டிற்குப் போனான் எ-ம். 7

மல்லலம்பழனவேலிவளங்கெழுநிடதநாட்டி
னல்லலுற்றரிதிற்செல்லுங்கொடுங்கலியமரர்வேட்ப
வெல்லையில்வேள்வியாற்றியருமறைபயில்வோரெங்குஞ்
சொல்லியபதங்கள்கேட்டுத்துணைப்பதம்பெயர்த்திலானே.

[இதுமுதல் ஆறுபாட்டுகளால் சனிபகவான்நிடதநாட்டின்கண்தனதிருக்கைக்கிடமின்றியலைதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மல்லல்-வளம்பொருந்திய, அம்-அழகிய,பழனம்-கழனிகளேயே வேலி-வேலியாகவுடைய, வளங்கெழு-செல்வம்பொருந்திய, நிடதநாட்டின்-நிடததேயத்தில், அல்லலுற்று-துன்புமுற்று, அரிதிற்செல்லும்-அருமையாகப் போகாநின்ற, கொடுங்கலி-கொடியகலியானவன், அமரர்வேட்ப-தேவர்கள் விரும்ப, எல்லையில்-அளவில்லாத, வேள்வியாற்றி-யாகத்தைச்செய்து, அரும்-அரியதாகிய, மறைபயில்வோர்,வேதப்பிராமணர்கள், எங்கும்-எவ்விடத்திலும், சொல்லிய-சொன்ன,பதங்கள்கேட்டு,வேதப்பதங்களைக்காதிற்கேட்டு, துணைப்பதம்-தன்னுடையவுபயபதங்களை,பெயர்த்திலான்-எடுத்துவைக்கவில்லைஎ-று.

(க-து.) சனிபகவான் நிடதநாட்டில் வேதப்பிராமணர்கள் சொல்லும் வேதப்பதங்களைக் கேட்டுத் தன்னிருபதங்களை யெடுத்துவையாதிருந் தான் எ-ம். 8

செம்மையிற்றிறம்பல்செல்லாமறைபயில்சிறுவனுங்கோர்
கைம்மையைக்கலத்தனேக்கிக்களிமகிழ்சிறந்துசெல்வான்
வம்மினென்றமரர்தம்மைமறையினூர்கூறக்கேளா
வம்மவோமகமென்றஞ்சியலக்கணுற்றகன்றுபோனான்.

(இ-ள்.) செம்மையில்-நன்னெறியில், திறம்பல்செல்லா - மாறுபடாத, மறைபயில்-வேதம்படிக்கின்ற, சிறுவன்-ஒருபிரமசாரி, ஆங்கோர்-அங்கொரு, கைம்மையை-கைம்பெண்ணை, கலத்தனேக்கி-புணர்தலைப்பார்த்து, களி-செருக்கையுடைய, மகிழ்-சந்தோஷம், சிறந்து-அதிகரித்து, செல்வான்-போகின்றவன், வம்மினென்று-வாருங்களென்று, அமரர்தம்மை-தேவர்களை, மறையினூல்-வேதத்தினாலே, கூற-அழைக்க, கேளா-கேட்டு, அம்மவோ-ஓஅம்ம,. மகமென்று-யாகமென்று, அஞ்சி-பயந்து, அலக்கணுற்று-துன்பமுற்று, அகன்று போனான்-அப்புறம்போனான் எ-று.

(க-து.) பிரமசாரி கைம்பெண்ணைக்கலந்ததைக்கண்டுசெல்லுஞ் சனிபகவான், வேதத்தினால் தேவர்களை வாருங்களென்றழைக்கக்கேட்டு ஓர்யாகமென்றஞ்சிப்போனான் எ-ம். 9

அருமறைமுனிவர்யாருமோர்கலத்தார்வமோடும்
பருகியவாறுநோக்கித்தீவினைபயந்ததென்று
விரைவினிற்சேறலோடுமன்றமொழிகூறும்வேள்விக்
குரியதுசோமபானமெனவுளமுடைந்துபோனான்.

(இ-ள்.) அரும்-அரிதாகிய, மறைமுனிவர்யாரும்-வேதியர்களெல்லாரும், ஓர்கலத்து-ஒருபாத்திரத்தில், ஆர்வமோடும்-ஆசையுடன், பருகியவாறுநோக்கி-பானம்பண்ணுகின்றநெறியைப்பார்த்து, தீவினைபயந்த, தென்று-தீமையுண்டாயிற்றென்று, விரைவினில்-சீக்கிரத்தில், சேறலோடும்-போனமாத்திரத்தில், மறைமொழி-வேதவசனத்தை, கூறும்-சொல்லும், வேள்விக்கு-யாகத்துக்கு, உரியது-உரித்தானது, சோமபானமென-சோமபானயாகமென்று, உளமுடைந்து-மனங்கலங்கி, போனான்-போயினான்எ-று.

சோமபானம்-மதுபானம்.

(க-து.) சனி வேதியர்யாவரு மோர்கலத்திற்பானம்பண்ணுவதைக்கண்டு செல்பவன், யாகத்திற் குரியது சோமபானமென் றஞ்சிப்போனான் எ-ம். 10

நிழல்கூனிகளிநல்யானைநிடதர்கோன்மகிழ்ச்சிகூர்ந்து
பழமறைக்கிழவர்யாரும்பரிவொடுதேவர்க்குகொள்ள

விழுநிதிபழனநாடுவேண்டுபவெறுப்பநாளும்
பொழிதருபுனலைநீந்திப்போக்கரிதென்னநின்றான்.

(இ-ள்.) நிழல்-தன்னிழலை, சுளி-கோபிக்கிற, களி-செருக்கைப்பொருந்திய, நல்யானை-நல்லயானையையுடைய, நிடதர்கோன்-நளமகாராசன், மகிழ்ச்சிகூர்ந்து-சந்தோஷமிகுந்து, பழமறைக்கிழவர்யாரும் - பழமையாகியவேதப்பிராமணர்களெல்லாரும், பரிவொடும்-ஆசையுடன்,கவர்ந்துகொள்ள-பெற்றுக்கொள்ள, விழுநிதி-மேன்மையாகியதிரவியமும், பழனம்-கழனிகளும், நாடு-ஊர்களும், வேண்டுப-வேண்டியவைகளை, வெறுப்ப-வெறுக்கும்படியாக, நாளும்-நாள்தோறும், பொழிதரு-தத்தம்பண்ணுகிற, புனலை-சலத்தை, நீந்தி-கடந்து, போக்கரிதென்ன-போகக்கூடாதென்று, நின்றான்-இருந்தான் எ-று.

(க-து.) சனிபகவான் நளன் பிராமணர்களுக்குத் தத்தம்பண்ணுநீரை நீந்திப்போகக் கூடாமனின்றான் எ-ம். 11

கலைவலானொருவன்பொய்மைகட்டுரையாடனோக்கிக்
கொலைபழுத்தொழுகுநெஞ்சங்குழைந்தனன்மகிழ்ந்துசெல்வா
னலர்முலைசுமக்கலாற்றாவையநுண்மருங்குற்பேதை
புலவிதீர்ப்பதற்குக்கூறும்பொய்யெனப்புலந்துபோனான்.

(இ-ள்.) கலைவலானொருவன்-வித்தையில்வல்லவனொருவன், பொய்மை-பொய்ச்சொல்லை, கட்டுரையாடல்-உறுதிமொழியாகச்சொல்லுதலை, நோக்கி-அறிந்து, கொலை - கொல்லுதல், பழுத்தொழுகுநெஞ்சம் - முதிர்ந்துபெருகாநின்றமனம், குழைந்தனன்-குழைந்தவனாய், மகிழ்ந்து-சந்தோஷித்து, செல்வான்-போகின்றகலியானவன், அலர்-பரந்த, முலை-ஸ்தனங்களை, சுமக்கலாற்றா-சுமக்கமாட்டாத, ஐயம்-சந்தேகத்தைத்தரும், நுண்-நுட்பம்பொருந்திய, மருங்குல்-இடையையுடைய, பேதை-மடந்தையது, புலவி-பிணக்கை, தீர்ப்பதற்கு-போக்குதற்கு, கூறும்-சொல்லும், பொய்யென-பொய்யென்று, புலர்ந்து-மனம்வாடி, போனான்-போயினான் எ-று.

(க-து.) கல்வியில் வல்லோன் பொய்சொல்லுதலைக் கண்டுசெல்லுஞ் சனிபகவான் மாதர் பிணக்கைத்தீர்க்கும் பொய்யென்று வாடிப்போனான் எ-ம். 12

கடிமனையிடங்கடோறுங்கற்புடைமகளிரீட்டங்
கொடிநெடுவீதியெல்லாங்கடவுளர்விழவுதுன்று
நெடிபடுகானமுற்றுந்துறந்துளோர்நெருக்கம்யாண்டு
மடியிடலரிதென்றெண்ணியல்லலுற்றநன்றுபோனான்.

(இ-ள்.) கடி-காவலையுடைய, மனையிடங்கடோறும்-வீட்டினிடங்களெல்லாம், கற்புடை-பதிவிரதத்தன்மைபொருந்திய, மகளிரீட்டம் - மாதர்கூட்டங்கள், கொடி-கொடிகளையுடைய, நெடும்-நீண்ட, வீதியெல்லாம்-தெருக்களை

த்திலும், கடவுளர்விழவு-தேவர்திருவிழா, துன்றும், நெருங்கி யிருக்கும்,நெடி-சிறுவண்டுகள், படு-உண்டாகிய, கானமுற்றும்-காடுமுழுவதும்,துறந்தோர்-முனிவர்களுடைய, நெருக்கம்-கூட்டங்களுள்ளன, (ஆதலால்) யாண்டும்-எவ்விடத்தும், அடியிடல்-அடியெடுத்துவைத்தல், அரிதென்று-அருமையென்று, எண்ணி-நினைத்து, அல்லலுற்று-துன்பமுற்று, அகன்றுபோனான்-நீங்கிப்போயினான் எ-று.

(க-து.)மனைகளெங்குங் கற்புள்ள மாதர் கூட்டத்தாலும், வீதியெங்குந் தேவர் திருவிழாவாலும், காடெங்கு முனிவர் கூட்டத்தாலும், அடிவைக்கவிடமில்லை யென்று சனியன் போனான் எ-ம். 13

இந்நகர்வரைப்பில்யாண்டு மெய்துதற்கரிதென்றெண்ணிச்
சென்னிவான்றடவுதெய்வச் செழுமலர்ச்சோலைபுக்கு
மன்னவனிழைக்குந்தீமை யாதெனமனத்தினோர்ந்து
துன்னருந்தான்றிமீதிற் சூழ்ச்சியோடிருக்குநாளில்.

[இதனால் சனிபகவான் தனதாலோசனை முடிவெய்தும்வகைக் கெதிர் நோக்கி யிருத்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) இந்நகர்-இந்த நகரினுடைய, வரைப்பில்-இடத்தில், யாண்டும்-எவ்விடத்தும், எய்துதற் கரிதென் றெண்ணி - போகுதற்குக் கூடாதென்று நினைத்து, சென்னி-தலையானது-வான்றடவும்-ஆகாயத்தை யளாவுகிற, தெய்வ-தெய்வீகமாகிய, செழும்-செழிந்த, மலர்-புஷ்பத்தையுடைய, சோலைபுக்கு-சோலையை யடைந்து, மன்னவன்-நளமஹாராசன், இழைக்குந்தீமை - செய்யுங் குற்றம், யாதென-எதுவென்று, மனத்தினோர்ந்து-மனதிலாராய்ந்து,துன்னரும்-சேரப்படாத, தான்றிமீதில்-தானறி விருக்ஷத்தின் மீது, சூழ்ச்சியோடு-ஆலோசனையுடனே, இருக்குநாளில்-இருக்கின்ற காலத்தில் எ-று.

தான்றி-கிஷீத்தம். இச்செய்யுளும் மேல்வரும் படலத்தின் முதற்செயுளுங் குளகம்.

(க-து.) சனிபகவான் சோலையிற்புகுந்து, நளன்செய்யுந் தீமை யெது வென்று நினைத்துத் தான்றிமரத்தின்மே லிருக்கின்ற காலத்தில் எ-ம். 14

கலிதோன்று படலம். முற்றிற்று.

கடவுள் துணை.

# இளவேனிற்படலம்.



*இப்படலத்தால் பற்பல லீலைக்குரிய இளவேனிற் காலத்தினது சிறப்புச் சொல்லப்படுகின்றது.*

## கலிநிலைத்துறை

*நமதுசெங்கரங்கடோயினகைமுகவிருந்துசெய்யுங்*
*கமலநாண்மலரைவாட்டும்பனியினைமுழுதுங்காய்வா*
*னிமயமால்வரையின்வெம்போர்க்கெழுந்தனவுலகம்போர்த்த*
*திமிரமேய்ந்துலவும்வெய்யோன்சென்றனன்வடபான்மன்னோ.*

(இ-ள்.) நமது-நம்முடைய, செங்கரங்கள்-சிவந்த கிரணங்கள், தோயில்-பொருந்தினால், நகை-பிரகாசியாநின்ற, முகம்-முகத்துடனே, விருந்துசெய்யும்-விருந்துசெய்யாநின்ற, கமலம்-தாமரையினது, நாள்-புதிய, மலரை-புஷ்பத்தை, வாட்டும்-வாடப்பண்ணும், பனியினை-பனியை, முழுதும்-முழுமையும், காய்வான்-அழிக்கும் பொருட்டு, இமயமால்வரையின்-இமயபர்வதத்தில், வெம்போர்க்கெழுந்தன-வெவ்விதாகிய, யுத்தத்திற் கெழுந்தவன்போல, உலகம்போர்த்த-உலகத்தைமூடிய, திமிரமேய்ந்து-இருளையுண்டு; உலவும் வெய்யோன்-உலவுகின்ற சூரியன், வடபால்-வடதுபக்கத்தில், சென்றனன்-போயினன், எ-று. மன்-ஓ-அசைகள்.

உத்தராயணம் பிறந்ததென்பது கருத்து. [காய்வான் எழுந்தனவெனலால், தற் குறிப்பணியாம்.]

(க-து.) சூரியன் உத்தராயண மாயினன் எ-ம். 1

*இன்றுணைக்கணவர்நீங்கியிடருறுமடவார்சோர*
*மன்றலிற்கொழுநர்ப்புல்லுமடந்தையர்மகிழ்ச்சிகூரக்*
*குன்றிடைப்பிறந்ததென்றற்கொழுந்துமுன்போர்த்ததேமா*
*மென்றளிர்ப்போர்வைபோர்த்துவேனில்வந்திறுத்ததன்றே.*

(இ-ள்.) இன்றுணை-இனியதுணையாகிய, கணவர்-கொழுநரை, நீங்கி-பிரிந்து, இடருறும் - துன்பத்தையடைகின்ற, மடவார் - மாதர்கள், சோர-சோர்வையடையவும், மன்றலில்-விவாகத்தின்கண், கொழுநர்ப்புல்லும்-கணவரைத்தழுவும், மடந்தையர்-மாதர்கள், மகிழ்ச்சிகூர-மகிழ்ச்சியை யடையவும், குன்றிடைப்பிறந்த-பொதியமலையி லுற்பவித்த, தென்றற் கொழுந்து-இளந்தென்றற்காற்றை, முன்-முன்னே, போர்த்த-போர்த்துக்கொண்ட, தேமா-

தித்திப்புப் பொருந்திய மாமரத்தினது, மென்றளிர் - மெல்லியதளிராகிய, போர்வைபோர்த்து-வஸ்திரத்தைப்போர்த்து, வேனில்-வேனிற்காலமானது வந்திறுத்தது-வந்துதங்கியது, எ-று. அன்று-ஏ-அசைகள்.

(க-து.) தணந்தவர் துன்புற மணந்தவரின்புற வேனிற்காலம் வந்தது எ-ம். 2

கள்ளுயிர்த்தலருமுல்லைக்கடிமுகைமுறுவறோன்ற
வள்ளிதழ்க்குவளையுண்கண்மலர்ந்துமாந்தளிர்மென்கையாக்
கிள்ளைமென்குதலைசாற்றிக்கிளரொளிவண்டுபாடத்
தெள்விளியாடவேனிற்றிருமகள்சிறந்தாளன்றே.

(இ-ள்.) கள்ளுயிர்த்து-தேனைத்தந்து, அலரும்-மலருகிற, முல்லை-முல்லையினது, கடி-வாசனைபொருந்திய, முகை-அரும்புகளாகிய, முறுவறோன்ற-பற்கள்தோன்ற, வள்ளிதழ்-கூர்மையாகிய இதழையுடைய, குவளை-நீலோற்பலங்களாகிய, உண்கண்-மையுண்டகண்கள், மலர்ந்து-விழித்து, மாந்தளிர்-மாந்துளிர்கள், மென்-மிருதுபொருந்திய, கை-கையாக, ஆர்-ஆர்ந்த, கிள்ளை-கிளிப்பிள்ளையின்மொழிகளாகிய, மென்-மிருதுபொருந்திய, குதலை-குதலைச்சொற்களை சாற்றி-பேசி, கிளரொளி - விரிந்தவொளியையுடைய, வண்டு-வண்டுகளே, பாணு-பாணர்களாக, தெள்விளிபாட-தெள்விளியென்னு மிராகத்தைப்பாட, வேனிற்றிருமகள்-வேனிற்காலமாகியபெண், சிறந்தாள் - பொலிவையடைந்தாள், எ-று, அன்று-ஏ-அசைகள்.

(க-து.) இளவேனிலென்கின்றபெண் சிறப்படைந்தாள் எ-ம். 3

பூசல்வண்டார்ப்பவேனில்போந்தமைகுயில்கள்கூறப்
பாசிலைபுகுத்ததேமாபைந்தளிரீன்றதோற்றம்
மாசுறுதுகிலைநீத்துமகிழ்நர்தம்வரவுகேட்டுக்
கோசிகச்செம்பொன்னுடைகொம்பனாரசைத்தல்போலும்.

(இ-ள்.) பூசல்-போர்செய்தலையுடைய, வண்டு-வண்டுகள், ஆர்ப்ப-ஆரவாரிக்க, வேனில்-வேனிற்காலம், போந்தமை-வந்ததன்மையை, குயில்கள்கூற-கோகிலங்கள்சொல்ல, பாசிலை-பழுப்பிலைகளை, உகுத்த-உதிர்ந்த, தேமா-தித்திப்புமாமரங்கள், பைம்-பசுமைபொருந்திய, தளிர்-தளிர்களை, ஈன்றதோற்றம்-பெற்றகாட்சியானது, மகிழ்நர்தம்வரவுகேட்டு - புருஷர்களுடையவரவுங்கேட்டு, மாசுறு-குற்றம்பொருந்திய, துகிலை-வஸ்திரத்தை, நீத்து-நீங்கி, கோசிகம்-பட்டாகிய, செம்பொன்-சிவந்தபொன்னாற்செய்த, ஆடை-வஸ்திரத்தை, கொம்பனார் - பெண்கள், அசைத்தல்போலும்-கட்டிக்கொள்ளுதலையொக்கும்; எ-று.

(க-து.) வேனில் வந்ததைக்குயில்களறிவிக்க மாமரந்தளிர்த்த காட்சி, துணைவர் வருதலைக்கேட்டுப் பெண்கள் பொற்சேலைதரித்தாற் போலும் எ-ம். 4

வானுயர்சோலைதோறுமுருகுவாய்மடுத்துவிழுந்
தேனொடுசுரும்புமவண்டும்புதிதுண்டுதெவிட்டியார்ப்பக்
கானமர்குழலினார்தங்கணவர்பாற்புலவிதீர
வேனில்வேட்குலகம்யாவும்விழவயர்ந்திட்டவன்றே.

(இ-ள்.) வான் - ஆகாயத்தில், உயர் - உயர்ந்த, சோலைதோறும் - தோப்புகள்தோறும், முருகு - தேனை, வாய்மடுத்து - வாய்வைத்து, விழும் - விரும்பும், தேனொடு தேன்வண்டுடனே, சுரும்பு - ஆண்வண்டும், வண்டும் - பெட்டை வண்டுகளும், புதிதுண்டு - விருந்துண்டு, தெவிட்டி - தெவிட்டெடுத்து, ஆர்ப்ப - ஆரவாரிக்க, கான் - வாசனை, அமர் - பொருந்திய, குழலினார் - கூந்தலையுடைய மாதர்கள் தம் - தங்கள், கணவர்பால் - புருஷர்களிடத்தில், புலவிதீர் - பிணக்குகள் நீங்க, வேனில் - வேனிற்காலத்துக்குரிய, வேள் - மன்மதனுக்கு, உலகம் யாவும் - உலகங்களெல்லாம், விழவயர்ந்திட்ட - திருவிழாவைச் செய்தன எ-று. அன்று-ஏ-அசைகள்.

(க-து.) மன்மதனுக்கு உலகங்கள்யாவுந் திருவிழாசெய்தன எ-ம். 5

குன்றிடைப்பிறந்ததென்றற்கொழுந்துமேற்படர்ந்ததன்மை
துன்றிருட்பிழம்புசீக்குங்கனைகதிர்ச்சுடரோனுப
தன்றுணைக்கேள்வனீங்கிவடபுலஞ்சார்தலோடுந்
தென்றிசையணங்குமாழாந்துயிர்த்ததுசிவணுமாதோ

(இ-ள்.) குன்றிடை - பொதியமலையினிடத்திலே, பிறந்த - உண்டாகிய, தென்றற் கொழுந்து - இளந்தென்றற்காற்று, மேற்படர்ந்ததன்மை - பூமியின் மீது பரவிய தன்மையானது, துன்று - நெருங்கிய, இருட்பிழம்பு - இருட்கூட்டத்தை, சீக்கும் - கெடுக்கும், கனை - மிகுந்த, கதிர் - கிரணங்களையுடைய, சுடரோனுய - சூரியனாகிய, தன்றுணை - தனக்குத் துணையாகிய, கேள்வன் - புருஷன், நீங்கி - தன்னை நீங்கி, வடபுலம் - வடதிசையாகிய (பெண்ணை), சார்தலோடும், அடைந்த மாத்திரத்தில், தென்றிசையணங்கு - தெற்குத்திக்காகிய பெண், மாழாந்து - மயங்கி, உயிர்த்தது - பெருமூச்சுவிட்டதை, சிவணும் - ஒக்கும், எ-று.

தென்றிசை யணங் கென்றமையால், வடபுல வணங்கென்றுங் கொள்ளப்பட்டது.

(க-து.) தென்றல் வீசியது சூரியன் வடதிசைப் பெண்ணிடத்திற்போனுனென்று தென்றிசைப்பெண் பெருமூச்சுவிட்டது போலும் எ-ம். 6

பன்மணிவரன்றிச்சாரற்பானிறவருவிதாழுந்
தென்வரையினிதினீன்றபுனிற்றிளங்குழவித்தென்றல்
கன்னலஞ்சிலைக்கைமாரன்காதலர்ப்பிரிந்தமாத
ரின்னுயிர்படுப்பவேண்டியியற்றியபார்வையாமால்.

(இ-ள்.) பன்மணி-பலரத்நங்களை, வரன்றி-வாரிக்கொண்டு; சாரல்-பக்கத்தில், பானிறம்-வெள்ளைநிறமாகிய, அருவிதாழும்-அருவிகள்பாயப்பெற்ற, தென்வரை-பொதியமலை. இனிதினீன்ற-இன்பமாகப் பெற்ற, புனிற்றிளம்-மிகவுமிளமைபொருந்திய,குழவித்தென்றல்-இளந் தென்றற்காற்றானது, கன்னல்-கரும்பாகிய, அம்-அழகிய, சிலைக்கை-வில்லைப்பிடித்த கையை யுடைய, மாரன்-மன்மதனானவன், காதலர்-நாயகர்களை, பிரிந்த-நீங்கிய, மாதர்-மாதர்களின், இன்னுயிர்-இனிய உயிர்களை, படுப்ப வேண்டி-பிடிக்க விழைந்து, இயற்றிய-வரவிட்ட, பார்வையாம்-பார்வைமிருகமாகும் எ-று.

பார்வை என்பது, மிருகங்களைப் பிடிக்க அவ்வவ் வினத்தில் ஒன்றை வளர்த்து வைப்பதாம்.

(க-து.) தென்றல் வீசியது மனமதன் நாயகரை நீங்கிய மாதருயிரைப் பிடிக்கவிட்ட பார்வைமிருகம்போலாம் எ-ம். 7

விண்டொடர்பொதும்பர்தோறும்விரைகமழ்போதில்வீழ்ந்து
வண்டினங்குடைந்துபாடமகரந்தமெழுந்ததோற்றங்
கொண்டல்கண்படுக்குந்தேமாங்குயிலினமழைப்பத்தோன்றுந்
திண்டிறலநங்கன்சேனுபாக மொத்திருந்ததன்றே.

(இ-ள்.) விண்டொடர்-ஆகாயத்தையளாவநின்ற, பொதும்பர்தோறும்-சோலைகள்தோறும், விரை-வாசனை, கமழ்-பரிமளியாநின்ற, போதில்வீழ்ந்து-புட்பத்திலிறங்கி, வண்டினம்-வண்டுக்கூட்டங்கள், குடைந்து-மூக்கினுலுழுது பாட-பண்ணைப்பாட, மகரந்தம்-மகரந்தப்பொடிகள், எழுந்ததோற்றம்-எழும்பிய காட்சியானது, கொண்டல்-மேகங்கள், கண்படுக்கும்-நித்திரைசெய்யும், தேமா-தித்திப்புமாமரத்திலிருக்கிற, குயிலினம்-குயிற்கூட்டம், அழைப்ப-கூப்பிட, தோன்றும்-வந்த, திண்டிறலனங்கன்-மிகுந்த வலியையுடைய மன்மதனது சேனுபாகம்-சேனையினின் றெழும்புகிற புழுதியை, ஒத்திருந்தது-ஒப்பாகியிருந்தது, எ-று.

(க-து.) மகரந்தமெழுந்த காட்சியானது மன்மதன் சேனைகளினெழும்பும் புழுதியை யொத்திருந்தது எ-ம். 8

காயெரிமணியிற்செய்தகதிர்முலைமகளிர்கூந்த
லாய்மலருகுத்தல்போலக்குயில்குடைந்தாடவீழ்ந்த
சேபமென்போதுபோர்த்ததிருவநீணிலங்கள்யாவும்
பாயலிர்படுத்தசெம்பொற்படாமெனவிளங்குமன்றே.

(இ-ள்.) காய்-கொளுத்தாநின்ற, எரி-நெருப்பையொத்த, மணியிற்செய்த இரத்நத்தினாற்செய்த ஆபரணத்தினது, கதிர்-பிரகாசம்பொருந்திய, முலை-ஸ்தனங்களையுடைய, மகளிர்-மாதர்களது, கூந்தல்-அளகபாரமானது - ஆய்-ஆராய்ந்த, மலருகுத்தல்போல-புஷ்பத்தை உதிர்த்தல்போல, குயில்-கோகிலங்

கள், குடைந்தாட-கூத்தாட, வீழ்ந்த-விழுந்த, சேய-சிவந்த, மென் மிருதுவாகிய, போது-புட்பங்கள், போர்த்த-மூடப்பெற்ற, திருவ-சிறப்புற்ற, நீணிலங்கள்யாவும் - நீண்டநிலங்களெல்லாம், பாயலில்-சயனத்தில், படுத்த-விரித்த, செம்-சிவந்த, பொற்படாமென-பொன்வஸ்திரத்தைப்போல, விளங்கும்-பிரகாசிக்கும், எ-று. அன்று-ஏ-அசைகள்.

(க-து.) மலர்கள்விழுந்த நிலங்கள்யாவும் பொற்சீலை விரித்தாற்போலும் விளங்கும் எ-ம். 9

தாழ்சினைபூத்தமென்பூந்தண்ணறுஞ்சுண்ணமாடி
வீழ்ந்துணைவருதனோக்கிப்புதுக்கடிமேயதென்று
யாழிசைமிடற்றசெங்கட்கருங்குயிலினிதினாடிக்
கோழரைக்குமரிவாழைக்குருத்திடையொளித்ததன்றே

(இ-ள்.) தாழ் - வளைந்த - சினை-கிளைகளில், பூத்த - புட்பித்த, மென்-மிருதுவாகிய, பூம் - புட்பத்தினது, தண் - குளிர்ச்சி பொருந்திய, நறும் வாசனையாகிய, சுண்ணமாடி-மகரந்தப் பொடியில் வீழ்ந்து, வீழ்-விரும்பாநின்ற, துணை - புருஷனாகிய ஆண்குயிலானது, வருதனோக்கி - வருகிறதைப் பார்த்து, புதுக்கடி-புதுமணத்தை, மேயதென்று-அடைந்ததென்று நினைந்து, யாழிசை-வீணையி னிசையையொத்த, மிடற்ற-கண்டத்தினையும், செங்கண்-சிவந்தகண்களையுமுடைய, கரும்-கறுத்த, குயில் - பெட்டைக் குயிலானது, இனிதினாடி-இன்பத்தினாலே பிணங்கி, கோழ்-செழிப்பாகிய,அரை-அரையையுடைய, குமரிவாழை-இளவாழையினது,குருத்திடை-குருத்தினிடத்தில், ஒளித்தது-ஒளித்துக்கொண்டது எ-று.

புதுக்கடி என்பதில், நூதனவிவாகம் என்பதும்-புதியவாசனை என்பதும்-சிலேடையால் பெறப்பட்டமையால், அதுகண்டு பெட்டைக்குயில் ஊடியதாம் எனக்கொள்க.

(க-து.) ஆண்குயில் வருதலைக்கண்டு பெண்குயில் வாழைக்குருத்திலொளித்தது எ-ம். 10

வசந்தத்துரிமை வசந்தத்தேரெனுந்-தென்றலே வண்டினஞ் சிறுகிளிபூவை-யன்றிலே குயிலிவை யகமகிழ்ந் தார்த்தலே-மாங்கனியுதிர்தலே தெங்கய மலரொடு-வகுளந்தாழை வ்ழைசண்பகம்பிற, முகிழினி தவிழ்த்தலே முன்மாரிடைக்களி-மிகுவனமயின்முதன் மெலிதலேயென்ப. (இ-ள்.) வேனிற்பருவத் துரிமையாவது-மன்மதன்றேராகிய தென்றல் வீசலும், பலவண்டினமுங்கிளியும்பூவையு-மன்றிலுங்குயிலு மெனவிவைமகிழ்தலு-மாங்கனிமிகுதலு நீர்மலரன்றி-மகிழ்தாழைபுன்னை சண்பகம்பலவு-மலர்தலுங்கார்ப்பருவத்துமகிழ்ந்த-கோபங்கேகயப் புண்மயிலிவையே - மெலிதலுமிளவேனிற் பருவத்துரிமை. எனப்படும்.

இளவேனிற் படலம் முற்றிற்று.

# போதுகொய்படலம்



இப்படலத்தால் அன்னகரத்திலுள்ள ஆடவருமாதரும் லீலையோடு மலர்களைக் கொய்தல் சொல்லப்படுகின்றது.

(கலிவிருத்தம்)

இன்னதன்மையவின்னிளவேனில்வா
யன்னபொன்னகராடவர்யாவரும்
பொன்னவாமுலைப்பூவையர்தம்மொடுந்
துன்னுநாண்மலர்ச்சோலைசென்றெய்தினர்.

(இ-ள்.) இன்னதன்மைய-இத்தன்மையாகிய, இன்-இனிமையாகிய,இள வேனில்வாய்-வசந்தகாலத்தினிடத்தில், அன்னபொன்னகர் - அந்நகரத்திலுள்ள,ஆடவர்யாவரும்-புருஷர்களெல்லோரும், பொன்-தேமலானது, அவாம்-விரும்புகின்ற, முலை-ஸ்தனங்களையுடைய, பூவையர்தம்மொடும்-தங்கள்மங்கையரோடுங்கூட,துன்னும்-நெருங்கிய, நாண்மலர்-அன்றலர்ந்தபுஷ்பத்தையுடைய,சோலை-பூஞ்சோலையை,சென்று-போய்,எய்தினர்-அடைந்தார்கள் எ-று.

(க-து.) மாவிந்தநகரத்துப் புஷர்களும் பெண்களும் பூங்காவனத்தில்வந்தார்கள் எ-ம். 1

உள்ளங்கொண்டாரிவரென்றுணர்த்திடப்
புள்ளவாங்கணைவேனிடைப்போதல்போ
லள்ளிலைச்செழுஞ்சோலையிலன்பரைக்
கள்ளுண்கோதையர்கைப்பிடித்தேகினர்

(இ-ள்.) உள்ளம்-எங்கள்மனத்தை, கொண்டார்-அபகரித்துக்கொண்டார்கள், இவரென்று-இவர்களென்று, உணர்த்திட-அறிவிக்க, புள் - வண்டுகள், அவாம்-விரும்புகின்ற, கணை-புட்பபாணத்தையுடைய, வேனிடை-மன்மதனிடத்தில், போதல்போல்-செல்வதுபோல, அள்-நெருங்கிய, இலை-இலைகளையுடைய; செழும்-செழித்த, சோலையில்-சோலையினிடத்தில், அன்பரை-கணவர்களை, கள்ளுண்-தேன்பொருந்திய, கோதையர் - மாலையையணிந்தமங்கையர்கள் கைப்பிடித்து-கையைப்பிடித்துக்கொண்டு ஏகினா-போனார்கள் எ-று.

கள்ளரை அரசரிடத்துப் பிடித்துக்கொண்டுபோய் அவனுணைக்கிலக்காக்குவதுபோல, ஆடவரைக் காமனுக்கிலக்காக்குந்தற்கென்க.

(க-து.) பெண்கள் புருஷர்கள்கையைப் பிடித்துக்கொண்டு சோலையிற்போனார்கள் எ-ம். 2

அணங்குநோய்செயு மைந்துமலரெனிற்
கணங்கொள்போது கஞலியபொங்கர்வாய்
மணந்துசெல்வதை யன்றிமணந்தவர்த்
தணந்துசெல்லுந் தருக்கினர்யாவரே.

(இ-ள்.) ஐந்துமலர்-ஐந்துபுஷ்பங்களே, அணங்கு-வருத்தமாகிய, நோய்-துன்பத்தை, செயுமெனில்-செய்யுமேயாகில், கணங்கொள்-கூட்டங்கொண்ட, போது-புஷ்பங்கள், கஞலிய-நெருங்கிய, பொங்கர்வாய்-சோலையினிடத்தில், மணந்து-கூடி, செல்வதையன்றி-போவதையல்லாமல், மணந்தவர்-கூடினவர்களை, தணந்து-பிரிந்து, செல்லும்-போகின்ற, தருக்கினர்-செருக்கையுடையவர்கள், யாவர்-எவர்கள் (ஒருவருமில்லை) எ-று. ஏ-அசை.

(க-து.) புணர்ந்துபோவ தல்லாது புணர்ந்தவரைப் பிரிந்துபோவாரில்லை எ-ம். 3

திருவனார்தங்குழாத்தொடுசென்றத
னரிவைபஞ்சடியிற்றென்றறிகிலான்
வரைகோண்மார்பினுதைத்தமலரடி
புரைவதீதெனநோக்கினன்போகின்றான்.

(இ-ள்.) திருவனார்தம்-இலக்குமியையொத்த பெண்களுடைய, குழாத்தொடு-கூட்டத்துடன், சென்ற-நடந்த, தன்-தன்னுடைய-அரிவை-நாயகியினது, பஞ்சு-செம்பஞ்சக் குழம்பூட்டிய, அடி-பாதமானது, இற்றென்று-இன்னதென்று, அறிகிலான்-அறியாதவொருவன், வரை-மாலையை, கொள்-உவமைகொண்டிருக்கின்ற, மார்பின்-தனதுமார்பினிடத்தில், உதைத்த-உதைத்த, மலரடி-தாமரைமலர்போன்ற பாதக்குறியை, புரைவது-ஒத்திருப்பது, ஈதென-இந்த அடிக்குறியென்று நோக்கினன்-பார்த்தவனாய், போயினன்-சென்றான் எ-று.

(க-து.) தன்னாயகியினடியிஃதென்றறியாதவன் தன்மார்பிலுதைத்தவடிக்கொப் பிஃதென்றுபார்த்துப் போனான் எ-ம். 4

மையகூந்தலோர்மங்கையசோகினி
லெய்துறாதுயர்போதினையேறுபு
கொய்துமென்றுகுறித்தடிவைத்தலுஞ்
செய்யபோதசினைதொறும்பூத்தவே.

(இ-ள்.) மையகூந்தல்-கறுத்தகூந்தலையுடைய, ஓர்மங்கை-ஒருமங்கையானவள், அசோகினில்-அசோகமரத்தினிடத்தில், எய்துறாது-அடையக்கூடாமல், உயர்-உயரத்திலுள்ள, போதினை-புட்பத்தை, ஏறுபு-ஏறி, கொய்துமென்றுபறிப்போமென்று- குறித்து-நினைத்து, அடிவைத்தலும்-பாதத்தை

வைத்தமாத்திரத்தில், செய்ய-சிவந்த, போது-புட்பங்கள், சினைதோறும்-கிளைகள்தோறும்- பூத்த-மலர்ந்தன எ-று.

(க-து.) ஒருத்தி அசோகமரத்திலேறிக் காலடிவைத்த மாத்திரத்தில்மலர்கள்மலர்ந்தன எ-ம். 5

கோத்தமேகலைக்கோதையர்நோக்கலிக்
பூத்தொசிந்ததிலகமென்போதினிற்
றேத்துளிக்கமர்தெள்விளிவண்டினம்
பார்த்தகண்ணிழல்பாய்ந்தனபோலுமே.

(இ-ள்.) கோர்த்த-கோவையிட்ட, மேகலை-மேகலாபரணத்தையுடைய, கோதையர்-மங்கையர்கள், நோக்கலின்-பார்த்தவளவில், பூத்து-மலர்ந்து, ஒசிந்த-வளைந்த, திலகம்-மஞ்சாடிமரத்தினுடைய, மென்-மிருதுவாகிய, போதினில்-புட்பத்தை, தேத்துளிக்கு-தேனினதுதுளிக்கு, அமர்-பொருந்திய, தெள்விளி-தெள்விளிராகத்தைப்பாடுகின்ற, வண்டினம்-வண்டுக்கூட்டங்கள், பார்த்த-பார்த்ததாகிய, கண்-கண்களினுடைய, நிழல்-சாயல்கள், பாய்ந்தனபோலும்-பரவினபோலும் எ-று.

(க-து.) மஞ்சாடி மலரைப் பெண்கள்பார்த்தமாத்திரத்தில் வண்டுகள் பார்வைபாய்ந்தாற்போலும் எ-ம். 6

காசுலாமுலைக் கன்னியர்புல்லலும்
பாசிலைக்குரவீன்ற பைம்போதினின்
மூசுவண்டின மொய்த்ததுவெம்முலைப்
பூசுநானம் பொறித்ததுபோலுமால்.

(இ-ள்.) காசுலாம்-இரத்நாபரணங்கள் தங்கிய, முலை-ஸ்தனங்களையுடைய, கன்னியர்-மங்கையர்கள், புல்லலும்-தழுவினவளவில், பாசிலை-பசுமைபொருந்திய இலைகளையுடைய, குரவு-குராமரமானது, ஈன்ற-பெற்ற, பைம்-பசிய, போதினில்-புட்பத்தில், மூசு-நெருங்கிய, வண்டினம்-வண்டுக்கூட்டமானது, மொய்த்தது-மொய்த்துக்கொண்டது. வெம்-விருப்பத்தைக்கொடுக்கின்ற, முலை-ஸ்தனங்களில், பூசு-பூசப்பட்ட, நானம்-கஸ்தூரி, பொறித்ததுபோலும்-பூரியதுபோலும் எ-று.

(க-து.) பெண்கள் குராமரத்தைத தழுவினவளவில் அம்மரமலர்க்குள்ள வண்டுக்கூட்டமார்பில் மொய்த்தது, முலைமேற் கஸ்தூரி பூசியது போலும் எ-ம். 7

வஞ்சிநுண்ணிடை மாதர்மிதித்தலிற்
செஞ்சவேதளிரீன்றசெயலைக
ளஞ்செஞ்சீறடி தோய்ந்துவரக்கூறி
பஞ்சியுண்டொளிர் பான்மைகடுக்குமே.

(இ-ள்.) வஞ்சி-கொடியையொத்த, நுண்-நுட்பமாகிய, இடை-மருங்கை யுடைய, மாதர்-மடவார், மிதித்தலில்-மிதித்தலினால்,செஞ்சவே-செம்மையாக, தளிர்-தளிர்களை, ஈன்ற-தந்த, செயலைகள்-அசோகவிருக்ஷங்கள், அம்-அழகிய, செம்-சிவந்த, சீறடி - அம்மடவார் சிற்றடியில, தோய்ந்த-பூசிய, ஆரக்கெறி-செந்நிறத்தை வீசாநின்ற, பஞ்சி-செம்பஞ்சியை,உண்டு-தம்மிடத்திற்றொண்டு, ஒளிர்-பிரகாசிக்கின்ற, பான்மை-தன்மையை, கடுக்கும்-ஒக்கும் எ-று.

(க-து.) அசோகமரங்கள் பெண்களடிகளின் செம்பஞ்சுக்குழம்பு உண் டாற்போ லிருக்கும் எ-ம். 8

அரவமேகலையாயிழையார்க்குயர்
குரவம்பாவைகொடுத்தகொழுதிமென்
முருகுலாமளிமொய்த்தகடம்பினம்
பரிவினாடவெண்பந்துகொடுத்தவே.

(இ-ள்.) அரவம்-சத்தியாநின்ற, மேகலை-மேகலாபரணத்தையுடைய, ஆயிழையார்க்கு-மாதருக்கு, உயர்-உயர்ந்த, குரவம்-குராவிருக்ஷம், பாவை-காய் களாகிய பதுமைகளை, கொடுத்த-கொடுத்த, கொழுதி-கோதி, மென்-மிருது பொருந்திய, முருகு-தேனினிடத்தில், உலாம்-உலாவுகின்ற, அளி-வண்டுகள், மொய்த்த-நெருங்கிய, கடம்பினம்-கடப்பவிருக்ஷங்கள், பரிவின் - விருப்பத் துடனே, ஆட-ஆட, வெண்-வெண்மையாகிய, பந்து-காயாகியபந்தை, கொடு த்த-கொடுத்தன எ-று.

(க-து.) குராமரங்கள் மாதர்க்குக் காய்களைப்பதுமைகளாகக்கொடுத்தன. கடப்பமரங்கள் காய்களைப் பந்துகளாகக் கொடுத்தன எ-ம். 9

மாங்குயிற்குரல்கேட்டுமலருறுக்
கோங்கமாதர்குதலையைக்கேட்டலுந்
தேங்கொள்போதுகிளைதொறும்பூத்தலா
லாங்கதற்கிணையோகுயிலார்ப்பதே.

(இ-ள்.) மா-மாமரத்திலிருக்கிற, குயிற்குரல்-குயிலின்குரலை, கேட்டு-கேட்டு, மலருறு-மலராத, கோங்கம்-கோங்கவிருக்ஷமானது, மாதர்-மடவாரு டைய, குதலையை-குதலைச்சொல்லை, கேட்டலும்-கேட்ட வளவில், தேங் கொள்-தேனைக்கொண்ட, போது - புஷ்பங்களை, கிளைதொறும் - கிளைகள் தோறும், பூத்தலால்-பிஷ்பித்தலால், ஆங்கு-அவ்விடத்தில், அதற்கு-அம்மட வார் சொல்லுக்கு. குயிலார்ப்பது-குயில்கூவுவது, இணையோ - ஒப்பாகுமோ (ஆகாது), எ-று.

(க-து.) குயிலோசையால் மலராதகோங்கு மாதர்குதலோசையால்மலர்த லால், இவர்கள் குரலுக்குக் குயிலோசை யொவ்வாது எ-ம். 10

காவிலன்புடைக்காளையர்தார்குழற்
பூவைகண்ணுறுபூந்துகண்மாற்றலு

மாவியென்னவருகுறைமாற்றவள்
காவியங்கட்கடைகள்சிவந்தவே.

(இ-ள்.) காவில்-பூஞ்சோலையில், அன்புடை-ஆசையையுடைய, காளை-புருஷனானவன், ஓர்-ஒரு, தார்-மாலையணிந்த, குழல்-கூந்தலையுடைய, பூவை-மனையாளது, கண்ணுறு-கண்ணிற்படிந்த, பூந்துகள் - மகரந்தப்பொடியை, மாற்றலும்-துடைத்த மாத்திரத்தில், ஆவியென்ன-தன்னுயிரைப்போல, அருகுறை-பக்கத்திலிருந்த மாற்றவள்-சக்களத்தியினுடைய, காவி-நீலோற் பலத்தை யொத்த, அம்-அழகிய, கட்கடைகள்-கடைக்கண்கள், சிவந்த - சிவந்தன எ-று.

தன்கணவன் சக்களத்தியிடத்தி லன்பினன் என்றறிந்து கோபித்தாளென்க, [பூந்துகண் மாற்றலாகிய காரணமோரிடத்தும்-கண் சிவத்தலாகிய காரியம் மற்றோரிடத்துங் கூறலால், தொடர்பின்மை யணியாம்.]

(க-து.) நாயகன் ஒருநாயகிகண்ணில் விழுந்த மகரந்தத்தைத் துடைத்தவளவில், மற்றொருநாயகி கண்கள் சிவந்தன எ-ம். 11

வாங்குவிற்கைவரைபுரைதோளினன்
றேங்கொள்வண்டுதிளைப்பவடுவுறுங்
கோங்கரும்பினைநோக்கியோர்கோல்வளை
வீங்குவெம்முலைநோக்கலும்வெள்கினாள்.

(இ-ள்.) வாங்குவில்-வளைந்தவில்லை, கை-கையிலேயுடைய, வரைபுரை-மலையையொத்த, தோளினன்-தோளையுடைய ஒருபுருஷன், தேங்கொள்-தேனையுண்ணுகிற, வண்டு-வண்டுகள், திளைப்ப-பொருந்த, வடுவுறும்-வடுவுண்ட, கோங்கு-கோங்குமரத்தினது, அரும்பினை-அரும்பை, நோக்கி-பார்த்து, ஓர்-ஒரு, கோல்வளை-மடந்தையினது, வீங்கு-பருத்த, வெம்-விருப்பத்தைத் தருகின்ற, முலை-ஸ்தனங்களை, நோக்கலும்-பார்க்குமளவில், வெள்கினாள்-அவள் வெட்கப்பட்டாள் எ-று.

வடுவுண்ட கோங்கரும்பையும் நகக்குறியுண்ட ஸ்தனங்களையும் ஒப்பாக்கிப் பார்க்கின்றானென்று நாணினாளென்க.

(க-து.) ஒருபுருஷன் கோங்குமலரில் வண்டுகள் கிண்டியவடுவைக்கண்டு ஒருபெண்முலையைப்பார்த்தவளவில் அவள் வெட்கமடைந்தாள் எ-ம். 12

கோதைமார்பனோர்கோல்வளைகாதினின்
மாதர்நீலம்புனைதலுமாற்றவள்
னோதரும்படிநோக்கியநோக்கவள
காதிலும்புனைகாவிநிகர்த்தவே.

(இ-ள்.) கோதை-மாலையணிந்த, மார்பன்-மார்பையுடையவன், ஓர்-ஒரு, கோல்வளை-மாதினது, காதினில்-காதிலே, மாதர்-அழகிய, நீலம்-நீலோற்பலத்தை, புனைதலும் - சூட்டியவளவில், மாற்றவள்-சக்களத்தி, நோதகும்படி-நோகுமபடி, நோக்கிய-பார்த்த, நோக்கு-பார்வையானவை, அவள்-அச்சக்களத்தியினது, காதிலும்-காதிலேயும், புனை-சூடிய, காவி-நீலோற்பலத்தை, நிகர்த்த-ஒத்திருந்தன எ-று.

(க-து.) கணவன் ஒரு நாயகிகாதில் நீலோற்பலந் தரித்தவளவில் அவள் சக்களத்தி பார்த்த பார்வைகள் காதிற்புனைந்த நீலோற்பலத்தை ஒத்திருந்தன எ-ம். 13

கோலநாண்மலர்கொய்பவளங்கையி
லோலிடுஞ்சுரும்போச்சவும்போகில
மாலுழந்துமறிந்துவிழுவன
நீலவொண்கழங்காடனிகர்க்குமால்.

(இ-ள்.) கோலம்-அழகுபொருந்திய, நாண்மலர் - புதிய புட்பங்களை, கொய்பவள்-பறிக்கின்றவளது, அங்கையில்-உள்ளங்கையில், ஓலிடும்-சத்திக்கின்ற, சுரும்பு-வண்டுகள், ஓச்சவும்-ஓட்டவும், போகில - போகினறிலவாய், மாலுழந்து, மயக்கமுற்று, மறிந்து-மறிபட்டு, விழுவன-அக்கையில் விழுகின்றனவாகி, நீலம்-கறுத்த, ஒள்-பிரகாசம் பொருந்திய, கழங்காடல் - அம்மனையாடலை, நிகர்க்கும்-ஒக்கும் எ-று.

(க-து.) மலர் கொய்பவள் கையில் வண்டுகள் வீழ்பவை நீலப்பந்துகள் ஆடலை யொப்பாகும் எ-ம். 14

போதுகொய் படலம் முற்றிற்று.

---

கடவுள் துணை.

# புனல்விளையாட்டுப்படலம்.



இப்படலத்தால் போதுகொய்தவர்கள் பின்பு அக்காலத்துக் கேற்பப் புனலில்விளையாடல் சொல்லப்படுகின்றது.

## கலிவிருத்தம்.

இணரவிழ்பொதும்பரினிளைஞர்யாவரும்
புணர்முலைமகளிரும்போதுகொய்தபின்
றுணையொடுமடவனமிரியத்தூநிற
மணிதெளித்தனையநீர்வாவியெய்தினர்.

இதுமுதல் எட்டுப்பாட்டுகளால் அந்நகரத்தார் புனல்விளையாட்டுச் சொல்லப்படுகின்றது.

(இ-ள்.) இணர்-பூங்கொத்துகள், அவிழ்-விரியாநின்ற, பொதும்பரின்-சோலையில், இளைஞர்யாவரும்-யௌவனபுருஷர்களெல்லாரும், புணர்-நெருங்கிய, முலை-ஸ்தனங்களையுடைய, மகளிரும்-மாதர்களும், போது-புஷ்பங்கள், கொய்தபின்-பறித்தபின்பு, துணையொடும்-பெட்டையுடனே, மடவனம்-இளஅன்னங்கள், இரிய-ஓட, தூ-வெண்மையாகிய, நிறம்-நிறத்தையுடைய, மணி-முத்தை, தெளிந்தனைய-பரப்பியதையொத்த, நீர்-சலத்தையுடைய, வாவி-தடாகத்தை, எய்தினர் அடைந்தார்கள், எ-று.

(க-து.) வாலிபர்களும் மாதர்களும் தடாகத்திற் சேர்ந்தார்கள் எ-ம்.

வாணெடுங்கண்ணியர்வாவிசெய்தலுஞ்
சேணிடைநேமியம்புட்கள்செல்வன
யாணர்மென்கோங்கரும்பிடையபவீங்கிய
பூண்முலைக்குடைந்தயல்போதல்போன்றவே.

(இ-ள்.) வாள்-வாளையொத்த, நெடுங்கண்ணியர்-நீண்டகண்களையுடைய மாதர்கள், வாவி-தடாகத்தில், எய்தலும்-அடையவும், சேணிடை-ஆகாயத்தின்கண், நேமியம்புட்கள், சக்கரவாகப்பக்ஷிகள், செல்வன-போதலானவை, யாணர்-புதுமைபொருந்திய, மென்-மிருதுவாகிய, கோங்கரும்பு - கோங்கரும்புகள், இடைய - தோற்றுப்போக, வீங்கிய - பருத்த, பூண் - ஆபரணத்தையணிந்த, முலைக்கு - ஸ்தனங்களுக்கு, உடைந்து-தோற்று, அயல்-புறத்தே, போதல்-போய்விடுதலை, போன்றன-ஒத்திருந்தன, எ-று.

(க-து.) பெண்கள் குளத்துட் சென்றவளவில் சகோரங்கள் பறப்பவை, அப்பெண்கள் முலைக்குத் தோற்றுப்போவனபோலு மிருந்தன எ-ம். 2

மங்கையர்செறிதலுமல்குநீரிடைப்
பங்கயச்செழுமலர்தாழ்தல்பாவையர்
திங்கள்வாண்முகத்தெழிற்குடைந்துதேங்கமழ்
பொங்குதண்புனலிடையொளித்தல்போலுமால்.

(இ-ள்.) மங்கையர்-மாதர்கள், செறிதலும்-அடைதலும், மல்கு-நிறைந்த, நீரிடை-சலத்தினிடத்தில், பங்கயம்-தாமரையினது, செழுமலர்-செழித்த புட்பங்கள், தாழ்தல்-மூழ்குதல், பாவையர்-மாதர்களுடைய, திங்கள்-சந்திரனை யொத்த, வாள்-பிரகாசம்பொருந்திய, முகத்தெழிற்கு-முகத்தினது அழகிற்கு, உடைந்து-தோற்று, தேம்-வாசனை, கமழ்-பரிமளியாநின்ற, பொங்கு-மிகுந்த, தண்புனலிடை-குளிர்ந்த நீரினிடத்தில், ஒளித்தல்போலும்-ஒளித்தலையொக்கும், எ-று.

(க-து.) தாமரை நீரிற் றாழுதல் பெண்கள் முகத்துக்கஞ்சி ஒளித்தல் போலும் எ-ம். 3

வடுவகிர்நெடுங்கணார்வார்கொள்வெம்முலை
குடைபுனல்வாவியுட்குளித்தலிந்திரன்
படர்சிறையறிவதற்கஞ்சிப்பாய்திரைக்
கடலிடைமால்வரையொளித்தல்காட்டுமால்.

(இ-ள்.) வடுவகிர்-மாவடுவினது, பிளப்பையொத்த, நெடுங்கணார்-நெடிய கண்களையுடைய மாதர்களது, வார்கொள்-கச்சையணிந்த, வெம் - விருப்பத்தைத்தரும், முலை-ஸ்தனங்கள், குடை-ஆடாநின்ற, புனல்-சலத்தையுடைய, வாவியுள்-தடாகத்தினுள், குளித்தல் - மூழ்குதல், இந்திரன்-தேவேந்திரன்-படர்-விரிந்த, சிறை-இறகை, அறிவதற்கு-அறுத்தற்கு, அஞ்சி-பயந்து, பாய், பாயாநின்ற, திரை-அலையையுடைய, கடலிடை - சமுத்திரனிடத்தில், மால் வரை-உயர்ந்தமலைகள், ஒளித்தல் - ஒளித்தலை, காட்டும்-காண்பிக்கும், எ-று. ஆல்-அசை

(க-து.) பெண்கள் முலைகள் நீரிலிருத்தல் இந்திரனுக்கஞ்சிப் பருவதங்கள் கடலினொளித்தல் போலும் எ-ம்.

விரைகமழ்சுண்ணமெய்திமிர்ந்துமென்குழற்
றெரியலின்வீக்குபுதெய்வச்சாந்தணி
வரிமுலைதோன்றிடமகளிர்நீந்துத
ஞிரைமணிக்குடத்திலுனீந்தல்போலுமால்,

(இ-ள்.) விரைகமழ் - வாசனைபரிமளியாநின்ற, சுண்ணம்-கந்தப்பொடிகளை, மெய்திமிர்ந்து-சரீரத்திற்பூசி, மென்குழல்-மிருதுவாகியகூந்தலை, தெரியலின்வீக்குபு-மாலையினலேகட்டி, தெய்வம்-தெய்வீகமாகிய, சாந்தணி-சந்தனத்தையணிந்த, வரி-கோலத்தையுடைய, முலை-ஸ்தனங்கள், தோன்றிட-தோற்ற, மகளிர்-மாதர்கள், நீந்துதல்-நீந்துதலானது, நிரை-வரிசையாகிய, மணிக்குடத்தினல்-இரத்நக்கும்பத்தினல், நீந்தல்போலும்-நீந்துதலையொக்கும் எ-று.

(க-து.) மாதர்கள் முலைதோன்றும்படி நீந்துதல் குடங்கொண்டு நீந்துதல் போலும் எ-ம். 5

படவரவல்குலார் முலையிற்பாய்புன
லுடைதிரைக்கரத்தினற்பொருதலொண்டிறற்
குடமுனிகருங்கடல்குடித்தவாற்றினற்
புடைதிரண்மணிக்குடம்புடைத்தல்போன்றதே.

(இ-ள்.) படவரவல் தலார்-பாம்பின்படத்தையொத்தநிதம்பத்தையுடைய மாதரது, முலையில்-ஸ்தனங்களின்மீது, பாய்-பாயாநின்ற, புனல்-சலமானது உடை-உடையாகின்ற, திறைக்கரத்தினல்-அலையாகியகையினல், பொருதல்-மோதுதல், ஒண்டிறல்-பிரகாசமாகியவல்லமையையுடைய, குடமுனி-அகஸ்தியர், கருங்கடல்-கருங்கடலை, குடித்தவாற்றினல்-பானம்பண்ணியநெறியினல், புடை-பக்கங்களில், திரள்-திரண்ட, மணிக்குடம்-இரத்நக்குடத்தை, புடைத்தல்போன்றதே-அடித்தலையொத்திருந்தது எ-று.

(க-து.) மாதர்கள்முலை அகஸ்தியர்கமண்டலத்தை ஒத்திருந்தது எ-ம். 6

சிற்றிடையொருத்திதன்றிலகவாண்முகத்
தெற்றுநீர்காதலனிறைப்பக்காண்டலு
மற்றதுபொறுக்கலாதுயிர்த்துமாழ்கிய
முற்றிழைமழைக்கணீர்முகநிறைந்ததே.

(இ-ள்.) சிற்றிடை-சிறியஇடையையுடைய, ஒருத்திதன் - ஒருமாதினது, திலகம், திலகம்-திலகப்பொட்டையணிந்த, வாண்முகத்து-பிரகாசம்பொருந்திய முகத்தினிடத்து, எற்று-மோதுகின்ற, நீர்-சலத்தை, காதலன்-புருஷன், இறைப்ப-இறைக்க, காண்டலும் - பார்த்தவளவில், அது-அதை, பொறுக்கலாது-பொறுக்கமாட்டாமல், உயிர்த்து-பெருமூச்சுவிட்டு, மாழ்கிய-மயங்கிய, முற்றிழை-சக்களத்தியினது, மழைக்கணீர்-குளிர்ச்சிபொருந்திய கண்ணீரானது, முகம்-முகத்தில், நிறைந்தது-நிரம்பியது எ-று. மற்று-ஏ-அசைகள்.

(க-து.) நாயகன் ஒரு நாயகி முகத்திலே நீரையிறைக்கக் கண்டவளவில் மற்றொரு நாயகி யழுதாள் எ-ம். 7

நாள்விழவயர்ந்தவணுணிக்காதலன்
றோளணிசாந்தநீர்தோய்ந்துநீக்கலும்
வாளுகிருழுதமெய்வடுக்கண்டேங்குறு
மீளவுமுளநனிவெள்கினளரோ.

(இ-ள்.) நாள்-புதிதாக, விழ்வயர்ந்தவள்-கலியாணம் பண்ணப்பட்டவள். நாணி-வெட்கப்பட்டு, காதலன்-புருஷனது, தோளணி-தோள்களினின்று மணிந்த, சாந்தம்-சந்தனத்தை, நீர்தோய்ந்து-நீரிற்குளித்து, நீக்கலும்-போக்கியவளவில், வாள்-வாள்போன்ற, உகிர்-நகங்கள், உழுத-கிழித்த, மெய்-சரீரத்தில், வடுக்கண்டு-குறிகளைப்பார்த்து, ஏங்குறு-இரங்கி, மீளவும்-மறும்படியும், உளம்-மனதில், நனி-மிகவும், வெள்கினள் - வெட்கமுற்றாள் எ-று. அரோ-அசை.

(க-து) புதுமணப்பெண் மூழ்கிச் சந்தனத்தை நீக்கினவளவில் கணவன் நகக்குறி தன்மெய்யுறக்கண்டு வெட்கினள் எ-ம். 8

இன்னணமாடுதனோக்கியெய்திய
மன்னவர்மன்னனுமருங்குதேய்த்துயர்
பொன்னவிரிளமுலைப்பூவைதன்னொடுந்
துன்னுநீர்ப்போர்த்தொழிறொடங்கினனரோ.

[இதுமுதல் ஆறுபாட்டுகளால் நளனோடு தமயந்தி தோழிப்பெண்கள் புனல்விளையாட்டுச் சொல்லப்படுகின்றது.]

[இ-ள்.) இன்னணம்-இத்தன்மையவாக, ஆடுதல்-விடுயாடுதலை, நோக்கி பார்த்து, எய்திய-அத்தடாகத்தினிடத்திலே வந்து, மன்னவர் மன்னனும்-அரசர்க்கரசனாகிய நளமஹாராசனும், மருங்கு தேய்த்து-இடையைத் தேய்த்து, உயர்-உயர்ந்த, பொன்னவிர்-தேமல் பிரகாசியாநின்ற, இளம்-இளமைபொருந்திய, முலை-ஸ்தனங்களையுடைய, பூவைதன்னோடும்-தமயந்தியினோடும், துன்னு-நெருங்கிய, நீர்போர்த்தொழில்-சலக்கிரீடையை, தொடங்கினான்-ஆரம்பித்தான் எ-று. அரோ-அசை.

(க-து.) நளன்தமயந்தியுடன் நீர்விளையாடத்தொடங்கினன் எ-ம். 9

சுண்ணமென்சிவிறிநீர்தூரக்குமெந்திர
மென்னிலதாங்கிவே ளனையவேந்தலைப்
பெண்ணலங்கனிந்தொளிர் பேதைதன்னொடு
மண்ணியமணியனார் வளைந்திட்டாரரோ.

(இ-ள்) சுண்ணம்-சந்தப்பொடிகளையும், மென்-மிருதுவாகிய, விறி-துருத்தியையும், நீர்தூரக்கு மெந்திரம்-நீரிறைக்குங் குழல்களையும், எண்ணில்-அளவில்லாமல், தாங்கி-எடுத்துக்கொண்டு, வேளனைய - மன்மதனையொத்த, ஏந்

தலை-நளமகாராசனை, பெண்ணலம்-பெண்டன்மை, கனிந்து-பழுத்து, ஒளிர்-பிரகாசியாநின்ற, பேதைதன்னொடும்-தமயந்தியோடுகூட, மண்ணிய-கழுவிய, மணியனார்-இரத்நத்தையொத்த பெண்கள்; வளைந்திட்டார் - வளைந்துகொண்டார்கள் எ-று.

சிவிறி-விசிறி. அது இக்காலத்தில் "தோன்றறிதல் கெடுதனிலைமாறுத்-லெனநான்காகும் புணர்ச்சியில்விகாரம்" இவ்விதியால் நிலைமாறிற்றெனக.

(க-து.) பெண்கள் நீர்தூருத்தி யெடுத்துத் தமயந்தியோடு நளனைசசூழ்ந்தார்கள் எ-ம். 10

துன்னிருங்கூந்தலார் தூறந்ததாரைக்கண்
மன்னவன்றோள்களிற் பாய்தலவானிடை
மின்னினங்காரோடு மிடைந்துமென்புனல
பொன்னெடுங்குன்றின்மேற் பொழிதல்போன்றதே.

(இ-ள்.) துன்னு-நெருங்கிய, இரும்-பெருமைபொருந்திய, கூந்தலார்-கூந்தலையுடையமாதர்கள், தூரந்த-தூவிய, தாரைகள்-சலதாரைகள்; மன்னவன் - நளமஹாராசனுடைய; தோள்களில் - புசங்களில்; பாய்தல் - வீழ்தலானது;வானிடை-ஆகாயத்தினிடத்தில்;மின்னினம்-மின்னற்கூட்டம்;காரொடும்-மேகத்துடனே; மிடைந்து-நெருங்கி; மென் - மிருதுவாகிய; புனல் - சலத்தை, பொனனெடுங்குன்றின்மேல்-நெடியமகாமேருவின்மீது,பொழிதல் போன்றது-பொழிதலையொத்திருந்தது எ-று.

(க-து.) பெண்கள் நளன்தோள்மேல் நீரிறைத்தல் மேகம்மலைமேற்பொழிதல்போலும் எ-ம். 11

அரசர்கோன்குலிகநீர்த்தாரையாயிரஞ்
சுரிகுழன் மடந்தையர்முகத்திற்றூவுதன்
முருகவிழ்தாமரைமலரின்மோட்டிளம்
பரிதிசெங்கதிர்குழாம்பாய்தல்போன்றதே.

(இ-ள்.) அரசர்கோன் - இராசாதிராசனுகிய நளமஹாராசன், குலிகநீர்-இங்குலிகநீரினது, தாரையாயிரம்-ஆயிரம்தாரைகளை, சுரி-சுழித்த, குழல் - கூந்தல்பொருந்திய, மடந்தையர்-மாதருடைய, முகத்தில்-முகங்களில், தூவுதல்-இறைததலானது, முருகு-தேன், அவிழ்-விரியாநின்ற, தாமரைமலரின்-தாமரைபுஷ்பத்தினிடததில், மோட்டிளம்-மிகுந்த இளமைபொருந்திய, பரிதி-சூரியனுடைய, செங்கதிர்க்குழாம்-சிவந்தகிரணக்கூட்டங்கள், பாய்தல்-வீழ்தலை, போன்றது-ஒத்திருந்தது எ-று. ஏ ஈற்றசை.

(க-து.) நயன் பெண்கள்முகத்தில் நீர்த்தாரை தூவுதல் தாமரைமலரில் சூரியகிரணம் பாய்தல்போலும் எ-ம். 12

விரைகமழ்சுண்ணமும்வீசுசாந்தமு
மரசனூண்டெறிதலுமாற்றலாமையாற்
குரைகடல்குளித்திடுமின்னிற்கோதைய,
ருரவுநீர்வாவியிலொளித்திட்டாரரோ.

(இ-ள்) விரை-வாசனை, கமழ்-பரிமளியாநின்ற, சுண்ணமும்-கந்தப்பொடிகளையும், வீசு-வாசனையை வீசாநின்ற, சாந்தமும்-சந்தனத்தையும், அரசன்-நளமகாராசன், ஆண்டு-அவ்விடத்தில், எறிதலும்-வீசவும், ஆற்றலாமையால்-பொறுக்கமாட்டாமையினால், குரை-சத்யாநின்ற, கடல்-சமுத்திரத்தில், குளித்திடும்-மூழ்குகின்ற, மின்னில்-மின்னலைப்போல், கோதையர்-மாதர்கள்-உரவு, விரிந்து, நீர்-சலத்தையுடைய, வாவியில்-தடாகத்தில், ஒளித்திட்டார்-ஒளித்துக்கொண்டார்கள் எ-று. அரோ-அசை.

(க-து.) நளன் கந்தப்பொடியையுஞ் சந்தனத்தையு மெறிதலுக்குச்சகியாமல் பெண்கள் வாவியிலொளித்தார்கள் எ-ம். 13

வாமமேகலையினார்வளர்ந்தவெம்முலை
நேமியம்புள்ளெனநீருட்காட்டுவார்
காமர்வாண்முகத்தினைக்கமலஞ்சேர்த்தித்தண்
டாமரையெனமணித்தடத்தின்மூழ்குவார்.

(இ-ள்:) வாமம்-அழகுபொருந்திய, மேகலையினார்-மேகலாபரணத்தையுடையமாதர்கள், வளர்ந்த - வளர்ந்த, வெம் - விருப்பத்தைத்தாராநின்ற, முலை-ஸ்தனங்களை, நேமியம்புள்ளென - சக்கிரவாகப்பக்ஷியென்று, நீருட்காட்டுவார் - சலத்துக்குள்ளேகாட்டுவார்கள், காமர் - அழகிய, வாள் - பிரகாசம்பொருந்திய, முகத்தினை-முகத்தை, கமலஞ்சேர்த்தி-தாமரைபுஷ்பத்துடனேசேர்த்து, தண்-குளிர்ச்சிபொருந்திய, தாமரையென-தாமரைப்பூவென்றுசொல்ல, மணி-முத்தையுடைய, தடத்தின்-தடாகத்தில், மூழ்குவார்-மூழ்குவார்கள் எ-று.

(க-து.) பெண்கள் முலைகளைச்சக்ரவாகம்போலக் காட்டுவார்கள். முகத்தை தாமரையோடுசேர்த்து மூழ்குவார்கள் எ-ம். 14

தோற்றதன்பெரும்படைதுளங்கினுமினி
யாற்றலமெனமலரடியிற்சேர்தலுங்
கோற்றொடியலங்கலங்குன்றனோடு
மேற்றனளெமரிணிரிச்சிவிறியேந்தியே.

[இதுமுதல் மூன்றுபாட்டுகளால் நளனோடு தமயந்தியின் புனல்விளையாட்டுச் சொல்லுப்படுகின்றது.]

(இ-ள்.) தோற்ற-தோற்றுப்போன, தன்-தன்னுடைய, பெரும்படை-பெரியசேனைகள், துளங்கினும்-கலங்கினோம், இனி-இனிமேல்-ஆற்றலமென-

பொறுக்கமாட்டோமென்று, மலரடியில்-தாமரைமலரினை யொத்தபாதத்தில், சேர்தலும்-அடையுமளவில், கோற்றொடி-தமயந்தியானவள், அலங்கல்-மாலை யணிந்த, அம்-அழகிய, குன்றன்னானெனும் - மலையையொத்தநளமகாராசனு டனே, எரி-பிரகாசியாநின்ற, மணி-இரத்தத்தாற்செய்த, சிவிறி-நீர்தூற்றுந் துருத்தியை, ஏந்தி-தாங்கி, ஏற்றனள்-எதிர்த்தாள் எ-று.

(க-து.) தமயந்தி நீர்வீசுந் துருத்திகொண்டு நளனோடு எதிர்த்தாள் எ-ம்.

ஒவியரெழுதரு முருவப்பூங்கொடிக்
கோதைவார்மணிவடக் கொம்மைவெம்முலைத்
தூவினீருறுமெனச்சுடர்செய்பூணின
னாவியந்துகில்கரந் தமைபத்தூவினான்

(இ-ள்.) ஓவியர்-சித்திரக்காரராலே, எழுதரும்-எழுதுதற்கரிய, உருவம்-வடிவத்தையுடைய; பூங்கொடி-தமயந்தியினது, கோதை-கோத்திருக்கின்ற, வார்-நீண்ட; மணிவடம்-முத்துமாலையணிந்த கொம்மை-இளமைபொருந்திய, வெம்-விருப்பத்தைத் தருகின்ற; முலை-ஸ்தனங்களில; தூவில்-நீரைத்தூவில், நோமுறுமென-வருந்துவளென்று, சுடர்செய்-பிரகாசிக்கின்ற, பூணினன்-ஆபரணத்தையுடைய நளமகாராசன், ஆவி பாலாவியை யொத்த, அம்-அழகிய; துகில்-வஸ்திரமானது, கரந்தமைய-மறையும்படி, தூவினான்-இறைத்தான் எ-று.

(க-து.) நளன் தமயந்தியின்மேல் நீரிறைத்தான் எ-ம்.

அந்துகினனைதலினல்குறோன்றுதல்
கந்தடுகளிற்றினன்காணவெள்குறா
சுந்தரச்சுண்ணநீர்முகத்திற்றூயவன்
சந்தணிதடம்புயந்தழுவினாளரோ.

(இ-ள்.) அந்துகில்-அழகிய வஸ்திரம், நனைதலில்-நனைந்தவளவில், அல்குல-நிதம்பமானது, தோன்றுதல்-தோன்றுதலை, கந்தடு-கட்டுததறியை முறிக்காநின்ற, களிற்றினன்-யானையையுடைய நளன், காண-பார்க்க, வெள்குறா-வெட்கமுற்று, சுந்தரம்-அழகிய, சுண்ணநீர-கந்தப் பொடிகலந்த நீரை, முகத்திற்றூய்-முகத்திலே யிறைத்து, அவன்-அவ்வரசனுடைய, சந்தணி-சந்தன மணிந்த, தடம்புயம்-பருத்த தோள்களை, தழுவினாள்-தழுவிக் காண்டாள் எ-று.

தன்னுடைய அவயவங்களை நளன் பார்க்குமளவில் அதுகண்டு நாணிய தமயந்தி அவன் பாராமைக்கு அவன் முகத்தில் நீர் தூவியதுமன்றி, மடமையாற் றழுவினளென்க.

(க-து.) சேலை நனைதலால் அல்குலை நளன் காணத் தமயந்தி வெட்கப்பட்டு, அவன் முகத்தில் நீரையிறைத்துப் புயத்தைத் தழுவினாள் எ-ம். 17

அலர்முலையம்மருங்கக றுநாமெனுங்
கலுழ்வபோற்றண்டுளிகாலுமேகலை
நிலவுமிழ்பூணினணீக்கியேர்பெற
விலகிவில்லுமிழ்கலைவீக்கினளரோ.

[இதுமுதல் ஐந்துபாட்டுகளால் நளனுந் தமயந்தியும் புனல் விளையாட்டு விடுத்துப் போகவிளையாட்டுற்றமைசொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) அலர்முலை-தமயந்தியின்து, அம்மருங்கு-அழகிய இடையை, அகறும்-நீங்குவோம், நாமெனு-நாமென்று, கலுழ்வபோல் - அழுகின்றது போல், தண்டுளி-தண்ணிய துளிகளை, காலும்-சொரியும், மேகலை-மேகலாபரணத்தை, நிலவு-பிரகாசத்தை, உமிழ்-உமிழாநின்ற, பூணினள்-ஆபரணத்தையுடைய தமயந்தி, நீக்கி-அகற்றி, ஏர்பெற-அழகுபெற, விலகி-விட்டு விட்டு, வில்-பிரகாசத்தை, உமிழ்-கக்காநின்ற, கலை-ஆடையை, வீக்கினள்-கட்டிக் கொண்டாள் எ-று.

பூணினள் மேகலையை நீக்கிக் கலைவீக்கினளெனக் கூட்டுக,

(க-து.) தமயந்தி மேகலையை நீக்கி ஆடையை யுடுத்திக் கொண்டாள் எ-ம். 18

நகைநிலாத்தவழ்ந்தெனநானங்கோட்டிய
முகிழ்முலைமுன்றிலின்முத்தந்தாங்கின
ளகினறுந்தூமமென்குழலிலம்மலர்ச்
சிகழிகைவேய்ந்தனடிலகந்தீட்டினள்.

(இ-ள்.) நகை-ஒளியையுடைய, நிலா-சந்திரிகை, தவழ்ந்தென-தவழ்ந்தது போல, நானங்கோட்டிய-கஸ்தூரியப்பிய, முகிழ்-அரும்பை யொத்த, முலை முன்றில்-ஸ்தனப் பிரதேசத்தில், முத்தம்-முத்துவடத்தை, தாங்கினள்-தரித்தாள், அகில்-அகிலினுடைய, நறுந்தூமம்-நறிய புகையூட்டிய, மென்குழலில்-மெல்லிய கூந்தலில், அம்-அழகிய, மலர்ச்சிகழிகை-மலர்மாலையை, வேய்ந்தனள்-தரித்தாள்; திலகம்-திலகப் பொட்டை, தீட்டினள்-எழுதினள் எ-று.

(க-து.) தமயந்தி முத்துவட மணிந்தாள். மாலைதரித்தாள். திலதமிட்டாள் எ-ம். 19

களிச்சுரும்பரற்றுதார்க்காளைகாமநோய்
தளிர்த்தெழமடமயிற்சாயறன்னொடுந்
துளிப்புயல்கண்படுசோலைநாப்பணோர்
பளிக்குமேனிலைமலர்ப்பள்ளிமேயினன்.

(இ-ள்.) களி-களிப்பையுடைய, சுரும்பு-வண்டுகள், அரற்றுதார்-சத்தியாநின்ற மாலையையுடைய, காளை-நளமகாராசனானவன், காமநோய்-விரகநோயா

னது, தளிர்த்தெழ-அதிகரிக்க, மடமயிற்சாய றன்னொடும்-தமயந்தியுடனே, துளிப்புயல்-துளியையுடைய மேகங்கள், கண்படு-நித்திரை செய்யாநின்ற, சோலை நாப்பண்-சோலைக்கு மத்தியில், ஓர்பளிக்குமேனிலை-ஒரு பளிங்கினாற் செய்த மேலுப்பரிகையில், மலர்ப்பள்ளி-புட்பசயனத்தில், மேவினான்-சேர்ந்தான் எ-று.

(க-து.) நளன் விரகமதிகரிக்கத் தமயந்தியுடன் சோலையிற் பளிங்கு மண்மாடத்து மலர்ப்பள்ளியுட் சேர்ந்தான் எ-ம். 20

அரிக்குரற்கிண்கிணிசிலம்பொடார்த்தன
புரிக்குழன்மலர்மழைபொழிந்துபொங்கிய
வரிச்சிறைத்தும்பிபாட்டயர்ந்தமங்கைதன்
திருக்கிளர்முலைநலஞ்செம்மலுண்ணவே.

(இ-ள்.) மங்கைதன்-தமயந்தியினது, திருக்கிளர்-அழகுமிகுந்த, முலைநலம்-ஸ்தனத்தினின்பத்தை, செம்மல்-நளமகாராசன், உண்ண-அனுபவியாநிற்க, அரி-தவளையினது, குரல்-குரலையொத்த, கிண்கிணி-சதங்கைகள் சிலம்பொடு-சிலம்புடனே, ஆர்த்தன-ஆரவாரித்தன, புரி-கட்டுப்பட்ட, குழல்-கூந்தல், மலர் மழை-புஷ்பவருஷத்தை, பொழிந்து-சொரிந்து, பொங்கிய-மிகுந்தன, வரி-நீண்ட சிறை-இறகையுடைய, தும்பி-வண்டுகள், பாட்டயர்ந்த - பாட்டைப் பாடின எ-று.

(க-து.) நளன் தமயந்தியை யனுபவிக்கக் காலில் கிண்கிணி சிலம்புகள் சத்தித்தன கூந்தலில் வண்டுகள்பாடின எ-ம். 21

ஏந்திளவனமுலைசாடவீர்நறுஞ்
சாந்துதிர்ந்தெதிரெழிறவழுமார்பினான்
பூந்துணர்பொதுளியபொதும்பர்நாப்பணோர்
வாய்ந்தபூங்கொடியொடுமணந்துவைகினான்.

(இ-ள்.) ஏந்து-ஏந்திய, இள-இளமையாகிய, வனமுலை-அழகிய ஸ்தனங்கள், சாட-மோத, ஈர-குளிர்ச்சியும், நறும்-வாசனைபொருந்திய, சாந்துதிர்ந்து-சந்தனமழிந்த, எதிர்-நேராக, எழிறவழும், அழகுபொருந்திய, மார்பினான்-மார்பையுடையநளன், பூந்துணர்-பூங்கொத்துக்கள், பொதுளிய-நெருங்கிய-பொதும்பர்-சோலையினுடைய, நாப்பண் மத்தியத்தில், ஓர்-ஒப்பற்ற வாய்ந்த, தனக்குக்கிடைத்த பூங்கொடியொடு-தமயந்தியினுடனே மணந்து - கூடி: வைகினான்-இருந்தான் எ-று.

(க-து.) நளன் தமயந்தியுடன் கூடியிருந்தான் எ-ம். 22

புனல்விளையாட்டுப்படலமுற்றிற்று.



12 நளன் தமயந்தியோடு மாவிந்தநகரம் சேருதல 526-வது பக்கம.

கடவுள் துணை.

# சூதாடு படலம்.



இப்படலத்தால் குறைவின்றிபசெல்வத்தையனுபவிக்கும் நளன் விதிவழியால் அளவிறந்த துன்பமனுபவித்தற்குக் காரண மாகிய சூதாடல் சொல்லப்படுகின்றது.

கலிநிலைத்துறை

வாம்பரித்தேரினனுமாமைழயொண்கண்ணினளு
மேம்பலோடினிதுபுல்லியிடைவிடாதொழுகுநாளி
லாம்பலம்போதுகாட்டுமணிதிகழ்பவளச்செவ்வாய்க்
காம்புறழ்தோளினட்குக்கருப்பம்வந்துற்றதன்றே.

[இதுமுதல் நான்குபாட்டுகளால் தமயந்திக்கு மக்கட்பேறுண்டானமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்) வாம் - தாவாநின்ற, பரித்தேரினனும் - குதிரைக்கட்டியதேரை யுடையநளமகாராசனும், மாமைழ-மாவடுவையொத்த,ஒள்-பிரகாசம்பொருந்திய, கண்ணினளும்-கண்ணையுடையதமயந்தியும், எம்பலோடு-அகமலர்ச்சியுடனே-இனிதுபுல்லி-இனிமையாகப்புல்லி, இடைவிடாது-நீங்காது, ஒழுகுநாளில், நடக்குநாளிலே, ஆம்பலம்போது-செவ்வல்லிமலரை, காட்டும்-காட்டுகின்ற, அணிதிகழ்-அழகுபிரகாசியாநின்ற, பவளம்-பவளத்தையொத்த, செவ்வாய்-சிவந்தவாயையும், காம்பு-மூங்கிலை, உறழ்-ஒத்த, தோளினட்கு-தோளையுடைய தமயந்திக்கு, கருப்பம்வந்துற்றது-கர்ப்பமுண்டாயிற்று, எ-று.

(க-து.) தமயந்தி கருப்பமடைந்தாள் எ-ம். 1

மெலியுநுண்மருங்குதோன்றவேயிளந்தோள்கடேம்ப
நலனுறுசெய்யமேனிபாசொளிநரம்புகாட்ட
வலர்சுணங்கணிந்துவீங்கியழகுவீற்றிருந்தபொம்மன்
முலைமுகங்கருகிச்செவ்விமுகமதிவிளர்த்ததன்றே.

(இ-ள்.) மெலியும் - வாடாநின்ற, நுண்-நுட்பமான, மருங்கு - இடையானது, தோன்ற-கபண, வேய்-மூங்கிலையொத்த, இளம்-இளமையாகிய, தோள்கள்-தோள்கள், தேம்ப-வாட, நலனுற-நன்மைபொருந்திய, செய்ய மேனி-சிவந்தவுடம்பு, பாசொளி-பசிய வெளிலையயுடைய, நரம்புகாட்ட-நரம்புகளைத் தோற்றுவிக்க, அலர்-பரந்த, சுணங்கு-தேமலை, அணிந்து-தரித்து,

வீங்கி - பருத்து, அழகுவீற்றிருந்த - அழகானது தங்கியிருந்த, பொம்மல்-பொலிவுபொருந்திய, முலைமுகம்-ஸ்தனங்களின் முகங்கள், கருகி - கறுத்து, செவ்வி-அழகையுடைய, முகமதி-முகமாகிய சந்திரன், விளர்த்தது-வெண்மையடைந்தது, எ-று. அன்று-ஏ-அசைகள்.

(க-து.) தமயந்திக்கு யிடைதோன்ற, தோள்கள்வாட, பசியநரம்புகாண, முலைகருகி முகம்வெளுத்தது எ-ம். 2

குழைமுகங்கிழித்துநீண்டசெழுங்கடைமழைக்கட்பேதை
பொழிகதிர்திங்கள்காட்டும்வலம்புரிவருந்திப்பொங்கி
யொழுகொளிநிலவுகாலுநித்திலமுயிர்த்ததென்ன
மழகளிறனையதோற்றமாணிளங்குழவியீன்றாள்.

(இ-ள்.) குழைமுகம்-காதின்முகத்தை, கிழித்து-கிழித்து, நீண்ட-நீண்டிருக்கின்ற, செழும்-செழுமையாகிய, கடை-கடையையுடைய, மழைக்கண்-குளிர்ச்சிபொருந்திய கண்ணையுடைய, பேதை-தமயந்தியானவள், பொழி-சொரியாநின்ற, கதிர் - கிரணங்களையுடைய, திங்கள் - சந்திரனை, காட்டும்-தோற்றுவிக்கும், வலம்புரி-வலம்புரிச் சங்கமானது. வருந்தி - வருத்தமுற்று, பொங்கி-பிரகாசித்து, ஒழுகு-மிகுந்த, ஒளி-காந்தியையுடைய, நிலவு-சந்திரிகையை, காலும்-கக்காநின்ற, நித்திலம்-முத்தை, உயிர்த்ததென்ன-பெற்றது போல, மழ-இளமைபொருந்திய, களிறனைய-யானையையொத்த, தோற்றம்-காட்சியையுடைய, மாண்-மாட்சிமையாகிய, இளங்குழவி-இளங்குழந்தையை, ஈன்றாள்-பெற்றாள், எ-று.

(க-து.) தமயந்தி ஆண்பிள்ளை பெற்றாள் எ-ம். 3

மழகளிறனையநம்பிபிறையெனவளருநாளிற்
கழைபுரைதோளிபின்னோர்கன்னியையுயிர்த்தாண்மக்கள்
குழலினுங்கனிந்தவந்தீங்குதலைகேட்டுருகிவெய்ய
முழைபுகுசீயமன்னானுவகையின்மூழ்கினானே.

(இ-ள்.) மழ-இளமைபொருந்திய, களிறனைய-யானையையொத்த, நம்பி-பிள்ளையானவன், பிறையென-மூன்றாம்பிறைபோல, வளருநாளில்-வளர்ந்து வருங்காலத்தில், கழைபுரை-மூங்கிலையொத்த, தோளி-தோளையுடைய தமயந்தி, பின்-பின்பு, ஓர்கன்னியை-ஒருபெண்ணை, உயிர்த்தாள்-பெற்றாள், மக்கள்-இரண்டுகுழந்தைகளுடைய, குழலினும்-வேய்ங்குழலினும், கனிந்த-கனிவாகிய, அம்-அழகிய, தீங்குதலை-தித்திப்புப்பொருந்திய மழலைச்சொல்லை, கேட்டுருகி-கேட்டுள்ளுருகி, வெய்ய-வெவ்வியதாகிய, முழை - குகையில், புகும்-நுழையாநின்ற, சீயமன்னான்-சிங்கத்தையொத்த நளமகாராசன், உவகையில்-சந்தோஷத்தில், மூழ்கினான்-அழுந்தினான், எ-று.

(க-து.) பிள்ளை வளர்ந்துவருங் காலையில் தமயந்தி பெண்பிள்ளையைப் பெற்றாள் எ-ம். 4

நிழலுமிழ்ந் துதிரங்காலும்வயிரவாணிடதர்கோமா
னெழுபுவிவேந்தர்யாருமிடுதிறைகொணர்ந்தெஞ்ஞான்றுந்
தொழுதெனரேத்திநிற்பத்தொடுகடலுடுத்தஞால
முழுவதுமொருகோலோச்சிமுறைவழாதளித்தானன்றே.

[இதனால் நளனரசாக்ஷி சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) நிழல் - பிரகாசத்தை, உமிழ்ந்து - சொரிந்து, உதிரங்காலும்-இரத்தத்தைக்கக்கும், வைரவாள்-கூரியவாளையுடைய, நிடதர்கோமான்-நளமகாராசன், எழுபுவி-சப்த தீவிலுமுள்ள, வேந்தர்யாரும்-அரசரெல்லாரும், இடுதிறை-இடாநின்ற கப்பங்களை, கொணர்ந்து-கொண்டுவந்து, எஞ்ஞான்றும்-எந்நாளும், தொழுதனர்-வணங்கினவராய், எத்தி-துதித்து, நிற்ப-நிற்க தொடு-தோண்டிய, கடலுடுத்த-சமுத்திரஞ் சூழ்ந்த, ஞாலமுழுவதும்-உலக முழுமையும், ஒருகோலோச்சி-ஒருசெங்கோலைச் செலுத்தி, முறைவழாது-கிரமந்தப்பாது, அளித்தான்-இரட்சித்துக்கொண்டு வந்தான், எ-று. அன்று-ஏ-அசை.

(க-து.) நளன் அரசர்திறைகொடுக்க உலகத்தை யாண்டுவந்தான் எ-ம். 5

கோறவடுகுருதிவேலான்கொழுஞ்சுடர்பட்டகாலைச்
சேவடிகழுவலின்றிச்செய்கடன்கழித்தனோக்கிக்
காவலற்சேருங்காலங்கருதுபுபன்னிராண்டு
மேவருந்தான்றியுற்றவெங்கலிமேயினானே.

[இதனால் நளன் றீமைக் கெதிர்பார்த்திருந்த சனிக்கு எதுவுண்டாயடைந்தமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கோ-(சத்துருக்களாகிய) ராசாக்களை, அடு-கொல்லாநின்ற, குருதி-இரத்தந்தோய்ந்த, வேலான்-வேலாயுதத்தையுடைய நளன், கொழும்-செழித்த, சுடர்-சூரியன், பட்டகாலை-அஸ்தமித்த பொழுது, சேவடி-சிவந்த பாதங்களை, கழுவலின்றி-கழுவாமல், செய்கடன்-செய்யத்தக்க நித்தியகருமத்தை, கழித்தனோக்கி-செய்துமுடித்தலைப் பார்த்து, காவலன்-அரசனை, சேருங்காலம்-அடையுங்காலம் (எதுவென்று) கருதுபு-நினைத்து, பன்னிராண்டு-பன்னிரண்டுவருஷம், மேவரும்-அடைதற்கரிய, தான்றியுற்ற - தான்றிமரத்தின்கண் ணிருந்த, வெங்கலி-வெவ்விய கலியன், மேயினன்-சேர்ந்தான் எ-று.

(க-து.) நளன் திருவடிகழுவாது செய்தகருமத்தைக்கண்டு தான்றிமரத்திலிருந்த சனிபகவான் அந்நளனைச் சேர்ந்தான் எ-ம். 6

கலிவிருத்தம்.

விட்புலத்தரசருமேனைவேந்தரும்
வட்கவிம்மன்னவன்மல்லன்மார்பகம்
பெட்புறுமடந்தையைப்பிரிப்பன்யானெனப்
புட்கரன்பாற்கலிபோயினனரோ.

[இதுமுதல் மூன்றுபாட்டுகளால் சனி அரசிழந்து நின்ற புட்கரனிடஞ் சென்று தனதாண்மைகூறித் தேற்றுதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) விட்புலத்து-தெய்வலோகத்திலிருக்கும், அரசரும் - இந்திராதி தேவரும், ஏனைவேந்தரும்-பூலோகத்தரசரும், வட்க-நாணமடைய, இம்மன்னவன்-இந்நளனுடைய, மல்லல்-வலிமைபொருந்திய, மார்பகம் - மார்பினிடத்தே, பெட்புறும்-விரும்பும், மடந்தையை-தமயந்தியை, பிரிப்பின்-பிரித்துவிடுவேன், யானென-நானென்று, புட்கரன்பால்-புட்கராசனிடத்தில், கலி-கலிபுருடன், போயினன்-போனான், எ-று. அரோ-அசை.

(க-து.) சனிபகவான் நளனைவிட்டுத் தமயந்தியைப் பிரிப்பேனென்றுபுட்கரனிடத்திற் போனான் எ-ம். 7

வருகலிபுட்கரன்வதனநோக்குறாக்
குரைகழனளனெனுங்கொற்றவேந்தனே
யொருகுடைநீழலினுலகங்காத்திட
விருநிலக்கிழமைநீயிழந்ததென்கொலோ.

(இ-ள்.) வருகலி-வந்தகலியனானவன், புட்கரன்-புட்கராசனது, வதனம்-முகத்தை, நோக்குறா-பார்த்து, குரைகழல்-சத்தியாநின்ற வீரக்கழலையணிந்த, நளனெனும்-நளனென்றுசொல்லப்பட்ட, கொற்றம்-வெற்றியையுடைய,வேந்தனே-அரசனே, ஒருகுடைநீழலின்-ஏகச்சக்கிராதிபதியாய், உலகங்காத்திட-இவ்வுலகத்தை ரக்ஷிக்க, இரு-பெருமைபொருந்திய, நிலக்கிழமை - அரசாட்சியை, நீ-நீ, இழந்தது-கைவிட்டது, என்கொலோ-யாதுகாரணமோ எ-று.

(க-து.) சனி புட்கரனைப்பார்த்து, உலகெலாம் நளன் ஆள நீ அரசாட்சியிழந்த தென்னவென்றான் எ-ம். 8

வாட்டிறல்வேந்தனைமடந்தை தன்னொடுங்
காட்டிடைப்புகுத்திமண்காக்குமன்னருள்
சூட்டினைதொழுகழற்காமநீண்முடி
சூட்டுவனினக்கெனச்சொல்லினனரோ.

(இ-ள்.) வாட்டிறல்-வாட்போரில் வெற்றியையுடைய, வேந்தனை - அரசனை, மடந்தைதன்னொடும்-மனைவியுடனே, காட்டிடைப் புகுத்தி-காட்டினிடத்தில், போகச்செய்து, மண்-உலகத்தை, காக்கும்-ரட்சிக்காநின்ற, மன்னர்-

அரசர்கள், உன்-உன்னுடைய, தாட்டுணை-உபயபாதங்களை, தொழ-வணங்க, நாறும்-வாசனைபொருந்திய, தாமம்-மாலையணிந்த, நீண்முடி-நீண்டகிரீடத்தை நினக்கு-உனக்கு, சூட்டுவேன்-தரிப்பேன், என-என்று, சொல்லினன்-சொன்னான் எ-று.

(க-து.) சனிநளனை ௩ம் தமயந்தியையுங் காட்டிற் றுரத்தி உனக்கு முடி சூட்டுவேனென்றான் எ-ம். 9

சொல்லலுங்களிமகிழ் தூங்கிப்புட்கரன்
கொல்லியவருதிறற் கூற்றுமஞ்சுறு
மல்லடுதிண்புய மன்னர்மன்னனை
வெல்லுமாறெங்ஙனம் விளம்புவாயென்றான்.

[இதனால் புட்கரன் சனியை வினாவல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) சொல்லலும்-இப்படி சொன்னவளவில், களிமகிழ் தூங்கி-மிகுந்த மகிழ்ச்சியடைந்து, புட்கரன்-புட்கரராசன், கொல்லிய-கொல்ல, வரும்-வராநின்ற, திறல்-வெற்றியையுடைய, கூற்றும்-இயமனும், அஞ்சுறும்-பயப்படும்படியாகிய, மல்லடு-மற்போர் செய்கின்ற, திண்புயம்-திண்ணிய புயத்தையுடைய, மன்னர் மன்னனை-நளனை, வெல்லுமாறு-வெல்லுநெறி, எங்ஙனம்-எவ்விதம், விளம்புவாயென்றான்-சொல்லென்று சொன்னான் எ-று.

(க-து.) புட்கரன் நளனைவெல்லும் வழி சொல்லென்றான் எ-ம். 10

எண்ணலையாதுநானிழைத்தவஞ்சனை
விண்ணவராயினும்விலக்கற்பாலரோ
வண்ணலைச்சூதினாற்படுப்பலஞ்சனீ
கண்ணுறும்யான்கொடுங்கலியென்றனனரோ.

[இதனால் அதற்குச் சனியுத்தரஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) யாதும் எண்ணலை-எவ்வளவும் ஆலோசிக்க வேண்டாம், நானிழைத்த-நான்செய்த, வஞ்சனை-கபடத்தை, விண்ணவராயினும்-தேவர்களானாலும், விலக்கற் பாலரோ-நீக்குந்தன்மையையுடையார்களோ, அண்ணலை-நளனை, சூதினாற்படுப்பன்-சூதினாற் செயிப்பேன், நீ அஞ்சல-நீபயப்படவேண்டாம், கண்ணுறும்-எதிரேவந்த, யான்-நானும், கொடும்-கொடிய, வெங்கலியென்றான்-வெவ்விய கலியனென்று சொன்னான் எ-று.

(க-து.) சனி நளனைச் சூதினால் வெல்லுவேனென்றான் எ-ம். 11

முறையுறைகொடுவரியனையமொய்ம்பினு
னுறையினிற்போதுமென்றுரைத்துவெங்கலி
மழவிடையுருக்கொடுநிற்பவஞ்சுட
ரிழைதவழ்மார்பினனிவர்ந்துபோயினன்.

[இது முதல் மூன்று பாட்டுகளால் புட்கரன் அச்சனியோடுநளன்கொலுச் சபைக் கேகினமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) முழை-குகையினிடத்தில், உறை-இருக்கின்ற, கொடுவரியனைய-புலியையொத்த, மொய்ம்பினன்-வலியையுடைய நளமகாராசனது, உழையினில்-இடத்தில், போதுமென்று-போவோமென்று, உரைத்து-சொல்லி, வெங்கலி-வெவ்விய கலியானவன், மழவிடை-இளவேற்றின், உருக்கொடு-உருவத்தைக்கொண்டு, நிற்ப-நிற்க, வண்-வளப்பமாகிய, சுடர்-காந்தியையுடைய, இழைதவழ்-ஆபரண மசையாநின்ற, மார்பினன்-மார்பையுடைய புஷ்கர ராசன், இவர்ந்து-ஏறிக்கொண்டு போயினன் சென்றான் எ-று.

(க-து.) சனி இடபம்போ லுருக்கொண்டு நிற்கப் புட்கரன் அதன்மே லேறிச் சென்றான் எ-ம். 12

உரவுநீர்க்கருங்கடலுலகுக்காவலன்
குரைகழல்பணிந்துதங்குறைகள்சாற்றுவா
னரசர்கண்டுயிலமைமுகிலினார்ப்புறு
முரசுகண்டுயில்கிலாவாயின்முன்னினான்.

(இ-ள்.) உரவுநீர்-விரிந்த நீரையுடைய, கருங்கடல்-கரியகடலாற் சூழப்பட்ட, உலகுகாவலன்-உலகுக்கரசனாகிய நளனது, குரைகுழல்பணிந்து-சத்திக்கின்றவீரக்கழலையணிந்த பாதத்தைவணங்கி, தங்குறைகள்சாற்றுவான்-தமது குறைகளைச் சொல்வதற்கு, அரசர்-அரசர்கள், கண்டுயில-(தூமங்கிடையாமல்) நித்திரைபண்ண, மைமுகிலின்-கறுத்தமேகத்தைப்போல், ஆர்ப்புறும்-சப்திக்கின்ற, முரசு-பேரிகையானது, கண்டுயில்கிலா-நித்திரை செய்யாத, வாயில்-அரண்மனைவாசலில், முன்னினான்-அடைந்தான் (புஷ்கரராசன்) எ-று.

(க-து.) புட்கரன் நளன் அரண்மனைவாயிலிற் சென்றான் எ-ம். 13

மன்னவற்கெம்வரவுரைத்திவாயிலோ
யென்னலுமாங்கவனெய்திக்கூறலுங்
கொன்னவில்வேலினன்கொணர்கவென்றனன்
னன்னவன்வருகெனவவையினெய்தினான்.

(இ-ள்.) வாயிலோய்-வாயிற்காவலாளனே, மன்னவற்கு-நளமகாராசனுக்கு, எம்வரவுரைத்தி-எமது வரவைச்சொல்லு, எனலும்-என்றுசொல்லலும், ஆங்கவன்-அக்காவலாளன், எய்திக்கூறலும் - போய்சொன்ன வளவில், கொன்னவில்-கொல்லுதலைச் செய்யாநின்ற, வேலினன் - வேலையுடையவரசன், கொணர்கவென்றனன்-அழைத்துவாவென்று சொன்னான், அன்னவன் வருகென-அக்காவலாளன் வாவென்று சொல்ல, அவையினெய்தினான்-சபையில் வந்தான் (புஷ்கரராசன்), எ-று.

(க-து.) புட்கரன் காவலாளனுக்குச் சொல்ல,அவன்நளனுக்குச்சொல்ல, நளனழையென்று சொல்ல, அவனழைக்க இவன் வந்தான் எ-ம். 14

களைகணதாகியோர்கவிகைநீழலில்
வளைகடலுலகெலாம்புரக்குமன்னவன்
றளையவிழ்தாமரைத்தாளில்வீழ்ந்தெழு
மிளவலோடளவளாயிருக்குமேல்வையில்

இதுமுதல் இரண்டு பாட்டுகளால் நளன் கேள்வியு மதற்குபுட்கரனுத்தரமுஞ் சொல்லப்படுகின்றது.

(இ-ள்) களைகணதாகி-ஆதாரமாகி, ஓர்-ஒரு, கவிகை - வெண்கொற்றக்குடையினது, நீழலில்-நிழலிலிருந்து, வளைகடல்-சமுத்திரஞ் சூழ்ந்த, உலகெலாம்-பூவுலகமுழுவதும், புரக்கும்-காப்பாற்றுகின்ற, மன்னவன்-நளமகாராசனுடைய,தளையவிழ்-முறுக்குகள்விரிந்த, தாமரை-தாமரைப்பூவையொத்த, தாளில்பாதத்தில், வீழ்ந்து-வணங்கி, எழும்-எழுகின்ற,இளவலோடு-இளையோனாகியபுஷ்கரராசனுடனே, அளவளாய் - ஒருவர்க்கொருவர் கலந்துபேசிக்கொண்டு, இருக்குமேல்வையில்-இருக்குஞ்சமயத்தில் எ-று.

இச்செய்யுளும் வருஞ்செய்யுளுங் குளகம்.

(க-து.) நளனும் புட்கரனுங் கலந்திருக்குஞ்சமயத்தில் எ-ம். 15

கொல்சினவாகைவேற்குரிசின்மல்லலேற்
றெல்லுமிழ்மணிக்கொடியுயர்த்ததென்னென
வல்லடுசூதினிலேற்றமன்னரை
வெல்கொடியீதெனவிளம்பினனரோ.

(இ-ள்·) கொல்-கொல்லுகின்ற, சினம்-கோபத்தையுடைய, வாகை வெற்றி பொருந்திய, வேல் - வேலாயுதத்தையுடைய, குரிசில் - நளமகாராசனானவன், மல்லல் - பலம் பொருந்திய, ஏற்று - ரிஷபத்தின் மேல் எல்-பிரகாசத்தை, உமிழ்-கக்காநின்ற, மணிக்கொடி-அழகியகொடியை, உயர்த்தது-பிடித்தது, என்னென-என்னவென்றுகேட்க, வல்-சொக்கட்டானுல், அடு-பொருகின்ற, சூதினில்-சூதாட்டத்தில், ஏற்றமன்னரை-எதிர்த்தவேந்தரை, வெல்-செயிக்கின்ற, கொடி-துவசம்,ஈதென-ஈதென்று, விளம்பினன்-சொன்னன் எ-று.

(க-து.) நளன் இடபத்தின்மேற்கொடிபிடித்ததென்னவென்று கேட்க புட்கரன் சூதாட்டத்திலெதிர்த்த மன்னவரை வெல்லுங் கொடியிது வென்றான் எ-ம். 16

சொல்லியவவ்வுரைகேட்டுத்தூமணிக்
கல்லெனப்பணைத்துயர்கலவைத்தோளினன்

வெல்கொடியுயரியவிடலைசூதினில்
வல்லையேலாடுதும்வருகென்றோதினன்.

[இதனால்நளன் புட்கரன்கருத்துக் கிசைந்தழைத்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) சொல்லிய-சொன்ன, அவ்வுரை-அந்தவார்த்தையை, கேட்டு-செவியிற்கேட்டு, தூ-பரிசுத்தமாகிய, மணி-இரத்நங்களையுடைய, கல்லென, மலையைப்போல, பணைத்து-பருத்து, உயர்-உயர்ந்த, கலவை-சந்தனமணிந்த, தோளினன்-தோள்களையுடையநளன், வெல்கொடியுயரிய - வெல்லாநின்ற கொடியைப்பிடித்த, விடலை-புஷ்கரனே, சூதினில்-சூடாட்டத்தில், நீவல்லையேல்-நீவல்லமையுடையவனானால், ஆடுதும்-ஆடுவோம, வருகென்றோதினன்-வாவென்றுசொன்னான் எ-று.

(க-து.) நளன் சூதாட்டத்தில் வல்லவனியானால் ஆடுவோம் வாவென்றான் எ-ம். 17

நஞ்சினிற்கொடியவன்புணர்ப்பினம்மிறை
வஞ்சகச்சூதினின்மனம்வைத்தானென
வஞ்சினரமைச்சரவ்வரசர்கோமகன்
செஞ்சரண்டொழுதிவைசெப்பன்மேயினார்.

[இதுமுதல் ஐந்துபாட்டுகளால் நளன்கருத்துணர்ந்த வமைச்சரதைத் தடுக்க முயன்றுரைத்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) நஞ்சினில்-விஷத்தைபார்க்கிலும், கொடியவன்-பொல்லாதவனாகிய புஷ்கரனது, புணர்ப்பின்-சம்பந்தத்தினால், நம்மிறை-நம்முடையவரசன், வஞ்சகம்-கபடமாகிய, சூதினில்-சூதில், மனம்வைத்தானென-சிந்தைவைத்தானென்று, அஞ்சினர்-பயந்தவராய், அமைச்சர்-மந்திரிகள், அவ்வரசர் கோமகன்-அந்தநளமகாராசனது, செஞ்சரண்டொழுது சிவந்த பாதங்களை வணங்கி, இவைசெப்பன் மேயினார், இவைசொல்லத்தொடங்கினார்கள் எ-று.

(க-து.) மந்திரிகள் நளமகாராசனுக்குச சொல்லத்தொடங்கினார்கள் எ-ம்.

சீலநற்றருமமெய்சிதைக்குந்தெண்டிரை
வேலைமுற்றிருநிலக்கிழமைவீழ்த்திடும்
மாலுறுத்திடுங்கவறாடன்மன்னகேள்
கோலிழுக்கரசர்தங்கொள்கைத்தென்பவே.

(இ-ள்.) மன்னகேள்-அரசனே கேளு, கவறாடல்-சூதாடலானது, சீலம்-ஒழுக்கத்தையும், நற்றருமம்-நல்லதருமத்தையும், மெய்-சத்தியத்தையும், [illegible]ம்-கெடுக்கும், தெண்டிரை-தெள்ளிய அலையையுடைய, வேலைமுற்று-[illegible] சூழப்பட்ட, இரு-பெருமைபொருந்திய, நிலக்கிழமை-அரசாட்சியை

வீழ்த்திடும்-தள்ளிவிடும், மாலுறுத்திடும்-மயக்கஞ் செய்விக்கும், கோலிழுக் கரசர்தம்-கொடுங்கோலைச் செலுத்துகிற அரசர்களது, கொள்கைத்தென்ப-கோட்பாட்டை யுடையதென்று (பெரியோர்கள்) சொல்லுவார்கள் எ-று.

(க-து.) நளச்சக்கிரவர்த்தியே-சூதாடுதல் ஒழுக்கத்தையும், தருமத்தையும், சத்தியத்தையும் கெடுக்கும். அரசாட்சியையுந் தள்ளும். மயக்கந்தரும். இது கொடுங்கோல்வேந்தர்செய்கை யென்பார்கள் எ-ம். 19

கள்ளுணவிரும்புதல்கழகஞ்சேர்தன்மா
லுள்ளுறப்பிறர்மனைநயத்தனலொன்னலர்க்
கெள்ளருஞாட்பினிரியல்செய்திடல்
வள்ளியோயறநெறிவழுக்குமென்பவே.

(இ-ள்.) கள்ளுணவிரும்புதல்-மதுவைக்குடிக்க இச்சித்தலும், கழகஞ்சேர்தல், சூதாடுமிடத்தைச் சேர்தலும், மாலுள்ளுற-உள்ளே மயக்கமடைய பிறர்மனைநயத்தல்-பிறர்மனையாளை விரும்புதலும், ஒன்னலர்க்கு-சத்துருக்களுக்கு, எள்ளரும்-இகழ்ச்சியில்லாத, ஞாட்பினில்-அமர்க்களத்தில், இரியல் செய்திடல்-பின்னிட்டோடலும்(ஆகிய இவைகளால்,)வள்ளியோய்-குறையாது கொடுக்கு மாசனே, இறநெறி-அறத்தின்வழி, வழுக்குமென்ப-பிறழுமென்று (பெரியோர்கள் சொல்லுவார்கள்,) எ-று.

(க-து.) அரசனே-கள்ளையிச்சித்தல், சூதாடுமிடத்தைச் சேர்தல், பிறன் மனையாளை யிச்சித்தல், யுத்தத்திலோடுதல், இவை தருமவழிக்கு இழுக்கென் பார் எ-ம். 20

ஐயநீயாடுதற்கமைந்தசூதுமற்
றெய்துநல்குரவினுக்கியைந்ததாதுவெம்
பொய்யினுக்கருந்துணைபுன்மைக்கீன்றதாய்
மெய்யினுக்குறுபகையென்பர்மேலையோர்.

(இ-ள்.) ஐய-ஐயனே, நீயாடுதற்கு-நீயாடுகிறதற்கு, அமைந்த-சம்மதித்த, சூது-சூதாட்டமானது, எய்துநல்குரவினுக்கு-தானேவருதற்குரிய தரித்திரத்துக்கு, இயைந்ததாது-நல்லதாதாகும், வெம்பொய்யினுக்கு - வெவ்வியபொய்க்கு, அருந்துணை-நல்ல சகோதரமாகும், புன்மைக்கு-கீழ்த்தொழிலுக்கு, ஈன்றதாய்-பெற்றதாயாகும், மெயயினுக்கு-சத்தியத்துக்கு, உறுபகையென்பர் மிகுந்தபகையென்று சொல்லுவார்கள், மேலையோர்-பெரியோர்கள் எ-று.

(க-து.)அரசனே-சூதானது வறுமைக்குத் தாதும், பொய்க்குத்துணையும், இழிதொழிலுக்குத் தாயும், மெய்க்குப் பகையும், ஆகுமென்பார்கள் பெரியோர்கள் எ-ம். 21

என்னுகசூதினையிகலிவென்றதூஉங்
கின்னமேற்கொடுமைகைதந்துவேட்டுவ

ருள்ளுறவமைத்திடுமுணவையோர்கிலாப்
புள்ளினமருந்தினபோலுமென்பவே

(இ-ள்.) எள்ளுக-இகழக்கடவாய், சூதினை-சூதாட்டத்தை, இகலி-பகைத்து, வென்றதூஉம்-செயித்ததும், கள்ளம்-கபடத்தை, மேற்கொண்டு - மேற்கொண்டு, வலைகரந்து-வலையைமறைத்து, வேட்டுவர் - வேடர்கள், உள்ளுறவமைத்திடு முணவை-உள்ளேவைத்திருக்கிற இரையை, ஓர்கிலா-அறியாத, புள்ளினம்-பறவைக்கூட்டங்கள், அருந்தின - உண்டவை. போலும்-ஒக்கும், என்ப-என்றுசொல்லுவார்கள், எ-று.

(க-து.) அரசனே-சூதாட்டத்தை யிகழ்வீராக என்றார்கள் எ-ம். 22

கலைக்கடல்கடந்துளார்கழறுங்கட்டுரை
சிலைத்தழும்பிருந்ததோட்செம்மல்கேட்டுயி
ருலப்பினுமறுக்கிலேனுரைத்தவாய்மைநீர்
விலக்குவதென்னெனவிளம்பினனரோ.

[இதுமுதல் இரண்டுபாட்டுகளால் ஊழின்வலியால் நளனவ் வுரைகளைத் தடுத்து அவ்வாட்டத்தின் முயன்றமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கலைக்கடல்-அறுபத்துநாலுகலைகளாகிய சமுத்திரத்தை, கடந்துளார்-ஆராய்ந்தமந்திரிகள், கழறும்-சொல்லுகிற, கட்டுரை-சொல்லை, சிலைத்தழும்பிருந்ததோட் செம்மல்-சிலையின்தழும்பு பொருந்திய புயத்தையுடைய நளமஹாராசன், கேட்டு-கேட்டு, உயிருலப்பினும்-உயிரிறந்து விட்டாலும், உரைத்தவாய்மை-யான்சொன்னசொல்லை, மறுக்கிலன்-தடுக்கமாட்டேன், நீர் விலக்குவதென்னென-நீங்கள்விலக்குகிறதெனனென்று,விளம்பினன்-சொன்னான், எ-று.

(க-து.) நளன் மந்திரிகளை விலக்கவேண்டாமென்றான் எ-ம். 23

மன்னவனியைந்தவைமறுக்கலானென
வின்னலுற்றமைச்சராண்டிருப்பவெங்கலி
துன்னியதானுமூழ்துரந்தவாற்றினு
முன்னருஞ்சூதினின்முயல்கின்றனரோ.

(இ-ள்.) மன்னவன்-அரசன், இயைந்தவை-சம்மதித்தவை, மறுக்கலானென்-தடுக்கமாட்டானென்று, இன்னலுற்று - வருத்தமடைந்து, அமைச்சராண்டிருப்ப-மந்திரிகளவ்விடத்தில் பேசாதிருக்க, வெங்கலி துன்னியதானும்-வெவ்வியகலிசேர்ந்ததினாலேயும், ஊழ்-ஊழ்வினையானது, துரந்தவாற்றினும்-செலுத்துதலினாலும், முன்னருஞ்சூதினில்-நினைத்தற்கரிய சூதாட்டத்தில், முயல்கின்றான்-முயற்சிபடுகின்றான், எ-று.

(க-து.) நளன் ஊழ்வினையின்படி சூதாடமுயற்சிசெய்கின்றான். எ-ம். 24

நிழலுமிழ வைரவாணிடதர்கோமக
னொழுகொளிப்பூணினுயொட்டம்யாதென
மழவிடையதனையான்வைப்பனீயுமு
னெழுகடன்ஞாலமுமிவையகவென்றனன்.

[இதனல் இருவரும் பந்தயம்வைத்தல் சொல்லப்படுகின்றது.

(இ-ள்.) நிழல்-பிரகாசத்தை, உமிழ்-கக்காநின்ற, வைரவாள்-கூரியவாளை யுடைய, நிடதர்கோமகன்-நளமஹாராசனுனவன், ஒழுகொளிப் பூணினுய்-மிகுந்த பிரகாசம்பொருந்திய ஆபரணத்தையுடைய புஷ்கரனே, ஒட்டம்யாதென-பந்தயம் - யாதென்றுகேட்க, மழவிடையதனை - என்னுடைய இளவேற்றை, யான்-நான், வைப்பன்-பந்தயமாகவைப்பேன், நீயும்-நீயும், உன்னெழுகடல்ஞாலமும்-உனது ஏழுசமுத்திரஞ்சூழ்ந்த உலகத்தையும், இவைகவைத்தற்குசம்மதி, என்றனன்-புஷ்கரன்சொன்னுன், எ-று.

(க-து.) நளன் பந்தயம் யாதெனக்கேட்க, நான் இடபத்தைவைக்கிறேன் நீ உலகத்தைவையென்முன் எ-ம். 25

சூழ்வினைப்புணர்ப்பினுற்சொன்னவாறியைந்
தாழ்கடற்புவிதொழுமரசனுடவெங்
காழ்மனக்கொடுங்கலிகவற்றின்வண்ணமாய்
வீழ்தலும்புட்கரன்வென்றிட்டானரோ.

[இதனல் புட்கரன் வெற்றிசொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) சூழ்-சூழ்ந்த, வினை-ஊழ்வினையின, புணர்ப்பினுல்-சம்பந்தத்தினுல் சொன்னவாறியைந்து-அவன்சொன்னபடிசம்மதித்து, ஆழ்-ஆழ்ந்த, கடற்புவி தொழும்-கடலாற்சூழப்பட்ட வுலகம் வணங்கும், அரசன்-நளமகாராசன், ஆட-சூதாட, வெம்-வெவ்விய, காழ்-வைரம்பொருந்திய, மனம்-மனத்தை யுடைய, கொடுங்கலி-கொடியகலியானவன், கவற்றின் வண்ணமாய்-சூதின் வடிவமாய், வீழ்தலும்-புரளவும், புட்கரன்-புட்கரராசன், வென்றிட்டான்-செயித்தான், எ-று.

(க-து.) ஊழ்வினைப்படி நளனுடைப் புட்கரன் வென்முன் எ-ம். 26

கழைசுளிபுகர்முகக்களிறுதேர்பரி
யிழைதவழிளமுலைமகளிரீட்டிய
விழுநிதிக்குப்பைகள்வேலைசூழ்புவி
முழுவதுந்தோற்றனன்முழவுத்தோளினுன்.

[இதனல் நளன்தோல்வி சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கழைசுளி-கரும்பைமுறிக்கின்ற, புகர்முகம்-புள்ளிபொருந்திய முகத்தையுடைய, களிறு-யானையும், தேர்-இரதமும், பரி-குதிரையும், இழை-

ஆபரணமானது, தவழ்-அசையாநின்ற, இளம்-இளமைதங்கிய, முலை-ஸ்தனங்களையுடைய, மகளிர்-மாதர்களும், ஈட்டிய-சம்பாதித்த, விழு-மேன்மையாகிய நிதிக்குப்பைகள்-திரவியக்கும்பலும், வேலைசூழ்-சமுத்திரஞ்சூழ்ந்த, புவி-பூமியும், முழுவதும் - ஆகியவனைத்தையும், முழவுத்தோளினன் - மத்தளத்தையொத்ததோளையுடையநளமகாராசன், தோற்றனன்-தோற்றுவிட்டான், எ-று.

(க-து.) நளன்யாவுந் தோற்றுப்போனான் எ-ம். 27

அனைத்தையுந்தோற்றனையருவிபாய்கவுட்
சினக்களிமால்களிறனையசீற்றத்தோய்
மனத்திடைநினைக்குவதென்னைவல்லைநின்
புனக்கொடியிசைந்தினிப்பொருதும்யாமென்றான்.

[இதனால் புட்கரன் தனது வெற்றிமகிழ்ச்சியால் தகாதவுரைகூறி மீட்டுமழைத்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) அனைத்தையும்-முழுமையும், தோற்றனை - தோற்றுவிட்டாய், அருவி-மதசல வருவியானது, பாய்-பாயாநின்ற, கவுள்-கபோலத்தையுடைய, சினம்-கோபம்பொருந்திய, களி-செருக்கையுடைய, மால் - பெருமைபொருந்திய, களிறனைய-யானையையொத்த, சீற்றத்தோய்-கோபத்தையுடைய நளனே மனத்திடை - மனதினிடத்தில், நினைக்குவதென்னை - ஆலோசிப்பதென்னை, வல்லை-சீக்கிரத்தில், நின்-உன்னுடைய, புனக்கொடிக்கு-மனையாளுக்கு, இயைந்து-பந்தயத்துக் கியைந்து, நாம்-இருவரும், இனிப்பொருதும்-இனி ஆடுவோம், என்றான்-என்றுசொன்னான் எ-று.

(க-து.) புட்கரன், நளனே-உன் மனையாளையும் வைத்தாடுகவென்றான் எ-ம். 28

சூதாடு படலம் முற்றிற்று.

---



13 நாரதர் இந்திரனுக்குத் தமயந்தியின் சுயம்வரச்சேதி யறிவித்தல் 140-வது-பக்கம்.

உ

கடவுள் துணை.

# நகர் நீங்கு படலம்.



இப்படலத்தாற் சூதிற் றோல்வியடைந்த நளன் றான்பழகிய அந்நகரத்திலுள்ளாரோடும் வறியனாய்க் கூடியிருப்பதில் விழையாமல், அந்நகரைவிட்டுநீங்கல் சொல்லப் படுகின்றது.

[இதனால் நளன்றுணிவு சொல்லப்படுகின்றது.]

(கலிவிருத்தம்.)

என்றலுமுறுவலித்திசைக்கலாதன
வொன்றுநீயுரைத்திடலுலங்கொடோளினாய்
வென்றநின்னகர்வயின்மேவலேனெனாத்
துன்றுகானகஞ்செலத்துணிதன்மேயினான்.

(இ-ள்.) என்றலும்-என்றுசொன்னவளவில், முறுவலித்து-சிரித்து, இசைக்கலாதன-சொல்லப்படாதவைகளை, நீயொன்று முரைத்திடல்-நீயொன்றுஞ் சொல்லாதே, உலங்கொ டோளினாய்-திரண்ட கல்லையொத்த தோளையுடைய புட்கரனே, வென்ற-செயித்த, நின்னகர்வயின்-உன்னூரினிடத்து, மேவலே னெனா-இருக்கமாட்டேனென்று, துன்று-நெருங்கிய, கானகஞ்செல-காட்டினிடத்திலேபோக, துணிதன்மேயினான்-நளமஹாராசனிச்சித்தானெ-று.

(க-து.) நளன் காட்டிற்செல்லத் துணிந்தான் எ-ம். 1

வாட்டிறன்மன்னவன்கமலவாண்முக
மீட்டருமரசியலிழந்தபோதிலும்
பாட்டளிக்கூந்தல்வேந்தவையிற்பைந்தொடை
சூட்டியஞான்றினுந்துலங்குகின்றதே.

[இதனால் நளன்பொலிவு சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) வாள்-வாட்போரில், திறல்-வல்லமையுடைய, மன்னவன்-நளமகாராசனது, கமலம்-தாமரைப்பூவையொத்த, வாள்-ஒளிபொருந்திய, முகம்-முகமானது, ஈட்டரும்-சம்பாதிக்கதற்கரிய, அரசியல்-அரசாட்சியை, இழந்தபோதிலும்-இழந்தகாலத்திலும், பாட்டு-இராகங்களைபாடாநின்ற, அளி-வண்டுகள்மொய்க்கின்ற, கூந்தல்-அளகபாரத்தையுடைய தமயந்தியானவள், வேந்

தவையில்-இராசசபையிலே, பைந்தொடை-பசியபூமாலையை, சூட்டியஞான்றினும்-சூட்டினநாளிற்பார்க்கிலும், துலங்குகின்றது-பிரகாசிக்கின்றது எ-று.

(க-து.) நளன்முகம் பொலிவையடைந்தது எ-ம். 2

சாமரையிரட்டுநரடைப்பைதாங்குநர்
தீமுகத்துமிழும்வாளேந்திச்செல்குந
ரேமுறயாரையும்விலக்கியேந்தருன்
கோமகளினிதுறைகோயிலெய்தினான்.

[இதனால் நளனந்தப்புறஞ் சென்றமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) சாமரையிரட்டுநர்-சாமரை வீசுகிறவர்களையும், அடப்பைதாங்குநர்-தாம்பூலப்பையை யேந்தப்பட்டவர்களையும், தீ-அக்கினியை, முகத்து-தன்முகத்தில், உமிழும்-கக்குகின்ற, வாள்-கத்தியை, ஏந்து-தாங்கி, செல்குநர்-வருகின்றவர்களையும், ஏமுற-மயக்கமுற, யாரையும்-மற்றவர்களையும்,விலக்கி-நீக்கி, ஏந்தருன்-நளமகாராசன், கோமகள்-தமயந்தி, இனிது-இனிமையாக, உறை - வாசம்பண்ணுகிற, கோயில் - அரண்மனையை, எய்தினான் - சேர்ந்தான் எ-று.

(க-து.) நளன் ஒன்றியாகத் தமயந்தி யரண்மனைக்குப்போனான் எ-ம். 3

கற்றையங்கவரியுங்கால்செய்வட்டமுங்
கொற்றவெண்கவிகையுமின்றிக்கோதைவேன்
மற்றடந்தோளினான் வருதல்காண்டலு
முற்றதையென்கொலென் றுள்ளத்தெண்ணினாள்.

[இதனால் நளன் வரவைக்கண்ட தமயந்திசெயல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கற்றை-தொகுதியாயிராநின்ற, அம்-அழகிய, கவரியும்-சாமரையும், கால்செய்வட்டமும்-சாந்தீற்றியும், கொற்ற வெண்கவிகையும்-வெண்கொற்றக்குடையும், இன்றி-இல்லாமல், கோதைவேல்-மாலையணிந்த வேலையுடைய, மல்-வலிமைபொருந்திய, தடம்-பருத்த,தோளினான்-தோளையுடைய நளமகாராசன், வருதல்காண்டலும்-வருதலைப்பார்த்த வளவில், உற்றதை-இப்படிக்கு அரசன்வருவதை, என்கொல்-என்னகாரணமென்று; உள்ளத்தெண்ணினாள்-மனத்தில் ஆலோசித்தாள் எ-று.

(க-து.) தமயந்தி நளன் தனித்துவந்ததைக்கண் டாலோசித்தாள் எ-ம்.

எண்ணிவந்திறைஞ்சியவெழிற்கொம்பன்னவண்
மண்ணியமதிநிகர்வதனநோக்குறுப்
புண்ணுழைவேலெனப்புகுந்தயாவையும்
நண்ணலர்கடந்தவேனம்பிகூறினான்.

[இதுமுதல் பதினான்குபாட்டுகளால் நளனுக்குந் தமயந்திக் நடந்த சம் பாஷணஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) எண்ணிவந்து - இப்படியாலோசித் தெதிர்வந்து, இறைஞ்சிய-வணங்கிய, எழில்-அழகுபொருந்திய, கொம்பன்னவள்-பூங்கொத்தையொத்த தமயந்தியினது, மண்ணிய-கழுவிய; மதிநிகர்-சந்திரனை யொத்த, வதனம்-முகத்தை, நோக்குறா-பார்த்து, புண்-புண்ணினிடத்தில், நுழை நுழைகின்ற, வேலென-வேலைப்போல, புகுந்தயாவையும்-தானடைந்தவைகளை யெல்லாம், நண்ணலர்-சத்துருக்களை, கடந்த-செயித்த, வேல்-வேலையையுடைய, நம்பி-நளமகாராசன், கூறினன்-சொன்னான் எ-று.

(க-து.) நளன் தமயந்திக்கு நடந்தவற்றைச் சொன்னான் எ-ம். 5

தாழ்தடக்கையினானின்னசாற்றலும்
வீழிவாய்மடமயில்வெய்துயிர்ப்பொடு
மாழ்கினள்வருந்தினண்மழைக்கணீருகுத்
தூழ்வலியிதுவெனவுள்ளந்தேறினாள்.

(இ-ள்) தாழ்-முழங்கால்மட்டுநீண்ட, தடம்-விசாலமாகிய, மையினான்-கைகளையுடைய நளமகாராசன், இன்ன-இவைகளை, சாற்றலும் - சொன்னவளவில், வீழி-வீழிக்கனியையொத்த, வாய்-அதரத்தையுடைய, மடமயில்-தமயந்தியானவள், வெய்துயிர்ப்பொடும்-வெவ்விய பெருமூச்சுடனே, மாழ்கினள்-மயங்கினாள், வருந்தினள்-வருத்தமுற்றாள், மழைக்கண்-குளிர்ந்த கண்களினின்றும், நீருகுத்து-நீரைச்சொரிந்து, ஊழ்-ஊழ்வினையினது,வலி-வன்மை, இதுவென-இதுவென்று, உள்ளந்தேறினாள்-மனந்தெளிந்தாள் எ-று.

(க-து.) தமயந்தி ஊழ்வினையென்று நினைத்தாள் எ-ம். 6

இந்திரசேனனென்றிசைக்கும்பேருடை
மைந்தனுமழலைவாய்க்கொடியுமாழ்குறா
துய்ந்திடக்கொண்டுபோரோசைபோயநின்
றந்தைதன்வளநகர்சார்கவென்றனன்.

(இ-ள்.) இந்திரசேனனென்று - இந்திரசேனனென்று, இசைக்கும்-சொல்லுகின்ற, பேருடை-நாமத்தையுடைய், மைந்தனும்-பிள்ளையும், மழலை-மழலைச்சொற்பொருந்திய, வாய்-வாயையுடைய, கொடியும்-புதல்வியாயினியும, மாழ்குறாது-வருத்தமுறாது, உய்ந்திட-பிழைத்திருக்க, கொண்டு- உடன் கொண்டு, பேரோசைபோய-பெருங்கீர்த்தியையுடைய, நின்-உன்னுடைய, தந்தைதன்-தகப்பனுடைய, வளம்-வளப்பம்பொருந்திய, நகர்-பட்டணத்தை சார்கவென்றனன்-அடையக்கடவையென் றுநளமகாராசன்சொன்னான் எ-று

(க-து.) நளன் தமயந்தியைப் பிள்ளைகளையழைத்துக்கொண்டு நின்பிதாவின் வீட்டிற்குப்போவென்றான் எ-ம். 7

உயிர்நிகர்மக்களோடுலங்கொடோளினான்
செயிரறுதந்தைபாற்செல்கென்றோதலும்
பயனறுங்கூந்தலாள்புண்ணினூடெரி
யயினுழைந்தாலெனவலமந்தேங்கினாள்.

(இ-ள்.) உயிர்நிகர்-உயிரையொத்த, மக்களோடு பிள்ளைகளுடனே. உலங்கொள்-திரண்டகல்லினழகைக்கொண்ட, தோளினான்-தோள்களையுடைய நளமகாராசன், செயிரறு-குற்றமற்ற, தந்தைபால-தகப்பனிடத்தில், செல்கென்றோதலும்-போகவென்று சொல்லலும், புயல்-மேகத்தையொத்த, நறும்-வாசனைபொருந்திய, கூந்தலால்-அளகபாரத்தையுடைய தமயந்தியானவள், புண்ணினூடு-புண்ணினுள், எரி-எரியாநின்ற, அயில்-வேலானது, நுழைந்தாலென-நுழைந்ததுபோல, அலமந்து-மனங்கலங்கி, எங்கினாள்-அழுதாள் எ-று.

(க-து.) தமயந்தி மனங்கலங்கினாள் எ-ம். 8

நெடிபடுகானிடைத் தமியைநீக்கிப்போய்ப்
படுபரலமளிமேற் பள்ளிகொள்ளவெங்
கடிநகரடைந்துமெல் லணையிற்கண்படி
லடியனேற்கிதனினு மறனுண்டாங்கொலோ

(இ-ள்.) நெடிபடு-சிள்வண்டுகளையுடைய, கானிடை-காட்டினிடத்தில், தமியை-தனியாகியவென்னை, நீங்கிப்போய்-விட்டுநீங்கிப்போய், படு-உறுத்தாநின்ற, பரல்-பரற்கல்லுக்களாகிய, அமளிமேல்-அணையின்மீது, பள்ளிகொள்ள-(நீர்) நித்திரைசெய்ய, வெம்-குரூரமாகிய, கடி-காவலையுடைய, நகர்-பட்டணத்தை, அடைந்து-சேர்ந்து, மெல்-மிருதுவாகிய, அணையில்-சயனத்தில், கண்படில் - (நான்) நித்திரைசெய்யில், அடியனேற்கு-அடியேனுக்கு, இதனினும்-இதைப்பார்க்கிலும், அறனுண்டாங்கொல்-தருமமுண்டோ எ-று.

(க-து.) தமயந்தி நீர் காட்டிற்போக நான் வீட்டிற்குப்போகுதல் தருமமோ என்றான் எ-ம். 9

என்றவளுரைத்தலுமடங்கலேறனான்
மென்றளிர்கவற்றுநின்மெல்லென்சீறடி
கன்றவெம்பரல்படு கானினேகுதற்
கொன்னுமேறெனதுயி ருய்யுமோவென்றான்

(இ-ள்.) என்று-இப்படியென்று, அவள்-அத்தமயந்தியானவள், உரைத்தலும்-சொன்னவளவில், மடங்கலேறனான்-ஆண்சிங்கத்தையொத்த நளமகாராசன், மென்றளிர்-மெல்லியதளிரை, கவற்றும்-வருந்தச்செய்யும், நின்-உன்னுடைய, மெல்லென்-மிருதுவாகிய, சீறடி-சிற்றடிகள், கன்ற-கன்றிப்போக, வெம்-குரூரமான, படுபரல்-மணியாம்பருக்கைக் கல்லுண்டாகிய, கானின்-

காட்டில், எகுதற்கு-போகுதற்கு, ஒன்றுமேல்-பொருந்துமாகில், எனதுயிர்-என னுடைய பிராணன், உய்யுமோ வென்ருன்-பிழைக்குமோவென்றுசொன் ஞன் எ-று.

(க-து.) நளன் தமயந்தியே-உன்னடி காட்டில் நடக்க என்னுயிர் பிழை யாதென்ருன் எ-ம். 10

பொற்பினுக்குறையுளாம்பொன்னங்கொம்பனு
யற்பினிற்பயந்தநம்மக்களாயிடை
யெற்பிரிந்துறைகுநரேனுமெங்ஙன
நிற்பிரிந்தாற்றுவர்நிகழ்த்துவாயென்ருன்.

(இ-ள்.) பொற்பினுக்கு-அழகிற்கு, உரையுளாம்-இருப்பிடமாகிய,பொன் னங் கொம்பனுய்-அழகுபொருந்திய பொற்கொம்பையொத்த தமயந்தியே, அற்பினில்-ஆசையினுலே, பயந்த-பெற்ற, நம்மக்கள்-நம்முடைய பிள்ளைகள், ஆயிடை-அந்த வீமன் வீட்டில், எற்பிரிந்து-என்னைவிட்டுநீங்கி, உறைகுநரே னும்-இருப்பாராயினும், எங்ஙனம்-எத்தன்மையாய், நிற்பிரிந்து-உன்னைவிட்டு நீங்கி, ஆற்றுவர்-பொறுத்திருப்பார்கள், நிகழ்த்துவாயென்ருன் - சொல்லெ ன்று சொன்ஞன் எ-று.

மக்கட்குத் தந்தையினும் தாயாதிக ரென்பதாம்.

(க-து.) தமயந்தியே-பிள்ளைக ளென்னைவிட்டிருந்தாலும் உன்னைவிட் டிரார்கள் எ-ம். 11

கூற்றுறழ்குருதிவேற்குரிசின்மக்கடா
மாற்றினுமாற்றலாதஞரின்மூழ்கினு
மாற்றருங்கற்பினர்மகிழ்நர்கான்செல
வேற்றுநாடுறைவதுவிழுமிதோவென்ருள்.

(இ-ள்.) கூற்றுறழ்-இயமனையொத்த, குருதி-உதிரந்தோய்ந்த, வேல்-வே லாயுதத்தையுடைய, குரிசில்-அரசனே, மக்கள்-பிள்ளைகள், ஆற்றினும்-பொ றுத்தாலும், ஆற்றலாது-பொறுக்காமல், அஞரில்-துக்கத்தில், மூழ்கினும்-மூழ் கினும், மாற்றரும்-பிறராற் கெடுதற்கரிய, கற்பினர்-பதிவிரதாதருமத்தை யுடைய பெண்கள், மகிழ்நர்-புருஷர்கள், கான்செல்-காட்டிற்போக, வேற்று நாடுறைவது-வேறுதேசத்திற்போயிருப்பது, விழுமிதோவென்ருள்-மேன்மை யுடையதோவென்று தமயந்தி சொன்ஞள் எ-று.

(க-து.) கற்புள்ளபெண்கள் நாயகரை விட்டிருத்தல் சிறப்பல்லவென் ருள் எ-ம். 12

விரிகடலமிழ்தமும்வேலைஞாலமுஞ்
செருமுகத்தழலுமிழ்சிறுகண்யானையு

மெரிமணிக்குப்பையுமெளிதினெய்தலா
மருமகப்பெறுதன் மற்றரியதென்பவே.

(இ-ள்.) விரி - பரந்த, கடல் - திருப்பாற்கடலினுண்டாகிய, அமிழ் தமும்-தேவாமிர்ததத்தையும், வேலை-சமுத்திரஞ்சூழ்ந்த, ஞாலமும்-பூமியையும் செருமுகதது-யுத்தத்தினிடத்திலே, அழலுமிழ்-நெருப்பையுமிழ்கின்ற, சிறு கண்யானையும்-சிறியகண்களையுடைய யானைகளையும், எரி-பிரகாசிக்கின்ற, மணிக்குப்பையும்-இரத்னக்குப்பைகளையும், எளிதினெய்தலாம் - எளிதிலேயடையலாம், அருமகப்பெறுதல்-அரியபிள்ளைகளைப்பெறுதல், அரியதென்ப-அரியதென்றுசொல்லுவார் பெரியோர்கள் எ-று. மற்று-ஏ-அசைகள்.

(க-து.) எல்லாஞ் சம்பாதிக்கலாம் பிள்ளைகளைச்சம்பாதித்த லரிதென்றான் எ-ம். 13

விம்மிமின்னுழைமருங்கொசியவீங்கிய
கொம்மைவெம்முலையினாள்குதலைமென்மொழிச்
செம்மையவருமகப்பெறாததீமையோர்க்
கிம்மையுமறுமையுமின்பமில்லையால்.

(இ-ள்.) விம்மி-பருத்து, மின்-மின்னலையொத்த, நுழை-நுட்பமாகிய, மருங்கு-இடையானது, ஒசிய-ஒடிந்துபோகும்படி, வீங்கியபூரித்த, கொம்மை-இளமைபொருந்திய, வெம் - விருப்பத்தைச் செய்கின்ற, முலையினாய் ஸ்தனங்களையுடைய தமயந்தியே, குதலை - மழலையாகிய, மென்மொழி மிருதுவாகிய சொல்லையும், செம்மைய - நல்ல குணத்தையுமுடைய, அருமக - அரியபிள்ளைகளை, பெறாத - பெற்றுக்கொள்ளாத, தீமையோர்க்கு குற்றத்தை யுடையோர்க்கு, இம்மையும்-இப்பிறப்பிலும், மறுமையும்-மறு பிறப்பிலும், இன்பமில்லை-சுகமில்லை, எ-று. ஆல்-அசை.

(க-து.) நற்பிள்ளைகளைப்பெறாதார்க்கு இருபிறப்பிலுமின்பமில்லை எ-ம்

என்னலும்வணரிருங்கூந்தலேந்திழை
மன்னவமழலைவாய்மக்கடம்மொடு
மின்னகுபரிதிவேல்வீமன்மாநகர்
துன்னுதும்யாமெனச்சொல்லினாளரோ.

(இ-ள்.) என்னலும் - இப்படியென்று அரசன் சொல்லவும், வணர்-வளைந்த, இரு-பெரிதாகிய,கூந்தல்-அளகபாரத்தையுடைய,ஏந்திழை-தமயந்தியானவள், மன்னவ-அரசனே, நம்-நம்முடைய, மழலைவாய்-மழலைச்சொல் பொருந்திய வாயையுடைய, மக்கடம்மொடும்-பிள்ளைகளுடனே, யாம்-நாமிருவரும், மின்னகு-மின்னலைப் பழிக்காநின்ற, பரிதி-சூரியனையொத்த, வேல் வேலாயுதத்தையுடைய, வீமன்-வீமராசனுடைய, மாநகர்-பெரியநகரில், துன்னுதும்-சேர்வோம், யாம்-நாம், என-என்று, சொல்லினாள், எ-று.

(க-து.) தமயந்தி நளனைத்தன் தகப்பன் வீட்டுக்கு வாவென்றாள் எ-ம்

கோற்றொடிசெல்வர்பாற்குறையிரந்துநின்
றேற்றயின்றுயிர்சுமந்திருத்தலீறிலா
வாற்றலுமானமுமறிவுங்கல்வியு
மாற்றருஞ்சீர்த்தியுமாற்றுமென்பவே.

(இ-ள்) கோற்றொடி-தமயந்தியே, செல்வர்பால்-செல்வத்தையுடையவர்களிடத்தில். குறையிரந்துநின்று-குறையைச்சொல்லி, யிரந்துநின்று, ஏற்று-வாங்கி, அயின்று-உண்டு, உயிர் சுமந்திருத்தல், உயிரைத்தாங்கி யிருத்தலானது, ஈறிலா-முடிவில்லாத, ஆற்றலும்-வலிமையையும், மானமும்-அபிமானத்தையும், அறிவு-அறிவையும், கல்வியும்-வித்தையையும், மாற்றரும்-நீக்கப்படாத, சீர்த்தியும்-சீர்த்தியையும், மாற்றுமென்ப-போக்குமென்று பெரியோர் சொல்வார்கள், எ-று.

(க-து.) நளன் இரந்துண்டல் விழிவென்றான் எ-ம். 16

மிக்கவெஞ்சமத்திடைவெருவியோடின
ரொக்கறுன்புறத்தனியுலகில்வாழுநர்
புக்குவேட்டகத்தினிலுண்ணும்புன்மையோர்
மக்களுட்பதடியென்றுரைக்கும்வையமே.

(இ-ள்:) மிக்க-அதிகரித்த.வெஞ்சமத்திடை-வெவ்வியயுத்தத்தினிடத்தில், வெருவியோடினர்-பயந்தோடினவர்களும், ஒக்கல்-சுற்றத்தார், துன்புற-வருத்தமடைய, தனி-தனித்திருந்து, உலகில்-உலகத்தில், வாழுநர்-செல்வத்துடன் வாழ்கின்றவர்களும், புக்கு-போய், வேட்டகத்தினில்-மாமனார் வீட்டில், உண்ணும்-புசிக்கின்ற, புன்மையோர்-கீழ்மக்களும், மக்களுள்-மனிதருக்குள், பதடியென்று-பதரென்று, வையம்-உலகம்-உரைக்கும்-சொல்லும், எ-று.

(க-து.) போரிலோடினவர், இனம் வருத்தமுற வாழ்பவர், மாமனார் வீட்டிலுண்பவர், இவர்கள் மக்கட்பதர் என்பாரென்றான் எ-ம். 17

என்றலுந்திருவுளமின்னதாகுமேன்
மன்றலந்தெரியலாய்மக்கடம்மைநம்
மின்றிகழ்மானவேல்விதர்ப்பன்மாநகர்
சென்றிடப்பணித்தருளென்றுசெப்பினாள்.

(இ-ள்.) என்றலும்-இப்படியென்று அரசன் சொன்னவளவில், திருவுளம்-உம்முடைய சித்தம், இன்னதாகுமேல்-இத்தன்மையதாகுமானால், மன்றல்-வாசனைபொருந்திய, அம்-அழகிய, தெரியலாய்-மாலையையுடைய அரசனே, மக்கடம்மை-பிள்ளைகளை, நம்-நம்முடைய, மின்போலும் - பிரகாசிக்கின்ற, மானம்-பெருமைபொருந்திய, வேல்-வேலாயுதத்தையுடைய, விதர்ப்

பன்-வீமராசனுடைய, மாநகர்-பெரியநகரத்தில், சென்றிட-போக, பணித்தருள்-உத்தரவுகொடு, என்று-இப்படியென்று, செப்பினாள்-தமயந்தி சொன்னாள், எ-று.

(க-து.) தமயந்தி பிள்ளைகளைத் தன் தகப்பன் வீட்டிற்கனுப்விடென்றாள் எ-ம். 18

தண்டலில்பாகனை நோக்கித்தாதுசேர்
வண்டிமிர்தெரியலான்வருந்திமக்களை
விண்டொடுபுரிசைசூழ்விதர்ப்பன்றன்னுழை
கொண்டனைபோகெனக்கூறினானரோ.

[இதனால் அரசன் தமயந்திகருத்தின்படிப் பிள்ளைகளை வீமனிடம் விடுக்கச் செய்தமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) தண்டலில்-நீங்குதலில்லாத, பாகனை-தேர்ப்பாகனை, நோக்கி-பார்த்து, தாதுசேர்-மகரந்தஞ்சேர்ந்த, வண்டிமிர் - வண்டுகள்சப்தியாநின்ற, தெரியலான்-மாலையையணிந்தநளமகாராசன், வருந்தி-வருத்தமுற்று, மக்களை பிள்ளைகள், விண்டொடு - மேகத்தையளாநின்ற, புரிசைசூழ் - மதில்சூழ்ந்த, விதர்ப்பன்றன்னுழை-வீமராசனிடத்தில், கொண்டனைபோகென - கொண்டு போவென்று, கூறினன்-உத்தரவுகொடுத்தான், எ-று. அரோ-அசை.

(க-து.) நளன்தேர்ப்பாகனைப்பார்த்துப் பிள்ளைகளையழைத்துக்கொண்டு வீமராசனிடத்திற் போவென்றான் எ-ம். 19

தழுவியதாதைதன்முகமுந்தாயர்த
முழுமதியனையவாண்முகமுநோக்குறூஉ
விழிவழிநீருகவிம்மிவிம்மிநின்
றழுதனர்கண்டுளோரலங்கணெய்தலே.

[இதனால் தாய்தந்தையர் பிரிவையுணர்ந்த அப்பிள்ளைகள் துயரஞ்சொல்லப்படுகின்றது.]

(இ-ள்) தழுவிய - தங்களைத்தழுவிக்கொண்டே, தாதைதன் முகமும்-தகப்பனுடைய முகத்தையும், தாயர்தம்-தாயாரினுடைய, முழுமதியனைய-பூரணசந்திரனையொத்த, வாண்முகமும்-ஒளிபொருந்தியமுகத்தையும், நோக்குறூஉ-பார்த்து, விழிவழி - கண்ணின்வழியிலே, நீருக-நீர்சிந்த, விம்மிவிம்மிநின்று-தேம்பித்தேம்பிநின்று, கண்டுளோர்-பார்த்தவர்கள், அலக்கணெய்த-துன்பமுறும்படி, அழுதனர்-அழுதார்கள் எ-று.

(க-து.) பிள்ளைகள் தாய்தகப்பனைப்பார்த்து அழுதார்கள் எ-ம். 20

அலமருமக்கட்மாகமெங்கணு
முலைவழியொழுகுபானனைப்பமோந்துவாய்
புலர்தரப்பற்புல்லிக்கொண்டுகண்
கலுழ்தருபுனலினாற்கழுவினாளரோ.

[இதனால் அப்பிள்ளைகளால் தமயந்திபடுந்துயரஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) அலமரு-மனங்கலங்காநின்ற, மக்கட்ம்-பிள்ளைகளுடைய, ஆகமெங்கணும்-சரீரமுழுமையும், முலைவழி-முலையின்வழியால், ஒழுகு - ஒழுகாநின்ற, பால்-பாலானது, நனைப்ப-நனைக்கும்படி, மோந்து - உச்சிமோந்து, வாய்புலர்தர-வாயுலர, பற்பல்கால்-அனந்தந்தரம், புல்லிக்கொண்டு-தழுவிக்கொண்டு, கண்கலுழ்தரு-கண்ணினின்றுமொழுகாநின்ற, புனலினால்-சலத்தினால், கழுவினாள்-கழுவினாள், எ-று. அரோ-அசை.

(க-து.) தமயந்தி பிள்ளைகளைக் கண்ணிராற் கழுவினாள் எ-ம். 21

மடவரறன்னையுமதுகைவேந்தையும்
படுதுயரொழிகெனவாற்றிப்பாகனுங்
குடலுயிர்பிரித்தெனவுவகைமக்களைக்
கொடிநெடுந்தேர்மிசைக்கொண்டுபோயினான்.

[இதனால் தேர்ப்பாகனிருவரையுந்தேற்றி அப்பிள்ளைகளோடுகுண்டினபுர நோக்கிச் சென்றமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மடவரறன்னையும்-தமயந்தியையும், மதுகை-வல்லமையுடைய, வேந்தையும்-நளனையும், படு-உண்டாகாநின்ற, துயரொழிகென-துக்கநீங்கக்கடவீரென்று, ஆற்றி-தணித்து, பாகன்-தேர்ப்பாகன், ஆங்கு-அவ்விடத்தினின்றும், உடலுயிர்பிரித்தென-உடலையு முயிரையும் வேறுபிரித்ததுபோல்,உவகைமக்களை-சந்தோஷத்தைச் செய்யும் பிள்ளைகளை, கொடி-கொடியையுடைய, நெடுந்தேர்மிசை-நெடியதேரின்மீது, கொண்டு, போயினான்-சென்றான் எ-று.

(க-து.) பாகன் பிள்ளைகளை தேர்மேற்கொண்டுபோனான் எ-ம். 22

மிகைப்படுதுன்பமும்விழையுமின்பமு
மகத்திடைநிகரெனநோக்குமையனுந்
தகைப்பருந்துயரொடுதள்ர்ந்துசாம்புமேன்
மகப்பிரிவினுந்துயர்வலிதியாவதே.

[இதனால் கவிக்கூற்று சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மிகைப்படு-அதிகரித்த, துன்பமும்-துயரத்தையும், விழையும்-இச்சிக்கப்பட்ட, இன்பமும்-இன்பத்தையும், அகத்திடை-மனத்தில், நிகரென

ஒப்பாக, நோக்கும்-பார்க்கின்ற, ஐயனும்-நளனும், தகைப்பரும் - தடுத்தற்கரிய, துயரோடு-துன்பத்துடன், தளர்ந்து-வருந்தி, காம்புமேல்-சோர்வானேயானால், மகப்பிரிவினும்-மக்கட்பிரிவிலும், துயர்-துயரில், வலிது - வலிமையுடையது, யாவது-எது (ஒன்றுமில்லை) எ-று.

(க-து.) பிள்ளைகளைப் பிரிதலைவிடத் துன்பமில்லை எ-ம். 23

சிலதியர்பரப்பியதேங்கொண்மெல்லிதழ்
மலர்மிசைமிதிப்பினும்வருந்துசீறடி
நிலமிசைபடுபரலுறைப்பநேரிழை
புலவுவேற்காளைபின்றொடர்ந்துபோயினள்.

[இதனால் நளனோடு தமயந்தி அந்தப்புரத்தினின்றும் வெளிப்படல்சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) சிலதியர்-தோழிகள், பரப்பிய-பரவச்செய்த, தேங்கொள்-வாசனைகொண்ட, மெல்லிதழ்-மெல்லிய விதழையுடைய, மலர்மிசை-புஷ்பத்தின்மீது மிதிப்பினும்-அடிவைத்தாலும், வருந்து-வருந்துகின்ற, சீறடி - சிறியபாதங்களில், நிலமிசை-பூமியின்மீது, படு-உண்டாகிய, பரல்-பருக்கைகள், உறைப்ப-உறுத்தும்படி, நேரிழை-தமயந்தியானவள், புலவுவேல்-புலானாற்றத்தையுடைய வேலையேந்திய, காளை-நளனது, பின்றொடர்ந்து - பின்னே தொடர்ந்து, போயினள்-சென்றாள் எ-று.

(க-து.) தமயந்தி நளன்பின்னே போனாள் எ-ம். 24

மடவாறன்னொடுமதுகைவேந்தனைக்
கடிமுரசறுதகோமறுகிற்காண்டலு
மிடியுறுமரவெனவேங்கியேங்கிநின்
றுடல்வெறுத்துயிருகவுழல்கின்றார்சிலர்.

[இதுமுதல் நான்குபாட்டுகளால் நளன்பிறவுக்காறுத நகரத்தினர்துயரஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மடவாறன்னொடு-தமயந்தியுடன், மதுகைவேந்தனை - வலிமையுடையநளனை, கடி-சிறந்த, முரசு-பேரிகையினொலி, அறுத-நீங்காத, கோமறுகில்-அரசர்வீதியில், காண்டலும்-பார்த்தவளவில், இடி உறு - மேகத்தினொலியைக்கேட்ட, அரவென-சர்ப்பத்தைப்போல, ஏங்கியேங்கி-மிகவுமோகமுற்று, நின்று- திகைத்துநின்று, உடல்வெறுத்து-தேகத்தைவெறுத்து, உயிருக-உயிர்நீங்கும்படி, சிலருழல்கின்றார்-சிலருழல்கின்றார் எ-று.

(க-து.) கண்டவர் வருந்தினர் எ-ம். 25

மண்ணியமணிவரையனையமார்பினன்
பெண்ணலங்கனிந்தவிப்பேதைதன்னொடு
நண்ணருங்கானிடைநடத்தல்காணவோ
கண்ணிணைபடைத்தனன்கமலத்தோனென்பார்.

(இ-ள்.) மண்ணிய - கழுவிய, மணிவரை - அரத்நமாலையை, அனைய - ஒத்த, மார்பினன் - மார்பினையுடைய நளமகாராசன், பெண்ணலங்கனிந்த-பெண்டன்மைமுதிர்ந்த, இப்பேதை தன்னொடும் - இத்தமயந்தியுடனே, நண்ணரும்-போகப்படாத, கானிடை-காட்டினிடத்தில், நடத்தல் காணவோ-போதலைப் பார்க்கவோ, கமலத்தோன்-பிரமன், கண்ணிணை-இரண்டு நேத்திரங்களை, படைத்தனன் - (எங்களுக்கு) அமைத்தனன், என்பார்-என்று (சிலர்) சொல்லுவார்கள் எ-று.

(க-து.) சிலர் இந்தத் துன்பத்தைக்காணவோ பிரமன் கண்ணைப்படைத்தான் என்பார்கள் எ-ம். 26

மல்லடுதிணிபுயமன்னவர்மன்னவ
னெல்லையிறுயருழந்தேகக்காண்டலு
மொல்லையில்வெடித்துயிரொழிந்ததில்லையாற்
கல்லினும்வலியதோகவலுநெஞ்சென்பார்.

(இ-ள்.) மல்-மல்லர்களை, அடு-கொல்லாநின்ற, திணி-பலம்பொருந்திய, புயம்-புயத்தையுடைய, மன்னர் மன்னவன்-அரசர்க்கரசனாகிய நளன், எல்லையில்-அளவில்லாத, துயருழந்து-துன்பமுற்று, ஏக-போக, காண்டலும்-பார்க்கவும், ஒல்லையில்-சீக்கிரத்தில், வெடித்து-மார்புவெடித்து, உயிர்-பிராணனானது, ஒழிந்ததில்லை-நீங்கியதில்லை (ஆதலால்), கல்லினும்-கல்லைப் பார்க்கிலும், வலியதோ-வலிமையுடையதா, கவலும்-துன்பப்படும், நெஞ்சு - மனமானது, என்பார்-என்று (சிலர்) சொல்லுவார்கள் எ-று.

(க-து.) சிலர் தங்கள்மனதைக் கல்லினும்வலி தென்பார்கள் எ-ம். 27

தாயினுமருள்புரிதரணிமன்னவன்
போயினன்கானிடையென்றபோழ்தினின்
மாய்வுறப்பெற்றிலேமன்னர்மன்னன்பா
லேயபேரன்பினரெம்மில்யாரென்பார்.

(இ-ள்.) தாயினும்-தாயைப்பார்க்கிலும், அருள்புரி - உயிர்களிடத்திற் கிருபையைச்செய்கின்ற, தரணிமன்னவன்-உலகத்தையாளுநளன், கானிடை-காட்டினிடத்தில், போயினன்-சென்றான், என்ற போழ்தினில் - என்று சொன்ன பொழுதிலே, மாய்வுறப்பெற்றிலேம்-இறக்கப்பெறவில்லை (ஆதலால்,) மன்னர் மன்னன்பால்-இராசாதிராசனாகியநளனிடத்தில், ஏய-பொருந்

திய, பேரன்பினர்-பேரன்பையுடையவர்கள், எம்மில்-எங்களைப் பார்க்கிலும், யார்-யாவர் (உளர்) என்பார்-என்று (சிலர்) சொல்வார்கள் எ-று.

(க-து.) சிலர் இறக்கிலேமென விசனப்படுவோர்கள் எ-ம். 28

அடிதொழுமரசருமமைச்சர்வெள்ளமு
மடவியரனைவருமைந்தரீட்டமுங்
கொடிநெடுவீதிவாய்க்குறுகியெங்கணுங்
கடன்மடைதிறந்தெனக்கலுழ்ந்திட்டாரரோ.

[இதனாலமைச்சர்முதலாயினோர் வருந்துதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) அடிதொழும்-பாதத்தை வணங்காநின்ற, அரசரும்-இராசாக்களும், அமைச்சர்வெள்ளமும்-மந்திரிகூட்டங்களும், மடவியரனைவரும் - மாதர் கூட்டங்களும், மைந்தரீட்டமும்-புருஷர்களீட்டம்,கொடி-கொடிகளையுடைய, நெடுவீதிவாய்-நீண்டவீதியினிடத்தில், குறுகி-வந்து, எங்கணும்-எவ்விடத்தும், கடன்மடைதிறந்தென-கடல்மடைதிறந்து போல, கலுழ்ந்திட்டார்-அழுதார்கள் எ-று.

(க-து.) பலருங் கடலுடைந்தாற்போ லழுதார்கள் எ-ம். 29

பொய்யுறுதீமொழிபுகல்கிலேனனை
யையநீயெம்மையிங்கருளில்வேந்துதன்
கையகப்படுத்தினைகானிலேகினின்
மெய்யினும்பொய்மையேவிழுமிதாமென்பார்.

[இதனால் அமைச்சர் முதலாயினோர் அரசனைத்தடுத்தற்கு அவன்கோட்பாட்டிழிவுகூறல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) பொய்யுறு-பொய்யாகிய, தீமொழி-தீயசொல்லை, புகல்கிலேனனை-சொல்லமாட்டேனென்று, ஐய-ஐயனே, நீ-நீ, எம்மை-எங்களை, இங்கு-இப்பட்டணத்தில், அருளில்-கிருபையில்லாத, வேந்துதன் - அரசனுடைய, கையகப்படுத்தினை-கையிற் சேர்த்தவனாய், கானிலேகின் - காட்டினிடத்துக் குப்போனால், நின்-உன்னுடைய, மெய்யினும் -, சத்தியத்தைப் பார்க்கிலும், பொய்மையே-பொய்யுரையே, விழுமிதாம்-மேன்மையுடையதாம், என்பார்-என்று சொல்லுவார்கள் எ-று.

(க-து.) அரசனே-நீ காட்டிற்போகில் மெய்யிலும் பொய் பிரகாசிக்கும் என்றார்கள் எ-ம். 30

இன்னுயிருய்யுமீங்கென்றபோழ்தினும்
பொன்னவிச்சுழலையினார்புலர்ந்தக்காலையும்
முன்னொருஞ்ஞிறும்பொய்மையுரிவேற்
கன்னவிருளினைகழறலாமென்பார்.

[இதனால் இச்சூதில் பொய்யுரைப்பினும் வழுவில்லையெனல் சொல்லப் படுகின்றது.]

(இ-ள்.) ஈங்கு-இவ்விடத்தில், இன்-இனிய, உயிர்-உயிரானது, உய்யும் பிழைக்கும், என்றபோழ்தினும்-என்று சொல்லிய காலத்திலும், பொன்-தேமல், அவிர்-பிரகாசிக்கின்ற, முலையினார்-முலையையுடைய மடவார், புலர்ந்த காலையும்-பிணங்கின காலத்திலும், முன்னரும்-நினைக்கப்படாத, சூதினும்-சூதாட்டத்திலும், பொய்மை-பொய்யுரையை, மூரி-பலம்பொருந்திய, வேல்-வேலாயுதத்தை யேந்திய, கன்னலில்-மலைபோன்ற, தோளினாய் - தோளை யுடைய அரசனே, கழறலாம்-சொல்லலாம், என்பார்-என்று சொல்லுவார்கள் எ-று.

(க-து.) உயிர்தப்பிவிக்கவும், பெண்கள் பிணக்கிலும், சூதாட்டத்திலும், பொய்சொல்லலாம் என்பார்கள் எ-ம். 31

எண்டிசைத்தலை வருமெழில்கண்டேமுறத்
தொண்டைவாய்மடமயின் மாலைசூட்டுநாள்
புண்டருகோட்டுவெங்களிற்றிற்போதரல்
கண்டகணிவற்றையுங் காணுமோவென்பார்.

[இதனால்தங்களுரையைநளன்கொள்ளாததுகண்ட மந்திரிமுதலாயினோர் வருத்தஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) எண்டிசைத்தலைவரும்-அஷ்டதிக்குப்பாலகரும், எழில்கண்டு-இந்தநளனழகைப்பார்த்து, எமுற-(இவ்வளவு அழகுதமக்கில்லையென்று) மயக்கமுறாநிற்க, தொண்டைவாய்-கோவைக்கனியையொத்த அதரத்தையுடைய, மடமயில் தமயந்தியானவள், மாலைசூட்டுநாள் - சுயம்வரமாலையைச்சூட்டியதினத்தில், புண்டரு-மாமிசம்பொருந்திய கோட்டு-தந்தங்களையுடைய, வெம்-குரூரமான, களிற்று-யானையின்மீது, போதரல்-(இவ்விருவரும்) கோலம்வருதலை, கண்டகண்-பார்த்தகண்கள், இவற்றையும்-இக்கொடியசெய்கையையும், காணுமோவென்பார்-பார்க்குமோவென்று சொல்லுவார்கள் எ-று.

(க-து.) நளன் சிறப்பைக்கண்ட கண்கள் சிறப்பில்லாமையையுங் காணலாமோ வென்பார்கள் எ-ம். 32

மன்னவனேகுதற்கிரங்கிமாழ்குநர்
துன்னருங்கானிடைத்தொடர்ந்துசெல்குந
ரின்னுயிர்செகுப்பலென்றிசையில்புன்மையோ
னந்நகரிடைமுரசறைவித்தானரோ.

[இதனால் நளனிடத்தன்புள்ளவராய்ப் புலம்புகின்ற அனைவர்க்கும் புட்கரன் பொறாமையால் கொடியுணர்க்கினை விதித்தமையைச் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மன்னவன் நளமகாராசன், ஏகுதற்கு-காட்டிற்குபோவதற்கு, இரங்கி-அழுது, மாழ்குநர்-துன்பப்படுகின்றவர்களையும், துன்னரும்-போகக் கூடாத, கானிடை-காட்டினிடத்தில், தொடர்ந்து-பின்னே தொடர்ந்து,செல்குநர்-போகின்றவர்களையும், இன்னுயிர்-இனியவுயிர்களை, செகுப்பலென்று-கொல்லுவேனென்று, இசையில்-புகழில்லாத, புன்மையோன்-அற்பனாகிய புஷ்கரன் அந்நகரிடை-அந்நகரத்தினிடத்தில், முரசு-பேரிகையை, அறைவித்தான்-அடிப்பித்தான் எ-று.

(க-து.) புட்கரன் நளனுக்கிரங்கினவரையும் அவன்பின் சென்றவரையுங் கொல்வேனென்று பறையறைவித்தான் எ-ம். 33

வசைபடுமன்னவன்வாய்மையாலறை
விசிமுழவவாலிசெவிவெதும்பக்கேட்டலு
மிசைபடுமன்னவர்கிரங்கினோரெலா
மசுணமென்புள்ளெனவலமந்தேங்கினார்.

[இதனால் புட்கரனுக்கினையறிந்தோர்படுந் துன்பத்தைச் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) வசைபடு-அபகீர்த்தியையுடைய, மன்னவன் - புட்கரராசனது, வாய்மையால்-ஆக்கினையால், அறை-அடிக்கப்பெற்ற, விசி-வாரினாலிறுக்கிய, முரசொலி-முரசினுடையசத்தத்தை, செவிவெதும்ப - காதுகள்வெப்புமுற, கேட்டலுல்-கேட்டவளவில், இசைபடுமன்னவற்கு-புகழையுடைய நளமகாராசனுக்கு, இரங்கினோரெலாம்-அழுதவர்களெல்லாரும். அசுணமென்புள்ளென அசுணமென்னும பக்ஷியைப்போல, அலமந்து - மனஞ்சுழன்று, ஏங்கினார்-துன்பப்பட்டார்கள் எ-று.

கொடிய ஒலிகேட்கில் இறப்பது அசுணப் பறவைக்கியல்பாதலின், அது பற்றி அது இவர்க்குஉவமான மாக்கப்பட்டது.

(க-து. பறை யறைவிப்பைக் கேட்டவர்கள் எல்லாரும் விசனமடைந்தார்கள் எ-ம். 34

வருந்திமுன்போதருமமைச்சர்வாண்முகம்
புரிதனனோக்கியபொருவில்வாய்மையான்
விரிந்தநூற்கேள்வியீரறத்தைவேரொடு
மரிந்தனிரெற்பிரிந்தாற்றலாமையால்.

[இதுமுத லிரண்டுபாட்டுகளால் நளன்மந்திரிமுதலானோர்க்கு விடைகொடுத்தல் சொல்லப் படுகின்றது.]

(இ-ள்.) வருந்தி-வருத்தமுற்று, முன்போந்தரும்-முன்னே போகும், அமைச்சர்-மந்திரிகளுடைய, வாண்முகம்-ஒளிபொருந்திய முகத்தை, புரிந்தனன்-விரும்பினவனாய், நோக்கிய-பார்த்த, பொருவில்-ஒப்பில்லாத, வாய்மை

யான்-சத்தியத்தையுடைய நளமகாராசன் விரிந்த-பரந்த, நூற்கேள்வியீர் சாஸ்திர விசாரணையுடையவர்களே, எற்பிரிந்து-என்னைப் பிரிந்து, ஆற்றலாமையால்-பொறுக்கமாட்டாமையினால், அறத்தை-தருமத்தை, வேரொடும்-வேருடனே அரிந்தனிர்-அறுத்துவிட்டீர்கள் எ-று.

வாய்மையான் என்னுமெழுவாய் மேல்வரும்பாட்டில் என்றான் எனனும் பயனிலைகொண்டது.

(க-து.) நளன் மந்திரிகளைப்பார்த்துப் பிரிவாற்றாமலறத்தைவிட்டீர்கள் என்றான் 35

மேவருஞ்சூதினிற்றோற்றமேதினி
யாவதும்வென்றலதாளவெண்ணுதல்
கோவியல்பன்றவனாணைமேற்கொடு
நீவிரென்வாய்மையைநிறுத்துவீரென்றான்.

(இ-ள்.) மேவரும்-பொருந்துதற்கரிய, சூதினில் - சூதாட்டத்தினாலே, தோற்ற-தோற்றுப்போன, மேதினியாவதும்-உலகமெல்லாவற்றையும், வென்றலது-(நான்) வெற்றிகொண்டல்லாமல், ஆள-ஆளுகிறதற்கு, எண்ணுதல்-நினைத்தல், கோ-அரசர்களுக்கு, இயல்பன்று-தருமமன்று, (ஆதலால்) அவன்-அந்தபுஷ்கரனுடைய, ஆணை-ஆக்கினையை, மேற்கொடு-ஏற்றுக்கொண்டு, நீவீர்-நீங்கள், என்-என்னுடைய, வாய்மையை-சத்தியத்தை, நிறுத்துவீர்-நிலைநிறுத்துங்கள், என்றான-என்றுசொல்லினன் எ-று.

(க-து.) நளன் மந்திரிகளைப் புட்கரன் சொற்படி கேளுங்களென்றான் எ-ம்.

மூளரியால்வெந்தவெங்கானின்மொய்துக
ளளியொடுபுலம்பினரழுதகட்கடைத்
துளியிணிலவித்தனர்தொடரவெந்திறற்
களிமதங்களிற்றினன்கானினேகினான்.

[இதனால் சத்தியமொழி தவறாதநளன் சனங்கள் துக்கிக்கக் கானேக்கிச் செல்லுதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மூளரியால்-அக்கினியினால், வெந்த-நீறுப்பட்ட, வெங்கானில்-வெவ்வியகாட்டினிடத்து, மொய்-நிறைந்த, துகள்-தூட்களை, அளியொடு-இரக்கத்துடன், புலம்பினர்-புலம்பினவராய், அழுத-அழுத,கட்கடை-கண்ணின்கடையிலிருந்து வாாநின்ற,துளியினின்-நீர்த்துளியினால்,அவித்தனர்-அவித்தவர்களாய், தொடர-பின்றொடர, வெந்திறல்-குரூரமான வலியையும், களி-செருக்கையும், மதம்-மும்மதத்தையுடைய, களிற்றினன்-யானையைநிகர்த்த நளமகாராசன், கானில்-காட்டினிடத்தில், ஏகினான்-சென்றான், எ-று.

(க-து.) நளன் அழுவார் கண்ணீர் வெம்புழுதியை நனைக்கக் காட்டில் நடந்தான் எ-ம். 37

திருகுவெஞ்சினக்கலிசெல்வன்பின்ருெடர்
பரிசனம்யாவுமெய்பதைத்துமீடர
முருகுறழ்பொற்பினன்முன்னரேகிய
வருநெறிதெரிவுருவஞ்சமாற்றினன்.

[இதனல் அச்சனங்கட்குச் சனிசெய்ததீது சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) திருகு-மாறுபாட்டையும், வெம்-வெவ்விய, சினம்-கோபத்தையு முடைய, கலி - கலிபுருஷனவன், செல்வன் - நளனுடைய, பின்ருெடர்-பின்னேபோகின்ற, பரிசனம்யாவும்-ஏவல்செய்வோ ரெல்லோரும், மெய் பதைத்து-சரீரந்துடித்து, மீடர-திரும்பும்படி, முருகுறழ் - சுப்பிரமணியனை யொத்த, பொற்பினன்-அழகையுடைய நளமகாராசன், முன்னரேகிய-முன் னேபோன, அருநெறி - அரியவழியானது, தெரிவுரு - தெரியாத, வஞ்சம்-மாயையை, ஆற்றினன்-செய்தான், எ-று.

(க-து.) சனியன் சனங்களுக்கு வழிதெரியாமற் செய்தான் எ-ம். 38

ஆற்றுவஞ்சனையினலழகுவாய்ந்தபொற்
கோற்ருெடிதன்னெடுங்கொற்றமன்னவன்
ருேற்றுதல்காணலார்துயரமெய்திநின்
றூற்றெழுகண்ணினருள்ளமாழ்கினர்.

[இதுமுதல் நான்குபாட்டுகளால் அத்தீங்கினல் சனங்கட்குண்டாகிய துன்பஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்) ஆற்று-(கலி) செய்த, வஞ்சனையினல் - மாயையினல், அழகு வாய்ந்த - அழகுபொருந்திய, பொற்கோற்ருெடி தன்னெடும் - தமயந்தி யோடும், கொற்றமன்னவன்-வெற்றிபொருந்திய நளமகாராசன், தோற்று தல்-தெரிதலை, காணலார் - பார்க்காதவர்களாய், துயரம் - துன்பத்தை எய்தி - அடைந்து, நின்று - நின்று, ஊற்று - சுரப்பானது, எழு - தோன் கின்ற, கண்ணினர்-கண்களையுடைய பரிசனங்கள், உள்ளமாழ்கினர்-உள்ளத் தில் மயங்கினர்கள், எ-று.

(க-து.) சனிபகவான் மாயத்தால் சனங்கள் நளனையுந் தமயந்தியையுங் காணுதவர்களாய்ப் புலம்பினர்கள், எ-று. 39

ஆவினுமினிதருள்புரியுமெம்பிரான்
றூயமென்மலரடிச்சுவடுகாண்கிலேம்
போயினன்பாண்டவர்புணர்ப்பினையதிம்
மாயமென்றருநெறிமருங்கிற்றேடுவார்.

(இ-ள்) ஆவினும் - தாயைக்காட்டிலும், இனிதா - இனிதாக, அருள்-கிருபையையும், புரியும்-செய்கின்ற, எம்பிரான்-எங்களரசனுடைய, நளமகாராச

னது, தூய-பரிசுத்தமாகிய, மென்-மெல்லிய, மலர்-தாமரைமலர்போன்ற, அடிச்சுவடு-அடிக்குறியை; காண்கிலேம்-நாங்கள் காணவில்லை, யாண்டு-எவ்விடத்தில் போயினன்-போயினான், இம்மாயம்-இந்த வஞ்சனையானது, ஏவர் புணர்ப்பினுயது-யார்சம்பத்தினாலுண்டாகியது, என்று-என்றுபேசிக்கொண்டு, அருநெறி-அரியவழியை, மருங்கில்-பக்கங்களில், தேடுவார் - தேடுவார்கள், எ-று.

(க-து.) சனங்கள் நளனைத் தேடுவார்கள் எ-ம். 40

தேடினர்புகுமிடந்தெரியலாமையில்
வாடினாருநெறிமருங்கினோர்வழி
கூடினரின்னுயிர்கூற்றங்கைக்கொள
வீடினராமெனவீழ்ந்துவிம்மினார்.

(இ-ள்.) தேடினர்-தேடினவர்கள், புகுமிடம்-அரசன்போனவிடம், தெரிகிலாமையால்-அறியாதபடியால், வாடினர்-வாடினார்கள், அருநெறி-அரியவழியினது, மருகில் - பக்கத்தில், ஓர்வழி-ஒருவழியை, கூடினர்-அடைந்தார்கள், இன்னுயிர்-இனியவுயிரை, கூற்றங்கைக்கொள - இயமனகொண்டுபோக, வீடினராமென-இறந்தவர்போல; வீழ்ந்து-(நிலத்திலே) வீழ்ந்து, விம்மினார்-அழுதார்கள், எ-று.

(க-து.) சனங்கள் நளனைத்தேடிக்காணாது நிலத்தில்வீழ்ந்தழுதார்கள் எ-ம். 41

கொன்னுனையலங்கல்வேற்குலவுத்தோளினான்
சென்னெறிகண்களிற்றெரியக்காண்கிலா
ரின்னலுற்றழுதழுதேங்கியேங்கியத்
தொன்னகரடைந்தனர்தொடர்ந்துளோரெலாம்.

(இ-ள்.) கொல்-கொல்லாநின்ற, நுனை கூர்மையுடைய, அலங்கல்-வெற்றிமாலையணிந்த, வேல்-வேலையுடைய, குலவுத்தோளினான் - திரண்டதோளையுடைய நளமகாராசன், சென்னெறி - போனவழியை, கண்களில்-நேத்திரங்களில், தெரிய-அறிய, காண்கிலார் - காணாதவர்களாய், இன்னலுற்று - துன்பமுற்று, அழுதழுது - புலம்பிபுலம்பி, ஏங்கியேங்கி - மிகவு மேக்கமுற்று, தொடர்ந்துளோரெல்லாம்-பின்றொடர்ந்து போனவர்களெல்லாரும், அத்தொன்னகர்-தங்கள் பழையநகரை, அடைந்தனர்-சேர்ந்தார்கள் எ-று.

(க-து.) சனங்கள் நளனைக்காணமல் நகரத்தில் வந்தார்கள் எ-ம், 42

பறவைகளகுடமனையுடபார்ப்பருத்தில
கற்றைவகள்புனிற்றினங்கன்றுக்கூட்டில

நறவுயிர்த்தலர்கிலமலர்களுமவேற்
கிறைவனேகினன்வனத்தென்றபின்னரே.

[இதுமுதல் ஏழுபாட்டுகளால் நளன் சென்றபின் அத்தேயத்தின்கணுண்டாகிய தீங்குகள சொல்லப்படுகின்றன.]

(இ-ள்.) நாமம்-அச்சத்தைத் தருகின்ற, வேல்-வேலையுடைய, இறைவன் நளமகாராசன், வனத்து-காட்டினிடத்தில், ஏகினனென்றபின்னர்-போயினனென்றபின்பு, பறவைகள்-பக்ஷிகள், குடம்பையுள்கூண்டுக்குள்ளே, பார்ப்புதம்குஞ்சுகளே, அருத்தில்-இரையூட்டவில்லே, கறவைகள்-பசுக்கள், புனற்றிளங்கன்றுக்கு-மிகுந்த விளங்கன்றுகளுக்கு, ஊட்டில - பாலூட்டங் கொடுத்ததில்லே, மலர்கள்-புஷ்பங்கள், நறவுயிர்த்து - தேனைத்தந்து, அலர்கில-மலரவில்லே எ-று.

(க-து.) நளன் காட்டிற்போனுனென்றபின் பறவைகள் குஞ்சுகளுக்கிரைதரவில்லே. பசுக்கள் கன்றுகளுக்கூட்டவில்லே. மலர்கள் மலரவில்லே எ-ம். 43

வான்மறந்தனதுளிவழங்கலின்னிசைத்
தேன்மறந்தனமடமகளிர்தேங்குழல்
பான்மறந்தனபசுங்குழவிபாய்கவுட்
கான்மதமறந்தனகளிநல்யானையே.

(இ-ள்.) வான் - மேகங்கள், துளிவழங்கல்-மழைபெய்தலே, மறந்தன-மறந்துவிட்டன, இன்னிசை-இனிய இசையையுடைய, தேன்-வண்டுகள்,மடமகளிர்-இளமைபொருந்திய ஸ்திரீகளுடைய, தேங்குழல் - வாசனைபொருந்திய அளகத்தை, மறந்தனள்-மறந்துவிட்டன, பசுங்குழவி-இளங்குழந்தைகள், பால்-பாலுண்ணலே, மறந்தன-மறந்துவிட்டன, களி-செருக்கையுடைய, நல்-நல்ல, யானே-யானைகள், பாய்-பெருகாநின்ற, கவுள் - கன்னத்திலுண்டாகிய, கான்மதம்-வாசனைபொருந்திய மதவருஷத்தை, மறந்தன - மறந்துவிட்டன எ-று. ஏ-அசை.

(க-து.) மழைபெய்யவில்லே. வண்டுகள் பெண்கள்கூந்தலேமறந்தன. குழந்தைகள் பால்மறந்தன. யானைகள் மதம்பொழிதலொளிந்தன எ-ம். 44

மலர்ப்பசுந்தார்க்குழன்மகளிர்கேள்வர்பாற்
புலத்தலுங்கலத்தலும்பொருந்துறுமையா
லலத்தகமிழந்தனகுஞ்சியன்னலார்
முலேச்சுவடிழந்தனமுழவுத்தோள்களே.

(இ-ள்·) மலர்-புஷ்பங்களேயணிந்த, பசும்-பசுமையாகிய, தார்-நீண்ட, குழல்-கூந்தலேயுடைய, மகளிர்-மாதர்கள்;கேள்வர்பால்-கணவரிடத்தில், புலத்தலும்-பிணக்கத்தையும், கலத்தலும்-புணர்ச்சியையும், பொருந்துறுமையால்-

அடையாண்மையால், குஞ்சி-குடுமிகள், அலத்தகம்-செம்பஞ்சுக்குழம்பை இழந்தன நீங்கிவிட்டன; அன்னலார்-அந்தமாதருடைய; முலைச்சுவடு-ஸ்தனத்தின் குறியை, முழவு-மத்தளம்போன்ற; தோள்கள்-புயங்கள்- இழந்தன நீங்கின எ-று.

ஊடில் தீர்வதற்குத்தலைவி பாதத்தில் தலைவன்வணங்கில், அப்பொழுது அவள்பாதத்துச் செம்பஞ்சு அவன்குடுமியிற்படும். புணர்ச்சியுண்டானால் அவர்ஸ்தனத்திலெழுதிய சந்தனக்கோலம் ஆடவர் புயத்திற்பதியும். இவை துன்பத்தினால் இன்மையால், இழந்தனவென்றார்.

(க-து.) ஆண்பாலுக்கும் பெண்பாலுக்கும் புலவியுங் கலவியு மற்றன எ-ம். 45

அள்ளிலைவேற்கணாரங்கைமீதுவைத்
தெள்ளருமின்மொழிபயிற்றலின்னமையால்
வள்ளவாயாரமுதுண்ணும்வண்சிறைக்
கிள்ளையுந்தேன்மொழிகிளக்கலற்றவே.

(இ-ள்.) அள்-கூர்மைபொருந்திய, இலை-இலைபோன்ற, வேல்-வேலாயுதத்தையொத்த, கணார்-கண்களையுடையபெண்கள். அங்கைமீது-அழகியகையின் மீதுவைத்து-வைத்துக்கொண்டு, எள்ளரும்-இகழ்ச்சியில்லாத, மென்-மிருதுவான, மொழி-சொற்களை, பயிற்றலின்மையால்-கற்பிக்காதபடியால், வள்ளவாய்-கிண்ணத்தினிடத்தில், ஆர்-நிறைந்த-அமுது-பாலை, உண்ணும்-குடிக்கும் வண்-வளப்பம்பொருந்திய, சிறை - இறகையுடையகிள்ளையும்-கிளிப்பிள்ளைகளும், தேன்-மதுரமாகிய, மொழி-சொற்களை, கிளக்கலற்ற - பேசுதலொழிந்தன எ-று.

(க-து.) கிளிகள் பெண்கள் கற்பிக்காமையால் பேசுதலற்றன எ-ம். 46

வாம்பரியிழந்தனவாவுமைங்கதி,
யேம்பலின்விழவணியிழந்தகோமறு
காம்பல்வாயிழந்தனமுறுவலாரகிற்
றிம்புகையிழந்தனசெம்பொன்மாடமே

(இ-ள்.) வாம்-தாவுகின்ற, பரி-குதிரைகள், வாவும்-தாவாநின்ற, ஐங்கதி-ஐவகைநடையினையும், இழந்தன-நீங்கிவிட்டன, எம்பலின்-வருத்தத்துடன, விழவணி-உச்சவாலங்காரத்தை, கோமறுகு-இராசவிதிகள், இழந்த-நீங்கிவிட்டன, ஆம்பல்-செவ்வல்லிமலர்போன்ற, வாய் - (பெண்களுடைய) வாய்கள்-முறுவல்-புன்சிரிப்பை, இழந்தன - நீங்கிவிட்டன, ஆர்-நிறைந்த, அகில்-அகிற்கட்டையினது, தீம்-இனிமையாகிய, புகை-புகையை, செம்பொன்-சிவந்தபொன்னாற்செய்த, மாடம்-உப்பரிகைகள், இழந்தன-நீங்கின, எ-று. ஏ-அசை.

(க-து.) குதிரைகள் கதியிழந்தன. இராசவீதி திருவிழாவிழந்தன. மாதர் வாய்மையிழந்தன. மாடங்கள் புகையிழந்தன எ-ம். 47

பாவலரிழந்தனர்பரிசிலுண்பலி
தேவருமிழந்தனர்கலியின்றீமையாற்
காவலனெடிபடுகானிலேகலால்
யாவருமிழந்தனரின்பமென்பவே.

(இ-ள்.) பாவலர்-புலவர்கள், பரிசில்-தியாகத்தை இழந்தனர்-நீங்கினார்கள், உண்-உண்ணப்பட்ட, பலி-அவியை, தேவரும்-தேவர்களும், இழந்தனர்-இழந்துவிட்டார்கள், கலியின்-கலிபுருஷனுடைய, தீமையால்-பொல்லாங்கினால், காவலன்-நளமகாராசன், நெடிபடு-சிள்வண்டையுடைய, கானில்-காட்டில், ஏகலால்-போதலினால், யாவரும்-எல்லோரும், இன்பமென்ப - இன்பமென்பனவற்றை, இழந்தனர்-நீங்கினார்கள் எ-று.

(க-து.) பாவலர் தியாகமிழந்தார்கள். தேவர்களவியிழந்தார்கள், யாவருமின்பமிழந்தார்கள் எ-ம். 48

அறந்தலைமயங்கினபொய்மையார்ந்தன
மறந்தலையெடுத்தனதீமைமல்கின
திறம்பினமறுநெறிதவங்கடீர்ந்தன
நிறைந்தனவஞ்சனைநேமியெங்குமே.

(இ-ள்.) நேமியெங்கும்-உலகமெங்கும், அறம்-தருமம், தலைமயங்கின-தலைதடுமாறின, பொய்மை-அசத்தியம், ஆர்ந்தன-நிறைந்தன, மறம்-பாபங்கள், தலையெடுத்தன-வளர்ந்தன, தீமை-துர்நடத்தைகள். மல்கின-நெருங்கின-மநுநெறி-இராசதருமம், திறம்பின-கெட்டன, தவங்கள்-தபசுகள், தீர்ந்தன-நீங்கின, வஞ்சனை-வஞ்சனைகள், நிறைந்தன-நிறம்பின எ-று.

(க-து.) தருமந்தடுமாறின. பொய்நிறைந்தன. பாவங்கள்வளர்ந்தன. துன்மார்க்க நெருங்கின. இராசதருமங்கெட்டன. தவங்கள்நீங்கின. வஞ்சனை நிறைந்தன எ-ம். 49

நகர்நீங்கு படலம் முற்றிற்று.

---

௨

கடவுள் துணை.

# கான்புகு படலம்.



இப்படலத்தால் தன்னகரை விட்டு நீங்கிய நளமகாராசன் பிறர்நகரில் தன்னிலைதப்பிச் செல்வத்தில் விருப்பமின்றிக் கானகம் புகுதல் சொல்லப்படுகின்றது.

## கலிவிருத்தம்.

களிமயில்குனித்திடக்காலமன்றியுந்
துளிமுகில்பிலிற்றின துணர்த்தபூங்கொடி
முளிசினை தளிர்த்தன முகைத்தபைந்தரு
நளிர்கடற்றானையானடந்தகானமே.

[இதுமுதல் மூன்றுபாட்டுகளால் நளன் சென்றவிடத்துண்டாகிய சிறப்புச் சொல்லப்படுகின்றது.

(இ-ள்.) நளிர்-குளிர்ச்சிபொருந்திய, கடல்-சமுத்திரத்தையொத்த, தானையான்-சேனையையுடைய நளமஹாராசன், நடந்த-சென்ற, கானம்-காட்டினில், களி-களிப்பையுடைய, மயில்-மயில்கள், குனித்திட-கூத்தாட, காலமன்றியும்-கார்காலமல்லாமலும், துளி-நீர்த்துளிகளை. முகில்-மேகங்கள், பிலிற்றின-பெய்தன, பூ-பொலிவு பொருந்திய, கொடி-கொடிகள், துணர்த்த-பூங்கொத்துகளைச் செய்தன, முளிசினை-உலர்ந்தகிளைகள், தளிர்த்தன-துளிர்த்தன, பைம்-பசுமையாகிய, தரு-விருக்ஷங்கள், முகைத்த-அரும்பின எ-று.

(க-து.) நளனடந்த காட்டில் மழைபெய்தன. கொடிகள் தளிர்த்தன. பட்டமரம் வளர்ந்தன எ-ம். 1

விள்ளருமதரிடைவெதும்புவெம்பரல்
கள்ளவிழ்மலரெனக்குழைந்துகாட்டின
வொள்ளழற்கதிர்சுடவுலரும்வெஞ்சுரம்
வள்ளவாய்மலர்விரிமருதம்போன்றதே.

(இ-ள்.) விள்ளரும்-சொல்லுதற்கரிய, அதரிடை-வழியிலே; வெதும்பு-சுடாநின்ற, வெம்-வெப்பமான பரல்-மணியாம் பருக்கைகள், கள்-தேனுடனே, அவிழ்-விரியாநின்ற, மலரென-புஷ்பம்போல குழைந்து-மிருதுவாய், காட்டின-காண்பித்தன, ஒள்-பிரகாசம் பொருந்திய, அழல் - அழலாநின்ற,

கதிர்-சூரியகிரணங்கள், சுட-தகிக்க, உலர்-காய்ந்த, வெம்-வெப்பமாகிய,சுரம்-பாலைநிலமானது, வள்ளம்-கிண்ணம்போல, வாய்மூகத்தையுடைய, மலர்-புட்பங்கள், அவிழ்-விரியாநின்ற மருதம-மருதநிலத்தை, போன்றது - ஒத்திருந்தது, எ-று. ஏ-அசை.

(க-து.) பருக்கைக் கற்கள் மலரென விருந்தன. பாலைநிலம் வயலினிலம் போ விருந்தது எ-ம். 2

ஊறுசெய்தூன்சுவைத்துடம்புவீக்கிய
வாறலைகள்வருமளியாரயினார்
வேறினியுரைப்பதென்வெருவுமாவொடு
மாறுகொளுழுவையுமாற்றந்தீர்ந்தவே.

(இ-ள்) ஊறுசெய்து-கொலைசெய்து, ஊன்-மாமிசத்தை, சுவைத்து-புசித்துசரீரத்தை, வீக்கிய-பருக்கச்செய்த, ஆறலை-வழியினிடத்திற் பறிக்கின்ற, கள்வரும்-திருடரும், அளியராயினார்-கிருபையுடையவராயினார்கள், வேறு - வேறாக, இனி-இனிமேல், உரைப்பதென-சொல்லுவதெனனே, வெருவும்-அஞ்சாநின்ற, ஆவொடும்-பசுக்களுடனே, மாறுகொள்-பகைகொண்ட, உழுவையும்-புலியும், மாற்றம்-பகையைதீர்ந்த-நீங்கின எ-று. ஏ-அசை.

(க-து.) திருடர்கள் கிருபையுள்ளவர்க ளானார்கள். புலியும் பசுவும் பகை நீங்கின எ-ம். 3

ஆயிடையுயிர்நிகரணங்களொடு
மேயதன்னகர்வயின்விசும்புபோழ்ந்துலாங்
காய்கதிர்நுழைகலாக்காவிலாடல்போற்
போயினனழலுமிழ்புலவிவேலினான்.

[இதுமுதல் ஏழுபாட்டுகளால் நளனுந் தமயந்தியுங் கடும்பாலையிற்செல்லுங்கால் அவர்கட்கு அச்சனியால் நேரிட்ட தீங்கு சொல்லப்படுகின்றது]

(இ-ள்.) ஆயிடை-அந்தப்பாலைநிலத்தில், உயிர்நிகர்-தன்னுயிரையொத்த, அணங்களொடும்-தெய்வப்பெண்ணையொத்த தமயந்தியுடன், மேய-பொருந்திய, தன்-தன்னுடைய, நகர்வயின்-பட்டணத்தின் கண், விசும்பு-மேகங்களை போழ்ந்து-பிளந்துகொண்டு, உலாம்-உலாவுகின்ற, காயாநின்ற, கதிர்-சூரியகிரணமானது, நுழைகலா-நுழையக்கூடாத, காவில்-சோலையில்,ஆடல்போல்-விளையாடல்போல, அழல்-அக்கினியை, உமிழ்-கக்காநின்ற, புலவு-புலால்நாற்றம்பொருந்திய, வேலினன்-வேலையுடைய நளமகாராசன், போயினன்-நடந்தான் எ-று.

(க-து.) நளன் மனைவியுடனே சோலையில் விளையாடல்போலப்பாலையிற் போனான் எ-ம். 4

அள்ளிலைப்பூணினானேகுமாற்றிடைக்
கொள்ளை வண்டினமிழிநறவுகூட்டுணும்
வள்ளவாய்மலரவிழ்வாவியங்கரைப்
புள்ளுருக்கொடுகலிபோயினானரோ.

(இ-ள்.) அள்-நெருங்கிய, இலை-இலைபோன்ற, பூணினான்-ஆபரணங்களையணிந்த நளமகாராசன், ஏகும்-போகாநின்ற, ஆற்றிடை-காட்டுவழியிலே, கொள்ளை மிகுதியாகிய, வண்டினம்-சுரும்புக்கூட்டங்கள், இழி-பெருகாநின்ற, நறவு-தேனை, கூட்டுணும்-கொள்ளைகொள்ளும்படி யிருக்கின்ற, வள்ளம் கிண்ணம்போன்ற, வாய்-முகத்தையுடைய, மலர்-புஷ்பங்கள், அவிழ்-விரியாநின்ற, வாவி-தடாகத்து, அம்-அழகிய, கரை-கரையினிடத்து, புள்ளுருக்கொடு-அன்னத்தினுருவைக்கொண்டு, கலி-கலியன், போயினான்-சென்றான் எ-று.

(க-து.) சனிபகவான் அன்னத்தின்வடிகொண்டுபோனான் எ-ம். 5

வாவியின்மருங்குநன் மணிகள்கோத்தெனத்
தூவியம்பொற்சிறைமென்புட்டோன்றலு
மோவியரெழுதருமுருவப்பைங்கொடி
காவியங்கண்ணிணைகளிப்பநோக்கினாள்.

(இ-ள்.) வாவியின் தடாகத்தினது, மருங்கு-பக்கத்தில், நல் நல்ல, மணிகள்-முத்துக்களை, கோத்தென-கோவைபிட்டதுபோலு, தூவி-தூவியெனப்பட்ட, அம்-அழகிய, பொன் - பிரகாசம்பொருந்திய, சிறை - இறகையுடைய, மென்-மிருதுவாகிய, புள்-அன்னப்புள்ளானது, தோன்றலும்-காணலும், ஓவியர்-சித்திரக்காரர்கள், எழுதரும்-எழுதுதற்கரிய, உருவம்-வடிவத்தையுடைய, பைம்-பசுமையாகிய, கொடி-கொடிபோன்றதமயந்தியானவள், காவி-நீலோற்பலத்தையொத்த, அம்-அழகிய, கண்ணிணை-இரண்டுநேத்திரமும், களிப்ப-சந்தோஷிக்கும்படி, நோக்கினாள்-பார்த்தாள் எ-று.

(க-து.) தமயந்தி அன்னத்தைக்கண்டாள் எ-ம். 6

பன்மலர்க்கஞலியபனிகொள்வாவியிற்
பொன்னவிர்கொடுஞ்சிறைப்புள்ளைநோக்குறா
மன்னநம்மணநிலைமுடித்தவண்சிறை
யன்னமென்புள்ளினீதழகுவாய்ந்ததே.

(இ-ள்.) பல்-நானாவிதமான, மலர்-புட்பங்கள், கஞலிய-நெருங்கிய, பனி கொள்-குளிர்ச்சியைக்கொண்ட, வாவியில்-தடாகத்தில், பொன்-பொன்போல, அவிர்-பிரகாசியாநின்ற, கொடுஞ்சிறை-கொடுமையான இறகையுடைய, புள்ளை அன்னத்தை, நோக்குறா-பார்த்து, மன்ன-அரசனே, நம்-நம்முடைய, மண நிலை-விவாகத்தை, முடித்த-நிறைவேற்றின, வண்சிறை-வளப்பமாகிய இற

கையுடைய, அன்னமென்புள்ளின்-தெய்வ அன்னத்தைக்காட்டிலும்; ஈது-இப்பறவை; அழகு-அழகை, வரய்ந்தது-பொருந்தியது எ-று.

(க-து.) தமயந்தி அன்னத்தைப்பார்த்து நம்மிருவரையுங்கூட்டிய அன்னத்தைப் பார்க்கிலும் இது அழகுள்ளதென்றாள் எ-ம். 7

மற்றுமோருயிரெனவளர்த்தபூவையுஞ்
சொற்றருகிள்ளையுமறப்பத்தூமணிப்
பொற்றடந்தோளிளுய்பொன்னம்புள்ளினைப்
பற்றிநீதருகெனப்பணிந்துகூறினாள்

(இ-ள்.) மற்றுமோர்-மற்றொரு, உயிரென-உயிர்போல, வளர்த்த-வளர்த்த, பூவையும்-நாகணவாய்ப் புள்ளையும், சொல்-மொழிகளை, தரு-சொல்லாநின்ற, கிள்ளையும்-கிளிப்பிள்ளைகளையும், மறப்ப-மறக்கும்படி, தூ-பரிசுத்தமாகிய மணி-இரத்நவடமணிந்த, பொன்-அழகிய, தடம்-விசாலமாகிய, தோளிளுய்-புயத்தையுடைய அரசனே, பொன்-பொன்போன்ற, அம்-அழகிய,புள்ளினை-அன்னத்தை, பற்றி-பிடித்து, நீதருகென - நீகொடுப்பாயாகவென்று, பணிந்து-வணங்கி, கூறினாள்-சொல்லினாள், எ-று.

(க-து.) தமயந்தி நளனை அன்னத்தைப் பிடித்துத் தரச்சொன்னாள் எ-ம்.

ஓர்துகிலிருவருமுடுத்துமற்றையோர்
காரகிற்றீம்புகைகமழுநீவிகொண்
டேர்குடியிருந்தனவிலைகொள்பூணிளுய்
வார்சிறைப்புள்ளினைவளைத்துமென்றனள்.

(இ-ள்.) ஓர்துகில்-ஓராடையை, இருவரும்-நாமிரண்டுபேரும், உடுத்து-தரித்துக்கொண்டு, மற்றையோர்-மற்றொரு, கார்-கறுத்த, அகில்-அகிற்கட்டையினது, தீம்-இனிமையாகிய, புகை-தூமம், கமழும்-பரிமளியாநின்ற, நீவி கொண்டு-ஆடையைக்கொண்டு, ஏர்-அழகு, குடியிருந்தன-வாசஞ்செய்வதையொத்த, இலைகொள்-தழைத்தலைக் காண்ட,பூணிளுய்-ஆபரணங்களையுடைய அரசனே, வார்சிறை - நீண்ட இறகையுடைய, புள்ளினை - அன்னத்தை, வளைத்துமென்றனள-பிடிப்போமென்று சொன்னாள், எ-று.

(க-து.) ஒரு வஸ்திரத்தை இருவருந் தரித்துக்கொண்டு மற்றொரு வஸ்திரத்தா லன்னத்தைப் பிடிப்போமென்றாள் எ-ம். 9

மருந்தடங்கண்ணிதன்னுள்ளங்காமுறத்
திருந்துவேற்றடக்கையசன்றுகிலிற்சேர்த்தலும்
பொருந்தியதுகிலொடும்வஞ்சம்பூண்டெதி
ரிருந்தபுள்ளந்தரத்தெழுந்துபோயதே.

(இ-ள்.) கரும் - கறுத்த, தடம்-விசாலமாகிய, கண்ணிதன் - கண்களை யுடைய தமயந்தியினது, உள்ளம்-மனது, காமுற-இச்சிக்க, திருந்து-திருத்த மாகிய, வேல்-வேலையேந்திய, தடம்-பருத்த, கையானைகையையுடைய அரசன், துகிலில்-ஆடையில், சேர்த்தலும்-சேர்த்தவளவில், பொருந்திய-தன்மேற் சேர்ந்த, துகிலொடும்-ஆடையோடும், வஞ்சம்-கபடத்தை, பூண்டு-கொண்டு,எதிரிருந்த-எதிரிலிருந்த, புள்-அன்னம், அந்தரத்து-ஆகாயத்தில், எழுந்து-எழும்பி போயது-போயிற்று, எ-று.

(க-து.) நளன் சீலையை அன்னத்தின்மேற்போட அன்னஞ் சீலையை கொண்டுபோயிற்று எ-ம். 10

புனை துகில்கவர்ந்துபைம்பொன்னிறந்தபுள்
பனியிருவிசும்பினிற்பறத்தல்காண்டலு
மனைவிதனருந்துயர்நோக்கிமாழ்கினன்
வினைவலியிதுவெனமெலிவுநீக்கினான்

[இதனால் அச்சம்பவங்கண்ட நளனது ஏக்கமு மெண்ணமுஞ் சொல்லப் படுகின்றது.]

(இ-ள்.) புனை - தரித்திருந்த, துகில் - ஆடையை, கவர்ந்து - கிரகித்துக் கொண்டு, பைம்-பசுமையாகிய, பொன்-பொன்போன்ற, நிறத்த-நிறத்தை யுடைய, புள்-அன்னமானது, பனி - குளிர்ந்த, இரு - பெருமைபொருந்திய, விசும்பினில்-ஆகாயத்தினில், பறத்தல்-பறந்துபோதலை, காண்டலும்-கண்ட வளவில், மனைவிதன்-மனையாளது, அருந்துயர்-அரிதான துக்கத்தை, நோக்கி-பார்த்து, மாழ்கினன்-வருந்தினன், வினை ஊழ்வினையினது, வலி-உறுதி, இது வென-ஈதென்று, மெலிவு-துன்பத்தை, நீக்கினன்-போக்கினன்; எ-று.

(க-து.) நளன் விதிவச மிதுவென்று எண்ணினன் எ-ம். 11

கல்லதர்நடந்துபூங்கமலம்வாட்டிய
மெல்லடிசிவப்புறல்வீழிவாய்மயிற்
கொல்லுமேயெனமனமுருகியுந்தையூர்
செல்லுநீநெறியிதுவென்றுசெப்பினன்.

[இதனால் தன்னோடு கல்லதர்நடத்தல் சகியாதநளன் தமயந்திக் குரைத தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்) கல்லதர்-மலைவழியில், நடந்து - நடந்து, பூ - அழகிய, கமலம்-தாமரைமலரை, வாட்டிய - கெடுத்த, மெல்லடி - மிருதுவான பாதமானது, சிவப்புறல்-சிவத்தல் - வீழி - வீழிப்பழம்போன்ற, வாய் - அதரத்தையுடைய, மயிற்கு-மயில்போன்ற தமயந்திக்கு, ஒல்லுமேயென-கூடுமோவென்று, மனம் மனது, உருகி-இளகி, உந்தை - உன்தகப்பனது, ஊர் - குண்டினபுரத்துக்கு,

செல்லும்-போகாநின்ற, நீள்-நீண்ட, நெறி - மார்க்கம், இதுவென்று - இதுவென்று, செப்பினன்-சொன்னான், எ-று.

(க-து.) நளன் தமயந்திக்கு உன்தகப்பனூருக்குப் போகும்வழியிதுவென்றான் எ-ம். 12

ஆங்கதுகேட்டலுமழுதுமாழ்கிநொந்
தீங்குநின்னடியனேன்பிழைத்ததியாதுகொல்
பூங்கழற்குரிசிலோய்பொறியிலேன்றனை
நீங்கவோவிவ்வுரைநிகழ்த்தினாயென்றாள்:

[இதனால் தமயந்தி என்னிடத்து யாதுபிழைகண்டு இங்ஙனஞ்சொல்லி என்னை விடுவிக்க முயல்வதெனல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) ஆங்கு-அவ்விடத்தில், அது-அந்தச்சொல்லை, கேட்டலும்-கேட்டவளவில், அழுது-புலம்பி, மாழ்கி-வருந்தி, நொந்து-மனநொந்து, ஈங்கு-இவ்விடத்தில், நின்-உனக்கு, அடியனேன்-அடிமைத்திறம் பூண்டயான், பிழைத்தது-குற்றஞ்செய்தது, யாதுகொல்-எது, பூ-அழகிய, கழல்-வீரக்கழலையணிந்த குரிசிலோய்-அரசனே, பொறியிலேன்றனை-அறிவில்லாத என்னை, நீங்கவோ பிரியவோ, இவ்வுரை-இந்தவசனத்தை, நிகழ்த்தினாய்-சொன்னாய், என்றாள் என்று (தமயந்தி) சொல்லினள், எ-று.

(க-து.) தமயந்தி என்னைவிட்டு நீங்கவோ இப்படிச் சொன்னீரென்றாள் எ-ம். 13

செயிரறுமதிமுகம்பசப்பச்சிந்தைநொந்
தயர்வொடுகண்பனித்தவலங்கோடலை
மயிலியற்பேதைநிற்பிரிந்துவாழ்வெனை
யுயிர்பிரிந்தாலுடலுய்யுமோவென்றான்.

[இதனால் நளன் தமயந்தியைத் தேற்றல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) செயிரறு-குற்றமற்ற, மதி-சந்திரன்போன்ற, முகம்-வதனமானது பசப்ப-பசந்துபோக, சிந்தைநொந்து-மனநொந்து, அயர்வொடு-சோர்வுடனே கண்பனித்து-கண்ணீர்விட்டு, அவலங்கோடலை-துன்பத்தைக் கொள்ளாதே, மயில்-மயில்போலும், இயல்-சாயலையுடைய, பேதை-தமயந்தியே, நிற்பிரிந்து-உன்னைப்பிரிந்து, வாழ்வெனே-வாழ்வேனோ, உயிர்பிரிந்தால் - உயிர்நீங்கினால், உடல்-தேகம், உய்யுமோ-பிழைக்குமோ, என்றான்-என்று (நளமஹாராசன்) சொன்னான் எ-று.

(க-து.) நளன் தமயந்தியே-உன்னைபிரிந்துவாழேனென்றான் எ-ம். 14

முருகுயிர்த்தளியினமூசுபூங்குழற்
கருதருபெருந்துயர்காண்கிலேனெனாப்

பரிநெடுந்தேரொடும்பரிதிவானவ
னுரவுநீர்க்கருங்கடலொளித்திட்டானரோ.

[இதனால் சூரியாஸ்தமானஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) முருகு-தேனை, உயிர்த்து பெற்று, அளியினம் - வண்டுக்கூட்டங்கள், மூசு-மொய்க்காநின்ற, பூ-பூவையணிந்த, குழல்-கூந்தலையுடையதமயந்தியினது, கருதரும்-நினைத்தற்கரிய, பெருந்துயர்-பெரிதாகியதுன்பத்தை,காண்கிலேனெனு-பார்க்கமாட்டேனென்று, பரி-குதிரைகட்டிய, நெடும் - நெடிய, தேரொடும்-இரதத்துடனே, பரிதிவானவன்-சூரியதேவன், உரவுநீர்-உவர்நீரையுடைய, கருங்கடல்-கறுத்தசமுத்திரத்தில்,ஒளித்திட்டான்-மறைந்தான் எ-று.

(க-து.) சூரியன் அஸ்தமான மாகினான். 15

மாயிருஞாலமும்வானு நுங்கிய
பாயிருட்கங்குலிற்பாவைதன்னொடும்
போயரின்முற்றியபொலிவின்மண்டப
மேயினனரசர்கோன்விதியின்கொட்பினால்.

[இதனால் இருளினடத்தலாற்றாத நளன்செயல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மா-மகத்தாகிய, இரு-பெரிய, ஞாலமும்-பூமியையும், வானும்-ஆகாயத்தையும், நுங்கிய-விழுங்கிய, பாய்-பரவிய, இருள் - இருளையுடைய, கங்குலில்-இராத்திரியில், பாவைதன்னொடும்-தமயந்தியுடனே,போய்-சென்று, அரில்-தூறுகள், முற்றிய-நிறைந்த, பொலிவில்-சிறப்பற்ற, மண்டபம்-ஓர்மண்டபத்தை, அரசர்கோன்-இராசாதிராசனாகிய நளமகாராசன், விதியின்-வினையினது, கொட்பினால்-திரிபினால், மேயினன்-அடைந்தான் எ-று.

(க-து.) நளன் தமயந்தியுடன் ஓர்மண்டபத்தைச்சார்ந்தான் எ-ம். 16

இன்னகிற்புகைதவழ்ந்தினிதின்மென்மையு
பன்மலரமளிமேற்பள்ளிகொள்பவர்
புன்னுனைபரந்தவெம்பொடிகொள்பார்மிசை
மன்னினரூழினும்வலிதியாவதே.

[இதனால் கவிக்கூற்று சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) இன்-இனிதாகிய, அகிற்புகை-அகிற்றூமம், தவழ்ந்து-ஊர்ந்து, இனிதின்-இன்பமாய், மென்மைய-மிருதுவாகிய, பல்-நானாவிதமான, மலர்-புஷ்பம்பரப்பிய, அமளிமேல்-படுக்கையின்மீது, பள்ளிகொள்பவர்-சயனிப்பவராகிய (தமயந்திநளனிருவரும்) புல்-புல்லினது, நுனி-நுனிகள், பரந்த-பரவிய, வெம்-வெவ்விய, பொடிகொள்-புழுதியைக்கொண்ட, பார்மிசை-பூமியின்மேல், மன்னினர்-படுத்தார்கள், (ஆதலால்) ஊழினும் - ஊழினைக்காட்டிலும், வலிது-வன்மையையுடையது, யாவது-யாது எ-று.

(க-து.) மெல்லணையிற்படுத்த நளனுந் தமயந்தியும் புல்லணையிற்படுத்தார்கள் எ-ம். 17

அனிச்சமென்புதுமலரமளிமேயினும்
பனித்திடுமெய்யெனப்பதைத்துவாடுவேன்
கனிப்படுகிளவிவெம்பொடியிற்கண்படி
லினித்தமியேனுயிரெங்ஙனுய்யுமே.

[இதனால் நானே கண்படுத்தற்கியலாத இவ்விடந் தமயந்திக்கென்னுமென்று நளன் வருந்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) அனிச்சம்-அனிச்ச விருட்சத்தினது, மென்-மிருதுவாகிய, புது மலர்-புதியமலரையுடைய, அமளி-மெத்தையிலே, மேயினும்-படுத்தாலும், மெய்-சரீரமானது, பனித்திடுமென-வருந்துமென்று, பதைத்து-துடித்து, வாடுவேன்-சோர்வேன், கனிப்படு-பழச்சுவைபொருந்திய, கிளவி-வசனத்தையுடைய தமயந்தி, வெம்பொடியில்-வெவ்வியபுழுதியில், கண்படில்-நித்திரைசெய்யில். இனி-இனிமேல், தமியேனுயிர்-தனியாகிய என்னுயிர், எங்ஙன்-எப்படி, உய்யும்-பிழைக்கும் எ-று.

(க-து.) நளன் தமயந்தி புற்புழுதியிலே நித்திரைசெய்ய என்னுயிரெப்படிபிழைக்கும் என்றான் எ-ம். 18

கண்ணகன்புவிக்கெலாங்களைகணாகிய
தண்மதிநெடுங்குடைவிதர்ப்பன்றார்குழ
னண்ணருமித்துயருழந்துநண்ணுமே
லெண்ணின்மற்றியார்துயரெய்திடாரென்றான்.

[இதனால் நளன் தானேஒருவாறு தேறுதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கண்ணகல்-இடமகன்ற, புவிக்கெலாம்-பூமிக்கெல்லாம், களைகணாகிய - ஆதாரமாகிய, தண் - குளிர்ந்த, மதி - சந்திரன்போன்ற, நெடும் - நீண்ட, குடை - குடையையுடைய, விதர்ப்பன் - விதர்ப்பதேயத்தையாளும் வீமராசனீன்ற, தார்குழல் - தமயந்தியானவள், நண்ணரும் - பொருந்துதற்கரிய, இத்துயர் - இந்தத் துன்பத்தை, உழந்து - வருந்தி, நண்ணுமேல்-அடையுமானால், எண்ணின்-நினைக்குமிடத்தில், யார்-எவர்கள், துயர்-துன்பத்தை, எய்திடார்-அடையார்கள், என்றான்-என்று சொன்னான் எ-று.

(க-து.) நளன் துன்பமடையாதவர் யார் என்றான் எ-ம். 19

வளைகடலுலகினின்மன்னர்தாடொழ
வுளையரிப்பூந்தவிசுறையுமெம்பிரான்
முளரியாலெங்கணுமுற்றுமண்டபந்
தெளியர்போலிருத்திகொலென்றுவிம்மினாள்.

[இதனால் நளனிருந்தல்நோக்கித் தமயந்திவருந்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) வளைகடல்-சமுத்திரஞ்சூழ்ந்த, உலகினில்-உலகத்தில், மன்னர்-அரசர்கள், தாடொழ-பாதத்தில் வணங்க, உளை-புறமயிரையுடைய, அரி-சிங்கந்தாங்கிய, பைம்-பசுமைபொருந்திய, பூம்-அழகுபொருந்திய, தவிசு-ஆசனத்தில், உறையும்-இருக்கும், எம்பிரான்-என்கருத்தனே, முளரியால்-முட்செடிகளால், எங்கணும்-எவ்விடத்தும், முற்றும்-நிறையப்பெற்ற, மண்டபத்து-மண்டபத்தில், எளியர்போல்-வறியோர்போல்,இருத்திகொல்-இருக்கிறாயோ, என்று-என்றுசொல்லி, விம்மினள்-அழுதாள் எ-று.

(க-து.) தமயந்தி நளனைப்பார்த்து ஏழைகளைப் போலிருக்கின்றாயோ வென் றழுதாள் எ-ம். 20

தடங்கணீர் துடைத்துமெய்தைவந்தாயிழை
நடுக்கலென்றுற்றிடநள்ளியாமத்து
மடங்கல்போன்மொய்ம்புடைமன்னர்மன்னவன்
கொடுங்கைமேற்றுயின்றனள்பொன்னங்கொம்பனாள்.

[இதனால் நளன்தேற்றச் சிறிதுதேறிய தமயந்திகண்படுதல் சொல்லப்படுகின்றது]

(இ-ள்.) தடம்-விசாலமாகிய, கண்-கண்ணினின்றுவரும், நீர்-சலத்தை, துடைத்து-மாற்றி, மெய்-தேகத்தை, தைவந்து-தடவிக் கொடுத்து, ஆயிழை-பெண்ணே, நடுங்கலென்று-அஞ்சாதேயென்று, ஆற்றிட-தேற்ற, நள்ளியாமத்து-அர்த்தராத்திரியில், மடங்கல்போல்-சிங்கம்போல், மொய்ம்புடைய பலத்தையுடைய, மன்னர் மன்னவன் - அரசர்க்கரசனான நளமகாராசனுடைய, கொடுங்கைமேல்-வளைந்தகைமீது, பொன்னங்கொம்பனாள்-அழகிய பொற்கொம்பையொத்த தமயந்தி, துயின்றனள்-நித்திரை செய்தாள் எ-று.

(க-து.) தமயந்தி நளன்கைமேல் சிரசைவைத்து நித்திரை செய்தாள் எ-ம். 21

கான்புகுபடலம் முற்றிற்று.

கடவுள் துணை.

# பிரிவுறு படலம்.



இப்படலத்தால் கானிடத்துச் சென்றநளமகாராசன் அவ்வி டத்தில் தமயந்திபடும் பெருந்துன்பத்தைக்கண்டு சகிக்காதவனாய் அதற்குக்காரணந் தானாகையால் தான் பிரிந்தால் அவள் சிறுதயரு டன் அருகிலுள்ள தன்தாய்வீட்டை யடைவாளென் றெண்ணிப் பிரிவுறல் சொல்லப்படுகின்றது.

(கலிவிருத்தம்)

விண்படுமின்னெனமிளிருமாகமு
மண்டபத்துயரொருவடிவுகொண்டெனக்
கண்படுகோதையைநோக்கிக்காவலன்
புண்படுநெஞ்சொடும்புலம்பியெண்ணினான்.

[இதுமுதல் மூன்றுபாட்டுகளால் அயர்ந்து கண்படுத்திருக்குந் தமயந் தியைநோக்கி நளனெண்ணியது சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) விண்படு-மேகத்திலுண்டாகிய, மின்னென - மின்கொடிபோல, மிளிரும்-பிரகாசிக்கவும், ஆகமும்-சரீரமும், மண்பட-புழுதியடைய, துயர்-துன் பம், ஒருவடிவம்-ஒருவடிவத்தை, கொண்டென-கொண்டது போல, கண்படு-நித்திரை செய்யாநின்ற, கோதையை-தமயந்தியை, நோக்கி-பார்த்து, காவ லன்-நளமகாராசன், புண்படு-புண்பட்ட, நெஞ்சொடும்-மனதுடனே, புலம்பி-அரற்றி, எண்ணினான்-ஆலோசித்தான் எ-று.

(க-து.) நளன் தமயந்தியைப் பார்த்து அழுது எண்ணினான் எ-ம். 1

நண்ணருங்கானெலாந்தொடர்ந்துநண்ணுமேற்
கண்ணினாலிவடுயர்காணலாவதே
பெண்ணருங்கலத்தினைப்பிரியிற்றந்தையூ
ரண்ணியதவ்வழியடைந்துவைகுமால்.

(இ-ள்.) நண்ணரும் - பொருந்துதற்கரிய, கானெலாம்-காடு முழுதும், தொடர்ந்து - பின்றொடர்ந்து, நண்ணுமேல்-அடையுமானால், கண்ணினால்-கண்களினால், இவள்-இத்தமயந்தியினது, துயர்-துன்பத்தை, காணலாவதே-பார்க்கக் கூடுமோ, பெண்ணருங் கலத்தினை -பெண்களுக்குரிய ஆபரணம் போன்ற இவளை, பிரியில-நீங்கில், தந்தை-பிதாவினுடைய, ஊர்-நகரமானது,

அண்ணியத்-சமீபமாயது, அவ்வுழி-அந்தாகரத்தினிடத்து, அடைந்து-சேர்ந்து, வைகும்-இருப்பாள் எ-று. ஆல்-அசை.

(க-து.) நாம்பிரிந்தால் இவள் தாயவீட்டுக்குப்போவாள் எ-ம். 2

விரிமலர்ப்பூங்குழல்விழிக்கிலீங்கிவட்
பிரிகுவதரிதினிப்பிரியவெண்ணிலோ
வொருதுகிலாயதித்துகிலையூறுசெய்
கருவியிங்கேதெனக்கருத்தினெண்ணினன்.

(இ-ள்.) விரி-மலர்த்த, மலர்-புட்பத்தையணிந்த, பூ-போலிவுபெற்ற, குழல்-கூந்தலையுடைய தமயந்தி, விழிக்கில்-கண்விழித்துக்கொண்டால், ஈங்கு-இவ்விடத்தில், இவள்-இவளை, பிரிகுவது-நீங்குவது, அரிது-கூடாது, இனி-இனிமேல், பிரிய-இவளைநீங்க, எண்ணிலோ-ஆலோசிக்கிலோ, ஒருதுகிலாயது-(இருவர்க்குப்) ஓராடையா யிருக்கின்றது, இத்துகிலை-இவ்வஸ்திரத்தை, ஊறுசெய்-துணிக்கின்ற, கருவி-ஆயுதம், இங்கு-இவ்விடத்தில், ஏதென-யாதென்று, கருத்தின்-மனதில், எண்ணினன்-ஆலோசித்தான் எ-று.

(க-து.) தமயந்திவிழித்தால் பிரிதலரிது. வஸதிரமொன்று. இதையறுக்கக் கருவியில்லையென் றெண்ணினன் எ-ம். 3

எண்ணியதுணர்ந்திவர்ப்பிரிப்பமுன்னமே
கண்ணியவஞ்சகக்கலியும்வாளதாய்
நண்ணிமுன்கிடத்தலுமெடுத்துநாமவே
லண்ணலுந் துகினடுவரிந்திட்டானரோ

[இதனால் இவர்களைப் பிரித்தற் கெண்ணியிருந்த சனிச்செய்கையும் அரசன் செய்கையுஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) எண்ணியது-ஆலோசித்ததை, உணர்ந்து-அறிந்து, இவர்-இவ்விருவரையும், பிரிப்ப-பிரிக்க, முன்னமே-முன்னமே, கண்ணிய - கருதியவஞ்சகம்-கபடத்தையுடைய, கலியும்-கலிபுருஷனும், வாளதாய்-வாளாகி, நண்ணி-பொருந்தி, முன்-எதிரில், கிடத்தலும்-இருந்த அளவில், எடுத்து-கையிலெடுத்து, நாமம்-அச்சத்தைத்தரும், வேல்-வேலையுடைய, அண்ணலும்-நளனும், துகில்-வஸ்திரத்தை, நடு-மத்தியில், அரிந்திட்டான்-அரிந்தான் எ-று.

(க-து.) சனி வாள்போ லெதிரிற்கிடக்க, நளன் அதையெடுத்து வஸ்திரத்தை யரிந்தான் எ-ம். 4

இல்லரிநெடுங்கணுடைருஞருவனை
யொழல்லெனக்கொடுங்கையினீக்கிவெய்துயிர்த்
தொல்லையினுயிர்விடுமுடம்புபோன்மென்
வல்லலங்கடலிடையழுந்தினனரோ

[இதுமுதல் நான்குபாட்டினால் அரசன் தமயந்தியின் பிரிவுக்காற்று ளூய் வருந்திச் சொல்லுதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்) சில்-சிலவாகிய, அரி-அரிபரந்த, நெடும்-நீண்ட, கணுள்-கண்களை யுடைய தமயந்தி, தெருளுருவனை - விழிக்காவிதமாய், மெல்லென-மிருது வாக, கொடுங்கையின்-வளைந்தகையினின்றும், நீக்கி-அகற்றிவெய்துயிர்த்து-பெருமூச்சுவிட்டு, ஒல்லையில்-சீக்கிரத்தில், உயிர்-பிராணனை, விடும் - நீங்கும், உடம்புபோன்மென-தேகத்தைப்போல, அல்லலங்கடலிடை-துக்கசமுத்திரத் தில், அழுந்தினன்-முழுகினன் எ-று. அரோ அசை.

(க-து.) நளன் தமயந்தியைக் கையைவிட்டு நீக்கி யழுதான் எ-ம். 5

எழுமகன்றலினியென்கொலாமென
வழுமுயிர் துறந்தெனவசமேற்கொளா
விழுமிவட்காக்கெனமெலிந்துதெய்வதந்
தொழுமினையனபலதுன்பமெய்துமால்.

(இ-ள்.) எழும்-எழுந்திருப்பான், அகன்றல்-நீங்கினல், இனி-இனிமேல் என்கொலாமென-என்னவாகுமோவென்று, அழும்-புலம்புவான், உயிர்துறந் தென-உயிர்நீங்கினவன்போல, அவசமேற்கொளா-பரவசத்தை மேற்கொண்டு விழும்-விழுவான், இவள்-இவளை, காக்கென-இரக்ஷிக்கவென்று, மெலிந்து-வாடி, தெய்வதம்-வனதேவதைகளை, தொழும்-வணங்குவான், இனையன. இவைபோன்ற, பல-அனேகமான, துன்பம்-துயரங்களை, எய்தும்-அடை வான் எ-று.

(க-து.) நளன் எழுவான் விழுவான். தமயந்தியைக் காக்கவென தெய்வங் களைத் தொழுவான் எ-ம். 6

செல்லும்வெந்துயரொடுஞ்செல்லக்காலெழா
தொல்லையின்மீளும்வெய்துயிர்க்குமொண்ணுதல்
கல்லதரிடைத்தனியேகிற்பேய்க்கணங்
கொல்லுமென்றருயிர்குழைந்துசாம்புமால்.

(இ-ள். சொல்லும்-நடப்பான், வெந்துயரொடும்-வெவ்விய துக்கத்துடன் செல்ல-நடக்க, காலெழாது- அடியெழும்பாமல், ஒல்லையில்-சீக்கிரத்தில், மீ ளும்-திரும்புவான், வெய்துயிர்க்கும்-பெருமூச்சுவிடுவான், ஒண்ணுதல்-ஒள் ளிய நெற்றியையுடைய தமயந்தி, கல்லதரிடை-மலைவழியில், தனி-தனியே, ஏ கில்-செல்வாளானல், பேய்க்கணம்-பிசாசுக்கூட்டங்கள், கொல்லுமென்று-கொன்றுவிடுமென்று, ஆருயிர்-நிறைந்தவுயிர், குழைந்து-குழைவுற்று, சாம் பும்-வாடுவான், எ-று. ஆல்-அசை.

[இது தன்மை தவிர்ச்சியணி.]

(க-து.) நளன் நடப்பான். திரும்புவான். பெருமூச்செறிவான். தமயந்தியைப் பேய்கொல்லுமென்று தளர்வான் எ-ம். 7

ஆயிடையினனணம்வருந்தியன்புகூர்
வேயுறழ்தோளியைப்பிரிந்துவெஞ்சின
மாயவெங்கொடுங்கலிவயத்தனுதலிற்
போயினன்பித்தரிற்பொருவில்வாய்மையான்.

(இ-ள்.) ஆயிடை-அவ்விடத்தில், இன்னணம்-இப்படியாக, வருந்தி-துன்புற்று, அன்புகூர்-ஆசைமிகுந்த, வேயுறழ்-மூங்கிலையொத்த, தோளியை-தோளையுடைய தமயந்தியை, பிரிந்துநீங்கி, வெஞ்சினம் - வெவ்விய கோபத்தையும், மாயம்-வஞ்சனையையும், வெம்-குரூரமான, கொடும்-கொடுமையையுமுடைய, கலி - கலியனுக்கு, வயத்தனுதலில் - வசப்பட்டவனுதலால், பொருவில் - ஒப்பற்ற, வாய்மையான் - சத்தியத்தை டையநளன், பித்தரின்-பித்தரைப்போல், போயினன்-போனான், எ-று.

(க-து.) நளன் பித்தரைப்போலப் போனான் எ-ம். 8

நள்ளிருட்போதுவெங்கானினும்வே
லள்ளிலைப்பூணினனகன்றுபோதலும்
விள்ளருந்துயரொடுமெலிந்துகண்படும்
பிள்ளைமானோக்கிதன்செய்கைபேசுவாம்.

[இதனால் கவிக்கூற்று சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) நள்ளிருட்போது-நடுராத்திரியில், வெங்கானில்-வெவ்வியகாட்டில் நாம்வேல்-அச்சத்தைச்செய்யும் வேலையும், அள்-கூர்மைபொருந்திய, இலை-தொங்கலையுடைய, பூணினன் - ஆபரணத்தையுமுடைய நளமகாராசன், அகன்று-நீங்கி, போதலும்-போனவளவில், விள்ளரும் - நீங்குதற்கரிய, துயரொடு-துன்பத்துடனே, மெலிந்து - நைந்து, கண்படு - நித்திரைசெய்கின்ற, பிள்ளைமான்-மான்கன்றுபோன்ற, நோக்கிதன் - கண்களையுடைய தமயந்தியினது, செய்கை-நடக்கையை, பேசுவாம்-சொல்லுவாம், எ-று.

(க-து.) புராணிகர் தமயந்தி செய்கையைச் சொல்லுவா மென்றார், எ-று.

நீடியதுயில்சிறிதுணர்ந்துநேரிழை
யாடகத்தொடிக்கைபாலணைக்கக்காண்கிலா
ளோடினள்பதைத்தனளுயிர்ப்புவீங்கின
ளேடினள்காந்தளஞ்செங்கைநீட்டியே.

[இதுமுதல் மூன்றுபாட்டுகளால் கண்விழித்தெழுந்ததமயந்தி அரசனைக் காணாமல், நம்மைச் சோதிப்பானிவ்வாறுசெய்து மறைந்திருப்பர் போலுமென வெண்ணியழுதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) நீடிய துயில்-மிகுந்தநித்திரை, சிறிதுணர்ந்து-கொஞ்சந்தெளிந்து நேரிழை-தமயந்தி, ஆடகத்தொடி-பொன்னாற்செய்த, கையால்-கைகளால், அணைக்க-தழுவ, காண்கிலாள்-காணாதவளாய், வாடினள்-பிணங்கினாள்,பதைத் தனள்-துடித்தாள், உயிர்ப்புவீங்கினள்-பெருமூச்சுவிட்டாள், காந்தள் - காந் தள்மலரையொத்த, அம்-அழகிய, செங்கை-சிவந்தகையை, நீட்டி-நீட்டி, தேடி னள்-தேடினாள், எ-று.

[இது தன்மை நவிற்சியணி.]

(க-து) தமயந்தி தன் கைகளால் நளனையணைக்கக் காணாதவளாய்ப்பிணங் கினாள். அடித்தாள். பெருமூச்சுவிட்டாள். கையாற்றடவினாள் எ-ம். 10

ஆயிடைகாண்கிலாதழுங்கிச்செங்கடை
பாயரிநெடுங்கணீரருவிபாய்தரத்
தூயமென்மலர்க்கரநெரித்துத்துண்ணென
வாய்வெரீஇயாலவயிறதுக்கிமாழ்கினாள்.

(இ-ள்.) ஆயிடை-அவ்விடத்தில், காண்கிலாது- (நளனைக்) காணாமல், அழுங்கி-வருந்தி, செங்கடை-சிவந்தகடையையுடைய, பாய-பரவிய, அரி-அரி களையுடைய, நெடும்-நீண்ட, கண்-கண்ணினின்றும், நீரருவி-நீர்வெள்ளம், பாய்தர-ஒழுக, தூய-பரிசுத்தமாகிய, மென்-மிருதுபொருந்திய, மலர்க்கரம்- தாமரைமலர்போன்றகைகளை, நெரித்து-நெரித்து,துண்ணென-திடுக்கென்று வாய்வெரீஇ-கூச்சலிட்டு, ஆல்-ஆலிலைபோன்ற,வயிறு-வயிற்றை, துக்கி- பிசைந்து, மாழ்கினாள்-மயங்கினாள், எ-று.

(க-து.) தமயந்தி நளனைக்காணாது கண்ணீரொழுகக் கைகளை நெரித்துக் கூச்சலிட்டு வயிற்றைப்பிசைந் தழுதாள் எ-ம். 11

தெளித்தபூம்பள்ளியிற்சிறிதுநீங்கினு
மளப்பருந்துயரொடுமவலமெய்துவேன்
றளிப்பெயற்கங்குலிற்றமியண்மாழ்குற
வொளித்துநீதனிவிளையாடினுய்வனோ.

(இ-ள்.) தெளித்தபூ - புஷ்பங்களைப்பரப்பிய, பள்ளியில் - சயனத்தில், சிறிது-கொஞ்சம், நீங்கினும்-விலகினாலும், அளப்பரும்-அளவிடுதற்கரிய, துய ரொடும்-துன்பத்துடன், அவலம்-வருத்தத்தை, எய்துவேன்-அடைகின்றயான் தளிப்பெயல்-பனித்துளி-துளிக்கின்ற, கங்குலில்-இராத்திரியில், தமியள்- தனித்தவராய், மாழ்குற-வருந்த, ஒளித்துநீ-நீ மறைந்து, தனி-தனியாய், விளையாடில்-விளையாடினால், உய்வனோ-யான பிழைப்பனோ, எ-று.

(க-து.) மலரணையிற் பிரியிற் சகியாத நான், நீயொளித்துவிளையாடினாற் பிழைப்பனோ என்றான் எ-ம். 12

கோச்சகக்கலிப்பா.

கான்றாருயிரொழுகக்கண்ணீர்கவுளலைப்ப
வூன்றோய்கணைபட்டுழலும்பிணையொத்தேன்
மான்றேரரசர்முடியுழுதவார்கழற்காற்
றோன்றாலென்கண்களிப்பவின்னமுமென்றோன்றிலையே.

[இதுமுதல் ஆறு பாட்டுகளால் அரசன் விளையாட்டாக மறைந்திருப்பினும் ஈட்டித்திரானே: நாம் தாய்வீடுசென்று சேரும்வகைக் கிவ்வாறு செய்தனவே, என்றெண்ணிப் புலம்புதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கான்று-வெளிப்பட்டு, ஆருயிர்-பொருந்தியவுயிர், சோர-நீங்க, கண்ணீர்-கண்ணீரானது, கவுள்-கன்னத்தை, அலைப்ப-அலைக்க, ஊன்றோய்-தசைபடிந்த, கணைபட்டு-அம்புபட்டு, உழலும்-சுழலாநின்ற, பிணையொத்தேன்-மானுக்கொப்பானேன், மான்றேர்-குதிரைக்கட்டிய தேரையுடைய, அரசர்-அரசருடைய, முடி-கிரீடங்கள், உழுத-படிந்த, வார்-நெடிய, கழல்-வீரக்கழலை தரித்த, கால்-பாதத்தையுடைய, தோன்றால்-அரசனே, என்-என்னுடைய, கண்களிப்ப-கண் மகிழ்ச்சியையுடைய, இன்னமும்-இந்நேரமட்டும், என்-என்னகாரணத்தினால்-தோன்றிலை-காணப்படவில்லை, எ-று.

(க-து.) தமயந்தி அரசனே-என்கண்ணுக்குக் கின்னமுந் தோற்றவில்லை என்ன காரணமென்றாள் எ-ம். 13

நேரலார்போரேறேநிடதத்தார்கோமானே
யாரவரைமார்பாவளியேனுயிர்க்குயிரே
காரிருள்வாயான்புலம்பக்கானகத்துவிட்டகன்றுஞ்
சாரலையாலின்னுமிதுவோநின்றண்ணளியே.

(இ-ள்.) நேரலார்-பகைவர்க்கு, போரேறே-போர்செய்கின்ற சிங்கமே, நிடதத்தார்-நிடததேசத்தார்க்கு, கோமானே-அரசனே, ஆரம் - முத்துமாலையையணிந்த, வரைமார்பா-மலைபோன்ற மார்பையுடையவனே, அளியேனுயிர்க்கு-எழையாகிய என்னுயிர்க்கு, உயிரே-உயிர் போன்ற நளமகாராசனே, காரிருள்வாய்-கரியவிருளினிடத்தில், யான்-நான், புலம்ப-புலம்பும்படி, கானகத்து-காட்டினிடத்தில், விட்டகன்றும்-என்னைநீங்கியும், இன்னும்-இவ்வளவு காலஞ்சென்றபின்பும், சாரலை-சேர்ந்தாயில்லை, (ஆதலால்) இதுவோ-இதுதானோ, நின்-உன்னுடைய, தண்ணளி-குளிர்த்தவருள், எ-று. ஆல்-ஏ-அசைகள்.

(க-து.) தமயந்தி நளனைக்குறித்து இதுதானோ தயையென்றாள் எ-ம். 14

நெஞ்சமெலிவேனினது தடந்தோளுங்
கஞ்சமலர்முகமுங்காணாது கண்பனிப்ப
மஞ்சுதவழ்வெற்பேறிந்தவச்சிரத்தோன்றளித்த
வின்சைபயின்றவிளையாட்டயருதியோ.

(இ-ள்) நெஞ்சமெலிவேன்-மனம்வாடுகின்றயான், நினது-உன்னுடைய, தடந்தோளும்-விசாலமாகிய தோள்களையும், கஞ்சம்-தாமரை மலர்போன்ற, முகமும்-வதனத்தையும, காணுது-பாராமல், கண்பனிப்ப-கண்ணீர் விடும்படி, மஞ்சுதவழ்-மேகங்கள் தவழ்கின்ற, வெற்பு-மலைகளின்சிறகை, எறிந்த - அறுத்த, வச்சிரத்தோன்-வச்சிராயுதத்தை யேந்திய இந்திரன், அன்று - தூது சென்றவன்று, அளித்த-கொடுத்த, விஞ்சை-வித்தையை, பயின்று-பழகி, விளையாட்டயருதியோ-விளையாடுகின்றாயோ எ-று.

(க-து.) தமயந்தி நளனைக்குறித்து இந்திரன்கொடுத்தவித்தையால் விளையாடுகின்றாயோ என்றாள் எ-ம். 15

ஞாலத்திருணடப்பநாட்கமலம் வாய்நெகிழ
வேலைத்திரைமுகட்டில்வெய்யோனெழுந்தனன்
மாலைக்கதிர்வடிவேன்மன்னர்பெருமானே
காலைக்கடவகடன்கழிக்கவாராயே.

(இ-ள்.) ஞாலத்து-பூமியிலுள்ள, இருள்-அந்தகாரமானது, நடப்ப-செல்லவும், நாள்-புதிய, கமலம்-தாமரைமுகைகள், வாய்நெகிழ-மலரவும், வேலை-கடலினது, திரை-அலைகளினது, முகட்டில்-உச்சியில், வெய்யோன்-சூரியன், எழுந்தனன்-உதித்தான், (ஆதலால்) மாலை-வெற்றிமாலையணிந்த, கதிர்-ஒளிபொருந்திய, வடி-கூரிய, வேல்-வேலாயுதத்தையேந்திய, மன்னர்பெருமானே-அரசர்க்கரசனாகியநளமகாராசனே, காலை-உதயத்தில், கடவ - செய்யத்தக்க, கடன்-நித்திய கன்மத்தை, கழிக்க-செய்து முடிக்க, வாராயே-வாராய் எ-று. ஆல்-அசை.

(க-து.) சூரியனுதயமாயினன். காலக்கருமஞ் செய்ய வாராயோ வென்றாள் எ-ம். 16

மன்னவனேயிப்பிறப்பிற்கண்டுமணந்திலனே
லின்னமொருபிறப்பிலானுலுமேழையேன்
றன்னந்தனியேயிருந்துதவமாற்றியுமுன்
பொன்னகலமுள்ளுருகப்புல்லாதொழிவேனோ.

(இ-ள்.) ஏழையேன்-ஏழையாகியயான், மன்னவனே-நளமகாராசனே, இப்பிறப்பில்-இந்தச்சனனத்தில், கண்டு-உன்னைக்கண்டு, மணந்திலனேல்-சேராமற்போவேனானால், இன்னம்-இனிமேல் (வருஞ்சனனங்களுள்), ஒருபிறப்பிலானாலும்-ஒருசனனத்திலாவது, தன்னந்தனியேயிருந்து-தனித்திருந்து, தவமாற்றியும்-தவத்தைச் செய்தாவது, உன்-உன்னுடைய, பொன்னகலம்-அழகு பொருந்தியமார்பை, உள்ளுருக - உள்ளமுருகும்படி, புல்லாது-தழுவாமல், ஒழிவேனோ-நீங்குவேனோ, எ-று.

(க-து.) இப்பிறப்பிற் புணராவிடினும் வேறுபிறப்பிற் புணருவேனென்றாள் எ-ம். 17

வார்வுமிளமான்காண்மயில்காண்மடப்பிடிகாழ்
கூவுங்கரியகுயில்காண்மென்புள்ளினங்கா
ளாவியெனமேவியகலேமெனவகன்ற
காவலன்றான்போனவழியெனக்குக்காட்டீரே.

(இ-ள்) வாவும்-தாவாநின்ற, இளமான்காள்-இளமைதங்கிய மான்களே, மயில்காள்-மஞ்ஞைகளே, மடப்பிடிகாள்-அழகியபெட்டையானைகளே, கூவும்-கூவுகின்ற, கரியகுயில்காள்-கருங்குயில்களே, மென்-மென்மையாகிய, புள்ளினங்காள்-பறவைக்கூட்டங்களே, ஆவியென-உயிரைப்போல, மேவி-பொருந்தி, அகலேமென-பிரியோமென்று சொல்லி, அகன்ற - (இப்பொழுது) நீங்கிய, காவலன்றான்-நளமஹாராசன். போனவழி - சென்றவழியை, எனக்கு-என்றனக்கு, காட்டீரே-நீங்கள் காட்டீரா எ-று.

(க-து.) மான்களே-மயில்களே-யானைகளே-குயில்களே-பறவைக்கூட்டங்களே-நளமஹாராசன் போனவழியைக் காட்டீர்களா என்றாளெ-ம். 18

என்றுவுருகியிருகண்ணீராலியுகத்
தன்றுத்தழும்பப்புலம்பித்தமியளாய்
மின்றாரிடை நுடங்கச்செல்வாள்விறல்வேந்தன்
பொன்றாரடிநோக்கிப்பூங்கொடிபோல்வீழ்ந்தழுதாள்

[இதுமுதல் இரண்டுபாட்டுகளால் தமயந்தி அரசனடிச்சுவடுகண்டரற்றி மூர்ச்சித்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) என்று-இப்படியென்று, உருகி-மனமுருகி, இருகண்-இரண்டு கண்களினின்றும், நீராலி-நீர்த்துளிகள், உக-உதிர, தன்று - தன்னுடைய நாவானது, தழும்ப-தடிப்புறும்படி, புலம்பி-அரற்றி, தமியளாய் - தனித்தவளாய், மின்-மின்னலின்றன்மை, ஆர்-நிறைந்த, இடை-இடையானது, நுடங்க-துவல, செல்வாள்-நடக்கின்ற தமயந்தியானவள், விறல்-வெற்றிபொருந்திய, வேந்தன்-நளமகாராசனது, பொன்றார் - அழகு பொருந்திய, அடி-பாதக்குறியை, நோக்கி-பார்த்து, பூங்கொடிபோல்-புஷ்பக்கொடிபோல், வீழ்ந்து-அதில்வீழ்ந்து, அழுதாள்-புலம்பினாள் எ-று.

(க-து.) தமயந்தி நளனடியைக்கண்டு வீழ்ந்தழுதாள் எ-ம். 19

ஐயன்கமலவடிச்சுவடுகாண்டலுமே
வெய்யதுயரவிடமீதூரவாய்புலரச்
செய்யகமலமலரிற்றிருவனையா
ளையறவாநெஞ்சங்கலுழநவுயிர்சோர்ந்தாள்.

(இ-ள்.) ஐயன்-நளமகாராசனுடைய, கமலவடிச்சுவடு-தாமரைமலர்போன்ற பாதக்குறியை, காண்டலும் - கண்டவளவில், வெய்ய-கொடிய, துயர

விடம்-துன்பமாகிய விஷம், மீதூர-அதிகரிக்க, வாய்புலரா-வாயுலர்ந்து, செய்ய சிவந்த, கமலமலரில்-தாமரைப்புஷ்பத்தி லிருக்கின்ற, திருவனையாள்-இலக்குமியையொத்த தமயந்தியானவள், கையறவா-செயலற்று, நெஞ்சங்கலுழா-மனங்கலங்கி, உயிர்சோர்ந்தாள்-மூர்ச்சித்தாள் எ-று.

(க-து.) தமயந்தி மூர்ச்சை யடைந்தாள் எ-ம். 20

இவ்வாறு துன்பக்கடலினிடைமூழ்கும்
மைவார்தடங்கண்மடமாதின்செவ்விமுகஞ்
செவ்வான்மதியமெனச்செங்கட்டுளையெயிற்று
வெவ்வாயரவமுருத்துவிழுங்கியதே.

[இதனால் தமயந்தி அரவின்வாய்ப்படல் சொல்லப்படுகின்றன.]

(இ-ள்.) இவ்வாறு-இந்தவிதமாய், துன்பக்கடலினிடை-துன்பக்கடலில், மூழ்கும்-அழுந்திய, மை-அஞ்சனமெழுதிய, வார்-நெடிய, தடம்-விசாலமாகிய, கண்-நேத்திரங்களையும், மடம்-அறியாமையையுமுடைய, மாதின்-தமயந்தியினது, செவ்வி-அழகுபொருந்திய, முகம்-வதனத்தை, செவ்-செவ்வையாகிய, வால்-வெளுத்த, மதியமென-சந்திரனென்று (எண்ணி) செங்கண்-சிவந்தகண்களையும், துளையெயிற்று-துவாரம்பொருந்திய பற்களையுடைய, வெவ்வாய்-வெவ்விய வாயையுமுடைய, அரவம்-மலைப்பாம்பு, உருத்து-கோபித்து, விழுங்கியது-விழுங்கிற்று எ-று. ஏ-அசை.

ஈண்டு மதிக்குச்செவ்வை நிறைவெனக்கொள்க.

(க-து.) தமயந்தியை மலைப்பாம்பு விழுங்கியது எ-ம். 21

நெய்த்தோரின்மூழ்கிநிணம்பருகும்வைவேலோய்
பைத்தோர்கொடுந்தறுகட்பாந்தள்விழுங்கியதா
லெய்த்தேனுயிர்காத்தற்கெய்தாயெனவழுதாண்
மைத்தோய்குவளைமதர்நெடுங்கண்வாணுதலே.

[இதனால் தமயந்தி தனக்குற்றவிடர் கூறி அரசனைக்கூவல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்) நெய்த்தோரில்-உதிரத்தில், மூழ்கி-குளித்து, நிணம்-மாமிசத்தை பருகும்-புசிக்கின்ற, வை-கூர்மைபொருந்திய, வேலோய்-வேலாயுதத்தையுடைய நளமகாராசனே, பைத்து-படத்தையுடையதாகிய, ஓர்-ஒரு, கொடுந்தறுகண்-கொடிய கோபத்தையுடைய, பாந்தள்-மலைப்பாம்பானது, விழுங்கியது-(என்னை) விழுங்கியது, எய்த்தேன் - இளைத்த என்னுடைய, உயிர்காத்தற்கு-உயிரைக்காப்பதற்கு, எய்தாய்-வாராயோ, என - என்று, மைத்தோய்-அஞ்சனந் தோய்ந்து, குவளை - கருநெய்தல்போன்று, மதர் நெடுங்கண்-குளிர்ச்சிபொருந்திய நெடியகண்களையுடைய, வாணுதல்-தமயந்தியானவள், அழுதாள்-புலம்பினாள் எ-று.

(கூ-து.) தமயந்தி நளனைக்குறித்துப் புலம்பினாள் எ-ம். 22

பொங்கழல்வெங்கானகத்துப்பூவையழுங்குரல்கேட்
டங்கோர்சிலைக்கையடல்வேடன்வந்தணுகி
வெங்கணரவெறிந்துவெவ்வாயிடைநின்றுங்
கொங்கவிழுமென்கூந்தற்கோதைதனைநீக்கினனால்

[இதனால் தமயந்தி அவ்வரவின் வாயினின்றும் விடுபட்டமை சொல்லப் படுகின்றது.]

(இ-ள்.) பொங்கழல்-மிகுந்தவக்கினியையுடைய, வெம் - வெப்பமாகிய, கானகத்து-காட்டினில், பூவை தமயந்தியானவள், அழும்-புலம்புகின்ற, குரல் கேட்டு-சத்தத்தைக்கேட்டு, அங்கு-அவ்விடத்தில், ஓர்-ஒரு, சிலைக்கை-வில்லைக் கையிலேந்திய, அடல்-பலம்பொருந்திய, வேடன்-வேடனானவன், வந்தணுகி-வந்துசேர்ந்து வெங்கண்-வெவ்வியகண்களையுடைய, அரவு-மலைப்பாம்பை, எறிந்து-பிளந்து, வெவ்வாயிடைநின்றும்-வெவ்வியவாயிலிருந்தும், கொங்கவிழ்-வாசனைவீசாநின்ற, மென்கூந்தல்-மென்மையாகியகூந்தலையுடைய, கோதைதனை-தமயந்தியை, நீக்கினன்- விடுத்தான் எ-று. ஆல்-அசை.

(கு-து.) வேடன் தமயந்தியைப் பாம்பின்வாயிலிருந்து விடுத்தான் எ-ம்.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

வெய்யவரவின்பகுவாயின்விடுத்தமடமானெழினோக்கி
மையல்கூர்ந்தநெஞ்சினனாய்வரிவிற்றடக்கைவயவேடன் [ன்
றொய்யின்முலைமேற்புல்லுதற்குத்தொடரத்துஞ்சாவருங்கற்பி
றையன்முனிந்துநோக்குதலுஞ்சாம்பராயிற்றவனுடலே.

[இதனால் தமயந்தியை விடுவித்தவேடன் செய்கையும் அதனாலவ்வேட னாண்மையுஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) வெய்ய-கொடிதாகிய, அரவின்-மலைப்பாம்பினது, பகுவாயின்-பிளப்பாகிய வாயினின்றும், விடுத்த-விடுக்கப்பட்ட. மடமான்-தமயந்தியினது, எழில்-அழகை, நோக்கி-பார்த்து, மையல்கூர்ந்த-மோகித்த; நெஞ்சினனாய்-மனமுள்ளவனாய்; வரிவில்-நீண்ட வில்லையேந்திய, தடக்கை - விசாலமாகிய, கையையுடைய, வயம்-வெற்றிபொருந்திய; வேடன்-வேடனானவன்; தொய்யில்-சந்தனக்கோலமணிந்த; முலைமேல்-ஸ்தனத்தின்மேல்; புல்லுதற்கு-அணைதற்கு; தொடர-பின்றொடர; துஞ்சா-கெடாத, அரும்-அருமையாகிய, கற்பின் கற்பினையுடைய, தையல்-தமயந்தியானவள். முனிந்து-கோபித்து, நோக்குதலும்-பார்த்தமாத்திரத்தில், அவனுடல்-அவ்வேடனுடலம். சாம்பராயிற்று-நீறாயிற்று எ-று. ஏ-அசை.

(கு-து.) வேடன் தமயந்தியைப் புணரத் தொடர்ந்த அளவில் தமயந்தி பார்க்க வேடன் எரிந்துபோனான் எ-ம். 24

கற்பினழலாற்கொடுஞ்சிலைக்கைவேடனுடலங்கரியாக்கிப்
பொற்பின்றுறைபோய்நலங்கனிந்தபொன்னம்பாவைபுலம்பெய்தி
வெற்பினுயர்தோள்வேந்துசெலும்வெங்கான்றுருவியேகுதலு
மற்பின்முனிவர்தவமியற்றுஞ்சாலைநோக்கியருகணைந்தாள்.

[இதுமுதல் மூன்றுபாட்டுகளால் தமயந்தி முனிவர்களாசிரமஞ்செல்லு தலும், அவர்களவளுக் காசீர்வதித்தலுஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கற்பினழலால் - பதிவிருத்தியாக்கினியால், கொடுஞ்சிலைக்கை, கொடியவில்லைக் கையிலேந்திய, வேடனுடலம்-வேடன் சரீரத்தை, கரியாக்கி-சாபராக்கி, பொற்பின்றுறைபோய்-அழகிற்சிறந்து, நலங்கனிந்த-நன்மை மிகுந்த, பொன்னம்பாவை-தமயந்தியானவள், புலம்பெய்தி-அழுதுகொண்டு, வெற்பின்-மலைபோல், உயர்-உயர்ந்த, தோள்-புயத்தையுடைய, வேந்து-நளமஹாராசன், செல்லும்-செல்லாநின்ற, வெங்கான்-வெவ்வியகாட்டினில், துருவி-தேடிக்கொண்டு, ஏகுதலும்-போகுமளவில், அற்பின்-அன்பினையுடைய, முனிவர்-முனிவர்கள், தவமியற்றும்-தவஞ்செய்யாநின்ற, சாலை-பர்ணசாலையை, நோக்கி-பார்த்து, அருகு-அதனருகில், அணைந்தாள்-சேர்ந்தாள் எ-று.

(க-து.) தமயந்தி முனிவர்கள் தவச்சாலையிற் சார்ந்தாள் எ-ம். 25

அடைந்தமாதின்முகநோக்கியாரைநீவெவ்வழற்கானி
னடந்துதனியேயித்தலையிற்போந்ததென்னைநளினமலர்த்
தடங்கண்கலுழ்ந்துபுலம்பெய்துந்தன்மையெவன்கொல்சாற்றுகென
மடந்தைபுகுந்தவாறனைத்துமுனிவர்கேட்பவகுத்துரைத்தாள்.

(இ-ள்.) அடைந்த-தம்மிடத்துவந்த, மாதின்-தமயந்தியினது, முகம்-வதனத்தை, நோக்கி-பார்த்து. யாரைநீ-நீயார், வெவ்வழல்-வெவ்விய அழல்பொருந்திய, கானில்-காட்டினில், நடந்து-காலால்நடந்து, தனியே-தனிமையாகி, இத்தலையில்-இவ்விடத்தில், போந்ததென்னை-வந்ததென்ன காரணம், நளின மலர்-தாமரைமலர்போன்ற, தடங்கண்-விசாலமாகியகண்கள், கலுழ்ந்து-கலங்கி, புலம்பெய்துந்தன்மை-துன்பப்படுதல், எவன்கொல்-என்னகாரணம், சாற்றுகென-சொல்லென்று, முனிவர்கேட்ப-முனிவர்கள்கேட்க மடந்தை-தமயந்தியானவள், புகுந்தவாறனைத்தும்-நடந்தவையெல்லாம், வகுத்து - பிரித்து, உரைத்தாள் (அவர்க்குச்) சொல்லினாள் எ-று.

(க-து.) முனிவர்கள் கேட்கத் தமயந்தி நடந்தவையெல்லாஞ் சொன்னாள் எ-ம். 26

கேட்டவளவிலுளமுருகிக்கிள்ளைமருட்டும்பனிமொழியா
வாட்டுமொழிதிறிற்பிரிந்தவடிவேலனையானைச்சின்றுனி

ஞுட்டங்களிப்பக்கண்டுமுன்போனலம்பெற்றிருத்தியெனநவிலா
வீட்டுந்தவத்தோர்மறைக்கிழவிருக்கைநோக்கியேகினரால்.

(இ-ள்.) கேட்டவளவில்-(இச்செய்தியைக்) கேள்வியுற்றமாத்திரத்தில், உளமுருகி-மனமுருகி, கிள்ளை-கிளிப்பிள்ளைகளை, மருட்டும்-வெருட்டாநின்ற, பனிமொழியாய்-குளிர்ந்த சொற்களையுடைய தமயந்தியே, வாட்டம்-சோர்வை, ஒழிதி-ஒழித்துவிட்டு, நிற்பிரிந்த-உன்னைப்பிரிந்த, வடிவேல்-கூர்மையுடைய வேலேந்திய, நளனை-நளமகாராசனை; சின்னாளில்-சிலநாளிலே, நாட்டங்களிப்ப-கண்களிப்ப, கண்டு-பார்த்து, முன்போல்-முன்னம்போல, நலம் பற்று நன்மையையடைந்து, இருத்தியென-இருப்பாயாகவென்று, நவிலா-ஆசீர்வதித்து, ஈட்டுந்தவத்தோர்-தவஞ்செயகின்ற, ஓர்-ஒப்பற்ற, மறைக்கிழவர்-அந்தணர்கள், இருக்கை நோக்கி-(தாங்க)ளிருக்கு மாசிரமத்தைக் குறித்து, ஏகினர்-சென்றார்கள் எ-று ஆல்-அசை.

(க-து.) முனிவர்கள் ஆசீர்வதித்துப் போனார்கள் எ-ம். 27

பிதிர்ந்தபசும்பொற்றிதலைமுலைப்பெய்பூங்கோதைபிணைபோல்வா
ளெதிர்ந்தவணிகர்வழித்துணையாவேகக்கதிர்மாமணிவரன்றி
யதிர்ந்துபுனல்பாய்பேராற்றங்கரையினுறையுமரையிருளின்
முதிர்ந்தசினத்துப்பிறைக்கோட்டுமூரிக்களிறென்றணுகியதால்.

[இதுமுதல் இரண்டுபாட்டுகளால் தமயந்திக்கு வழித்துணையாகவிருந்த வணிகருக்கு யானையாலுண்டான துன்பமும், அதுபற்றித் தான்படுந்துயருஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) பிதிர்ந்த-உதிர்ந்த, பசும்பொன்-பசியபொன்போன்ற: திதலை-தேமலையுடைய, முலை-ஸ்தனங்களையும், பெய்பூங்கோதை-மலர்மாலையணிந்த கூந்தலையுமுடைய, பிணைபோல்வாள்-மான்போன்றதமயந்தியானவள், எதிர்ந்த-எதிர்ப்பட்ட, வணிகர்-வர்த்தகர், வருத்துணையா-வழித்துணையாக, ஏகி-போய், கதிர்மாமணி-ஒளிபொருந்தியசிறந்தமணிகளை, வரன்றி-வாரிக்கொண்டு அதிர்ந்து-இரைந்து, புனல்-சலமானது, பாய்-பெருகாநின்ற, பேராற்றங்கரையில்-பெரியஆற்றங்கரையினிடத்தில், உறையும்-வாசஞ்செய்கின்ற; அரையிருளின்-அர்த்தராத்திரியில், முதிர்ந்த-மிகுந்த, சினத்து-கோபத்தையுடையதும், பிறைக்கோட்டு-பிறைபோன்றகொம்புகளையுடையதுமாகிய, மூரி-வலிமையுடைய, களிறென்று-ஒருயானையானது, அணுகியது-வந்துநெருங்கியது எ-று. ஆல்-அசை

(க-து.) தமயந்தியினிடத்து யானைவந்தது எ-ம். 28

அணுகியாங்குப்புலம்பெயுதுமலர்பூங்கோதைதம்மையொழிய
வணிகம்ர்ந்தளியாவரையுமதமால்யானைகொன்றேகத் [கை

துணைவந்தடைந்தோர்யாவரையுந்தொலைத்துநடந்தபருஉத்தடக்
பிணைவெண்கோட்டுக்களிறென்னை யென்கொல்லாததெனக்கலுழ்ந்
[தாள்

(இ-ள்) ஆங்கு - அவ்விடத்து. அணுகி - வந்தடைந்து. புலம்பெய்தும் புலம்பாநின்ற. அலர்பூங்கோதை - மலர்ந்தபூமாலையணிந்த அளகபாரத்தை யுடைய, மயில்-தமயந்தியானவள், ஒழிய-நீங்கலாக, வணிகமாக்களியாவரை யும்-வர்த்தகரனைவரையும், மதம் - மும்மதம்பொருந்திய, மால்யானை-பெரிய யானையானது, கொன்று - கொலைசெய்து, ஏக - போகாநிற்க, துணை-துணை யாக, வந்தடைந்தோர்-வந்தடையப்பட்ட, யாவரையும்-அனைவரையும், தொ லைத்து - கொன்று, நடந்த - சென்ற, பருஉத்தடக்கை - பருத்துநீண்டதுதிக் கையும், இணை-இரண்டாகிய, வெண்-வெளுமைபொருந்திய, கோட்டு-கொம்பு களையுமுடைய, களிறு-யானையானது, என்னை- (துன்பப்படுகின்ற) என்னை, என் - என்னகாரணத்தால், கொல்லாதது - கொல்லாமற்போயிற்று, என- என்று, கலுழ்ந்தாள்-புலம்பினாள், எ-று.

(க-து.) வியாபாரிகளைக் கொன்றயானை தன்னைக் கொல்லவில்லையென் றரற்றினாள் எ-ம். 29

சாதலொழிந்துவழிச்செல்வோர் துணையாவுள்ளந்தளர்வெய்திப்
பாதமலர்கொப்புளமெய்திப்பனிக்கப்பரல்வெங்கானிறந்து
கோதைவடிவேல்வலனேந்துகுவவுத்திணிதோட்சுவாகுவெனுஞ்
சேதிபதிதன்வளநகரிற்சென்றாள்விதர்ப்பன்சேயிழையே

[இதுமுதலிரண்டு பாட்டுகளால் தமயந்தி சேதிநகரஞ்சேர்தலும், அந்த நகரத்தரசன்றாயவளைக்கண்டையுறலுஞ் சொல்லப்படுகின்றன.]

(இ-ள்.) சாதலொழிந்த - இறக்காமல்சேடித்துநின்ற, வழிச்செல்வோர்- வழியிற்செல்லுகின்ற பிராமணர்கள், துணையா-சகாயமாகக்கொண்டு,உள்ளந்த ளர்வெய்தி-மனங்கலங்கி,பாதமலர்-மலர்போன்றபாதங்கள், கொப்புளமெய்தி கொப்புளித்து, பனிக்க-நீரொழுக, பரல்-பருக்கைகளையுடைய, வெங்கான்- வெவ்வியவனத்தை, இறந்து-விட்டுநீங்கி, கோதை-வெற்றிமாலையணிந்த, வடி வேல்-கூர்மைபொருந்திய வேலாயுதத்தை, வலன்-வலதுபுறத்தில், ஏந்து- தாங்காநின்ற, குவவு-திரட்சியையும், திணி-வலிமையையுமுடைய, தோள்- புயத்தையுடைய, சுவாகுவெனும்-சுவாகுவென்னும் பெயரையுடை, சேதிபதி தன்-சேதிதேயத்தரசனது, வளநகரில்-வளப்பம்பொருந்திய பட்டினத்தில், விதர்ப்பன் சேயிழை-தமயந்தியானவள், சென்றாள் சேர்ந்தனள், எ-று.

(க-து.) தமயந்தி சேதிபதி நகரத்தைச் சார்ந்தாள் எ-ம். 30

துணிபட்டொழிந்தமென்றுகிலுஞ்சுடர்விட்டொளிரமண்ணுத
மணியிற்றோன்றிமாசடைந்தவடிவும்விரிந்தவார்குழலும்

பிணியுற்றுழலுநெஞ்சமுமாய்ப்பித்தேறினர்போற்கோமறுகி
லணுகச்சேதிபதித்தாய்கண்டார்கொலிவளென்றையுற்றாள்.

(இ-ள்.) துணிபட்டொழிந்த-துண்டிடப்பட்ட, மென்றுகிலும்-மல்லிய ஆடையும், சுடர்விட்டொளிர-ஒளிவிட்டு விளங்கும்படி, மண்ணுத-கழுவாத, மணியில்-இரத்நம்போல, தோன்றி-காணப்பட்டு, மாசடைந்த-அழுக்கடைந்த, வடிவம்-உடம்பும், விரிந்த-அவிழ்ந்த, வார்குழலும் - நீண்டகூந்தலும், பிணியுற்று-துன்பப்பட்டு, உழலும் கலங்காநின்ற, நெஞ்சமும் - மனமும், ஆய்-(ஆகியஇவைகளையுடையவ)ளாய், பித்தேறினர்போல-பித்தர்போல், கோமறுகில்-இராசவீதியில், அணுக-(தமயந்தி) வர, சேதிபதி-வாகுராசனது, தாய்-தாயானவள், கண்டு - தமயந்தியைக் கண்டு, ஆர்கொலிவள் - இந்தப்பெண் யாரோ, என்று-என்று, ஐயுற்றாள்-சந்தேகித்தாள், எ-று.

(க-து.) சேதிபதிதாயார் தமயந்தியைக்கண்டு ஐயமுற்றாள் எ-ம் 31

பொன்னம்பாவையுடன்முழுதும்புகையுண்டென்னச்சவிமழுங்கு
மின்னுண்மருங்குற்சில்லோதியணங்கோவரசர்மடமகளோ
வென்னத்தெருளேனீங்கிவளையீண்டுக்கொணர்திரெனமருங்கின்
மன்னுமகளிர்தமைப்பணிப்பவிடைகொண்டருமருகணைந்தார்.

[இதுமுதல் மூன்றுபாட்டுகளால் அச்சேதிபதித்தாய் தன்தாதியராற் றமயந்திையை வரவழைத்து வினவுதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) பொன்னம்பாவை - பொற்பதுமையானது, உடன்முழுதும்-உடம்புமுழுமையும், புகையுண்டென்ன-புகையுண்டதுபோல, சவிமழுங்கும்-ஒளிமழுங்கிய, மின் மின்னலையொத்த, நுண்-நுட்பமாகிய, மருங்குல்-இடையையுடைய, சில்லோதி-இப்பெண், அணங்கோ-தெய்வப்பெண்ணோ, அரசர் மடமகளோ-இராசகுமாரத்தியோ, என்ன-என்று, தெருளேன்-தெளியேன், ஈங்கு-இவ்விடத்தில், இவளை - இப்பெண்ணை, ஈண்டு-சீக்கிரத்தில், கொணர்திர்-கொண்டுவாருங்கள், என-என்று, மருங்கின்மன்னும்-அருகிலுள்ள, மகளிர் தமை-ஸ்திரீகளை, பணிப்ப - (அவ்வரசனதுதாயானவள்) சொல்ல, விடைகொண்டு - உத்தரவுபெற்றுக்கொண்டு, அவரும்-அம்மாதர்களும், அருகு-தமயந்திசமீபத்திலே, அணைந்தார்-வந்தார்கள், எ-று.

(க-து.) சேதிபதிதாய் இவளையழையென்றுசொல்லப் பெண்களழைக்கபோனார்கள் எ-ம். 32

அடைந்தமாதர்தனிப்போந்தவணங்கின்கமலமுகநோக்கிக்
கடைந்தமணிச்செப்பெனப்புடைத்துக்கதித்துவீங்குவனமுலையாய்
படங்கொளரவின்முடிக்கிடந்தபார்தாங்கிறைவன்றனையீன்ற
மடந்தைவிருகென்றனளென்னவான்றேய்மாடத்தினிதடைந்தாள்.

(இ-ள்.) அடைந்தமாதர்-வந்தஸ்திரீகள், தனிப்போந்த - தனித்துவந்த, அணங்கின்-தமயந்தியினது, கமலமுகநோக்கி-தாமரைமலர்ப்போன்ற முகத்தைப்பார்த்து, கடைந்த-கடைதலிடப்பட்ட, மணிச்செப்பன-இரத்தினகும்பங்கள்போல, புடைத்து-அடிபரந்து, கதித்து-பருத்து, வீங்கும்-வளராநின்ற, வனமுலையாய்-அழகியஸ்தனங்களையுடைய பெண்ணே, படங்கொள்-படத்தைக்கொண்ட, அரவின்-ஆதிசேடனுடைய, முடி-முடியின்மேல், கிடந்த-இருந்த, பார்-பூமியை, தாங்கு-தரிக்காநின்ற, இறைவன்றனை-சுவாகுமாசனை, ஈன்ற-பெற்ற, மடந்தை-அவனது தாயானவள், வருதென்றனள்- (உன்னை) வரச்சொல்லினள், என்ன-என்றுசொல்லாநிற்க, வான்றோய்-ஆகாயமளாவிய, மாடத்து-உப்பரிகையில், இனிது-இன்பத்தோடு, அடைந்தாள் - தமயந்தியானவள்சேர்ந்தாள், எ-று.

(க-து.) பெண்கள் அழைக்கத் தமயந்தி வந்தாள் எ-ம். 33

வந்தமடமான்முகநோக்கிவரிவண்டூதப்பொதியவிழ்ந்த
வந்தண்கமலமலர்கவற்றியழகுவாய்ந்தமுகம்பசப்பச்
சிந்தைதளர்ந்துதனிப்போதற்குற்றதெவன்கொல்சேயிழையா
யுந்தையாருன்றலைவனெவனுன்பேர்யாதிங்குரையென்றாள்.

(இ-ள்) வந்த-தன்னிடத்துவந்த, மடமான்-தமயந்தியினது, முகநோக்கி-முகத்தைப்பார்த்து, சேயிழையாய்-பெண்ணே, வரிவண்டு-இசைப்பாட்டினையுடைய வண்டுகள், ஊத-ஒலிக்க, பொதியவிழ்ந்த-கட்டவிழ்ந்த, அந்தண்கமலமலர்-அழகிய குளிர்ந்த தாமரைமலர்களை, கவற்றி-கவலச் செய்து, அழகு வாய்ந்த-அழகுபொருந்திய, முகம்-வதனமானது, பசப்ப-பசலைநிறமடைய, சிந்தைதளர்ந்து-மனந்தளர்ந்து, தனிப்போதற்கு-தனித்து வருதற்கு, உற்றது-பொருந்தியது, எவன்-யாது, உந்தை-உன்றகப்பன், யார்-எவன், உன்றலைவன்-உன்கணவன், எவன்-யார், உன்பேர்-உனனுடைய நாமதேயம், யாது-எது, இங்கு-இவ்விடத்தில், உரையென்றாள் - (அரசன்றாய்) சொல்லென்றாள் எ-று.

(க-து.) சேதிபதி தாய் தனியே போவதென்ன. உன்தகப்பனார். உன் கணவனார். உனபேரென்ன சொல்லென்றாள் எ-ம். 34

வீமன்புதல்விபுகழ்நிடதவேந்தர்கோமான்மனைக்கிழத்தி
நாமம்பகரிற்றமயந்தியென்பாடன்கோனண்ணலற்குக்
காமர்நிதியும்வளநாடுஞ்சூதினிழந்துகானிடைப்போ
யாமந்தனின்மற்றவட்பிரியவவனைத்தேடியீண்டணைந்தேன்.

[இதுமுத லிரண்பொட்டுகளால் அவ்வினவுக்குத் தமயந்தி யுத்தரஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) வீமன்புதல்வி-வீமராசன் மகள், புகழ்-புகழப்பட்ட, நிடதர்வேந்தர்கோமான்-நளமகாராசனது மனைக்கிழத்தி-மனையாள், நாமம் பகரில்-பேர்

கூறுமிடத்தில், தமயந்தியென்பாள்-தமயந்தியென்று சொல்லப்படுவோள், தன்கோன்-அவளது கணவனுனவன், நண்ணலற்கு-பகைவனுக்கு, காமர்நிதியும்-விரும்பப்படுகின்ற தனங்களையும், வளநாடும்-செழித்தநாட்டையும், சூதில்-சூதினில், இழந்து-தோற்றுவிட்டு, கானிடைப்போய் - வனத்திற் சென்று, யாமந்தனில்-இராத்திரியில், அவட்பிரிய-அவளைப்பிரிய, அவளை - அத்தமயந்தியை, தேடி-தேடிக்கொண்டு, ஈண்டு-இந்நகரில், அணைந்தேன-வந்தேன் எ-று.

(க-து.) நளன் சூதிலேநாடிழந்து தமயந்தியைக் காட்டில்விட்டுப் பிரிய, அவளைத்தேடி நான்வந்தேன் என்றாள் எ-ம். 35

அனையமடமானுயிர்த்தோழியானென்றுரைப்பவகமிழ்ந்து
தனியளாகிக்கொடுங்கானிற்றலைவன்பிரியத்தளர்ந்தெங்கும்
கனைவண்டிமிருங்கருங்குழலைக்காணுமளவுமிந்நகரி
லினையல்வாழியிருத்தியெனவிசைந்தாங்கவளுமிருந்தனளால்

(இ-ள்.) அனையமடமான்-அத்தமயந்தியினுடைய, உயிர்த்தோழி-உயிரையொத்ததோழி, யான்-நான், என்றுரைப்ப-என்றுதமயந்திசொல்ல, அகமகிழ்ந்து-சந்தோஷித்து, கொடுங்கானில்-கொடியகாட்டினில், தலைவன்-கணவன், பிரிய-பிரிந்தேக, தனியளாகி-தனித்தவளாகி, தளர்ந்து-தளர்ச்சியடைந்து, எங்கும்-துன்பப்படாநின்ற, கனை-கனைக்கின்ற, வண்டு-வண்டுகள், இமிரும் சத்தியாநின்ற, கருங்குழலை-கரியகூந்தலையுடைய, தமயந்தியை காணுமளவும்-பார்க்குமளவும், இந்நகரில்-இந்நகரத்தில், இருத்தி-இருப்பாயாக, இனையல்-வருத்தப்படாதே, வாழி-வாழக் கடவை, என-என்று (அரசன் றாய்) சொல்ல இசைந்து-(அவள் சொல்லுக்) கிசைந்து, ஆங்கு-அந்நகரத்தில், அவளும்-அத், தமயந்தியும், இருந்தனள்-இருந்தாள் எ-று.

(க-து.) தமயந்திதோழி தானென்றுசொல்லச் சேதிபதித்தாய் அவளைக் காணுமளவு மிங்கிருவென விருந்தாள் எ-ம். 36

காதல்கூர்ந்துதன்மகளாஞ்சுனந்தைதக்கதிர்வாண்முகநோக்கி
மாதர்நோக்கிம்மடவரலைவருந்தாதளித்தியெனவோடு
மேதமின்றியவள்காப்பவிருந்தாண்மற்றிங்கிதுநிற்க
கோதைவடிவேனளற்குற்றசெய்தியினைத்துங்கூறுவாம்.

[இதனால் அங்ஙனந் தமயந்தியிருந்தவிதமுங் கவிக்கூற்றுஞ் சொல்லப்படுகின்றன.]

(இ-ள்.) காதல்கூர்ந்து-அன்புசெய்து, தன்மகளாஞ்சுனந்தை - தன்னுடையமகளாகியசுனந்தையினது, கதிர்வாள்-மிகுந்த ஒளிபொருந்திய, முகம்-முகத்தைத், நோக்கி-பார்த்து, மாதர்நோக்கு-அழகிய பார்வையை டைய, இம்மடவரலை-இப்பெண்ணை, வருந்தாது-துன்பப்படாமலிருக்கும்படி, அளித்தி-காப்பாய், எனவொடும்-என்று (அரசன்றாய்) சொல்லியு வளவில், ஏதமின்றி-

பழுதினறு, அவள்-அச்சுனந்தையானவள், காப்ப-இரக்ஷிக்க, இருந்தாள்-(தமயந்தி) இருந்தனள், இங்கு-இவ்விடத்தில், இது-இதுசெய்தி, நிற்க-இருக்க-கோதைவடிவேல்-வெற்றிமாலையணிந்த கூரியவேலையேந்திய, நளற்கு-நளமகாராசனுக்கு, உற்ற-பொருந்திய, செய்தியனைத்தும் - செய்கையனைத்தையும், கூறுவாம்-சொல்லுவாம் எ-று. மற்று-அசை.

(க-து.) நூலாசிரியர் தமயந்தி இவ்வாறிருக்க நளன் செய்தியைச் சொல்லுவோமென்றார் எ-ம். 37

பிரிவுறுபடலம் முற்றிற்று.

---

# வேற்றுருவமைந்த படலம்.



இப்படலத்தால் நளமகாராசனுக்கு நாட்டிற்செல்லினும் பிறரறியாதிருக்கும்படி வேற்றுருவமைந்தமை சொல்லப்படுகின்றது.

கலி நிலைத் துறை

கள்ளுயிர்க்குமென்மலர்க்குழற்காமர்பூங்கொடியை
நள்ளிருட்பொழுதகன்றனனண்ணருங்கானிற்
றள்ளுதற்கருந்துயரொடுபோதலுந்தழலு
மொள்ளழற்புகைக்கொழுந்தெழக்கண்டனனுரவோன்.

[இதனால் தமயந்தியை விடுத்துத் தனியேசெல்லும்வழியில் அரசனுங் கண்டமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) உரவோன்-நளமகாராசன், கள்ளுயிர்க்கும்-தேனைத் தருகின்ற, மென்மலர்-மெல்லிய மலர்களையணிந்த, குழல்-கூந்தலையுடைய, காமர்-அழகு பொருந்திய, பூங்கொடியை-தமயந்தியை, நண்ணரும்-அடைதற்கரிய, கானில்-வனத்தில், நளளிருட்பொழுது-நடுராத்திரியில், அகன்றனன்-விட்டுப் பிரிந்தவனாய், தள்ளுதற்கரும்-ஒழித்தற்கரிய, துயரொடும்-துன்பத்துடனே, போதலும்-செல்லுமளவில், தழலும்-தகிக்காநின்ற, ஒள்ளழல்-ஒளிபொருந்திய, தீயினது, புகைக்கொழுந்து-தூமக்கொழுந்து, எழ - எழும்பாநிற்க, கண்டனன்-அதைப் பார்த்தான் எ-று.

(க-து.) நளன் அக்கினி வளர்ந்தெழக் கண்டான எ-ம.

செஞ்சுடர்ச்சிகைநவளைதலிற்றெருமரலெய்தி
நஞ்சுயிர்க்கும்வாளரவொன்றுநாமவேலிறைவ
தஞ்சநீயெனையளித்தியென்றுரைத்தலுந்தாழா
தஞ்சலஞ்சலென்றடைந்தனன்மடங்கலேறனையான்.

[இதனால் அழற்சுவாலையாற் கலங்கிக் கூவிய கார்க்கோடகனை அரசன் ஆதரங்கூறி யடைதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) செஞ்சுடர்ச்சிகை-அக்கினிச்சுவாலையானது, வளைதலின்-சுற்றிக் கொண்டமையால், தெருமரலெய்தி-மனங்கலங்கி, நஞ்சுயிர்க்கும்-விஷத்தைத் தருகின்ற, வாளரவொன்று-ஒளிபொருந்திய ஒரு கார்க்கோடகனென்னு நாக மானது, நாமவேல்-அச்சத்தைத்தருகின்ற வேலையேந்திய, இறைவ-நளமஹா ராசனே, நீ-நீயே, தஞ்சம்-இரக்ஷகன், எனை-என்னை, அளித்தி-காக்கவேண் டும், என்றுரைத்தலும்-என்றுசொல்லிய வளவில், தாழாது-தயங்காது, அஞ்ச லஞ்சல்-பயப்படாதே பயப்படாதே, எனறறைந்தனன்-என்றுசொல்லியவ வனாய், மடங்கலேறனையான்-நளமஹாராசன், அடைந்தனன்-அருகிலடைந் தான் எ-று.

(க-து.) பாம்பு தன்னைக் காப்பாற்றென்ன நளன் பயப்படாதேயென் றான் எ-ம். 2

கனைசெழுஞ்சுடர்க்கொழுங்கனல்படர்தலிற்கரிந்து
பனைமறிந்தெனக்கிடந்ததோர்பாந்தளைநோக்க
வனைபொலன்கழற்குரிசிலோர்மறையவன்முனிவா
னினைவினுந்தனிப்பெயர்ந்திடுநிலைமையொன்றிலனால்.

[இதனால் அக்கார்க்கோடகன் தனக்குற்ற குறை யிதுவென அரசனுக் கறிவித்தல்சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கனை-சத்தியாநின்ற, செழுஞ்சுடர்-செழித்தசுவாலைகளையுடைய, கொழுங்கனல்-மிகுந்த காட்டுத்தீயானது, படர்தலில்-சுற்றிக்கொள்வதினால், கரிந்து-கருகி, பனை-பனைமரமானது, மறிந்தெனை-விழுந்து கிடந்ததுபோல, கிடந்தது-கிடந்ததாகிய, ஓர்பாந்தளை-(கார்க்கோடகனென்னும்)ஒருபாம்பினை, நோக்க-(நளமகாராசன்) பார்க்க, வனைபொலன்கழல்-கட்டப்பட்ட பொன் னாற்செய்த வீரக்கழலையணிந்த, குரிசில்-நளமகாராசனே, ஓர்மறையவன்-அநா கஸனென்னும் ஒருபிரம இருஷியின்து, முனிவால்-சாபத்தினால், நினைவினும் நினைப்பினும், தனி-தனியாக, பெயர்ந்திடுநிலைமை-நடக்கலாம் என்னும் நிச் சயத்தை, ஒன்றிலன்-அடைந்திலேன், எ-று. ஆல்-அசை.

(க-து.) பாம்பானது நளனே-அநாகஸரிஷி சாபத்தால்நடையேற்றிலே னென்றது எ-ம். 3

அழலினின்றெடுத்தையிரண்டடிப்புறத்தகற்றின்
முழுவலன்பொடுநன்கிழைக்குவலெனமொழிந்து
தழற்கட்பாம்புடல்சுருக்கலுந்தழலருள்வரத்தா
லெழுவினீள்கரத்தாலெடுத்தழற்புறத்திட்டான்.

[இதனால் அக்கார்க்கோடகனை அரசன்காத்தமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) அழலினின்றெடுத்து-அக்கினியினின்றெடுத்து, ஐயிரண்டடிப்புறத்து-பத்தடிக்குப்புறத்தில், அகற்றில் - நீக்கிவிடுவையானால், முழுவலன்பொடு-நிறைந்த வலிய அன்புடனே, நன்கிழைக்குவல்-உனக்குநன்மையைச் செய்வேன், எனமொழிந்து - என்றுசொல்லி, தழற்கண்-அக்கினிபொருந்திய கண்களையுடைய, பாம்பு-கார்க்கோடக நாகமானது, உடல்சுருக்கலும்-உடம்பைச் சுருக்கிக்கொண்டவளவில், (நளமகாராசனானவன்) தழலருள் வரத்தால்-அக்கினிதேவன் கொடுத்த வரத்தினால், எழுவில்-தூண்போன்ற, நீள்கரத்தால் நீண்டகரத்தினால், எடுத்து-எடுத்து, அழற்புறத்து-தீயினுக்கு வெளியில், இட்டான்-விடுத்தான் எ-று.

(க-து.) நளன் பாம்பையெடுத்துத் தீக்கப்புறம் விடுத்தான் எ-ம். 4

கதழெரிக்கணின்றகற்றலுங்கதிரொளிவிரிக்கு
மதிர்பொலன்கழலரசர்கோன்மெய்யுறத்தீண்டி
முதிர்சினத்தவாளரவுதன்முன்னுருவெடுப்ப
விதுகுலத்துயர்வேந்தனும்வேற்றுருவமைந்தான்.

(இ-ள்.) கதழெரிக்கணின்று-சொலிக்கின்ற தீயினின்றும், அகற்றலும்-நீக்கிவிட்டவளவில், கதிரொளிவிரிக்கும்-கிரணவொளி வீசாநின்ற, அதிர்-சத்திக்கின்ற, பொலன்கழல்-பொன்னாற்செய்யப்பட்ட வீரக்கழலையணிந்த, அரசர்கோன்-நளமகாராசனது, மெய்-சரீரத்தில், உற-பொருந்தும்படி, தீண்டி-கடித்து, முதிர்சினத்த-மிகுந்த கோபத்தையுடைய, வாளரவு-ஒளிபொருந்திய காக்கோடக் நாகமானது, தன்-தன்னுடைய, முன்னுரு-பழைய வுருவத்தை, எடுப்ப-எடுக்க, விதுகுலத்து-சந்திரவமிசத்தில், உயர்-உயர்ந்த, வேந்தனும்-நளமகாராசனும், வேற்றுரு வமைந்தான்-வேற்றுருவடைந்தான், எ-று.

(க-து.) பாம்புகடிக்க நளன் வேற்றுருவானான் எ-ம். 5

கருணைசெய்தெனைப்புரந்தனிற்கடித்ததுமுன்னை
யுருவுகண்ணுறிலொன்னலர்செகுப்பரென்பதனாற்
பொருவிலோயினிவாகுகனெனும்பெயர்புனையா
விருதுபன்னன்வாழயோத்திமாநகரினேகுதியால்.

[இதுமுதல் மூன்றுபாட்டுகளால் அரசனுக்குக் கார்க்கோடகன்சில ஆதரவான மொழிகளோடு உபகாரப்பொருளுந் தந்தேகல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கருணைசெய்து-கிருபைசெய்து, எனை-என்னை, புரந்த-இரக்ஷித்த நிற்கடித்தது-உன்னைக்கடித்தது, (ஏனெனில்) முன்னையுருவு-பழைய வுருவமானது, கண்ணுறில்-காணப்படுமானால், ஒன்னலர்-சத்துருக்கள், செருப்பர்-கொல்லுவார்கள், என்பதனால்-என்று நினைவினால், பொருவிலோய்-ஒப்பற்ற நளமகாராசனே, இனி-இனிமேல், வாகுவனெனும்-வாகுவன் என்று சொல்லப்பட்ட, பெயர்புனையா - பெயரைத் தரித்துக்கொண்டு, இருதுபன்னன் - இருதுபன்ன மகாராசன், வாழ்-அரசாட்சிசெய்யாநின்ற, அயோத்திமாநகரில் அயோத்தியெனப்பட்ட பெருமைபொருந்திய பட்டினத்தில், ஏகுதி-போவாயாக, எ-று. ஆல்-அசை.

(க-து.) பாம்பு நளனைஅயோத்தியில் இருதுபன்னனிடத்திற்போகும்படி சொல்லிற்று எ-ம். 6

ஏந்தலேகியம்மன்னவன்சூதனாயிணைந்து
கூந்தன்மாவுளந்தெரிதருவிஞ்சைநீகொடுப்பி
னாய்ந்தசூதுவெல்விஞ்சைநின்பாலவனளிக்குஞ்
சாந்தவெம்முலைத்தமயந்திதன்னொடுஞ்சார்வாய்.

(இ-ள்.) ஏந்தல்-நளமகாராசனே, ஏகி-அந்நகரத்திற்சென்று, அம்மன்னவன்-அந்த இருதுபன்னனுக்கு, சூதனா-தேர்ப்பாகனாக, இயைந்து-பொருந்தி கூந்தல்-புறமயிரினையுடைய, மா-குதிரைகளினது, உளம்-மனதை, தெரிதரும்-அறிகின்ற, விஞ்சை-வித்தையை, நீ கொடுப்பின்-நீ (அவ்வரசனுக்கு) உபதேசிப்பையானால், ஆய்ந்த-பரிசோதிக்கப்பட்ட, சூது-சூதினில், வெல்-வெற்றியைத்தராநின்ற, விஞ்சை-வித்தையை, நின்பால்-உன்னிடத்தில், அவன்-அவ்வரசன், அளிக்கும்-கொடுப்பான்; (அதன்பிறகு) சாந்தம்-சந்தனக்கோலமணிந்த மென்முலை-மிருதுவாகிய ஸ்தனங்களையுடைய, தமயந்திதன்னொடும்-தமயந்தியோடும், சார்வாய்-கூடுவாய், எ-று.

(க-து.) பாம்பு நளனே-குதிரைகளுள்ளமறியும் வித்தையை நீ இருதுபன்னனுக்குக் கொடுத்தால், அவன் சூதுவெல்வித்தையை உனக்குக் கொடுப்பான் என்றது எ-ம். 7

பின்னர்மன்னநின்பெருநிலக்கிழமையும்பெறுதி
முன்னைமாணுருவெளிதினிற்பெற்றிடமுன்னி
லின்னபூந்துகில்புனைதியென்றிருதுகிலளித்துத்
தன்னுருக்கொடுபோயதுதழல்விழிப்பாந்தள்.

(இ-ள்.) பின்னர்-பின்பு, மன்ன-நளமகாராசனே, நின்-உன்னுடைய, பெருநிலக்கிழமையும்-அரசாட்சியையும்; பெறுதி-அடைவாய்; முன்னை-முற்பட்ட; மாணுரு-மாட்சிமைபொருந்திய வுருவத்தை; எளிதினில்-வருத்தமின்றி பெற்றிட-முன்னில்-பெறநினைப்பையாகில், இன்னபூந்துகில் - இந்த அழகிய

வஸ்திரத்தை; புனைதியென்று-தரித்துக்கொள்ளென்று சொல்லி; இருதுகில்-இரண்டுவஸ்திரங்களை; அளித்து - கொடுத்து; தன்னுருக்கொடு - தன்பழைய வுருவத்தையெடுத்துக்கொண்டு; தழல்விழி - அக்கினிபொருந்திய கண்களையுடைய, பார்தள்-கார்க்கோடகநாகமானது; போயது-மறைந்துபோயது எ-று.

(க-து.) பாம்பு நளனே-உன்வடிவுகொள்ளவேண்டில் இந்த வஸ்திரத்தைத் தரியென்று இரண்டுவஸ்திரங் கொடுத்துப்போயிற்று எ-ம். 8

அதிர்பொலன்கழலரசர்கோனவ்வயினீங்கிப்
பிதிர்சுணங்கணிவெம்முலைப்பெய்வளைத்தடந்தோண்
மதர்வைநோக்கிதன்வாணகைபெனவுயிர்வருத்துங்
கதிர்செய்நித்திலம்வரன்றெறிதிரைக்கடல்கண்டான்.

[இதுமுதல் ஐந்துபாட்டுகளால் நளனுக்குக் கடற்காட்சியும்; அக்கடற் சார்பிலுள்ளபொருள்களாற் றானடைந்த தளர்ச்சியுஞ் சொல்லப்படுகின்றன.]

(இ-ள்.) அதிர்-சத்தியாநின்ற; பொலன்கழல்-பொன்னாற்செய்த வீரக்கழலையணிந்த; அரசர்கோன்-நளமகாராசனானவன்; அவ்வயினீங்கி-அவ்விடம் விட்டுப்புறப்பட்டு; பிதிர்-பிதிர்ந்த; சுணங்கணி-தேமலையணிந்த; வெம்முலை-விருப்பத்தைச் செய்கின்ற ஸ்தனங்களையும்; பெய்வளை - வலையலையணிந்த; தடந்தோள் -பருத்ததோள்களையுமுடைய, மதர்வை நோக்கிதன்-தமயந்தியினது, வாணகையென - ஒளிபொருந்திய தந்தங்கள்போல, உயிர்-உயிரை, வருத்தும்-வருத்துகின்ற, கதிர்செய்-ஒளிவிடுகின்ற, நித்திலம்-முத்துக்களை, வரன்றி-வாரிக்கொண்டு, எறி-வீசாநின்ற, திரை-அலைகள்பொருந்திய, கடல்-சமுத்திரத்தை, கண்டான்-(நளமகாராசன்) பார்த்தான், எ-று.

(க-து.) நளன் சமுத்திரத்தைக் கண்டான் எ-ம். 9

வஞ்சர்நெஞ்சினாழ்கழியிலோர்மடநடையன்ன
மஞ்சிறைப்புறத்தாருயிர்ப்பெடையினையணைத்துக்
கஞ்சநாண்மலர்ச்சேக்கையிற்கண்படனோக்கி
நெஞ்சமாழ்குறநெடிதுயிர்த்தயர்வொடுநின்றான்.

(இ-ள்.) வஞ்சர்-வஞ்சகரது, நெஞ்சின்-மனம்போல, ஆழ்-ஆழ்ந்த, கழியில்-கழிநிலத்தில், ஓர்மடவன்னம் - ஒருஇளவன்னமானது, அம்-அழகிய; சிறைப்புறத்து-சிறகின்புறத்தினால், ஆருயிர்-நிறைந்தவுயிரையொத்த; பேடையினை-பெட்டையன்னத்தை, அணைத்து-தழுவிக்கொண்டு, கஞ்சம்-தாமரையினது, நாண்மலர்-புதியமலராகிய, சேக்கையில்-படுக்கையில்; கண்படல்-நித்திரைசெய்வதை; நோக்கி-பார்த்து; நெஞ்சம்-மனமானது, மாழ்குற-வருத்தமடைய, நெடிதுயிர்த்து-பெருமூச்சுவிட்டு, அயர்வொடும்-சோர்வுடனே, நின்றான்-(நளமகாராசன்) நின்றனன் எ-று.

(க-து.) நளன் அன்னம்புணர்தலைக்கண்டு சோர்வுடனின்றான் எ-ம். 10

சுடர்செய்முத்தமுநேமியம்புள் ளுமென்றுகிரு
நெடிதுநோக்கிநந்நேரிழைமூரலுமுலையும்
வடிவமைந்தமென்விரலுமீங்கெய்தியவாற்றாற்
கடலில்வீழ்ந்துயிர்துறந்தனளெனமனங்கலுழ்ந்தான்.

(இ-ள்.) சுடர்செய்-ஒளிவிடுகின்ற, முத்தமும்-முத்துக்களையும், நேமியம் புள்ளும்-சக்கிரவாகப்பக்ஷிகளையும்; மென்-மிருதுவாகிய; துகிரும்-பவளங்களை யும், நெடிது-நெடுங்காலம், நோக்கி-பார்த்து, நம்-நம்முடைய, நேரிழை-தம யந்தியினது; மூரலும்-தந்தவரிசைகளும; முலையும்-ஸ்தனங்களும்; வடிவமை ந்த; அழகுபொருந்திய; மென்விரலும்-மெல்லியவிரல்களும்; ஈங்கு-இக்கழிநில த்தில்; எய்தியவாற்றால்-பொருந்தியபடியால்; கடலில்-சமுத்திரத்தில்; வீழ்ந்து (தமயந்தியானவள்) விழுந்து, உயிர்துறந்தனள் - இறந்தாள்; என-என்றெ ண்ணி, மனங்கலுழ்ந்தான-நளமகாராசனமனங்கலங்கினன் எ-று.

[அக்கடற் சார்ப்பாயுள்ள கழிநிலத்தில் காணப்பட்ட முத்து முதலிய உவ மானவஸ்துக்களை உவமேயமாக மயங்கினமையால், மயக்கவணியாம்.]

(க-து) நளன் தமயந்தி அவயவங்களுக்கு உவமானப்பொருள்களைக்கட லிற் கண்டான் எ-ம். 11

ஆவியன்னவோரணங்கினையரையிருணீத்த
பாவியேன்முகநோக்குறிற்பழிவருமென்றோ
மேவுசேக்கையிற்குருகிளம்பேட்டினம்வெருவிச்
சேவலோடகன்றேகுவதெனமனந்திகைத்தான்.

(இ-ள்.) ஆவியன்ன-உயிரையொத்த, ஓரணங்கினை-ஒப்பற்ற தமயந்தி யை, அரையிருள்-அர்த்தராத்திரியில், நீத்த-தனியாகவிடுத்த, பாவியேன்-பாவி யாகிய வென்னுடைய, முகம்-முகத்தை, நோக்குறில்-பார்த்தால், பழிவரும்- பாவம்வரும், என்றோ-என்றுநினைத்தோ, மேவு-பொருந்திய, சேக்கையில்-படு க்கையிலுள்ள, குருகு-பறவைகளினுடைய, இளம்-இளமையாகிய, பேட்டி னம்-பெட்டைகளினமானது, வெருவி-பயந்து, சேவலோடு - ஆண்பறவைக ளோடும், அகன்று-அவ்விடத்தை விட்டுநீங்கி, ஏகுவது-போவது, என-என்று, மனந்திகைத்தான்-மதிமயங்கினன் எ-று.

பறவைகள் இயல்பான் மனிதரைக்கண்டேகினும், அதற்குநளன்தன்குற் றத்தை ஏதுவாக்கினனென்க. [இது தற்குறிப்பணி.]

(க-து.) பறவைகள் நீங்குதலை நளன் கண்டு தன்குற்றத்தை யெண்ணி னன் எ-ம். 12

நவ்விநோக்கிதனதுமதிமுகமெனச்சிறந்த
தெய்வநாண்மலர்ப்போதவிழ்பூந்துகடியிர்ந்து

கவ்வைவெண்டிரைத்துளியெறிதென்றலங்கன்று
தைவருந்தொறுமெய்பதைத்தாருயிர்தளர்ந்தான்.

(இ-ள்.) நவ்வி-மான்போன்ற, நோக்கிதன்-கண்களையுடைய தமயந்தியினது, நகை-பிரகாசியாநின்ற, மதி-சந்திரனையொத்த, முகமென-முகம்போல், சிறந்த-சிறப்பையடைந்த, தெய்வம்-தெய்வத் தன்மையுள்ள, நரண்மலர்-புதிதாக-மலர்கின்ற, போது-பஷ்பத்தில், அவிழ்-விரிந்த, பூந்துகள்-மகரந்தப்பொடிகளை, திமிர்ந்து-பூசிக்கொண்டு, கவ்வை-ஒலிபொருந்திய, வெண்டிரை-வெளிர்த்த சமுத்திரவலைகளினுடைய, துளி-திவலைகளை, எறி-வீசுகின்ற, தென்றலங்கன்று-இளந்தென்றலானது, தைவருந்தொறும்-மேல்வீசுந்தோறும், மெய்-சரீரமானது, பதைத்து-துடித்து, ஆர்-நிறைந்த, உயிர்-உயிரானது, தளர்ந்தான்-தளரப்பெற்றான் எ-று.

(க-து.) நளன் தென்றல் வீசலால் தளர்ச்சியடைந்தான் எ-ம். 13

இன்னதன்மையன்வைகலீரைந்துபோயிறப்பக்
கன்னல்வேலியங்கழனியிற்களிச்சுரும்பரற்றும்
பொன்னந்தாமரைப்பொகுட்டின்மேன்மடப்பெடைபுல்லி
யன்னங்கண்படுவெள்ளநீரயோத்திநாடடைந்தான்.

[இதுமுதன் மூன்றுபாட்டுகளால் நளனயோத்தி யரசனாகிய இருதுபன்னனுக்குச் சாரதியானமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) இன்னதன்மையன்-இத்தன்மையனாகிய நளமகாராசன், வைகலீரைந்து-பத்துநாள், போயிறப்ப-நீங்கிப்போக, கன்னல்வேலி-கருப்பம் வேலியிடப்பட்ட, அங்கழனியில்-அழகியவயல்களில், களிச்சுரும்பு - களிப்பினையுடைய வண்டுகள், அரற்றும்-சத்தியாநின்ற, பொன்னம்-பொன்போலழகிய, தாமரைப் பொகுட்டின்மேல்-தாமரைப்பூங் கொட்டையில், மடப்பெடை-இளமைதங்கிய பெட்டையன்னங்களை, புல்லி-தழுவிக்கொண்டு, அன்னம்-அன்னப்பறவைகள், கண்படு - நித்திரைசெய்கின்ற, வெள்ளநீர்-மிகுந்த நீர்வளமுள்ள, அயோத்திநாடு-அயோத்திநகரத்தை, அடைந்தான்-சேர்ந்தான் எ-று.

(க-து.) நளன் அயோத்தியைச் சார்ந்தான் எ-ம். 14

இருதுபன்னனைக்காண்டலுமெத்தொழில்வல்லை
மருவுநாமமென்கூறெனவாகுவனென்பே
ருருவவாம்பரித்தேரினுதூர்குவனும்ப
ரருமருந்தெனவடுதொழில்புரிவனென்றறைந்தான்.

(இ-ள்) இருதுபன்னனை - இருதுபன்ன வரசனை, காண்டலும் - நளன் கண்டவளவில், எத்தொழில்-எச்செய்கையில், வல்லை - நீதிறமையுள்ளவன், மருவும் - பொருந்திய, நாமமென் - உன் பெயரியாது, கூறென சொல்லென்று இருதுபன்னன் கேட்க, வாகுவன்-வாகுவனென்பது, என்பேர்-

எனதுபெயராம், உருவ-நிறத்தையுடைய, வாம்-தாவாநின்ற பரி-குதிரை கட்டிய, தேர்-இரதத்தை, இனிது-நன்றாக, ஊர்குவன்-நடத்துவேன் - (அன்றியும்) உம்பர்-தேவர்களினது, அருமருந்தென-அரிய அமுதம் போல, அடுதொழில்-சமயலை, புரிவன்-செய்வேன், என்றறைந்தான்-என்று நளமகாராசன் சொன்னான் எ-று.

(க-து.) நளன் இருது பன்னனைக்கண்டு தன்னைச் சாரதியென்றான் எ-ம். 15

வேந்தனவ்வுரைகேட்டலும்வியன்மணிநெடுந்தேர்
கூந்தன்மாவுளமறிந்தனன்குறிப்பினூர்குதியே
லாய்ந்தசெம்பொனோராயிரம்வைகலுமளிப்ப
லேய்ந்தவென்னிருபாகரோடிருத்தியென்றிசைத்தான்.

(இ-ள்.) வேந்தன்-இருதுபன்னராசன், அவ்வுரை-அந்தநளன்சொல்லை, கேட்டலும்-கேட்டமாத்திரத்தில், வியன்-பருத்த, மணி-நவரத்தினங்கள் பதித்த, நெடும்-நீண்ட, தேர்-தேரிற்கட்டப்பட்ட, கூந்தல்-புறமயிரினையுடைய, மா-குதிரையினது, உளமறிந்தனன்-மனதையறிந்தவனாகி, குறிப்பின்-குறிப்பினால், ஊர்குதியேல்-நடத்துகிறவனானால், ஆய்ந்த-குற்றமற்ற, செம்பொனோராயிரம்-ஓராயிரம் பொன், வைகலும்-நாள்தோறும், அளிப்பல்-கொடுப்பேன், எந்தல்-வீரனே, என்-என்னுடைய, இருபாகரோடு-இரண்டு சாரதிகளோடுங்கூட, இருத்தி-இரு, என்றிசைத்தான்-என்றுசொன்னான் எ-று.

பொன்னென்பது இருபது சின்னப் பணத்தினுக்குத் தொகைப்பேர் இது சேரசோழ பாண்டியர் நாட்டு வழக்கு.

(க-து.) இருதுபன்னன் நளனை நாளொன்றுக்கு ஆயிரம்பொன் சம்பளத்தில் வைத்தான் எ-ம். 16

அன்னவாறுநேர்ந்தலங்குளைப்புரவிமான்றேர்க்கு
மன்னனாகியநிடதர்கோன்வைகலும்புலம்பித்
துன்னுகானிடைநீத்தவடுயரமீக்கூர
வென்னளாயினளோவெனவிரங்கிவெய்துயிர்ப்பான்.

[இதுமுதலிரண்டுபாட்டுகளால் அரசன் தமயந்தியைத்தனிப்படவிடுத்துவந்தமை நினைத்திரங்கலும், அதுகண்டு கேட்ட சாரதிவினவுக் குத்தரமுஞ் சொல்லப்படுகின்றன.

(இ-ள்.) அன்னவாறு-அப்படியே, நேர்ந்து-சம்மதித்து, அலங்கு-அசைகின்ற, உளை-புறமயிரினையுடைய, புரவிமான்-குதிரைகட்டிய, தேர்க்கு-இரதங்கட்கு, மன்னனாகிய-அதிபனாகிய, நிடதர்கோன்-நளமகாராசனானவன்-வைகலும்-நாள்தோறும், புலம்பி-மனமிரங்கி, துன்னுகானிடை-நெருங்கிய காட்டினில், நீத்தவள்-விடப்பட்ட தமயந்தியானவள், துயரம்-துன்பம், மீக்

கூடா-அதிகரிக்க, எனையனாயினரோ-எத்தன்மையனானேனோ, என-என்று, இரங்கி-புலம்பி, வெய்து-கொடியதாக, உயிர்ப்பான்-பெருமூச்சுவிடுவான் எ-று.

(க-து.) நளன் தமயந்தியை நினைத்து விசனப்படுவான் எ-ம். 17

உயிர்த்துமெய்தளர்ந்துருகியவேந்தனையுளத்தி
லயிர்த்தொர்சாரதியுற்றதையெவன்கொலென்றறைய
வெயிற்கொடுங்கதிர்மறைந்துழிவெவ்வழற்கானிற்
பயிற்பில்கோதையைத்தீர்ந்தனன்பரிவிலேனென்றான்.

(இ-ள்.) உயிர்த்து-பெருமூச்சுவிட்டு, மெய்தளர்ந்து-சரீரம்வாடி, உருகிய-மனமுருகிய, வேந்தனை-நளமகாராசனை, உளத்தில்-மனத்தில், அயிர்த்து-சந்தேகித்து, ஓர் சாரதி-சிவலனென்னுமொரு தேர்ப்பாகனானவன், உற்றதை-(நாள்தோறும்) அடைந்ததன்பத்தை, எவன்கொலென்றறைய-என்னவென்று கேட்க, வெயில் வெய்யிலைச்செய்கின்ற, கொடுங்கதிர்-சூரியன், மறைந்துழி-அஸ்தமித்தபின்பு, வெவ்வழல்-கொடிய அழல்பொருந்திய. கானில்-காட்டினில், பயிர்ப்பில்-பரிசுத்தமாகிய, கோதையை-பெண்ணை, பரிவிலன்-அன்பில்லாதவன், தீர்ந்தனன்-விடுத்தேன், என்றான்-என்றுநளன்சொன்னான் எ-று.

(க-து.) ஓர்சாரதி நளனை என்விசாரப்படுகிறாயென, நளன் தன்மனைவியைக் காட்டில்விட்டேனென்றான எ-ம். 18

வேற்றுருவமைந்தபடலம் முற்றிற்று.

---

# வீமன்தேடவிட்ட படலம்.



இப்படலத்தால் வீமராசன் தமயந்தி நளன் இருவரையும் தேடுதற்கு அதற்கு உரியோரை விடுத்தல் சொல்லப்படுகின்றது.

கலிநிலைத்துறை

இனையனாகியமன்னவனவ்வுழியிருப்ப
வினைகருங்கழல்விதர்ப்பர்கோன்மறையவர்க்கூடயென்
றனையைதன்னெடுநளனையுந்தேடிநீர்தந்தா
னினைவயாவையுந்தருகுவனெனவவர்நேர்ந்தார்.

[இதனால் வீமன் தன்து பௌத்திரர் வடிவினால் புத்திரிக்கு நளனுக்கு நேர்ந்த துன்பங்களையுணர்ந்து, அவர்களைத் தேடிக்கொண்டுவர ஒற்றரைவிட்டமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) இனையனுகிய-இத்தன்மையனுகிய, மன்னவன்-நளமகாராசன், அவ்வுழி-அவ்வயோத்தியில், இருப்ப-இருக்க, வனைகருங்கழல்-சிறந்த வீரக் கழலையணிந்த, விதர்ப்பர்கோன்-வீமராசன், மறையவர்-பிராமணர்களை-கூய்-அழைத்து, என்றனையைதன்னெடும்-எனது பெண்ணுகிய தமயந்தியோடும், நளனையும்-நளமகாராசனையும், தேடி-தேசங்களிற்றேடி, நீர்-நீவிர், தந்தால்-கொடுப்பீராயின், நினைவயாவையும்-நீர் நினைத்தவையனைத்தையும், தருகுவன்-கொடுப்பேன், என-என்று சொல்ல, அவர்-அம்மறையவர்கள், நேர்ந்தார்-(அதற்குச்) சம்மதித்தார்கள் .எ-று

(க-து.) வீமன் தன்மகளையும் மருமகனையுங் கண்டு பிடித்துக்கொடுத்தவர்களுக்கு நினைத்தயாவையுங் கொடுப்பேனென்முன் எ-ம். 1

தரங்கவாரிதிசூழ்தருதகைமைசாலுலக
மொருங்குதேடியுங்காண்கிலருலப்பிலார்திரிய
வரங்கொள்கேள்வியன்சுவேதனென்றுரைக்குமோர்மறையோன்
கருங்கட்பேதையைச்சேதிபன்மனைவயிற்கண்டான்.

[இதனல் அவ்வொற்றரில் சுவேதனென்பவனுக்குத் தமயந்திக்காட்சி சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) தரங்கவாரிதி-அலைகளையுடைய சமுத்திரமானது, சூழ்தரு-சூழ்ந்த, தகைமைசால்-மேன்மைபொருந்திய, உலகம்-பூவுலகம், ஒருங்கு-ஒருங்குபட, தேடியும்-தேடியும், காண்கிலார்-காணுதவராய், உலப்பிலர்-அளவற்றபேர்கள், திரிய-திரியாநிற்க, வரங்கொள்-வரத்தைக்கொண்ட, கேள்வியன்-(சாஸ்திரக்) கேள்வியையுடைய, சுவேதனென்றுரைக்கும் - சுவேதனென்று சொல்லப்பட்ட, ஓர்மறையோன்-ஒருபிராமணன், கருங்கட்பேதையை-கரிய கண்களையுடைய தமயந்தியை, சேதிபன்மனைவயின்-சேதிபதேயத்தரசனுகிய சுவாகுவின் வீட்டில், கண்டான்-பார்த்தான் எ-று.

(க-து.) சுவேதனென்னும் ஓர் பிராமணன் தமயந்தியைச் சேதிபதியரண்மனையிற் கண்டான் எ-ம். 2

மாசுபூத்தொளிமழுங்குபுமண்ணிருமணியிற்
றேசழிந்திடுதெரிவைதன்றிருமுகநோக்கி
யேசலில்லிவட்கோவிவையெய்துமற்றென்று
வாசில்கேள்வியோன்கலுழ்ந்தனன்றுயர்க்கடலாழ்ந்தான.

[இதனல் தமயந்தியைக்கண்ட அச்சுவேதன் துயர் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மாசுபூத்து-அழுக்கடைந்து, ஒளிமழுங்குபு-ஒளிமழுங்கி, மண்ணுருமணியில்-சாணையிடாதமணிபோல, தேசழிந்திடும்-அழகழிந்த, தெரிவைதன்-தமயந்தியினது, திருமுகம்-அழகிய முகத்தை, நோக்கி-பார்த்து, ஏசலில்-

பழிப்பில்லாத, இவட்கோ-இப்பெண்ணுக்கோ, இவையெய்தும்-இவ்வவத்தைகள் பொருந்தும், என்னு-என்று, ஆசில்-குறைவற்ற, கேள்வியோன்-கேள்வியையுடையசுவேதன், கலுழ்ந்தனன்-கலங்கினவனாகி, துயர்க்கடல்-துன்பக்கடலில், ஆழ்ந்தான்-மூழ்கினான், எ-று. மற்று. அசை.

(க-து.) சுவேதன் தமயந்தியைக்கண்டழுதான் எ-ம். 3

அழுவதென்கொலென்றாயிழைவினவநின்றாதை
முழுவலன்புடைத்தோழன்யான்மொய்த்தநின்றமருங்
குழுவுநின்னிருகுரவருந்தீங்கிலரென்னத்
தொழுதுமைக்கணீர்முலைத்தடம்பெருகமெய்சோர்ந்தாள்.

[இதனால் சுவேதனைக்கண்ட தமயந்தி துயர் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்) அழுவதென்கொல்-துன்பப்படுவது என்ன காரணம், என்று-என்றுசொல்லி, ஆயிழை-தமயந்தியானவள், வினவ-கேட்க, நின்றாதை-உன்றந்தைக்கு, முழுவலன்புடை-நிறைந்த அன்புடைய, தோழன் - தோழமையுள்ளவன், யான்-நான், மொய்த்த-நெருங்கிய, நின்-உன்னுடைய, தமர், உறவினரும், குழுவும்-கூட்டத்தவரும், நின்-உன்னுடைய, இருகுரவரும்-தாய்தகப்பன்மாரிருவரும், தீங்கிலர்-கேடிலராயுளர், என்ன-என்றுசொல்ல-தொழுது - (அவனைத்) தொழுது, மைக்கணீர்-மை பொருந்திய கண்ணீர், முலைத்தடம் முலையினிடத்தில், பெருக-ஒழுக, மெய்-உடம்பு, சோர்ந்தாள்-மெலிந்தாள் எ-று.

(க-து.) தமயந்தி சுவேதனை எனழுகிறாயென, சுவேதன் நான் உன்தகப்பனுடைய தோழனென்றான் தமயந்தியு மழுதாள் எ-ம். 4

கந்தவார்குழற்காரிகையழுதல்கேட்டிவட்குத்
தந்தையாரெவற்குரியளித்தனிரியறனித்து
வந்தவாறெவனிவளைநீயுணர்ந்ததெவ்வாறென்
றந்தணாளனைவினவினள்சவாகுவையளித்தாள்.

[இதனால் சேதுபதிதாய் சுவேதனைக்கேட்டல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கந்தம்-வாசனைபொருந்திய, வார்-நீண்ட. குழல்-கூந்தலையுடைய, காரிகை-தமயந்தியானவள், அழுதல்-துனபப்படுதலை, கேட்டு-(சுநந்தையால்) கேள்விப்பட்டு, (வந்து) இவட்கு-இந்தப்பெண்ணினுக்கு, தந்தையார்-தகப்பன்யார், இத்தனிரியல்-இப்பெண்ணானவள், எவற்குரியள்-எவனுக்கு மனையாள், தனித்துவந்தவாறு-தனித்துவந்தகிரமம், எவன்-யாது, இவளை-இப்பெண்ணை, நீயுணர்ந்தது-நீ-அறிந்தது, எவ்வாறென்று - எப்படியென்று, அந்தணாளனை-சுவேதனை, சுவாகுவையளித்தாள் - சேதிதேயந்திரசனைப்பெற்ற தாயானவள், வினவினள்-கேட்டாள் எ-று.

(க-து.) சேதிபதிதாய் தமயந்தி அழுதலைக்கேட்டு இவட்குத்தகப்பனார்: கணவனார்: நீ யெவ்வாறறிந்தாய்: என்று பிராமணனைக்கேட்டாள் எ-ம். 5

மாதுகேட்டியிம்மடவரல்விதர்ப்பர்கோன்புதல்வி
காதனாயகனிடதர்கோன்காசினிமுழுதுஞ்
சூதினாலிழந்திவளையுங்கானிடைத்துறந்தா
னாதலாலிவட்டேடெனவிதர்ப்பர்கோனறைந்தான்.

[இதனால் அக்கேள்விக்கவனுத்தரஞ் சொல்லப்படுகின்றது]

(இ-ள்.) மாது-அரசனாதாயே, கேட்டி-கேள், இம்மடவரல்-இப்பெண், விதர்ப்பர்கோன்-வீமராசனது, புதல்வி-குமாரத்தி காதல்-அன்பினையுடைய, நாயகன்-(இவட்குச்) கணவன், நிடதர்கோன்-நளமகாராசன், (அவன்) காசினிமுழுதும்-பூமிமுழுவதும், சூதினால்-சூதாட்டத்தால்,இழந்து-தோற்றுவிட்டு இவளையும்-இத்தமயந்தியையும், கானிடை-காட்டினில், துறந்தான் - விடுத்தான், ஆதலால்-ஆகையால், இவள்-இவளை, தேடென-தேடுவீரென்று, விதர்ப்பர்கோன்-வீமராசன், அறைந்தான்-உத்தரவுகொடுத்தான், எ-று.

(க-து.) பிராமணன் அரசியே-இப்பெண் வீமராசன்மகள், இவள் கணவன் நளன். அவன் சூதாட்டத்தால் நாடிழந்து மனைவியைக் காட்டில் விடுத்தான். இவளைத்தேடென் வீமனுத்தரவு கொடுத்தான் எ-ம். 6

தேண்டியெங்கணுங்கண்டிலன்றிருவைநின்மனையிற்
காண்டல்செய்தனன்கன்னலிற்பழுத்தமென்மொழியாண்
மாண்டபேரெழில்வாணுதல்வயங்கியமறுவா
லீண்டுணர்ந்தனன்யானெனமறையவனிசைத்தான்.

[இதனால் இவள் வீமன்புதல்வியென் றெவ்வாறறிந்தனையென்றற்கிதனுலெனல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) எங்கணும்-எவ்விடத்திலும், தேண்டி-தேடி, திருவை-லக்ஷ்மியையொத்த தமயந்தியை, கண்டிலன்-காணாதவனாய், நின்மனையில்-உன்மாளிகையில், காண்டல்செய்தனன்-கண்டேன், கன்னலில்-கரும்பினும், பழுத்த-முதிர்ந்த, மென்மொழியாள்-இனியவசனத்தையுடைய இத்தமயந்தியினது, மாண்ட-மாட்சிமைப்பட்ட, பேரெழில்-மிகுந்த அழகுதங்கிய, வாணுதல்-ஒளிபொருந்திய நெற்றியில், வயங்கிய-விளங்கிய, மறுவால்-மச்சையினால்; ஈண்டு-இவ்விடத்தில், யான்-நான், உணர்ந்தனன்-(இன்னவளென்று) அறிந்தேன், என-என்று, மறையவன்-சுவேதனானவன், இசைத்தான்-சொன்னான், எ-று.

(க-து.) சுவேதன் தமயந்தியை நெற்றிமச்சையினாலறிந்தே னென்றான் எ-ம். 7

அதுகிளத்தலுங்கேணிந்தன்மாசினையகற்றக்
கதிரெறித்தலிற்கண்வழுக்குற்றனகூச

மதிநுதற்புறத்திலங்கியமறுவினைநோக்கித்
ததைமலர்குழற்றமயந்தியிவளெனவுணர்ந்தாள்.

[இதனால் அதுகேட்ட அரசன்றாய் தானுங்கண்டு சந்தேகந் தீர்த்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) அது-அச்செய்தியை, கிளத்தலும்-சொன்னவளவில், அணிநுதல் அழகிய நெற்றியிலுள்ள, மாசினை-அழுக்கை, அகற்ற - போக்க, எதிரெறித்த வில்-ஒளிவிடுகின்றமையால், கண்-நேத்திரங்கள், வழுக்குற்றன-சிதறினவைக ளாகி, கூச-அஞ்ச, மதிநுதற்புறத்து-பிறைபோன்ற நெற்றியினிடத்து, இலங் கிய-பிரகாசித்த, மறுவினை-மறுவை, நோக்கி - பார்த்து, இவள்-இப்பெண், ததைமலர்க்குழல்-நெருங்கிமலர்களையணிந்த கூந்தலையுடைய, தமயந்தி-தம யந்தியே,எனா-என்று, உணர்ந்தாள்-(அரசனன்னை) அறிந்தாள், எ-று.

(க-து.) அரசன்தாய மறுவினாலே தமயந்தியென்றறிந்தாள் எ-ம். 8

வனைமலர்க்குழன் மங்கைநின்னன்னையும்யானும்
புனைகருங்கழற்சுதர்மன்றன்புதல்வியராவே
மெனலுமன்னைதனிணைமலர்ச்சீறடியிறைஞ்சிக்
கனைகருங்கடல்கரைபுரண்டாலெனக்கலுழ்ந்தாள்.

[இதனால் அரசன்றாய் தமயந்திக்குப் பெரியதாயென்பதை யறிவித்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்) வனைமலர்க்குழல்-பூமாலையணிந்த கூந்தலையுடைய, மங்கை-தம யந்தியே, நின்னன்னையும்-உனதுதாயும், யானும்-நானும், புனைதரிக்கப்பட்ட கரும்-பெருமைதங்கிய, கழல்-வீரக்கழலையணிந்த, சுதர்மன்றன்-சுதர்மராச னுடைய,புதல்வியராவேம்-புத்திரிகளாவோம், எனலும்-என்று (அரசனன்னை) சொன்னவளவில், அன்னைதன்-அப்பெரியதாயினது, இணை-இணைந்த, மலர்-தாமரைமலரையொத்த, சீறடி-சிற்றடிகளில், இறைஞ்சி-நமஸ்கரித்து, கனை-சத்தியாநின்ற, கருங்கடல்-கருத்தகடலானது, கரைபுரண்டாலென - கரை புரண்டாலதுபோல, கலுழ்ந்தாள்-(தமயந்தி) அழுதாள், எ-று.

(க-து.) சேதிபதிதாய் தமயந்தியே-உன்தாயும் நானும் சுதர்மன்புத்திரி கள் எனவும் தமயந்தி அழுதாள் எ-ம். 9

இன்னளென்றனையுணர்வதன்முன்னமுமீன்ற
வன்னையாமெனவளித்தனையன்புமீதூர
மன்னுமென்னுயிர்மக்களைக்காண்பதற்கெந்தை
பொன்னகர்க்கெனைவிடுத்தியென்றின்னுரைபகன்றாள்.

[இதனால் அதுகேட்ட தமயந்தி பலமுறையுயர்ந்து, அத்தாய்க்குத் தன் விழைவை யறிவித்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) எனை-என்னை, இன்னதென்று-இத்தன்மையளென்று, உணர்வதன்முன்னரும்-அறிவதற்குமுன்பும், ஈன்ற, பெற்ற, அன்னையாமெனா-தாயாவளென்னும்படி, அன்புமீதூர-ஆசைமிக, அளித்தனை-இரக்ஷித்தாய், மன்னும்-அவ்விடத்திற் பொருந்தியிருக்கின்ற, என்னுயிர்புக்களை-என்னுடையஉயிர்போன்ற பிள்ளைகளை, காப்பதற்கு-பார்ப்பதற்கு, எந்தை-என்பிதாவினது, பொன்னகர்க்கு-அழகியகுண்டினபுரத்துக்கு, எனைவிடுத்தி-என்னையனுப்பு, என்று, இன்னுரை-இனியசொற்களை, புகன்றாள்-(தமயந்தி) சொன்னாள் எ-று.

(க-து.) என்னை இன்னாளென்றறியு முன்னமே அன்னையைப்போலுங் காப்பாற்றினுய், எனமக்களைக்காணவேண்டும் என்பிதாவீட்டுக் கனுப்புஎன்றாள் எ-ம். 10

உரைசெய்மாற்றமோர்ந்துள்ளுயிருருகுறத்தழுவிக்
கரைசெய்வேலையிற்கருந்தடங்கண்கணீருகுப்ப
வெரிமணிப்பொலஞ்சிவிகையினிருள்கனிந்தொழுகும்
விரைசெய்கோதையைவிதர்ப்பர்கோனகர்வயின்விடுத்தாள்.

[இதனால் சேதிபதிதாய் அவளெண்ணப்படி விடுத்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) உரைசெய்மாற்றம்-(தமயந்தி) சொல்லியவசனத்தை, ஓர்ந்து-அறிந்து, உள்-உள்ளில், உயிர்-பிராணன், உருகுற-உருகும்படி, தழுவி-அணைத்துக்கொண்டு, கரைசெய்-கரையைச்செய்யாநின்ற, வேலையில்-சமுத்திரம்போல, கரும்-கறுத்த, தடம்-விசாலமாகிய, கண்கள்-நேத்திரங்கள், நீர்-நீரை, உகுப்ப-சொரிய, எரி-பிரகாசிக்கின்ற, மணி-இரத்நங்கள்பதித்த, பொலன்சிவிகையில்-பொற்பல்லக்கின்மீது, இருள்கனிந்து-இருள்முதிர்ந்து, ஒழுகும்-ஒழுகாநின்ற, விரைசெய்-வாசனைபொருந்திய, கோதையை-அளகபாரத்தையுடைய தமயந்தியை, விதர்ப்பர்கோன்-வீமராசனது, நகர்வயின்-குண்டினபுரத்தில், விடுத்தாள்-அனுப்பினாள் எ-று.

(க-து.) பெரியதாயானவள் தமயந்தியை முத்துச்சிவிகையிலேற்றிக்குண்டினபுரத்துக்கு அனுப்பினாள் எ-ம். 11

கொள்ளைவண்டினங்கூட்டுணுநறுமலர்க்கோதை
யள்ளலங்கருஞ்சேற்றிடையரக்கிதழ்விரிந்த
வள்ளவாய்ச்செழுங்கமலமேன்மடவனந்துயில்கூர்
வெள்ளநீர்வயல்விதர்ப்பர்கோனகரமேயினளால்.

[இதனால் தமயந்தி தந்தையூரடைதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கொள்ளை-மிகுந்த, வண்டினம்-வண்டுக்கூட்டங்கள், கூட்டுணும் (தேனைக்) கொள்ளையிடும்படியாகிய: நறுமல-வாசனைபொருந்திய மலர்களையணிந்த, கோதை-கூந்தலையுடைய தமயந்தியானவள், அள்ளல் - குழைந்த,

அம்-அழகிய, கரும்-கரிய, சேற்றிடை-சேற்றிலுண்டாகிய, அரக்கிதழ்-செவ்விதழ்கள், விரிந்த-மலர்ந்த, வள்ளவாய்-கிண்ணம்போன்ற வாயையுடைய, செழும்-செழித்த, கமலமேல்-தாமரை மலரின்மேல், மடவனம்-இளவன்னங்கள் துயில்கூர்-நித்திரை செய்கின்ற, வெள்ளநீர்-நீர்ப்பெருக்கை டைய, வயள்-கழனிகளையுடைய, விதர்ப்பர்கோன்-விதர்ப்பதேயத்தரசனாகிய வீமராசனது, நகரம்-குண்டினபுரத்தை, மேயினள்-அடைந்தாள் எ-று.

(க-து.) தமயந்தி குண்டினபுரத்தைச் சார்ந்தாள் எ-ம். 12

அழுதவுண்கணுமற்றமெல்லாடையுமலங்கற்
கழுமச்சூட்டுபுகைசெயாக்கருங்குழற்காடும்
விழியினோக்கலும்விதர்ப்பர்கோன்வெய்துயிர்த்தயர்ந்தான்
றழுவியன்னையருறுதுயர்சாற்றலாந்தகைத்தே.

இதனால் தமயந்தியைக்கண்ட தாய்தந்தையர் துக்கஞ் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) அழுத-அழுகையுற்ற, உண்கணும்-தமயந்தியினது மையுண்ட கண்களையும், அற்ற-அறுபட்ட, மெல்லாடையும்மென்மைபொருந்திய புடைவையையும், அலங்கல்-மலர்மாலைகளை, கழும்-நிறைந்த, சூட்டுபு-சூட்டி, கைசெயா-முடிக்காத, கருங்குழற்காடும் - கரியகூந்தற் காட்டையும், விதர்ப்பர்கோன்-வீமராசனானவன், வுழியினோக்கலும்-கண்களாற் கண்டமாத்திரத்தில், வெய்துயிர்த்து-பெருமூச்சுவிட்டு, அயர்ந்தான்-சோர்ந்தான், அன்னையர்-தாய்மார்கள், தழுவி-தமயந்தியைத் தழுவிக்கொண்டு, உறுதுயர்-அடைந்த துன்பமானது, சாற்றலாம்-நம்மாற் சொல்லும்படியான, தகைத்தே-தன்மையையுடையதா எ-று.

(க-து.) தமயந்தியை வீமராசன்கண்டு சோர்ந்தான். தாய்மார்கள் தழுவியழுதார்கள் எ-ம். 13

காட்டினள்ளிருட்காலையிற்காவலனீத்த
தீட்டொணாவெழிற்றெரிவையைத்தேடினன்கொணர்ந்த
மூட்டுமுத்தழன்முறைமையின்வளர்த்திடுசுவேதன்
வேட்டயாவையுங்கொள்கெனவளித்தனன்வீமன்.

[இதனால் வீமன் சுவேதனுக்குப் பரிசளித்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்) காட்டில்-வனத்தில், நள்ளிருட்காலையில்-நடுராத்திரிகாலத்தில், காவலன்-நளமகாராசன், நீத்த-விடுத்த, தீட்டொணா- எழுதக்கூடாத, எழில்-அழகுபொருந்திய, தெரிவையை-தமயந்தியை, தேடினன்-தேடி, கொணர்ந்த-கொண்டுவந்த, மூட்டு - மூட்டப்பட்ட, † முத்தழல்-மூன்றக்கினிகளை

† முத்தழலாவன, ஆஹவனீயம்-தக்ஷணாக்கினி-காருகபத்தியம் - என்பவையாம். இவற்றுள் ஆஹவனீயம்-வேதத்தை விளங்குதல், தக்ஷணாக்கினி-தேவர்கட்குத் தக்ஷிணைகொடுத்தல்,காருகபத்தியம்-பூலோகத்தை இரக்ஷித்தலாம்.

முறைமையில்-கிரமத்தினால், வளர்த்திடும்-வளர்க்காநின்ற, சுவேதன்-சுவேத னென்னும் மறையவன், வேட்ட - விரும்பிய யாவையும்-எல்லாவற்றையும், கொள்கென-பெற்றுக்கொள்ளென்று, வீமன்-வீமராசன்-அளித்தனன் கொடுத் தான் எ-று.

(க-து.) வீமராசன் சுவேதனுக்கு வேண்டியனகொடுத்தான் எ-ம். 14

மக்கள்வாண்முகநோக்கியமடவரனெஞ்ச
நெக்குவாடுதல்கண்டநற்றாயுளநெகிழ்ந்து
கக்குசெந்தழற்காலவேற்காதலற்குருகி
நக்கபூங்கழனளனையுநாடுகென்றுரைத்தாள்.

[இதனால் சாருகாசினி வீமனுக்குரைத்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மக்கள்-பிள்ளைகளினது, வாண்முகம்-ஒளிபொருந்திய முகத்தை, நோக்கிய-பார்த்த, மடவரல்-தமயந்தியினது, நெஞ்சம்-மனமானது, நெக்கு வாடுதல்-நெகிழ்ந்து வாடுதலை, கண்ட-பார்த்த, நற்றாய்-ஈன்றதாயானவள், உளநெகிழ்ந்து-மனமுருகி, கக்கு-கக்கப்பட்ட, செந்தழல்-சிவந்த அக்கினி பொருந்திய, கால-இயமனையொத்த, வேல்-வேலாயுதத்தை யேந்திய, காத லன்-தன்னுபகனாகிய வீமராசனை, குருகி-கிட்டிநின்று, நக்கபூங்கழல்-விள ங்குகின்ற அழகிய வீரக்கழலையணிந்த, நளனையும்-நளமகாராசனையும், நாடு கென்று-தேடுகவென்று, உரைத்தாள்-சொல்லினாள் எ-று.

(க-து.) சாருகாசினி நளனையும தேடும்படி வீமனுக்குச்சொன்னாள்எ-ம்.

ஓரிடக்கணாளுரைத்தலுமொற்றரைக்கூவி
யாடகப்பசும்பொலன்கழனளனைநீராய்ந்து
தேடிவம்மினென்றரசர்கோன்றிசைதொறுஞ்செலுத்த
நாடினாரவர்நளிகடல்வரைப்பெலாநடந்தே.

[இதனால் வீமனவ்வாறு நடத்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்) ஓரிடக்கணாள்-நீண்ட அரிபரந்த கண்களையுடைய காஞ்சன மாலையானவள், உரைத்தலும்-சொன்னமாத்திரத்தில், ஒற்றரை-வேவுகாரரை, கூவி-அழைத்து, ஆடகம்-பொன்னாகிய, பசும்-பசுமையாகிய, பொலன்-அழ கிய, கழல்-வீரக்கழலைபணிந்த, நளனை-நளமகாராசனை, நீர்-நீங்கள், ஆய்ந்து-ஆராய்ந்து, தேடி-திரிந்துபார்த்து, வம்மின்-வாருங்கள், என்று-என்றுசொல்லி அரசர்கோன்-வீமராசன், திசைதொறும்-எட்டுத்திக்கிலும், செலுத்த-அவர் களை அனுப்ப, அவர்-அவ்வேவுகாரர், நளி-குளிர்ச்சிபொருந்திய; கடல்வரைப் பெலாம்-சமுத்திரஞ் சூழ்ந்தபூமண்டலமுழுமையும், நடந்து-திரிந்து, தேடி னார்-தேடினார்கள், எ-று.

(க-து.) வீமராசன் நளனைத் தேடும்படி வேவுகாரர்களுக்குக் கட்டளை யிட்டான் எ-ம். 16

தருவுமொற்றரிலொருவன்மீண்ட ணங்கின்முன்றோன்றி
யரிவைமூதெயிலயோத்திமாநகரினிலடைந்தேன்
புரிகருங்குழன்மனைவியைப்போக்கினன்புலம்பு
மொருவனிவ்வுழியுண்டுகொலெனவினவினனால்.

[இதுமுதன் மூன்றுபாட்டுகளால் நளனைத்தேடிச்சென்ற ஒற்றரில் பருணதனென்பவன் தமயந்திக்கு நளனிருப்புகேட்டமை கூறல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) தருவும்-தேடுகிற, ஒற்றரில்-வேவுகாரருள், ஒருவன்-பருணதனென்னுமொரு வேவுகாரன், மீண்டு-திரும்பிவந்து, அணங்கின் முன-தமயந்தியின் முன்னிலையில், தோன்றி-நின்று, அரிவை - இராசகுமாரத்தியே, மூது-பழைய, எயில்-மதில்சூழ்ந்த, அயோத்திமாநகரில்-அயோத்தியாபுரியில், அடைந்தேன்-சென்றேன், புரி-விரும்பப்பட்ட, கருங்குழல்-கரிய கூந்தலையுடைய, மனைவியை-மனையாட்டியை, போக்கினன்-விடுத்தவனாகி, புலம்பும்-துன்பப்படுகின்ற, ஒருவன்-யாவனாயினுமொருவன்: இவ்வுழி - இந்தப்பட்டினத்தில், உண்டுகொல்-உளனோ, என-என்று, வினவினன் - விசாரித்தேன், எ-று. ஆல்-அசை.

இச்செய்யுண்முதல் மூன்றுங்குளகம்.

(க-து.) பருணதனென்னும் வேவுகாரன் தமயந்திமுன்வந்து அயோத்தியில் மனைவியை நீக்கினவனுண்டாவெனக்கேட்டேன் எ-ம். 17

ஓகையோடெனக்கொருவனாங்குளங்கனிந்துருகி
வாகைவெஞ்சிலையிருதுபன்னற்குயர்மான்றேர்ப்
பாகன்கொய்யுளைப்பரியுளந்தேர்பவனொருவன்
றோகையைப்பிரிந்தாரஞருழப்பவன்சோர்வான்.

(இ-ள்.) ஓகையோடு-அன்புடனே; எனக்கு-எனக்கு, ஒருவன்-ஒருமனிதன், ஆங்கு-அவ்வயோத்திநகரில், உளங்கனிந்து-மனங்கனிந்து, உருகி-கரைந்து, வாகை - வெற்றிமாலையணிந்த, வெஞ்சிலை-வெவ்விய வில்லையேந்திய, இருதுபன்னற்கு-இருதுபன்னவரசனுக்கு, உயர்மான்றேர்-உயர்ந்த குதிரை கட்டிய தேரை நடத்துகின்ற, பாகன்-சாரதியும், கொய்யுளை-கொய்துகட்டிய புறமயிரினையுடைய, பரி-குதிரைகளினது, உளம்-மனதை, தேர்பவன்-அறிபவனும், ஒருவன்-தனித்தவனும், தோகையை-மனையாளை, பிரிந்து - பிரிவுற்று, ஆரஞருழப்பவன்-மிகுந்த துன்பப்படுகின்றவனும், சோர்வான் - சோர்வையடைகின்றவனும் எ-று.

(க-து.) அங்கொருவன் இருதுபன்னனுக்குத் தேர்ப்பாகன் மனைவியைப்பிரிந்து சோர்பவன் எ-ம். 18

அழலிலாதுணவயிர்தெனவடுந்தொழிற்புரிவோன்
மழகளிற்றினன்னடையினன்வாகுவனென்பேர

னெழுவுலாந்திணிதோளினனீங்குளனென்ன
வொழுகுபூங்கொடிமருங்குலாயுணர்ந்தனன் வந்தேன்.

(இ-ள்.) அழலிலாது-நெருப்பில்லாமல், உணர்வு-உண்டியை, அமிர்தென அமுதமென்னும்படி, அடுந்தொழில்-சமைத்தலை, புரிவோன்-செய்வானும், மழ ளிற்றின்-இளமைதங்கிய யானைபோல, நன்னடையினன்-நல்ல நடையையுடையவனும், வாருவனென்போன்-வாருவனென்னும் பெயரையுடையவனும், எழுவுலாம்-தூண்போலுலாவுகிற, திணி-வலிமைபொருந்திய, தோளினன்-தோள்களையுடையவனு (மாகிய) ஒருவன், ஈங்கு-இந்நகரத்தில், உளன்-இருக்கின்றான், என்ன-என்றுசொல்ல, ஒழுகு-தேனொழுகுகின்ற, பூங்கொடி-புஷ்பக்கொடியையொத்த, மருங்குலாய்-இடையையுடைய தமயந்தியே, உணர்ந்தனன்-இச்செய்தியறிந்தவனாகி, வந்தேன்-இவ்விடம் வந்தேன் (என்றான்) எ-று.

(க-து.) அக்கினியில்லாது சமைப்பவன் இருக்கிறானென்று கேட்டுவந்தேன் என்றான் எ-ம். 19

வீமன்தேடவிட்ட படலம் முற்றிற்று.

—————

# கலி நீங்கு படலம்.



இப்படலத்தால் நளனிடத்தில் பொருந்தி வருத்தியிருந்த கலியன் நளன் அக்ஷவித்தை யறிந்தபின் அவனிடத்தில்நில்லாது விட்டுநீங்குதல் சொல்லப்படுகின்றது.

கலிநிலைத்துறை

என்றுகூறியவந்தணற்கிருநிதிவழங்கி
நன்றுநின்னுரையின்னமுமயோத்தியினண்ணி
மன்றன்மாலைவேலிருதுபன்னற்குளமகிழ்வ
தொன்றுகூறுவதுளதெனவுரைத்தனன்மெயினளால்.

[இதனால் நளனிருப்பை யறிவித்த பருணாதனென்னு மொற்றனுக்குத் தமயந்திகூறத் தொடங்கினளெனல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) என்றகூறிய-இப்படியென்று சொல்லிய, அந்தணற்கு-ஒற்றனாய்ச்சென்ற பருணாதனென்னும் பிராமணனுக்கு, இருநிதி-மிகுந்த நிதிகளை, வழங்கி-கொடுத்து, நின்னுரை-உன்சொற்கள், நன்று-நல்லது, இன்னமும்-மறுபடியும், அயோத்தியினண்ணி-அயோத்தி நகரத்திற்பொருந்தி, மன்றல்-

வாசனைபொருந்திய, மாலை-பூமாலையணிந்த, வேல்-வேலாயுதமேந்திய, இருது பன்னற்கு இருதுபன்னமகாராசனுக்கு, உளமகிழ்வது - மனங்களிப்பதாகிய, ஒன்றுகூறுவது-ஒன்றுசொல்லத்தக்கது, உளது-உண்டு, என-என்று, உரைத்தன்மேயினள்-சொல்லினாள், எ-று.

(க-து.) தமயந்தி பிராமணனுக்குப் பொருள் கொடுத்து, இருதுபன்ன னுக்குச் சொல்லவேண்டுவதொன்றுண்டென்றுசொல்லத்தொடங்கினாள் எ-ம்.

நாட்டமூன்றுடைநாயகன்வரத்தினானங்கை
மீட்டுங்கன்னிகையாயினள்சுயம்வரம்விழைந்தாள்
கேட்டுமாநிலக்கிழவருமவ்வுழியிறுத்தார்
பூட்டுவார்சிலைமன்னநீபோதியேற்போவாய்.

[இதுமுதல் விரண்டுபாட்டுகளால் தெய்வானுகூலத்தால் தமயந்திமீட்டுங் கன்னிகையாகி நாளை இரண்டாவது விவாக நடக்கப்படுமென்று இருதுபன்ன னுக்கறிவிக்கச் செய்தமை சொல்லப்படுகின்றது,]

(இ-ள்.) நாட்டமூன்றுடை-திரிநேத்திரங்களையுடைய, நாயகன்-பரமசிவனது, வரத்தினால்-அநுக்கிரகத்தினால், நங்கை-தமயந்தியானவள், மீட்டும்-மறுபடியும், கன்னிகையாயினள்-கன்னிகையாகி, சுயம்வரம்-சுயம்வரத்தை, விழைந்தாள் - விரும்பினாள், கேட்டு - அச்செய்திகேட்டு, மாநிலக்கிழவரும்- அரசர்களும். அவ்வுழி-அவ்விடத்தில், இறுத்தார்-வந்தடைந்தார்கள், பூட்டு-நாணேறிடப்பட்ட, வார்சிலை - நீண்டவில்லையேந்திய, மன்ன-இருதுபன்ன, வரசனே, நீ போதியேல்-நீ போவையானால், போவாய்-(விரைவிற்) போவாய் எ-று.

இதுமுதல விரண்டுசெய்யுளுங் குளகம்

(க-து.) இருதுபன்னனே-தமயந்தி இரண்டாவது. சுயம்வரத்தை யிச்சித்தாள் நீ போவையாகிற்போ எ-ம். 2

நாளைநன்மணம்புணர்வதுநிடதநாடளிக்குங்
காளையாருயிருளன்கொலோகழிந்தனன்கொல்லோ
வாளிமொய்ம்பினாயென்றுநீயறைகெனவறைந்தாள்
வாளைவென்றரிபரந்துமைதோய்ந்தகண்மடவாள்.

(இ-ள்.) நாளை-நாளைததினத்தில், நல்-நல்ல, மணம் - விவாகமானது புணர்வது-செய்யப்படுவதாம், நிடதநாடு-நிடததேயத்தை, அளிக்கும்-இரக்ஷிக்கின்ற, காளை-நளமகாராசனானவன், ஆர்-நிறைந்த, உயிர்-பிராணனானது, உளன்கொலோ-இருக்கப்பெற்றானோ, கழிந்தனன் கொல்லோ-நீங்கப்பெற்றானோ, ஆளி-சிங்கத்தையொத்த, மொய்ம்பினாய்-பலத்தையுடைய இருதுபன்னனே, என்று-என்றுசொல்லி, நீ யறைகென-நீ சொல்லென்று, வாளை-வாளாயுதத்தை, வென்று-சயித்து, அரிபரந்து-செவ்வரிபரந்து, மைதோய்ந்த-

அஞ்சனம்பொருந்திய, கண்-கண்களையுடையமடவாள் - தமயந்தியானவள், அறைந்தாள்-சொன்னாள் எ-று.

(க-து.) நளனை விவாகமெனச் சொல்லென்று சொன்னாள் எ-ம். 3

சுருதிநூற்றுறைபோயவன்றுணைவினிலெய்தி
யிருதுபன்னனையடைந்திவையாவையுமியம்ப
மருமலர்க்குழன்மன்றல்கேட்டலுமுளமகிழ்வுற்
றுருவவாம்பரித்தேர்விடுவாகுவற்குரைப்பான்.

[இதனால் பருணாதன் இருதுபன்னனுக் கறிவித்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்) சுருதிநூல்-வேதசாஸ்திரங்களினது, துறை-மார்க்கத்தில், போயவன்-சிறந்தவனாகிய வேதியன், துணைவினில்-சீக்கிரத்தில், எய்தி-(அயோத்தியை) அடைந்து, இருதுபன்னனை-இருதுபன்ன மகாராசனை, அடைந்து-நெருங்கி, இவையாவையும்-இவையனைத்தையும், இயம்ப-சொல்ல, மருமலர்-வாசனை பொருந்திய மலரையணிந்த, குழல்-கூந்தலையுடைய தமயந்தியினது, மன்றல்-விவாகவார்த்தையானது, கேட்டலும் - கேள்வியுற்றமாத்திரத்தில், உளம்-மனமானது, மகிழ்வுற்று-களிப்புற்று, உருவவாம்-நேராகத் தாவாநின்ற பரி-குதிரைகட்டிய, தேர்விடும்-தேரைச்செலுத்தாநின்ற, வாகுவதற்கு வாகுவன் என்னுஞ் சாரதிக்கு, உரைப்பான்-சொல்லுவான் எ-று.

(க-து.) இருதுபன்னன் தேர்ப்பாகனுக்குச் சொல்லுவான எ-ம். 4

தளருநுண்ணிடைத்தமயந்திசுயம்வரநாளை
யுளைவயப்பசும்புரவியினுள்ளமோர்தனையேற்
றெளியுங்கேள்வியாய்விரைவினிற்செலுத்துகதேரென்
றளிமுரன்றுபைந்தேனுகர்தாரினனறைந்தான்.

[இதனால் இருதுபன்னன் தேர்ப்பாகனாகிய நளனுக் காக்கியாபித்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) தளரும்-தளர்ச்சியடையாநின்ற, நுண்ணிடை-நுட்பமான இடையையுடைய, தமயந்தி-தமயந்தியினது, சுயம்வரம்-சுயம்வரமானது, நாளை-நாளையதினத்தில் (நடக்கின்றது) உளை-புறமயிரினையும், வயம்-வெற்றியையுமுடைய, பசும்-பசுமையாகிய, புரவியின்-குதிரையினது, உளம்-மனதை, ஓர்தனையேல்-அறிவாயானால், தெளியுங்கேள்வியாய்-தெளிவுபெறுங்கேள்வியையுடையவாகுவனே, விரைவினில்-சீக்கிரத்தில், தேர்-இரதத்தை, செலுத்துக-நடத்துக, என்று-என்றுசொல்லி, அளி-வண்டுகள், முரன்று-சத்தித்து, பைந்தேன்-புதியதேனை, நுகர்-உண்ணும்படியான, தாரினன்-மாலையணிந்த இருதுபன்னமஹாராசன், அறைந்தான்-சொன்னான் எ-று.

(க-து.) இருதுபன்னன் தேர்ப்பாகனே நாளைதமயந்திக்குச சுயமவரம் சீக்கிரந்தேரைச் செலுத்தென்றான் எ-ம். 5

கேட்டவாகுவன்கிளியெனமிழற்றுதீங்கிளவி
காட்டுணீத்ததுநினைத்தனளாயினுங்கற்பு
நாட்டுகின்றவளித்திறம்புரியுமோநம்மை
கூட்டுதற்கிஃதிழைத்தனளாமெனக்குறித்தான்.

[இதனால் பாகனாகிய நளன் அதுகாரணமறிதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கேட்ட-அச்சொல்லைக்கேட்ட, வாகுவன் - வாகுவனென்னும் பெயரினையுடையநளன்; கிளிபோல மிழற்று-சொல்லப்பட்ட, தீங்கிளவி-மதுரமானசொற்களையுடையதமயந்தியானவள், காட்டுள்-காட்டினுள், நீத்தது-விடுத்ததை, நினைத்தனளாயினும்-(விரோதமாக) நினைத்தாளானாலும், கற்பு-பதிவிருத்தியத்தை, நாட்டுகின்றவள்-நிலைநிறுத்துகின்ற அவள், இத்திறம்-இவ்வண்ணமாக, புரியுமோ-செய்வாளோ (செய்வாள் ஆயினும்) நம்மை-எம்மை, கூட்டுதற்கு-(தன்னுடன்) கூட்டுதற்கு, இஃதிழைத்தனளாம்-இதைச்செய்தவளாவாள் என-என்று, குறித்தான்-கருதினான் எ-று.

(க-து.) நளன் தன்னைவரவழைக்க இவ்வாறுசெய்தாளென்று நினைத்தான்-எ-ம். 6

நொறில்வயப்பரித்தேரபண்ணிநொய்தினிற்கொணரா
வெறுழ்வலித்தடந்தோளினாய்த்தேர்மிசையிவரி
னறுமலர்ப்பசும்பூந்தொடைவிதர்ப்பர்கோனாட்டி
னுறுவலிப்பகல்கழிவதன்முன்னெனவுரைத்தான்

[இதனால் நளன் தேரையலங்கரித்துக் கொண்டுவந்து இருதுபன்னனையழைத்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) நொறில் - வேகமும். வயம் - வெற்றியும்பொருந்திய, பரி - குதிரைகட்டிய, தேர் - இரதத்தை, பண்ணி - அலங்கரித்து, நொய்தினில் - சீக்கிரத்தில், கொணரா-(வாகுவன்) கொண்டுவந்து, எறுழ்வலி-மிகுந்த வலிமைபொருந்திய, தடந்தோளினாய்-பருத்த தோட்களையுடைய இருதுபன்னவரசனே, தேர்மிசை-தேரினில், இவரில்-ஏறிக்கொள்வையாகில், நறுமலர்-வாசனைபொருந்திய மலர்களெடுத்த, பசும்-குளிர்ந்த, பூந்தொடை - அழகிய மாலைகளையணிந்த, விதர்ப்பர்கோன்-வீமராசனது, நாட்டில்-தேயத்தில், இப்பகல்-இன்றையதினம், கழிவதன்முன்-நீங்குவதற்கு முன்னமே, உறுவல்-அடைவேன், என-என்று, உரைத்தான்-சொன்னான் எ-று.

(க-து.) தேர்ப்பாகனாகிய நளன் தேரைக்கொண்டுவந்து, அரசனே-நீரேறினால் பொழுதுபோமுன் விதர்ப்பதேயத்தில் கொண்டுபோய் விடுவேனென்றான் எ-ம். 7

என்றுகூறலுமிளங்கதிர்ப்பரிதிபோலிறைவன்
குன்றுபோலுயர்கொடிஞ்சியந்தேர்மிசைக்கொள்ள
நின்றயாவரும்வியப்புறநினைவருங்கடுப்பின்
மன்றலந்தொடைவாகுவன்வாம்பரிவிடுத்தான்.

[இதனால் இருதுபன்னன் தேரேற நளன் விடுத்தமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) என்றுகூறலும்-இப்படிச் சொன்னமாத்திரத்தில், இளங்கதிர்ப் பரிதிபோல்-பாலசூரியன்போல, இறைவன்-இருதுபன்னவரசன், குன்று போல்-மலைபோல, உயர்-உயர்ந்த, கொடிஞ்சி-மேற்பரப்பையுடைய, அந்தேர் மிசை-அழகிய தேரினில், கொள்ள-ஏறிக்கொள்ள, நின்றயாவரும்-பார்த்திருந்த அனைவரும், வியப்புற-ஆச்சரியபட, நினைவரும்-எண்ணுதற்கரிய, கடுப் பின்-வேகத்தினால், மன்றல்-வாசனைபொருந்திய, அந்தொடை-அழகிய மாலையணிந்த, வாகுவன்-வாகுவனானவன், வாம்பரி-தாவாநின்ற குதிரைகளை, விடுத் தான்-நடத்தினான் எ-று.

(க-து.) இருதுபன்னன் தேரிலேற நளனாகிய பாகன் தேரை விடுத் தான் எ-ம். 8

விடுத்தவாம்பரிவருந்தலுமெய்த்தவர்தனக்குக்
கொடுத்தவிஞ்சையைக்கொய்யுளைப்பரியொடுங்கூறக்
கடுப்பையாவருமுணர்ந்திலர்கால்விசைத்தோடி
யடுத்தவார்கழல்விதர்ப்பர்கோனணிகெழுநாட்டில்.

[இதனால் நளனுபதேசித்த மந்திரத்தால் அத்தேர்க் குதிரைகட்குண்டா கிய செயல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) விடுத்த-செலுத்தப்பட்ட, வாம்பரி-தாவாநின்ற குதிரைகள், வருந் தலும்-வருந்துமளவில், மெய்த்தவர்-முனிவர்கள், தனக்குக் கொடுத்த-தனக் குபதேசித்த, விஞ்சையை-மந்திரத்தை, கொய்-கொய்துகட்டிய, உளை-புறமயி ரினையுடைய, பரியொடும்-குதிரையோடு, கூற-உபதேசிக்க, கடுப்பை-(தங் கள்) வேகத்தை, யாவரும்-எவரும், உணர்ந்திலர்-அறிந்திலர், (ஆம்படி) கால் விசைத்து-கால்களைவீசி, ஓடி-சென்று, வார்கழல்-நீண்ட வீரக்கழலையணிந்த, விதர்ப்பர்கோன்-வீமராசனது, அணிகெழும்-அழகுபொருந்திய, நாட்டில்- தேயத்தில், அடுத்த-சேர்ந்தன எ-று.

(க-து.) குதிரைகள் விதர்ப்பதேயத்தைச் சார்ந்தன எ-ம். 9

கூந்தன்மாவுளமறிதலிற்சாலிகோத்திரனோ
வாய்ந்தகேள்வியின்மாதலியோவவன்றிகளனோ
மேந்தல்வேற்றுருவெடுத்தனனோவெனவெண்ணி
வேந்தர்வேந்தனுமணிமுடிதுளக்கினன்வியந்தான்.

[இதனால் இருதுபன்னனது கண்டு வியந்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கூந்தன்மா-புறமயிரையுடையகுதிரைகளினது, உளம்-மனதை, அறிதலில் - உணர்வதில், சாலிகோத்திரனோ - சாலிகோத்திரமுனிவனோ, (அன்றி) வாய்ந்தகேள்வியின்-பொருந்திய கேள்வியையுடைய, மாதலியோ-இந்திரசாரதியோ, அன்றி-அல்லவாகின்,நளனும்-நளமஹாராசனுகிய, ஏந்தல்-அரசன், வேற்றுருவெடுத்தனனோ - வேறுருவெடுத்து வந்தனனோ, என வெண்ணி-என்று சிந்தித்து, வேந்தர்வேந்தனும்-இருதுபன்னராசனும், மணிமுடி-நவரத்தினகிரீடந்தரித்த சிரத்தை, துளக்கினன்-அசைத்தவனாய், வியந்தான்-சந்தோஷித்தான் எ-று.

(க-து.) இருதுபன்னன் சாலிகோத்திரனோ நளனோ என்றெண்ணி யதிசயித்தான் எ-ம். 10

முத்தவெண்குடைவேந்தர்கோன்முழவுறழ்தடந்தோ
ளுத்தரீயமந்நெறியிடைவீழ்ந்துமுணர்ந்து
தத்துவாம்பரிநிறுவியத்துகிறருகென்னப்
பத்தியோசனை கடந்ததுதேரெனப்பகர்ந்தான்.

[இதனால் இருதுபன்னனுக்குத் தன்னுத்தரீயத்தினால் மற்றொருவியப்புண்டாதல்சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) முத்தவெண்குடை-முத்தினாற் செய்தவெள்ளைக்குடையைத் தரித்த, வேந்தர்கோன்-இருதுபன்னவரசனானவன், முழவுறழ் - மத்தளத்தையொத்த, தடந்தோள்-பருத்ததன் தோள்களினின்றும், உத்தரீயம்-அங்கவஸ்திரமானது, அந்நெறியிடை-அந்த மார்க்கத்தில், வீழ்தலும்-விழுந்த மாத்திரத்தில், உணர்ந்து-தெரிந்துகொண்டு, தத்துவாம்-தாவியோடுகின்ற, பரி-குதிரைகளை, நிறுவி-நிறுத்தி, அத்துகில்-அந்த அங்கவஸ்திரத்தை, தருகென்ன-தாவென்றுகேட்க, தேர்-இரதமானது, பத்தியோசனை-பத்தியோசனை தூரம், கடந்தது-கடந்துவந்தது, என-என்று, பகர்ந்தான் (வாகுவன்) சொன்னான் எ-று.

(க-து.) இருதுபன்னன் அங்கவஸ்திரம் விழுந்தது எடுவென, சாரதி பத்துயோசனை சென்றது என்றான் எ-ம். 11

இன்னவாய்மைகேட்டரசனும்வியப்புடனேகப்
பின்னுமையிருகாவதமகன்றதற்பின்னர்
முன்னர்த்தோன்றியதளியினம்பெடையொடுமூசப்
பொன்னந்தாதுகுபூந்துணர்ப்பொரியடைத்தான்றி.

[இதனால் தான்றிமரக்கட்சி சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) இன்னவாய்மை-இத்தன்மையானவனத்தை, கேட்டு-கேள்வியுற்று, அரசனும்-இருதுபன்னவரசனும், வியப்புடன்-ஆச்சரியத்துடனே,

எக-போக, பின்னும்-பின்பும், ஐயிருகாவதம்-பத்துகாவதவழி; அகன்றதற்பின னர் சென்றபின்பு, அளியினம்-வண்டுக்கூட்டங்கள், பெடையொடும்-பெட் டைவண்டுகளுடனே, மூச-மொய்க்க, பொன்னம்-பொன்போலழகிய, தாது-மகரந்தப்பொடிகள், உகும்-உதிரப்பெற்ற, பூந்துணர்-புஷ்பக்கொத்துக்களை யும், பொரியல்-பொருக்கெடுத்த அரையையுமுடைய, தான்றி-தான்றிமர மானது; முன்னர்-எதிரில், தோன்றியது-காணப்பட்டது எ-று.

(க-து.) தான்றிமரம் எதிரில் காணப்பட்டது எ-ம். 12

தான்றிமாமரந்தோன்றலுந்தேரினைத்தகைத்துத்
தோன்றுமிம்மரத்திலைகளுந்தொக்கமென்பழனு
மூன்றுகோடியேமுப்பபற்றிரண்டெனமொழிய
வான்றகேள்வியோனெண்ணியற்றுமெனவியந்தான்.

[இதனால் இருதுபன்னனத் தான்றிமரத்தில் தக்ஷவித்தையைக்காட்டிச் சாரதியைவியக்கச்செய்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) தான்றிமாமரம்-பெரியதான்றிமரமானது, தோன்றலும்காணப் பட்டவளவில், தேரினை-இரதத்தை, தகைத்து-(இருதுபன்னவரசன்)நிறுத்தி, தோன்றும்-காணப்படுகின்ற, இம்மரத்து-இந்தமரத்தில், இலைகளும்-இலைக ளும், தொக்கமென்பழனும்-நெருங்கியமென்மையானபழங்களும், மூன்றுகோ டியேமுப்பதிற்றிரண்டென, இரண்டுதலையிட்டமுப்பத்தை மேற்கொண்ட மூ ன்றுகோடியென, மொழிய-சொல்ல, ஆன்றகேள்வியோன் - நிறைந்தகல்வி யையுடையநளமகாராசன், எண்ணி - அம்மரத்தினிலைமுதலியவற்றைக்கணக் கிட்டு, அற்றும்-நீசொல்லுமத்தன்மைத்தாம், என-என்று,கூறிவியந்தான்-அக் கணக்கறிவினி) லாச்சரியப்பட்டான் எ-று.

(க-து.) இருதுபன்னன் தான்றிமரத்திலைகளுங்கனிகளும்மூன்றுகோடி முப்பத்திரண்டு எனச்சொல்ல, சாரதியெண்ணியதிசயித்தான் எ-ம். 13

இனையவிஞ்சைமற்றெனக்குநீயளித்தனையென்னிற்
றுனைவயப்பரியுளமுணர்விஞ்சையான்சொல்வன்
வினைபொலன்கழன்மணிமுடிமன்னவென்றுரைப்ப
வனையவிஞ்சையைவர்குவற்களித்தனனன்றே.

[இதனால் அச்சாரதியாகிய நளன் தனது அஸ்வவித்தையை இருதுபன னுக்குகொடுக்கவிசைந்து, அவனக்ஷவித்தையைத் தானேற்றல்சொல்லப் படுகின்றது.].

(இ-ள்.) இனையவிஞ்சை-இத்தன்மையாகிய வித்தையை எனக்கு-என்ற னுக்கு, நீயளித்தனையென்னில்-நீகொடுப்பாயானல், துனை-வேகம்பொருந்திய வயும் வெற்றியுடைய, பரி-குதிரைகளின், உளம்-மனதை, உணர்விஞ்சை அறியும்வித்தையை, வினை-தட்டப்பட்ட, பொலன்-கழல்-பொன்னாற்செய்த

வீரக்கழலைடம், மணிமுடி-நவரத்தினம்பதித்த கிரீடத்தையுந்தரித்த, மன்ன- இருதுபன்னவரசனே, யான்-நான், சொல்வன-(உனக்குச்) சொல்வேன, என்றுரைப்ப-என்றுவாகுவன்சொல்ல, அனையவிஞ்சை-அந்தவித்தையை-அந்தவித்தையை, வாகுவற்கு-வாகுவனுக்கு, அந்தனன்-(இருதுபன்னவரசன்) கொடுத்தான் எ-று.

அந்தவித்தையாவது-கணக்குவித்தை, அதுவே அக்ஷவித்தையாம்.

(க-து.) சாரதியிந்தவித்தையை எனக்குக்கொடும், குதிரைகளுளத்தையறியும்வித்தையை உமக்குக் கொடுப்பேனென்றான். இருதுபன்னன்சாரதிக்குக் கொடுத்தான் எ-ம். 14

இருதுபன்னனவ்விஞ்சையைவாகுவற்கிய
மருவிநின்றவன்கலிதணந்தேகிவாளரவி
னெரிசெய்வெவ்விடங்கான்றலினிதயநெக்குருகி
வெருவிவாய்விடாவிடத்தினையுமிழ்ந்தனனன்றே.

(இ-ள்.) இருதுபன்னன்-இருதுபன்னவரசன், அவ்விஞ்சையை-அக்கணக்குவித்தையை, வாகுவதற்கு-வாகுவனாகியநளனுக்கு, இயம்ப-கொடுக்க, மருவிநின்ற-(நளனை) மருவியிருந்த, வன்கலி-வலிமையுள்ளகலியனானவன் தணந்தேகி-(நளமகாராசனை) விட்டுநீங்கிப்போய், வாளரவு-ஒளிபொருந்திய கார்க்கோடக நாகமானது, எரிசெய்-தகிக்காநின்ற, வெவ்விடம்-கொடியவிடத்தை, கான்றலில்-(தானிருந்தநளனிடத்திற்)கக்கினமையால், இதயம்-மனமானது, நெக்குருகி-கரைத்துருகப்பெற்று, வெருவி-பயந்து, வாய்விடா - வாய்விட்டு, விடத்தினை-(கார்க்கோடகனது) விஷத்தை, உமிழ்ந்தனன்-கக்கினான் எ-று. அன்று-ஏ-அசைகள். இன்-சாரியை.

(க-து.) இருதுபன்னன் வித்தையை வாகுவனுக்குக்கொடுக்க, சனி நளனைவிட்டுநீங்கி விஷத்தைகக்கினான் எ-ம். 15

தணந்தவெந்திறற்கலியனைச்சபிக்குவனென்னாக்
கணங்கொள்வண்டிமிர்தாரினானுளத்திடைக்கருத
லுணர்ந்தவெங்கலிதமயந்தியுரைத்தசாபத்தா
லணங்கராவுமிழ்விடத்தினாலின்றளவாய்ந்தேன்

[இதுமுதலிரண்டுபாட்டுளால் நளனது கோபக்குறிபுணர்ந்தசனிஅரசனை வந்தித்து விடைகொண்டமை சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) தணந்த-தன்னைப்பிரிந்துநின்ற, வெந்திறல்-வெவ்வியபலத்தையுடைய, கலியனை-கலிபுருஷனை, சபிக்குவனென்-சபிப்பேனென்று, கணங்கொள்-கூட்டங்கொண்ட, வண்டு-வண்டுகள், இமிர்-சத்தியாநின்ற, தாரினான்-மாலையணிந்த, நளமகாராசன், உளத்திடை-மனத்தினில், கருதல்-நினைத்தலை,

உணர்ந்த-அறிந்த, வெங்கலி-கொடியகலியனைவன், தமயந்தியுரைத்த-தமயந்தியுரைத்த, சாபத்தால்-சாபத்தினால், அணங்கு-அச்சத்தைத்தருகின்ற, அரா-கார்கோடகநாகமானது; உமிழ்-உமிழ்ந்த, விடத்தினால்-விஷத்தால், இனறளவு-இன்றைமட்டும், அயர்ந்தேன்-சோர்வையடைந்தேன் எ-று.

இச்செய்யுளும் வருஞ்செய்யுளுங குளகம்.

(க-ரை.) தனனைச்சபிக்க நினைந்த நளன்கருத்தையறிந்தசனி தமயந்திசாபத்தால் நாகம் உமிழ்ந்தவிஷத்தால் சோர்வையடைந்தேன் எ-ம். 16

இழைத்ததீவினை தணந்தனனின்றுதொட்டுன்பேர்
வழுத்தினரையுமருவலன்மன்னவென்றேத்த
வழற்கொடுஞ்சினந்தணிந்தனனுடல்வேலரசன்
குழைத்ததான்றியிலேறினன்கொடியவெங்கலியே.

(இ-ள்.) இழைத்த-செய்யப்பட்ட, தீவினை-கொடுஞ்செய்கைகளை, தணந்தனன்-விட்டுநீக்கினேன், இன்றுதொட்டு-இன்றைதினமுதற்கொண்டு, உன்பேர்-உன்னுடைய நாமத்தை, வழுத்தினரையும்-துதித்தவரையும், மருவலன் சேரேன, மன்ன-நளமகாராசனே, என்றேத்த-என்று ஸ்துதிக்க, ஆடல்-போர் செய்கின்ற, வேல்-வேலையேந்திய, அரசன்-நளமகாராசனானவன், அழற்கொடும்-அக்கினிபோற் கொடிய, சினம்-கோபத்தை, தணிந்தனன்-விடுத்தான், குழைத்த-தளர்த்த, தான்றியில்-தான்றிமரத்தில்; கொடிய-குரூரனாகிய, வெங்கலி-வெவ்விய கலியனானவன், ஏறினன்-ஏறிக்கொண்டான் எ-று. ஏ-அசை.

(க-து.) இன்று தொடங்கி உமது பேரைச் சொன்னவரையும் பிடித்திலன் என்றுதுதிக்க, அரசன் கோப நீங்கினன். சனி தான்றிமரத்தி லேறினான் எ-ம். 17

கலிநீங்கு படலம் முற்றிற்று.

———

கடவுள் துணை.

# தேவியைக்கண்ணுற்றபடலம்.



இப்படலத்தால் கலிநீங்கியபின்பு நளமகாராசன வீமனது குண்டின நகரத்தில்வந்து மூன்றுவருடம் பிரிவுற்ற தனது தேவியாகிய தமயந்தியைக் காண்டல் சொல்லப்படுகின்றது.

## கலிநிலைத்துறை

விண்டமென்மலர்நறவினைவிளரியஞ்சுரும்ப
ருண்டுதுஞ்சுதார்நிடதர்கோன்றேர்கடிதோட்டி
மண்டுதீம்புனலாழிசூழ்மாமதிற்குடுமிக்
கொண்டல்கண்படுகுண்டினபுரத்தில்வந்தடைந்தான்.

[இதனால் குண்டினபுரத்தில் தேர்வரவு செல்லப்படுகின்றது.]

(இ-ள்.) விண்ட-மலர்ந்த, மென்மலர்-மெலியபுஷ்பங்களினின்று, நறவினை தேனை, விளரி-விளரியென்னும் பண்ணைப்பாடுகின்ற, அஞ்சுரும்பர்-அழகிய வண்டுகள், உண்டு-குடித்து, துஞ்சும்-நித்திரைசெய்யும்படியுள்ள, தார்-மாலையையணிந்த, நிடதர்கோன்-நளமகாராசன், தேர்-இரதத்தை, கடிது-விரைவினில்; ஓட்டி-செலுத்தி; மண்டு-நிறைந்த, தீம்புனல்-மதுரமான நீரையுடைய; அகழி-அகழியானது; சூழ் - சூழப்பெற்ற, மாமதில்-பெரியமதில்களுடைய, குடுமி-சிகரத்தில், கொண்டல்-மேகங்கள், கண்படு-நித்திரைசெய்யும்படியுள்ள குண்டினபுரத்தில்-வீமராசன்பட்டினத்தில், வந்தடைந்தான்-வந்துசேர்ந்தான் எ-று.

(க-து.) நளன் தேரோட்டிக் குண்டினபுரத்தில் வந்தான் எ-ம். 1

சில்லியந்தடந்தேர்வருகம்பலைகேளா
வொல்லையித்திறந்தேர்விடநளன்லாதொருவர்
வல்லரோவெனமனத்திடைபெண்ணிமற்றனையோ
னல்லனேனுயிர்துறப்பனென்றுன்னிளணிங்கே.

[இதனால் தேர்வரவு கேட்ட தமயந்தி சொல்லக சொல்லப் படுகின்றது.]

(இ-ள்.) செல்லி-வண்டிலையுடைய, அந்தடக்தேர்-அழகிய விசாலமாகிய தேரானது, வரும்-வருகின்ற, கம்பலே-சத்தத்தை, கேளா-கேட்டு, ஒல்லே-சீக்கிரத்தில், இத்திறம்-இவ்வண்ணமாக, தேர்விட-தேரைச்செலுத்த, நளனலாது-நளனையல்லாமல்; ஒருவர்-மற்ெருருவர், வல்லரோ-திறமையுள்ளவரோ, என-என்று, மனத்திடை-மனத்தில், எண்ணி-சிந்தித்து, அனையோன்-இவன், அல்லனேல்-நளனல்லனுனல், உயிர்துறப்பல்-உயிரைவிடுவேன், என்று-என்று, அணங்கு-தமயந்தியானவள், உன்னினள்-எண்ணினள் எ-று.

(க-து.) தமயந்தி தேவர்வருஞ் சத்தங்கேட்டு நளனல்லாவிடில் உயிர்விடுவேனென்ருள் எ-ம். 2

மருவுபாகனைத்தேரொடும்வாயலினிறுவி
யிருதுபன்னனவ்வீமன்மாட்டேகலுமெதிராப்
புரிவயாவையுமபுரிந்துபல்காவதம்போக்கி
யுருவப்பூணினுய்வந்தமையெவன்கொலென்றுரைத்தான்.

[இதனுல் இருதுபன்னனை வீமன்கண் டுபசரித்துவினுவல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மருவு பாகனை-பொருந்திய சாரதியை, தேரொடும்-இரதத்தோடும், வாயலில்-அரண்மனைவாசலில், நிறுவி-நிறுத்தி, இருதுபன்னன்-இருதுபன்னவரசனுனவன், அவ்வீமன்மாட்டு-அந்தவீமராசனிடத்து, ஏகலும்-சென்றவளவில், எதிராப்புரிவயாவையும்-எதிர்வந்து செய்யத்தக்க மரியாதையனைத்தையும், புரிந்து-செய்து, பல்காவதம் போக்கி - பல்காவதவழியைக் கடந்து, உருவப்பூணினுய்-அழகிய ஆபரணத்தையுடைய இருதுபன்னவரசனே, வந்தமை - (நீ) இவ்விடம்வந்த தன்மை, எவன்கொல் - என்னகாரணமோ, என்றுரைத்தான்-வீமராசன் சொன்னுன் எ-று.

(க-து.) இருதுபன்னன் வீமனிடத்திற்சென்றவளவில்வீமனெதிர்வந்து உபசாரஞ்செய்து வந்தகாரியமென்னவென்றுகேட்டான் எ-ம். 3

ஈங்கடைந்ததுமன்னநிற்காணியவெனலும்
வீங்குதோளினு னினியநன்மொழிபலவிளம்பிப்
பாங்குளார்தமை யுறையுளொன்றமைக்கெனப்பணிப்ப
வாங்குவிண்ணவர்நகரினும்விழுமிதொன்றமைத்தார்.

[இதனுல் இருதுபன்னன் விடையும் அவனுக்கு வீமனமைத்தசிறப்புஞ் சொல்லப்படுகின்றன]

(இ-ள்.) மன்ன-வீமராசனே, ஈங்கு-இந்நகரத்தில், அடைந்தது-வந்தது நிற்காணிய-உன்னைக் காண்பதற்கு, எனலும்-என்று சொல்லிய மாத்திரத்தில், வீங்குதோளினுன்-பருத்த புயத்தையுடைய வீமராசனுனவன், இனிய-இனிமையான, நன்மொழி-நல்லசொற்களை, பலவிளம்பி-பலவாகச் சொல்லி, பாங்

குளார்தமை-அருகிலுள்ள ஏவலாளரைப்பார்த்து, உறையுமொன்று-ஒருவிடுதி வீட்டை, அமைக்கென-செய்யுங்களென்று, பணிப்ப-உத்தரவு கொடுப்ப, ஆங்கு-அவ்விடத்தில், விண்ணவர்நகரினும்-சொர்க்கத்தைக்காட்டிலும், விழுமிது-மேன்மையதாகிய, ஒன்று-ஒரு விடுதிவீட்டை, அமைத்தார்-ஏவலாளர் திட்டஞ்செய்தார்கள் எ-று.

(க-து.) வீமராசனே உம்மைக் காணவந்தேனென்றவளவில், வீமன்ஏவலாளரை ஓர் வீடொன்று அமைக்கச்சொன்னான். அவர்களமைத்தார்களெ-ம் 4

இருதுபன்னன்வேந்தருளினாலவ்வயினெய்தி
யரசர்யாவருந்தொக்கிலராய்வளைப்பணைத்தோள்
விரைசெய்கோதைதன்சுயம்வரமென்னவேதியன்முன்
னுரைசெய்மாற்றமற்றென்கொலென்றயிர்த்தனனுறைந்தான்

[இதனால் இருதுபன்னன் சந்தேகித்திருத்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) இருதுபன்னன்-இருதுபன்னவரசன், வேந்தருளினால்-வீமனுத்தரவினால், அவ்வயின்-அந்தவீட்டில், எய்தி-அடைந்து, அரசர்யாவரும்-அரசர்களெவரும், தொக்கிலர்-வந்துசேர்ந்தனரில்லை, ஆய்வளை-சிறந்தவளையலையணிந்த, பணைத்தோள்-மூங்கிலையொத்ததோள்களையும், விரைசெய்-பரிமளிக்கின்ற, கோதைதன்-கூந்தலையுமுடையதமயந்தியினது, சுயம்வரமென்ன-சுயம்வரமென்று, வேதியன்-பருணாதனென்னும்பிராமணன், முன்-முந்தியதினத்தில், உரைசெய்-சொல்லப்பட்ட, மாற்றம் - வார்த்தை, என்கொல்-எப்படிப்பட்டதோ, என்று-என்று, அயிர்த்தனன்-சந்தேகித்தவனாகி, உறைந்தான்-வாசஞ்செய்தான் எ-று. மற்று அசை.

(க-து.) இருதுபன்னன் பருணாதனென்னும் பிராமணன் சுயம்வரமென்று சொன்னதைக்குறித்துச் சந்தேகித்தான் எ-ம். 5

சாந்தமென்முலைத்தமயந்திதோழியைநோக்கிப்
போந்தமன்னவன்பொற்றடநேரிடைப்பிணித்த
கூந்தன்மாவிடுசாரதிகொற்றவேலனைனும்.
வேந்தனோவெனவுணர்ந்திவண்வருகெனவிடுத்தாள்.

[இதனால் தமயந்தி இருதுபன்னன்சாரதிபாற் றோழியைவிடுத்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) சாந்தம்-சந்தனக்கோலமணிந்த, மென்முலை-மெல்லியமுலைகளையுடைய, தமயந்தி-தமயந்தியானவள், தோழியை-கேசினியென்னுந் தனது பாங்கியை, நோக்கிபார்த்து, போந்தமன்னவன்-வந்த விருதுபன்னவரசனது பொன்-அழகிய, தடம்-விசாலமாகிய, தேரினிடை-இரதத்தில், பிணித்த-கட்டிய-கூந்தன்மா-புறமயிரினையுடைய குதிரைகளை, விடும்-நடத்துகின்ற, சாரதி, தேர்ப்பாகனானவன், கொற்றம்-வெற்றிபொருந்திய, வேல்-வேலாயுதந்தரி

த்த, நளனும்-நளனாகிய, வேந்தனோ-அரசனு, (அல்லனு) என-என்று, உணர்ந்து-அறிந்துகொண்டு, இவண்-இவ்விடத்தில்,வருகென-வாவென்றுசொல்லி, விடுத்தாள்-அனுப்பினுள் எ-று.

(க-து.) தமயந்தி கேசினியாகிய பாங்கியைச் சாரதி நளனோ அல்லனோ வென் றறிந்துவா வென்றாள் எ-ம்.

கொங்குவாய்மடுத்தினவண்டு கூட்டுணுங்கூந்தற்
றிங்கள்வாண்முகத்தெரிவைதன் னேவலிற்றிறம்பா
மங்கையெய்திமற்றியாவனீயெத்தொழில்வல்லை
யிங்குவந்தவாறென்னென வாருவனிசைப்பான்.

[இதனுல் தோழி சாரதியை வினவல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) கொங்கு-தேனை, வாய்மடுத்து-வாயைவைத்து, இனவண்டு-கூட்டமாகிய வண்டுகள், கூட்டுணும்-கொள்ளைகொண்டுண்ணப்பெற்ற, கூந்தல்-அளகத்தையும், திங்கள்-சந்திரன்போன்ற; வாண்முகம்-ஒளிபொருந்திய முகத்தையுமுடைய, தெரிவைதன்-தமயந்தியினது, ஏவலில்-உத்தரவினின்றும்,திறம்பா-தவருத, மங்கை-கேசினியானவள், எய்தி-அவ்விடத்திற்சென்று, யாவனீ நீயார், எத்தொழில்-எந்தத்தொழில்களில், வல்லை-வல்லமையுள்ளவன், இங்கு-இவ்விடத்தில், வந்தவாறு-வந்ததன்மை, என்னென-எப்படிப்பட்டதென்று கேட்க, வாகுவன் - வாகுவனென்னப்பட்ட நளன், இசைப்பான்-சொல்லுவான் எ-று.

(க-து.) தோழிசென்று நீயாவன்: நீ எத்தொழிலில்வல்லவன்: நீ இங்கு வந்த வகை யென்ன: என வாகுவன் சொல்லுவான் எ-ம். 7

விரிமலர்க்குழற்றமயந்திசுயம்வரம்வேட்ட
விருதுபன்னன்மான்றேர்விடும்வாகுவனென்பேர்
புரிவல்வெந்தழலின்றியுமடைத்தொழில்புனலற்
றுருகுபாலையிற்றீம்புனறருவலென்றிசைத்தான்.

[இதனுல் அதற்கு அசசாரதி யுத்தரஞ் சொல்லப்படுகின்றது ]

(இ-ள்.) விரி-மலர்ந்த, மலர்-மலர்களையணிந்த, குழல்-கூந்தலையுடைய, தமயந்தி-தமயந்தியினது, சுயம்வரம்-சுயம்வரத்தினில், வேட்ட-விருப்பமுற்ற, இருதுபன்னன்-இருதுபன்ன ராசனது, மான்றேர்-குதிரைகட்டியதேரை விடும்-நடத்துகின்ற, வாகுவன்-வாகுவன் என்பது, என்பேர் - என்பெயராம், வெந்தழல்-வெவ்விய அக்கினி, இன்றியும்-இல்லாமலும், மடைத்தொழில்-சமையலை, புரிவல்-செய்வேன், புனலற்று-நீரில்லாமல், உருகு-உருகுகின்ற, பாலையில்-பாலைநிலத்தில், தீம்புனல்-மதுரமானசலத்தை, தருவல்(உண்டுபண்ணிக்) கொடுப்பேன், என் றுரைத்தான்-என் றுசொன்னான் எ-று.

(க-து.) தமயந்தி சுயம்வரத்தை யிச்சித்த இருதுபன்னன் தேர்விஞ்சா தி. அக்கினியில்லாமற் சமைப்பேன. நீரில்லாதபாலையில் நீர் உண்டாக்கு வேனென்றான எ-ம். 8

இன்னவிஞ்சைகணளனலாதறிகுநரில்லை
யன்னவன்றரக்கொண்டனைபோலுமவ்வரசன்
மன்னிவாழ்வதெந்நகரவயின்வருத்துரையென்றாள்
பொன்னவாஞ்சுணங்கரும்பியபுணர்முலைப்பூவை.

[இதனால் அத்தோழி நீ சொல்லிய விஞ்சைகளிற் றேர்ந்த நளன் யாண் டுளனென்ன வினவல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) பொன்னவாம்-பொனபோலாகிய, சுணங்கு-தேமல்; அரும்பிய-உண்டாகிய, புணர்முலை-நெருங்கிய ஸ்தனங்களையுடைய, பூவை-கேசினியா னவள், இன்ன விஞ்சைகள்-இத்தன்மைய வித்தைகள், நளனலாது-நளனல் லாமல், அறிகுநர்-அறிந்தவர்கள், இல்லை-(ஒருவரு) மில்லை, அன்னவன்-அந் நளமகாராசன், தர-கொடுக்க, கொண்டனைபோலும்-பெற்றுக்கொண்டாய் போலும், அவ்வரசன்-அந்நளமகாராசன், எந்நகர்வயின் எந்தப்பட்டினத்தில், மன்னி-பொருந்தி; வாழ்வது-சுகித்திருப்பது; வருத்து-பருத்து; உரை-அதைச் சொல்லு; என்றாள்-என்று வினவினாள் எ-று.

(க-து.) கேசினியானவள் நீ இவ்வித்தையை நளனிடத்துக்கற்றுக்கொ ண்டாய்போலும்: நளன் எங்கேயிருக்கின்றான்சொல்லென்றாள் எ-ம். 9

மேயவிஞ்சையோர்நளனொடுங்கற்றிலன்விறல்வேற்
சேயனனினிதுறைவதிவ்விடமெனத்தெருளேன்
றூயகற்பினார்காதலர்துறப்பினுமற்றோர்
நாயகற்பெறநினைவர்கொலோவெனநவின்றான்

[இதனால் அஃதறியேனென்று விடைகூறி, தனது மற்றொருவினாவாலத் தோழியை வியக்கச்செய்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மேய-பொருந்திய, விஞ்சை-வித்தையை, ஓர்-ஒப்பற்ற- நளனொ டும்-நளமகாராசனிடத்தில், கற்றிலன்-நான்கற்கவில்லை, விறல்வேல்-வெற்றி பொருந்தியவேலேந்திய; செயனன்-சுப்பிரமணியனையொத்த நளமகாராசன் இனிதுறைவது - இனிமையோடிருப்பது, இவ்விடம் - இன்னவிடம், என என்று, தெருளேன்-அறியேன், தூய-பரிசுத்தமாகிய, கற்பினார் - கற்பினையு டையமாதர்கள், காதலர்-கணவர்கள், துறப்பினும்-துறந்துவிட்டாலும்; மற் றோர்-வேறொரு, நாயகற்பெற-கணவனையடைய, நினைவர்கொலோ-நினைப்ப ரோ; என-என்று, நவின்றான்-(நளமகாராசன்) சொன்னான் எ-று.

(க-து.) நான் நளனிடத்தில் வித்தைகற்றிலன். கற்புள்ளமாதர் நாயக ரைநீக்கினும் வேறுநாயகரை இச்சிப்பார்களோ என்றான் எ-ம். 10

இன்னகூறலுமடவரல்கதுமெனவேகி
மின்னனாளுடன்கேட்டனயாவையும்விளம்பி
யன்னவன்றனதுருவலான்மொழிகுவதனைத்து
முன்னினநம்மிறைமொழிவதேபோன்மெனமொழிந்தாள்.

[இதனால் தோழிசென்று தமயந்திக்குரைத்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) இன்ன-இத்தன்மையாக, கூறலும்-சொன்னவளவில், மடவரல்-கேசினியானவள், கதுமென-சரேலென்று, ஏகி-சென்று, மின்னனாளுடன்-தமயந்தியுடன், கேட்டனயாவையும்-கேள்வியுற்றசங்கதிகளையெல்லாம், விளம்பி-சொல்லி, அன்னவன்றனது-அந்நளமகாராசனது, உருவலான்-வடிவமில்லாதஇப்பாகன், மொழிகுவதனைத்தும்-சொல்லுவதெல்லாம், முன்னில்-யோசிக்குமிடத்தில், நம்மிறை-நமதுநளமகாராசன், மொழிவதேபோன்மென-சொல்வதைப்போலிருக்கிறதென்று, மொழிந்தாள்-சொன்னாள் எ-று.

(க-து.) தோழி கேட்டவையெல்லாந்தமயந்திக்குச்சொல்லி, நம்முடைய அரசனைப்போலவே பேசுகிறானென்றாள் எ-ம். 11

மொழிதல்கேட்டலுமொய்குழல்வாலரியுதவி
யழலிலாதிவையடுவதுகாண்டியென்றறையக்
குழைகொள்வாண்முகக்கொம்பனாளவனுழைக்குறுகி
யிழைகொள்பூண்முலைசொற்றவாறிசைத்தனளீந்தாள்.

[இதனால் அவனை அடுதொழிலிற் சோதிக்கத்தமயந்தி மீட்டுந்தோழியை யனுப்புதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) மொழிதல்-கேசினிசொல்லியவைகளை, கேட்டலும்-கேள்வியுற்றமாத்திரத்தில், மொய்குழல்-தமயந்தியானவள், வால்-வெள்ளிய, அரி-அரிசியை, உதவி-கொடுத்து, அழலிலாது-நெருப்பின்றி, இவையடுவது-இவ்வரிசிகளைச் சமைப்பதை, காண்டியென்று-பார்த்துவாவென்று, அறைய-கூற, குழைகொள்-குண்டலமணிந்த, வாண்முகம்-ஒளிபொருந்திய முகத்தையுடைய, கொம்பனாள்-பூங்கொம்பையொத்த, கேசினியானவள், அவனுழை-அப்பாகனிடத்து, குறுகி-சென்று, இழைகொள்-நூலிழைகொண்ட, பூண்-ஆபரணங்களையணிந்த, முலை-ஸ்தனங்களையுடைய தமயந்தி, சொற்றவாறு-சொல்லியபடி, இசைத்தனள்-சொல்லி, ஈந்தாள்-அவ்வரிசியைக் கொடுத்தாள், எ-று.

(க-து.) தமயந்தி தோழிக்கு அரிசிகொடுத்து தீயில்லாமற் சமைப்பதைக் காணென்றுசொல்ல, அவள் அவனிடத்திற்சென்று அரிசியைக்கொடுத்தாள், எ-ம். 12

சந்தவாலரிபெய்தபொற்குழிசிதீயின்றி
யாய்ந்தகேள்வியான்றொடுதலுமடிசிலாயமைய

வேய்ந்தபூங்குழல்கண்டுபோய்வெம்முலைப்பொறையாற்
சாய்ந்தநுண்ணிடைத்தமயந்திதன்னொடுமொழிந்தாள்.

[இதனால் அவனிடத் தவ்வாறுதலை யறிந்துவந்த தோழி தமயந்திக குணர்த்தல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) ஈந்த-கொடுத்த, வாலரி-வெள்ளிய அரிசியானவை, பெய்த-போடப்பட்ட, பொற்குழிசி-பொன்குடத்தை, ஆய்ந்தகேள்வியான்-நளமகாராசன், கொடுதலும்-(கையால்) தொட்டமாத்திரத்தில், தீயின்றி-நெருப்பில்லாமல், அடிசிலாயமையை-சாதமாயமையை, வேய்ந்த-தரிக்கப்பட்ட, பூங்குழல்-பூமாலையணிந்த கூந்தலையுடைய கேசினியானவள், கண்டு-அதைப்பார்த்து, போய்-சென்று, வெம்முலை-விரும்பத்தைத் தருகின்ற ஸ்தனங்களினுடைய, பொறையால்-பாரத்தினால், சாய்ந்த-வணங்கிய, நுண்ணிடை-நுட்பமான இடையையுடைய, தமயந்தி தன்னொடும்-தமயந்தியுடனே, மொழிந்தாள்-(இவ்விசயத்தைச்) சொன்னாள், எ-று.

(க-து.) அரிசிபோட்ட பொற்பாத்திரத்தை நளன் தொட்டவளவில் சாதமாகத் தோழிகண்டு தமயந்திக்குச் சொன்னாள் எ-ம். 13

அழலுநீருமின்றமிழ்தெனவடுதொழிலகேட்டுக்
குழையுநெஞ்சினளின்னுயிர்க்கொழுநனென்றெண்ணி
விழைவினோடுதன்மக்களையவனுழைவிடுத்தாள்
மழலைமென்மொழிமக்களுமன்னன்மாட்டடைந்தார்

[இதனால் தமயந்தி அச்சாரதிபால் மக்களையனுப்புதல் சொல்லப்படுகின்றது.]

(இ-ள்.) குழையுநெஞ்சினள்-குழைந்தநெஞ்சத்தளாகியதமயந்தியானவள் அழலும்-நெருப்பும், நீரும்-தண்ணீரும், இன்று-இல்லாமல், அமிழ்தென-அமிர்தம்போல, அடுதொழில்-சமைத்தலை, கேட்டு-கேள்வியுற்று, (இவன்) இன்னுயிர்க்கொழுநன், இனியவுயிரையொத்த (நமது) கணவன், என்றெண்ணி-என்றுகருதி, விழைவினோடு-ஆசையோடு, தன்மக்களை-தன்புதல்வரை, அவனுழை-அவனிடத்து, விடுத்தாள்-அனுப்பினாள், மழலைமென்மொழி-மெல்லிய மழலைமொழிகளையுடைய, மக்களும்-பிள்ளைகளும், மன்னன்மாட்டு-நளமகாராசனிடத்தில், அடைந்தார்-சேர்ந்தார்கள், எ-று.

(க-து.) தமயந்தி நாயகனென்றெண்ணி மக்களையனுப்பினாள். அவர்கள் அரசனிடத்திற் சேர்ந்தாகள் எ-ம். 14

அடைந்தமக்களைக்காண்டலுமழவிடைமெழுகி
னுடைந்ததுள்ளநீருற்றிருந்தொழுகினநெடுங்கண்
டொடர்ந்தமும்மலமுருக்கிவெம்பவக்கடறொலையக்
கடந்துளோர்களுங்கட்படரோமக்கண்மேற்காண்பரோ,